ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

---

ஸாஸ்த்ரஜந்யஜ்ஞாந யோகஜந்யஜ்ஞாநங்களைவிட

ஆயிரம்மடங்கதிஸயித்த

பகவத்ப்ரஸாதஜந்ய தத்வயாதாத்ம்யஜ்ஞாநவித்தமராய்

ப்ர.பந்நஜநகூடஸ்த்தராய்எழுந்தருளியிருக்கும்

மஹாப்ரபாவரான

# நம்மாழ்வாருடைய

பகவதநுபவ பரீவாஹரூபமான, த்ராவிடவேதஸாகரஸாரமாகிய

# திருவாய்மொழி

## ஏழாம்பத்து.

## மூலமும் அதின்வ்யாக்யாநாதிகளும்.

---

இவை,

ஸ்ரீமத்-உபய-ஸ்ரீமாந்-ஆழ்வார்திருநகரி வடபத்ரஸாயி


## அணாயர்ஸ்வாமி அவர்களாலும்

ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீபாததூளியாகிய,

## கா. ராமஸ்வாமிநாயுடு அவர்களாலும்


அநேகப்ரதிகளைக்கொண்டு பரிஸோதிக்கப்பட்டு


சென்னை. ராமாநுஜஸித்தாந்தஸபாத்யக்ஷராகிய

ஸ்ரீமாந்,

முதலியாண்டான்முன்னிலையில்

புலியனூர் - இரங்கசாமிமுதலியார் அவர்கள்குமாரர்

கிருஷ்ணஸ்வாமிமுதலியார் அவர்களால்

சென்னை:

ஆதிகலாநிதி அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டன.

---

ஆழ்வார் திருவவதாராதிவர்ஷம்-௪௯௮௫-சுபாநுவர்ஷம்.

November 1883.



ஸ்ரீ

    

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

எம்பெருமானார்திருவடிகளேசரணம்.

# திருவாய்மொழி.

## ஏழாம்பத்து.

## முதற்றிருவாய்மொழி.

### உண்ணிலாவிய-ப்ரவேஶங்கள்.

### ஆறுயிரப்படி.

(உண்ணிலாவிய) இப்படி யெம்பெருமானை சரணம்புக்கு, "என்னுடைய ப்ரக்ருதிசம்பந்தத்தைப்போக்கி யென்னை யடிமைகொண்டருளவேணும்" என்றபேக்ஷிக்கச்செய்தேயும்; அவனுக்குத் தம்முடையதிருவுடம்பிலுள்ள லோபத்தாலும், இவரைக்கொண்டே திருவாய்மொழியை முடிக்கத் திருவுள்ளமாகையாலு மிப்ப்ரக்ருதி சம்பந்தத்தைத் தவிர்த்தருளாமையாலே, பண்டுபோலே யிந்த்ரியங்கள் நடுவே தாமிருக்கிறபடியைக்கண்டிவர், தம்முடைய கரணங்கள் ப்ராக்ருதவிஷய விமுகமாய் பகவத்ப்ரவணமாயிருக்கச்செய்தேயும்; விஷயப்ரவணகரணஸஜாதீயமாகையாலும், இன்றளவும்வர அநாதிகாலமெல்லாம் விஷயப்ரவணமாய் பகவதநுபவ விரோதியாகையாலும், இப்போது மபிமதஸம்ஶ்லேஷ ப்ரதிபந்தகமாகையாலும், ஹேயமாகையாலே பகவத்ஸம்ஶ்லேஷாநர்ஹமாகையாலு மிவற்றினுடைய தர்ஶநமாத்ரத்தாலே விஷயங்களிலே யாக்ருஷ்யமாணரைப்போலே யதிமாத்ரபீதராய், எம்பெருமானைக் காணப்பெறாதவ்யஸநத்தாலே பீட்யமாநருமாய்க்கொண்டெம்பெருமானைநோக்கி, "இ

க்கரணசந்நிதாநத்தைத் தவிர்ப்பித்தருளவல்லையா யிருந்துவைத்துத் தவிர்த்தருளாமையாலே நீ யிவற்றையிட்டென்னை ஹிம்ஸிப்பித்துன்றிருவடிகளிற் சேராதபடி பண்ணுகிறவித்தாலுனக்கென்ன ப்ரயோஜநமுண்டு, பரமகாருணிகனே, இவற்றினின்று முன்றிருவடிகளிலே யென்னை வாங்கியருளாய்" என்று திருவடிகளைப் பூண்டுகொண்டு கிடந்து, எம்பெருமானைக் காணப்பெறாத வ்யஸநத்தாலும் தத்ஸம்ஶ்லேஷ ப்ரதிபந்தகப்ரக்ருதிதர்ஶந ஜநிதவ்யஸநத்தாலுமாக, அசோகவநிகையில் பிராட்டிகூப்பிட்டாப்போலே கூப்பிடுகிறார்................ ...............................*

## பன்னீராயிரப்படி.

ஏழாம்பத்தில், கீழிரண்டுபத்தாலே - உபாய ஸ்வரூபசோதநத்தையும், தத்ஸ்வீகாரத்தையு மருளிச்செய்து, மேலேழாம்பத்தாலு மெட்டாம்பத்தாலும் - உபாயநிவர்த்யமான விரோதிஸ்வரூபத்தையும், தந்நிவ்ருத்திப்ரகாரத்தையு மருளிச்செய்கிறார். அதில் விரோதிஸ்வரூபபரமான விப்பத்தாலே - நிவர்த்யமானவிரோதியாயுள்ள சரீரேந்த்ரியாதிகள் நிவர்த்தகனான வீஶ்வரனிட்ட வழக்கென்னுமத்தையும், விரோதிநிவ்ருத்தி பிறவாதபோது ப்ராப்யகத ப்ராவண்ய மார்த்திஜநக மென்னுமித்தையும், ஆர்த்திசமிப்பது அபிநிவிஷ்டனான வீஶ்வரனுடைய தேசப்ராப்தியாலே யென்னுமித்தையும், ஆர்த்திஹேதுவான விரோதியானது ஜகத்ரக்ஷணஹேதுவான விஜயாபதாநங்களையுடைய சர்வசக்திக்கே நிவர்த்தநீயமென்னுமத்தையும், ரக்ஷகனானவவனையொழிய வேறு நிவர்த்தகரில்லையென்னுமிடம் சர்வசம்மத மென்னும்படியையும், சர்வஸ்ரஷ்டாவான வவனுடைய காலைக்கட்டிக் கூப்பிட்டு விரோதியைக் கழித்துக்கொள்ளவேணு மென்னுமத்தையும், உருவெளிப்பாடான வநுபவம் நடக்கச்செய்தேயும் அலாபஜநிதையான வார்த்தி விரோதிகார்ய மென்னுமத்தையும், விசித்ரவிரோதி நிவர்த்தநத்தில் விசித்ர விபூதி விசிஷ்டனான விசித்ரசக்தி யுக்தனே வேணுமென்னுமத்தையும், விரோதிவிசிஷ்டவேஷத்திலே வாசிக கைங்கர்யங் கொண்ட ப்ரீத்யதிசயத்தாலே விரோதியை விஹஸ்தமாக்கின ஹர்ஷத்தையும், ப்ராப்ய விஷயத்தில் ப்ராவண்யமதிசயித்தால் ப்ரதிபந்தக முபாயபூதன் போக்குமென்னுமத்தையு மருளிச்செய்து, விரோதியினுடைய ஸ்வரூபத்தை சோதித்தருளுகிறார்.

இதில் முதற்றிருவாய்மொழியில் - கீழே ப்ராப்த்யர்த்தமாக சரணகதியையநுஷ்டித்த விவர்க்கு ப்ராப்திவிரோதிநிவ்ருத்த்யர்த்தமாக ப்ரதிபந்தக ப்ராபல்யத்தை ப்ரகாசிப்பிக்க. "காட்டிப்படுப்பாயோ," "இன்னங்கெடுப்பாயோ" என்று பண்டே யஞ்சியிருக்கிற விவர், ப்ரதிபந்தகமான தேஹேந்த்ரியாதிகளுடையவதிப்ரவ்ருத்தியை யபரோக்ஷித்து "ஸம்ஸாரஶ்ரமபரிதாபதப்தசேதா:" (ஸம்ஸாரஶ்ரமபரிதாபதப்தசேதா:) என்கிறபடியே அதிசயிதார்த்தியை யுடையராய், விரோதி நிவர்த்தகனான வீஶ்வரனுடைய ; சம்பந்தாதிகுண பௌஷ்கல்யத்தையும், போக்யதாதிசயத்தையும், ரக்ஷணார்த்த வ்யாபாரத்தையும், அகடிதகடநா சாமர்த்யத்தையும், விரோதிநிரஸநஸ்வபாவத்தையும், சர்வப்ரகார சந்நிதியையும், அருந்தொழில்செய்து மாஶ்ரிதகார்யஞ் செய்யும்படியையும், அசாதாரணசிஹ்நாதியோகத்தையும், சகலஜகத் ஸ்ரஷ்ட்ருத்வாதிகளையும், சாரசங்க்ரஹண சாமர்த்யத்தையுமநுசந்தித்து ; ஏவம்விதஸ்வபாவனான நீ, உனக்குவிதேயமான சரீரேந்த்ரியாதிகளென்னை நலியக்கண்டு நிவர்த்திப்பியா திருந்தாயென்று, பந்தவிசேஷமடியாகப் பெரியவார்த்தியோடே கூப்பிடுகிறார். ....................................*

ஈடு.

"அமர்ந்துபுகுந்தேன்" என்று தம்மாலானவளவும் புகுரநின்ருர், அநந்தரத்தி லவனேப்புகுர நிற்கக்கண்டிலர், "இனிக்கைவிடப்பார்த்தானுகாதே" என்று விழுந்துகிடந்து கூப்பிடுகிருர். விளம்பஹேதுவில்லாத சாதநத்தை பரிக்ரஹித்தவன், அது பலப்ரதமாந்தனையுங்கிடந்து கூப்பிடுமத்தனையிறே. இவர்தாம் கீழ்ச்செய்ததாயிற்று திருவேங்கடமுடையான்றிருவடிகளிலே பெரியபிராட்டியார் முன்னிலையாகத்தம்முடைய வாகிஞ்சந்யத்தை விண்ணப்பஞ்செய்துகொண்டு சரணம்புக்காராயிறே யிருக்கிறது, அது "ஊமெவயெவ௶வஷ௵ஞெஊயாமெதாං தாஙதிெத" (மாமேவயேப்ரபத்யந்தேமாயாமேதாம்தரந்திதே) என்கிறபடியே கடுகபலித்துக்கொடு நிற்கக்கண்டிலர், இனி நம்மைக்கைவிடப்பார்த்தானுகாதேயென் றின்னுதாகிருர். சம்சாரஸ்வபாவத்தை யநுஸந்தித்துப்போக்கடியற்று அவ்வடியைப்பற்றி சரணம்புக்கவிடத்திலும் தம்மபேக்ஷிதம் செய்யாமையாலே, சரணம்புக்கார் மேலே வேற்காரனையேவிஹிம்ஸிக்கும் ந்ருஶம்ஸரோபாதியாக வவனேநினேத்து பீதராய்; ஈஶ்வரன் க்ருபைபண்ணுகைக்குவேண்டுவது - சம்ஸாரத்தினுடைய ஹேயதை நெஞ்சிலே படுகையும், அத்தலையில் வைலக்ஷண்யத்தை யநுஸந்திக்கையும், ப்ரபத்திபண்ணுகைக்கு மேற்படவில்லேயிறே; இவ்வளவிலும் பலிக்கக்காணுமையாலே, "வைப்பனுகவைத்த ப்ரஹ்மாஸ்த்ரம் வாய்மடிந்ததுகிடீர்" என்று கூப்பிடுகிருர். "இனித்தான் * க்ஷிபாமியாதல், * ததாமியாதல், இரண்டேயிறே; அதில் * க்ஷிபாமி என்னுமளவிலே யாகாதே நாம்" என்றிருந்தார். அதுவென், இவர்க்கு "ததாமி" என்ற புத்தியோகம்பண்ணிக்கொடுத்தானேயென்னில்; அதுவும் நோவுபடுகைக்குடலாகத்தந்தானென்றிருக்கிருர். தம்முடைய சக்திகொண்டு பெறவிருந்தாரல்லர், அவனுக்கசக்தியுண்டா யிழக்கிருரல்லர், பேற்றுக்குவேண்டுவது முன்பேசெய்துநின்ருர், ஆனபின்பு இவர்க்கிப்போ திழக்கவேண்டுவதில்லேயிறே. ஆனுல் பலியாதொழிவானென்னென்னில்; இவர்குறையாலே வைக்கிலிறே பலித்ததில்லேயாவது, "நமக்காகவிருக்கிற பின்பிவரெங்கேயிருந்தால் நல்லது" என்றிருந்தான். அவனு மிவரைக்கொண்டொருகார்யங் கொள்ளவிறே யெண்ணியிருக்கிறது. அதுவுமொழிய, இவருடைய சரமதேஹமாகையாலே, இவர் ப்ரபத்திபண்ணினவிடத்திலும், இவர்திருமேனியில் தனக்குண்டான ப்ராவண்யத்தாலே கார்யஞ்செய்திலன். இவர்திருமேனியில் ப்ராவண்யமிறே "மங்கவொட்டு" என்று அவனேக்காற்கட்டிற்றும். மெய்யான ப்ரேமமுண்டானு லிங்ஙனல்லதிராதே. இது ப்ரக்ருதியாயிற்றே அவனுக்கு. அவன் தம்மைக்கொண்டுகொள்ளவிருக்கிற கார்யந்தன்னே யிதில் பொருந்துவாரா யிட்டுக்கொண்டாலாகாதோவென்ருயிற் றிவர்நினேத்திருக்கிறது. "பண்ணிக்கொடுத்த ஜ

ஞானலாபமிவர்க்கு தரிக்கைக்குடல்" என்றிருந்தானவன், அதுதானே த்வரைக்குடலாயிற்றிவர்க்கு. "க்ரமத்திலேகாரியஞ்செய்கிறோம்" என்றிருந்தானவன், அது தன்னையேகொண்டு "நம்மைக்கைவிடநினைத்தான்" என்றிருக்கிறாரிவர். நித்யவிபூதியையும் திவ்யமங்களவிக்ரஹத்தையும் ஸாக்ஷாத்கரித்து "அங்கேபோயப்படியே யநுபவிக்கவேணும்" என்னும் பதற்றத்தையுடையவிவர்க்கு, "சம்சாரம்ததீயமாயிருப்பதுமோராகாரமுண்டு" என்னும் ஜ்ஞானமாத்ரத்தாலேதரித்திருக்கப்போகாதே. "யானுநீதானுய்த்தெளிதொறும் நன்று மஞ்சுவன்நரகம் நானடைதல்" என்றிறே யிவரிருப்பது. இப்படியிருக்கிறதம்மையும், அவனுக்கு ரக்ஷ்யவர்க்கம் குறைவற்றிருக்கிறபடியையும், ரக்ஷகத்வம் ஸ்வரூபமாயிருக்கிறபடியையும், ரக்ஷிக்கைக்குடலான ப்ராப்தியிருக்கிறபடியையும், தமக்கிவற்றி லங்வபமற்றிருக்கிறபடியையும்; சத்த்வாதிகுணங்கள், அதுக்கடியான தர்மதேஹேந்த்ரியாதிகள், இவற்றுக்கடியான மூலப்ரக்ருதி, மஹான், அஹங்காரம், அதின்கார்யமானவிஷயங்கள், அவித்யாகர்மவாஸநாருசிகள், இவையெல்லாம் ததநீநமாயிருக்கிறபடியையு மநுஸந்தித்து; "விஷயங்களு மிந்த்ரியங்களும் நடையாடுகிற சம்சாரத்தேவைத்தபோதே இவற்றுக்கு நம்மையிரையாக்கிப் பொகடநினைத்தானித்தனை, 'க்ஷிபாமி' என்கிற கோடியிலேபுக்கோம். இனித்தானிவன் பரிகரங்கள்கண்டதும் நம்மையகற்றுகைக்குறுப்பாக. அதில், நித்யவிபூதியி லோலக்கமிருக்கிறது-நாம்படுகிற நலிவுகண்டு அங்குள்ளாருடனேகூடச் சிரித்திருக்கைக்கு; லீலாவிபூதிகண்டது - நமக்குச் சிறைக்கூடமாக. * மயர்வறமதிநலமருளிற்றும்-அல்லாதாரைப்போலே சுகமேயிராதேதுடித்து நோவுபடுகைக்காக" என்றறுதியிட்டு, அவன்றிருவடிகளிலே தலையைமடுத்து, கேட்டாரடங்கலும் நீராம்படிகிடந்து கூப்பிடுகிறார்.

* மின்னிடைமடவாரில் - ஒருபிராட்டிதசையை ப்ராப்தராய் ப்ரணயரோஷந் தலையெடுத்துச் சொல்லிற்றெல்லாம் பிறர்வாயாலே சொன்னப்போலே யிருக்கையாலே, ஆழ்வாரானதன்மையிலே நின்றின்றுதாம்படியானதசை விளைந்ததிவர்க்கு. இவரெல்லாவளவிலும் ஸ்ரீஜநகராஜன் திருமகளோடொப்பாரொருவராயிற்று. அதாகிறது - அத்தலையில் குறையிடுவாரொருத்தரன்றிக்கே "இவற்றுக்கெல்லாமடி நம்முடையபாபம்" என்றிருப்பாரொருத்தரிறே; இங்ஙனே யிருக்கக்கடவவிவர் அவன்றலையிலே குறையையேறிட்டுக் கூப்பிடுகிறாரிறே. இவர்தாம் தம்மாலேவந்தத்தை யவன்றலையிலே யேறிடுவானென்னென்னில்; ப்ராப்தியையுணர்ந்தால், இத்தலையாலே வந்தத்தையு மவன்பக்கலிலே யேறிடலாயிருக்குமிறே. ப்ரஜை கிணற்றிலேவிழுந்தால், "மாதாவானவள் தள்ளினள்" என்னக்கடவதாயிருக்கும், அதுக்கடி - "தாயானவள்கண்ணிலே வெண்ணெயிட்டுப் பார்த்திருந்தாளாகி லிப்ப்ரஜைவிழுமோ, இவள்நோக்காமையிறே யந்தரப்பட்டது" என்றுகொண்டு அவள்தலை

யிலே குறைசொல்லக்கடவதாயிருக்கும். உதங்கன் க்ருஷ்ணன்பக்கலி லேவந்து, "உனக்கிரண்டுதிறத்தாரோடும் ஸம்பந்தமொத்திருக்கச்செய்தே, பாண்டவர்களை யழியச்செய்யாதே துர்யோதநாதிகளை யழியச்செய்தாய்; இப்படி சார்வுசெய்யப்போமோ" என்றாப்போலேயிருக்க வவன் சொல்ல, க்ருஷ்ணனு மவர்கள் குறைகளையெல்லாஞ்சொல்லி, "அவர்களுக்கு தர்மருசியில்லைகாண்" என்ன, "நீபின்னை யவர்களுக்கு தர்மருசியுண்டாக்கிக் கொடாதொழிவானென்" என்றானிறே.

"பலநீகாட்டிப் படுப்பாயோ," "கிறிசெய்தென்னைப்புறத்திட்டின்னங்கெடுப்பாயோ" என்று சொல்லுகிறபடியே அவற்றின் ஸந்நிதியு மஸஹ்யமாம்படியாய், இனித்தாமறியாதிருக்கச்செய்தேயும் பகவத்விஷயத்தில் ப்ரவணமான * மூடியானேயிற் கரணங்களையுடைய விவர்க்கிந்த்ரியவஶ்யதை யுண்டென்னுமிடம் கிழோடுவிருத்தமன்றேவென்னில்; அசலகம் நெருப்புப்பட்டு வேவாநின்றால் தந்தாமகம் பரிஹரியாதிருப்பாரில்லையிறே; புற்றினருகே பழுதைகிடந்தாலும் "ஸர்ப்பம்" என்று புத்திபண்ணி ப்ரமிக்கக்கடவதாயிருக்குமிறே. அங்குத்தைக்கு மிங்குத்தைக்கும் பொதுவானவுடம்போடே யிருக்கிறபடியைக்கண்டார், நாட்டாரடைய விந்த்ரியவஶ்யராய்க்கிடந்து நோவுபடுகிறபடியையுங்கண்டார், "இது நம்மளவும் வரிற்செய்வதென்" என்றஞ்சிக்கூப்பிடுகிறார். [illegible] [ஶாகாம்ருகா:] பூசலிலேபுக்கு அங்குண்டானவாஸனையின்றிக்கே யிருக்கை. பணையோடுபணைத் தத்தித்திரியுமவையிறே. [illegible] [ராவணஸாயகார்த்தா:] திக்பாலர்களையுங்கூட்டவச்சமுறுத்தி வளர்ந்தவன்கையிலம்புகள். [illegible] [ஜக்முஶ்ஶரண்யம்ஶரணம்ஸ்மராமம்] தங்களுடைய வாபத்தையறிந்து பரிஹரிக்கவல்லவனையும்பார்த்துப் பற்றினார்கள். [illegible] [ராக்ஷஸைர்வத்யமாநாநாம்வாநராணும்மஹாசமூ: । ஶரண்யம்ஶரண்ம்யாதாராமம்தஶரதாத்மஜம்] என்று முதலிகளடங்கலும் ராக்ஷஸர்வாயிலேகிடந்து பெருமாளை சரணம்புக்காப்போலே, இவரும் * மனமாளுமோரைவர் வன்குறும்பரான விந்த்ரியங்களுக்கு பயப்பட்டுக் கூப்பிடுகிறார். "[illegible]" (ப்ரியம்ஜநமபஶ்யந்தீம் பஶ்யந்தீம்ராக்ஷஸீகணம் । ஸ்வகணேநம்ருகீம்ஹீநாம்ஶ்வகணைராவ்ருதாமிவ) என்று ஸ்ரீஜநகராஜன் றிருமகள் பட்டதுபடுகிறார்.

பிள்ளைதிருநறையூரரையர் "இப்பாட்டுக்களில் பூர்வார்த்தமடைய-புலியின்வாயிலே யகப்பட்டப்ரஜை, தாய்முகத்திலே விழித்துக்கொண்டு புலியின்வாயிலேகிடந்து நோவுபடுமாபோலேயாயிருக்கிறது" என்றுபணிப்பர்.

"தாவஷாதிஃ" (தாவதார்த்திः) இத்யாதி ப்ரலோகத்திற்படியே' சரணம்புக்கால் தம்மையின்றாதாக ப்ராப்தியில்லையே; அவனையின்றாதா மித்தனையிறே. திருமலையிலே புகுந்துகிட்டிநின்றதுவும் இவர்க்குப்பேற்றுக்குடலாகைதவிர்ந்து கூப்பிடுகைக் குடலாயிற்றித்தனையிறே .........*

## ஜீயர் அரும்பதம்.

உண்ணிலாவிய ப்ரவேசோ, கீழிற்றிருவாய்மொழியோ டித்திருவாய்மொழிக்கு சங்க்ரஹேண சங்கதியருளிச்செய்கிறார் (அமர்ந்தித்யாதிவாக்யத்ரயத்தாலே) தம்மாலானவளவும் புகுரநிற்கையாவது - புருஷகாராகிஞ்சந்ய புரஸ்கார பூர்வகமாக வடைந்து. ஸ்வீகாரத்தி லுபாயபுத்தியையும் தவிருகை. அவனைப்புகுர நிற்கக் கண்டிலனென்றது - விரோதியைப்போக்கி ப்ராப்தியைப் பண்ணித்தரக் கண்டிலனென்றபடி. சாதநானுஷ்டானம் பண்ணினவன் பலப்ராப்தி யளவு மாறியிருக்குமா போலே, பண்ணினப்ரபத்தி பலிக்குமளவு மாறியிராதே கூப்பிடுகிறதென்னென்ன (விளம்பஹேதுவித்யாதி)

விஸ்தரஸங்கதி (இவர்தாமித்யாதி) "ஆனவளவும்" என்றதின்விவரணம் (திருவேங்கடமுடையானித்யாதி) "அநந்தரத்திலவனை" இத்யாதியின் விவரணம் (அதுமாமேவேத்யாதி) "தைவீஹ்யேஷா" (தைவீஹ்யேஷா) இத்யாதி, கீதாஸப்தமே. "இனிக்கைவிட" இத்யாதியின் விவரணம் (இனிநம்மையித்யாதி) (மாமேவயேப்ரபத்யந்தே) என்கிறது - "பக்திவிரோதிபாபக்ஷயத்துக்கும் பக்திவ்ருத்திக்கு முறுப்பான ப்ரபத்தியைச்சொல்லுகிறது" என்று அங்கப்ரபத்தி பரமாக ஸ்ரீகீதாபாஷ்யத்திலே வ்யாக்யாதமாகிலும், மோக்ஷசாதநமான ஸ்வதந்த்ர ப்ரபத்திபரமென் றிவர்க்கு விவக்ஷிதம்.

இன்றாதாகிற ப்ரகாரத்தைக்காட்டுகிறார் (ஸம்ஸாரேத்யாதி, கூப்பிடுகிறானென்னுமளவும்) (ஈஸ்வரன் க்ருபைபண்ணுகைக்கு) இத்யாதிவாக்யத்தை முன்னே யநுசந்தித்து, பின்பு (சம்சாரஸ்வபாவத்தை) இத்யாதிவாக்யத்தை யநுசந்தித்து, பின்பு (இவ்வளவிலும்பலிக்க) இத்யாதிவாக்யமநுசந்தேயம். சடக்கெனப்பலியாவிட்டால் "க்ரமேணபலிக்கிறது" என்றிராதே, "பலியாது" என்று பட்டுக் கூப்பிடுகைக்கு ஹேதுவேதென்ன (இனித்தான்க்ஷிபாமீத்யாதி) "தாநஹம்த்விஷதஃ க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந்। க்ஷிபாம்யஜஸ்ரமஶுபாநாஸுரீஷ்வேவயோநிஷு" (தாநஹம்த்விஷதஃக்ரூராந் ஸம்ஸாரேஷுநராதமாந்। க்ஷிபாம்யஜஸ்ரமஶுபாநா ஸுரீஷ்வேவயோநிஷு) இதி கீதாஸு ஷோடஸே. "தேஷாம்ஸததயுக்தாநாம் பஜதாம்ப்ரீதிபூர்வகம்। ததாமிபுத்தியோகம்தம் யேநமாமுபயாந்திதே" (தேஷாம்ஸததயுக்தாநாம் பஜதாம்ப்ரீதிபூர்வகம்। ததாமிபுத்தியோகந்தம் யேநமாமுபயாந்திதே) இதி தஸமே. * "க்ஷிபாமிக்கிலக்காணோம்" என்றதிசங்கைபண்ணுவானென், "ததாமி" (ததாமி) என்ற புத்தியோகம்பண்ணிக் கொடுத்தானே யென்கிற சங்கையை யநுவதித்து, இப்போது கார்யகரமாகாமையாலே அதுவு மந்யதா சித்தமென்று வெறுக்கிறானென்று பரிஹரிக்கிறார் (அதுவென்னித்யாதிவாக்யத்வயத்தாலே) கீழே "விளம்பஹேதுவில்லாத" இத்யாதி வாக்யவிவரணமாதல், மேலில் சங்கைக் குபோத்காதமாதல் (தம்முடைய சக்தியித்யாதி நாலுவாக்யம்) முன்பே செய்துநின்றுறொன்றது - ப்ர

பத்தி பண்ணினுரென்றபடி. இப்படியாறு விவரபேக்ஷிதம் செய்யாதொழிவா னெ ன்னென்கிற சங்கையை யநுவதிக்கிருர் (ஆறுலித்யாதி) பரிஹாரம் ( இவர்குறை யாலேயித்யாதி வாக்யத்வயம் ) கீழ் வாக்யவிவரணம் ( அவனுமித்யாதி ) ஒருகார் யம் - ஜகத்தைத் திருத்துவதொரு கார்யமென்றபடி. பரிஹாராந்தரம் (அதுவுமொ ழியவித்யாதி) அதுவுமின்றியிலே யென்றபடி. "ஈஸ்வரன் சரமதேஹத்தைவிரும் பும்" என்றதுக்கு ப்ரமாணமாக - "ஸந்தாஞ்சயாம்ஸம்ததே ப்ரஹ்மணேஷு:। ரமதே தஸ்மிந்நுதஜீர்ணே ஸ்யாநே। நைநம்ஜஹாத்யஹஸ்ஸு பூர்வே ஷு" ( ஸந்தாஞ்சயாம்ஸம்ததேப்ரஹ்மணேஷ:। ரமதேதஸ்மிந்நுதஜீர்ணே ஸ்யா நே। நைநம்ஜஹாத்யஹஸ்ஸுபூர்வேஷு ) என்கிற ஸ்ருதியை யருளிச்செய்வர். இவர் திருமேனியில் ப்ராவண்யத்துக்கு நியாமகமேதென்ன ( இவர்திருமேனியிலி த்யாதி ) அல்லாதாரிடத்தி லிங்ஙன் காணுமேயென்ன (மெய்யானவித்யாதி) மெ ய்யான ப்ரேமமுடையார் திருமேனியில் ப்ராவண்யமவனுக்கு சஹஜமென்னுமத்தை ரசோக்தியாக வருளிச்செய்கிருர் ( இது ப்ரக்ருதியாயிற்றே யவனுக்கென்று ) ப்ர க்ருதி - ஸ்வபாவமும், ப்ரதாநமும். இறு - ப்ராவண்யம். * மயர்வறமதிநலம்பெறு கையாலே யவன் தம்மை வைத்தகாரிய மறிந்திருக்கச்செய்தே த்வரிக்கிறதென்னெ ன்ன (அவன்தம்மையித்யாதி) இதில் பொருந்துவாரையென்றது - திருமழிசைப்பி ரான்போல்வாரை யென்றபடி. ஹேதுத்வயத்தாலே வைத்தாறுகிலும். ஆர்த்தரா னவிவரை தரிப்பிக்கவேண்டாவோவென்ன. ( பண்ணிக்கொடுத்தவித்யாதி ) ஜ்ஞா நலாபமென்றது - ஏதேனுமொன்றைப் பற்றிறுலு மதுதன்னையே பற்றிற்றென்று சொல்லலாம்படியான ததீயத்வப்ரதிபத்தி. "நமக்காகவிருக்கிறபின்பு" இத்யாதி வாக்யவிவரணம் ( க்ரமத்திலேயித்யாதி ) கீழ் காட்டிக்கொடுத்த ததியத்வ ப்ரதி பத்தியாலே தரித்திருக்கவொண்ணுதோவென்ன வருளிச்செய்கிருர் ( நித்யவிபூதி யையுமித்யாதி ) உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் ( யானுநீதானுயித்யாதி ) ( யானுநீ தாறுய்த்தெளிதொறும் ) நானுனக் கத்யந்தசேஷபூத னென்கிற தெளிவு பிறக்கப் பிறக்க ; ( நன்றுமஞ்சுவன் நரகம் நானடைதல் ) சம்சாரத்திலிருப்பை நான் மிக வுமஞ்சாநின்றேன். சேஷத்வ ப்ரதிபத்திக்கு விரோதி யாகையாலே யென்றபடி. இதுக்கு - "வானுயரின்பம்மன்னிவீற்றிருந்தாய்" என்றதிலே நோக்கு.

இப்படிப்ராஸங்கிக ஸங்காபரிஹாரம்பண்ணி, அநந்தரம் பாட்டுக்களுக்கு பாவம் (இப்படியிருக்கிறவித்யாதி) இப்படியிருக்கிற தம்மையும் - "அவனைப்பெற வேணும்" என்னுமார்த்தியோடே ப்ரபத்திபண்ணினதம்மையுமென்றபடி. (அவனுக் குரக்ஷ்யவர்க்கமென்றுதொடங்கி ஸத்த்வாதிகுணங்களென்னுமளவும்) "உலகமூ ன்றுடை," "கடல்ஞாலங்காக்கின்ற," "அண்ணலே," "வலமுதல் கெடுக்கு ம்வரமேதந்தருள் கண்டாய்," "குணங்கள் - கொண்டமூர்த்தி" என்றத்தைப்ப ற்ற. "குணங்கள் - கொண்டமூர்த்தி" என்று - ஸத்த்வாதிகுணங்களைச் சொல்லு கையாலே, (தர்மதேஹேந்த்ரியாதிகள்) என்றவையெல்லா மர்த்தாத்ஸித்தம். இவ ற்றிலென்றது-ரக்ஷணதிகளிலென்படி. தர்மமென்றது-கர்மத்தை. "குமைதீற்றி-கலிவானின்னமெண்ணுகின்ருய்" என்றத்தைப்பற்ற (விஷயங்களுமித்யாதி) பரி கரங்களென்றது - நித்யவிபூதி தொடக்கமான பரிகரங்களென்றபடி. இத்தைவிவரி க்கிருர் (அதில் நித்யவிபூதியிலித்யாதி)

கிழைப்பற்ற விதிலார்த்தி யதிசயித்திருக்குமென்கிருர் ( மின்னிடையித்யா தி) "தசைவிளைந்தது" என்கைக்கு, இவர்க்கு ஸ்வாபாவிகாகாரமேதென்கிறசங்கை யிலே; இவருடைய வாஸ்தவாகாரத்தையும், இப்படியிருக்கிறவிவ ரவனைவெறுக்கி

உ

றது தஶாவிஶேஷமென்னுமத்தையும் விஶதமாகவருளிச்செய்கிறார் (இவரெல்லா வளவிலுமித்யாதி) (கூப்பிடுகிறாரிறே) அந்ததசை விளைகையாலேயென்றுகூட்டுவது. அவனைவெறுக்கிறதுக்குஹேது-தஶாவிசேஷமேயன்றிக்கே, சம்பந்தமடியாகவும் வெறுக்கலாமென்னுமத்தை சங்காபரிஹாரமுகேந வருளிச்செய்கிறார் (இவர்தாமித்யாதி வாக்யத்வயத்தாலே) இவ்வர்த்தத்துக்குபபத்தி (ப்ரஜையித்யாதி) விவரணம் (அதுக்கடியித்யாதி) அந்தரப்பட்டது-அநர்த்தப்பட்டது. அநுஷ்டாநமுங் காட்டுகிறார் (உதங்கனித்யாதி)

இவரிந்த்ரியங்களுக்கு பயப்பட்டுக்கூப்பிடுகிற விதஸம்பாவிதமென்று சங்கிக்கிறார் (பலநீகாட்டியித்யாதி) இதுக்கு பரிஹாரம் (அசலகமித்யாதி) அதாவது-யோக்யதையாலே பயப்படுகிறாரென்றபடி. "இனித்தாமறியாதிருக்க" இத்யாதிக்குபரிஹாரம் (புற்றினருகேயித்யாதி) அதாவது - ப்ராந்தியாலேயென்றபடி. தார்ஷ்டாந்திகத்தில் ப்ரமஹேதுவேதென்ன (அங்குத்தைக்குமித்யாதி) வ்யஸநத்தாலே கூப்பிடுகிறதுக்கு த்ருஷ்டாந்தத்ரயம் (ஶாகாம்ருகா இத்யாதி, ராக்ஷஸைரித்யாதி, ப்ரியம்ஜநமித்யாதி) வாநராः என்னாதே, "𑌶𑌾𑌖𑌾𑌮𑍃𑌗𑌾𑌃" (ஶாகாம்ருகாः) என்றுவிசேஷித்ததுக்குபாவம் (பூசலிலேயித்யாதி) "𑌶𑌾𑌖𑌾𑌮𑍃𑌗𑌾𑌃" (ஶாகாம்ருகாः) என்றால்-இப்படிதோற்றுமோவென்ன (பணையோடித்யாதி) * ராவணசப்தத்துக்கர்த்தம் (திக்பாலர்களையுமித்யாதி) "𑌸𑌮𑌰𑍍𑌥𑌃𑌕𑌾𑌰𑍁𑌣𑌿𑌕𑍋𑌹𑌿𑌶𑌰𑌣𑍍𑌯𑌃" (ஸமர்த்தःகாருணிகோஹிஶரண்யः) என்றத்தைவிவக்ஷித்து "ஶரண்யம்" என்றதுக்குபாவம்(தங்களுடையவித்யாதி) "𑌦𑍇𑌵𑌦𑍍𑌯𑌮𑌾𑌨𑌾𑌃𑌪𑌤𑌿𑌤𑌾𑌗𑍍𑌰𑍍𑌯𑌵𑍀𑌰𑌾𑌃 𑌨𑌾𑌨𑌦𑍍𑌯𑌮𑌾𑌨𑌾𑌭𑌯𑌶𑌲𑍍𑌯𑌵𑌿𑌦𑍍𑌧𑌾𑌃। 𑌶𑌾𑌖𑌾𑌮𑍃𑌗𑌾𑌰𑌾𑌵𑌣𑌸𑌾𑌯𑌕𑌾𑌰𑍍𑌤𑌾𑌃 𑌜𑌗𑍍𑌮𑍁𑌶𑍍𑌶𑌰𑌣𑍍𑌯𑌂𑌶𑌰𑌣𑌂𑌸𑍍𑌮𑌰𑌾𑌮𑌮𑍍" (தேவத்யமாநாःபதிதாக்ர்யவீராःநாநத்யமாநாபயஶல்யவித்தாः। ஶாகாம்ருகாராவணஸாயகார்த்தாःஜங்முஶ்ஶரண்யம்ஶரணம்ஸ்மராமம்) இதியுத்தகாண்டே ஏகோநஷஷ்டிதமஸர்க்கே. "𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑍈𑌰𑍍𑌵𑌧𑍍𑌯𑌮𑌾𑌨𑌾𑌨𑌾𑌂𑌵𑌾𑌨𑌰𑌾𑌣𑌾𑌂𑌮𑌹𑌾𑌚𑌮𑍂𑌃। 𑌶𑌰𑌣𑍍𑌯𑌂𑌶𑌰𑌣𑌂𑌯𑌾𑌤𑌾𑌰𑌾𑌮𑌂𑌦𑌶𑌰𑌥𑌾𑌤𑍍𑌮𑌜𑌮𑍍" (ராக்ஷஸைஸர்வத்யமாநாநாம்வாநராணும்மஹாசமூः। ஶரண்யம்ஶரணம்யாதாராமம் தஶரதாத்மஜம்) இதிசதுர்நவதிதமே. "𑌪𑍍𑌰𑌿𑌯𑌂𑌜𑌨𑌮𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑍀𑌮𑍍" (ப்ரியம்ஜநமபஶ்யந்தீம்) இத்யாதி ஸுந்தரகாண்டே பஞ்சதஶே.

பிள்ளைதிருநறையூரரையர் நிர்வாஹத்துக்கு, பாட்டுக்களி லுத்தரார்த்தங்களெல்லாம்-குணாநுஸந்தாநபரமென்று கருத்து; மற்றை நிர்வாஹத்துக்கு, உத்தரார்த்தங்களெல்லாம்-வெறுப்பிலே.

அவனை யின்னாதாகைக்கு த்ருதீயஹேது (தாவதார்த்திரித்யாதி) ப்ரதமேம் ஶேஶவமே. இஶ்ஶ்லோகம் * உலகமுண்டப்ரவேஶேலிகிதம். அதாவது-ப்ரபத்திபலியாமையாலு மின்னாதாகிறாரென்றபடி. முந்தினஹேது த்வயமாவது - "மின்னிடைமடவாரில்" இத்யாத்யுக்தார்த்யதிசயமும், "ப்ராப்தியையுணர்ந்தால்" இத்யாத்யுக்தமான ப்ராப்தியும். ஆஶ்ரிதகார்யம் செய்கைக்காகத் திருமலையிலே ஸந்நிஹிதனாயிருக்க, அவனைவெறுக்கிறதென்னென்ன (திருமலையிலேயித்யாதி)

(மனமாளுமோராவர்வன்குறும்பர்) என்றதுக்கர்த்தம் - தங்களுக்குமுதலியான மநஸ்ஸைத் தங்களதீநமாக்கி யாளுமவையாய், நலியுமிடத்தி லத்விதீயங்களான, ஒன்றிரண்டன்றிக்கே யஞ்சாயதிப்ரபலங்களாய், கரணதிபன் கீழடங்காமல் குறும்புசெய்யும் ஶ்ரோத்ராதிகளான விந்த்ரியங்களையென்றபடி. பெரியதிருவந்தாதி ஐம்பத்தோராம்பாட்டு ..............................*



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஏழாம்பத்து.

### முதற்றிருவாய்மொழி.

## முதற்பாட்டு.

உண்ணிலாவியவைவராற்குமைதீற்றியென்னையுன்பாதபங்கய
நண்ணிலாவகையேநலிவானின்னமெண்ணுகின்று
யெண்ணிலாப்பெருமாயனேயிமையோர்களேத்துமுலகமூன்றுடை
யண்ணலேயமுதேயப்பனேயென்னையாள்வானே.

### ஆறுயிரப்படி.

மத்வ்யஸநநிரஸநாநுகுணஸங்க்யேய விசித்ரசக்தியுக்தனாய் சர்வ ஸ்வாமியாய் நிரவதிக போக்யபூத கல்யாணகுண பராஜித மத்ஸ்வரூபனா யிருந்துவைத்து; இன்றளவும்வர வநாதிகாலமெல்லா முன்றிருவடிகளை யிழப்பித்து வைத்து, இன்னமு மென்னுடைய சரீரோவர்த்தமாநமுமாய் அத ஏவ அவர்ஜநீயமுமாய் ம்ருத்யுஸத்ருஸமுமாய் பயங்கரமுமாயிருந்த பஞ்சேந்த்ரியங்களாலும் விஷயங்களிலே யென்னை யாகர்ஷிப்பித்து, உன் றிருவடிகளை யொருக்ஷணம் விப்லேஷிக்கிலும் தரிக்கமாட்டா திருக்கிற வென்னை யுன்றிருவடிகளை யிழப்பிக்கவோ பார்த்தருளுகிறது பிரானே யென்று கூப்பிடுகிறார்..................................................*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், விரோதிநிரஸநத்துக் கேகாந்தமான சம்பந்தாதிகளையுடைய நீ, இந்த்ரியங்களையிட் டென்னை நலிவித்துன்றிருவடிகளைக் கிட்டாதபடி பண்ணாநின்றுயென்கிறார்.

உள் - உள்ளே. நிலாவிய - நிரந்தரவாசம் பண்ணுகையாலே ஆந்தரசத்ருக்களாயிருக்கிற. ஐவரால் - இந்த்ரியங்களைந்தாலும். குமை - நலிவு. தீற்றி - உண்ணும்படிபண்ணி. என்னை - இவற்றுக்கஞ்சி யுன்னை சரணம்புகுந்த வென்னை. உன் - ப்ராப்தனாய் போக்யனான வுன். பாதபங்கயம் - திருவடிகளை. நண்ணிலாவகையே-நண்ணாதபடியாகவே. இன்னம் - "காட்டிப்படுப்பாயோ" என்னும்படி ஆர்த்திபிறந்தபின்பும். நலிவான் - சம்சாரத்திலே வைத்து நலிய. எண்ணுகின்றாய் - எண்ணாநின்றாய். எண்ணிலா - "அநந்தஸ்ய ந தஸ்யாந்தஸ் ஸங்க்யாநம் வாபி வித்யதே"

(அநந்தஸ்யநதஸ்யாந்தஸ்ஸங்க்யாநம்வாபிவித்யதே) என்று அஸங்க்யேயமாய். பெரு - அபரிச்சிந்நமாய். மாயனே - ஆஶ்சர்யாவஹமான ப்ரக்ருதிதத்த்வத்தை ப்ரகாரமாகவுடையனாய். இமையோர்கள் - அஸ்ப்ருஷ்டசம்சார கந்தராய் அஸ்கலித ஜ்ஞாநரான நித்யசூரிகளாலே. ஏத்தும் - ஸ்துத்யனாய்க்கொண்டு. மூன்றுலகம் - த்ரிவிதசேதநாசேதநங்களையும். உடை - சேஷமாகவுடைய. அண்ணலே - ஸ்வாமியாய். அமுதே - ஸ்வதஸ்ஸித்தமான நித்யபோக்யதையையுடையையாய். அப்பனே - உத்பத்தியே பிடித்து உபகாரகனாய். என்னை - என்னை. ஆள்வானே - இவ்வளவும்நிர்வஹித்துக்கொண்டு போருகிறவனே.

உண்ணிலாவியவென்றுதொடங்கி, நலிவானின்னமெண்ணுகின்றாயென்றந்வயம். உபகாரகனான வீஶ்வரனை யபகாரகனாகச்சொல்லுகிறது - பந்தத்தினாற்றத்தாலே. இந்த்ரியங்களுக்குப்புருஷசமாதி - ப்ரவர்த்தகத்வபுத்தியாலே.எண்ணிலாப்பெருமாயனேயென்று - அஸங்க்யேயாபரிச்சிந்நாஶ்சர்யகுணனென்றுமாம். ...*

## ஈடு - முதற்பாட்டு.

உன்னாலல்லது செல்லாதபடியாய் உன் திருவடிகளிலே சரணம் புகுந்த வென்னை யிந்த்ரியங்களாலே நலியப் பாராநின்றாயென்கிறார்.

( உண்ணிலாவியவித்யாதி ) ரக்ஷகன் சந்நிதியாகைதவிர்ந்து பாதகர்சந்நிதியாயிற்றுக்கிடீர். தேவரெனக்குப்பகைப்புறம்பிட்டுவருகிறதென்றே யிருக்கிறது. (நிலாவிய) உள்ளானாலும், போக்குவரத்துண்டாமாகில் படைப்போதறிந் திருக்கலாமிறே; (நிலாவிய) வர்த்திக்கிற. பாதகவர்க்க மந்தரங்கமாய் நின்று நலிகிறபடி. "தேஹாத் வ்யதிரிக்தமாயிருப்பதோ ராத்மவஸ்துவுண்டு" என்றறிகிறிலர், இவையே வர்த்திக்குமத்தனை என்றிருக்கிறார். (ஐவரால்) இப்படி நலியாநின்றாலும், ஒருவரிருவராகி லறிந்து பரிஹரிக்கலாமிறே; இவர்களிலே நால்வரொருமுகமாய்நின்றுநலிய, ஒருவருடலாந்தமாயிருக்கும். ரக்ஷகனொருவனாயிருக்க, பாதகரைவராயிருக்கிறபடி. அஞ்சாலென்னாதே, ஐவராலென்றது - அசேதநங்களா யிருக்கச் செய்தேயும் சேதநசமாதியாலே சொல்லுகிறாராயிற்று பாதகத்வத்திலூற்றங்கொண்டு. ஆத்மா வென்றொன்றுண்டாய், அதினுடைய ஜ்ஞாநப்ரஸரத்வாரமாத்ரம் மநஸ்ஸாய், அதுக்கிவைசேஷமென்றறிகிறிலர். (குமைதீற்றி) நலிவுபடுத்தி. விடுநகங்கட்டுவாரை"நெகிழக்கட்டினாய்" என்றுறுக்கிக் கட்டுவிப்பாரைப்போலே, இந்த்ரியங்கள்தண்ணளிபண்ணுமே யொக்கவிருந்து நலிவிக்கிறானென்றிருக்கிறார். நலிகிறநலிவைக்கொண்டு - சேதநசமாதியாலே சொன்னோமாகில்,இவற்றின்பக்கல் குறையுண்டோ; இவைநலிகிறபோது மிவனில்லாமையில்லையிறே, இவனுக் கிவைதா மவிதேயமுமன்றே, ஹ்ருஷீகேசனே. ( என்னை ) "பலநீ காட்டிப்படுப்பாயோ," "இன்னங்கெடுப்பாயோ" என்று, அவற்றின் சந்நிதியிலே முடியும்படியானவென்னை. (உன்பாதபங்கயம்) "தாவி வையங்கொண்ட தடந்தாமரைகள்" என்றும், "பூவார்கழல்கள்" என்றுஞ் சொல்லுகிற திருவடிகளை. ( உன்பாதபங்கயம் ) என்னை யன்றே சொல்

லவேண்டுவது, உன்னை நீ யறிந்திலையிறே. உன்னடி யறியாமல்தானகற்றுகிருயன்றே. * பேதைக்குழவி பிடித்துச் சுவைத்துண்ணும் பாதக்கமலமிறே. சம்சாரத்தி லருசிபிறவாதார்க்கும் விடவொண்ணுதபடி போக்யமானதிருவடிகளை. * தேனேமலருந்திருப்பாதமிறே. (நண்ணிலாவகையே) காதாசித்கமாகக் கிட்டாதொழிகையன்றிக்கே, கிட்டாதொழிகையே ஸ்வபாவமாக. "இனிநண்ணப்புகாநின்ருேமோ" என்றிருக்கிருர். (நலிவான்) நண்ணுமையென்றும், நலிவென்றும் - இரண்டில்லை யிவர்க்கு. திருவடிகளைக் கிட்டாதொழிகையே யிவ்வாத்மாவுக்குநலிவு. இக் க்ரூரமான வகையே நலிவான். (இன்னம்) "அகலகில்லேனிறையு மென்றலர்மேல் மங்கையுறைமார்பா, உன்னடிக்கிழமர்ந்து புகுந்தேன்" என்ற பின்பும். (எண்ணுகின்ருய்) ஈப்ஸவரனுக்கு வேறுக்ருத்யமில்லையென்றிருக்கிருர். "யஸ்யமந்த்ரீச கோப்தாச ஸுஹ்ருச்சைவஜநார்த்தநঃ" (யஸ்யமந்த்ரீச கோப்தாச ஸுஹ்ருச்சைவஜநார்த்தநঃ) என்று பாண்டவர்கள் கார்யம் மநோரதித்தாப்போலே. இங்குக் கார்யம் செல்லாநிற்கச்செய்தே, மந்த்ரமும் செல்லுகிறபடி. "இவனை நம்பக்கலினின்றும் பிரித்தோமாம்விரகென்ஞே" என்று சிந்திக்கிருனென்றிருக்கிருர். (எண்ணிலாப்பெருமாயனே) "அஸ்மாந்மாயீ ஸ்ருஜதே விஶ்வமேதத்" (அஸ்மாந்மாயீ ஸ்ருஜதே விப்ஶவமேதத்) என்றும், "மமமாயாதுரத்யயா" (மமமாயாதுரத்யயா) என்றும் சொல்லுகிறபடியே, எண்ணிறந்தசெயல்களைச் செய்யவற்ருய், நீ வேண்டாதாரைச் சிறையிட்டு நலியக்கடவதான ப்ரக்ருதியைப்பரிகரமாகவுடையவனே. அன்றிக்கே, "எண்ணிறந்த மஹாஶ்சர்யமான குணங்களையுடையவனே" என்று பிள்ளான்பணிக்கும்படி. இப்படி குணவானுயிருக்கிற வுனக்கென்னை நலிகைக் கென்ன சேர்த்தியுண்டு. விடுநகங்கட்டி நலியாநிற்கச்செய்தே "தண்ணீர்" என்பாரைப்போலே, அவன் குணங்களைச் சொல்லுகிறபடி. (இமையோர்களேத்தும்) "தன்னுலல்லது செல்லாதாரை யொருவன் போகடவல்லபடியே" என்று கொண்டாடவொருவிபூதியுண்டாவதே ?. "அவர்கள் முகங்கொடுக்கையிறே அவனிங்கு வாராதிருக்கிறது" என்றிருக்கிருர். த்ரிசங்குவினுடைய வோலக்கம் கிளர்ந்தாப்போலே கிளர்ந்ததாகி லவனுக்கென்னை விட்டிருக்கப்போமோ. (உலகமூன்றுடையண்ணலே) "தான் நினைத்தபோது கார்யஞ்செய்கிருன்" என்றிவரிருக்கைக்காகத் தன்னுடைய சேஷித்வத்தைக் காட்டினுனவன்; "இப்படி ரக்ஷகனுனவன் நம்மை நலியுமோ" என்றிருக்கும்படிபண்ணிப் பின்னை நலிகைக்காகக் காட்டினு னென்றிருக்கிருரிவர். (அமுதே) அவன் தன்னுடைய போக்யதையைக்காட்டிற்றும் தம்மை புஜிப்பிக்கைக்கல்ல, புறம்பொன்று பொருந்தாதேநோவுபடவென்றிருக்கிருர். (அப்பனே) "இப்படி யுபகாரகனுனவன் நலியாநின்ருனே" என்று விஶ்வசிக்கப்பண்ணிப் பின்னை யபகரிக்கைக்காகக் காட்டினுனென் றிருக்கி

ருர். ( என்னையாள்வானே ) "ப்ராங்ந்யாயம்பலிக்கும்" என்றிருக்கைக்காகக் காட்டினுனென்றிருக்கிருர். "இதுக்குமுன்பெல்லாம் நம்மை நிர்வஹித்துக்கொண்டு போந்தது நாமும் சிலசெய்தோ ?, அப்படியே மேலும் நம்கார்ய மவன்செய்யும்" என்றிருக்கைக்காகச் செய்தானத்தனை ; நினைவு வேறேயென்றிருக்கிருர்.

என்னையாள்வானே - நலிவானின்னமெண்ணுகின்றுயென்கிருர்.*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (உண்ணிலாவியவித்யாதி) "என்னை - ஐவரால்குமைதீற்றி- நலிவானின்னமெண்ணுகின்றுய்" என்கிறபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (உன்னுலல்லதித்யாதி)

பூர்வார்த்தத்துக்கு சமுதாயதாத்பர்யம் (ரக்ஷகனித்யாதி) "உள்" என்றதுக்குபாவம் ( தேவரொனக்கித்யாதி ) "நிலாவிய" என்கிறவர்த்தமானுர்த்தம் (உள்ளானுலுமித்யாதி) படைப்போது-யுத்தகாலம். இவ்வாக்யத்துக்குசேஷம் (நிலாவியவித்யாதி) "தேவரொனக்கு" இத்யாதிவாக்யவிவரணம் (பாதகவர்க்கமித்யாதி) "நிலாவியவைவர்" என்றதுக்குஹார்த்தபாவம் ( தேஹாதித்யாதி ) "உண்ணிலாவிய" என்றவநந்தரம் "ஐவர்" என்றதுக்குபாவம் (இப்படியித்யாதி) நலியும்க்ரமமேதென்ன (இவர்களிலேயித்யாதி) சக்ஷுஶ்ஸ்ரோத்ரஜிஹ்வாக்ராணங்கள் முகத்திலவையாகையாலே, சாக்தியாலே (ஒருமுகமாய்) என்கிருர். த்வகிந்த்ரியம் சர்வசரீரவ்யாபியாகையாலே (உடலாந்தமாயிருக்குமென்று) சாடு. ( உடலாந்தம் ) சர்வசரீரவ்யாபி. த்வகிந்த்ரிய மென்றபடி. பிள்ளைதிருநறையூரரையர் நிர்வாஹத்திலேபாவம் (ரக்ஷகனித்யாதி) இவற்றை சேதநராகச்சொல்லி விஷண்ணராகிறவருடைய ஹார்த்தபாவமாதல், பலிதமாதல் (ஆத்மாவென்றித்யாதி) குமை - பாதை. தீற்றி-புஜிப்பித்து. நலிவுபடுத்தியென்றபடி. சேதநஸமாதியாலே இந்த்ரியங்கள் நலிகிறனவாகச்சொல்லிவைத்து, ஈஶ்வரன் பாதிக்கிருனென்பானென்னென்ன (விடுகமித்யாதி, ஹ்ருஷீகேசனேயென்னுமளவும்) விடுகம்-கிட்டிக்கோல். உறுக்கி-உறுத்தி. இவைநலிகிறபோதிவன் ஸந்நிஹிதனுகையாலும், ஹ்ருஷீகேசனுகையாலே நிவர்த்திப்பிக்கசக்தனுகையாலும், பாதியாதபடிபண்ண ப்ராப்தமாயிருக்க; அதுசெய்யாமையாலே "இவனேபாதிக்கிருன்" என்னலாமென்று- இவ்வாக்யங்களுக்குபாவம்.

திருவடியைத் தாமரையாகச் சொல்லுகிறதுக்கு ப்ரமாணம் (தாவிவையமித்யாதி) "பாதபங்கயம்" என்கிற பதப்ரயோகத்துக்கும், "உன்" என்றதுக்கும் பாவம் ( என்னையன்றேவித்யாதிவாக்யத்வயம் ) என்னையன்றே - என்னுற்றுமையையன்றே வுனக்குச் சொல்லவேண்டுவ தென்றபடி. உன்னைநீ யறிதியென்றது-போக்யமான திருவடிகளையுடைய வுன்னையென்றபடி. ஏதத்விவரணம் ( உன்னடியறியாமலித்யாதி ) அடியென்று - ஶ்லேஷம் ; மூலமும், திருவடிகளும். தன்னடியில் போக்யதைதானறியுமோ வென்ன ( பேதையித்யாதி ) "ஶ்ரீமுக்தஸ்மிதம்" ( முக்தஸ்மிதம் ) என்னுமாபோலே பருவத்துக்குத்தக்க வறிவில்லாதகுழவி, திருக்கையாலே பிடித்துத் திருப்பவளத்திலேவைத் தாஸ்வாதித்து புஜிக்கும் திருவடித்தாமரையென்றபடி. பெரியாழ்வார்திருமொழி, "சீதக்கடலுள்" இத்யாதி. திருவடிகள் போக்யமானதினெல்லையை யருளிச்செய்கிருர் (சம்சாரத்திலித்யாதி) இது

க்கு ப்ரமாணம் ( தேனேமலருமித்யாதி ) "வகையே" என்கிறவவதாரணார்த்தம் (காதாசித்கமித்யாதி) பலிதம் (இனிநண்ணவித்யாதி) "நண்ணிலாவகையே" என்றவநந்தரம் "நலிவான்" என்கையாலே - கிட்டாமையே யிவர்க்குநலிவென்கிறார் ( நண்ணுமையென்று மித்யாதி ) இவர்க்கே யன்றிக்கே, ஸ்வரூபஸ்திதியை விசாரித்தாலு மிதுவே நலிவென்கிறார் (திருவடிகளையித்யாதி) இக் க்ரூரமான வென்றது - "நண்ணிலா" என்றத்தை. "எண்ணுகின்றாய்" என்கிற வர்த்தமாநார்த்தம் ( ஈஸ்வரனுக்கித்யாதி ) "குமைதீற்றி" என்றத்தைக்கடாக்ஷித்து. "இன்னமெண்ணுகின்றாய்" என்ற வர்த்தமாநத்துக்கு சத்ருஷ்டாந்தமாக பாவாந்தரம் ( யஸ்யமந்த்ரீசேத்யாதி ) இதம் மஹாபாரதே. "எண்ணுகின்றாய்" என்றதுக்கு சப்தார்த்தமாதல், இவர்விஷயத்தில் கார்யம்பண்ணும் ப்ரகாரமாதல் (இவரைநம்பக்கலிலித்யாதி )

"மாயன்" என்றதுக்கும், ப்ரக்ருதி யெண்ணிறந்த செயல்களைச் செய்யுமென்னுமதுக்கும் ப்ரமாணம் ( அஸ்மாந்மாயீத்யாதி ) அஸ்மாத் - ப்ரதாநாதித்யர்த்தஃ. ப்ரக்ருதி யெண்ணிறந்த செயல்களைச் செய்கையாவது- அநேககார்யங்களை ஸ்ருஷ்டிக்கவற்றா யிருக்கை. மாயீஎன்று - ப்ரக்ருதியை பரிகரமாகவுடைய வீஸ்வரனைச்சொல்லுகிறது. "பெருமாயன்" என்றதுக்கு ப்ரமாணம் (மமமாயேத்யாதி) பிள்ளைதிருநறையூரரையர் நிர்வாஹத்திலே யருளிச்செய்கிறார் (இப்படி குணவானுயித்யாதி ) மற்றை நிர்வாஹத்திலே, நலிகிறவனை குணவானென்கிறதென்னென்ன (விடுகமித்யாதி)

"உலகமூன்றுடை" இத்யாதியாற்சொன்ன குணங்களுக்கு மிந்த ந்யாயமொக்கும். "இமையோர்களேத்தும்" என்றதுக்கும் "நலிவானின்னமெண்ணுகின்றாய்" என்றதுக் கநுகுணமாக பாவம் ( தன்னாலல்லதித்யாதி ) நித்யசூரிகளை வெறுப்பானென்னென்ன ( அவர்களித்யாதி ) அவர்கள் முகங்கொடாவிட்டாலிங்கு வருவனோவென்ன ( த்ரிசங்குவித்யாதி )

அவனிவர்தரிக்கைக்காகக் காட்டின சேஷித்வத்தை "நலிவானின்னமெண்ணுகின்றாய்" என்றதுக்கநுகுணமாக யோஜிக்கிறானென்கிறார் ( தான்நினைத்தபோதித்யாதி வாக்யத்வயத்தாலே )

இந்தந்யாயம் - "அமுதே" என்று தொடங்கி மேலே சொல்லுகிற பதங்களுக்குமொக்கும். ப்ராங்ந்யாயமாவது - கீழே * மயர்வறமதிநலமருளித் தன்னாலல்லது செல்லாமையை யுண்டாக்கினபடி. பலிக்குமென்றது - இதுக்குமேலுமநிஷ்டநிவ்ருத்திபூர்வகமாக விஷ்டப்ராப்தியும்பண்ணித் தருமென்றபடி. கீழ்வாக்யவிவரணம் ( இதுக்குமுன்பித்யாதி )

அரையர் நிர்வாஹத்திலே யந்வயங்காட்டுகிறார் ( என்னை யாள்வானே யித்யாதி ) மற்றைப்பக்ஷத்துக்கு, அடைவேயந்வயம்..................................*



# இரண்டாம்பாட்டு.

என்னையாளும்வன்கோவோரைந்திவைபெய்திராப்பகல்மோதுவித்திட்
டுன்னைநானணுகாவகைசெய்துபோதிகண்டாய்
கன்னலேயமுதேகார்முகில்வண்ணனேகடன்ஞாலங்காக்கின்ற
மின்னுநேமியினாய்வினையேனுடைவேதியனே.

## ஆறாயிரப்படி.

(என்னையாளும்) சௌந்தர்யத்தாலேயும் போக்யதையாலேயும் நிரவதிகனானவென்னை யுமக்குத்தந் தும்முடைய மத்விஶ்லேஷாஸஹிஷ்ணுத்வத்தையு மறிந்து சர்வலோக பரிபாலகனுமா யிருந்துவைத்து நானும்மை யிந்த்ரியவஶ்யராக்கி யென்னையிழப்பிப்பனோவென்னில்; எனக்கு நிரவதிகபோக்ய பூதாத்மப்ரதனாய், தத்ஸ்வபாவனுமாய் சர்வலோக பரிபாலகனுமாயிருந்தாயேயாகிலும், உன்னை சரணம்புக்க பின்பு மிந்த ப்ரக்ருதியிலே யென்னைவைத்தருளுகையாலே, உனக்கநந்யார்ஹ சேஷமான வென்னை யதிப்ரபலங்களான விந்த்ரியங்களுக்கு சேஷமாக்கி யிவற்றையிட்டு பாதிப்பித் துன்றிருவடிகளைச்சேராதபடி பண்ணிப்போகிறா யென்று பயப்படாநின்றேனென்கிறார் .......................... ................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஸர்வப்ரகாரபோக்யனானநீ, ப்ரபலமான விந்த்ரியங்களாலே யநவரதம் நலிவித்தகல நில்லாநின்றாயென்கிறார்.

கன்னலே – சர்வதோமுகமான போக்யதையையுடையையாய். அமுதே-அவ்வளவேயன்றியே சத்தாதாரகசாரஸ்யவானாய். இப்படிபோக்யமாமளவில், கார்முகில் – சர்வோபகாரகமான காளமேகம்போலே. வண்ணனே-வளையாமலுபகரிக்கும் ஸ்வபாவத்தையுடையையாய். உபகரிக்குமிடத்தில், கடல்-கடல்சூழ்ந்த. ஞாலம்-பூமியையடங்க. மின்னு-உஜ்ஜ்வலமான. நேமியினாய்- திருவாழியையுடையையாய். காக்கின்ற-காத்தூட்டுமவனாய். வினையேனுடை-உன்னைக்கிட்டுகைக்கு விரோதியான பாபத்தையுடையேனான வெனக்குக்கேட்டுவிடும்படி. வேதியனே – வேதைகவேத்யனானவனே. என்னை-உனக்குக்கிங்கரனானவென்னை. ஆளும்-தங்களுக்குநிதேஶகாரியாம்படி யாண்டுகொள்ளக்கடவனவாய். எனக்குக்கரணதயாபரதந்த்ரமாய் வைத்து, என்னளவில். வன் – ப்ரபலமான. கோ – ஸ்வாதந்த்ர்யத்தையுடைத்தாய். ஓர்-ஒன்றுக்கொன்றொவ்வாதபடி யத்விதீயமான. இவை-இந்த. ஐந்து-ஐந்திந்த்ரியங்களையும். பெய்து-எனக்குபாதகத்வேந நியோகித்துவைத்து. இராப்பகல்-அஹோராத்ரவிபாகமற. மோதுவித்திட்டு-பீடிப்பித்து. உன்னை – ப்ராப்தனாய் போக்யபூதனானவுன்னை. நான்-உன்வாசியறிந்தநான். அணுகாவகை – கிட்டாதபடி. செய்து-பண்ணி. போதிகண்டாய்-முகந்தோற்றாதபடி போகாநின்றாய் ..........................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

துர்ப்பலனானவென்னை யிந்த்ரியங்களாலே ஸர்வகாலமும் நலிவித்து, இந்நோவை யறிவிக்கவொண்ணாதபடி போதியென்கிறார்.

(என்னையாளும்வன்கோ) சத்தைநோக்குவாய் நீயாய், பணிகொள்வார்வேறேசிலராவதே. அத்தலையித்தலையாயிற்றுக்கிடாய். ஈஶ்வரனென்பானொருவனுண்டாய், அவனுக்காத்மா சேஷமாய், அவனுக்கு மநஸ்ஸந்தரங்க பரிகரமாய், அதுக்கிந்த்ரியங்களும் சேஷமாகைதவிர்ந்து பள்

ளிசள்கலகம்போலே என்னை யிந்த்ரியங்களாளும்படியாவதே. (வன்கோ) ப்ரபலருமாய் வந்தேறிகளானவர்களுக்குப் பணிசெய்து வெறுத்தேன். (வன்மை - பலாத்காரம்.) "கோவாயைவரென்மெய்குடியேறிக்கூறைசோறிவைதாவென்றுகுமைத்துப்போகார்." ஒருநீர்மையுடையவன் சேஷியாகைதவிருவதே!. (வன்மை - காடிந்யம்.) சமஸ்த கல்யாணகுணாத்மகன் சேஷியாகைதவிர்ந்து, நிர்க்குணர்சேஷிகளாயிற்றுக்கிடீர். (ஓரைந்து) குணப்ரதாநபாவத்தாலன்றிக்கே சமப்ரதாநமாய் நலிகிறபடி. கடவானொருவனாய், பணிசெய்வது மவனுக்கான நிலைகுலைந்தது. "பதிம்விஶ்வஸ்ய" (பதிம்விப்ʼவஸ்ய) என்றும் "அனைத்துலகுமுடைய வரவிந்தலோசநன்" என்றும் ஒருவன்சேஷியாகைதவிர்ந்ததிறே. (ஐந்து) ஏகசேஷமாகைதவிர்ந்ததுகிடீர். ( இவைபெய்து ) அவற்றின்பக்கல் குறையுண்டோ, அவற்றையிட்டு நலிவிக்கிறாய் நீயல்லையோ. ஸ்ரீப்ரஹ்லாதனைப்பாம்புகளைக்கூடவிட்டுக்கட்டி நலிந்தாப்போலே யிருக்கிறதுகாணு மிவற்றையுண்டாக்கி யென்பக்கலிலே நீவிட்டது. (இராப்பகல் மோதுவித்திட்டு) காலத்துக்கு விநியோகமிதுவேயாவதே!. "ஒழிவில்காலமெல்லாம்" என்று அழகிதா!க வடிமைசெய்யவாசைப்பட்டேன். " அடியார்கள் குழாங்களை - உடன்கூடுவதென்றுகொலோ " என்று ப்ரார்த்தித்தவெனக்கு, இவற்றினுடனே கூடும்படியாவதே. (உன்னைநான்) பெற்றல்லது தரிக்கவொண்ணாதபடியாயிருக்கிற வுன்னை, கிட்டியல்லது ஜீவிக்கமாட்டாதபடியானநான். நிரதிசயபோக்யனானவுன்னை, புஜித்தல்லது தரிக்கமாட்டாதநான். (அணுகாவகைசெய்து) கிட்டாதபடிபண்ணி. (போதிகண்டாய்) உன்னையநுபவிக்கவேணுமென்று போந்தபிராட்டியை மாயமானைக்காட்டிப்பிரித்து, ஏகாக்ஷி ஏககர்ணிகைகள் கையிலே காட்டிக்கொடுத்துன்னைக்கொண்டகன்றாப்போலே கிடாயிதுவும். ( கன்னலேயமுதே ) ஒருவகையால்வந்த போக்யதையாகில் நானறியிரோனே. " ஸர்வகந்த⁴ஸ்ஸர்வரஸ: " (ஸர்வகந்தஸ்ஸர்வரஸ:) என்கிறபடியே சர்வவிதபோக்யமுமாய் * அளவிறந்து * கொள்ளமாளாவின்பவெள்ளமா யிராநின்றதே. கன்னலென்று - கருப்புக்கட்டி. அமுதென்று-போக்யமுமாய், சாவாமல் காக்குமதுவுமாயிருக்கை. (கார்முகில்வண்ணனே) அந்தபோக்யதையைத்தன்பேறாகத்தருமவன். பரமோதாரனென்றபடி. அன்றிக்கே, கார்காலத்தில் மேகம்போலே தர்ஶநீய்மானவடிவை யுடையவனேயென்னுதல். (கடல்ஞாலமித்யாதி) "போதிகண்டாய்" என்று ஆர்காற்கட்ட நீயன்று நோக்கிற்று. " இந்த்ரியங்களாலே நோவுபட்டோம் " என்றிவர்களபேக்ஷித்தபோதோ ! நீநோக்கிற்று. நீபோக்யன் என்றறியாதாரையுங்கூட நோக்குமவனல்லையோ. கடலோடுகூடின பூமியைக் கண்ணிலேவெண்ணெயிட்டுக்கொண்டு நோக்கும் ஸ்வபாவனல்லையோ. (காக்கின்ற) ரக்ஷணந்தான் காதாசித்கமோவுனக்கு. (மின்னுநேமியினாய்) இயற்றியுண்டென்னு. சங்கல்பத்தாலே நோக்குமவனே!, ஆசிலேவைத்தகையும் நீயுமா

யன்றோ நோக்குவது. "திருச்சக்கரத்தாலகல்விசும்பும் நிலனுமிருளார்வி னைகெடச்செங்கோல் நடாவுதிர்" என்னக்கடவதிறே. உருவினவாளுறை யிலிடாதேயன்றோ நோக்குவது. விளங்காநின்றுள்ள திருவாழி. (வினை யேனுடைவேதியனே) "தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்யமதி தைவதம்" (தேவாநாம்தாநவாநாஞ்சஸாமாந்யமதிதைவதம்) என்றும், "பொ துநின்றபொன்னங்கழல்" என்றுஞ்சொல்லுகிறபடியே ஊர்ப்பொதுவாயி ருக்கிறநீ, என்னளவிலேவந்தவாறே வேதைக ஸமதிகம்யனானாய். இன்றிரு ந்தோலைப்புறத்திலே கேட்கும்படியான பாபத்தைப்பண்ணுவதே நான்.

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (என்னையாளுமித்யாதி) "போதிகண்டாய்" என்னுமள வுங்கடாக்ஷித்தவதாரிகை (துர்ப்பலனானவித்யாதி) துர்ப்பலனான வென்னையென்ற து - "மோதுவித்து" என்றத்தாலே ஸித்தமென்றுவிவக்ஷிதம்.

"ஆளும்" என்றதுக்குபாவம் (சத்தையித்யாதி) அத்தலை யித்தலையாகையா வது-ஈஶ்வரனானுகை தவிர்ந்து இந்த்ரியங்களாளுகை. ஏதத்விவரணம் (ஈஶ்வர னித்யாதி) (கலஹத்தில் - பள்ளிகள்போலே) என்றந்வயிப்பது. அதாவது-ஒருவ னுக்கு தாஸனானபள்ளியே, அராஜகமானால் ஸ்வதந்த்ரனாய் ஸ்வாமியை நலியுமா போலேயென்றபடி. "வன்கோ" என்றது - வலியாலேகோவென்றாய், ஆகந்துக மென்கிறார் (ப்ரபலருமாயித்யாதி) "வந்தேறி" என்றதுக்குப்ரமாணம் (கோவா யித்யாதி) நீசேஷியாமது தவிர்ந்திவை யெனக்கு நியாமகமாய்க்கொண்டுவந்தெ ன் சரீரத்திலே குடிபுகுந்து, நான் கூறையும் சோறுமாக நினைத்திருக்குமவையொ ழிய வேறே சிலவற்றைத்தாவென்று என்னைநெருக்கி, க்ஷணமும் கால்வாங்குகிறி லரித்யர்த்தஃ. திருமொழி ஏழாம்பத்து ஏழாந்திருமொழி ஒன்பதாம்பாட்டு. * வன் மைக்கு - பலாத்காரமாகக் கீழருளிச்செய்து, மநஃகாடிந்யமாக வர்த்தாந்தரம் (ஒ ருநீர்மையித்யாதி) ஏதத்விவரணம் (சமஸ்தேத்யாதி) குணப்ரதாநபாவமாவது - அ ப்ரதாந ப்ரதாநபாவம். "குணப்ரதாநே ரூபதௌ" (குணேப்ரதாநே ரூபாதௌ) என்றிறேநிகண்டு. "ஆளும் - ஐவர்" என்றதுக்குபலிதம் (கடவானித் யாதி) ஏதத்விவரணம் (பதிம்விஶ்வஸ்யேத்யாதி) ஏகசேஷமாகை தவிர்ந்ததுகிடீ ரென்றது - அப்ராப்தமாகிலு மேகசேஷமாகலாயிறே, அதுவும் தவிர்ந்ததென்றப டி. * பெய்தல் - இடுதலாய், இவற்கறயிட்டென்றபடி. அவற்றை யசேதநமாகச் சொல்லி, நலிகிறவ னீஶ்வரனாகச்சொல்லுகிறதுக்குபாவம் (அவற்றின்பக்கலித்யா திவாக்யத்வயம்) இதுக்கு த்ருஷ்டாந்தம் (ஸ்ரீப்ரஹ்லாதேத்யாதி) "இராப்பகல்" என்றதுக்குபாவம் (காலத்துக்கித்யாதி) பலிதம் (ஒழிவிலித்யாதி) "இவைபெய் து" என்றத்தைக்கடாக்ஷித்துபாவம் (அடியார்களித்யாதி)

விவரணம் (நிரதிஶயேத்யாதி) "போதி" - போனாயென்றபடி. "நானுன்னை க்கிட்டாதபடி பண்ணிக்கடக்கப்போனாய்" என்னுமத்தை த்ருஷ்டாந்தபூர்வகமா க வருளிச்செய்கிறார் (உன்னையநுபவிக்கவித்யாதி)

"கன்னலே" என்றது - சர்வரஸத்துக்கு முபலக்ஷணமாக விவக்ஷித்துபாவ ம் (ஒருவகையாலித்யாதிவாக்யத்வயம்) (அளவிறந்து) என்றதும், (கொள்ளமாளா) என்றதும் - அர்த்தாத்ஸித்தம். "கன்னலே, அமுதே" என்கிறவடைவுக்குபாவம்

(கன்னலென்றித்யாதி) மூந்ினதுக்கு, "வண்ணம்" என்று - ஸ்வபாவமாய், ஔதார்யத்தைச்சொல்லுகிறது. இத்தால்பலித்தபாவம் (அந்தபோக்யதையித்யாதி)

"கடல்ஞாலம்" என்றவசேதநசமாதிக்குபாவம் (போதிகண்டாயித்யாதி) காற்கட்ட-ப்ரார்த்திக்க. விவரணம் (இந்த்ரியங்களாலேயித்யாதி) "கன்னலேயமுதே" என்றவநந்தரம் "கடல்ஞாலம்" என்றதுக்குபாவம் (நீபோக்யனித்யாதி) சப்தார்த்தம் (கடலோடித்யாதி) வர்த்தமாநார்த்தம் (ரக்ஷணந்தானித்யாதி) "காக்கின்ற" என்றவநந்தரம் "நேமியினாய்" என்றதுக்குபாவம் (இயற்றியித்யாதி) இயற்றியென்று - யத்நமாய், ஸாமர்த்யமென்றபடி. ஆசிலே - ஆயுதப்பிடியிலே. ஆயுதங்கொண்டு ஜகத்தைரக்ஷிக்குமதுக்குப்ரமாணம் (திருச்சக்கரத்தாலித்யாதி) க்ருபையால் பூர்ணனான திருவாழியாழ்வானாலே, பரந்தவிசும்பையும் பூமியையும்மோஹாந்தகாரஸஹசரிதமான விபரீதவ்ருத்தங்கள் போம்படி சங்கல்பரூபமான வாஜ்ஞையைநடத்தாநிற்புதிரித்யர்த்தஃ. "மின்னு" என்றதுக்குபாவம் (உருவினவித்யாதி)

"கடல்ஞாலங்காக்கின்ற" என்றத்தைக்கடாக்ஷித்து, "வினையேனுடைவேதியனே" என்றதுக்குபாவம் (தேவாநாமித்யாதி) "வினையேன்" என்றதுக்குபாவம் (இன்றிருந்தித்யாதி) மூன்றாந்திருவந்தாதி, "அதுநன்றிதுதீது" இத்யாதி. (பொதுநின்றபொன்னங்கழல்) என்றதுக்கர்த்தம் - சர்வாஶ்ரித சாதாரணமாய் ஸ்ப்ருஹணீயமா யழகிதாயிருந்துள்ள திருவடிகளையென்றபடி.

கன்னலேயென்றுதொடங்கி, வேதியனே-போதிகண்டாயென்றந்வயம் ...*

## மூன்றாம்பாட்டு.

வேதியாநிற்குமைவரால்வினையேனைமோதுவித்துன்றிருவடி
சாதிபாவகைநீதடுத்தென்பெறுதியந்தோ
வாதியாகியகலிடம்படைத்துண்டுமிழ்ந்துகடந்திடந்திட்ட
சோதிநீண்முடியாய்தொண்டனேன்மதுசூதனனே.

### ஆறாயிரப்படி.

(வேதியாநிற்கும்) உம்மை நானிந்த ப்ரக்ருதியிலே வைத்ததொரு ப்ரயோஜநார்த்தமாகவாதலா லிந்த ப்ரக்ருதிசம்பந்தத்தை நிவர்த்திப்பிக்கக்கடவ தென்னென்னில்; நிகிலஜகந்நிர்மாண நிகரணோத்கிரண க்ரமணோத்தரணதிலீலனாய் சர்வேஶ்வரனா யவாப்தசமஸ்தகாமனாய் *குணேர்த்தாஸ்யமுபாகதமதநிஷ்ட நிவாரணைகப்ரயோஜநனுமாயிருந்தவுனக்கு, ப்ரக்ருதியிலே யென்னை வைத்து அநவரத பாதகத்வைக ஸ்வபாவமான விந்த்ரியங்களாலும் பாதிப்பித் துன்றிருவடிகளைச் சேராதபடி தடுத்தாலென்னப்ரயோஜந முண்டென்கிறார்..................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், சர்வப்ரகார ரக்ஷணவ்யாபாரத்தையுடைய நீ, இந்த்ரியங்களாலே நலிந் துன்றிருவடிகளைக் கிட்டாதபடி பண்ணினா லுனக்கென்னலாப முண்டென்கிறார்.

ஆதி - காரணபூதன். ஆகி - ஆய்க்கொண்டு. அகல் - அதிவிஸ்தீர்ணமான. இடம் - ஜகத்தை. படைத்து - ஸ்ருஷ்டித்து. உண்டு - ப்ரளயாபத்திலே வயிற்றிலே வைத்து நோக்கி. உமிழ்ந்து - அநந்தரமுமிழ்ந்து. கடந்து - அந்யாபிமாநமறும்படியளந்து. இடந்திட்ட—நைமித்திகப்ரளயத்திலே வராஹரூபியாயிடந்து. அத்தாலே, சோதி - சர்வஸ்வாமித்வஸூசகமான ஔஜ்ஜ்வல்யத்தையும். நீள்-உத்துங்கதையையுமுடைத்தான. முடியாய் - திருவபிஷேகத்தை யுடையையாய். தொண்டனேன்- உன்னை யநுபவிக்கையிலே சபலனுன வெனக்கு. மதுசூதனனே - ப்ரதிபந்தகத்தையழிக்குமிடத்தில் மதுவையழித்தாப்போலே யழிக்கவல்லனனவனே. வேதியாநிற்கும் - ஊடுருவ நலியாநிற்கக்கடவராயிருக்கிற. ஐவரால் - ஐந்திந்த்ரியங்களாலே. வினையேனை - உன்னுடைய ரக்ஷணத்துக்கு விஷயமாகாதபடிபண்ணும் பாபத்தையுடையேனுன வென்னை. மோதுவித்து - பீடிப்பித்து. உன் - சர்வரக்ஷகனுன வுன். திருவடி - திருவடியை. சாதியாவகை - ப்ராபியாதபடி. நீ, தடுத்து - நிரோதித்து. என் - என்ன ப்ரயோஜநம். பெறுதி - பெறுவுதி. அந்தோ - ஐயோ!.

ரக்ஷகனுனவன் பாதகனுவதே யென்று கருத்து. ..........................*

## ஈடு - மூன்றும்பாட்டு.

ஜகத்துக்கு ஸர்வவிதரக்ஷகனுய்வைத்து, என்னையுன்திருவடிகளிலே கிட்டாதபடி யிந்த்ரியங்களாலே நலிவித்தா லுனக் கென்ன ப்ரயோஜநமுண்டென்கிறுர்.

(வேதியாநிற்கும்) அழகிதாக வெல்லா வவஸ்த்தைகளிலு மடிமைசெய்ய வாசைப்பட்டேன். "உடனுய்மன்னி" என்று பாரித்ததெல்லா மிவற்றுக்குப் பணிசெய்கைக் காவதே. (வேதியாநிற்கும்) வேதனையேபண்ணுநிற்கும். "யாவஜ்ஜீவமக்நிஹோத்ரம்ஜுஹுயாத்" (யாவஜ்ஜீவமக்நிஹோத்ரம்ஜுஹுயாத்) என்றுல் - "ஸாயம்ப்ராதஃ" (ஸாயம்ப்ராதஃ) என்றிருகாலங்களிலே யொதுக்காநின்றதிறே; அங்ஙனன்றிக்கே, சர்வாவஸ்த்தைகளிலு மடிமைசெய்ய வாசைப்பட்டுச் சொன்னதெல்லா மிவற்றின்பக்கலிலே யானபடி. (வினையேனை) போகத்துக்குப் பாரித்ததெல்லாம் க்லேஶப்படுகைக் குடலாவதே. (உன்றிருவடிசாதியாவகை நீதடுத்து) என்னவுறவின்கனந்தான். தம்முடைய குற்றத்துக்கு மவனை வெறுக்கும்படிகாணும் சம்பந்தமிருக்கிறபடி. சாதநாநுஷ்டாநம்பண்ணி பலத்துக்கு விரோதம் பண்ணுவாரைச் சொல்லுமாபோலே சொன்னபடி பாரீர். உன் திருவடிகளை சாதியாதபடி தகைந்து. (என்பெறுதி) என் ஸ்வரூபமழியு மித்தனையோ வேண்டுவது. நான்படுகிற வ்யஸநத்தா லுனக்கொரு ப்ரயோஜநமுண்டாகி லெனக்கதுவேயமையும். உனக்காகவிருக்குமதிறே யெனக்கு வேண்டுவது. "ஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ" (ஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ) என்கிறவிளையபெருமாள்; துர்வாஸாவர, "பெருமாளுக்கோரவத்யம்வரவொண்ணுது" என்று தம் நோவுபாராதே விடைகொண்டாரிறே. (என்பெறுதி) ஸ்ரீபரதாழ்வானை நீ சத்யப்ரதிஜ்ஞனுகைக்காகப் பிரித்துவைத்தாய், என்னிருப்புக் குனக்

கென்ன ப்ரயோஜநமுண்டு. ( அந்தோ ) ஸ்வப்ரயோஜந மின்றியிலே பராநர்த்தமே ப்ரயோஜநமாக நலியும்படி பிறந்தேனே. ரக்ஷணமே ப்ரயோஜநமாக விருக்கிறவன், ந்ருஸம்ஸனைப்போலேயாவதே. ( ஆதி யித்யாதி ) உனக்கொரு ப்ரயோஜநமின்றிக்கே யிருக்கச்செய்தேயும் ரக்ஷிக்குமவனல்லையோ நீ, ஆனபின்புனக்கிதுபோருமோ. (ஆதிராஜ்யஸூசகமான) திருவபிஷேகந் தொடக்கமான திவ்யாபரணங்களை தரித்துக்கொண்டு நித்யஸூரிகள் நடுவே யிருக்கக்கடவ நீ, ஜகத்காரணபூதனாய்ப் பரப்பையுடைத்தான பூமியை ஸ்ருஷ்டித்து, பின்னை ப்ரளயாபத்துவர வயிற்றிலே யெடுத்துவைத்து, அநந்தரம் வெளிநாடுகாணப் புறப்படவிட்டு,பின்னை மஹாபலி யபஹரிக்க வெல்லைநடந்து மீட்டுக்கொண்டு, பின்னை நைமித்திகப்ரளயத்திலே மஹா வராஹமா யெடுத்துக்கொண்டேறி, இப்படிகளாலே சர்வரக்ஷணங்களையும் பண்ணுமவனல்லையோ. (தொண்டனேனித்யாதி) இவன் ரக்ஷகன் என்னுமிடத்துக்கு முன்னே யொன்று தேடிச் சொல்லவேணுமோ, மதுவைப்போக்கினாப்போலே யென்னிந்த்ரியவஸ்யதையை யின்றிருந்து போக்கினவனன்றோ. (தொண்டன் - இதரவிஷய சபலன்.) தன்படிகளைக்காட்டி யெனக்குப் புறம்புண்டான வாஸனையைப்போக்கி, இன்று கைக்கெட்டாதிருக்கிற விதுவேயிறே குறை..........*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு. ( வேதியாவித்யாதி ) "படைத்துண்டுமிழ்ந்து" இத்யாதியைக்கடாக்ஷித்து ( ஜகத்துக்கித்யாதி ) "உன்திருவடிசாதியாவகை" இத்யாதியைக்கடாக்ஷித்து ( என்னையுன்திருவடிகளிலேயித்யாதி )

இடைவிடாதே நலியாநிற்கு மைந்திந்த்ரியங்களாலே யென்று சப்தார்த்தம். "வேதியாநிற்கும்" என்கிற வர்த்தமாநத்தைக் கடாக்ஷித்து ஹார்த்தபாவம் ( அழகிதாகவித்யாதி ) விவரணம் ( உடனேயித்யாதி ) கீழ்ப்பாட்டிலே "இராப்பகல்" என்றுவைத்து, "வேதியாநிற்கும்" என்று - இங்கே வர்த்தமாநமாகச்சொன்னால் புநருக்தியன்றோவென்ன ( யாவஜ்ஜீவமித்யாதி ) அதாவது - ஸர்வாவஸ்த்தைகளிலுமென்றபடி.

வ்யாக்யாதாவினுடைய. (என்னவுறவினித்யாதி) விவரணம் ( தம்முடையவித்யாதி ) சம்பந்தத்தை யநுசந்தித் திவர் வெறுக்கும்படியென்னென்ன (சாதநாநுஷ்ட்டாநமித்யாதி) (சொன்னபடிபாரீர்) சம்பந்தத்தாலேயென்றபடி. "சாதியாவகை" என்றது - சாதியாவகையென்றாய், கிட்டாவகை யென்றபடி. "என்பெறுதி" என்கிற ஸ்வரத்தாலே சித்தித்தவர்த்தம் ( என்ஸ்வரூபமித்யாதி ) அதாவது- என்னை நீ தகைந்தென்னப்ரயோஜநம் பெறுகிறாய், என் ஸ்வரூப மழியுமதொழிய வேறொரு ப்ரயோஜநங் காணேனென்றபடி. இத்தால் - ஒருப்ரயோஜந முண்டானாலாறியிருப்பரோவென்ன (நான்படுகிறவித்யாதி) ப்ரயோஜந முண்டானால் தந்தாமை யழியமாறக்கூடுமோவென்ன ( உனக்காகவித்யாதி ) சேஷியினதிசயார்த்தமாகத் தந்தாமை யழியமாறினாருண்டோவென்ன ( ஜலாதித்யாதி ) ஸ்வப்ரயோஜநார்த்தமாக பரதுஃகம்பாராதே யவன் பொகட்டவிடமுண்டோவென்ன ( ஸ்ரீபரதாழ்வானை யித்யாதி )

"என்பெறுதி" என்றத்தைக் கடாக்ஷித்து, "அந்தோ" என்றதுக்கு பாவம் (ஸ்வப்ரயோஜநமித்யாதி) "ஆதியாகி" இத்யாதி மேலைக்கடாக்ஷித்து, "அந்தோ" என்றதுக்கு பாவாந்தரம் (ரக்ஷணமேயித்யாதி)

அறையர் நிர்வாஹத்திலே பாவம் (உனக்கொருவித்யாதி வாக்யத்வயம்) போருமோ – சேருமோ. "சோதிநீண்முடியா யிருந்துவைத்து – ஆதியாகி" இத்யாதிக்கு சப்தார்த்தம் (திருவபிஷேகமித்யாதி) "தொண்டனேன்" – விஷயசபலனென்றபடி. இந்த்ரிய வஶ்யதையைப் போக்கினுறுகில் "மோதுவித்திட்டு" என்பானென்னென்ன (தன்படிகளையித்யாதி)

மதுசூதனனே – தடுத்தென்பெறுதி யந்தோவென்றந்வயம்.............*

---

## நான்காம்பாட்டு.

சூதுநானறியாவகைசுழற்றியோரைவரைக்காட்டியுன்னடிப்
போதுநானணுகாவகைசெய்துபோதிகண்டாய்
யாதும்யாவருமின்றிநின்னகம்பாலொடுக்கியோராலினீளிலை
மீதுசேர்குழவிவினையேன்வினைதீர்மருந்தே.

### ஆருயிரப்படி.

(சூது) இந்த்ரியக்ருதமான வென்னுடைய பாதையைப் போக்க வல்லையுமா யென்னுடைய பாதையைப்போக்குகைக்காக க்லப்தஸ்வரூபனுமா யிருந்துவைத்து, "உன்திருவடிகளைப் பெறுகைக்குபாயமுன்திருவடிகளே" என்றிருக்கிற விந்த வென்னுடைய வறிவுங்கூடவழியும்படி யிந்த்ரியங்களைக்காட்டி யென்னைக் கலக்கி யுன்திருவடிகளைச் சேராதபடி பண்ணிப்போகவாகாதே புகுகிறதென்கிறார். ............................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், அகடிதகடநாசமர்த்தனு யிருக்கிற நீ யிந்த்ரியங்களாலே யென்னெஞ்சைக் கலக்கி, போக்யமான வுன்திருவடிகளைக் கிட்டாதபடி பண்ணுகின்று யென்கிறார்.

யாதும் – சகலாசேதநங்களையும். யாவரும் – சகலசேதநரையும். அபேக்ஷாநிரபேக்ஷமாக, இன்றி – ஒன்றொழியாமல். நின் – உன். அகம்பால் – திருவயிற்றில். ஒடுக்கி – ஏகதேசத்திலே யொதுங்கும்படிபண்ணி. ஓர் – இன்னவிடத்திலே முளைத்தெழுந்ததென்று தெரியாததோர். ஆலின் – ஆலினுடைய. நீள் – முகிழ்விரிந்து நீளும்படியான. இலை – இலையின். மீது – மேலே. சேர் – "ப்ரளயாபத்தில் விழுவதோம்" என்றறியாமல் கண்வளர்ந்தருளுகிற. குழவி – சைசவத்தை யுடையனாய். வினையேன் – பாபமே நிரூபகமான வென்னுடைய. வினை – பாபம். தீர்-போக்கும். மருந்தே – மருந்தாகவல்லவனே. ஓர் – அத்விதீயபலரான. ஐவரை – ஐந்திந்த்ரியங்களை. காட்டி – காட்டி. நான் – பரமபுருஷார்த்த யோக்யமான ஸ்வரூபத்தையுடைய நான். சூது – உறுவது. அறியாவகை – அறியாதபடி. சுழற்றி – விஷயங்களிலே ப்ரமிக்கும்படி பண்ணி. உன் – ஆபத்ஸகனான வுன்னுடைய. அடிப்போது-

அதிசயிதபோக்யமான திருவடித்தாமரையை. நான் - அநந்யசரணனான நான். அனுகாவகை - அணுகாதபடி. செய்து - பண்ணி. போதிகண்டாய் - கண்காணுதபடி கடக்க நில்லாநின்றாய்காண். ..........................................................*

## ஈடு - நான்காம்பாட்டு.

நீயே யிவ்வாத்மாவுக்கு நிரதிசய புருஷார்த்த மென்னுமிடத்தை நானறியாதபடி சப்தாதிவிஷயங்களைக் காட்டி யென்னை ப்ரமிப்பித்துப் போகாநின்றாயென்கிறார்.

( சூதித்யாதி ) ( சூது - உறுவது. ) "இவ்வாத்மாவுக்கு விஷய ப்ராவண்யம் நாசஹேது, பகவதநுபவமுஜ்ஜீவநம்" என்று, நானறியா வகை - இது நானறியாதபடி. ( ஐவரைக்காட்டி - சுழற்றி ) நானுறு வதறியாதபடி சப்தாதிவிஷயங்களைக் காட்டி, ப்ரமிப்பித்து - உன்மத்தங் காய் தின்னப்பண்ணி. ( உன்னடிப்போதுநானணுகாவகைசெய்து ) உன் றிருவடிகளாகிற செவ்விப்பூக்களை நான் கிட்டாதபடிபண்ணி. மயிர்கழு வியிருக்கிறவனைச் செவ்விப்பூச்சூடாமல் தடுப்பாரைப்போலே. ( போதி கண்டாய் ) கூடநிற்கி லிதெல்லாம் படவல்லேனென்கிறார். "கூடநிற்கில் க ண்ணோட்டம்பிறக்கும்" என்று கடக்கப் போவாரைப்போலே. நீர்சொ ல்லுகிறவை யெல்லாம் நமக்குச் செய்ய வரிதுகாணு மென்ன ; ஓம், நீ யரியவை செய்யமாட்டாயிறே யென்கிறார். (யாதும்யாவருமென்றுதொ டங்கி) சேதநாசேதநங்களொன்றும் பிறிகதிர்ப்படாதபடி யுன் வயிற்றி லே வைத்து, ஒருபவனாய் முகிழ்விரியாததோ ராலந்தளிரின்மேலே, உ னக்கு ரக்ஷகர் வேண்டுவதோ ரவஸ்த்தையை ப்ராபித்துக் கண்வளர்ந்த ருளுவானொருத்தனல்லையோ. அரியவை செய்யவல்லை என்னுமிடத்துக் கொரு பழங்கதை சொல்லவேணுமோ ( வினையேன்வினைதீர்மருந்தே ) பாபமே நிரூபகமான வென்னுடைய பாபம்போக்கும் மருந்தாகவல்லவ னே. என்னுடைய சப்தாதிவிஷய ப்ராவண்யத்தைப் போக்கி யென்னை யிப்படி துடிப்பித்தவனல்லையோ..........................................*

## ஜீயர் அரும்பதம்.

நான்காம்பாட்டு. ( சூதுநானித்யாதி ) "சூதுநானறியாவகை" என்று தொடங்கி, "ஐவரைக்காட்டி - சுழற்றி - போதி கண்டாய்" என்றத்தைப்பற்றவ வதாரிகை (நீயேயித்யாதி)

"சூது" என்று - உறுவதாய், ப்ராப்தமாவ தென்றபடி. இவ்விடத்தில், "ஐவர்" என்கிறது - சப்தாதி விஷயங்களை. உன்மத்தங்காய் தின்னப்பண்ணுகை யாவது - அவற்றிலே போக்யதாபுத்தியைப் பிறப்பித்து நெஞ்சு கலங்கும்படி பண் ணுகை. "ஓர்" என்று - இவற்றுக் கத்விதீயத்வம். ஆவது - தனித் தனியே பாதக மாகை.

திருவடிகளைப் பூவாக ரூபிக்கிறதுக்கு பாவம் ( மயிரித்யாதி ) தாம் "திரு வடிகளை ப்ராபிக்கப் பெறுவதெப்போதோ" என்று ப்ரபத்தி பண்ணியிருக்கிற வா காரத்தை நினைத்து (மயிர்கழுவியிருக்கிறவனை) என்கிறது. இப்படி யிருக்கிற தம்

மைத் தன்றிருவடிகளி லநுபவகைங்கர்யங்களைக் கொடாமையைப்பற்ற (செவ்விப் பூச்சூடாமல் தடுப்பாரைப்போலே) என்றது. "போதிகண்டாய்" என்றதுக்குதாத்பர்யசித்தார்த்தம் (கூடநிற்கிலிதெல்லாமித்யாதி) அவன்றான் கூட நில்லாமற் போவானென்னென்ன (கூடநிற்கில் கண்ணோட்ட மித்யாதி) கண்ணோட்டம் - க்ருபை.

மேலுக்கவதாரிகை (நீரித்யாதி) "குழவி" என்றதுக்கர்த்தம் (உனக்கு ரக்ஷகரித்யாதி) "வினையேன்வினைதீர்மருந்தே" என்றதுக்கவதாரிகை (அரியவையித்யாதி)

தீர்மருந்தே - ஞாநானறியாவகை - ஓளவவாக்காட்டி - சுழற்றி - உன்னடிப்போதென்று தொடங்கி, போதிகண்டாயென்றந்வயம்........................*



# ஐந்தாம்பாட்டு.

தீர்மருந்தின்றியைந்துநோயடுஞ்செக்கிலிட்டுத்திரிக்குமைவரை
நேர்மருங்குடைத்தாவடைத்துநெகிழ்ப்பானொக்கின்று
யார்மருந்தினியாகுவாரடலாழியேந்தியசுரர்வன்குலம்
வேர்மருங்கறுத்தாய்விண்ணுளார்பெருமானேயோ.

## ஆறுயிரப்படி.

(தீர்மருந்தின்றி) ஆஸ்ரிதவிரோதி நிரஸநைக ஸ்வபாவனாய் தததநுகுண சக்ரர்தி திவ்யோபகரண புஷ்கலனுமாய் சமர்த்தனுமாயிருந்துவைத்து, அசிகித்ஸ்ய விஷயாக்ய மஹாவ்யாதிபஞ்சகங்களாலே யதிமாத்ரபீடிதனாய்க்கொண்டு ப்ரக்ருதியிலே யிவ்வாத்மாவை பரிப்ரமிப்பிக்கிற விந்த்ரியங்களாலே சுற்றும் நிரோதிப்பித் தென்னைக்கைவிடுவாரைப்போலேயிராநின்றாய்; நீயென்னைக்கைவிட்டால் வேறெனக்கு ரக்ஷகருளரோ, ஆதலால் அசுபேந்த்ரியங்களுக் கபூமியாயிருந்த திருநாட்டிலே * அயர்வறுமமரர்கள் சூழவெழுந்தருளியிருந்த வுன்றிருவடிகளிலே யடியேனை வாங்கியருளாயென்கிறார் ...........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ப்ரதிகூல நிரஸநஸ்வபாவனானநீ, விஷயேந்த்ரியாதிகளோடே ஸம்பந்திப்பித்து வைத்து அகற்றுவான்போலே யிராநின்றாய்; வேறினிரக்ஷகராரென்கிறார்.

அடல் - ஆஸ்ரிதவிரோதிகளை யழியச்செய்கைக்கடியான யுத்தோத்யோகத்தையுடைய. ஆழி-திருவாழியை. ஏந்தி-ஏந்தி. அசுரர் - ப்ரதிகூலரான வசுரர்களுடைய. வன்-ப்ரபலமான. குலம்-சங்கங்களை. மருங்குவேர்-பக்கவேரோடே. அறுத்தாய்-அறுத்தவனாய். விண்ணுளார்-பரமபதவாசிகளுக்கு. பெருமானே - நிரவதிக போக்யபூதனான நிர்வாஹகனானவனே. வேறு, தீர்-சாந்திஹேதுவான. மருந்து - ப்ரத்யௌஷதம். இன்றி-இல்லாதபடி. ஐந்து-ஐந்துவகைப்பட்ட சப்தாதிகளாகிற.

நோய்-நோயாலே. அடும்-முடிக்கக்கடவதான. செக்கில்-ப்ராந்திஹேதுவாயுள்ள சரீரமாகிற செக்கிலே. இட்டு-இட்டு. திரிக்கும்-ப்ரமிப்பியாநிற்கிற. ஐவரை-ஐந்திந்த்ரியங்களையும். நேர்-என்முகப்பும். மருங்கு-பக்கமும். உடைத்தா-உடைத்தாம்படி. அடைத்து-நிறுத்தி. நெகிழ்ப்பானொக்கின்றாய்-நெகிழவிடுவான்போலே யிராநின்றாய். இனி-விரோதிக்கு நிவர்த்தகனான நீயேப்ரவர்த்தகனானபின்பு. இந்நோய்க்கு, மருந்து-மருந்து. ஆகுவார்-ஆவார். ஆர்-ஆர்.

நோயானவிஷயங்கள் மருந்தாகவோ, நோவுபடுகிறநான் மருந்தாகவோ, நோவிக்கிற விந்த்ரியங்கள் மருந்தாகவோவென்றுகருத்து. ஓவென்று - சூரிகளோடு ஸமாநபோகனாய்வைத்து, வ்யாதிக்ரஸ்தனாய் மிடறடைய வுண்பதேயென்று விஷண்ணராகிறார் ...........................................................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

விஷயங்களாலு மிந்த்ரியங்களாலு மப்ரதிக்ரியமாம்படி நலிந்தென்னை நீகைவிட்டால் வேறுரக்ஷகருண்டோவென்கிறார்.

(திர்மருந்தின்றி) வேறொரு ப்ரதிக்ரியையுண்டாகிலு மாற்றலாமிறே. சர்வசக்தியாலும் போக்கப்போகாதாகாதே. ( ஐந்துநோயடும்செக்கிலிட்டு ) சப்தாதிவிஷயங்களாகிற நோயாலே யிவ்வாத்மாவை முடிக்கும் சரீரமாகிறசெக்கிலேயிட்டு. (திரிக்குமைவரை) பாதிக்கிற ச்ரோத்ராதிகளை. ( சரீரத்திலே ப்ரவேசிப்பித்து சப்தாதிவிஷயங்களைக்காட்டி நெருக்குகிற ஸ்ரோத்ராதிகளை. ) (நேர்மருங்குடைத்தாவடைத்து) எதிரும் பக்கங்களுமாகவடைத்து. அபிமந்யுவென்றொருபாலனை நலிகைக்கதிரத மஹாரதர்களடங்கலும் சூழப்போந்தாப்போலே யிந்த்ரியங்களைக்கையடைப்பாக்கி. ( நெகிழ்ப்பானொக்கின்றாய் ) இதுவோதா னெனக்கு நிலைநிற்கப்புகுகிறது. "இங்ஙனேதான் செல்லுகிறதோ" என்றிருக்கவொண்ணாதபடி யுன்பக்கல் பண்ணின விச்வாஸத்தையும் குலையாநின்றாய்.

ஆனால் - நம்படியிதுவாகில், உமக்கொரு பரிஹாரந் தேடிக்கொண்டாலோவென்றான் (ஆர்மருந்தினியாகுவார்) என்னிடையாட்டம் பிறர்க்குக்கொடு காரியமில்லை, நான்நோவுபடாநின்றேன், நீகைவாங்கினாய், ஆனபின்பு எனக்கொரு ரக்ஷகருண்டோ. நானும் பிறருமில்லாத வன்று நீயுண்டு, நீவிட்டவன்றுருண்டு. " ஆனால் நீரோ " என்றான்; நானும் கையுந்திருவாழியுமாயிருந்தேனாகில் நானென்னை நோக்கிக்கொள்ளேனே. மருந்தாம்போது மொருசேதநன் வேணுமாகாதே. * மருந்தும்பொருளுமமுதமுந்தானேயிறே யிவர்க்கு. (அடலாழியேந்தி யசுரர்வன்குலம் வேர்மருங்கறுத்தாய்) யுத்தோந்முகமான திருவாழியையேந்தி அசுரருடைய வலிதானகுலத்தைப் பக்கவேரோடேவாங்கினவனே. அவ்வாஸநையோவும்மைநலிகிறது (விண்ணுளார்பெருமானேயோ) ஒருத்தன் சிறையிருக்க, பிதாவும் மாதாவும் ப்ராதாக்களுமாய்க் கல்யாணஞ்செய்யக்கண்டு

தான் கூட்டப்பெருதே நோவுபடுமாபோலே; நித்யசூரிகளும் பிராட்டியு மவனுமாக பரமபதத்திலேயிருக்கிறபடியை யநுசந்தித்து அங்கேகேட் கும்படி கிடந்துகூப்பிடுகிருர். "ஹாராமஹாலக்ஷ்மணஹாஸௌமித்ரோ" (ஹாராமஹாலக்ஷ்மணஹாஸௌமித்ரோ) என்று பிராட்டி தனியேகிடந்து கூப்பிட்டாப்போலே, பரமபதத்திலிருப்பு மணிகலங்கும்படி கூப்பிடு கிருர்.....................................................................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (தீர்மருந்தின்றியித்யாதி) "ஆர்மருந்தினியாகுவார்" என் னுமளவுங்கடாக்ஷித்தவதாரிகை (விஷயங்களாலுமித்யாதி)

"தீர்மருந்து" - தீர்க்கும் மருந்து. இத்தால்- (ப்ரதிக்ரியை) என்றபடி. "தீ ர்மருந்தின்றிக்கேபாதிக்கிறது" என்கிறவருடைய ஹார்த்தபாவம் ( வேருருவித் யாதி) இன்னுராலேயென்று விசேஷியாமையாலேபாவம் ( சர்வசக்தியித்யாதி ) "ஆடும்" முடிக்கிற. முடிக்குமென்றது-முடிக்கைக்காகவென்றபடி. இட்டு-ப்ரவே சிப்பித்தென்றபடி. ஐந்து நோவைக்கொண்டிவ்வாத்மாவை முடிக்கைக்காகச் செக் கிலே இட்டுத்திரிக்குமைவரையும் நேர்மருங்குடைத்தாவடைத்து நெகிழ்ப்பானெ க்கின்ருயென்று வாக்யயோஜனை. நேர்மருங்குடைத்தாம்படி யடைத்தென்று சப் தார்த்தம். எதிரும்பக்கங்களுமாக வடைக்கையாவது - முன்னும் பார்ஸ்வங்களுமா க நிறுத்துகை. த்ருஷ்டாந்தபூர்வகோக்தார்த்தோபபாதநம் (அபிமந்யுவித்யாதி) இ ந்த்ரியங்களைக் கையடைப்பாக்கி - இந்த்ரியங்களுக்குக் கையடைப்பாக்கி யென்றப டி. கையடைப்பாக்கி-வசமாக்கி.

"நெகிழ்ப்பானொக்கின்ருய்" என்கிறதென், "இந்த்ரியங்கள்பாதகங்கள்" என்னும்புத்தியைத்தந்தோமேயென்ன (இதுவோதானித்யாதி) இதுவோதானென் றது - இந்த்ரியங்கள் பாதகங்களென்கிற புத்தியோதானென்றபடி. நிலைநில்லாமை க்கடியேதென்ன (இங்ஙனேதானித்யாதி) அதாவது - இந்தபாதகத்வபுத்தியோடே செல்லவுமொண்ணுதபடி தேவர்திருவடிகளில் விஸ்வாசத்தை நெகிழ்க்கைக்காக வி ருந்தாப்போலே யிராநின்ருயென்றபடி. "ஒக்கின்ருய்"-இருந்தாப்போல யிராநின் ருய். இங்ஙனேதான் - இந்தபாதகத்வ புத்தியோடே தானென்றபடி.

ஆனுலென்றது - நாம்கைவிட்டோமென் றுமக்குத்தோற்றுகிறதாகிலென்ற படி. ஏதத்விவரணம் (நம்படியிதுவாகிலேன்றது) "இனி" என்றதுக்கர்த்தம் ( எ ன்னிடையாட்டமித்யாதிவாக்யத்ரயம்) விவரணம் (நானும் பிறருமித்யாதி) "ஆர் மருந்து - ஆகுவார்" என்றதுக்கு - உபாயாந்தரங்கள் ரக்ஷகமாகமாட்டாதென்ற ர்த்தாந்தரம் விவக்ஷித்து, "அடலாழியேந்தி" என்றதுக்கவதாரிகை ( ஆனுல்நீ ரோவென்ருனென்று) இப்பக்ஷத்தில், எதுமருந்தினியாகுமென்னுதே, "ஆர்மருந் தினி" என்றதுக்குபாவம் (மருந்தாம்போதுமித்யாதி) அப்படிசேதநரோ மருந்தோ வென்ன(மருந்துமித்யாதி)அநிஷ்டமான சம்சாரவ்யாதியைப்போக்கும் பேஷஜமு ம், இஷ்டமானமோக்ஷத்தைத் தரும்பொருளும், ஸ்வதஃஇஷ்டமாய்போக்யமான வம்ருதமும் திருவடிகள்தானேயித்யர்த்தஃ. மூன்ருந்திருவந்தாதிநாலாம்பாட்டு.

"வேர்மருங்கு" என்றது - மருங்குவேறென்றபடி. அவ்வாசனையோவென் றது-அந்தவிரோதிநிரசநமாத்ரமேயோ நலிகிறதென்ன; அன்று, ப்ராப்தியுமென்கி ருனென்றபடி. (உம்மைநலிகிறது) என்றவநந்தரம், பின்னையும் நலிகிறதுண்டோவெ ன்ன வென்றத்யாஹரிப்பது. "விண்ணுளார்பெருமானே" என்று-சம்போதித்து,

"ஓ." என்றதுக்குபாவம் (ஒருத்தனித்யாதி) த்ருஷ்டாந்தபூர்வகமாக வுபபாதநம் (ஹாராமேத்யாதி) இது-கூப்பிடுகிறமாத்ரத்துக்கு த்ருஷ்டாந்தம். "[illegible]" (ஹாராமஹாலக்ஷ்மணஹாஸௌமித்ரேஹாராமமாதஸ்ஸஹமேஜநந்யா । ஏஷாவிபத்யாம்யஹ மல்பபாக்யாமஹார்ணவேநௌரிவமூடவாதா) இதி சுந்தரகாண்டே வேண்யுத்க்ரதநோத்யோகசமயே.

அடலாழியென்றுதொடங்கி, விண்ணுளார்பெருமானே- நெகிழ்ப்பானொக்கின்றாய், ஆர்மருந்தினியாகுவார் - ஓவென்றந்வயம்..........................................*

# ஆறும்பாட்டு.

விண்ணுளார்பெருமாற்கடிமைசெய்வாரையுஞ்செறுமைம்புலனிவை
மண்ணுளென்னைப்பெற்றாலென்செய்யாமற்றுநீயும்விட்டால்
பண்ணுளாய்கவிதன்னுளாய்பத்தியினுள்ளாய்பரமீசனேவந்தென்
கண்ணுளாய்நெஞ்சுளாய்சொல்லுளாயொன்றுசொல்லாயே.

## ஆறாயிரப்படி.

(விண்ணுளார்) திருநாட்டிலே * அயர்வறுமமரர்களதிபதியாயிருந்த வுன்றிருவடிகளிலே யடிமைசெய்கிற * அயர்வறுமமரர்களையுங்கூட ஸ்வப்ரவணமாக்கி யுன்றிருவடிகளை யிழப்பிக்கவல்ல விந்த சப்தாதி விஷயங்கள்; தன்னிலமாவது, பின்னை நீயுங்கைவிடுவதானா லென்னை யென்செய்யா. இவைசெய்யும் பாதைசொல்லநிலமல்ல. இந்தபாதையாலே கூப்பிடுகிற வென்னுடைய சொற்களிலும், த்வத் விப்லேஷாஸஹிஷ்ணுத்வரூபமான வென்னுடைய ஸ்நேஹத்திலும், உன்னைக்காணப்பெறுமையாலே யவஸந்நமான வென்னுடைய சக்ஷுராதிகரணங்களிலு மவஸ்த்திதனாய் சர்வஜ்ஞனுமாய் சர்வேப்வரனுமாயிருந்த நீ, என்னுடைய விந்த வ்யஸநமெல்லாந் தீரும்படி யென்னை யுன்றிருவடிகளிலே வாங்குகிறேனென்று சொல்லுதல்; நானுசையறும்படி வாங்கக்கடவதன்றென்று சொல்லுதல்; இரண்டத்தொன்று சொல்லாயென்று கூப்பிடுகிறார்...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், என்பக்கலிலே சர்வப்ரகாரத்தாலும் ஸந்நிஹிதனானநீ முகந்தோன்றநின்று ரக்ஷியாவிட்டால், அளவுடையாரையும் நலியுமிந்த்ரியங்களென்னை யென்செய்யாது; சொல்லாயென்கிறார்.

விண்ணுளார் - பரமபதவாசிகளாய்வைத்தே. பெருமாற்கு - சர்வாதிகனானவுனக்கு. அடிமைசெய்வாரையும்-அடிமைசெய்வாரான வைநதேயாதிகளையும். மண்ணுள்-தன்னிலமான விந்தலோகத்திலே. செறும் - மேலிட்டுநலியக்கடவதான. இ

வை-இந்த. ஐம்புலன்-ஐந்திந்த்ரியங்களானவை. என்னை - இவற்றைவெல்லுகைக்கிடான பலமில்லாதவென்னை. பெற்ருல்-பெற்ருல். மற்றும் - அதுக்குமேலே. நீயும்-நியந்தாவானநீயும். விட்டால்-கைவிட்டால். அவை, என்-என். செய்யா-செய்யாதன. என்-ஈடுபட்டுக்கூப்பிடுகிற வென்னுடைய. பண்-ஆர்த்தஸ்வரத்துக்கு. உளாய்-உட்பாடனுய். கவிதன் - ஸ்வராஸ்ரயமான சப்தசந்தர்ப்பத்துக்கு. உளாய் - ப்ரதிபாத்யனுய். பத்தியின்-அதுக்கடியான ப்ராவண்யத்துக்கு. உள்ளாய்- விஷயபூதனுய். அவ்வளவன்றியே, பரம் - சர்வமுமுனக்கு விதேயமாம்படி சர்வாதிகனுய். ஈசனே-நியந்தாவாய். நியாம்யங்களில் தனித்தனியே, “ சக்ஷுஷி திஷ்டந், மநஸி திஷ்டந்” (சக்ஷுஷிதிஷ்டட்டந், மநஸிதிஷ்டட்டந்) என்கிறபடியே, கண்-கண்ணோடு. உளாய், நெஞ்சு-நெஞ்சோடு. உளாய், சொல் - வாகிந்த்ரியத்தோடுவாசியற. உளாய்-உள்ளே ஸந்நிஹிதனுயிருக்கிறநீ. வந்து-வந்து. என்தளர்த்தீரும்படி, ஒன்று-ஒருவார்த்தை. சொல்லாய்-அருளிச்செய்யவேணும்.

சொல்லாயேயென்று - வந்துசொல்லுகிறிலையென்று பொருளாய், விட்டபடியை யுபபாதித்ததாகவுமாம். என்செய்யாவென்று - அநாயகவிஷயத்தில் குறும்பரைப்போலே யழித்தேவிடுமென்று கருத்து........................................*

## ஈடு - ஆரும்பாட்டு.

அளவுடையாரையும் நலியக்கடவவிந்த்ரியங்கள், நீயும் கைவிட்டால், துர்ப்பலனுன வென்னை யென்படுத்தாவென்கிருர்.

(விண்ணுளார்பெருமாற்கித்யாதி) * அயர்வறுமமரர்களதிபதிக்கடிமைசெய்வாரையும் செறும். பெருமாற்கடிமைசெய்வாரையும். ஒக்கப்பிறந் தினயபெருமாளைப்போலே யடிமைசெய்து திரிவாருண்டிறே. விண்ணுளாராய்ப் பெருமாற்கடிமைசெய்வாரையும் செறும். திருவடியையுமகப்பட “ எனக்கு ” என்னப்பண்ணிற்றிறே. சுமுகனென்கிற சர்ப்பவிசேஷம் திருவடிகளிலேசென்றுகிட்ட, பெரியதிருவடியோடிச்சென்று, “ எனக்காமிஷமாயிருக்கிற வித்தைக்கைக்கொண்டு நோக்குவதே!” என்று வெறுத்து, “தேவரீரையும் நாச்சிமாரையும் நெடுங்காலம்வஹித்துக்கொண்டு திரிந்தேன், நானென்பெற்றேன்” என்ருனிறே. இதிறே சம்சாரஸ்வபாவ மிருக்கும்படி. அவன்ருனவதரித்து சோகிப்பது மோஹிப்பதானுப்போலே யாயிற்றிவர்களும். அன்றிக்கே * அயர்வறுமமரர்களதிபதியாயிருக்கிற சர்வேஶ்வரனுக்கு, சம்சாரத்திலே முமுக்ஷுக்களாய் கைங்கர்யத்திலே யவகாஹித் திருக்கக்கடவரானவர்களையும் நெருக்கக்கடவ விந்த்ரியங்களிவை. ஒரு விஶ்வாமித்ர சுக்ரீவாதிகளைக்கண்டோமிறே. ஜ்ஞாநாதிகனுன விஸ்வாமித்ர னகப்பட வொருவிஷயத்தின் காற்கடையிலே நெடுங்காலங்கிடந்தானிறே; பெருமாளுக்குப்பரிவரான மஹாராஜர், பெருமாளை மின்னுக்கு மிடிக்குமிாயாக விட்டுவைத்து நாலுமாச மிந்த்ரியபரவசராய் அவ்வழியென்று நினைத்திலரிறே. (மண்ணுளித்யாதி) இவர்தாம் விண்ணுளாரிலொருவராகாதேதான். இவற்றுக்குத்தன்னிலமாவது, நானிவை யிருந்தவிடந்தேடிச்சென்று கழுத்திலே

கயிறிட்டுக்கொடு நிற்கவல்லேனொருவனாவது; இங்ஙனே யிருக்கிற வென்னைப்பெற்றா லிவையென்பண்ணா. (மற்றுநீயும்விட்டால்) எல்லாரும்விட்டு, விழுந்துதரிக்கும் பூமியான நீயும்விட்டால். ரக்ஷகனான நீ விட்டிலையாகில், மஹாராஜர் வாலியைவென்றாப்போலே நானு மிந்த்ரியங்களை வெல்லேனோ. [𑌤𑌸𑍍𑌯𑌾𑌹𑌂𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌂𑌮𑌨𑍍𑌯𑍇𑌵𑌾𑌯𑍋𑌰𑌿𑌵𑌸𑍁𑌦𑍁𑌷𑍍𑌕𑌰𑌮𑍍] [தஸ்யாஹம்நிக்ரஹம்மந்யேவாயோரிவஸுதுஷ்கரம்] என்றானிறே. காற்றையோரிடத்திலே கட்டிவைக்கிலிறே மநஸ்ஸை நியமிக்கலாவது. "'இந்த்ரீயஜயமரிது' என்று சொல்லுகிறாயாகில் நம்பக்கலிலே மநஸ்ஸை வை" என்றருளிச்செய்த நீயும்விட்டால்.

"நான்விட்டிலேனீ, உம்மைவிடுகையாவதென்" என்றான்; ஆகில், நீ அஸந்நிஹிதனாயோ அசக்தனாயோ நானிழக்கிறது (பண்ணுளாய்) எ ன்னார்த்தஸ்வரம் கேளாதிருக்கிறாயல்லையே. (கவிதன்னுளாய்) என்னுடையவார்த்தி கர்ப்பமான வுக்திகேளாதிருக்கிறாயல்லையே. (பத்தியினுள்ளாய்) இப்படிசொல்லுவிக்கிற வாற்றாமை யறியாதிருக்கிறாயல்லையே. (பரமீசனே) உனக்கு முடியாததொன்றுண்டாயிருக்கிறாயல்லையே. உன் சேஷித்வமேறிப் பாயாதவிடமுண்டோ. (இந்த்ரியங்களுக்குமீசனே) இதுகிடக்கிடு, நீதான்முன்பே செய்யாததொன் றுண்டோவென்கிறார்; "ஆனாலினிச்செய்யவேண்டுவதில்லையே" என்றான்; நானும் நீசெய்த வம்ஸத்தில் குறையுண்டென்கிறேனல்லேன், நீ செய்யாத அம்ஸத்தையிறே சொல்லுகிறதென்கிறார் (என்கண்ணுளாய் நெஞ்சுளாய் சொல்லுளாய்) பாஹ்யகரணங்களுக்கு மாந்தரகரணத்துக்கு முன்னையொழியவிஷயமுண்டோ. *நெடியானேயென்றுகிடப்பது, *உன்னைமெய்கொள்ளக்காண விரும்புவது, *வஞ்சனே என்பதாயிறே யவையிருப்பது. கவிதன்னுளாயென்று-பாசுரஞ்சொல்லிற்று, சொல்லுளாயென்று - வாகிந்த்ரியத்தைச்சொல்லுகிறது. ஆனால் நம்மைச் செய்யச்சொல்லுகிற தென்னென்ன (வந்து-ஒன்றுசொல்லாயே) எனக்காக நாலடிநடந்துவந்து, நீயஞ்சாதே கொள்ளென்று-என்னை, [𑌮𑌾𑌶𑍁𑌚𑌃] [மாஶுச:] என்னவேணும். உன்சத்பாவத்தி லெனக்கதிசங்கையுண்டோ, என்கண்காணவந் தொன்றுசொல்லுகையன்றோ வெனக்குத்தேட்டமென்கிறார் ...........................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறாம்பாட்டு (விண்ணுளாரித்யாதி) "மற்றுநீயும்விட்டால்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (அளவுடையாளாயுமித்யாதி)

"அடிமைசெய்வார்" என்று - முமுக்ஷுக்களாக வர்த்தம் (அயர்வறுமித்யாதி) நித்யசூரிகளாகவர்த்தாந்தரம் (பெருமாற்கித்யாதி) இவ்விடத்திலே நித்யசூரிகளடிமைசெய்வர்களோவென்ன (ஒக்க வித்யாதி) த்விதீயார்த்தத்துக்கு சப்தநிர்வாஹம் (விண்ணுளாராயித்யாதி) அவதாரநசையி லிந்த்ரியங்கள் பாதித்தவிடமுண்டோவென்ன (திருவடியையுமித்யாதி) விவரணம் (சுமுகனித்யாதி) "அஸ்ப்

ருஷ்டசம்சாரகந்தா யிந்த்ரியங்கள் பாதிக்கும்" என்னலாமோவென்ன (இதிரே யித்யாதி) அகர்மவஶ்யர்க்கு மிது கூடுமோவென்ன (அவன்ருனித்யாதி) அதாவது - பாவனையென்றபடி. முந்தினவர்த்தவிவரணம் (அன்றிக்கே அயர்வறு மித்யாதி) முமுக்ஷுக்க ளிந்த்ரியவஶ்யரான விடமுண்டோவென்ன (ஒருவிஶ்வாமித்ரோத்யாதி) இத்தை விவரிக்கிறுர் (ஜ்ஞாநாதிகேத்யாதிவாக்யத்வயத்தாலே) (ஜ்ஞாநாதிகனுன) என்றவிடத்திலே - "஬லவாநிந்த்ரியக்ராமோ வித்வாம்ஸமபிகர்ஷதி" (பலவாநிந்த்ரியக்ராமோ வித்வாம்ஸமபிகர்ஷதி) இத்யாத் யநுசந்தேயம். (நெடுங்காலம்) என்றவிடத்திலே - "அஹோராத்ராபதேஶேந கதாஸ்ஸம்வத்ஸராதஶ" (அஹோராத்ராபதேஶேந கதாஸ்ஸம்வத்ஸராதஶ) என்ற தநுசந்தேயம்.

"மண்ணுள்" என்றதுக்கு பாவம் (இவர்தாமித்யாதி) "மண்ணுள்" என்கையாலே - முன்பு விண்ணுளாரொன்று தோற்றுகிறது. "மண்ணுளென்னை" என்று விசேஷித்ததுக்கு பாவமாதல், சப்தார்த்தமாதல் (இவற்றுக் கித்யாதிவாக்யத்வயம்)

"மற்றும்" - அதுக்குமேலே யென்றபடி. எல்லாரும் விட்டென்றது- "ஸபித்ராச" (ஸபித்ராச) இத்யாதிப்படியே யெல்லாரும் விட்டாலு மென்றபடி. விழுந்து தரிக்கும் பூமியானவென்றது - விட்டதடியாக மேல்விழுந்து தரிக்கும் பூமியானவென்றபடி நான் விடாவிடில் நீர் செய்கிறதென்னென்ன (ரக்ஷகனுனவித்யாதி) அவன் கைவிட்டா லிந்த்ரியங்களை வெல்ல வரிதோவென்ன (தஸ்யாஹமித்யாதி) கீதாஸூஷஷ்டே. "சஞ்சலம்ஹிமநஃக்ருஷ்ண ப்ரமாதிபலவத்த்ருடம்" (சஞ்சலம்ஹிமநஃக்ருஷ்ண ப்ரமாதிபலவத்த்ருடம்) இதி பூர்வார்த்தம். இதுக்கர்த்தம் (காற்றையித்யாதி) "நீயும்" என்றதுக்கு - (எல்லாரும்விட்டு) இத்யாதி வாக்யத்திலே யொருதாத்பர்ய மருளிச்செய்து, பாவாந்தரம் (இந்த்ரியஜயமித்யாதி) "மச்சித்தஸ்ஸததம்பவ" (மச்சித்தஸ்ஸததம்பவ) என்றத்தைப்பற்ற (நம்பக்கலிலே மநஸ்ஸை வையென்றது)

மேலுக்கவதாரிகை (நான்விட்டிலேனீயித்யாதி) "பண்ணுளாய்" இத்யாதி பதத்ரயத்தையுங் கடாக்ஷித்து (அஸந்நிஹிதனுயோவென்றது) "பரமீசனே" என்றத்தைப் பற்ற (அசக்தனுயோ வென்றது) சந்நிஹிதத்வ சக்திமத்த்வங்களை பதங்களிலே யேறிட்டுக்காட்டுகிறுர் (பண்ணுளாயித்யாதி) "பண்ணுளாய்" இத்யாதி பதத்ரயத்துக்கும் பேதமருளிச்செய்கிறுர் (என்னுர்த்தஸ்வரமித்யாதி வாக்யத்ரயத்தாலே) (கேளாதிருக்கிறுயல்லையே, அறியாதிருக்கிறு யல்லையே) என்கையாலே - சந்நிஹிதத்வத்தை யிப்பதத்திலே தர்ஶிப்பித்தாராயிற்று. "பரமீசன்" என்றபதத்தாலே - சக்திமத்தையையும் தர்ஶிப்பிக்கிறுர் (உனக்குமுடியாததித்யாதி) "பரம்" என்றதுக்கு பாவம் (உன்சேஷித்வமித்யாதி)

"கண்ணுளாய்" இத்யாதிக்கவதாரிகை (இதுகிடக்கிடுவித்யாதி) முன்பேயென்றது - * முடியானேயிலென்றபடி. "கண்ணுளாய்" இத்யாதியைக்கடாக்ஷித்துபாவம் (நானுமித்யாதி) அன்றிக்கே, (இதுகிடக்கிடுநீதான்முன்பே) இத்யாதிவாக்யம் - "கண்ணுளாய்நெஞ்சுளாய்சொல்லுளாய்" என்றத்தைக் கடாக்ஷித்துபாவமாய், (நானும்நீசெய்த) இத்யாதிவாக்யம் - "ஒன்றுசொல்லாய்" என்றதுக்குபாவமாதல். "கண்ணுளாய்" இத்யாதி - (செய்தவம்ஶம்) "வந்து-ஒன்றுசொல்லாய்" என்றது - (செய்யாதவம்ஶம்) "கண்" என்றது - செவிமுதலானவற்றுக்கு முபல

க்ஷணமென்றுவிவக்ஷித்து (பாஹ்யகரணங்களுக்கும்) என்கிறுர். சர்வகரணங்களுக்கும் விஷயமவனுயிருக்குமோவென்ன (நெடியானேயித்யாதி) "ஆனுலினி" என்கிறவாக்யம் - " ஒன்றுசொல்லாய் " என்கிறபதத்துக்கவதாரிகையென்று தோற்றுகைக்காக, பதம்வந்தவிடத்திலே யருளிச்செய்கிறுர் (ஆனுல்நம்மையித்யாதி) கீழே " பண்ணுளாய் " இத்யாதித்ரயத்துக்கும்-ஸந்நிஹிதத்வத்தைப் பற்ற விவக்ஷித்தருளிச்செய்து, நீயுமுளையாயிருக்க நானிழப்பதேயென்று சத்பாவவிவக்ஷயா பாவாந்தரம் (உன்சத்பாவத்திலித்யாதி)

விண்ணுளாரித்யாரப்ய, என்னைப்பெற்றுல் - மற்று நீயும்விட்டால் - என்செய்யா; பண்ணுளாயென்றுதொடங்கி, வந்து-ஒன்றுசொல்லாயே யித்யந்வய:......*

# ஏழாம்பாட்டு.

ஒன்றுசொல்லியொருத்தினினிற்கிலாதவோரைவர்வன்கயவரை
யென்றியான்வெல்கிற்பனுன்றிருவருளில்லையே
லன்றுதேவரசுரர்வாங்கவலைகடலரவமளாவியோர்
குன்றம்வைத்தவெந்தாய்கொடியேன்பருகின்னமுதே.

## ஆருயிரப்படி.

( ஒன்றுசொல்லி ) இப்படி யிந்தவிஷயங்க ளுமக்கு பாதகமாகில், இவற்றில் ப்ரவணமாகாதபடி யும்முடைய விந்த்ரியங்களை ஜயிக்கமாட்டீரோவென்னில் ;

அம்ருதமதநே ப்ரக்ராந்தரான தேவர்களுங்கூட வுன்னையொழிய தந்நிவர்த்தந க்ஷமராயிற்றிலர் ; அவ்யவஸ்த்தித ஸ்வபாவமுமா யதிபலமுமாய் பரஹிம்ஸைகருசிகளுமாயிருக்கிற விந்த்ரியங்களை, உன்னுடைய க்ருபையையொழிய நானெங்ஙனே ஜயிக்கும்படி ; ஆதலால், உன்னுடைய க்ருபையாலே நீ யென்னுடைய ப்ரதிபந்தகமான பாபத்தைப்போக்கி, நிரவதிகபோக்யபூதனுனவுன்னையெனக்கு புஜிக்கத்தந்தருளினுப்போலே, இன்னமுமுன்க்ருபையாலே நீயேயிந்தக்கரணசம்பந்தத்தைப்போக்கி யுன்றிருவடிகளிலே வாங்கி யருளவேணுமென்கிறுர்.........................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்ரிதர்க்கருந்தொழில்செய்து மபேக்ஷிதந் தலைக்கட்டும்படியான வுன்னுடைய க்ருபையில்லையாகில், ப்ரபலமான விந்த்ரியங்களை யென்று வெல்லக்கடவேனென்கிறுர்.

அன்று - நித்யத்வஸ்ரத்தையாலே யுன்னை சரணம்புகுந்தவன்று. தேவர் - தேவர்களும். அசுரர் - அவர்களோடே அம்ருதார்த்தமாகஸங்கதரானவசுரர்களும். வாங்க - வலிக்கும்படியாக. அலை - அலையெறிகிற. கடல் - கடலிலே. அரவம்-வாசுகியென்கிற பாம்பை. அளாவி - சுற்றி. ஓர் - அத்விதீயமான. குன்றம் - மந்தரப

ர்வதத்தை. வைத்த - அலையாமல் நாட்டின வுபகாரகத்வத்தைக் காட்டி. எந்தாய்-எனக்கு ஸ்வாமியானவனாய். கொடியேன் - அவர்களைப்போலே அந்தவம்ருதத்தில் பர்யவஸியாதே, "உன்னையே புஜிக்கவேணும்" என்னும் கொடுமையையுடைய நான். பருகு - பருகுகைக்கு. இன்னமுதே-நித்யபோக்யமா யிருக்கிறவனே. உன்-உன்னுடைய. திருவருள் - நிரவதிகதயை. இல்லையேல் - இல்லையாகில். ஒன்று-ஒரு விஷயத்தைத் தேடித் தாவென்று. சொல்லி - சொல்லி. அதுபெற் றநுபவிக்குந்தனையும், ஒருத்தினில் - ஒருபடிப்பட. நிற்கிலாத - நில்லாதே. ஓர் - ஒன்றுக்கொன்று சேராச்சேர்த்தியாய்த் தனித்தனியே ஸ்வதந்த்ரமான. ஐவர் - ஐந்திந்த்ரியங்களாகிற. வன் - ப்ரபலராய். கயவரை - பழகியும் முகமறியாத கயவரை. யான்-ஸ்வயமஶக்தனான நான். முன்புமாட்டாதவோபாதி, மேலும், என்று - என்று. வெல்கிற்பன் - வெல்லவல்லேனாவேன். ........................................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

நீயுபேக்ஷித்தால், அதிகலமான விந்த்ரியங்களை யென்னாலே வெல்ல வுபாயமுண்டோ வென்கிறார்.

(ஒன்றுசொல்லி) "ராமோ த்விர் நாபிபாஷதே" (ராமோத்விர் நாபிபாஷதே) என்பாரைப்பற்றி பயங்கெட்டிருக்கிறேனே. அங்ஙனேயாகில் "ஏதத் வ்ரதம் மம" (ஏதத்வ்ரதம்மம) என்றதுவும் தப்பாதிறே. (ஒன்றுசொல்லியொருத்தினில்நிற்கிலாத) ஒருவார்த்தையைச் சொல்லி அதுக்கீடான வோரர்த்தத்திலே நிற்கக்கடவதல்லாத. ஒருவிஷயத்தைச் சொல்லி, அதநுபவிக்குந்தனையு மோரிடத்திலேநில்லாத. (ஒருத்து-ஒருமைப்பாடு.) (ஓரைவர்) இப்படியிருப்பா ரநேகர். (வன்கயவரை) பழகப்பழக நிர்க்ருணரானவர்களை. (என்றியான்வெல்கிற்பன்) "இன்றல்லவாகில் நாளைவெல்லுகிறேன், தானே வென்று வருகிறேன்" என்றிருக்கிறாயோ. (உன்றிருவருளில்லையேல்) அவன்ப்ரஸாதமுண்டாகில் ஜயிக்கவுமாமாகாதே. "அருளென்னுமொள்வாளுருவியெறிந்தேனைம்புலன்கள்" என்னக்கடவதிறே. உன்னை யண்டைகொள்ளாதே பாண்டவர்கள் துர்யோதநனை வெல்லுமன்றன்றோ நானிந்த்ரியங்களை வெல்லுவது. க்ருஷ்ணனையாஶ்ரயித் தர்ஜுநன் சத்ருக்களைஜயித்தானிறே,"க்ருஷ்ணாஶ்ரயாः க்ருஷ்ணபலாः க்ருஷ்ணநாதாஶ்ச பாண்டவாः."(க்ருஷ்ணாஶ்ரயாःக்ருஷ்ணபலாः க்ருஷ்ணநாதாஶ்சபாண்டவாः.) (அன்றுதேவரசுரர்வாங்க) நம்மருள் பெற்று வென்றாருண்டோவென்ன; துர்வாஸஶ்ஶாபத்தினன்று உன்ப்ரஸாதம்பெற்றன்றோ தேவர்கள்கடலைக்கடைந்தது. தேவர்களு மசுரர்களும் கைவாங்கக்கடைந்தா னென்னுதல். அன்றிக்கே, வாங்குதல் - வலித்தலாய், அவர்கள் தங்களுக்கே கடைபலாம்படி பண்ணிக்கொடுத்தானென்னுதல். (அலைகடலித்யாதி) பெரிய அலையையுடைத்தானகடலிலே, ஒரு சித்வஸ்துவான வாசுகியைக் கயிறாகக்கொண்டு, சலிப்பிக்கவொண்ணாததொரு பர்வதத்தை மத்தாகக்கொண்டு, அத்தை வாசுகியையிட்டுச்சுற்

றிவைத்த நொய்ப்பமெல்லார்க்கும் கடையலாம்படி யிருக்கை. நமக்கும் கடையப்போம்படியா யிருக்கை.

(எந்தாய்) தாமு மொரு ப்ரயோஜநம்பெறப் பார்க்கிறு ராகையாலே அது தம்பேறுயிருக்கிறபடி. (கொடியேன்பருகின்னமுதே) கடைந்தத்தையே யாசைப்படப் பெற்றிலேன். நீ செய்தது கொண்டு த்ருப்தனுகவேண்டியிருக்க, "அட்டதொழியச்சுட்டதுகொடுவா" என்றுன்னை நிர்ப்பந்திக்கும்படியான பாபத்தைப்பண்ணினேன்............................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (ஒன்றுசொல்லியித்யாதி) "உன்றிருவருளில்லையேல்-வன்கயவரான-ஓரைவரை-என்றுயான் வெல்கிற்பன்" என்றபதங்களைப் பற்ற வவதாரிகை (நீயுபேக்ஷித்தாலித்யாதி)

"ஒன்றுசொல்லி யொருத்தினில் நிற்கிலாத" என்றதுக்கு ஹார்த்தபாவம் (ராமோத்விரித்யாதி) "தஜ்ரூஹிவசநம்தேவிராஜ்ஞாயதஷிகாங்க்ஷிதம் கரிஷ்யே ப்ரதிஜாநேசராமோத்விர்நாபிபாஷதே" (தத்ப்ரூஹிவசநம்தேவி ராஜ்ஞாயதபிகாங்க்ஷிதம் । கரிஷ்யேப்ரதிஜாநேசராமோத்விர்நாபிபாஷதே) இத்யயோத்யாகாண்டே. அவர்களைப் பற்றினால் பயங்கெட்டிருக்கலாம் ப்ரகாரமேதென்ன (அங்ஙனேயாகிலித்யாதி) அங்ஙனேயாகிலென்றது - இரண்டாம்வார்த்தையில்லையென்றுராகிலென்றபடி. சப்தார்த்தம் (ஒருவார்த்தையையித்யாதி) விவரணம் (ஒருவிஷயத்தையித்யாதி) "ஓர்" என்று - அத்விதீயத்வம். ஆவது - ஒருவர்நினைத்தத்தை யொருவர் நினையாதே தனித்தனியே ப்ரதாநரா யிருக்கை. * வன்மைக்கர்த்தம் (பழகப்பழகவித்யாதி) கயவர் - நிர்க்க்ருணர். கலமொன்றுமாம்.

"என்றுயான்வெல்கிற்பன்" என்றதுக்கு பாவம் (இன்றல்லவாகிலித்யாதி) ஒருநாளும் வெல்லமுடியாதென்று கருத்து. வ்யதிரேக சித்தார்த்தத்தை யருளிச்செய்கிறார் (அவன்ப்ரசாதமித்யாதி) அவன் ப்ரசாதமுண்டானால் ஜயிக்கலாமோவென்ன (அருளென்னுமித்யாதி) அருளாகிற வழகிய புகரையுடைய வாளையுருவிவீசினே னைம்புலன்களையென்றபடி. திருமொழி ஆறும்பத்து இரண்டாந் திருமொழி நாலாம்பாட்டு, "பிறிந்தேன்" இத்யாதி. "உன் திருவருளில்லையேல் - என்று யான்வெல்கிற்பன்" என்றதுக்கு த்ருஷ்டாந்தம் (உன்னை யண்டையித்யாதி) அவனை யண்டைகொண்டே ஜயித்தார்களோவென்ன (க்ருஷ்ணனையித்யாதி) உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் (க்ருஷ்ணாஸ்ரயா இத்யாதி)

"அன்றுதேவர்" இத்யாதிக்கவதாரிகை (நம்மருளித்யாதி) "அன்று" - (துர்வாஸஶ்ஶாபத்தினன்று) நொய்ப்பம் - நேர்ப்பு. (எல்லார்க்கும்) என்றதுக்கு பாவம் (நமக்குமித்யாதி) ப்ரயோஜநாந்தரபரர்க்காகக் கடைந்ததுக்குத் தோற்று, "எந்தாய்" என்பானென்னென்ன (தாமுமொருவித்யாதி) அதாவது-ஆஸ்ரிதரிலே யொருவரர்த்தித்தகார்யம் செய்தால் அல்லாதாரர்த்தித்தகாரியமும் செய்ய வேண்டுகையாலே, தாமர்த்தித்தகாரியமும் செய்யுமென்றறுதியிட்டு - அவர்களுக்குச்செய்தது தம்பேறுயிருக்குமென்றபடி.

"இன்னமுதே" என்றத்தைக் கடாக்ஷித்து, "கொடியேன்" என்றதுக்கர்த்தம் (கடைந்தத்தையித்யாதி) அர்த்தாந்தரம் (நீசெய்ததித்யாதி) அதாவது - மாந

சாறுபவத்தில் த்ருப்தனுகாதே "காணவேணும்" என்னும்படியான பாபத்தைப்ப ண்ணினேனென்றபடி. அட்டதொழியச்சுட்டது கொடுவாவென்றது - தன் பிள்ளை யையறுத் தடலைச்சமைத்துத் தலையையடுப்புக்கிடையிலே போகட் டடல்மாம்சத் தை விருந்திட்ட சிறுத்தொண்டனைப்பார்த்து இவன் மநஃஸோதநார்த்தமாக, "அ ட்டமாம்சமிருக்கச் சுட்டமுகத்தைக்கொடுவா" என்று ருத்ரன் சொன்னது.

அன்று தேவரொன்று தொடங்கி, இன்னமுதே-ஒன்றுசொல்லி யென்றுதொ டங்கி, வன்கயவரை - உன்றிருவருளில்லையேல் - என்று யான் வெல்கிற்ப னித்யந் வயஃ.................................................................................................*



# எட்டாம்பாட்டு.

இன்னமுதெனத்தோன்றியோரைவர்யாவரையுமயக்கநீவைத்த
முன்னமாயமெல்லாமுழுவேரரிந்தென்னையுன்
சின்னமுந்திருமூர்த்தியுஞ்சிந்தித்தேத்திக்கைதொழவேயருளெனக்
கென்னம்மாவென்கண்ணாவிமையோர்தங்குலமுதலே.

## ஆறாயிரப்படி.

(இன்னமுதென) அநுபவவேளாயா மம்ருதோபமமாய், விபா கே நிரயஹேதுத்வேந விஷோபமமாய், த்வத்ஸ்வரூப ரூபகுண விபவை ஶ்வர்ய யாதாத்ம்ய விஷயசேமுஷீகரான தேவாதிகளையுங்கூட மோஹி ப்பிக்கும்படி சப்தாதிவிஷயரூபேண வுன்னாலே நிர்மிதமான ப்ரக்ருதி ஸம்பந்தத்தை ஸஹேதுகமாகப்போக்கி, * அயர்வறுமமரர்கள் பரிஷத்தி லே யென்னைவாங்கி, ப்ராக்ருதவிஷய விஸ்மரணபூர்வகமாக, உன்னுடை ய சங்கசக்ரகதா சார்ங்காத்ய ஸங்க்யேய திவ்யசிஹ்நங்களையும், அவற்றா லே யலங்க்ருதமான திருமேனியையுமே சிந்தித்தேத்திக் கைதொழவே யருளெனக்கெம்பிரானே, ஆஶ்ரிதவத்ஸலனே யென்றெம்பெருமானை ப் ரார்த்திக்கிறார் ...............................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், எனக்கு, விஷயேந்த்ரியங்களைவென்று உன்னுடைய வசாதார ணசிஹ்நங்களை யநுபவிக்கும்படி க்ருபைபண்ணியருளவேணு மென்கிறார்.

என்-எனக்கு. அம்மா-நிருபாதிகஸ்வாமியாய். அந்தஸம்பந்தமடியாக, என் கண்ணா-உன்சௌலப்யத்தை யெனக்கு ப்ரகாசிப்பித்தவனாய். இமையோர்தங்குல ம்-நித்யஸூரிகள் திரளுக்கு. முதலே - சத்தாதிஹேதுபூதனானவனே. ஓர்-அத்விதீய மான. ஐவர்-ஐந்திந்த்ரியங்களாலே. இன்-இனிய. அமுது-அம்ருதம். என-என்னும் படி போக்யமாய். தோன்றி-ப்ரகாசித்து. யாவரையும் - எத்தனையேனு மளவுடைய ரான ப்ரஹ்மாதிகளையும். மயக்க-மோஹிப்பிக்கைக்காக. நீ-சர்வசக்தியானநீ. வை த்த-உண்டாக்கிவைத்த. முன்னம்-அநாதிசித்தமாய். மாயம் - அஜ்ஞாநவர்த்தகமா

கையாலே மாயாசப்தவாச்யமான விஷயங்கள். எல்லாம்-எல்லாவற்றையும். முழு-முழுக்க. வேர்-வேர். அரிந்து-அறுத்து. என்னை-சம்ஸாரபீதனானவென்னை. உன் - உன்னுடைய. சின்னமும்-அஸாதாரணசிஹ்நமான சங்கசக்ராதிகளையும். திரு-அவற்றுலலங்க்ருதமான. மூர்த்தியும்-விக்ரஹத்தையும். சிந்தித்து - நெஞ்சாலேநினைத்து. ஏத்தி-வாக்காலேஸ்துதித்து. கை-கையாலே. தொழ-தொழும்படியாக. எனக்கே-எனக்கென்னவிசேஷித்து. அருள்-க்ருபைபண்ணியருளவேணும்.

ஔவையையும், மாயமெல்லாவற்றையுமென்று - எண்ணுகவுமாம். மாயமென்று - சப்தாதிஸஹிதையான ப்ரக்ருதியாகவுமாம்..................................*

## ௩-டு - எட்டாம்பாட்டு.

என் ப்ரக்ருதி சம்பந்தத்தையறுத்து, நான்மநோவாக்காயங்களாலே யுன்னைநிரந்தரமாக வநுபவிக்கும்படி பண்ணி யருளவேணுமென்கிறார்.

(இன்னமுதெனத்தோன்றி) விபாகத்தில் பலிக்குமது முகப்பிலேயாகப்பெற்றேனாகில் கைவிடலாங்கிடீர். * அக்ரோம்ருதமிவ இறே, பரிணாமத்தில் விஷமிறே. விபாகத்தில் பலிக்குமதுபக்ரமத்தே தோன்றிற்றாகில் மேல்விழாதொழியலாயிற்று. பழியும் தர்மஹாநியுமாய், மேல்நரகமானாலும் விடப்போகாதிருக்கை. ப்ரக்ருதி ப்ராக்ருதங்களுக் கிங்ஙனே யொருதன்மையுண்டு - த்ருதராஷ்ட்ரனோடொக்கும். அகவாயில் தர்மருசி யின்றிக்கே யிருக்கச்செய்தே, வாயாலே அநுகூலம்போலே யிருக்குமவற்றைச்சொல்லாநிற்குமவனும். (ஔவைர்) தனித்தனியே, ப்ரபலமாயத்விதியமான சப்தாதிவிஷயங்களைந்தும். (யாவரையும்மயக்க) க்ஷுத்ரரானமநுஷ்யரோடு, அளவுடையரான ப்ரஹ்மாதிகளோடு வாசியறவறிவுகெடுக்கும்படிக்கீடாக. (நீவைத்த) சர்வசக்தியானநீவைத்த. தன்னாலேஸ்ருஷ்டமாயிற்ற தென்றறியாதே, "அதிலே யொருபோக்யதையுண்டு" என்றுஸ்ப்ருஹைபண்ணுகிறானிறேப்ரஹ்மா. (முன்னமாயமெல்லாம்) அநாதியானசம்சாரத்தையெல்லாம். (முழுவேரரிந்து) ஸவாஸநமாகப்போக்கி. (என்னை) ஸம்ஸாரபயபீதனானவென்னை. செய்தவம்ஸத்தே த்ருப்தனாயிருக்குமிறேயவன். "ஜ்ஞாநலாபம்பண்ணிக்கொடுத்தோம்" என்றிறேயவனிருக்கிறது. அதுபோராதிறே, ஸம்ஸாரத்தைஸவாஸநமாகப்போக்கவேண்டி யிருக்குமிறே யிவர்க்கு, (உன்சின்னமுந்திருமூர்த்தியும்) " தவளவொண்சங்குசக்கரம் " என்றும், " வலக்கையாழியிடக்கைச்சங்கம் " என்றும், " அரவிந்தலோசநன் " என்றுஞ்சொல்லுகிறபடியே, திவ்யாயுதங்களையும் அவற்றுக்கு ஸத்ருசமான திருமேனியையும். ( சிந்தித்தியாதி) இவற்றைநெஞ்சாலேயநுசந்தித்து, உள்ளடங்காமல் வாய்விட்டு ஸ்தோத்ரம்பண்ணி, பின்னைத்திருவடிகளிலே விழும்படிக்கீடாக வெனக்கருளவேணும். வாயாலேயொன்று சொல்லாநிற்க, நெஞ்சு வேறேயொன்று நினைத்தல்; "உனக்குசேஷம்" என்று வேறேயோரிடத்தே தொழி

ல் செய்தல் செய்கை யன்றிக்கே, மநோவாக்காயங்கள் மூன்று முன்பக்க விலேப்ரவணமாம்படி பண்ணியருளவேணும். (என்னம்மா) எனக்குத்தா ய்போல் பரிவனுனவனே. இஸ்ஸப்தம் வசிக்கிறபடி. அம்மே யென்கிறதி லே சம்போதநவசநமாகையாலும். சேதநனைச்சொல்லுகையாலும் ஆகா ரமேற்றுவிளியாய் (அம்மா) என்றுகிடக்கிறது. (என்கண்ணு) அந்தப்பரி வையர்த்தக்ரியாகாரியாக்கினவனே. (இமையோர்தங்குலமுதலே) ஒருநா ட்டுக்காகவுன்னைக்கொடுத்துக்கொண்டிருக்கிறவனல்லையோ. அநேகராசை ப்பாடொருவனுக்குண்டானுல் கொடுக்கலாகாதோ. என்னம்மாஇத்யாதி க்கு - எனக்குஸ்வாமியாய், “ஸ்வத்தைநசிக்கக் கொடுக்கவொண்ணுது” என்றுக்ருஷ்ணுய்வந்தவதரித்தென்னை நோக்கினவனே. அவதாரம் ஸ ர்வசாதாரணமாயிருக்கச்செய்தே, இவர்தமக்காகச் செய்ததென்றிருப்ப ரே. மநோவாக்காயங்கள் மூன்று மொருங்கி யுன்பக்கலிலே ப்ரவணமா ம்படியொருநாட்டுக்குப் பண்ணிக்கொடுத்தநீ, அத்தை யெனக்கொருவ னுக்கும்செய்யத்தட்டென்.......................................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (இன்னமுதித்யாதி) “மாயமெல்லாம் முழுவேரரிந்து, சி ந்தித்தேத்திக்கைதொழவே யருள்” என்றபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (என் ப்ரக்ருதியித்யாதி)

இனியவம்ருதமாயென்னுதே, “இனிய வம்ருதமென்னலாம்படி தோன்றி” என்கையாலே - ஆபாத ப்ரதீதியிலே யம்ருதமாய் விபாகத்தி லநர்த்தமென்னுமிடம் சித்தித்ததிறே; இத்தைச்சொல்லி விஷண்ணராகிறவருடைய ஹார்த்தபாவத்தை யருளிச்செய்கிருர் (விபாகத்திலித்யாதி) முன்னேயின்னமுதெனத் தோன்றுமோவென்ன (அக்ரேம்ருத மிவேத்யாதி) “விஷயேந்த்ரியஸம்யோகாத்யத்தத் க்ரேம்ருதோபமம் । பரிணாமே விஷமிவ தத்ஸுகம் ராஜஸம் ஸ்ம்ருதம்” (விஷயேந்த்ரிய ஸம்யோகாத்யத்ததக்ரேம்ருதோபமம் ‌। பரிணுமேவிஷமிவதத்ஸு கம்ராஜஸம்ஸ்ம்ருதம்) இதிகீதாஸ்வஷ்டாதஸே. விவரணம் (விபாகத்திலித்யாதி) * இனிமைக்கர்த்தம் (பழியுமித்யாதி) விபாகத்தில்விஷமாயுபக்ரமத்திலம்ருதமா யிருக்குமது ப்ரக்ருதி ப்ராக்ருதங்களுக்குள்ள ஸ்வபாவமென்னுமத்தை சநிதர்சநமாக வருளிச்செய்கிருர் (ப்ரக்ருதீத்யாதிவாக்யத்வயத்தாலே) எப்படி யொக்குமென்ன; த்ருதராஷ்ட்ரன்படியை யருளிச்செய்கிருர் (அகவாயிலித்யாதி) அப்படியே யிவையும் முகப்பிலின்னமுதாயநந்தரம் விநாசமாக்குமென்றபடி. ப்ரபலமாய் அத ஏவாத்விதீயமானவென்றபடி. “யாவனையும்” என்றசஸப்தார்த்தம் (க்ஷுத்ரரானவித்யாதி) ப்ரஹ்மாவிந்த்ரியவஸ்யனுனுனேவென்ன (தன்னுலேயித்யாதி) “முழுவேர் -” வேர்முழுக்கவென்றபடி. “முழுவேரரிந்து - கைதொழவேயருள்” என்றர்த்திக்கிறதென், ஸர்வஜ்ஞனறியானேவென்ன (செய்தவம்சத்தேயித்யாதி) விவரணம் (ஜ்ஞாநலாபமித்யாதி)

“கைதொழவே” என்கிறவேவகாரார்த்தம் (வாயாலேயித்யாதி) அதாவது - கரணத்ரயமுமுன்பக்கலிலேயாகவேணுமென்றபடி.

(இஸ்ஸூப்தம்வசிக்கிறபடி) என்றதுக்குக்கருத்து; தாயாரைசம்போதிக்குமிடத்தில் - அம்மே யென்று சம்போதிக்க வேண்டியிருக்க, "அம்மா" என்று சம்போதிக்கிறது-புருஷனைத்தாயாராகசம்போதிக்கையாலே, "அம்மா" என்றவாகாரமேற்று விளியா யிருக்கிறதென்றபடி. ஏற்றுவிளியாவது-ஏகாரஸ்தாநத்திலே ஆகாரமாதேசமாயேறி, "அம்மா" என்று சம்போதித்தழைக் கையாயிருக்கை யென்றபடி. ஏற்றென்றது - ஆதேஶம். விளி-அழைக்கை. அந்தப்பரிவை-தாய்போலேபரிவனவாகாரத்தையென்றபடி. அர்த்தக்ரியாகாரி-அநுஷ்ட்டாநபர்யந்தம். அவர்களநேகராகையாலே செய்தோமென்ன (அநேகரித்யாதி) "அம்மா" என்றதுக்கு-கீழ், பரிவனுகவருளிச்செய்து, அர்த்தாந்தரம் (எனக்குஸ்வாமியாயென்று) அவதாரம் ஸர்வசாதாரணமாயிருக்க, "என்கண்ணு" என்கிறதென்னென்ன (அவதாரமித்யாதி) "இமையோர்தங்குலமுதலே - சிந்தித்தேத்திக்கைதொழவேயருளெனக்கு" என்றந்வயமுகேநபாவம் (மநோவாக்காயங்களித்யாதி)

என்னம்மாவென்று தொடங்கி, குலமுதலே-இன்னமுதெனவித்யாரப்ய, என்னுடைய-முன்னமாயமெல்லாம் முழுவேரரிந்து - உன்சின்னமுந்திருமூர்த்தியும் சிந்தித்தேத்திக்கைதொழவே - எனக்கு - அருளித்யந்வயஃ. என்னை யென்றவிடத்தில், ஐகாரம்-அவ்யயமாய். என்னுடையவென்றபடி.....................................*



## ஒன்பதாம்பாட்டு.

குலமுதலடுந்தீவினைக்கொடுவன்குழியினில்வீழ்க்குமைவரை
வலமுதல்கெடுக்கும்வரமேதந்தருள்கண்டாய்
நிலமுதலினியெவ்வுலகுக்குநிற்பனசெல்வனவெனப்பொருள்
பலமுதல்படைத்தாயென்கண்ணுவென்பரஞ்சுடரே.

### ஆறாயிரப்படி.

( குலமுதல் ) சங்கல்பமாத்ர பரிநிர்மித நிகிலபுவந ததந்தர்வர்த்யகிலசராசர ஜந்துஜாதனாய் சர்வசக்தியாய், ராமக்ருஷ்ணதிருபேணவதீர்ய ப்ரணதஜந பரித்ராண தத்விரோதி நிரஸநைக போகனாயிருந்த நீ, ஸாங்வயமத்விநாஶகர துஷ்க்ருதாதிகோர துராரோஹாகாத கர்த்தநிபதநஹேதுபூதமான பஞ்சேந்த்ரியங்களினுடைய பலத்தை ஸஹேதுகமாகக்கெடுக்கையாகிற வென்னுடைய வபிலஷிதத்தைச் செய்தருளவேணுமென்கிறார். ..........................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், சகலஜகதுத்பாதகனாய் எனக்குபவ்யனாய் போக்யனான நீ, விஷயங்களிலே தள்ளு மிந்த்ரியபலத்தை யுந்மூலநம்பண்ணும்படி ப்ரஸாதத்தைப் பண்ணவேணுமென்கிறார்.

நிலம் - பூமி. முதல் - முதலாக. இனி - மற்றும். எவ்வுலகுக்கும் - எல்லாலோகங்களுக்கும். நிற்பனசெல்வனவென - ஸ்த்தாவரஜங்கமரூபமான. பொருள்-

பதார்த்தங்கள். பல - பலவற்றையும். முதல் - ப்ரதமத்திலே. படைத்தாய்-படைத்தவனாய். என்கண்ணா - ஜகத்ரக்ஷணார்த்தமாக க்ருஷ்ணனாயவதரித்த ஸௌலப்யத்தை யெனக்கு ப்ரகாசிப்பித்தவனாய். என் - எனக்கநுபாவ்யனுமாய். பரஞ்சுடரோ - நிரதிசயௌஜ்ஜ்வல்ய யுக்தமான வடிவையுடையவனே. குலம் - வம்ஸத்தை. முதல் - மூலபூதபுருஷனோடே. அடும் - அதஃபதிக்கும்படி முடிக்கவல்ல. தீ - தாபகரமான. வினை - பாபத்துக்கு ப்ரவர்த்தகமாம். கொடு - கொடுமையை யுடைத்தான. வலியவிஷயங்களாகிற, வன் - கரையேறவொண்ணாத. குழியினில் - படுகுழியிலே. வீழ்க்கும் - தள்ளக்கடவதான. ஐவரை - ஐந்திந்த்ரியங்களை. வலமுதல் - ஸ்வபலமூலமான துர்வாஸனையோடே. கெடுக்கும் - கெடுக்கும். வலமே - ப்ரஸாதபலத்தையே. தந்தருள்கண்டாய் - தந்தருளவேணும்.

வலமென்று - ப்ரபலமான ப்ரஸாதத்தை லக்ஷித்தல்; வலமென்று - ஆநுகூல்யமாய், ப்ரஸாதந்தாநுதல்............................................................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

(ஸாநுபந்தமாக முடிக்குமதான பாபங்களை விளைக்கும்) விஷயங்களிலே ஆத்மாவைத் தள்ளு மிந்த்ரியங்க ளென்னை நலியாதபடி பண்ணவேணுமென்கிறார்.

(குலமுதலித்யாதி) ஒருவன் பண்ணினபாப மவன் றன்னளவிலே போகையன்றிக்கே குலமாக முதலற முடிக்கவற்றான பாபங்களை விளைக்கக்கடவதாய், கொடியதாய் - அநுபவித்து முடிய வொண்ணாதபடியாய், (வன்குழியாய்) வலியதாய் - கால்வாங்கவொண்ணாதபடியான, சப்தாதிவிஷயங்களாகிற குழிகளிலே தள்ளக்கடவதான விந்த்ரியங்களை. [ந ஹி தர்மவிருத்தேஷு பஹ்வபாயேஷு கர்மஸு । மூலகாதிஷு ஸஜ்ஜந்தே புத்திமந்தோ பவத்விதா: ] [ நஹிதர்மவிருத்தேஷு பஹ்வபாயேஷுகர்மஸு । மூலகாதிஷு ஸஜ்ஜந்தேபுத்திமந்தோபவத்விதாঃ ] செய்யக்கடவதல்லாததாய், சொல்லுகிற பலத்தினளவல்லாத வபாயங்களை யுடைத்தாய், வம்சங்களை முதலறமுடிக்கக் கடவதான செயல்களிலே, உன்போல்வாராய் புத்திமான்களா யிருப்பார் ப்ரவர்த்தியார்கள் காண் என்றானிறே மால்யவான் ராவணனுக்கு. (வலமுதல் கெடுக்கும் வரமே தந்தருள்கண்டாய்) இவற்றினுடையபலத்தை முதலிலே முடிக்கக்கடவதான வுன்னுடைய ப்ரஸாதத்தைப்பண்ணி யருளவேணும். நம்மாலேதனியே யிங்ஙனே செய்யலாயிருக்குமோவென்ன (நிலமுதலித்யாதி) நீஜகத்ஸ்ருஷ்ட்யாதிகள் பண்ணுகிறபோது உனக்கார் துணைப்படச்செய்தா யென்கிறார். ஸ்ருஷ்டி ப்ரயோஜநம் மோக்ஷமன்றோ, அது பெறவேண்டாவோ, பூமி முதலாகமற்றுமிப்படியுண்டான வெல்லாலோகங்களிலும் ஸ்த்தாவரஜங்கமங்களான பலபதார்த்தங்களையும் முன்பேயுண்டாக்கினாய். ((இனி) மற்றும்.) (என்கண்ணாவென்பரஞ்சுடரே) அப்படிபொதுவானரக்ஷணமொழிய, க்ருஷ்ணனாய் வந்தவதரித்தெனக்கு பவ்யனாய், வடிவழ

கையெனக் குபகரித்தவனே. ஒருநாடாக வநுபவிக்கும் வடிவழகை யெ ன்னை யொருவனையு மநுபவிப்பித்தவனே. அழிந்தஜகத்தையுண்டாக்கி னவுனக்கு, உள்ளதுக்கொருகுணுதாநம்பண்ணுகை, யரிதோ...........*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (குலமுதலித்யாதி) "வரமேதந்தருள்கண்டாய்" என்னு மளவுங்கடாக்ஷித்தவதாரிகை (விஷயங்களிலேயித்யாதி)

"கொடு" என்றதுக்கர்த்தம் (அநுபவித்துமுடிய வொண்ணுதபடியாயென்று) "விஷயப்ராவண்யம் குலமாக நசிப்பிக்கும்" என்றதுக்குப்ரமாணம் (நஹிதர்மேத்யாதி)"நஹியஉஒவிரூஜெஷுவஹவாயெஷுகஉஒஸுஉஎவா திஷுஸஜஞெவஷிஉஞொஹவதியாஃ" (நஹிதர்மவிருத்தேஷு பஹ்வபாயேஷுகர்மஸு।மூலகாதிஷுஸஜ்ஜந்தே புத்திமந்தோபவத்விதாः) இதிராவணம் ப்ரதிமால்யவான். இதுக்கர்த்தம் (செய்யக்கடவதித்யாதி) இதுக்கு (மூலகாதிஷு) என்கிறதிலே நோக்கு,

வலம் - பலம். முதலிலேயென்றது - முதலிலே வாராதபடி யென்றபடி. "வரம்" - (ப்ரசாதத்தை)

மேலுக்கவதாரிகை (நம்மாலே யித்யாதி) ஜகத்ஸ்ருஷ்டியைச் சொல்லுகிற துக்குபாவம் (நீஜகத்ஸ்ருட்யாதிகளித்யாதி) பாவாந்தரம் (ஸ்ருஷ்டிப்ரயோஜநமித்யாதி) "இனி" என்றதுக்கர்த்தம் (மற்றுமிப்படியென்றது) "பல-பொருள்" என்றந்வயிப்பது.

"என்பரஞ்சுடரே" என்றதுக்கர்த்தம் (வடிவழகையித்யாதி) "பரஞ்சுடர்" என்று விசேஷித்து, "என்" என்றதுக்கர்த்தம் (ஒருநாடாகவித்யாதி) "பரம்" என்கையாலே-பரமபதவிக்ரஹமென்று சித்தம்.

"நிலமுதல்" இத்யாதியின்முந்தினதாத்பர்யவிவரணம் (அழிந்தவித்யாதி) யத்வா, உம்முடைய விந்த்ரியவஶ்யதையைப் போக்குகை யரிதுகாணுமென்ன (அழிந்தவித்யாதி) என்றுத்ருதீயதாத்பர்ய மாதல்.

உத்தரார்த்தாநுசந்தாநாநந்தரம், பூர்வார்த்தாநுசந்தாந மந்வயப்ரகாரः..*

---

# பத்தாம்பாட்டு.

என்பரஞ்சுடரேயென்றுன்னையலற்றியுன்னிணைத்தாமரைகட்
கன்புருகிநிற்குமதுநிற்கச்சுமடுதந்தாய்
வன்பரங்களெடுத்தைவர்திசைதிசைவலித்தெற்றுகின்றனர்
முன்பரவைகடைந்தமுதங்கொண்டமூர்த்தியோ.

## ஆறுயிரப்படி.

(என்பரஞ்சுடரே) ஆஶ்ரிதருடைய வபேக்ஷிதத்தை முடிப்பானொருவனுமாய் முடிக்கவல்லானொருவனுமா யிருக்கச்செய்தே, உன்னுடை

ய கல்யாணகுணாநுபவஜநித நிரதிசய ப்ரீதியாலே யப்ரக்ருதிங்கதனாய்க் கொண்டு, என்பரஞ்சுடரோ யென்றுன்னை யலற்றியுன்றிருவடிகளிலுள்ள ப்ரேமாதிசயத்தாலே நீராயுருகி நிற்கையாகிற வென்னுடைய ஸ்வரூபத்தையொழிய, விஷயாநுபவோபகரணமான ப்ரக்ருதியையெனக்குத் தந்தாய் ; இந்தப்ரக்ருத்யாஶ்ரயமான விந்த்ரியங்கள் துர்ப்பரமானவிஷயபாரங்களையெடுத்து ப்ரதிதிஶமாகர்ஷித்தென்னை பாதியாநின்றனகிடா யென்றெம்பெருமானைக் கூப்பிடுகிறார்........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், கடலைக்கடைந்து சாரமான வம்ருதத்தைக்கொண்ட ஸ்வாமியானநீ, நிரதிசயசாரமான வுன்னுடையவநுபவம்நிற்க, விஷயபரங்களை யெடுத்திந்த்ரியங்கள் நலியும்படியானசுமைபொறுக்கும் சரீரத்தைத்தந்தாயென்கிறார்.

முன் - முற்காலத்திலே. பரவை - பரந்தசமுத்ரத்தை. கடைந்து - கடைந்து. அமுதம் - அதின்சாரபூதமானவம்ருதத்தை. கொண்ட - கொண்டுதேவாதிகளுக்குபகரித்த. மூர்த்தி - ஸ்வாமித்வத்தையுடையவனே. என் - எனக்கு. பரஞ்சுடரோ - நிரதிசயமானவுஜ்ஜ்வலபோக்யமே. என்று - என்று. உன்னை - உன்னைநோக்கி. அலற்றி - ப்ராவண்யத்தாலே யக்ரமமாகக்கூப்பிட்டு. உன் - உன்னுடைய. இணை - பரஸ்பரஸத்ருஶமான. தாமரைகட்கு-திருவடிகளிரண்டுக்குமாக. அன்பு - ப்ரேமத்தாலே. உருகி - த்ரவீபூதனாய். நிற்கும் - நிற்கிற. அது-அந்தநிரதிசயசாரபூதமானவாகாரம். நிற்க - நிற்க. சுமடு - பாரஸஹமானசரீரமாகிற சும்மாட்டை. தந்தாய் - தந்தாய். அதடியாக, வன் - ப்ரபலமான. பரங்கள் - விஷயபரங்களை. எடுத்து - எடுத்து. ஐவர் - ஐந்திந்த்ரியங்களானவை. திசைதிசை-ஸ்வாபிமதமானதிக்குக்களிலே. வலித்து - இழுத்து. எற்றுகின்றனர் - பீடியாநின்றன.

ஓ - ஓ - இதென்ன வநர்த்தமென்றுகருத்து..................................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

அடிமைக்கு விரோதியாய் - விஷயாநுபவத்துக்குப் பாங்கான வுடம்பைத்தந்தாய், அதுவேஹேதுவாக ஐந்திந்த்ரியங்களும் நலியாநின்றன,அவற்றைப்பரிஹரித்தருளவேணுமென்றார்த்தியோடே கூப்பிடுகிறார்.

(என்பரஞ்சுடரித்யாதி) எனக்குன் வடிவழகைக் காட்டியுபகரிக்குமவனே யென்றுன்னைக்குறித் தடைவுகெடக் கூப்பிட்டு. (உன்னிணைத்தாமரையித்யாதி) ஒன்றுக்கொன்றொப்பாயிருப்பனவிரண்டு செவ்விப்பூப்போலே யிருக்கிற வுன்றிருவடிகளில் போக்யதையை யநுசந்தித்து ப்ரேமபரவசனாய் நெகிழ்ந்து நீராய்நிற்கை யிவ்வாத்மாவுக்கு ஸ்வரூபமாகக்கடவது. ( அதுநிற்கச்சுமடுதந்தாய் ) ஸ்வரூபமிதுவாயிருக்க, உன்பக்கலினின்றுமகற்றி விஷயங்களிலேகொடுபோய் மூட்டக்கடவதான சரீரத்தைத்தந்தாய், உன்னையநுபவிக்கைக்குறுப்பாக தேஹத்தைத் தந்தாயாய் நீ, அதுதானேயெனக்கிழவுக்குடலாயிற்று. ராஜபுத்ரன்தலையில் முடியைவாங்கிச்சும்மாட்டைக்கொண்டு வழியிலேநின்றால், அடியறியாதா

ர் சுமையெடுத்திக்கொண்டு போமாபோலேயாயிற்று பகவதநுபவத்து க்கிடாகக்கொடுத்த சரீரமிந்த்ரியங்களுக்குப் பணிசெய்யும்படியாய்விட் டது. சுமடு - சும்மாடு. சரீரமாகிற சும்மாட்டைத்தந்தாய்.

(வன்பரங்களித்யாதி) "அப்ராப்தவிஷயத்திலே போனேன்" என்றோநானிப்போதஞ்சுகிறது. பொறுக்கலாமளவு சுமையெடுத்ததாகில் நான்சுமவேனோ. வலியபாரத்தையெடுத்தி. கனத்தசுமையை யெடுத்தி. (ஐவர்) அவர்கள் தாமொருவரிருவராகில் நானாற்றேனோ.

(திசைதிசை வலித்து) இத்தனைவரு மொருதிக்கிலே போகவிழு த்தார்களாகிற்றுன் மெள்ளப்போகேனோ. (எற்றுகின்றனர்) உடையவனு கிலிறேபோக்குவிட்டுநலிவது. (எற்றுகை-ப்ரஹரிக்கை.) ஒருதுர்ப்பலன் றலையிலே யதிபாரத்தையெடுத்திச்சுற்றும் நின்று தந்தாம் வழியேயிழுத் துக்கொண்டு போகத்தேடுமாபோலே காணுமிவையும். (முன்பரவையி த்யாதி) கடலைநெருக்கி அதிலம்ருதத்தைவாங்கி, ப்ரயோஜநாந்தரபர ரானவர்களுக்குங்கூடக்கொடுக்கக்கடவ மஹாபாஹுவையுடையவனே. என்னுடைய விந்த்ரியங்களைப் பாறவடித்துப்பொகட்டு, கடல்கடைந்த போதை யொப்பனையோடேகூடினவடிவைக்காட்டவல்லையே............*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (என்பரஞ்சுடரித்யாதி) "சுமடுதந்தாய், எற்றுகின்றனர், அமுதங்கொண்டமூர்த்தியோ" என்றபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (அடிமைக் குவிரோதியாயித்யாதி)

"அலற்றி" என்றதுக்கர்த்தம் (அடைவுகெடக்கூப்பிட்டென்று)

"விசித்ராதேஹஸம்பத்திः" (விசித்ராதேஹசம்பத்திः) இத்யாதிப்ப டியே நம்மையநுபவிக்கைக் கன்றோ தந்ததென்ன (உன்னையநுபவிக்கைக்கித்யாதி) "அநுசிற்கச்சுமடுதந்தாய்" என்றதுக்கு த்ருஷ்டாந்தம் (ராஜபுத்ரனித்யாதி) அ டியறியாதார்-ராஜபுத்ரனென்றறியாதாரென்றபடி.

"வன்பரங்கள்" என்றதுக்குவாசகை (அப்ராப்தேத்யாதி) விவரணம் (பொ றுக்கலாமித்யாதி) சப்தார்த்தம் (வலியவித்யாதி) பாரத்துக்கு வன்மையாவதேதெ ன்ன (கனத்தவித்யாதி) பாரத்தையென்றது - சப்தாதிகளை. "எற்றுகின்றனர்" எ ன்ற வர்த்தமாநார்த்தம் (உடையவனுகிலித்யாதி) "திசைதிசைவலித்தெற்றுகின்ற னர்" என்றதுக்கு த்ருஷ்டாந்தம் (ஒருதுர்ப்பலனித்யாதி)

"பரவைகடைந்தமுதங்கொண்டமூர்த்தியோ" என்றதுக்குபாவம் (கட லையித்யாதி) "மூர்த்தி" - வடிவு. * மூர்த்திசப்தம்-திருக்கைகளுக்குபலக்ஷணமெ ன்று கருத்து. "எற்றுகின்றனர்" என்றதின்பாவத்தைக்கூட்டி, "மூர்த்தி" என் றதுக்குபாவாந்தரம் (என்னுடையவித்யாதி)

சுமடுதந்தாயென்னுமளவும் க்ரமத்திலேசொல்லி, முன்பரவைகடைந்தமுத ங்கொண்டமூர்த்தி, ஐவர்திசை திசைவலித் தெற்றுகின்றனர் ; ஓவென்றந்வயம். அத்தைப்பரிஹரித்தருளவேணுமென்று கூட்டிக்கொள்வது .............................*



# பதினொன்றாம்பாட்டு.

கொண்டமூர்த்தியோர்மூவராய்க்குணங்கள்படைத்தளித்துக்கெடுக்குமப்
புண்டரீகக்கொப்பூழ்ப்புனற்பள்ளியப்பனுக்கேதொண்டர்
தொண்டர்தொண்டர்தொண்டன்சடகோபன்சொல்லாயிரத்துளிப்பத்
கண்டுபாடவல்லார்வினைபோங்கங்குலும்பகலே. [துங்

## ஆறாயிரப்படி.

(கொண்டமூர்த்தி) குணத்ரயாஶ்ரய த்ரிமூர்த்திரூபேண நிகில ஜகத்ஸர்க்கஸ்த்திதி ஸம்ஹார ஹேதுபூதனாய், ஸ்ருஷ்டமான ஜகத்தினுடைய ரக்ஷணார்த்தமாக க்ஷீரார்ணவேஶயானனாய், புண்டரீகஸத்ருஶமான திருநாபியையுடையனாயிருந்த வெம்பெருமானுடைய ஸர்வஜ்ஞத்வ ஸர்வஶக்தித்வ ஸத்யஸங்கல்பத்வ காருண்ய வாத்ஸல்ய ஸௌந்தர்யாதிகுணங்களுக்குத் தோற்றநங்யார்ஹசேஷபூதரானவர்களுடைய தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன் சொல்லாயிரத்து ளந்தகுணங்களையே தமக்குப்பற்றாசாகக்கொண்டு கூப்பிட்ட வித்திருவாய்மொழியில் பாவனையுள்ளபடி யறியக்கண்டு பாடுவாருடைய ப்ரக்ருதி ஸம்பந்தஹேதுபூதமான பாபம் நிஶ்ஶேஷமாகப்போமென்கிறார் .......................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழியை யர்த்தத்தோடே ப்ரீதியுக்தராய்ப் பாடுவார்க்கு சர்வபாபங்களும் போமென்று பலத்தையருளிச்செய்கிறார்.

குணங்கள்-சத்த்வரஜஸ்தமோரூபமானகுணங்களை. கொண்ட - கொண்ட. மூர்த்தி-ப்ரஹ்மவிஷ்ணுருத்ரமூர்த்திகளையுடைத்தாய். ஓர் - அத்விதீயரான. மூவர்-காரணபுருஷர்கள்மூவரும். ஆய்-ஆய். படைத்து-ப்ரஹ்மாந்தர்யாமியாய்ப்படைத்து. அளித்து-ஸ்வாவதாரமான விஷ்ணுரூபியாய்ரக்ஷித்து. கெடுக்கும் - ருத்ராந்தர்யாமியாய் ஸம்ஹரிக்குமவனாய். அ-இதுக்கெல்லாம் மூலமாகப்ரமாணசித்தமான. புண்டரீகம்-புண்டரீகத்தையுடைய. கொப்பூழ்-திருநாபியையுடையனாய்க்கொண்டு. புனல்-காரணஜலத்திலே. பள்ளி-கண்வளர்ந்தருளின. அப்பனுக்கு-மஹோபகாரகனுக்கு. தொண்டர்-சம்பந்திகளானவரை. தொண்டர்-சம்பந்தித்தாரை. தொண்டர்-சம்பந்தித்தார்க்கு. தொண்டன்-சேஷபூதரான. சடகோபன்-ஆழ்வார். சொல்-அருளிச்செய்த. ஆயிரத்துள்-ஆயிரத்து. இப்பத்தும்-இப்பத்தையும். கண்டு - அர்த்தாவலோகநம்பண்ணி. பாடவல்லார்-ப்ரீதிப்ரேரிதராய்ப் பாடவல்லார்க்கு. கங்குலும் பகல்-அஹோராத்ராதிவிபாகமற ஸர்வகாலத்திலும். வினை-பகவதநுபவப்ரதிபந்தகபாபம். போம்-போம்....................................................*

இது - அறுசீராசிரியத்துறை.

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில் - இத்திருவாய்மொழி யப்யஸித்தார்க்கு நிரந்தரமாக விந்த்ரியங்களா லாத்மாவுக்குவரும் நலிவுபோமென்கிறார்.

(கொண்டமூர்த்தியோர் மூவராய்க்குணங்கள்) குணங்கள் - கொண்டமூர்த்தியோர் மூவராய். சத்த்வாதிகுணாநுரூபமான வடிவையுடையமூவராய். குணாநுகுணமான ஸ்ருஷ்ட்யாதிகள் அந்தந்தவ்யக்திதோறும் பர்யவஸிக்குமிறே. இரண்டில் ஜீவவ்யவதாநேநநின்று, ஒன்றில் ஸ்வரூபேணநின்றபடி. (படைத்தித்யாதி) ரஜோகுணத்தையுடையனைக்கொண்டு ஸ்ருஷ்டித்து, தமோகுணத்தையுடையனைக்கொண்டு ஸம்ஹரித்து, ஸத்த்வகுணத்தையுடையனைக்கொண் டிவற்றையடைய ரக்ஷித்துக்கொடு நிற்கிறபடி. (அப்புண்டரீகமித்யாதி) இவற்றையெல்லாவற்றையு முண்டாக்குகைக்காக வேகார்ணவத்திலேவந்து கண்வளர்ந்தருளினபடியைச் சொல்லுகிறது. ஜகதுத்பத்தி காரணதயா ப்ரஸித்தமான திருநாபிகமலத்தையுடையனைக்கொண்டு ஸ்ருஷ்ட்யுந்முகனாய் ஏகார்ணவத்திலே கண்வளர்ந்தருளின வுபகாரகனானவனுக்கே. அப்புண்டரீகக்கொப்பூழென்கையாலே-ப்ரஹ்மாதிகள் கார்யமென்னுமிடமும், அவன் காரணபூதனென்னுமிடமுஞ் சொல்லிற்று. ஒருவனுக் குத்பத்தியிறே சொல்லவேண்டுவது, " ஸ்ரஹ்மணஃபுத்ராய ஜ்யேஷ்டாய ஶ்ரேஷ்டாய " (ப்ரஹ்மணஃபுத்ராயஜ்யேஷ்ட்டாயஶ்ரேஷ்ட்டாய) என்று மற்றையவனுடைய வுத்பத்தி தன்னடையேவருமிறே. ''நான்முகனைநாராயணன்படைத்தான்'' என்றால், மற்றையவன்பிறப்பு மநந்தரம் சொல்லுமிறே. இப்படி வேதவைதிகங்கள் சொல்லாநின்றதிறே. (தொண்டரித்யாதி) விஷயங்களையு மிந்த்ரியங்களையு மநுசந்தித்த நெஞ்சாறல்தீர, சேஷத்வத்தினுடைய வெல்லைநிலத்திலேபோய் நிற்கிறார்; தாபார்த்தன்மடுவிலே தாழவிழியுமாபோலே. (கண்டுபாடவல்லார்) இவருடையதசையையநுசந்தித்தால் பாடப்போகாதாகாதேதான். (கண்டு) நமக்குத்தஞ்சமென்றநுசந்தித்து. (வினைபோம் கங்குலும்பகலே) இரவுபகலில் வினைபோம். (திவாராத்ரமிந்த்ரிய வஶ்யதைக்கு ஹேதுவானபாபம்போம்.) " இராப்பகல் மோதுவித்திட்டு " என்கிறதுரிதம்போம்.......... ...............*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (கொண்டவித்யாதி) " கண்டுபாடவல்லார், கங்குலும்பகல், வினைபோம்" என்றபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை ( இத்திருவாய்மொழியித்யாதி )

சத்வாதி குணாநுரூபமான வடிவையுடைய வத்விதீயரான மூவரா யென்று சப்தார்த்தம். "படைத்தளித்துக்கெடுக்கும்" என்று-ஸாமாந்யேநசொன்னால், இன்னதுக் கின்னார் கர்த்தாவென்றறியும்படி யென்னென்ன ( குணாநுகுணமானவித்யாதி) இங்கே - " ஸத்த்வம் ரஜஸ்தம இதிப்ரக்ருதேர்குணாஸ்தைஃ " (ஸத்த்வம் ரஜஸ்தம இதிப்ரக்ருதேர்குணஸ்தைஃ) இத்யாத்யநுசந்தேயம். தானேமூவரானானே யென்ன (இரண்டிலித்யாதி) ஜீவவ்யவதாநேந நின்று-ஜீவனையதிஷ்ட்டித்தென்றபடி. " குணாநுகுணம் " இத்யாதிவாக்யவிவரணம் (ரஜோகுணத்தையித்யாதி) " அ " என்றப்ரஸித்திக்கர்த்தம் (ஜகதுத்பத்தீத்யாதி) இவ்விடத்திலே-" ஸஜஸ்ர நாஹாவயெ ஸுவிஷ்ணுதஃ। யஸ்நிஹம்விஷ்ணுஜ்வநஃபிஸ்ருதஃ।விஷ்ணு

[illegible] " (அஜஸ்யநாபாவத்யேகமர்ப்பிதம்|யஸ்மிந்நிதம் விஶ்வம்புவநமதிஶ்ரிதம் । விஶ்வகர்மாஹ்யஜநிஷ்டதேவ: ) என்றதநுஸந்தேயம். அஸ்யாஶ்ஶ்ருதேரயமர்த்த:; அஜஸ்ய-ஜந்மாதிரஹிதஸ்யஸர்வேஶ்வரஸ்ய. நாபாவதி-நாபௌ ஏகமர்ப்பிதம்-ஏகம்கமலமாவிர்ப்பூதமித்யர்த்த:; யஸ்மிந் - கமலே, இதம்விஶ்வம்புவநம் - இதம்ஸகலம்ஜகத், அதிஶ்ரிதம் - ஸமாஶ்ரிதம்; விஶ்வகர்மாதேவ: - ப்ரஹ்மா, அஜநிஷ்ட-ஜாதோபூதித்யர்த்த:. நாபிபத்மஸ்யபுவநாதாரத்வம்- புவநகாரணபூத ப்ரஹ்மாதாரத்வாதுபபத்யதே. மஹாபாரதே. " [illegible] " ( அஜஸ்யநாபாவத்யேகம்யஸ்மிந்விஶ்வம்ப்ரதிஷ்ட்டிதம் । புஷ்கரம்புஷ்கராக்ஷஸ்யதஸ்மைஸர்வாத்மநேநம: ) " [illegible] " ( ரக்ஷத்வாமஶேஷாணாம்பூதாநாம்ப்ரபவோஹரி: । யஸ்யநாபிஸமுத்பூதபங்கஜாதபவஜ்ஜகத் ) இத்யாதி ஸ்ம்ருதியுமநுஸந்தேயம். கீழ்ச்சொன்ன ஸாமாநாதிகரண்யம்-கார்யகாரணபாவ நிபந்தநமென்கிறார் (அப்புண்டரீகமித்யாதி) "அப்புண்டரீகக்கொப்பூழ்" என்கிறவித்தால் - ப்ரஹ்மோத்பத்திசொன்னால், ருத்ரோத்பத்தியும் சொல்லவேண்டாவோவென்ன (ஒருவனுக்கித்யாதி) இவ்வர்த்தத்தை யபியுக்தோக்தியாலும் தர்ஶிப்பிக்கிறார் ( நான்முகனையித்யாதி ) நாலாந்திருவந்தாதி. படைத்தான்-ஸ்ருஷ்டித்தான். தான்முகமாய்-தானேப்ரதாநனாய். உக்தார்த்தநிகமநம் (இப்படிவேதேத்யாதி) வைதிகங்களென்றது -"நான்முகனை" இத்யாதியான வைதிகவசநங்களென்றபடி.

இப்போது சேஷத்வகாஷ்ட்டையை யநுஸந்திப்பானென்னென்ன (விஷயங்களையுமித்யாதி) இதுக்கு த்ருஷ்டாந்தம் (தாபார்த்தனித்யாதி)

"வல்லார்" என்றதுக்குபாவம் (இவருடையவித்யாதி) இரவுபகலில் வினையாவதேதென்ன (இராப்பகலித்யாதி) " கண்டு " - இவருடையதசையையநுசந்தித்து. " வினை " - விஷயப்ராவண்யம்.

குணங்கள் - கொண்டமூர்த்தியோர்மூவராய் - படைத்தளித்துக்கெடுக்குமவனாய், அப்புண்டரீகக்கொப்பூழையுடையனான புனற்பள்ளியப்பனுக்கே இத்யாரப்ய, பாடவல்லார்க்கு-கங்குலும்பகல்-வினைபோமித்யந்வய:.........................*

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

(உண்ணிலாவிய.)

[illegible] (எக)

( நிஸ்ஸங்க்யாஶ்சர்யயோகாத் ) எண்ணிலாப்பெருமாயனே - எண்ணிமுடியாத மஹாஶ்சர்யங்களை யுடையவனாகையாலும்; ( அதிமதுரதயா ) கன்னலேயமுதே - கருப்புக்கட்டிபோலேயு மம்ருதம்போலேயு மத்யந்தபோக்யனாகையாலும்; ( அதோஜகத்காரணத்வாத் ) ஆதியாகியித்யாதி - லோகங்களுக்கெல்லாம் காரணபூதனாயிருக்கையாலும்; ( ந்யக்ரோதார்ஹத்வபூம்நா ) ஓராலினீளிலைமீதுசேர்குழவி-

சேதநாசேதநங்களொன்றும் பிரியாதபடி வயிற்றிலேவைத்துக்கொண் டோராலி ன்றளிர்மேலே கண்வளர்ந்தருளுகையாலும்; (த்ரிதஶபதிதயா) விண்ணுளார்பெரு மானேயோ - * அயர்வறுமமரர்களுக்கதிபதியாகையாலும்; (வாங்மநஸ்ஸந்நிதா நாத்) பண்ணுளாயித்யாதி-ஆஶ்ரிதருடைய வாங்மநஸ்ஸுக்களிலே ஸந்நிஹிதனாயிருக்கையாலும்; (பீயூஷஸ்பர்ஶநாத்யை:) அன்று தேவரசுரர் வாங்கவித்யாதி - திருப்பாற்கடலேக்கடைந்து தேவர்களுக் கம்ருதத்தைக்கொடுத்தருளுகையாலும்; (அகிலபதிதயா) என்னம்மாவென்கண்ணா-எல்லார்க்கும் ஸ்வாமியாகையாலும்; (லோகஸம்ரக்ஷணாத்யை:) நிலமுதலினியெவ்வுலகுக்குமித்யாதி - லோகங்களையெல்லாம்ரக்ஷித்தருளுகையாலும்; ஆதிசப்தத்தாலே - அநந்தரகாதையிலே "என்பரஞ்சுடரோ வென்றுன்னையலற்றி" என்றுசொல்லுகிறபடியே, ஆஶ்ரிதர்க்குத் தன்வடிவழகைக் காட்டி யநுபவிப்பிக்கிற உபகாரகத்வம் ஸங்க்ரஹிக்கப்படுகிறது; (த்ரிதநு:) கொண்டமூர்த்தியோர்மூவராயித்யாதி - ப்ரஹ்மருத்ரசரீரகனும், ஸ்வேநரூபேணவிஷ்ணுவாயும்; ஏவம்பூதனான வெம்பெருமான், "தன்னிடத்திலே ந்யஸ்தபரரான நம்மை யிந்த்ரியங்களோடே சம்பந்திப்பித்து ஸம்ஸாரத்திலேவைத்தபோதே கைவிட நினைத்தான்" என்றுழ்வார்மிகவும் வ்யாகுலசித்தராய், இனிநா மிவனிடத்திற்பண்ணும் சாட்யாசங்கையை சஹிக்குமவனென்று - "உண்ணிலாவிய" என்கிறதஶகத்திலே யுபபாதித்தருளினுரென்கிறார் ........................................(௭௧)



# திருவாய்மொழிநூற்றந்தாதி.

உண்ணிலாவைவருடனிருத்தியிவ்வுலகி
லெண்ணிலாமாயனெனைநலிய - வெண்ணுகின்று
னென்றுநினைந்தோலமிட்டவின்புகழ்சேர்மாறனெனக்
குன்றிவிடுமேபவக்கங்குல். (௬௧)

(உண்ணிலாவைவர்) இதில் - இந்த்ரியபயாக்ரோசத்தை யருளிச்செய்த சூக்தியை யநுவதித்தருளிச்செய்கிறார். அதெங்ஙனேயென்னில்; * உலகமுண்டபெருவாயனிலே-திருவேங்கடமுடையான்றிருவடிகளிலே யார்த்திபரவசராய் பூர்ணப்ரபத்திபண்ணினவர், "தொடங்கினகார்யம் தலைக்கட்டினலல்லதுகார்யம்செய்யோம்" என்றிருக்கும் நிரங்குஶ ஸ்வதந்த்ரனான வீஶ்வரன் பழையபடியே தம்மை சம்சாரத்திலே வைக்கக்கண்டு, சம்சாரமாகிற சிறைக்கூடத்திலே புண்யபாபங்களாகிற விருவிலங்கையிட்டு இந்த்ரியங்களாகிறபடர்கையிலே "கண்பாராமல்நலியுங்கோள்" என்று காட்டிக்கொடுத்து, நம்மெளிவரவுகண்டு சிரித்துக்கொண்டு திருநாட்டிலே தானும் நித்யசூரிகளுமாக விருக்கிறுனென்றநுசந்தித்து, தம்முடைய வார்த்யதிசயத்தையும் ரக்ஷகத்வோபயோகியான வவன்குணங்களையு மவன்முகத்தைப் பார்த்துச்சொல்லாநின்றுகொண்டு, கேட்டார்க்குத் தரிப்பரிதாம்படி கூப்பிடுகிற * உண்ணிலாவியவிலர்த்தத்தை "உண்ணிலாவைவர்" இத்யாதியாலே யருளிச்செய்கிறுரென்கை.

(இவ்வுலகில் - உண்ணிலாவைவருடனிருத்தி) * இருள்தருமாஞாலமான சம்சாரத்திலே ஆந்தரசத்ருக்களாய் வர்த்திக்கிற வைந்திந்த்ரியங்களோடே கூடவிருக்கப்பண்ணி. "ஐம்புலனிவை மண்ணுளென்னைப்பெற்று லென்செய்யாமற்றுநீயும்விட்டால்" என்றத்தைப்பின்சென்றபடி. (எண்ணிலாமாயன் - இவ்வுலகில் - உண்ணிலாவைவருடனிருத்தி - எனைநலியவெண்ணுகின்றுன்) அஸங்க்யாதமான வாஶ்

சர்ய சக்தியுக்தனான சர்வேஶ்வரன், தமோபிபூதமான விவ்விபூதியிலே, அஹமர்த்தமான வாத்மாவை யறிவழியப்பண்ணுமதான வைந்திந்த்ரியங்களு மாத்மாநுபந்தியென்னலாம்படி பொருந்தியிருக்கும்படியாக்கி; துர்ப்பலனான வென்னை,அவற்றைக்கொண்டு விஷயங்களிலேதள்ளி பாதிக்கைக்குக் கார்யவிசாரம்பண்ணுகின்றான். அதாவது - "உண்ணிலாவியவைவரால் குமைதீற்றி யென்னை யுன்பாதபங்கயம் நண்ணிலாவகையே நலிவானின்னமெண்ணுகின்றாய் யெண்ணிலாப்பெருமாயனே" என்றும், "ஓரைந்திவைபெய்திராப்பகல் மோதுவித்திட்டு" என்றும், "ஐவரால்வினையேனைமோதுவித்து" என்றும், "ஓரைவரைக்காட்டி" என்றும், "ஐவரைநேர் மருங்குடைத்தாவடைத்து" என்றும், "ஓரைவர்யாவரையும் மயக்கநீவைத்த" என்றும், "சுமடுதந்தாய்" என்றும் - அவனிப்படி யைவரைக்கொண்டு செய்வித்தானென்றுஅவன்மேலே பழியிட்டபடியென்கை.(எண்ணிலாமாயனேனை நலியவெண்ணுகின்றானென்று நினைந்து) சர்வஜ்ஞனாய் சர்வசக்தியாயிருக்கிற வீஶ்வரன், அஜ்ஞனா யசக்தனாய் சரணம்புகுந்தவென்னை, நலிந்ததுபோராம லின்னம் நலியவெண்ணுகின்றானென்றெண்ணி. "நலிவானின்னமெண்ணுகின்றாயெண்ணிலாப்பெருமாயனே" என்றதைக்காட்டுகிறது. (நலியவெண்ணுகின்றானென்று நினைந்தோலமிட்ட) பரமதயாவானானவன் நிர்த்தயனைப்போலே தமிப்பிக்க யத்நம்பண்ணுகின்றானென்றெண்ணி யோலமிட்ட. "எண்ணிலாப்பெருமாயனே," "கார்முகில்வண்ணனே," "சோதிநீண்முடியாய்," "வினையேன்வினைதீர்மருந்தே," "விண்ணுளார்பெருமானேயோ," "பத்தியினுள்ளாய்பரமீசனே," "கொடியேன்பருகின்னமுதே," "என்னம்மாவென்கண்ணா," "முன்பரவைகடைந்தமுதங்கொண்ட மூர்த்தியோ" என்றிப்படி - இந்த்ரியபயத்தாலே, ரக்ஷகத்வாதிகுணங்களுக்கு வாசகமான வவன்றிருநாமங்களைச்சொல்லி; "𑌶𑌾𑌖𑌾𑌮𑍃𑌗𑌾𑌰𑌾𑌵𑌣𑌸𑌾𑌯𑌕𑌾𑌰𑍍𑌤𑌾𑌃" (ஸாகாம்ருகாராவணஸாயகார்த்தா:) என்றும், "𑌹𑌾𑌰𑌾𑌮𑌸𑌤𑍍𑌯𑌵𑍍𑌰𑌤𑌦𑍀𑌰𑍍𑌘𑌬𑌾𑌹𑍋 𑌹𑌾𑌪𑍂𑌰𑍍𑌣𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌪𑍍𑌰𑌤𑌿𑌮𑌾𑌨𑌵𑌕𑍍𑌤𑍍𑌰" (ஹாராமஸத்யவ்ரததீர்க்கபாஹோ ஹாபூர்ணசந்த்ரப்ரதிமாநவக்த்ர) என்றும், ஸாகாம்ருகங்களைப்போலேயிவரும் *கண்வாளிக்குடைந்தடைந்தும், "𑌮𑍃𑌗𑍀𑌸𑌿𑌂𑌹𑍈𑌰𑌿𑌵𑌾𑌵𑍃𑌤𑌾" (ம்ருகீஸிம்ஹைரிவாவ்ருதா) என்னும்படி ம்ருகஸாபாக்ஷியானவள் ராக்ஷஸிகள் மத்ய மஸஹ்யமாய்வர் குளிர்ந்தமுகத்திலே விழிக்கவாசைப்பட்டுக் கூப்பிட்டாப்போலவும் கூப்பிட்டபடி. (இன்புகழ்சேர்) நாட்டைய விந்த்ரியகிங்கரராய் ததலாபத்தாலேகூப்பிட, இவரிந்த்ரியபயாக்ரோஶம்பண்ணுகையாயிற்று-இவர்க்கு, இன்புகழ்சேர்ந்தது. "𑌕𑌾𑌮𑌾𑌤𑍍𑌮𑌤𑌾𑌖𑌲𑍍𑌵𑌪𑌿𑌨𑌪𑍍𑌰𑌶𑌸𑍍𑌤𑌾" (காமாத்மதாகல்வபிநப்ரஶஸ்தா) என்னக்கடவதிறே. "* பாதமகலகில்லாத தம்மையகற்று மவற்றின்நடுவே யிருத்தக்கண்டு, 'நலிவான்,' 'சுமடுதந்தாய்,' 'ஓ' என்று-சாதநபலமான ஆக்ரோசத்தோடே பழியிட்டு" என்றிறே அழகியமணவாளப்பெருமாள் நாயனாரு மருளிச்செய்தது. (இன்புகழ்சேர்மாறனென) கேட்கைக்கினிதாய் ஶ்லாக்யமான யஶஸ்ஸையுடைய வாழ்வாரொன்றநுசந்திக்க. (குன்றிவிடுமேபவக்கங்குல்) இவ்வுக்திமாத்ரத்தாலே ஸம்ஸாரமாகிற காளராத்ரிநஸித்துவிடும். இதுநிஶ்சயம். குன்றுதல் - குறைதல். ஆழ்வாரைப்போலே "அமுதங்கொண்டமூர்த்தியோ" என்றுகூப்பிடுகையன்றிக்கே. அவர்திருநாமத்தைச்சொல்ல, * விடியாவெந்நரகான ஸம்ஸாரத்துக்கு விடிவுபிறக்கும் ... (௬௧)

ஏழாம்பத்தில் - முதற்றிருவாய்மொழி முற்றிற்று.

ஆக - திருவாய்மொழி ௬௧.—பாட்டு - ௬௭௩.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஏழாம்பத்து.

## இரண்டாந்திருவாய்மொழி.

### கங்குலும் - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(கங்குலும்பகலும்) இப்படி திருவேங்கடமுடையானோடு ஸம்ஶ்லேஷிக்கப்பெறாத வ்யஸநத்தாலும் தத்ஸம்ஶ்லேஷ ப்ரதிபந்தகப்ரக்ருதி ஸம்பந்தஜநித வ்யஸநத்தாலு மத்யந்தமவஸந்நரா யவன்றிருவடிகளைப்பூண்டுகொண்டுகிடந்து கூப்பிட்டு, பின்னையும் தம்முடைய வபேக்ஷிதம்பெறாமையாலே, "இனிக்கோயிலிலே பெரியபெருமாள் திருவடிகளிலே சென்று விழுந்தாலல்ல தென்னுடைய க்லேஶம்போகாது" என்று பார்த்துப்பெரியபெருமாள் திருவடிகளிலேசென்று விழுந்து அங்குமொரு கடாக்ஷம்பெறாமையாலே * மதியெல்லா முள்கலங்கி "எனக்குச்செல்லுகிற வ்யஸநமொன்றும் தெரிகிறதில்லை, சொல்ல க்ஷமனாகிறிலேன், பிரானே, என்னை யென்செய்யநினைத்தருளினாய்" என்று, தாம்பெரிய பெருமாளை நோக்கிக் கூப்பிடுகிறபாசுரத்தை யந்யாபதேஶத்தாலே பேசுகிறார். பெரியபெருமாளோடேகலந்து பிரிந்தாளொருபிராட்டி, வ்யஸநாதிசயத்தாலே மோஹதசாபந்நையாயிருக்கிறபடியைக்கண் டிவளிலுமவஸந்நையாயிருந்த விவளுடைய திருத்தாயார், இவளுக்குச்செல்லுகிற தசை சொல்ல நிலமல்லாமையாலே, இவளுடைய தசையைப் பெரியபெருமாளுக்குக் காட்டி யிவளுடைய வ்யஸநகாரிதமான சேஷ்டிதங்களையுஞ்சொல்லி இவள்திறத் தென்செய்யநினைந்தருளினாயென்று பெரியபெருமாளைநோக்கிக் கூப்பிடுகிற பாசுரங்களாகச் சொல்லுகிறாள்... .. ....*

### பன்னீராயிரப்படி.

இரண்டாந்திருவாய்மொழியில், கீழே - விஷயேந்த்ரியாதிகளுடைய வதிப்ரவ்ருத்தியை யநுசந்தித் தார்த்தராய்க் கூப்பிட்டவர், "கன்னலேயமுதே" என்று கீழநுசந்தித்தபோக்யதையாலே யிந்தவார்த்தியோடேகூடவதிப்ராவண்யமும் நடந்து, ப்ராவண்யாநுரூபமான வநுபவம் லபியாமையாலே "அதுப்ரதிபந்தககார்யமிறே" என்றநுசந்தித்து. ப்ரதிபந்தகங்களைப்போக்கி யநுபவிப்பிக்கவேண்டும்

யோக்யதைக்கேடான; ப்ராப்யபூதனுடைய வநுபாவ்ய சிஹ்நயோகத்தையும், ரக்ஷ ணார்த்த ப்ரவ்ருத்திவிசேஷத்தையும், ரக்ஷணப்ரதிபந்தக நிவர்த்தகத்வத்தையும்,அ பரிச் சிந்நமாஹாத்ம்யத்தையும், ஆஸ்ரிதாபேக்ஷிதகரத்வத்தையும், ஆஸ்ரித ஸம்ர க்ஷணார்த்தமான வாயுதபூர்த்தியையும். சம்ரக்ஷணோபயுக்தமான சமுத்ரசாயித்வத் தையும், அவதாரதசையி லதிமாநுஷசேஷ்டிதத்தையும், ப்ரணயித்வாதிசயத்தை யும், ஈஸ்வராபிமாநிகளுக்குமந்தராத்மாவான வீஸ்வரத்வாதிசயத்தையுமநுசந்தி த்து, "இப்படிரக்ஷகனுமாய் போக்யனுமானவவன் ப்ரதிபந்தகத்தைப்போக்கியநு பவிப்பிக்கிறிலன்" என்கிறவார்த்யதிசயத்தாலே அரதிக்ருதமானவநேகவ்யாபார ங்களைப்பண்ணியவஸந்நராய், அர்ச்சாவதாரசுலபமான பெரியபெருமாளைநோக்கிப் பிறந்த வபிநிவேசாதிசயத்தாலே யப்ரக்ருதிங்கதரான ப்ரகாரத்தையநுசந்தித்து ப்பரிவரானவர்களிவருடைய தசையையவர்க்கு விண்ணப்பஞ்செய்த ப்ரகாரத்தை நாயகரானபெரியபெருமாளோடு விஸ்லிஷ்டையான நாயகியினுடைய வார்த்யதி சயத்தை யநுசந்தித்தாற்றாளாய் நற்றாயானவள் தன்னாற்றாமையின் மிகுதியாலே யவளை புத்தியாலே யபரோக்ஷித்திரங்கியுரைத்த பாசுரத்தாலே யருளிச் செய் கிறார்.........................................................................*

## ஈடு.

* உண்ணிலாவியில்- *நமஸ்ஸப்தார்த்தம் பலவகையாலும், "தொ ண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன்" என்று - ததிய சேஷத்வ பர்யந்தமாக வுள்ளபடி யநுசந்தித்தாராயற்றது. * உலகமுண் டபெருவாயனில் – பெரிய பிராட்டியார் முன்னிலையாகத் திருவேங்கட முடையான் றிருவடிகளிலே விழுந்து சரணம்புக்கார் ; விஷயங்களு மிந் த்ரியங்களும் நடையாடுகிற ஸம்ஸாரத்திலே வைத்தபோதே தன்பக்கலி னின்றும் நம்மையகற்றப் பார்த்தானாகாதேயென்றுகூப்பிட்டார்- * உண் ணிலாவியில். வ்யபிசாரமுமின்றிக்கே வ்யவதாநமுமின்றிக்கே யிருக்கிற ஸாதநத்தைப்பற்றினபின்பு மதுபலியாவிட்டால் அவன்றன்னையே யின் னாதாய்க்கொண்டு கூப்பிடுமத்தனையிறே. இப்படி கண்ணழிவற்றது பின் னையும் பலியாதொழிவானென்னென்னில்; அதுபலியாநிற்க, க்ரமப்ராப் திபொறுக்கமாட்டாமல்படுகிறார். ஈஸ்வரனுடையசர்வஜ்ஞத்வத்துக்கும வ்வருகான விவருடையமார்த்தவவேஷமிருக்கிறபடி. பிராட்டியைப்போ லே "தத்தஸ்யஸத்ருஸம்பவேத்" (தத்தஸ்யஸத்ருஸம்பவேத்) என்றிரு க்கமாட்டார்,ருசியளவில்லாமையாலே. சம்சாரத்தினுடையதோஷத்தை யுமநுசந்தித்து எம்பெருமானுடைய குணோத்கர்ஷத்தையுமநுசந்தித்தா லாறியிருக்கப்போகாதிறே. பகவத்விஷயமறியாத சம்சாரிகளிவர்க்குக்கூ ட்டல்ல, பகவதலாபமறியவேண்டாத நித்யசூரிகளு மிவர்க்குக்கூட்டன் று, அலாபத்தில் நோவுபடுகைக் கிவரொருவருமேயுள்ளார். பட்டரித்தி ருவாய்மொழி யருளிச்செய்யும்போதெல்லாம் "ஆழ்வார்க்கோடுகிற த சையறியாதே யவருடைய பாவவ்ருத்தியு மின்றிக்கே யிருக்கிற நாமென் சொல்லுகிறோம்" என்று திருமுடியிலே கையை வைத்துக்கொண்டிரு ப்பர். அவனும், " இவர் நமக்கே பரமென்னுமிட மறிவித்தாராகில், நா

ருமிவர்கார்யம் செய்யக்கடவதாக வற்றபின்பு செய்து தலைக்கட்டிற்றன்றே; இவரங்குப்போ யநுபவிக்கு மநுபவ மிங்கேயிருந்தே குறைவற வநுபவியாநின்றாராகில், 'விரோதிபோயிற்றில்லையே' என்று இவர்பண்ணுகிற வதிசங்கையும் போக்குகிறோம்; நாலுநாள் முற்பாடுபிற்பாடன்றே, இதில் கார்யமென்" என்றிருந்தான். பிற்பாடு பொறுக்கமாட்டாதவிவரை வைக்கப்போருமோவென்னில்; ப்ரஜைகளைப் பட்டினியிட்டு வைத்தும் வந்த விருந்தினரைப் பேணுவாரைப்போலே, "இவர்தாம் நாலுநாள் நோவுபட்டாராகில் படுகிறார், இவருடைய ப்ரபந்தத்தைக் கொண்டு நாட்டை வாழ்விப்போம்" என்றிருந்தான். இவரொருமுஹூர்த்தமிருக்கையாவது, தன்னாலும் திருத்தவொண்ணாத சம்சாரம் திருந்தி வாழும்படியாயிருந்தது என்றதுக்காக வைத்தானவன். இவர், "நம்படியறிந்தானாகில், தனக்கு சக்தியில் குறையில்லையாகில், இதுபொருந்தாத நம்மையிட்டுக் காரியங்கொள்ளவேணுமோ; இவ்விருப்பில் பொருந்துவா ரொருவரைத் திருத்திக் காரியங்கொள்ளத் தட்டென்" என்றிருந்தார். அவனும் "இது பொருந்தாதாரையேகொண்டு காரியங் கொள்ளவேணும்" என்றிறே யிருக்கிறது. தேசிகரையிட்டுக் காரியங்கொள்ளவேணுமே. பண்ணின ப்ரபத்தி சடக்கெனப்பலியாதொழிந்தது, ப்ரஹ்மாஸ்த்ரம்வாய் மடிந்தமாத்ரமிறே. இனித்தானவனும்; ஸ்ரீபரதாழ்வான் மாதுலகுலத்தில் நின்றும் வந்து தாயாரை நமஸ்கரிக்க, அவள் "ராஜன்" என்ற வெம்மை பொறுக்கமாட்டாமைப் பெருமாள் திருவடிகளிலே தன்னாற்றாமையோடே விழுந்து சரணம்புக்கு, "தேவர் மீண்டருளவேணும்" என்ன; பெருமாளும், மீளாமைக்கு ஹேதுவாயிருப்பன வநேகத்தையிவனுக்குச் சொல்லி, "பிள்ளாய் நீ நிர்ப்பந்திக்கக்கடவையல்லை, உன்னை ஸ்வதந்த்ரனாக்கி வார்த்தைசொன்னா ரெதிரே உன் ஸ்வரூபாநுரூபமான பாரதந்த்ர்யத்தைப்பெற்று நீபோ" என்று சொன்னாப்போலே; இவரபேக்ஷித்த தொழிய வேறேதானு மொன்றைக் கொடுத்துப் பொகட்டுப் போகவல்லானொரு ஸ்வதந்த்ரனிறே, ஆகையாலே தான் நினைத்தபோது கார்யம் செய்யக்கடவனுமா யிருக்குமிறே. சர்வஜ்ஞனானவ னிவர்க்கோடுகிறதசையறிந்து, தன்னுடைய சர்வசக்தித்வங்கொண் டிவர்க்கொரு பரிஹாரம்பண்ணவொண்ணாதபடி யிவருடைய தசாவிசேஷமிருக்கிறபடி. இவர்தாமும் "விண்ணுளார்பெருமானேயோ" என்றும் "முன்பரவைகடைந்தமுதங்கொண்டமூர்த்தியோ" என்றும், "பலமுதல்படைத்தாய்" என்றுஞ் சொல்லுகிறபடியே–பரத்வம், அவதாரம், ஜகத்காரணத்வம், இவற்றைச் சொல்லியிறே கூப்பிட்டது; அதில், பரத்வம் லோகாந்தரமாகையாலே, "கிட்டப்பெற்றிலோம்" என்றாறியிருக்கலாம்; அவதாரம் காலாந்தரமாகையாலே, "அக்காலத்திலுதவப்பெற்றிலோம்" என்றாறியிருக்கலாம். ஜகத்காரணத்வம் தானறிந்துசெய்யுமதாகையாலே, "நம்மால்செய்யலாவதில்லை" என்றுகொண்டாறி யிருக்கலாம்; அவ்விழவுகளெல்லாந்

திரும்படி சதாசந்நிதிபண்ணிக்கொண்டுகோயிலிலே கண்வளர்ந்தருளுகிற பெரியபெருமாள் திருவடிகளிலே விழுந்து தம்மபேக்ஷிதம்பெறுவிட்டால் தரிக்கவொண்ணுதிறே. விஷயமஸந்நிஹிதமாதல், ஜ்ஞானத்தில்கொத்தையுண்டாதல் செய்யிலிறேதரித்திருக்கலாவது. நீர்மையில் கண்ணழிவுண்டாயாதல், மேன்மையில் கண்ணழிவுண்டாயாத விழக்கிருரன்றே. இப்படி யிருக்கச்செய்தேயு மவர்திருவடிகளிலே தமக்குநினைத்த பரிமாற்றம்பெருமையாலே தாமானதன்மைபோய் ஒருபிராட்டிதசையை ப்ராப்தராய், அவ்வளவிலும் தமக்கோடுகிறதசையைத் தாமறிந்து கூப்பிடப் பெருதே, திருத்தாயார் கூப்பிடும்படியாய்விழுந்தது. சம்ஶ்லேஷ விஶ்லேஷங்களில் பிறக்கும் லாபாலாபங்களாலே தாம்பிராட்டிமார்தசையையுடையராகிருர், திருத்தாயாரான ஸ்வபாவம் விளைந்தபடி எங்ஙனேயென்னில் ; கிண்ணகம்பெருகியோடாநின்ற விருகரையுமாறுகளாகப் பெருகிப்போகாநிற்கச்செய்தேயும் கடலிற்புகுமம்ஸம் குறையாமல் போய்ப்புகுமாபோலே யாயிற்றிவருடைய “ அதனிற்பெரிய வென்னவா ” என்கிற வபிநிவேசமிருக்கிறபடி; ஆகையாலே யிவர்க்கெல்லார் பேச்சும் பேசக்குறையில்லை. இப்பெண்பிள்ளை மோஹித்துக்கிடக்க, இவளைக்கண்டுறவுமுறையாரடங்கலும் மோஹித்துக்கிடக்க ; பெருமாளிலு மிளையபெருமாளுக்குத் தளர்த்தியுண்டா யிருக்கச்செய்தே பெருமாளுடைய ரக்ஷணத்துக்காக விளையபெருமாளுணர்ந்திருக்குமாபோலே, திருத்தாயாருமிவளுடைய ரக்ஷணத்துக்காக வுணர்ந்திருந்து ; ஏதேனும்தசையிலும் தங்கள்காரியம் தாங்கள் செய்யக்கடவதன்றிக்கே யிவன்காலிலேவிழுந்து தங்கள் காரியம் தலைக்கட்டுங்குடியாகையாலே பெரியபெருமாள் திருவடிகளிலே யிவளையிட்டு வைததுக்கொண்டிருந்து; “ இவளழுவது தொழுவது, மோஹிப்பது, ப்ரலாபிப்பது, அடைவுகெடப் பேசுவது, நெடுமூச்செறிவது, அதுதானும் மாட்டாதொழிவது, ஸ்தப்தையாயிருப்பது, இப்படியரதி விஞ்சிச்செல்லாநின்றது; இவள் திறத்திலே நீரொன் செய்யக்கடவீர் ” என்று கூப்பீடாய்ச் செல்லுகிறது. எல்லாவளவிலுமவனையே பரிஹாரங்கேட்கும் குடியரகாதே, ஆண்டாளொருநாள் ஆழ்வானுக்கு, “ பிள்ளைகள் விவாஹப்ராப்தரானுர்கள், இவ்விடையாட்டமொன்றுமாராயாதிருக்கிறதென் ” என்ன, “ பகவத்குடும்பத்துக்கென்னை யின்றிருந்து கரையச்சொல்லுகிருயோ; நாளைநான்வாசித்துச்சமையக்கொள்ள ; அங்கேவரக்காட்டு ” என்ன, பட்டரையும் சீராமப்பிள்ளையையும் கொடுத்துப்போகவிட, வாசித்துச்சமைந்து பெருமாள்திருவடிகளிலே நிற்க, “ ஒன்றுசொல்லுவாய்போலே யிருந்தாயீ ” என்றுதிருவுள்ளமாக, “‘இவர்கள் விவாஹப்ராப்தரானுர்கள், என்னுநின்றுர்கள் ’’ என்று விண்ணப்பஞ்செய்ய, “ எல்லாம்செய்கிறேம் ” என்றுதிருவுள்ளமானுர் ; பிற்றைநாளே மன்னியைக்கொண்டுவந்து கொடுத்தநர்கள். அகளங்கப்ரஹ்மராயர் அடையவளைந்தான் செய்யாநிற்கச்செய்தே

மதிள் போக்குகைக்காகவிளையாழ்வானகத்தை வாங்கப்புக, பட்டரத்தை க்கேட்டருளி, "வாரீர்பிள்ளாய், நீர்செய்கிறமதிள் பெருமாளுக்கு ரக்ஷகமென்றிராதேகொள்ளீர்; இங்குக்கிடக்கிற நாலுகுடியுங்காணும் பெருமாளுக்குரக்ஷை; ஆனபின்பு; நீர் செய்கிறவை யெல்லாமழகிது, 'இவை யெல்லாம் நாம் செய்கிறோம்' என்றிராதே, 'பெருமாள்செய்விக்கிறார்' என்றிரீர், உமக்குநல்வழிபோகவுடலாங்காணும்'' என்றருளிச்செய்தார். இத்திருத்தாயாரும் சர்வபரங்களையு மவர்தலையிலே பொகட்டுப் பெண் பிள்ளையைத் திருமணற்றூணுக்குள்ளே பொகட்டு, அவருடைய வசரண்ய சரண்யத்வாதிகுணங்களை விண்ணப்பஞ்செய்யா நின்றுகொண்டு ; ஒரு காலநியதியாதல், ஒருதேசநியதியாதல், அதிகாரிநியதியாதலின்றிக்கே ச ர்வசமாஶ்ரயணீயரா யிருக்கிறபடியை யநுசந்தித்து, தன் பெண்பிள்ளை யினுடைய தசையைத் திருவுள்ளத்திலே படுத்துகிறு ளித்திருவாய்மொ ழியாலே. ........................................................................*

## ஜீயர் அரும்பதம்.

கங்குலும்பகலும்ப்ரவேஶ, (உண்ணிலாவியில் நமஶ்ஶப்தார்த்தம்) என்கிறதுக்கிரண்டுசங்கதி. முந்தினது - * உலகமுண்ட பெருவாயனிலே - த்வயத்தில் பூர்வகண்டார்த்தத்தை யருளிச்செய்தார்; * உண்ணிலாவியில் - உத்தரகண்டத்தில் * நமஶ்ஶப்தார்த்தத்தை யருளிச்செய்தார்; இதில் - * ஸ்ரீமத்பதநாராயணபதார்த்தத்தை யருளிச்செய்கிறார். "என்திருமகள்சேர்மார்பன்'' என்றதிலே - * ஸ்ரீமத்பதார்த்தம் சூசிதம். "அக்நிஹோத்ரம்ஜுஹோதி-யவாகூம்பசதி" (அக்நிஹோத்ரம்ஜுஹோதி - யவாகூம்பசதி) என்று - பாடக்ரமாதர்த்தக்ரமஸ்யபலீயஸ்த்வாத், விரோதிநிவ்ருத்த்யநந்தரம் கைங்கர்யம்ஸித்திக்கவேண்டுகையாலே, முந்தற, * உண்ணிலாவியிலே - * நமஶ்ஶப்தார்த்தம் சொல்லிற்றென்று. இப்பக்ஷத்தில், உத்தரவாக்யஸ்த்தநமஸ்ஸில் ததீயசேஷத்வம் சொல்லப்படாமையாலே, அத்தை-இங்கே, "தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன்" என்றுசொல்லும் கிஞ்சிதஸ்வாரஸ்யமுண்டு. ஆகையாலே, * உலகமுண்டபெருவாயனிலே, "புகலொன்றில்லாவடியேன்'' என்று - ப்ரணவார்த்தம் சொல்லிற்று; * உண்ணிலாவியில்-திருமந்த்ரத்தில் * நமஶ்ஶப்தார்த்தம் சொல்லிற்று; * கங்குலும்பகலிலே-திருமந்த்ரத்தில் * நாராயணபதார்த்தம் சொல்லுகிறதென்று கொள்ளவேணுமென் றிரண்டாம்ஸங்கதி. * கங்குலும்பகலில் - திருமந்த்ரத்தில் * நாராயணசப்தார்த்தம்சொல்லுகிறபடி யெங்ஙனேயென்னில்; * நாராயணபதத்தில் சதுர்த்யர்த்தம்-கைங்கர்யமாய், அதுதா னநுபவஜநிதப்ரீதிகாரிதமாய், அவ்வநுபவந்தான் ப்ராவண்யகார்யமாய், அந்தப்ராவண்யத்தை யிதிலேசொல்லுகையாலே.

இத்திருவாய்மொழிக்கு ஸங்கதியருளிச்செய்வதாக, கீழிரண்டுதிருவாய்மொழிகளில் ப்ரமேயங்களை யநுவதிக்கிறார் ( உலகமுண்டவித்யாதிவாக்யத்வயத்தாலே ) ஸாதநத்தை யநுஷ்ட்டித்தவர்கள் பலசித்திபர்யந்தமாறி யிருக்குமாபோலே யாறியிராமல் கூப்பிடுவானென்னென்ன (வ்யபிசாரமுமித்யாதி) வ்யபிசாரம்-பலாவ்யாப்தி. வ்யவதாநம் - காலவிளம்பம். சித்தஸாதநமாகையாலே யிரண்டுமில்லையென்றபடி. இப்படியிருக்கிற ப்ரபத்தி விபலமாவானென்னென்கிற சங்கை

யை யநுவதித்துப்பரிஹரிக்கிறார் (இப்படி யித்யாதிவாக்யத்வயத்தாலே) பொறுக்க மாட்டாமைக்கு ஹேதுவேதென்ன (ஈஶ்வரனுடையவித்யாதி)

ஆனாலும், பிராட்டியைப்போலே தரித்திருக்கவொண்ணாதோவென்ன(பிராட்டியையித்யாதி) ருசியினளவில்லாமையை ஹேதுபூர்வகமாக விவரிக்கிறார் ( சம்சாரத்தினுடையவித்யாதி ) இப்படி யலாபத்தில் நோவுபட்டதுக் கிவர்க்கொப்புண்டோவென்ன ( பகவத்விஷயமித்யாதிவாக்யத்ரயம்) இப்படியிருக்கிற விவருடைய வார்த்தியை ப்ரகாசிப்பிக்கிற வித்திருவாய்மொழிக்கர்த்தம், கனாமேலேநிற்கிற வஸ்மதாதிகள் சொன்னால்விரஸமாயிருக்குமென்னுமத்தை யாப்தஸம்வாதத்தாலே தர்ஶிப்பிக்கிறார் (பட்டரித்யாதி)

ஈஶ்வரன்று னிவரைவைத்ததுக்குக் கருத்தென்னென்ன (அவனுமித்யாதி) இவரிருந்தால் ஜகத்துத்திருந்துமோவென்ன (இவரொருமுஹூர்த்தமித்யாதி) அத்தையறிந்த விவர் த்வரிக்கிறதென்னென்ன ( இவர்நம்படியித்யாதி ) இவ்விருப்பில் பொருந்துவார் - திருமழிசைப்பிரான்போல்வார். அவனுக்கு மிதில் பொருந்துவாரையிட்டுக் காரியங்கொள்ள வொண்ணாதோ வென்ன ( அவனுமித்யாதி ) அதுக்கு ஹேதுவேதென்ன ( தேசிகரையித்யாதி ) தேசிகரொன்கிறது - சம்சாரதோஷமும் பகவத்வைலக்ஷண்யமும் நன்றாக வறிந்தவர்களென்றபடி. அதாவது - சம்சாரத்தில் பொருந்தியிருக்கு மவர்களைத் திருத்தும்போது, சம்சாரம் துஸ்ஸஹமாம்படியான ப்ரேமமுடையாரைக்கொண்டு கார்யங்கொள்ளவேணும்; இப்படியன்றிக்கே, இதில் பொருந்துவாரைக்கொண்டு கார்யங்கொண்டால், "தனக்கொன்றும்பிறர்க்கொன்றுமா யிவன்சொல்லுகிறபடி பாரீர்?" என்று அவர்கள் திருந்தார்கள் என்று அவற்குக்கருத்தென்றபடி, " தேசிகரைக்கொண்டு காரியங்கொள்ளவேணும் " என்றிருக்கிறதறிந்திருக்க விவர்கூப்பிடுவானென்னென்ன (பண்ணினவித்யாதி) "பிற்பாடு பொறுக்கமாட்டாத" இத்யாதி வாக்யோக்த சங்கைக்குப்பரிஹாராந்தரம் (இனித்தானவனுமித்யாதி ) அதாவது - ஸ்ரீபரதாழ்வானைப்போலே ஸ்வாதந்த்ர்யத்தாலே வைத்தானென்றபடி.. கீழே " ஈஶ்வரனுடைய ஸர்வஜ்ஞத்வத்துக்கும் " இத்யாதி வாக்யவிவரணம் (சர்வஜ்ஞனவனித்யாதி)

இவ்வளவும் - உண்ணிலாவியில் ப்ரமேயத்தையநுவதித்து, இதுக்கு- * கங்குலும்பகலோடே சங்கதி ( இவர்தாமித்யாதி ) ஜகத்காரணமென்றது - வ்யூஹத்தை. இவர் * அசிதவிசேஷிதராய்க்கிடக்க வொருகாலவிசேஷத்திலே தானறிந்து செய்யுமதாகையாலே யென்றபடி. இங்கபேக்ஷிதங்கிடையாவிட்டால் தரிக்கவொண்ணாமைக்கு ஹேதுவையருளிச்செய்கிறார் (விஷயமித்யாதி) ஜ்ஞானத்திலென்றது-ஈஶ்வரஜ்ஞான ஶக்த்யாதிகளிலென்றபடி. ஏதத்விவரணம் (நீர்மையிலித்யாதி) மேன்மையாவது - ஜ்ஞானசக்த்யாதிபூர்த்தி. இப்படி மேன்மை நீர்மைகளிரண்டும் குறைவற்றிருக்கிறவிடத்திலு மபேக்ஷிதங்கிடையாமையாலே வந்தவாற்றாமையின்கனத்தை யருளிச்செய்கிறார் (இப்படியிருக்கச்செய்தேயுமித்யாதி)

பிராட்டிதசையும் திருத்தாயார்தசையு மேககாலத்திலேயுண்டாகி லிவருடைய ப்ராவண்யம் ஸங்குசிதமாகாதோ வென்கிறசங்கையை யநுவதித்துப் பரிஹரிக்கிறார் (சம்ஶ்லேஷேத்யாதிவாக்யத்வயத்தாலே) (திருத்தாயாரான ஸ்வபாவம் விளைந்தபடியெங்ஙனே) என்றவநந்தரம், விளைந்ததாகி லிவருடைய வபிநிவேஶத்துக்குக் குறைவுவாராதோ (என்னில்) என்றத்யாஹார்யம், மேல் பரிஹாராநுகுணமாக. (அபிநிவேசம்) குறையாது (இருக்கிறபடி) என்று கூட்டுவது. ஆக, பரிஹாரம் - தாயாராயும் சொல்லலாம், அபிநிவேசத்துக்குக் குறைத்தலில்லையென்றபடி.

இத்திருவாய்மொழியில் நாயகியினுடைய வார்த்திப்ரகாரங்களை விஸ்தரேணவருளிச்செய்கிறார் (இப்பெண்பிள்ளையித்யாதி) "மயங்கும்" என்றத்தைப்பற்ற (மோஹித்தென்றது) பந்துக்களடங்கலும் மோஹித்தார்களாகில் திருத்தாயாருணர்ந்திருக்கும்படி யெங்ஙனேயென்ன (பெருமாளிலுமித்யாதி) "அழுந்தொழும்" என்றத்தைப்பற்ற (அழுவதித்யாதி) " வெவ்வுயிர்க்கும் " என்றத்தைப்பற்ற (நெடுமூச்செறிவதென்றது) அவனைக்கேட்கிறதென், தாங்களே பரிஹரித்துக்கொள்ளவொண்ணாதோவென்ன (எல்லாவளவிலுமித்யாதி) இதுக்கு சம்வாதத்வயம் (ஆண்டாளித்யாதி) (பெருமாள் செய்விக்கிறார்) என்றவிடமபேக்ஷிதம். " பற்றிலார்பற்றநின்றானே " என்றத்தைப்பற்ற ( அஶரண்யஶரண்யத்வாதியென்றது )...........*

---

# இரண்டாந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

கங்குலும்பகலுங்கண்டுயிலறியாள்கண்ணநீர்கைகளாலிறைக்குஞ்
சங்குசக்கரங்களென்றுகைகூப்புந்தாமரைக்கண்ணென்றேதளரு
மெங்ஙனேதரிக்கேனுன்னைவிட்டென்னுமிருநிலங்கைதுழாவிருக்குஞ்
செங்கயல்பாய்நீர்த்திருவரங்கத்தாயிவடிறத்தென்செய்கின்றாயே.

### ஆறாயிரப்படி.

உன்னைக் காணப்பெறாத நிரவதிக வ்யஸநத்தாலே திவாராத்ர விபாகமின்றியே யொருகாலும் நித்ரையான தெங்ஙனே யிருக்குமென் றறியாள்.

உன்னைக்காண்கைக்காகப் பெருத்தாகவூறுகிற கண்ணநீராகிறகடலை, தன்னுடைய வபிநிவேசத்தாலும் மௌக்த்யத்தாலும் தன்சிறுக்கைகளாலே யிறையாநிற்கும். " கூராராழிவெண்சங்கேந்திக்கொடியேன்பால்வாராய் " என்று சொல்லத்தொடங்கி முடியச்சொல்ல க்ஷமையல்லாமே, அவ்விரப்புத் தோன்றும்படி கைகளாலே தொழாநிற்கும். தாமரைக்கண்களால் நோக்காய் யென்றுசொல்ல வுத்யோகித்தமாத்ரத்திலே தளரும். என்னையுங்கூடத் தோற்பித் தடிமையாக்கின கண்களையுடைய வுன்னைப்பிரிந்து, தீக்ஷ்ணமான விஷத்தைப் பாநம்பண்ணினாப்போலே யொருபடியாலும் தரிக்கமாட்டேனென்று சொல்லாநிற்கும். தன்னுடையஸந்தாபத்தைப் பொறுக்கமாட்டாமே, மஹீதலத்திலே விவேஷ்டநம் பண்ணாநிற்கும். நிகில ஜந்துஜாதசரண்யனே, கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற திவளுக்காகவன்றோ, இவளுடைய தசையிருக்கிறபடி பார்த்தருளாய்பிரானே, இவள்திறத் தென்செய்ய நினைத்தருளினாயென்கிறாள். ......*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், அநுபாவ்யமான வசாதாரண சிஹ்நங்களைச் சொல்லி யிவளார்த்தையாகாநின்றாள், இவளளவி லென்செய்ய நினைத்திருக்கிறீரென்கிறாள்.

கங்குலும் - நாட்டாருறங்கும் கங்குலும். பகலும் - ப்ரணயிநிகளுறங்கும்பகலும். கண் - கண்கள். துயில் - துயிலவேணுமென்று. அறியாள் - அறிவும் நடையாடுகிறிலள். இவள் கண்வட்டத்திலுறக்கம்வாராதபடி சோகாஸ்ருவெள்ளங்கொள்ளுகையாலே, கடலைக் கையிட்டிறைப்பாளைப்போலே, கண்ணநீர்- கண்ணநீரை மாற்றுவதாக, கைகளால் - கைகளாலே. இறைக்கும் - இறையாநிற்கும். இக்கண்ணநீர்க்கிரங்கி வருமென்று நினைத்து அபேக்ஷிக்கிறாக * கூராராழிவெண்சங்கேந்திவரக்கூடுமாகையாலே, சங்குசக்கரங்கள் - சங்குசக்கரங்கள். என்று - என்று அவற்றைச்சொல்லி. கைகூப்பும் - வந்தால்பண்ணு மஞ்சலியைப்பண்ணுநிற்கும். வந்தால் குளிரநோக்கும் கண்களைநினைத்து, தாமரை - தாமரைபோன்ற. கண்-கண். என்றே - என்று சொல்லி, அது பெருமையாலே. தளரும் - தளராநிற்கும். உன்னை - இந்த வாயுதசோபையையு மவயவசோபையையுமுடையவுன்னை. விட்டு- விட்டு. எங்ஙனே - எங்ஙனே. தரிக்கேன் - தரிக்கக்கடவேன். என்னும் - என்னும். தன்னார்த்யதிசயத்தாலே, இருநிலம் - பூமிப்பரப்படங்க. அவன் காலாலே துழாவினவோபாதி, தான், கை - கையாலே. துழா - துழாவி. இருக்கும் - அதுக்கும் சக்தையன்றியே நிர்வ்யாபாரையா யிருக்கும். செம் - இளமையாலே சிவந்தபுகரையுடைத்தான. கயல் - கயலானது. பாய் - உகளித்துப்பாய்கிற. நீர் - நீரையுடைத்தான. திருவரங்கத்தாய் - கோயிலிலே சந்நிஹிதனானவனே. இவள்திறத்து - இப்படி அதிசயிதமான விகாரத்தையுடையளாய், அந்த நீரைப்பிரிந்த கயல்போலே உன்னைப்பிரிந்து தரியாத விவளளவிலே. என் - எது. செய்கின்றாய் - செய்கிறாய்.

இவ்வார்த்தியைத் தீர்க்க நினைக்கிறாயோ, அதிசயிப்பிக்கநினைக்கிறாயோ வென்று கருத்து.........................................................................*

## ஈடு - முதற்பாட்டு.

இப்பிராட்டியுடைய, பேச்சுக்கு நிலமன்றிக்கே யிருக்கிற தசையைப் பெரியபெருமாளுக் கறிவித்து, இவள்திறத்துச் செய்தருளநினைத்திருக்கிற தென்னென்கிறாள்.

( கங்குலும்பகலும்கண்டுயிலறியாள் ) இவளை யெப்போது கண்டுயிலப்பண்ண விருக்கிறீர். விரஹிணிகளுக் கோடுகிற வ்யஸநம் மாற்றுகைக்காக "இரா, பகல்" என்றொருவரம்புகட்டின வித்தனையிறே, அதிவளுக்குக் காரியமாகிறதில்லை. ராத்ரியில் விஷயலாபத்தாலேபோதுபோக்கவும், பகலிந்த்ரியங்களானவை விஷயாந்தரங்களிலே கொடுபுக்குமூட்டி "அப்போதாயிற்று, இப்போதாயிற்று" என்று காலக்ஷேபத்துக் குடலாயிருக்குமிறே. "எங்ஙனேதரிக்கேனுன்னைவிட்டு" என்று சொல்லுகையாலே, இவளுக் கங்ஙனன்றென்றுசொல்லித் தரிக்கவொண்ணாதே. தனக்காஶ்வாசஹேதுவாகப் பண்ணின திவாராத்ரவிபாகமுமறிகிறிலள். பகலுமிரவோடொக்க வுறக்கங்கண்டதிறே. ( பகலும் ) ( நாட்டாரிரவுஉறங்குவர்கள், ப்ரணயிநி ) யௌவநங் குடிபுகுந்தால் இராமாறு நாயகனுக் கலைகொடுக்கையாலே உறக்கமில்லை, அவ்விழவுக்கு மெற்றி உறங்குவது பகலிறே, அதுவும் பெறுகிறதில்லை. "அநித்ரஸ்ஸததம் ராம:" ( அநித்ரஸ்ஸததம்ராமஃ ) என்றுகொண்டு தன்படியாக்கினான். "ஸுப்தம் ஸாஸ்மி"

ஹெவதி" ( பரமம்ஸாம்யமுபைதி ) என்கிறபடியே தம்மோடு சாம்யாபத்தி கொடுத்தபடி. கண்டுயில்கொள்ளாளென்றதே, அறியாளென்கிறது - ஸம்ப்லேஷத்திலவனுறங்கவொட்டான், விப்லேஷத்தில் விரஹவ்யஸநமுறங்கவொட்டாது, ஆகையாலே இவளுக்கிரண்டுபடியாலுமுறக்கமில்லாமையாலே. இவள்கலந்தவன்றுறங்கினாலும், இவளிப்போதுபடுகிற வ்யஸநத்தை யநுபவித்த திருத்தாயார்க் கதொன்றாய்த்தோற்றாதே!. இவ்வ்யஸநத்துக்குப் பூர்வரங்கமாய் வந்த தொன்றாகையாலே அத்தையொன்றாக நினைத்திருக்கிறிலள். என்றும் சிறைக்கூடத்திலே பிறந்து வளர்ந்தாரைப்போலே, பிரிந்தநாளையிழவேகாணு மிவள்நெஞ்சிலே பட்டுக்கிடக்கிறது. ( அறியாள் ) ஒக்கவிருக்கச்செய்தே "கைங்கர்யவிரோதி" என்று கைவிட்டவர்களிற்காட்டி லிவளுக்குண்டான வாசியிருக்கிறபடி. முன்பில்லையாகிலு மிஜ்ஜந்மத்தில் மெய்ப்பாடுபெற்றிவிடவேண்டிற்று.

( கண்ணநீர்கைகளாலிறைக்கும் ) இவளுக் கிவ்வறியாமை யெங்குமொக்க வநுவர்த்திக்கப் பெற்றதில்லை!. "இவ்வாற்றாமையில் சர்வதா நாயகன் வாராதிரான்" என்று பார்த்து, "அப்போதாகப் பகை கொண்டாடவொண்ணாது, ப்ரதம பரிஸ்பந்தந் தொடங்கிக் காணவேணும்" என்று கண்ணநீரை மாற்றப் பாராநின்றாள். இதென்ன ஸாஹஸந்தான்!. இது தன்னாலியலுமென்று தொடங்கினாளே. * கடல்கொண்ட கண்ணீரிறே. கோகுளிலையைக்கொண்டு கடலைவற்ற விறைப்பதாகநினைப்பாளே!. தன்கையாலே கண்ணநீரை யிறைக்கப் பாராநின்றாள். "கிமர்த்தம் தவநேத்ராப்யாம்" ( கிமர்த்தம் தவநேத்ராப்யாம் ) என்னும்படிகாணு மிருக்கிறது.

( சங்கு ) கண்ணநீரை மாற்றினால், கண்ணாலேகாண வந்துதோற்றும்படியை நினையாநின்றாள். "தவளவொண்சங்குசக்கரம்" என்று-திவ்யாயுதங்களோடே காணவிறே யிவள்தானாசைப்பட்டிருப்பது. உகவாத கம்ஸாதிகளுக்கிறே த்விபுஜனாகவேண்டுவது. "தேநைவ ரூபேண சதுர்ப்புஜேந" ( தேநைவரூபேண சதுர்ப்புஜேந ) என்றானிறே காணவாசைப்பட்ட வர்ஜுநன். "கூராராழிவெண்சங்கேந்தி-வாராய்" என்னக் கணிசித்து, பலஹாநியாலே தலைக்கட்டமாட்டாதே, விடாயன் கையைமடுத்துத் தண்ணீரை வேண்டுமாபோலே, குறையுமஞ்சலியாலே தலைக்கட்டாநின்றாள்.

( தாமரைக்கண்ணென்றேதளரும் ) அவ்வாழ்வார்க ளளவும்வந்தலையெறிகிற கண்ணழகைச் சொல்லப்புக்கு, நடுவேதளராநின்றாள். "உன்றாமரைக்கண்களால் நோக்காய்" என்று சொல்லப்புக்கு, நடுவே தளராநின்றாள். "ராமம் ரக்தாந்தநயநமபஶ்யந்தீ ஸுதுஃகிதா" ( ராமம்ரக்தாந்தநயந மபஶ்யந்தீஸுதுஃகிதா ) என்னுமாபோலே.

தளருகிறதென், வேறொன்றாலே போதுபோக்கினாலோவென்பர்களே (எங்ஙனேதரிக்கேனுன்னைவிட்டென்னும்) பரவ்யூஹவிபவங்களிலே யாசைப்பட்டேயாறியிருக்கிறேனே. (உன்னைவிட்டு - எங்ஙனே தரிக்கேன் - என்னும்) உறக்கத்தாலே, சூது சதுரங்கத்தாலே போது போக்கலாம் விஷயத்திலேயோவகப்பட்டதென்னும். உம்முடையவைலக்ஷண்யம் நீரறிந்தால், "நம்மைப்பிரிந்தார் தரிக்கமாட்டார்கள்" என்னுமிடம் நீரே யறியவேண்டாவோ. (உன்னைவிட்டு - எங்ஙனேதரிக்கேன் - என்னும்) உன்னைக் கண்ணுடிப்புறத்திலும் கண்டறியாயோ. கண்டாயாகில் பிரியாய், பிரிந்தாயாகி லிவள்பட்டது படுவுதி.

"எங்ஙனேதரிக்கேன்" என்ற வநந்தரம் வரக்காணுமையாலே (இருநிலம்கைதுழாவிருக்கும்) (கண்ணநீர்ப்ரவஹிக்கச்சேறாகையால்) மஹாப்ருதிவி ஒரு பீங்கானுக்குட்பட்ட சந்தநபங்கம்பட்டது படாநின்றது.

(செங்கயல்) அவ்வூரில் வர்த்திக்கிற திர்யக்குக்களின்ஸ்வபாவமிவளுக்கரிதாவதே. அவை தந்நிறம்பெற்று வர்த்தியா நின்றன, இவள் நிறமிழந்தாள். நாரத்தைப்பற்றினது களித்து வர்த்தியாநின்றது, நாராயணனைப்பற்றின விவள் துஃகிப்பதே?. (செங்கயல்) அழகியகயல். அக்கயல் ஜலத்தைப்பிரிந்து தரிக்கிலன்றோ விவளுன்னைவிட்டுதரிக்கவல்லது. "ஜலாந்மத்ஸ்யாவிவோத்ருதௌ" (ஜலாங்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ) என்னக்கடவதிறே யிவளையும். (இவள்திறத்து) "ஏஹிபஶ்யஶரீராணி" (ஏஹிபஶ்யஶரீராணி) என்னுமாபோலே, இவள்படி பேச்சுக்கு நிலமல்லாமையாலே காட்டுகிறாள். ராக்ஷஸர் தின்ற வுடம்பைக் காட்டினாப்போலே, விரஹம்தின்ற வுடம்பைக்காட்டுகிறாள். (என்செய்கின்றாயே) இவள் திறம் செய்யப் பார்த்ததென். உம்முடையவூரில் பதார்த்தங்கள் பெற்றதும் பெறவேண்டாவோ வும்மையாசைப்பட்ட விவள்..........*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (கங்குலித்யாதி) இப்பிராட்டியுடையவ நேகாவஸ்த்தைகளைச் சொல்லுகிற "கங்குலும்" இத்யாதிபதங்களையும், "என்செய்கின்றாய்" என்றபதத்தையுங்கடாக்ஷித்தவதாரிகை (இப்பிராட்டியுடையவித்யாதி)

"நித்ராக்குக் கல்பிதமான ராத்ரியும்பகலுங் கண்டுயிலறியாள்" என்கிறவளுடைய ஹார்த்தபாவம் (இவளையெப்போதித்யாதி) கண்டுயிலறியாளென்றதே, "கங்குலும்பகலும்" என்றுவிசேஷித்ததுக்குபாவம் (விரஹிணிகளுக்கித்யாதிவாக்யத்வயம்) விரஹிணிகளுக்கென்றது - விரஹாஸஹிஷ்ணுக்களுக்கென்றபடி. வ்யஸநமாறும் ப்ரகாரமேதென்ன (ராத்ரியிலித்யாதி) இவளுக்குமப்படி போதுபோக்கவொண்ணுதோவென்ன (எங்ஙனேதரிக்கேனித்யாதி) ஆகையாலே (தனக்காஶ்வாஸஹேதுவாக) என்றுகூட்டுவது. "பகலுங்கண்டுயிலறியாள்" என்கைக்கு, பகலுறங்கப்ரஸக்தியுண்டோவென்ன (பகலுமிரவோடித்யாதி) உறங்கக்கண்டதெப்படியென்ன (யௌவநமித்யாதி) அலைகொடுக்கையாலே - கலவிக்கிடங்கொடுக்கை

யாலே. அலையென்று - வ்யாபாரமாய், ஸம்ஶ்லேஷத்தைச்சொல்லி; அலைகொடுக்கையாவது - ஸம்ஶ்லேஷிக்கையென்றபடி. பலிதம் ( அநித்ர இத்யாதி ) " [illegible] " ( அநித்ரஸ்ஸததம்ராமஸ்ஸுப்தோபிசநரோத்தமః ஸீதேதிமதுராம்வாணீம்வ்யாஹரந்ப்ரதிபுத்யதே ) இதி ஸுந்தரகாண்டே ஸீதாம்ப்ரதிஹநுமாந். " [illegible] " ( ததாவித்வாந்புண்யபாபேவிதூயநிரஞ்ஜநःபரமம்ஸாம்யமுபைதி ) இதிமுண்டோபநிஷதி. நாயகனுறங்குகிறபோதாகிலுமுறங்கவில்லையோவென்ன (இவள்கலந்தவித்யாதி) ஹேதுபூர்வகவிவரணம் ( இவ்வ்யஸநத்துக்கித்யாதி ) பூர்வரங்கமாவது - பாவிநர்த்தநசூசகபூர்வபாவிவ்யாபாரம். ஆனு லிவள்நெஞ்சிலே பட்டுக்கிடக்கிறதுதானேதென்ன (என்றுமித்யாதி) சிறைக்கூடத்திலேபிறந்துவளர்ந்தவர்களுக்குக் கலவிதோன்ருதாப்போலேயென்றபடி. "அறியாள்" என்றத்தால் வ்யாவ்ருத்தி (ஒக்கவித்யாதி) நித்ராயோடொக்கவிருக்கச்செய்தேயென்றபடி. " [illegible] " (ஜஹளநித்ராம்சதந்த்ரீஞ்ச) என்று - கைங்கர்யவிரோதியென்று கைவிட்ட விளையபெருமாளைச்சொல்லுகிறது.

" நாயகன்வரும் " என்கிறதெளிவையும், நித்ராயில் வ்யுத்பத்தியில்லாமையையு மநுசந்தித்து வ்யாக்யாதாவினிடுபாடு (இவளுக்கித்யாதி) எங்குமொக்கவென்றது - நித்ராயிற்போலேயவன் வரவிலுமறியாமை யநுவர்த்திக்கப்பெற்றதில்லையென்றபடி. கண்ணநீரைமாற்றுகைக்கு ஹேதுசொல்லுகிருள் (இவ்வாற்ருமையிலித்யாதி) பகைகொண்டாட-ப்ரதிபந்தகமாக. (இவ்வாற்ருமையில்) என்கிறவாக்யாநந்தரம் (இவளுக்கு) இத்யாதிவாக்யமநுசந்தேயம். " கைகளாலிறைக்கும் " என்கிறவளுடைய ஹார்த்தபாவம் (இதென்னவித்யாதி) ஏதத்விவரணம் (இதுதன்னுலித்யாதி) இயலும் - நிறைவேறும். கடல்கொண்டவென்றது - கடலோடொத்தவென்றபடி. (கடல்கொண்டகண்ணீர்) என்கிறபாசுரம் திருவிருத்தத்தில், "கடல்கொண்டெழுந்தது" இத்யாதி. கையாலேயிறைக்கிறது ஸாஹஸமோவென்ன (கோகுளிலையையித்யாதி) கோகுள் - வ்ருக்ஷவிசேஷம். சப்தார்த்தம் (தன்கையாலேயித்யாதி) கீழே - அபரிச்சேத்யமாகையாலே யிறைத்துமுடியாதென் றருளிச்செய்து, போக்யமாயிருக்க வெதுக்கிறைக்கிருளென்று பாவாந்தரம் ( கிமர்த்தமித்யாதி ) " [illegible] " (கிமர்த்தம்தவநேத்ராப்யாம்வாரிஸ்ரவதிஶோகஜம் । புண்டரீகபலாஶாப்யாம்விப்ரகீர்ணமிவோதகம்) இதி ஸுந்தரகாண்டே ஸீதாம் ப்ரதிஹநுமான்.

"கண்ணநீர்கைகளாலிறைக்கும்" என்றவநந்தரம் "சங்குசக்கரங்கள்" இத்யாதி கதநத்துக்குபாவம் (கண்ணநீராயித்யாதி) " தாமரைத்தடங்கண் " என்றுப்போலே அவயவங்களைச்சொல்லாதே, திவ்யாயுதங்களைச்சொன்னதுக்குபாவம் ( தவளவொண்சங்கித்யாதி ) அதாவது - அவயவங்களோபாதி யிவையுமுத்தேஶ்யமென்றபடி. பெரியபெருமாள் த்விபுஜராயன்ருே விருப்பது, அவர்க்குச் சங்குசக்கரங்களுண்டோவென்ன ( உகவாதவித்யாதிவாக்யத்வயம் ) சங்குசக்கரங்களோடே வரவேணுமென்னுதே, "கைகூப்பும்" என்றதுக்குபாவம் (கூராராழியித்யாதி) " [illegible]

தெ௷ " ( கிரீடிநம்கதிநம்சக்ரஹஸ்தமிச்சாமித்வாம்த்ரஷ்டுமஹம்ததைவ|தேநைவரூபேணசதுர்ப்புஜேநஸஹஸ்ரபாஹோபவவிஶ்வமூர்த்தே ) இதி விஶ்வரூபதர்ஶநாநந்தரோ அர்ஜுநஃ.

"சங்குசக்கரங்கள்" என்றவநந்தரம் " தாமரைக்கண் " என்றதுக்குபாவம் (அவ்வாழ்வார்களித்யாதி) விவரணம் (உன்தாமரையித்யாதி) தாமரைக்கண்ணென்று தளர்ந்ததுக்கு த்ருஷ்டாந்தம் (ராமமித்யாதி) " ஸாஹங்கதங்கரிஷ்யாமிதம் விநாப்ரியதர்ஶநம் । ராமம்ரக்தாந்தநயநமபஶ்யந்தீஸுதுஃகிதா " (ஸாஹம்கதம்கரிஷ்யாமிதம்விநாப்ரியதர்ஶநம்। ராமம்ரக்தாந்தநயநமபஶ்யந்தீஸுதுஃகிதா ) இதி ஸுந்தரகாண்டே ஸப்தவிம்ஶே.

மேலுக்கவதாரிகை (தளருகிறதென்னித்யாதி) (போதுபோக்கினுலோ) என்கிறவர்கள் தாய்மாராகில், " உன்னைவிட்டு " என்றது சேராதாகையாலே; தாய்மாருக்தியாகிலு மீஶ்வரோக்தியாகவே ப்ரமித் துத்தரம் சொல்லுகிருளென்னுதல். (என்பர்கள்) என்றத்தை-பூஜாயாம் பஹுவசநமாக்கி, என்கிறவன் - அவன்ருனேயாய், அதுக்குத்தரம் - " உன்னைவிட்டு " என்றதென்னுதல். " திருவரங்கத்தாய் " என்றத்தோடேகூட்டி " உன்னை " என்றதுக்குபாவம் ( பரவ்யூஹேத்யாதி ) "தாமரைக்கண் " என்றத்தைக் கடாக்ஷித்து பாவாந்தரம் ( உறக்கத்தாலே யித்யாதி ) அகப்பட்டது விலக்ஷணவிஷயத்திலேயன்றோ வென்னுமென்றபடி. விலக்ஷணவிஷயத்திலே யகப்பட்டாயாகில் நம்மை யென்செய்யச் சொல்லுகிருயென்ன ( உம்முடையவித்யாதி ) வைலக்ஷண்யமாவது - கண்ணழகென்ருய், அது நமக்குத்தெரியுமோவென்ன ( உன்னைக் கண்ணுடியித்யாதி ) கண்டாலென்செய்வோமென்ன ( கண்டாயாகிலித்யாதி ) கண்டாயாகில் - கண்ணுடிப்புறத்தி லுன்னைக் கண்டாயாகிலென்றபடி. பிரியாயென்றது - கண்ணுடியைப் பிரியாயென்றபடி.

" கைதுழாவிருக்கும் " என்றதுக்குபாவம் (மஹாப்ருதிவியித்யாதி) "கைதுழாவிருக்கும் - " கையாலேதுழாவாநிற்குமித்யர்த்தஃ " கை - கையாலே, துழா-துழாவி, இருக்கும் - அதுக்கும் சக்தையன்றியேநிர்வ்யாபாரையாயிருக்கும் " என்றுரையில் சப்தார்த்தம்.

கயலினுடைய சிவப்பைச்சொல்லுகிறவளுடைய ஹார்த்தபாவம் ( அவ்வூரிலித்யாதி) விவரணம் (அவைதன்னிறமித்யாதி) " பாய்நீர் " என்றதுக்குபாவம் (நாரத்தையித்யாதிவாக்யத்வயம் ) நாரம் - ஜலம். " செங்கயல் " என்றதுக்குபாவாந்தரம் (அக்கயலித்யாதி) உக்தார்த்தத்துக்குப்ரமாணம் ( ஜலாதித்யாதி ) " நசஸீதாத்வயாஹீநா " (நசஸீதாத்வயாஹீநா) இத்யாதி ஶ்லோகத்தடி.

இவளாற்ருமை யின்னபடிப்பட்டிருக்குமென்னுதே, "இவளிடையாட்டம்" என்றதுக்குபாவம் ( ஏஹீத்யாதி ) " ஏஹிபஶ்யஶரீராணிமுநீநாம்பாவிதாத்மநாம் " ( ஏஹிபஶ்யஶரீராணிமுநீநாம்பாவிதாத்மநாம் ) இத்யாதி. படி-ப்ரகாரம். "இவள்திறத்து" என்றது - இவளளவிலென்றபடி. "ஏஹி" இத்யாதிக்கர்த்தகதநபூர்வகமாக, இவள்காட்டின தின்னதென்னுமத்தையு மருளிச்செய்கிருர் (ராக்ஷஸரித்யாதி) " செங்கயல் " இத்யாதியையுங்கூட்டி " என்செய்கின்ருய் " என்கிறவளுடைய ஹார்த்தபாவத்தை யருளிச்செய்கிருர் (உம்முடையவித்யாதி) "நீர்" என்றது - நாரத்துக்கு வாசகமாகையாலே, நாரமென்றது - ததீயாபிப்ராயத்துக்கும் ஸூசகம் .......................................................*

# இரண்டாம்பாட்டு.

என்செய்கின்ருயென்ருமரைக்கண்ணுவென்னுங்கண்ணீர்மல்கவிருக்கு, மென்செய்கேனெறிநீர்த்திருவரங்கத்தாயென்னும்வெவ்வுயிர்த்துயிர்த்துருகு, முன்செய்தவினையேமுகப்படாயென்னுமுகில்வண்ணுதகுவதோவென்னு, முன்செய்திவ்வுலகமுண்டுமிழ்ந்தளந்தாயென்கொலோமுடிகின்றதிவட்கே.

## ஆருயிரப்படி.

(என்செய்கின்ருய்) என்னைத்தோற்பித் தடிமையாக்கின தாமரைக்கண்களையுடையவனே, அக்கண்களாலே யென்னைக் குளிரப்பார்த்தருள நினைத்தாயோ வில்லையோவென்னும். உன்னுடைய வவலோகநாபாவஜநித ஸந்தாபத்தாலே யக்கண்ணநீர் வெள்ளமெல்லாம் சோஷிக்கையாலே கரைக்குட்பட்ட கண்ணநீரையுடையளாய், ஒருசேஷ்டிதக்ஷமையன்றியே யிருக்கும். என்னுடைய சந்தாபத்தையெல்லாம் போக்குகைக்காகவன்ருே கோயிலிலே கண்வளர்ந்தருளிற்று, இஸ்ஸந்தாபமொன்றும் பொறுக்கமாட்டுகிறிலேன், என்செய்கேனென்னும். தன்னுடைய ஸந்தாபஜநித தீர்க்கோஷ்ண நிஶ்வாஸ பரம்பரைகளாலே யுருகாநிற்கும் ஈத்ருஶமான வ்யஸநத்தை யநுபவிக்கைக்கு ஜந்மாந்தரத்திலே யென்னபாபத்தைப்பண்ணினேனேவென்னும். பரமோதாரனே, என்னுடையவபேக்ஷிதம் செய்யாதொழிகை யுன்னுடைய வௌதார்யத்துக்குப் போருமோவென்னும். நிர்ஹேதுகமாக லோகத்தைப்படைத்து ரக்ஷித்தருளுகிற பரமகாருணிகனே, இவளுக்கென்னுய்விளையுமோ வென்கிருள் ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நீ சர்வப்ரகாரரக்ஷகனுயிருக்க, இவளுடைய ப்ரகார மென்னுய்முடிகிறதென்கிருள்.

என் - ப்ரதமத்திலே யென்னை யநந்யார்ஹையாக்கி. தாமரை - ஆசையைவிளைக்கும்படி யதிசயிதபோக்யமான. கண்ணு-கண்ணையுடையவனே. அநுபவபர்யந்தமாகப் பார்க்கநினைக்கிருயோ, அவ்வளவிலே யொடியெறிந்திட்டுவைக்க நினைக்கிருயோ, என்-என். செய்கின்ருய்-செய்யநினைக்கிருய். என்னும்-என்னும். அதுக்கொருமறுமாற்றங்காணுமையாலே, அந்தஸ்தாபத்தாலே,அகவாயில், கண்-கண். நீர்-நீர். மல்க-சுவறித்துளும்புமளவாம்படி. இருக்கும்-சஞ்சாரக்ஷமையன்றியே யிருக்கும். எறி-அலையெறிகிற. நீர்-நீரையுடைத்தான. திருவரங்கத்தாய்-கோயிலிலேஸந்நிஹிதனுனவனே. உன்னைக்கிட்டுகைக்கு, சக்தனுய் சுலபனுன நீயொன்றுஞ்செய்யாதிருக்க, அஶக்தையா யார்த்தையானநான். என் - எத்தை. செய்கேன் - செய்வேன். என்னும்-என்னும். இந்த வாகிஞ்சந்யத்துக்கும் முகங்காட்டாமையாலே, வெ-அந்தஸ்தாபத்தாலே வெவ்விதாம்படி. உயிர்த்துயிர்த்து-பலகாலும்மூச்சுவிட்டு. உருகும்-அப்பரிதாபத்தாலேயுருகாநிற்கும். இப்படி க்லேசிக்கைக்கடியாக, முன் - முன்பு. செய்த-நான்பண்ணிவைத்த. வினையே-கர்மமே. முகப்படாய்- முகந்தோற்றநில்லா

ய். என்னும் - என்று க்லேஶகரமாகையாலே சேதநஸமாதியாலே சொல்லாநிற்கும். "அதுவுமவனிட்டவழக்கு" என்கிறதெளிவுபிறந்தவாறே, முகில்வண்ணா-ஜலஸ்த்தலவிபாகமற வுபகரிக்கும் மேகஸ்வபாவனானவனே. நீமுகங்காட்டாதிருக்குமது, தகுவதோ-அந்தவுபகாரத்துக்குத்தகுவதோ. என்னும்-என்னும். அந்தவுபகாரகத்வ பலமாம்படி, இ-இந்த. உலகம்-லோகத்தை. முன்-ப்ரதமத்திலே. செய்து-ஸ்ருஷ்டித்து. உண்டு - ப்ரளயத்திலேயுண்டு. உமிழ்ந்து-உமிழ்ந்து. அளந்தாய்-அந்யாபிமாநம் போம்படியளந்துகொண்டவனே. இவட்கு-உன்னையொழியச்செல்லாதபடியானவிவளுக்கு. என் - என்னாய். முடிகின்றதுகொலோ-முடியப்புகுகிறதோ.

இந்தவார்த்திக் கெல்லையுண்டாம்படி யுன்னுடைய ரக்ஷ்யவர்க்கத்திலே யிவளுக்கு மந்தர்ப்பாவமுண்டாகிறதோ, யாப்யமாய்விடும்படி யிவற்றின் புறத்தாளாம்படியாகிறதோ வென்றுகருத்து .........................................................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

இப்பெண்பிள்ளையுடைய தசை யென்னாய் விளையக்கடவதென்கிறாள்.

(என்செய்கின்றாய்) ஆற்றாமை மிகமிக அவனைக்கேட்கு மித்தனையிறே. (என்தாமரைக்கண்ணாவென்னும்) ஒருநீர்ச்சாவியான பயிருக்கொருபாட்டம் வர்ஷிக்கக்கடவதன்றோ வென்கிறாள். "ஸவலோகநதா நேநஹ்யோஸாமாலய" (அவலோகநதாநேநபூயோமாம்பாலய) என்னக்கடவதிறே. "தாமரைக்கண்ணனென்றேதளரும்" என்றது; உணருகிறபோது கண்களை வாய்வெருவிக்கொண்டாயிற் றுணர்ந்ததும். கிட்டினசமயத்தில் "நானு மென்னுடைமையும் நீயிட்டவழக்கன்றோ" என்றது கண்ணாலேயிறே, அதிலேயிறே யிவளெழுதிக்கொடுத்தது.

கண்ணாலேநோக்கி யணைக்கும்படியைநினைத்து, அந்த பாவநாப்ரகர்ஷத்தாலே கலந்துபிரிந்தாப்போலே கண்ணீர்மல்கவிருக்கும்.

(என்செய்கேனித்யாதி) என்தாபமாறும்படி யவ்வலையேற்றிலே கொண்டுபோய்ப் பொகடவல்லிகோளே யென்னும். திருப்பொருனலில் நீர், பிரிந்தார்க்கு நிலாப்போலே * உபதப்தமாயிராநின்றதுபோலே. (என்செய்கேன்) உன்னைக்கிட்டுகைக்கு நான்செய்வதென்.

அப்போதே கிட்டப்பெறாமையாலே, "ஆசைப்பட்டநா மழகிதாகப்பெற்றோம்" என்று நெடுமூச்செறியாநிற்கும். [உஹந்நிவநிஸ்வாஸை ர்வ்ருக்ஷாந்பல்லவதாரிணஃ] [தஹந்நிவநிஸ்வாஸைர்வ்ருக்ஷாந்பல்லவதாரிணஃ] நெடுமூச்சாலே தன்பகையறுக்கப் பாராநின்றாள். பல்லவதாரிகளாயிருக்கை யிப்போ திவளுக்குப்பகையிறே, ஒருபடிப்படகின்று நலிகிறபடியிறேயவை. ராக்ஷஸிகளுறங்கும்போதுமுண்டிறே, உருவவிப்படியே நிற்கிறவித்தனையவை. (உருகும்) உருகுகிறபடியே நிற்குமத்தனை. இனிநெடுமூச்செறிகைக்கு தர்மியுமில்லையோ வென்னும்படியுருகும். வெவ்விதாகப் பலகால் நெடுமூச்செறிந்து, அவ்வுஷ்ணத்தாலே யுருகாநிற்கும்.

(முன்செய்தவினையே) வலிக்கைக்கு விரகுபார்க்கிறபடி. நான்முன்புபண்ணினபாபமே, என்முன்னேவந்து நிற்கவல்லேயேயென்னும். நீ முகங்காட்டினாயாகில், " தாமரைக்கண்ணா - என்செய்கின்றாய் " என்று அவனைக்கேளாதொழியலாயிற்றே. " நான்செய்தவினையின்பயனிதுவானபின்பு நாமாரைவெறுப்பது " என்றிருக்கலாயிற்றே. ஸ்ரீஜநகராஜன்றிருமகளுக்கு மிவர்க்குமுள்ள தொன்றாயிற்று; " நம்மையவனாலே " என்றும், " தீமைதந்தாமாலே " என்றுமாயிற்றிருப்பது. " ஊஊவஷ்க்ஷ்ரு தம்கிஞ்சிநமஹதஸ்திந ஸம்ஶயஃ " (மமைவதுஷ்க்ருதம்கிஞ்சிந்மஹதஸ்திந ஸம்ஶயஃ) என்றாளிறே.

(முகில்வண்ணாதகுவதோவென்னும்) நான்பண்ணினபாபம் கிடக்கிடும், கர்மாநுகுணமாகவோ நீர் காரியஞ்செய்யுமது. ( தகுவதோ—சேருமோவென்றபடி. ) ஜலஸ்த்தலவிபாகம்பாராதே நீர்வர்ஷிக்கு மும்முடைய வௌதார்யகுணத்துக்குப் போருமோவென்னும். " ஒருக்ரியாமாத்ரத்துக் கித்தனையுபிருண்டோ, நான்காணிதுவிளைத்தேன் " என்றவ்வடிவைக்கொடுவந்து காட்டவல்லேயேயென்னும். இது பக்திகார்யமேயாகிலும், பகவதநுபவவிரோதியாகையாலே - பாபமென்கிறது. அநிஷ்டாவஹம்-பாபமாமித்தனையிறே. (தகவிதோ என்றபாடத்தில்) நான்பண்ணினபாப மெனக்கநுபவிக்கவேணுமாகி லும்முடைய தகவுக்கு விஷயமின்னதென்னும். முன்செய்தவினையே முகப்படாயென்கிறவிடம் - " க்ரியை அத்ருஷ்டரூபத்தாலே நின்று பலந்தரும் " என்பார்வார்த்தை; முகில்வண்ணா என்கிறவிடம் - " ஒருபரமசேதநனுடைய வநுக்ரஹமேபலப்ரதமாவது " என்றிருக்கும் வேதாந்திகள்வார்த்தை. " ஸதோஷராயிருப்பார்—ராமகோஷ்டிக்காளல்லர் " என்கிறமஹாராஜர் தொடக்கமானார்வார்த்தைபோலே கீழ்ச்சொன்னது; " ஜொஷொயஷ்வி தஸ்ய ஸாஜ " ( தோஷோயத்யபிதஸ்யஸ்யாத் ) என்ற ராமஸித்தாந்தம்போலே மேல். " ஊாநமஸ்குரு " ( மாம்நமஸ்குரு ) என்றாப்போலே கீழ்ச்சொன்னது; " ஊாஶுசஃ " ( மாஶுசஃ ) என்றாப்போலே (தகவிதோ) என்கிறது.

" முகில்வண்ணா " என்கைக்கு, நம்மௌதார்யமெங்கே பலிக்கக்கண்டு சொல்லுகிறதென்ன (முன்செய்தித்யாதி) நிர்ஹேதுகமாக முன்பு ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளைப்பண்ணி " தகவிதோ " என்கைக் குபகரணமில்லாதவன்று இத்தையுண்டாக்கி நோக்கினாய் நீயன்றோ. கரணகளேபரவிதுரமான வித்தைவெறுமுன் க்ருபையாலேயுண்டாக்கினா யித்தனையன்றோ. உண்டாக்கிவிட்டவளவேயோ; ப்ரளயாபத்திலே வயிற்றிலே வைத்துரக்ஷித்து, உள்ளேகிடந்து நோவுபடாதபடி புறப்படவிட்டு, எல்லைநடந்துமீட்டுக்கொண்டு, சர்வவிதரக்ஷணமும் பண்ணிற்றிலையோ. ( என்கொலோமுடிகின்றதிவட்கே ) இவளளவில் தர்மிலோபமேயோ

பலிக்கப்புகுகிறது. நீர் ரக்ஷிக்கிறபூமிக்கு மிவளுக்கு மொருவாசியுண்டாகநினைத்திருக்கிறிலீரோ. (அநந்யபராயா யநந்யகதியா யபலையாயிருக்கிறவள்;) இவளுடையகர்மமோ, உம்முடைய வநுக்ரஹமோ பலிக்கப்புகுகிறது. ( இவளிடையாட்டத்தில் நீர் செய்யப்பார்த்தபடி யெங்ஙனேயென்னுதல், இவளுடையதசை யென்னுய்விளையக்கடவதென்னுதல். ).*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (என்செய்கின்றாயித்யாதி) "என்கொலோமுடிகின்றதிவட்கு" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (இப்பெண்பிள்ளையித்யாதி)

தலைமகள் "என்செய்கின்றாய்" என்று அவனைக்கேட்கிற தென்னென்ன (ஆற்றாமையித்யாதி) "தாமரைக்கண்ணா" என்கிறமகளுடையஹார்த்தபாவம் (ஒருநீர்ச்சாவியித்யாதி) ஒருநீர்ச்சாவி - ஒருநீருக்காகப்பட்டுப்போகிறசாவி. ஒருபாட்டம்-ஒருபாறல். அவன்கடாக்ஷம் ப்ரார்த்யமோவென்ன (அவலோகநேத்யாதி) "தேவப்ரபந்நார்த்திஹரப்ரஸாதம்குருகேஶவ । அவலோகநதாநேந பூயோமாம்பாலயாவ்யய" (தேவப்ரபந்நார்த்திஹரப்ரஸாதம்குருகேஶவ। அவலோகநதாநேந பூயோமாம்பாலயாவ்யய) இதிப்ரதமேம்ஸே. பரிதாபஹேதுவு மாஶ்வாஸஹேதுவு மிதுவேயென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (தாமரைக்கண்ணென்றேயித்யாதி) இதுக்குக்கருத்து-அங்கு "தளரும்" என்று - மோஹத்தைச்சொல்லி, இங்கே "என்தாமரைக்கண்ணா" என்கையாலே - இதுணர்த்தியில் வார்த்தையென்கிறதென்று. "இது - ஸந்திக்தம்" என்றும் சொல்லுவர்கள். "என்" என்றதுக்கு பாவம் (கிட்டினவித்யாதி வாக்யத்வயம்)

"என்தாமரைக்கண்ணா" என்றவநந்தரம், "கண்ணீர்மல்கவிருக்கும்" என்றதுக்குபாவம் (கண்ணாலேநோக்கியித்யாதி)

"எறிநீர்" என்றதுக்குபாவம் (என்தாபமித்யாதி) "எறிநீர்" - அலையெறிகிற நீரென்றபடி. அலையேற்றிலே - அலையெறிதலிலே. இங்கே திருப்பொருநலுண்டேயென்ன (திருப்பொருநலித்யாதி) திருப்பொருநல் - திருத்தாம்ரபர்ணி. "உபதப்தோதகாநத்யஃபல்லவாநிஶராம்ஸிச" ( உபதப்தோதகாநத்யஃபல்லவாநிஶராம்ஸிச ) இத்யாதி.

"என்செய்கேன்" என்றவநந்தரம், "வெவ்வுயிர்த்துயிர்த்துருகும்" என்றதுக்குபாவம் (அப்போதேயித்யாதி) வெவ்விதாம்படி பலகாலும் நெடுமூச்செறிந்துருகாநிற்குமென்று சப்தார்த்தம். ஶோஷணமாக நெடுமூச்செறிகிறதுக்கு ப்ரமாணம் ( தஹந்தீமித்யாதி ) "தஹந்தீமிவநிஶ்வாஸைர்வ்ருக்ஷாந்பல்லவதாரிணஃ । ஸங்காதமிவஶோகாநாம் துஃகஸ்யோர்மிமிவோத்திதாம்" ( தஹந்தீமிவநிஶ்வாஸைர்வ்ருக்ஷாந்பல்லவதாரிணஃ। ஸம்காதமிவஶோகாநாம்துஃகஸ்யோர்மிமிவோத்திதாம் ) இதி ஸுந்தரகாண்டே. "தஹந்தீம்" (தஹந்தீம்) என்றதுக்கு பாவம் (நெடுமூச்சாலேயித்யாதி) பகையாவது - வ்ருக்ஷங்கள். "தாரிணஃ" (தாரிணஃ) என்கிற வர்த்தமாநத்துக்கு பாவமாதல், "தாரிணஃ" ( தாரிணஃ ) என்றதுக்கு தாச்சீல்யே இனி ப்ரத்யயமாக்கி பாவமாதல் (ராக்ஷஸிகளித்யாதி)

உருகுகிற சமயத்திலே "முன்செய்தவினையே முகப்படாய்" என்கிறதென்னென்ன (பலிக்கைக்கித்யாதி) சப்தார்த்தம் ( நான் முன்பித்யாதி ) நான் முன்னே

நின்றால் பெறுகிறதென்னென்ன (நீ முகங்காட்டிணுயாகிலித்யாதி) விவரணம் (நான்செய்த வித்யாதி) தன்பாபமாகச் சொன்னாருண்டோவென்ன (ஸ்ரீஜநகராஜனித்யாதிவாக்யத்வயம்) பிராட்டி யப்படிசொன்னாளோவென்ன (மமைவேத்யாதி) "ஜெமெவஊஷ்க்ரு தஂகிஞ்சிநூஹஜஹ்ஸ்திநஸஂமயஃ। ஸஜ்ராவவி தளயஂநாஂநாவெவெக்ஷெ தவெரஞவள" (மமைவதுஷ்க்ருதம்கிஞ்சிந்மஹதஸ்திநஸம்ஶயஃ। ஸமர்த்தாவபிதௌயந்மாம்நாவேக்ஷேதேபரந்தபௌ) இதி ஸுந்தரகாண்டே.

"தருவதோ" என்றது - போருமோவென்றபடி. நீ செய்த கர்மபலமாகிலது நீயே யநுபவிக்கவேண்டாவோ, "என்செய்கின்றாய்" என்றென்னைக்கேட்கிறதென்னென்ன (நான் பண்ணினவித்யாதி) "வினை" என்றத்தைக்கடாக்ஷித்து, "வண்ணம்" என்றதுக்கு - வடிவாக வர்த்தாந்தரம் (ஒரு க்ரியாமாத்ரத்துக்கித்யாதி) இவ்வாற்றாமைக்கடி பக்தியன்றோ, அத்தை பாபமென்பா னென்னென்ன (இது பக்திகார்யமே யித்யாதி) எத்தனையென்றாலும், ப்ரேமபலமாய்வந்தத்தை பாபபலமென்னலாமோவென்ன (அநிஷ்டாவஹமித்யாதி) "தருவதோ" என்றன்றிக்கே, "தகவிதோ" என்று பாடாந்தரமாக்கி, அதுக்கர்த்தம் (நான்பண்ணினவித்யாதி) தகவுக்குவிஷயமின்னதென்னுமென்றது - தயைக்குவிஷயமின்னதென்றருளிச்செய்யவேணுமென்று சொல்லுமென்றபடி. இந்தபாடத்தில், ஓகாரம்-பாதபூரணார்த்தம். தகவு-தகவுக்கு. இது-விஷயமிதென்றபடி. என்னவேணுமென்றத்யாஹார்யம். "முன்செய்தவினையேமுகப்படாய்" என்று-கர்மம்பலப்ரதமாகச் சொன்னவிடம் பூர்வபக்ஷமாய், "முகில்வண்ணதகவிதோ" என்று ஈஶ்வரன் பலப்ரதனாகச் சொன்ன விடம் சித்தாந்தமாயிருக்கிறதென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (முன்செய்தவித்யாதிவாக்யத்வயத்தாலே) அத்ருஷ்டரூபத்தாலே பலந்தருமென்பார் - பூர்வமீமாம்ஸகர். வேதாந்திகளாவார்-வ்யாஸாதிகள். இந்தபூர்வபக்ஷ ஸித்தாந்தங்களுக்கு த்ருஷ்டாந்தத்வயம் (சதோஷராயித்யாதிநாலுவாக்யத்தாலே) அதாவது-மஹாராஜர்வார்த்தையை பூர்வபக்ஷமாக்கிப்பெருமாள் "ஜொஷொயஊ)வி" (தோஷோயத்யபி) என்றத்தை சித்தாநதமாக்கினாப் போலேயும், "ஊஂநஜஸ்க்ரு" (மாம்நமஸ்குரு) என்றபக்தியைபூர்வபக்ஷமாக்கி "ஊஶரணஂ" (மாமேகம்ஶரணம்) என்றப்ரபத்தியை சித்தாந்தமாக்கினாப்போலேயும், "முன்செய்தவினையேமுகப்படாய்" என்றவசேதநக்ரியை பலப்ரதமென்றத்தை பூர்வபக்ஷமாக்கி "முகில்வண்ணதகவிதோ" என்றபரமசேதநன் பலப்ரதனென்றத்தை சித்தாந்தமாக்கினாரென்றபடி.

மேலுக்கவதாரிகை (முகில்வண்ணவித்யாதி) கீழ்வாக்யத்தாலே பலிதம் (கரணகளேபரேத்யாதி)

"உருகும்" என்றத்தைக்கடாக்ஷித்து, "கொலோ" என்கிற ஸ்வரத்துக்குபாவம் (இவளளவிலித்யாதி) "இவட்கு" என்றதுக்குபாவம் (நீர் ரக்ஷிக்கிறவித்யாதி) "முன்செய்தவினை" என்றத்தையும் "முகில்வண்ணா" என்றத்தையுங்கடாக்ஷித்து, "கொலோ" என்றதுக்குபாவாந்தரம் (இவளுடையவித்யாதி)

"என்செய்கின்றாய்" என்றது - தலைமகள் வார்த்தையாதல், திருத்தாயார் வார்த்தையாதல். திருத்தாயார்வார்த்தையானபோது, கீழேயும் "என்செய்கின்றாய்" என்றுவைத்து, இங்கேயும் "என்செய்கின்றாய்" என்றால் புனருக்தியன்றோவென்ன (ஆற்றாமை) இத்யாதியடியில் வாக்யம் என்று சங்கதி. தலைமகள்வார்த்தையென்றதுக்கு நியாமகம் - (நீமுகங்காட்டிணுயாகில் தாமரைக்கண்ணா வென்செய்கின்றாயென்று அவனைக் கேளாதொழியலாயிற்றே) என்றவாக்யம்.

என்றுமனைக்கண்ணு-என்செய்கின்று யென்றுதொடக்கி, அளந்தாய்-இவட்கு-என்கொலோமுடிகின்ற தித்யந்வயஃ ..........................................*



## மூன்றாம்பாட்டு.

வட்கிலளிறையுமணிவண்ணாவென்னும்வானமேநோக்குமையாக்கு
மூட்குடையசுரருயிரெல்லாமுண்டவொருவனேயென்னுமுள்ளுருகுங்
கட்கிலீயுன்னைக்காணுமாறருளாய்காகுத்தாகண்ணனேயென்னுந்
திட்கொடிமதிள்சூழ்திருவரங்கத்தாயிவடிறத்தென்செய்திட்டாயே.

### ஆறாயிரப்படி.

( வட்கிலளிறையும் ) உன்னைக் காணப்பெறாத வ்யஸநத்தாலே, தன்னுடைய ஸ்வரூபநிரூபகமான ஸ்த்ரீத்வகுணங்களையு மிழந்தாள். பின்னை நெடும்போதுகூட லப்தஸம்ஜ்ஞையாய்,நிரதிசயௌஜ்ஜ்வல்யசௌலப்யாதி கல்யாணகுணங்களை யுடையவனேயென்னும். "ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு வந்து தோற்றினாப்போலே பெரியதிருவடி திருத்தோளிலே யேறியருளி வந்து தோன்றுவதுகாண்" என்றுகாசத்தைப்பார்த்துக்கொண்டிருக்கும். அங்குங்காணுதொழிந்தவாறே மயங்கும். * சிறோணஸம்ஜ்ஞாம்ப்ரதிலப்ய, ஆஸ்ரிதப்ரதிகூலரா யதிபலபராக்ரமரானவசுரரையெல்லாம் நிரஸித்து நிருபமமான சாமர்த்யத்தையுடையவனே, உன்னைக்காண்கைக் கென்பக்கலுள்ள ப்ரதிபந்தகத்தை யெல்லாம் போக்கியருளாயென்னும். பின்னையு மவன் வரக்காணாமையாலே நெஞ்சுருகும். "ப்ராக்ருதமான சக்ஷுஸ்ஸுக்களுக்கு நானொருநாளும் விஷயமாகேன்" என்றுனக்கொரு நிர்ப்பந்தமுண்டாகில், நானொருத்தியு முன்னைக்காணும்படி க்ருபைபண்ணாயென்னும். அங்ஙனே செய்யக்கடவதோ வென்னில்; "உன்னைக்காணவேணும்" என்றாசைப்பட்டார் காண்கைக்காகவன்றோசக்ரவர்த்தித்திருமகனும் ஸ்ரீவசுதேவர்திருமகனும் பிறந்தருளிற்றென்றுசொல்லும். இவளோடே ஸம்ஶ்லேஷிக்கைக்காக த்வஜபதாகாலங்க்ருதமான ப்ராகாரங்களாலே பரிவ்ருதமான கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற நீ, இவள்திறத்தென்செய்ய நினைத்தருளினாயென்கிறாள்......................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்ரிதவிரோதி நிவர்த்தகமான வவதாரங்களை யுடையையாய் வைத்து, இவளிப்படி யார்த்தையாகைக் கென்செய்தாயென்கிறாள்.

இறையும் - ஏகதேசமும். வட்கு-தனக்கு நிரூபகமான லஜ்ஜையை. இலள்-உடையளாயிருக்கிறிலள். அத்தாலே யென்முன்பென்று பாராதே, மணிவண்ணா - முடிந்தாளலாம்படியான நீலரத்நஸ்வபாவனாய்க்கொண் டெனக்கு பவ்யனானவனே. என்னும் - என்னும். இவ்வார்த்த த்வநிக்கு வருவுதியென்று, வானமே-ஆகா

சக்தை. நோக்கும் - பார்க்கும். காணாமையாலே, மையாக்கும் - மயங்கும். ப்ரதிபந்தகத்தாலே விளம்பித்ததென்னுமைக்கு, உட்கு - மிடுக்கை. உடை - உடையரான. அசுரர் - ஆசுரப்ரக்ருதிகளினுடைய. உயிர் - ப்ராணன்களை. எல்லாம்-எல்லாம்-நிரவசேஷமாக. உண்ட - க்ரஸித்த. ஒருவனே - ஏகவீரனே. என்னும் - என்னும். அந்த விரோதிநிரஸந சாமர்த்யத்தை நினைத்து, உள் - உள். உருகும் - உடையாநிற்கும். "நசக்ஷுஷாபஶ்யதி" (நசக்ஷுஷாபஶ்யதி) என்கிறபடியே, கட்கு - கண்ணுக்கு. இலீ - காணவரிய நீ. உன்னை - கண்டல்லது தரிக்கவொண்ணாதவுன்னை. காணுமாறு - காணும்படி. அருளாய் - க்ருபைபண்ணியருளவேணும். நீ காட்ட நினைத்தபோது, காகுத்தா - "பும்ஸாம்த்ருஷ்டிசித்தாபஹாரிணம்" (பும்ஸாம்த்ருஷ்டிசித்தாபஹாரிணம்) என்றும், "சத்ருணாம்விஸ்மிதாகாராः" (சத்ருணாம்விஸ்மிதாகாராः) என்றும் நாட்டோடு காட்டோடு வாசியற தர்ஶிப்பித்தசக்ரவர்த்தி திருமகனும். கண்ணனே - "தாஸாமாவிரபூத்" (தாஸாமாவிரபூத்) என்று இடைச்சிகளுக்கும் வடிவைக்காட்டின க்ருஷ்ணனு மவதரித்தவனல்லையோ. என்னும் - என்னும். அதுக்குப் பிற்பட்டாரு மிழவாதபடி, திண்-திண்ணியதாய். கொடி - கொடியையுடைத்தான. மதிள் - மதிள். சூழ் - சூழ்ந்த. திருவரங்கத்தாய் - கோயிலிலே சந்நிஹிதனானவனே. இவள்திறத்து - இவளிப்படி யார்த்தையாகைக்கு. என்செய்திட்டாய் - நீ செய்ததெது.

வடிவழகிப்படி மதிமயக்குமோவென்று கருத்து. வட்குதல் - வெட்குதலாய், லஜ்ஜை. உட்கு - மிடுக்கு..........................................................................*

## ஈடு - மூன்றாம்பாட்டு.

இவளிவ்வவஸ்த்தையை ப்ராப்தையாகைக் கிவளிடையாட்டத்தில் நீர் செய்த தென்னென்கிறாள்.

(வட்கிலளிறையும்) இதுக்கு - ஜீயரருளிச்செய்வது - "இவள்முடிந்தாள்" என்று. (வட்கென்று - லஜ்ஜை) லஜ்ஜையையிட்டிறே ஸ்த்ரீத்வத்தையறிவது. ஸ்வரூபத்தைப் பற்றிவரும் குணம்போனால்ஸ்வரூபமும் போயிற்றுமத்தனையிறே, நிரூபகத்தையொழிய நிரூப்யஸித்தியில்லையே. இவள் லஜ்ஜை குடிபோனமைக்குசூசகமென்னென்னில் (மணிவண்ணவென்னும்) பர்த்ருநாமக்ரஹணம் பண்ணாநின்றாள். பெற்றதாய் முன்னே வடிவழகைச் சொல்லாநின்றாள். நான் கேட்டாலும் மறைக்குமத்தைத்தான் வெளியிடாநின்றாள். காமிநி யாசைப்படுவது வடிவழகையிறே, தானகப்பட்ட துறையைச் சொல்லாநின்றாள். மெய்யேநினைத்து, மெய்யே சொல்லி, மெய்யே யநுபவிக்கை யிவர்க்கு ப்ரக்ருதியாய்விட்டதே!; "உன்சிங்கமுந்திருமூர்த்தியும் சிந்தித்தேத்திக் கைதொழவே யருளெனக்கு" என்று அவன்பாடிவள்வேண்டிக்கொள்வது மிதுவேயிறே. (மணிவண்ணவென்னும்) வடிவழகைச்சொல்லுவது, சௌலப்யத்தைச்சொல்லுவதாகாநின்றாள். "அத்ருஷ்டபூர்வவ்யஸநாம்ருதுஶீலாமநஸ்விநீ। தேநதுःகேந ருதநீநைவமாஞ்சிதப்ரவீத்" (அத்ருஷ்டபூர்வவ்யஸநாம்ருதுஶீலாமநஸ்விநீ।தேநதுःகேநருதநீநைவமாஞ்சிதப்ரவீத்)

என்று, எல்லாதசையிலும் வாய்விடக்கடவதன்றிக்கே யிருப்பதொன்றி றே இது.

( வானமேநோக்கும் ) "மணிவண்ணா!" என்கிற வார்த்த த்வநி கேட்டிருக்க க்ஷமனல்லன், த்வநிவழியே ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்குவந்து தோன்றினப்போலே தோன்றி யருளுமென்று ஆகாசத்தையே பாராநிற் கும். "பரயாபதமாபந்ந:" (பரயாபதமாபந்ந:) என்கிறவதுக்கு மவ் வருகேயிறே யிவளுடைய தசை.

அங்கு வந்து தோற்றக் காணாமையாலே, மையாக்கும் - மயங்கா நின்றாள். அறிவுகெடாநின்றாள்.

மயங்கத்தீருமோ விரோதி கனத்திருக்கிலென்ன ( உட்குடையித் யாதி ) நான் வரப்பார்த்தால் ப்ரதிபந்தகமுண்டத்தனையல்லது, நீயே வ ரப்பார்த்தால் நிவாரகருண்டோ. உட்கென்று - மிடுக்கு. எதிரிகள் மிடு க்கருமாய் பலருமாமத்தனையன்றோ வேண்டுவ தழியச்செய்கைக்கு. ( உ ண்ட ) "பௌஜநார்த்தந:க்ருத்த:" (பௌஜநார்த்தந:க்ருத்த:) என் கிறபடியே. ( ஒருவனே யென்னும் ) வடிவழகுக்குப் போலி யுண்டாகி லும் வீரத்துக்குப் போலி சொல்லலாவதில்லை. ( உட்குடை யித்யாதி ) தான் வீரபத்நியென்னுமிடந் தோற்றச் சொல்லாநின்றாள். "த்வம்நீசஶஶவத்ஸ்ம்ருத:" (த்வம்நீசஶஶவத்ஸ்ம்ருத:) என்னுமவளிறே.

(உள்ளுருகும்) "என்னகுறையுண்டாயிழக்கிறேன்" என்றுசி திலையாம். விளம்பஹேதுவின்றிக்கே யிருக்க, பலியாதொழிந்தவாறே நீ ர்ப்பண்டம்போலே யுருகும்.

உருகுங்காட்டி லதீந்த்ரியவஸ்து கண்ணுக்கிலக்காமோ வென்பர் களே ; அருளாலே பெறுவார்க் கநுபவநெரு நியதி யுண்டோவென்னுமா யிற்றிவள். "நசக்ஷுஷாபஶ்யதி" (நசக்ஷுஷாபஶ்யதி) என்கிறது- தாந்தாமேகாண விழிவார்க்கு ; "தஸ்யைஷஆத்மாவிவ்ருணுதேதநூம்ஸ்வாம்" (தஸ்யைஷஆத்மாவிவ்ருணுதேதநூம்ஸ்வாம்) என்று-அ வன்தானேகாட்டு மன்றருமையில்லை. அர்ஜுநாதிகளுக்கு திவ்ய சக்ஷு ஸ்ஸைக்கொடுத்துக்காட்டிற்றிலையோ. (கட்கிலீ) கண்ணுக்கிலீயென்றப டி. (உன்னைக்காணுமாறருளாய்) உன்னைக்காணவரிது ஸ்வயத்நத்தாலே பெறவிருப்பார்க்கன்றோ, உன்னருளடியாகக் காண்பார்க்குமரிதோ. அ ருளாலே நாமார்க்குக்காட்டினோமென்ன (காகுத்தா) "ரூபௌதார்யகுணை:" (ரூபௌதார்யகுணை:) என்றும் "ரூபம்ஸம்ஹநநம்லக்ஷ்மீம்" (ரூபம்ஸம்ஹநநம்லக்ஷ்மீம்) என்றும், நாகரிகர்க்கும் வநவா ஸிகளுக்கும் காட்டிக்கொடு திரிந்திலையோ. ஒருகால் செய்ததுகொண் டோவென்ன (கண்ணனே) ஸஜாதியைகளான பெண்களுக்குன்னைக்கா ட்டிற்றிலையோ. [ தாஸாமாவிரபூத் ] [தாஸாமாவிரபூத்] ஒருநீர்ச்

சாவியிலே யொருபாட்டம் மழைவிழுந்தாப்போலேயிருக்கை. [ஸ்மயமாந முகாம்புஜஃ] [ஸ்மயமாநமுகாம்புஜஃ] அவர்கள் முன்னேதோற்றி னபின்பு வடிவில்பிறந்தசெவ்வி. [பீதாம்பரதரஸ்ரக்வீ] [பீதாம்பரதரஸ்ஸ்ரக்வீ] பெண்கள்நெஞ்சில் மறத்தைமாற்றுவது, பரிவட்டவாய்ப் பையும் தோளில் மாலையையுங்காட்டியாயிற்று. [ஸாக்ஷாந்மந்மதமந்மதஃ] [ஸாக்ஷாந்மந்மதமந்மதஃ] காமன்கையிலே நாடுபடுமத்தைக் காமன்றான் படும்படியிருக்கை.

(திட்கொடியித்யாதி) அவதாரகாலத்தி லுதவிற்றிலீரோயென்ன; அவதாரகாலத்தி லுதவப்பெறுதா ரிழவுதீர்க்கவன்றே விங்குவந்துசாய் ந்தருளிற்று. உகந்தார்க்குக் காட்சிகொடுக்கக் கொடிகட்டிக்கொண் டன்றே கிடக்கிறது. திண்ணியமதிளென்னுதல், திண்ணியகொடியென்னு தல். அவிழ்த்துக்கட்டாத கொடியென்கை. "வருவாரெல்லாரும்வாருங் கோள்" என்றுகட்டினகொடி. (இவள்திறத்தென்செய்திட்டாயே)இவளி ப்படிபிச்சேற வென்னமருந்திட்டாய்.அவனிவளறியாதபடி யொருமுகத் தாலே மருந்திடுமே. "மையலேற்றிமயக்க வுன்முகம் மாயமந்திரந்தா ன்கொலோ" என்று, தன்முகத்தைக்காட்டுகையிறே யவன்மருந்திடுகை யாவது. இவள்கேட்கிறதென்னென்னில்; அதுவாகிலதுக்கு ப்ரதிக்ரியை யாக, "த்ரைலோக்யராஜ்யம்ஸகலம் ஸீதாயா நாப்நுயாத்கலாம்" (த்ரைலோக்யராஜ்யம்ஸகலம் ஸீதாயாநாப்நுயாத்கலாம்) என்கிறவிவளைய வன்முன்னேநிறுத்தி, இவள்பட்டதெல்லா மவனைப்படுத்துவாளாக நி னைக்கிறாள்.

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு. (வட்கித்யாதி) "வட்கிலள்" என்று தொடங்கி, "கண்ண னேயென்னும்" என்னுமளவாக விவளுக்குப்பிறந்த வவஸ்தைகளையெல்லாம் விவ க்ஷித்து (இவளிவ்வவஸ்த்தையை) என்கிறார். "இவள்திறத்தென்செய்திட்டாய்" என்றத்தைக்கடாக்ஷித்தருளிச்செய்கிறார் (ப்ராப்தையாகைக்கித்யாதி)

"வட்கிலளிறையும்" - அல்பமும் லஜ்ஜையில்லாதவளிதிசப்தார்த்தஃ. வட் கு-லஜ்ஜை. "முடிந்தாள்" என்கிறதென்கொண்டென்ன (லஜ்ஜையையித்யாதி) வி வரணம் (ஸ்வரூபத்தையித்யாதி) அதெங்ஙனேயென்ன (நிரூபகத்தையித்யாதி) "ம ணிவண்ணா" என்றதுக்கு ரூடியைப்பற்றபாவம் (பர்த்ருநாமேத்யாதி) பர்த்ருநாம க்ரஹணம்பண்ணுகையாவது - சம்ச்லேஷத்திலபேக்ஷைதோற்றும்படி யவன்நாம த்தைச்சொல்லுகை. யோகத்தைப்பற்றபாவம் (பெற்றதாயித்யாதி) பெற்றதாய் முன்னேசொல்லவொண்ணாதோவென்ன (நான்கேட்டாலுமித்யாதி) ஸ்வரூபகுணா திகளிருக்க வடிவழகைச்சொல்லுவானென்னென்ன (காமிநியித்யாதி) விவரணம் (தானகப்பட்டவித்யாதி) அகப்பட்டதுறையிதுவென்கைக்கு நியாமகமேதென்ன; ப்ரமாணங்காட்டுவாராக பீடிகை (மெய்யேயித்யாதி) மெய்யென்று - வடிவும், சத்யமும். ப்ரக்ருதியாய் விட்டபடியெங்ஙனேயென்ன; ப்ரமாணம் (உன்சின்னமு

மித்யாதி) மணியினுடைய ஸ்வபாவத்தையுடையவனேயென்றுசப்தார்த்தம். "வண்ணம்" என்று - அழகாதல், சௌலப்யமாதல்; உபயத்தையு மருளிச்செய்கிறார் (வடிவழகையித்யாதி) தான்கேட்டாலும் மறைக்கும்படி வடிவழகு வாய்விட்டுகூவுவதன்றோவென்ன (அத்ருஷ்டபூர்வேத்யாதி) அயோத்யாகாண்டே தஶரதம்ப்ரதி ஸுமந்த்ரஃ. இதுவென்றது - வடிவழகாதல், லஜ்ஜையாதல்.

"மணிவண்ணா" என்றால் வாராதிருக்க, "வானம்" என்பானென்னென்ன (மணிவண்ணவித்யாதி) ஸ்ரீகஜேந்த்ராழ்வானைப்போலே யிவளுக்காபத்துண்டோவென்ன (பரமாபதமித்யாதி) "பரமாபதமாபந்நோமநஸாசிந்தயத்தரிம்" (பரமாபதமாபந்நோமநஸாசிந்தயத்தரிம்) இத்யாதி.

மேலுக்கவதாரிகை (மயங்கவித்யாதி) "அசுரருயிரெல்லாமுண்ட" என்றதுக்குபாவம் (நான்வரப்பார்த்தாலித்யாதி) "உட்குடை" என்றும், "அசுரர்" என்றும் சொல்லுகிறதுக்குபாவம் (எதிரிகளித்யாதி) போக்கினனென்றதே, "உண்ட" என்றதுக்குப்ரமாணம் (பபாவித்யாதி) ப்ரதமேம்ஸே ஏகோநவிம்ஶே ப்ரஹ்லாதசரிதே, "ஹ்ருதயஸ்தஸ்ததஸ்தஸ்யதம்வாயுமதிஶோஷணம் । பபௌஜநார்த்தநஃக்ருத்தஸ்ஸயயௌபவநஃக்ஷயம்" (ஹ்ருதயஸ்த்தஸ்ததஸ்தஸ்யதம்வாயுமதிஶோஷணம் । பபௌஜநார்த்தநஃக்ருத்தஸ்ஸயயௌபவநஃக்ஷயம்.) "மணிவண்ணா" என்றத்தைக்கடாக்ஷித்துபாவம் (வடிவழகுக்கித்யாதி) "உட்குடையசுரர்" என்று போரப்பொலியச்சொல்லி, "உண்டவொருவன்" என்றதுக்குபாவம் (தான்வீரபத்நியித்யாதி) அப்படிதன் நாயகன் வீரந்தோற்றச்சொல்லுமோவென்ன (த்வம்நீசேத்யாதி) "யதாத்ருப்தஶ்சமாதங்கஶ்ஶஶஶ்சஸஹிதௌவநே । ததாத்விரதவத்ராமஸ்த்வம்நீசஶஶவத்ஸ்ம்ருதஃ" (யதாத்ருப்தஶ்சமாதங்கஶ்ஶஶஶ்சஸஹிதௌவநே। ததாத்விரதவ்த்ராமஸ்த்வம்நீச ஶஶவத்ஸ்ம்ருதஃ) இதிஸுந்தரகாண்டே ராவணம் ப்ரதிஸீதா.

இப்படி ப்ரதிபந்தகங்களைப்போக்குமவன் வாக்காணமையாலே என்திவ்வளவு மத்யாஹரித்து. அநந்தரம் (என்னகுறையுண்டாய்) இத்யாதிசொல்லிக்கொள்வது. விவரணம் (விளம்பேத்யாதி)

"கட்கிலீ" என்றதுக்கவதாரிகை (உருகுங்காட்டிலித்யாதி) "கட்கிலீ" என்றத்தால் சித்தமான வதீந்த்ரியத்வத்தைப்பிடித்துத் தாய்மார் சங்கித்தத்தை பரிஹரித்துக்கொண்டு, "உன்னைக்காணுமாறருளாய்" என்றதுக்கவதாரிகை (அருளாலே பெறுவார்க்கித்யாதி) ஆனால், "நசக்ஷுஷாபஶ்யதி" (நசக்ஷுஷாபஶ்யதி) என்றிருக்கிறதேயென்ன (நசக்ஷுஷேத்யாதிவாக்யத்வயம்) அப்படி நாமார்க்குக் காட்டினோமென்ன (அர்ஜுநாதீத்யாதி) "கட்கிலீ" கண்ணுக்குவிஷயமாகாதவனே இத்யர்த்தஃ. கீழுக்தமான வர்த்தத்வயத்தையும் நாயகியினுடைய பாவத்தாலேயருளிச்செய்கிறார் (உன்னைக்காணவித்யாதிவாக்யத்வயத்தாலே)

ரூபௌதார்யேத்யாதிஶ்லோகங்களிரண்டும் - அடைவே, நாகரிகர்க்கும் வநவாஸிகளுக்கும் காட்டினதுக்குப்ரமாணம். "சந்த்ரகாந்தாநநம்ராமமதீவப்ரியதர்ஶநம் । ரூபௌதார்யகுணைஃபும்ஸாம்த்ருஷ்டிசித்தாபஹாரிணம்" (சந்த்ரகாந்தாநநம்ராமமதீவப்ரியதர்ஶநம் । ரூபௌதார்யகுணைஃபும்ஸாம்த்ருஷ்டிசித்தாபஹாரிணம்) இத்யயோத்யாகாண்டே. "ரூபஸம்ஹநநம்ல

ரூபம்ஸம்ஹநநம்லக்ஷ்மீம்ஸௌகுமார்யம்ஸுவேஷதாம்। தத்ருஶுர்விஸ்மிதாகாரா ராமஸ்ய வநவாஸிந: '' (ருபம்ஸம்ஹநநம்லக்ஷ்மீம்ஸௌகுமார்யம்ஸுவேஷதாம். தத்ருஶுர்விஸ்மிதாகாராராமஸ்யவநவாஸிந:) இத்யாரண்யகாண்டே. பெண்களுக்குக்காட்டினதுக்குப்ரமாணம் (தாஸாமித்யாதி) " தாஸாமாவிரபூச்சௌரிஸ்ஸ்மயமாநமுகாம்புஜ:। பீதாம்பரதரஸ்ஸ்ரக்வீஸாக்ஷாந்மந்மதமந்மத: " (தாஸாமாவிரபூச்சௌரிஸ்ஸ்மயமாநமுகாம்புஜ:। பீதாம்பரதரஸ்ஸ்ரக்வீஸாக்ஷாந்மந்மதமந்மத:) இதி ஸ்ரீபாகவதேகோபிகாகீதாநந்தரே. இதுக்கர்த்தம் (ஒருநீரித்யாதி) ஒருபாட்டம்-ஒருபாறல். " ஆவிரபூத் " (ஆவிரபூத்) என்றவநந்தரம் " ஸ்மயமாநமுகாம்புஜ: " (ஸ்மயமாநமுகாம்புஜ:) என்றதுக்குபாவம் (அவர்கள்முன்னேயித்யாதி) மறத்தை - கோபத்தை.

" திருவரங்கத்தாய் " என்றத்தைக்கடாக்ஷித்தருளிச்செய்கிறர் (அவதாரகாலத்திலித்யாதி) கொடியைச்சொன்னதுக்குபாவம் (உகந்தார்க்கித்யாதி) *திண்மைமதிளுக்குவிசேஷணம்.

"இட்டாய்" என்றதுக்கு ஸ்வாரஸ்யம் (இவளிப்படியித்யாதி) அவன்செய்தபடியேதென்ன (அவனிவளறியாதபடியித்யாதி) ஒருமுகத்தாலேயென்றது-சாடு. அவன்முகம்மருந்தோவென்ன (மையலேற்றியித்யாதி) பிச்சேற்றி யறிவுகெடுக்கவுன்முகமம்மான்பொடியோவென்றபடி. நாய்ச்சியார்திருமொழி இரண்டாந்திருமொழி நாலாம்பாட்டு, " பெய்யுமாமுகில் " இத்யாதி. அம்மான்பொடியாவது-சொக்குப்பொடி ........................................................... ......................*



# நான்காம்பாட்டு.

இட்டகாலிட்டகைகளாயிருக்குமெழுந்துலாய்மயங்குங்கைகூப்பும்
கட்டமேகாதலென்றுமூர்ச்சிக்குங்கடல்வண்ணகடியைகாணென்னும்
வட்டவாய்நேமிவலங்கையாவென்னும்வந்திடாயென்றென்றேமயங்குஞ்
சிட்டனேசெழுநீர்த்திருவரங்கத்தாயிவடிறத்தென்சிந்தித்தாயே.

## ஆறுயிரப்படி.

(இட்டகால்) இவள் பராதீநசேஷ்டிதமான கரசரணாத்யவயவங்களை யுடையளாயிருக்கும். இப்படி சேஷ்டிதக்ஷமையன்றியேயிருக்கச்செய்தே, அவஸாநசமயத்திலே ப்ரதீபம்போலே ஸஹஸா வெழுந்துலாவி மயங்கிக் கிடக்கும். பின்னையும் ப்ரபுத்தையாய்த் தன்னுடைய வ்யஸநாதிசயத்தாலே யுன்னைத் தொழாநிற்கும். ஸ்நேஹமானதித்தனை பொல்லாதாகாதே, ஸ்நேஹப்ரக்ருதிகளல்லாதாரொன்னபாக்யம்பண்ணினரோவென்று சொல்லி மோஹிக்கும். அநவதிகாதிசயாஸங்க்யேய கல்யாணகுணகணனென் றுன்னைச் சொல்லுகிற விதெல்லாம்பொய், நீசாலநிர்க்ருணன்காணென்று சொல்லும். வலத்திருக்கையிலே திருவாழியையேந்திக்கொண்டிருக்கிற வவ்வழகை நான் காணும்படி வந்திடா யென்று

சொல்ல வுபக்ரமிக்கும், முடியச்சொல்ல க்ஷமையல்லாமை வட்டவாய் நேமி வலங்கையா வென்னும், பின்னையும் நெடும்போது கூடவந்திடா வென்னும். வரக்காணுமையாலே பின்னையும் வந்திடா வென்னும். வரக் காணுமையாலே மயங்கும். இங்ஙனே செல்லாநிற்கும். செழுநீர்த்திருவ ரங்கத்தாய், இதுவோ வுன்னுடைய சீலவத்த்வம்; இவள்திறத் தென் செய்ய நினைத்தருளினு யென்கிருள். ........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அபரிச்சிந்நமஹிமனுய்வைத்து இவளை யார்த்தையாக்கின நீ, இவளளவி லென்னினைத்திருக்கிறு யென்கிருள்.

ஆர்த்தியினதிசயத்தாலே பரவசையாய், இட்டவிட்ட - இட்டுவைத்தவிடத்தே கிடக்கும்படியான. கால் - காலையும். கைகள் - கையையும். ஆய் - உடையளாய். இருக்கும் - இருக்கும். ஆர்த்தி முதிர்ந்தபடியாலே, ஸந்நிபதிதனைப்போலே, எழுந்து - பாரவஶ்யங்குலைந் தெழுந்திருந்து. உலாய் - உலாவாநிற்கும். மயங்கும் - அநந்தரத்திலே மோஹிக்கும். காலமுணர்த்த மோஹந் தெளிந்தவளவிலே, "வரக்கூடும்" என்று, கைகூப்பும் - அஞ்சலிபண்ணும். வரக்காணுமையாலே, காதல் - காதல். கட்டமே - கட்டமாயிருந்த தீ. என்று - என்றுவெறுத்து. மூர்ச்சிக்கும் - மூர்ச்சிக்கும். கடல்வண்ணு - தனக்குள்ளே யெல்லாவற்றையு மொதுக்கி ரக்ஷிக்கு மபரிச்சிந்நாகாரமான கடலின்படியையுடையவனே. கடியைகாண் - எனக்குக்கடியையாயிராநின்ருய்காண். என்னும் - என்னும். ஆஶ்ரிதரக்ஷணத்தில், வட்டவாய் - ஸர்வதோமுகமான. நேமி - திருவாழியை. வலங்கையா - வலக்கையிலேயுடையவனே. என்னும் - என்னும். நடுவேயிளைப்பாறி, வந்திடாய் - கையுந்திருவாழியுமாய்க்கொண்டு வந்திடாய். என்றென்றே - என்று பலகாலுமாவர்த்தித் தபேக்ஷித்து. மயங்கும் - "அபேக்ஷையிலாவ்ருத்தியாலே ஸ்வரூபமிழந்தோம், அவன் வாராமையாலே யபிமதமுமிழந்தோம்" என்றறிவழியாநிற்கும். இப்படியிவளை க்லேஶிப்பித்து, சிட்டனே - சிஷ்டபாவனைபண்ணி. செழுநீர்த்திருவரங்கத்தாய் - அழகிய நீர்க்கரையிலே கிடக்கிறவனே. இவள்திறத்து - வ்யதிரேகத்தில் மோஹிக்கும்படியான விவள்திறத்து. என் - என். சிந்தித்தாய் - நினைத்திருக்கிறுய்.

மோஹிப்பிக்கவே நினைத்திருக்கிறுயோ, தேற்றங் கொடுக்க நினைத்திருக்கிறுயோ வென்று கருத்து.......................................................*

## ஈடு - நான்காம்பாட்டு.

உம்மையொழிய ஜீவிக்கமாட்டாத விவள் திறத்துச் செய்தருள நினைத்திருக்கிற தென்னென்கிருள்.

( இட்டகா லிட்டகைகளா யிருக்கும் ) இவளுக்கு நீருடம்புகொடுக்கவேண்டா, இவளவயவங்க ளிவளதீநமாகப் பண்ணவமையும். "ஸகீபிர்ந்யஸ்தப்ரகீர்ண பரதந்த்ரவிபாண்டுராங்கீ" ( ஸகீபிர்ந்யஸ்தப்ரகீர்ண பரதந்த்ரவிபாண்டுராங்கீ ) என்று, தோழிமார் பொகட்டவிடத்தே கிடக்குமித்தனை. ஸ்வாதீநமல்லாமையாலே தோழிமாரிட்டுவைத்த காலும் கையுமாயிருக்கும்.

( எழுந்துலாய்மயங்கும் ) அவியும் விளக்குக் கிளர்ந்தெரியுமா போலே, அடியற்றவெழுச்சியு மடியற்றவுலாவுகையுமாயிராநின்றது. அது கிளம்பின ஸமநந்தரத்திலே அவியுமாபோலே மயங்காநின்றாள்.

( கைகூப்பும் ) உணர்த்தியில் தொழுமவளல்லள், மயங்கினால் தொழாதிருக்க வல்லளல்லள். ஸாதநபுத்த்யா தொழுமதில்லை, ஆற்றாமையாலே வருமது தவிரமாட்டாள்.

( கட்டமேகாதலென்று ) ஸாதநபுத்த்யாதொழுதாளாகில் "கட்டமேகாதல்" என்னக்கூடாதிறே. விஶ்லேஷத்தில் நலிவுக்குடலாகையாலே ப்ரேமம் தண்ணிதென்கிறாள்.

( கடல்வண்ணாகடியைகாணென்னும் ) கடல் சகல பதார்த்தங்களையும் தன்னுள்ளே யடக்கி, ஒன்றையொன்று நலியாதபடி நோக்குமாயிற்று ; அப்படியே சர்வரக்ஷகனான நீ நிர்க்க்ருணனாயென்னும். அன்றிக்கே, பிரிந்தார்க்குத் தரிக்கவொண்ணாதவடிவுபடைத்த நீ காதுகனாகாநின்றாயென்னும்.

( வட்டவாய்நேமி ) "சங்குசக்கரங்கள்" என்று சொல்லும் நிலையும் போச்சு. இப்போது கண்ணுக்கு விஷயமன்றிக்கே யிருக்கச்செய்தேயும், அதினுடைய சந்நிவேசம் நீஸ்த்தமாயிருக்கிறபடி. பிடித்தவிடமெங்கும் வாயாய்க்கிடீரிருப்பது. விரோதிபோக்கப் பரிகரமின்றிக்கேயிருக்கிறாயன்றே.

( வந்திடாயென்றென்றேமயங்கும் ) ஒருகால் "வந்திடாய்" என்றாலாறியிருக்க வல்லளல்லளே. விடாய்த்தவன் தாஹம் சமிக்குந்தனையும் "தண்ணீர், தண்ணீர்" என்னுமித்தனையிறே ; அப்படியே, "வந்திடாய், வந்திடாய்" என்றுருவ அத்தையே சொல்லும் ; மற்றொன்றறியாள். ( மயங்கும் ) வாஸனையே உபாத்யாயராகச் சொல்லு மத்தனை. ( என்றென்றே ) வெண்கலத்வநிபோலே சொல்லுக்குச்சொல் லோய்கிறபடி.

( சிட்டனே ) சிட்டன் - திருமாலென்றபடி. பிராட்டிவிஷயத்திலே வ்யாமோஹத்தை யுடையவனென்னுதல், பிராட்டியைத் தன் பக்கலிலே பித்தாக்கித் துடிக்கப்பண்ணு மவனென்னுதல். உம்முடைய படி சால வழகிதாயிருந்தது. உம்மைப்போலே சில சிஷ்டர்களமைந்திருந்ததிறே அபலைகள் குடிகெடுக்கைக்கு. அழகிதாக வாங்ருஶம்ஸ்ய ப்ரதாநராயிருந்தீர். ப்ரஹ்மஹத்யைகளைப் பண்ணிப் பூணூலை வெளுக்கவிட்டுக் கையிலே பவித்ரத்தையுமிட் டோத்தூச் சொல்லித் திரிவானைப்போலேயிருந்ததீ ரும்முடையபடி. ( செழுநீர்த்திருவரங்கத்தாய் ) ஶ்ரமஹரமான நீரையுடைய கோயில். தண்ணீர்ப்பந்தலிலே காதுகரொதுங்கினவோபாதியாகாதே நீரிவ்வூரில் சாய்ந்ததும். ( இவள்திறத் தென்சிந்தித்

தாயே ) சர்வஜ்ஞனுக்கும், இவளுக்கோடுகிற தசைக்குப் பரிஹாரம் சிந்திக்கவேணுமென்றிருக்கிருள். திருத்தாயார் தெளிவிருக்கிறபடி. "அவன் நினைவே கார்யமாய்த் தலைக்கட்டுவது" என்று அவனைக் காலைக்கட்டிக் கேட்கிருள். "ஶ்ரேயோத்யாயதிகேஶவ:" (ஶ்ரேயோத்யாயதிகேஶவ:) என்று, அநுகூலவிஷயத்தில் சிந்திப்பானு மவனிறே. இங்ஙனே மநோரதமாயே போமித்தனையோ, நிர்ணயாந்தமாகக் கடவதன்றே. ...*

## ஜீயர் அரும்பதம்.

நான்காம்பாட்டு. ( இட்டகாலித்யாதி ) "இவள்திறத் தென்சிந்தித்தாய்" என்றத்தைக் கடாக்ஷித் தவதாரிகை ( உம்மையொழியவித்யாதி )

"இட்டகாலிட்டகைகளாயிருக்கும்" என்கிற தாயாருடைய ஹார்த்தபாவம் ( இவளுக்கு நீரித்யாதி வாக்யத்வயம் ) என், இவளவயவங்க ளிவளதிந மல்லவோ வென்கிற சங்கையிலேயாதல், ஆராலே யிட்டகாலிட்டகை என்கிறசங்கையிலேயாத லருளிச்செய்கிருர் ( ஸகீபிரித்யாதி ) இஸ்ஸ்லோகத்துக் காகரங் கண்டுகொள்வது.

இட்டகா லிட்டகைகளாறு லெழுந் துலாவக் கூடுமோ வென்ன (அவியும் விளக்கித்யாதி) கீழே - மயங்குகிறதுக்கு முன்னே யெழுந் துலாவுகிறதுக்கு த்ருஷ்டாந்த மருளிச்செய்து, எழுந்துலாவினவநந்தரம் "மயங்கும்" என்றதுக்கு த்ருஷ்டாந்த மருளிச்செய்கிருர் ( அது கிளம்பின வித்யாதி ) எழுந்திருந் துலாவாநிற்கச்செய்தே மோஹிக்கு மிதிசப்தார்த்த:.

"மயங்கும் - கைகூப்பும்" என்று கூட்டி, வ்யதிரேகத்தாலு மந்வயத்தாலும் பாவம் ( உணர்த்தியிலித்யாதி ) ஸ்வாபதேசம் (ஸாதநேத்யாதி)

ஸாதநத்வேந தொழுகிருளென்றுலோ வென்ன ( ஸாதநபுத்த்யேத்யாதி ) "இது கட்டம்" என்னுங்காட்டில் பரிஹாரம்பிறந்த தாகாமையாலே மோஹியாநின்றுளென்றபடி.

"வண்ணம்" என்று - ரக்ஷகத்வஸ்வபாவமாதல், வடிவழகாதல். இரண்டர்த்தத்திலும் பாவமருளிச்செய்கிருர் ( கடலித்யாதி வாக்யத்வயத்தாலும், அன்றிக்கே யித்யாதியாலும் ) காதுகனுகையாவது - வடிவை யநுபவிப்பியாதிருக்கை.

"நேமி" என்றென்றைச் சொன்னதுக்கு பாவம் ( சங்குசக்கரங்களென்றித்யாதி ) காணுதிருக்க, "வட்டவாய்" என்றறியும்படி யென்னென்ன ( இப்போதித்யாதி ) "வட்டவாய்" என்றதுக்கு பாவம் ( பிடித்தவிடமித்யாதி ) இப்பதப்ரயோகத்துக்கு பாவம் ( விரோதியித்யாதி )

"என்றென்றே" என்கிறவீப்ஸைக்குபாவம் (ஒருகாலித்யாதிவாக்யத்ரயம்) "என்றென்றே" என்கிற வர்த்தமாநத்துக்குச்சேர- "மயங்கும்" என்றதும், "வந்திடாய்" என்றது மேககாலீநமாய்த் தோற்றுகையாலே; மயங்கிஞல் "வந்திடாய்" என்னக்கூடுமோவென்ன ( வாஸநையேயித்யாதி ) "என்றென்றே" என்கிற ஸ்வரத்துக்குத் தாளகதியிலே பாவம் (வெண்கலேத்யாதி)

"சிட்டன்" என்று - ஸ்ரீக்கு இஷ்டனென்று விவக்ஷித்து ( திருமாலென்றபடியென்றது ) சிஷ்டனென்று விவக்ஷித்து, வெறுப்பிலேயாக்கி யர்த்தாந்தரம்

( உம்முடையவித்யாதி ) "அழகிதாயிருந்தது" என்றதுக்குவிவரணம் ( உம்மைப் போலே யித்யாதிவாக்யத்வயம் ) நம்மை "ஆந்ருஸம்ஸ்ய ப்ரதாநரல்ல" என்று க்ஷேபிக்கிறதென், நம்வடிவிலே தெரியாதோ நம்முடைய வாந்ருஸம்ஸ்ய மென்ன ( ப்ரஹ்மஹத்யைகளையித்யாதி ) ஒத்து - வேதம். ஆந்ருஸம்ஸ்யப்ரதாநனல்லாவிட்டால் பரமபதத்திலே யிரோனே, அப்படியன்றிக்கே கோயிலிலேவந்து சாய்ந்தபோதே நானுந்ருஸம்ஸ்யப்ரதாந னென்னுமிட மெல்லாருமறியாரோவென்ன (தண்ணீர்ப்பந்தலிலேயித்யாதி)

கிளைப்போல் "என்செய்கின்றாய்" என்னாதே, "சிந்தித்தாய்" என்றதுக்குபாவம் ( ஸர்வஜ்ஞனுக்கு மித்யாதி ) "என்சிந்தித்தாய்" என்று அவனை ஸம்போதித்துக் கேட்கிறதுக்கு பாவம் ( திருத்தாயா ரித்யாதிவாக்ய த்வயம் ) அவன் றனப்படி சிந்திக்குமோவென்ன ( ஸ்ரோயோத்யாயதீத்யாதி ) "சிந்தித்தாயே" என்கிறவவதாரணார்த்தம் ( இங்ஙனே யித்யாதி வாக்யத்வயம் )

சிட்டனேசெழுநீர்த் திருவரங்கத்தாய், இட்டாலிட்டகைகளாயிருக்குமென்றுதொடங்கி, இவள்திறத் தென்சிந்தித்தாயே யித்யந்வயஃ.......................*



# ஐந்தாம்பாட்டு.

சிந்திக்குந்திசைக்குந்தேறுங்கைகூப்புந்திருவரங்கத்துள்ளாயென்னும்
வந்திக்குமாங்கேமழைக்கண்ணீர்மல்கவந்திடாயென்றென்றேமயங்கு
மந்திப்போதவுணனுடலிடந்தானேயலைகடல்கடைந்தவாரமுதே
சந்தித்துன்சரணஞ்சார்வதேவலித்ததையலைமையல்செய்தானே.

## ஆறாயிரப்படி.

( சிந்திக்கும் ) உன்னழகையு முன்னழகோடு பண்டு ஸம்ஶ்லேஷித்தபடியையும் நினைக்கும். நினையாமோஹிக்கும். நெடும்போது கூடலப்த ஸம்ஜ்ஞையாம். தன்னுடைய வபேக்ஷிதம் பெறுகைக்காக வுன்னைத்தொழாநிற்கும். தன்னுடைய வ்யஸநம் பொறுக்கமாட்டாமையாலே, திருவரங்கத்துள்ளாயென்னும். த்வந்நாதையாயிருந்துவைத்தே நாதஹீநையைப்போலே திருவடிகளிலே விழுந்துகிடக்கும். அங்ஙனேவிழுந்துகிடந்து, தன்னுடைய வழகிய கண்கள் நீர்மல்க, வந்திடாயென்றென்றேமயங்காநிற்கும். உன்றிருவடிகளை யொருகால் கண்டு ஸம்ஶ்லேஷிக்கவேணுமென்னு மாசையாலே தன்னை தரித்துக்கொண்டிருக்கிற விப்பெண்பிள்ளையை யிப்பாடுபடுத்தவேணுமோ. உன்னுடைய நிரவதிகமான வாஶ்ரிதவாத்ஸல்யமெல்லா மெங்கே போயிற்றென்கிறாள்......................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்ரிதரபேக்ஷிதஞ்செய்யும்படியான பவ்யதையையுடையையாயிருக்க, இவள் ப்ரதிக்ஷண மவஸ்த்தாபேதம் பிறக்கும்படியான வரதியையுடையளாகா நின்றாளென்கிறாள்.

அந்தி - ஸந்த்யையென்று. போது - ஒருகாலவிசேஷத்திலே. அவுணன்-அசுரனான ஹிரண்யனுடைய. உடல் - சரீரத்தை. இடந்தானே-பிளந்தவனாய். அலை-அலையையுடைத்தான. கடல் - கடலை. கடைந்த - கடைந்து. ஆரமுதே - நிரதிசய போக்யனாய் வைத்து. அப்படி காலநியதியுமின்றியே ப்ரபலவிரோதியு மின்றியே, அருந்தொழில் செய்வித்துக்கொள்ளவும் வேண்டாதபடி ; ஆந்தராநுபவமாத்ரமன்றியே, சந்தித்து - பாஹ்யமான சம்ச்லேஷத்தைப்பண்ணி. உன்-உன். சரணமே-திருவடிகளையே. சார்வது - சேர்ந்தநுபவிக்கவேணுமென்கிற. வலித்த - சிக்கெனவையுடையளா யிருக்கிற. தையலை - இப்பெண்பிள்ளையை. மையல்செய்தானே-மதிகெடுத்தவனே. இவள், சிந்திக்கும் - பூர்வஸம்ச்லேஷ ப்ரகாரத்தைச் சிந்தியாநிற்கும். திசைக்கும்-அதப்போதே சித்தியாமையாலே அறிவழியா நிற்கும். தேறும்-அசங்கிதமாகத் தேறாநிற்கும். அவ்வளவிலே வந்தாயாகக் கருதி, கை - கை. கூப்பும் - கூப்பாநிற்கும். ஆஸந்நமாக, திருவரங்கத்து - கோயிலிலே. உள்ளாய் - கண்வளர்ந்தருளுகிறவனே. என்னும் - என்று கூப்பிடாநிற்கும். வந்திக்கும் - அவ்வடிவழகை நினைத்துத் தலையாலே வணங்கும். அவ்வளவிலும் வரக்காணாமையாலே, ஆங்கே - அவ்விடந்தன்னிலே யிருந்து. மழை - குளிர்ந்த. கண்ணீர் - கண்ணீர். மல்க - மல்கும்படி. வந்திடாய் - வந்துகொள்ளாய். என்றென்றே - என்று பலகாலுஞ்சொல்லி. மயங்கும் - உக்தி பலவ்யாப்தையாகக் காணாமையாலே மோஹிக்கும். காமாதுரைகள் விகாரத்தி லிவளுக்கில்லாதனவில்லை யென்று கருத்து. ...*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

இவளுக்கு ப்ரதிக்ஷணம் பேதித் தொன்றோடொன்று சேராதே வருகிற வவஸ்தாபேதங்களை யறிவித்து, இவளை யிப்படி படுத்துகை யும்முடைய நீர்மைக்குப் போருமோவென்கிறாள்.

(சிந்திக்கும்) உம்முடைய ஸௌந்தர்யாதிகளையு மும்மோட்டைக்கலவியையும் நினைக்கும். முன்பிவ்வநுசந்தாநமு மின்றிக்கே யாயிற்றிருந்தது, மோஹத்தோபாதி யிதுவு மொரு விக்ருதியாயிருக்கிறபடி.

(திசைக்கும்) அப்போதே காணப்பெறாமையாலே மோஹிக்கும்.

(தேறும்) ஒரு ஹேதுவின்றிக்கே யிருக்கத் தேறாநின்றாள். இது தானும் பயாவஹமாயிருக்கிறதாயிற்று ; மோஹம் செல்லாநிற்க, அபேக்ஷிதம்பெற்றாரைப்போலே தேறுகை பயாவஹமிறே. சரமதசையில் பிறக்கும் தெளிவுக்கு மஞ்சவேணுமே. உய்ந்தபிள்ளைபாடும்போது, "கெட்டேன், இவள் 'தேறும்' என்பதே" என்று ஜீயரருளிச்செய்வராம்.

(கைகூப்பும்) இதிவளுக்கு ப்ரக்ருதி. கீழே "மயங்கும் கைகூப்பும்" என்றது, இங்கே (தேறும்கைகூப்பும்) என்றது ; அல்லாதனஸஞ்சாரியாய்ச்செல்லாநிற்க, இதொன்றும் ஸ்த்திரமாய்ச்செல்லாநிற்கும்; ஸ்வரூபாநுபந்தியாகையாலே. "நித்யாஞ்ஜலிபுடா:" (நித்யாஞ்ஜலிபுடா:) என்னக்கடவதிறே. மோஹத்திலு முணர்த்தியிலும் ஸத்தையுண்டே. "வழுவிலாவடிமைசெய்யவேண்டுநாம்" என்றதிறே நிலைநின்ற ஸ்வரூபம். அநுவர்த்தமாநமானதிறே பரமார்த்தமாவது.

(திருவரங்கத்துள்ளாயென்னும்) "பெருமாளேயென்னும்" என்று ஜீயர். அவ்வூரில் சம்பந்தங்கொண்டுபோலே காணு மவனையும் விரும்பிற்று.

(வந்திக்கும்) "திருவரங்கத்துள்ளாய்" என்றது நெஞ்சிலே வடிம்பிட்டு, "ஒருமுகமே, முறுவலே, ஒருவனேயமே" என்றுஸ்தோத்ரம்பண்ணாநின்றுளென்னுதல்; பக்நாபிமானையாய்த் திருவடிகளிலே விழுந்துகிடக்குமென்னுதல்.

(ஆங்கே) அவ்வவஸ்த்தையிலே. (மழைக்கண்ணீரித்யாதி)குளிர்ந்தகண்ணீர்மல்க, வந்திடாயென்றென்று சொல்லி, அச்சொலவோடே யறிவுகெடும்.

நினைத்தபோதாக வரப்போமோவென்ன (அந்திப்போது) "ꣳத்தஸ்ஸர்வமஹம்ஸர்வம்" (மத்தஸ்ஸர்வமஹம்ஸர்வம்) என்று தெளிந்திருப்பார்க்கோ வுதவலாவது, அறிவுகெடுவார்க் குதவலாகாதோ. அவன் வரத்துக் கவிருத்தயாயிருப்ப தொருகாலத்திலே, ஆசுரப்ரக்ருதியாயிருக்கிறவவுணனுடைய சரீரத்தைப் பிளந்து பொகட்டிலேயோ. தமப்பன் பகையானலோ வுதவலாவது, நீர் பகையானு லுதவலாகாதோ. இவ்வளவிலுதவாமைக்கு மேற்படப் பகையில்லையிறே. அதொருகால் சிறுக்கனுக்குதவினமையுண்டு, அது தப்பிற்றிறேயென்ன; பின்போ நீயுதவாதது(அலைகடல்கடைந்த) ப்ரயோஜநாந்தரபரர்க்கு மகப்படக் கடலைக்கடைந்து கொடுத்திலேயோ. உன்னைக்கொண் டொருப்ரயோஜநங் கொள்வார்க்கோ வுதவலாவது, உன்னையே "ப்ரயோஜநம்" என்றிருப்பார்க் குதவலாகாதோ. (ஆரமுதே) இவருடைய வம்ருதத்தைக்கொண்டாயிற் றவர்கள் கடல் கடைந்தது. (சந்தித்தித்யாதி) உன்னைக் கிட்டித் திருவடிகளைச் சாரவேணுமென்று வ்யவஸிதையாயிருக்கிற விவளை யிப்படி யறிவுகெடுப்பதே. ((வலித்த) ப்ராணனை பலாத்காரத்தாலே தரித்த.) அன்றிக்கே, உன்னைக்கிட்டி சந்நிதியிலே முடியுமித்தனையென்று ப்ராணனைதரித்திருக்கிறவளை யென்னுதல். ((வலித்த) அத்யவஸித்த.) "தாவத்ய ஹம்ஹ்ரு தஜிஜீவிஷெயழ" (தாவத்யஹம்தூதஜிஜீவிஷேயம்) என்று காணுமிருக்கிறது. (மையல்செய்தானே) உம்மை யாசைப்பட்டவளுக்கும் மயக்கமேயோ பலித்துவிட்டது.......................................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (சிந்திக்குமித்யாதி) "சிந்திக்கும்" என்றுதொடங்கி, "மயங்கும்" என்னுமளவுங்கடாக்ஷித் தருளிச்செய்கிருர் (இவளுக்கு ப்ரதிக்ஷணமித்யாதி) "அந்திப்போது" இத்யாதிகளைக் கடாக்ஷித்து (இவளையிப்படியித்யாதி)

சிந்தாவிஷயத்தையும் சொல்லாநின்றுகொண்டு, "சிந்திக்கும்" என்றதுக்கர்த்தமருளிச்செய்கிருர்(உம்முடையவித்யாதி) இவ்வநுசந்தாநம் ப்ரதிக்ஷணம் பேதி

த்த வவஸ்த்தையோவென்ன (முன்பித்யாதிவாக்யத்வயம்)இப்போது "சிந்திக்கும்" என்கையாலே - முன்புமோஹம் ஸித்தம்.

"திசைக்கும்" என்றது - திகைக்குமென்றாய், அதாவது-அறிவுகலங்குகையாய், (மோஹிக்கும்) என்றபடி.

தேறுகை நல்லதன்றோவென்ன (இதுதானுமித்யாதி) பயாவஹமெப்படியென்ன (மோஹமித்யாதி) இதுக்குநியாமகமேதென்ன (சரமதஶயிலித்யாதி) தேருமது பயாவஹ மென்கைக்கு சம்வாதம் (உய்ந்தபிள்ளையித்யாதி)

இது ஸ்வபாவமானபடி யெப்படியென்ன; ஸஹேதுகமாகவருளிச்செய்கிறார் (கீழேமயங்குமித்யாதி வாக்யத்ரயத்தாலே) இதொன்று மென்றது-அஞ்சலியை. ஸ்வரூபாநுபந்தி யாகையாலே யஞ்சலிநித்யமென்னுமதுக்கு ப்ரமாணம் (நித்யாஞ்சலீத்யாதி) "𑌉𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂 𑌲𑌕𑍍𑌷𑌣𑌂 𑌹𑍍𑌯𑍇𑌤𑌤𑍍𑌯𑌚𑍍𑌛𑍍𑌵𑍇𑌤𑌦𑍍𑌵𑍀𑌪𑌵𑌾𑌸𑌿𑌨𑌾𑌂 । 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌞𑍍𑌜𑌲𑌿𑌪𑍁𑌟𑌾 𑌹𑍃𑌷𑍍𑌟𑌾𑌃 𑌨𑌮𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌵𑌾𑌦𑌿𑌨𑌃" (முக்தாநாம்லக்ஷணம் ஹ்யேதத்யச்ச்வேத த்வீபவாஸிநாம் । நித்யாஞ்ஜலி புடாஹ்ருஷ்டாஃ நமஇத்யேவ வாதிநஃ) இதுக்குபபத்தி (மோஹத்திலுமித்யாதி) அத்தாலேதென்ன (வழுவிலாவித்யாதி) அதாவது - சத்தையுண்டானபோதே தத்கார்யமான வஞ்சலியும் நித்யமாய்ச்செல்லுமென்றபடி. மோஹமுமுணர்த்தியும் சஞ்சாரி, அஞ்சலி ஸ்த்திரமென்னுமத்தை யுபபாதிக்கிறார் (அநுவர்த்தமாநமானதித்யாதி)

பெருமாளே யென்றர்த்தமானால், "திருவரங்கத்துள்ளாய்" என்னவேணுமோவென்ன (அவ்வூரிலித்யாதி)

"𑌵𑌦𑌿 𑌅𑌭𑌿𑌵𑌾𑌦𑌨𑌸𑍍𑌤𑍁𑌤𑍍𑌯𑍋𑌃" (வதிஅபிவாதநஸ்துத்யோஃ) என்கிற தாதுவைப்பற்ற. "வந்திக்கும்" என்றதுக்கு - ஸ்துதிக்கும், சேவிக்குமென்றர்த்தத்வயமருளிச்செய்கிறார் (திருவரங்கத்துள்ளா யித்யாதி வாக்யத்வயத்தாலே) வடிம்பிட்டு - ப்ரேரித்து, வடிம்பிடுகை - தனியோட்டிக் கிளப்புகை. கீழே "கைகூப்பும்" என்கையாலே, இங்கே - சாஷ்டாங்கப்ரணமம் விவக்ஷிதம்.

ப்ரஹ்லாதனுக்காக ஹிரண்யனுடலைப் பிளந்தா னென்று விவக்ஷித்து, அத்தைச் சொல்லுகிற தாயாருடைய ஹார்த்தபாவம் (மத்தஸ்ஸர்வ மித்யாதி வாக்யத்வயம்) சப்தார்த்தம் (அவன்வரத்துக்கித்யாதி) "𑌮𑌤𑍍𑌤𑌃 𑌸𑌰𑍍𑌵𑌮𑌹𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌮𑌯𑌿 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌸𑌨𑌾𑌤𑌨𑍇" (மத்தஸ்ஸர்வமஹம்ஸர்வம்மயிஸர்வம்ஸநாதநே) இத்யாதி, ப்ரதமேம்ஶே ஏகோநவிம்ஶே ப்ரஹ்லாதசரிதே. "அவுணனுடலிடந்தானே" என்கிறவளுடைய ஹார்த்தபாவத்தை ப்ரகாராந்தரேண வருளிச்செய்கிறார் (தமப்பனித்யாதிவாக்யத்வயத்தாலே) அவன் பகையோவென்ன (இவ்வளவிலித்யாதி)

மேலுக்கவதாரிகை (அதொருகாலித்யாதிவாக்யத்வயம்) (அதொருகால்) இத்யாதிக்குக் கருத்து - அவதாரம் முன்பின்னுன்னு மிப்படி யநேக வ்யாபாரங்களைச் செய்தானென்று. இத்தைச் சொல்லுகிறவளுடைய ஹார்த்தபாவம் (உன்னைக்கொண்டித்யாதி வாக்யத்வயம்) "ஆரமுதே" என்றத்தைப்பற்ற (உன்னையே ப்ரயோஜநமென்றிருப்பார்க்கென்றது) "ஆரமுதே" என்றதுக்கு பாவம் (இவருடையவித்யாதி)

கிட்டி - ஆந்தரமாகவன்றிக்கே பாஹ்யமாகக்கிட்டி. சரணம் சார்வதே-சரணம் சாரவேணுமென்றே. முந்தினவர்த்தத்துக்கு, சரணம் சாருகை - சம்ஶ்லேஷிக்கை; வலிக்கை - வ்யவஸ்த்திதையாகை. த்விதீயார்த்தத்துக்கு, சரணம் சாருகை-

முடிகை ; சந்திக்கை - ப்ராபிக்கை. வலிக்கை - தரிக்கை. அப்படி தரித்திருந்தபேருண்டோவென்ன ( தாவத்த்யஹமித்யாதி ) "நசாஸ்யமாதாநபிதாநசாந்ய ஸ்நேஹாத்விஶிஷ்டோஸ்தி மயாஸமோவா । தாவத்த்யஹம் தூதஜிஜீவிஷேயம் யாவத்ப்ரவ்ருத்திம் ஶ்ருணுயாம்ப்ரியஸ்ய" (நசாஸ்யமாதாநபிதாநசாந்யஸ் ஸ்நேஹாத்விஶிஷ்டோஸ்திமயாஸமோவா। தாவத்த்யஹம்தூதஜிஜீவிஷேயம் யாவத்ப்ரவ்ருத்திம்ஸ்ருணுயாம்ப்ரியஸ்ய) இதி சுந்தரகாண்டே ஹநூமந்தம் ப்ரதிஸீதா. அவதாரணார்த்தம் ( உம்மையித்யாதி )

சிந்திக்குமென்று தொடங்கி, மையல்செய்தானே - இவள்திறத்தருளாயென்று மேலிற்பாட்டில் க்ரியையோடே யந்வயம். ..................................*

# ஆறும்பாட்டு.

மையல்செய்தென்னைமனங்கவர்ந்தானேயென்னுமாமாயனேயென்னுஞ்
செய்யவாய்மணியேயென்னுந்தண்புனல்சூழ்திருவரங்கத்துள்ளாயென்னு
வெய்யவாடண்டுசங்குசக்கரம்வில்லேந்தும்விண்ணோர்முதலென்னும் [ம்
பைகொள்பாம்பணையாயிவடிறத்தருளாய்பாவியேன்செயற்பாலதுவே.

## ஆறாயிரப்படி.

(மையல்செய்து) அதிக்ஷுத்ரமான காகத்தின்பக்கலிலேப்ரஹ்மாஸ்த்ரத்தைவிட்டருளின வுன்னுடைய சர்வவசீகரணமான ப்ரணயித்வகுணத்தாலே யென்னுடைய மநஸ்ஸை யபஹரித்தவனேயென்னும். வக்ஷ்யமாணமான வவனுடைய மஹாஸ்சர்யபூதமான சௌந்தர்யத்தை யநுசந்தித்து, மஹாஸ்சர்யபூதனேயென்றுசொல்லும். நிரதிசயதீப்தி யுக்தமாயிருப்பதொரு நீலரத்நம், செந்தாமரைபூத்தாப்போலே யிருந்த திருவுடம்பையும் திருப்பவளத்தையுமுடையவனே என்றவ்வழகைச்சொல்லும். அடியேனுக்காத்மதாநம் பண்ணுகைக்காகவன்றோ கோயிலிலேவந்து கண்வளர்ந்தருளுகிறதென்னும். சர்வஜ்ஞனுமாய் சர்வசக்தியுமா யத்யுக்ரமாயிருந்த ரதாங்கசங்கசார்ங்காதி திவ்யாயுதங்களை யேந்தி யருளுகிறதெனக்காகவன்றோவென்னும். இவளுக்காகநீகோயிலிலேவந்து கண்வளர்ந்தருளாநிற்கச்செய்தே, இவள்பக்கல் க்ருபைபண்ணியருளுகிறதில்லை; இதுக்குஹேது வென்னுடைய பாபமேயிறே யென்கிறாள்..................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்ரிதசம்ரக்ஷணார்த்தமான வாயுதபூர்த்தியை யுடையையாயிருக்கச்செய்தே யிவளை யிப்படி யலற்றும்படி பண்ணினநீ, இவளளவில் நான்செய்யக்கடவபடி யருளிச்செய்யவேணுமென்கிறாள்.

உன்னுடைய பவ்யதையாலே, என்னை-என்னை. மையல்செய்து - மயல்கொள்ளப்பண்ணி. மனம்-நெஞ்சை. கவர்ந்தானே-அபஹரித்தவனே. என்னும்-என்னும்.

மாமாயனே-மையல்கொள்ளுகைக்குப்பண்ணின நிரவதிகாஶ்சர்யசேஷ்டிதங்களை யுடையவனே. என்னும்-என்னும். பவ்யதாப்ரகாசகமானவுக்தியாலே ஸ்ப்புரிக்கிற, செய்ய-சிவந்த. வாய் - அதரசோபையையுடையையாய்க்கொண்டு. மணியே-மணி போலே முடிந்தாளலாம்படி சுலபனானவனே. என்னும்-என்னும். தண்-உன்னைக்கி ட்டி யென்பரிதாபந்திருகைக்கீடாகக்குளிர்ந்த. புனல்-நீர். சூழ்-சூழ்ந்த. திருவரங் கத்து-கோயிலிலே. உள்ளாய் - ஸந்நிஹிதனானவனே. என்னும்-என்னும். வெய்ய-விரோதிவிஷயத்தில் வெம்மையேவடிவான. வாள் தண்டு சங்கு சக்கரம் வில்-ஸ்ரீப ஞ்சாயுதங்களையும். ஏந்தும் - ப்ரணதரக்ஷாவிளம்பம் பொறுதாரைப்போலே யெப் போது மேந்தியிருந்து. அவ்வழகை, விண்ணோர்-சூரிகளுக்கநுபவிப்பித்து. முதல்-அவர்கள் சத்தாதிஹேதுபூதனானவனே.என்னும்-என்னும்.பை-உன்னுடையஸ்பர்ஶத் தாலே விரிகிறபணத்தை. கொள் - உடையனாய். பாம்பு - ஜாதிப்ரயுக்தமான மென் மைகுளிர்த்திநாற்றத்தாலே நிரதிசயபோக்யமான திருவநந்தாழ்வானை. அணையா ய்-படுக்கையாகவுடையவனே. இவள்திறத்து - நீபடுக்கைபொருந்திக்கிடக்கத்தறை ப்பட்டுக்கிடந்தலற்றுகிற விவள்திறத்து. பாவியேன் - இவளையிப்படி காணவைத்த பாபத்தையுடையநான். செயற்பாலது-செய்யும்ப்ரகாரம். அருளாய்-அருளிச்செய் யவேணும்.

நீயநாதரித்தவளவி லென்னாற்செய்யலாவதொரு பரிஹாரமுண்டாக வுன் னாலும் சொல்லமுடியாதென்றுகருத்து. மையல்செய்தென்று - பிச்சரைப்போலே பாவித்துக்காட்டியென்றுமாம். ............... ..............................*

## ஈடு - ஆறும்பாட்டு.

இவளிவ்வளவாபந்நையாயிருக்க, இவளார்த்திதீர்த்தருளா தொ ழிகைக்குக்காரண மென்னுடைய கர்மவிபாகமென்கிறாள்.

(மையல்செய்து) உணர்த்தியுண்டாகில் நெஞ்சிழவாள்காணும். எதிரிகளுடைய வநவதாநம்பார்த்திருந்து அவர்கள் கோட்டைகொள்ளு வாரைப்போலே. (என்னை) கடலைத்தறைகண்டா னென்னுமாபோலே. (மனங்கவர்ந்தானே) புழுகூற்றிச்சட்டம் பொகடுவாரைப்போலே. (மை யலித்யாதி) கொன்று கிழிச்சீரையறுப்பாரைப்போலே.

(மாமாயனேயென்னும்) மையல்செய்த ப்ரகாரங்கள். கலக்கிற சமயத்தில் தாழநின்று கையைக்காலைப்பிடித்துப் பரிமாறின பரிமாற்றங் காணு மிவள்நெஞ்சில் பட்டுக்கிடக்கிறது. ஸ்வதஸ்ஸித்தமானமேன்மை போலல்லவாயிற்று ப்ரணயித்வத்தாலே தாழநின்றநிலை. சம்ஶ்லேஷத சையி லாஶ்சர்யமான சேஷ்டிதங்களை யுடையவனேயென்னும். (செய்ய வாய்மணியேயென்னும்) இதுவுமந்தமாயங்களிலேயொன்று. தைர்யபங் கம்பிறந்து "நானுன்சரக்கன்றோ" என்றுசொல்லுகிறபோதை யதரத் தில் பழுப்பு. "ஸவிலாஸஸ்மிதாதாரம்" (ஸவிலாஸஸ்மிதாதாரம்) என்னக்கடவதிறே. (மணியே) புஷ்பம் விகசிதமாம்போ தெங்குமொக்க வொருசெவ்விபிறக்குமாபோலே, ஸ்மிதம்பண்ணுகிறபோது வடிவிலே யெங்குமொக்க வொருசெவ்விபிறந்தபடி. (தண்புனல்) ஸ்மிதத்தில்

குளிர்த்திபோலேயாயிற் றாரில்குளிர்த்தியும். அவ்வாயில் குளிர்த்திபோலேகாணு யிவ்வாயில்குளிர்த்தியும். (வாய்-இடம்.) (வெய்யவாளித்யாதி) திவ்யாயுதங்கள், எதிரிகளையழிக்கைக் குடலாயிருக்குமாபோலே காமிநிகளை யழிக்கைக்கு முடலாயிருக்குமிறே. உகப்பாரையு முகவாதாரையுமொக்கத்தோற்பிக்குமவை. முன்னே கைகண்டுவைக்கிறவையிறே. காணவேயெதிரிகள் மண்ணுண்ணும்படியான திவ்யாயுதங்களை தரித்திருக்கிற நீயென் விரோதிகளைப்போக்கி முகங்காட்டாதொழிவதே. (விண்ணோர்முதலென்னும்) திவ்யாயுதங்களோட்டைச் சேர்த்தியால் வந்தவழகைக்காட்டிநடத்த, அதுவே ஜீவநமாகவாயிற் றந்நாடுகிடப்பது. இல்லையாகில், அங்கே வினையுண்டாய் தரித்துக்கொண்டிருக்கிறானன்றே. (பைகொளித்யாதி) ஸ்மிதத்தோடு, திவ்யாயுதங்களோடு, நித்யவிபூதியுக்தனாயிருக்கிறவிருப்போடு, திருவநந்தாழ்வான்மேலே சாய்ந்தருளினத்தோடு வாசியற வெல்லா முத்தேஶ்யமாயிருக்கிறதாயிற்று. பகவத்விக்ரஹஸ்பர்ஶத்தாலுண்டான ஹர்ஷத்தாலே விகசிதமான பணங்களையுடையனான திருவநந்தாழ்வானைப் படுக்கையாகவுடையவனே. தனிப்படுக்கையிலே சாய்வதே நீர் இவள் தறைக்கிடைகிடக்க. (இவள்திறத்தருளாய்) படுக்கையில் சேர்த்திபெறுவிட்டால், நாட்டுக்குப்பண்ணுமருளுமின்றிக்கே யொழியவேணுமோ. (இவள்திறத்து) பாடோடிக்கிடக்கிற விவள்திறத்து. ( அருளாய் ) அருள்கொள்வார் தேட்டமானநீ, அருள்பெறில் ஜீவிக்குமிவளை யிப்படி தறைக்கிடைகிடக்க விட்டுவைப்பதே. ( (அருளாய்) அருளுகிறீரில்லையென்றபடி. ) ( பாவியேன் ) நீரருளர்தவராயல்ல, இவளதுபெறுவிடில் ஜீவிப்பாளாயல்ல, இதுக்கடி நான்பண்ணின பாபமிறே. “ ஒதூாவஒவோ தூமிமிதூொவஸீசு” ( மத்பாபமேவாத்ரநிமித்தமாஸீத் ) என்னுமாபோலே. (செயற்பாலது) என்னுடையசெயலிடத்தது அருளாமைக்கடி. (பாவியேன்செயலிடத்தது-இவள்பக்கலிலும்குறையில்லை, உம்முடையபக்கலிலும் குறையில்லை, இருவருமானசேர்த்திபெறவிருக்கிற வென்பாபமிறே யிதுக்குஹேது.) ..................................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு. (மையலித்யாதி) “பாவியேன் செயற்பாலதுவே” என்றத்தைப்பற்ற வவதாரிகை ( இவளிவ்வளவித்யாதி )

மையல்செய்தபின்பு “மனங்கவர்ந்தான்” என்றதுக்குபாவம் ( உணர்த்தியித்யாதி ) உணர்த்தியறப்பண்ணி நெஞ்சை யபஹரித்ததுக்கு த்ருஷ்டாந்தம் (எதிரிகளுடையவித்யாதி) மனங்கவர்ந்தானென்றதே, “என்னை” என்று விசேஷித்ததுக்கு பாவம் (கடலையித்யாதி) சரீரத்தைப்பொகட்டு சாராம்ஶமான்மாஸ்ஸை யபஹரித்ததுக்கு த்ருஷ்டாந்தம் ( புழுகூற்றியித்யாதி ) ப்ராந்தியைவிளைத்து சாராம்ஶத்தை யபஹரித்ததுக்கு த்ருஷ்டாந்தம் ( கொன்றித்யாதி ) கிழிச்சீரை - சாளிகைப்பை.

மேலுக்கெல்லாமவதாரிகை ( மையல்செய்தப்ரகாரங்ளென்று ) "மாமாய ன்" என்றுதொடங்கி "விண்ணோர்முதலென்னும்" என்னுமளவுங் கடாக்ஷித்து ( மையல்செய்தப்ரகாரங்களென்றது ) "மாயன்" - வ்யாமோஹயுக்தனென்றபடி. மாயமாவதேதென்ன ( கலக்கிறவித்யாதி ) "மா" என்றதுக்கு பாவம் ( ஸ்வதஸ் ஸித்தமானவித்யாதி ) "மா" - மஹத்தானவென்றபடி. இத்தால் - பரத்வத்திற்கா ட்டில் ப்ரணயித்வத்துக் காதிக்யமுண்டென்றபடி.

சிவப்புத்தோற்றுவது வார்த்தையாலேயாகையாலே, வார்த்தை சொல்லும் போதைச்சிவப்பாகவிவக்ஷித்தர்த்தம்(தைர்யபங்கமித்யாதி) ஸ்மிதத்தாலேவந்தசிவ ப்பாகவர்த்தாந்தரம் (ஸவிலாஸேத்யாதி) "ஸவிலாஸஸ்மிதாதாரம்பிப்ராணம் உ‑வவஜ‌ஜழ। த‑ஜஙதூ நவ‌ஂவ ஜு‌ராஂயாணஂஸ‑வு திஷ்டிதழ" (ஸவி லாஸஸ்மிதாதாரம் பிப்ராணம்முகபங்கஜம்। துங்கரக்தநகம்பத்ப்யாம் தரண்யாம் ஸுப்ரதிஷ்ட்டிதம்) இதிபஞ்சமேம்ஸே ஸப்ததஸே அக்ரூரத்ருஷ்ட பகவத்ரூபவர் ணனே. "மணி" என்றதுக்கர்த்தம் ( புஷ்பமித்யாதி )

கீழுக்தத்தை ரசோக்தியாகவருளிச்செய்கிறார் (அவ்வாயிலித்யா) இவ்வா யிலென்றது - இவ்விடத்திலென்றபடி.

காமிநி, அவயவங்களை விட்டாயுதங்களைச் சொல்லுவானெனனென்ன (திவ் யாயுதங்களித்யாதி) விவரணம் (உகப்பாரையுமித்யாதி) அதாவது - மேன்மையாலு மழகாலு மிருவரையு மழிக்குமென்றபடி. இவற்றிலீடுபடுகைக்கு, இவளிவற்றையறி ந்தபடி யெங்ஙனேயென்ன (முன்னேயித்யாதி) இது - சாடு; கைகண்டுவைக்கிற வை - அநுபவித்தவையென்றும், கையிலேகண்டு வைக்கிறவையென்றும்; முன் னே - பூர்வம், ப்ரத்யக்ஷத்திலேயென்றும். திவ்யாயுதங்களுக்கநந்தரம் "விண்ணோ ர்முதல்" என்றதுக்கு பாவம் ( திவ்யாயுதங்களோட்டையித்யாதி ) அவர்கள் ஜீவ நார்த்தமாகவோ தரிக்கிறதென்ன ( இல்லையாகிலித்யாதி ) ப்ரணயிநி "மாயன்" என்றாப்போலே சொல்லாதே, "விண்ணோர்முதல்" என்று நித்யவிபூதியுக்தனென வாகாரத்தைச் சொன்னதுக்கு பாவம் (ஸ்மிதத்தோடித்யாதி)

"பைகொள்" இத்யாதிக்கு சப்தார்த்தம் (பகவதித்யாதி) இப்பதப்ரயோ கத்துக்கு பாவம் ( தனிப்படுக்கையிலே யித்யாதி ) "அருளாய்" என்றதுக்குபாவ ம் ( படுக்கையிலித்யாதி ) "அருளாய்" - அருளுகிறிலை. பாடோடி - துஃகத்தோடு.

"பாவியேன்" என்றதுக்கு பாவம் ( நீரருளாதவராயித்யாதி ) "மாமாய ன்" என்று - நிரதிசய வ்யாமுக்தராகையைப்பற்ற ( நீரருளாதவரா யல்லவென் றது ) இத்தால் - அருளாதது உம்முடைய பக்கல் குறையல்ல வென்றபடி. உம்மு டையபக்கலிலே யறிவழிந்தமையைப்பற்ற ( இவளதுபெறுவிடில் ஜீவிப்பாளாயல் லவென்றது ) இத்தால் - உம்முடையபக்க லிவளதிமாத்ரப்ரவணையாகையாலே, நீ ரருளாத திவள் குறையல்லவென்றபடி. இதுக்கு ப்ரமாணம் ( மத்பாபமித்யாதி ) "நஊஙாயாநஅஊத‑ஸஹா ஜொஷாநாஜொநஅஊவவஸ। உதூாவஜெவாதூ நிமிதூஊஸீ‌நவு வெஸெவ‑நருநஸ" (நமந்த ராயாநசமாதுரஸ்யா தோஷோநராஜ்ஞோநசராகவஸ்ய। மத்பாபமேவாத்ரநிமித் தமாஸீத் வநப்ரவேஸோரகுநந்தநஸ்ய ) இத்யயோத்யாகாண்டே பரதஃ. செயலிட்டதென்றது - கர்மத்திட்டத தென்றபடி. செயலடியான வென்னுடைய தோஷ மென்றபடி.........................................................*

# ஏழாம்பாட்டு.

பாலதுன்பங்களின்பங்கள்படைத்தாய்பற்றிலார்பற்றநின்றானே,காலசக்கரத்தாய்கடலிடங்கொண்டகடல்வண்ணாகண்ணனேயென்னுஞ்,சேல்கொடண்புனல்சூழ்திருவரங்கத்தாயென்னுமென்றீர்த்தனேயென்னுங், கோலமாமழைக்கண்பனிமல்கவிருக்குமென்னுடைக்கோமளக்கொழுந்தே.

## ஆறாயிரப்படி.

(பாலதுன்பங்கள்) சுகதுஃகங்களையநுகூல ப்ரதிகூலாநுபாவ்யமாக நீபண்ணினவ்யவஸ்த்தையையென்னளவிலே விபர்யஸ்தமாக்கவோ பார்த்தருளிற்றென்றும்; உன்னுடைய ஶரண்யஶரண்யத்வ மெங்ஙனே போயிற்றென்றும்; ஆஶ்ரிதவிரோதிகளுடைய வாயுரவசாநகணைக ஸ்வபாவமானதிருவாழியை யேந்திக்கொண்டிருக்கிற தடியேனுக்காகவன்றோவென்றும்; திருப்பாற்கடலிலேவந்து கண்வளர்ந்தருளுகிறதும், ஸ்ரீநந்தகோபர் திருமகனாய்வந்து திருவவதாரம்பண்ணியருளினதும், கோயிலிலேவந்து கண்வளர்ந்தருளுகிறது மாஶ்ரிதார்த்தமாகவன்றோவென்றும்; த்வத்குணைகதாரகபோஷக போக்யத்வ விரோதியாய் மத்கதமானவசேஷதோஷங்களையும்போக்கினாப்போலே, த்வத்ஸம்ஶ்லேஷ விரோதியானவென்னுடைய பாபங்களையும்போக்கி யருளாயென்றும் சொல்லிக்கொண்டு;பிரிவென்னும் சொல்லுங்கூடப்பொறுக்கமாட்டாதபடி ம்ருதுஸ்வபாவையான வென்னுடையபெண்பிள்ளை, தன்னுடைய வழகியகண்கள் நீர்மல்கவிருக்குமென்கிறாள்.......................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்ரிதசம்ரக்ஷணார்த்தமான வர்ணவசாயித்வாதி குணங்களையுடையவன் ஸ்வபாவங்களைச்சொல்லி க்லேசியாநின்றாளென்கிறாள்.

என்னுடை - என்னுடைய. கோமளம் - ம்ருதுஸ்வபாவமான. கொழுந்து - லதாக்ரம்போலே மெல்லியளாயிருக்கிறவிவள். பால - இடந்தோறுமிடந்தோறும். துன்பங்கள் - அநாஶ்ரிதவிஷயத்திலே துன்பங்களையும். இன்பங்கள் - ஆஶ்ரிதரிடத்திலே யின்பங்களையும். படைத்தாய் - உண்டாக்கினவனாய். எத்தனையேனுமபராதிகளாயும், பற்று-புறப்பற்று. இலார் - அற்றாரான ஜயந்தன்போல்வாரும். பற்ற - பற்றும்படி. நின்றானே - அசரண்யசரண்யனாய்நிற்பானாய். காலசக்கரத்தாய் - ஆஶ்ரிதருடைய ப்ராப்திகாலம் நீயிட்டவழக்காம்படி மாஸருதுவத்ஸராதி பரிவ்ருத்தியையுடைத்தான காலசக்ரத்துக்கு நிர்வாஹகனாய்க்கொண்டு. ஆஶ்ரிதரக்ஷணார்த்தமாக, கடல் - திருப்பாற்கடலிலே. கடல்வண்ணா - கடலிலேயொருகடல் சாய்ந்தாப்போலே. இடங்கொண்ட - கண்வளர்ந்தருளுமவனாய். க்ஷீரார்ணவநிகேதநனான வந்தவாகாரத்தைவிட்டு, கண்ணனே - ரக்ஷணார்த்தமாகக்ருஷ்ணனாய்வந்தவனே. என்னும்-என்னும். அதுக்கும்பிற்பட்டார்க்காக, சேல்-சேல்களை. கொள்-உடைத்தான, தண்-குளிர்ந்த, புனல்-புனல். சூழ்-சூழ்ந்த. திருவரங்கத்தாய்-கோயிலிலேசந்நிஹித

ஞனவனே. என்னும் - என்னும். அந்த சௌலப்யத்திலே, என் - நானவகாஹிக்கைக்கு. தீர்த்தனே-துறையானவனே. என்னும்-என்னும்.இவ்வார்த்தத்வநியில்வரக்காணாமையாலே, கோலம் - தர்ஶநீயமாய். மா - பெருத்து. மழை - குளிர்ந்த. கண் - கண்ணானது. பனி-நீர். மல்க-விஞ்சும்படி. இருக்கும்-நிர்வ்யாபாரையாய் நிற்கும்.

இப்பாட்டு-திருத்தாயார்வார்த்தையான முன்னிலை யில்லாமையாலே, அவள் தன்னுடைய வுட்கொண்டிரங்குதல். அன்றியே, கடல்வண்ணா வென்றுமளவும்-தாய்வார்த்தையான நாயகன் முன்னிலையாய், கண்ணனேயென்று தொடங்கி-நாயகி பாசுரத்தைச்சொன்னாளாகவுமாம்.................................................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

ஆபரயங்களை யநுசந்தித்து, பொறுக்குமளவுகளிலே யன்றோ சுகதுஃகங்களைச் சுமத்துவது: இப்படியென்னைப் படுத்தலாமோ வென்னாநின்றாளென்கிறாள். " ஆஶ்ரிதரைவாழ்விக்கையு மநாஶ்ரிதரை நலிகையுமன்றிக்கே, இப்போது விபரீதமாயிற்றே வும்முடையபடி யென்கிறாள் " என்றுபிள்ளான். இக்கோமளக்கொழுந்துக்கு, கைம்முதலொன்று மில்லாதார் பற்றினால் ரக்ஷிக்கக்கடவநீர்மையுடையவன் சந்நிதியிலே யிதெல்லாம் படவேண்டுகிறதென்னோட்டை ஸம்பந்தமென்று மநோரதிக்கிறாள்.

(பாலவித்யாதி) இடமறிந்து சுகதுஃகங்களைப்படைத்தவனே. பாலென்றது - இடமென்றபடி. அப்பாலிப்பாலென்றால் - அவ்விடமிவ்விடமென்றபடி. பாலவாக-ஸ்த்தாநேஸ்த்தாநேயாக. உம்மைப்பிரிந்தாரெல்லாருமநுபவிக்கும் துஃகத்தை யிவளொருத்தியையு மநுபவிப்பிக்கப்பார்த்தா லிவளால் பொறுக்கப்போமோ. அங்ஙனன்றிக்கே, ஆஶ்ரிதர் வாழவுமநாஶ்ரிதர் கெடும்படியாகவுமன்றோ நீபண்ணிவைத்தது. பாலென்பது-முறை. * செய்குந்தாவருந்தீமை யுன்னடியார்க்குத்தீர்த்தசுரர்க்குத் தீமைகள் செய்குந்தனன்றோ. பண்டுகட்டின மர்யாதையுமிவளுக்கில்லையோ. பாலென்று - பாகமும், இயல்வும், இடமும், ந்யாயமும், இவைநாலுக்கும் பேர். தந்தாமால் பொறுக்கவொண்ணாதவை தாந்தாமே யேறிட்டுக்கொள்ளும்போது நம்மால் செய்யலாவதுண்டோ; நம்பக்கல் குறையில்லை, பேறுதந்தாமதானால் தாங்களும் சிலசெய்யவேணுமென்று அவனுக்குக்கருத்தாக (பற்றிலார்பற்றநின்றானே) ஒருகைம்முத லில்லாதார்க்காகவன்றோ விங்குவந்து சாய்ந்தருளிற்று. இக்கிடைநித்யசூரிகளுக்காகவோ. உம்முடைய பக்கல்பற்றறுத்துக்கொண்ட ஜயந்தன்போல்வார்க்கும் பற்றாயிருக்குமவரன்றோ நீர்; * தமேவசரணங்கதஃ அன்றோ அதுண்டானாலுமதுக்கொரு காலமுண்டேயென்ன (காலசக்கரத்தாய்) அக்காலசக்ரம் நீயிட்டவழக்கன்றோ. ஆஶ்ரிதர்க்காகப்பகலை யிரவாக்கினவனன்றோ. அன்றிக்கே,ப்ரதிபந்தகமுண்டேயென்னில்; ப்ரதிபந்தகத்துக்கு ம்ருத்யுவானதிருவாழியன்றோ தரிக்கிறது.பரிகாரமுண்டானாலும் நான்தாரஸ்த்தனன்

றோ யென்னவொண்ணாதே! (கடலிடங்கொண்ட கடல்வண்ணா)நீயெங்குளைக்காலம்பார்த்தன்றோ கிடக்கிறது. ஒருகடலொரு கடலிலேசாய்ந்தாப்போலே அணித்தாகத் திருப்பாற்கடலிலே சாய்ந்திலையோ ஆனாலங்கேவரலாகாதோவென்ன; அவ்வலையலைக்கேட்கமாட்டாத விடையர்க்கு மிடைச்சிகளுக்குமாக க்ருஷ்ணனாய்வந்துதவிற்றிலையோ வென்கிறாள் (கண்ணனேயென்னும்) [𑌨𑌾𑌗𑌪𑌰𑍍𑌯𑌙𑍍𑌕𑌮𑍁𑌤𑍍𑌸𑍃𑌜𑍍𑌯 𑌹𑍍𑌯𑌾𑌗𑌤𑍋 𑌮𑌥𑍁𑌰𑌾𑌂 𑌪𑍁𑌰𑍀𑌂] [நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்யஹ்யாகதோ மதுராம்புரீம்] என்று அக்கிடையைவிட்டு இடையிலேவந்துதவிற்றிலையோ.

அதுதப்பிற்றிறேயென்ன; அவ்வவதாரம் பரத்வமென்னும்படியன்றோ கோயிலிலேவந்து சாய்ந்தருளிற்று (சேல்கொளித்யாதி) * ஜலாந்மத்ஸ்யாவிவவன்றோ; ஜலசரஸத்த்வங்கள் ஜலத்தைப்பிரிந்து தரிக்கிலன்றோ விவளும்மைப்பிரிந்து தரிக்கவல்லளாவது. அவ்வூரிலே வர்த்திக்கிற வுமக்குப்போருமோ விவளுக்கு முகங்காட்டாதொழிகிறவிடம். (என்தீர்த்தனேயென்னும்) நீயுபேக்ஷித்தாலு முன்னையொழியவெனக்குச் செல்லாதபடிபண்ணினவனே யென்னுதல், (புறம்புள்ளாரோடுபொருந்தாதபடியான சுத்தியோகத்தைச்சொல்லுதல்,) நானிழிந்தாடும் துறை யென்னுதல்,

(கோலமித்யாதி) (தர்ஶநீயமாய்ப்பரந்து ஶ்ரமஹரமானகண் நீர்மல்கவிராநின்றாள்.) கண்ணுங்கண்ணநீருமான வழகு காட்டி லெறித்தநிலாவாவதே. இக்கண்ணநீருக்குஸாதநாநுஷ்ட்டாநத்தைப்பண்ணி பலவேளையிலேயிழப்பதே. (என்னுடைக்கோமளக்கொழுந்தே) கலக்கப்பொறாத மார்த்தவத்தையுடையவள் பிரியப்பொறுக்குமோ. "தசைமுறுகினால் வைத்யர்கண்முகம் பாராதாப்போலே, மகளவஸ்த்தையைக்கண்டு தளர்ந்து பெரியபெருமாண்முகம் பாராதேவார்த்தை சொல்லுகிறாள்" என்றருளிச்செய்வர். (கொழுந்து) உபக்நம் தேட்டமானவளவிலே தறையிலேபடரவிடுவதே. "𑌪𑌤𑌿𑌸𑌂𑌯𑍋𑌗𑌸𑍁𑌲𑌭𑌂 𑌵𑌯𑌃" (பதிஸம்யோகஸுலபம்வய:) இப்பாட்டிலொருதலைக்கட்டின்றிக்கே யிருக்குமிதுக்குக்கருத்து-"'பரிஹரிக்குமெல்லைகழிந்தாள், நாமிவர்க்குச் சொல்லுவதென்' என்று தன்னிலேநோவுபடுகிறாள்" என்று, வங்கிப்புரத்துநம்பிபணிக்கும்.*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. (பாலவித்யாதி) (இக்கோமளக்கொழுந்து) இத்யாதிவாக்யத்தை - "என்னுடைக்கோமளக்கொழுந்து" என்றத்தையும், "பற்றிலார்பற்றநின்றானே" என்றத்தையுங் கடாக்ஷித்துப் பாட்டுக்கவதாரிகையாக முந்தறவநுசந்தித்து; அநந்தரம், (ஆஶ்ரயங்களை) இத்யாதி வாக்யத்வயத்தையும் - "பாலதுன்பங்களின்பங்கள் படைத்தாய்" என்றதி னர்த்தத்வயாநுகுணமாக, பதாவதாரிகையாகவாதல் தாத்பர்யமாகவாதல நுசந்திப்பது. யத்வா. "பாலதுன்பங்களின்பங்கள் படைத்தாய்" என்கிறபதத்திலே நோக்காக - அதினர்த்தத்வயாநுகுணமாக விர

ண்டவதாரிகையும், "என்னுடைக்கோமளக்கொழுந்து - கோலமாமழைக்கண்பனி மல்கவிருக்கும், பற்றிலார்பற்றநின்றானே" என்கிறபதங்களிலே நோக்காக வோர வதாரிகையும்; ஆக, மூன்றவதாரிகையும் க்ரமேண வருளிச்செய்கிறார் (ஆஸ்ரய ங்களை யித்யாதி வாக்யத்ரயத்தாலே) என்னுதல். ஆஸ்ரயங்களையநுசந்தித்தென் றது - அவர்களவர்களளவுகளை யநுசந்தித்தென்றபடி. பொறுக்கத் தக்கினவர்களை விசாரித்தென்றபடி. இப்போது விபரீதமாகையாவது - ஆஸ்ரிதையானவிவளை துஃக மநுபவிப்பிக்கை. மநோரதிக்கிறா னென்றது - ஸ்வகதமாக வெண்ணுகிறா னென்றபடி.

சப்தார்த்தம் (இடமறிந்தித்யாதி) "பால்" என்றால் - இடத்தைச் சொல்லுமோவென்ன; லௌகிகப்ரயோகம் (அப்பாலித்யாதி) "பாலதுன்பங்களின் பங்கள்படைத்தாய்" என்கிற தலைமகள் வார்த்தையை யநுவதிக்கிற திருத்தாயாருடைய ஹார்த்தபாவம் (உம்மைப்பிரிந்தாரித்யர்தி) "பாலதுன்பங்கள்" இத்யாதி - திருத்தாயார் வார்த்தையாகில், (முகம்பாராதே வார்த்தை சொல்லுகிறாள்) என்கிற மேலில் வாக்யத்தோடே விரோதிக்கும். (இப்படி யென்னைப்படுத்தலாமோவென்னாநின்றாள்) என்கையாலே - தலைமகள்வார்த்தை யென்னுமிடம் ஸ்புடமிறே. அர்த்தாந்தரம் (அங்ஙனன்றிக்கே ஆஸ்ரிதரித்யாதி) "பால்" என்றால்-இவ்வாகாரத்வயத்தையுங் காட்டுமோவென்ன (பாலென்பது முறையென்று) கீழ்ச் சொன்ன வாகாரத்வயத்துக்கும் ப்ரமாணம் (செய்குந்தாவித்யாதி) ஆக "பால" இத்யாதிக்கு - பொறுக்கத்தக்க விடமறிந்து தத்தத் ஸ்த்தாநங்களிலே சுகதுஃகங்களைப் படைத்தவனே யென்று முந்தினவர்த்தம்; பால-பொறுக்கத்தக்க விடங்களிலே யென்று சப்தார்த்தம்; (அறிந்து) என்றது - அர்த்தாத்ஸித்தம். ஆஸ்ரிதரான முறையிலே சுகத்தையும் அநாஸ்ரிதரானமுறையிலே துஃகத்தையும் படைத்தவனே யென்றிரண்டாமர்த்தம். இரண்டாமர்த்தத்துக்குச் சேர ஹார்த்தபாவம் (பண்டுகட்டினவித்யாதி) "பால்" என்றால் - இடத்தையும் முறையையுங்காட்டுமோவென்ன (பாலென்றித்யாதி) ந்யாயம் - முறை.

கீழிற்பதத்தி லர்த்தத்வயாநுகுணமாக மேலுக்கவதாரிகாத்வயம் (தந்தாமாலித்யாதிவாக்யத்வயம்) த்விதீயசங்கதிக்குத்தரம் (ஒருகைம்முதலித்யாதிவாக்யத்வயம்) ப்ரதமஸங்கதிக்குத்தரம் (உம்முடையபக்கலித்யாதி) ஜயந்தன் பற்றினானேவென்ன, ப்ரமாணம் (தமேவேத்யாதி) "ஸவித்ராஸபரித்யக்தஃ" (ஸபித்ராசபரித்யக்தஃ) இத்யாதி.

"ஜயந்தன்போல்வார்க்கும்" இத்யாதிக்கநுகுணமாக ஸங்கதி (அதுண்டானாலுமித்யாதி) அதுண்டானாலும் - ஸாபராதர்க்கும் பற்றாயிருக்குமதுண்டானாலுமென்றபடி. அப்படி காலம் நானிட்ட வழக்காக விநியோகங்கொள்ளக் கண்டதுண்டோ வென்ன (ஆஸ்ரிதர்க்காகவித்யாதி) "ஒருகைம்முதலில்லாதார்" இத்யாதிக்கநுகுணமாக ஸங்கதி (அன்றிக்கேயித்யாதி) "காலம்" என்று - காலத்தையும், ம்ருத்யுவையும் சொல்லுகிறது. காலசக்ரநிர்வாஹக னென்று முந்தினவர்த்தம், ம்ருத்யுவான சக்கரத்தையுடையவனென்றிரண்டாமர்த்தம்.

"காலசக்கரத்தாய்" என்றதின் முந்தின வர்த்தத்தால் பலிதம் - ஆஸ்ரிதரபேக்ஷாகாலமே ரக்ஷிக்கைக்குக் காலமென்றாய், அப்படி யாஸ்ரித ரபேக்ஷாகாலம் பார்த்திருந்த விடமுண்டோவென்னவென்று ஸங்கதியை விவக்ஷித்து பாவாந்தரம் (நீ யெங்களை யித்யாதி) "கடல்வண்ணா" என்னாதே, "கடலிடங்கொண்ட" என்று விசேஷித்ததுக்கு பாவம் (ஒருகடலித்யாதி)

( அவ்வலையலைக்கேட்கமாட்டாத ) என்றவிடத்திலே - ஏகதத்விதத்ரிதர்கள் கதையை நினைப்பது. ( அலையலை ) அலையென்று - சப்தமாய், அலையலையென்று-மஹாசப்தமென்றபடி. கடலிடங்கொண்டவனே கண்ணனாகவந்தானென்ன, ப்ரமாணம் (நாகபர்யங்கமித்யாதி) "ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந:" (ஏஷநாராயணஶ்ஸ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதநঃ ) இத்யாதி. இடையிலே-மத்யே, இடையரிலே யென்றும்.

" சேல்கொள் " இத்யாதி பதப்ரயோகத்துக்கு பாவம் ( ஜலாதித்யாதி வாக்யத்வயம் ) " திருவரங்கத்தாய் " என்றதுக்கு பாவம் ( அவ்வூரிலேயித்யாதி )

" தீர்த்தன் " என்றதுக்கு முந்தினவர்த்தம் - பாவநத்வத்தைப் பற்ற ; இரண்டாவது - சௌலப்யத்தைப்பற்ற. முந்தினவர்த்தத்துக்கு சப்தநிர்வாஹம், தீர்த்தன் - உனக்கே யற்றுத்திரப்பண்ணினவனென்று ; இரண்டாமர்த்தத்துக்கு, இழிந்தாடுந் துறைபோலே சுலபனாயிருக்கிறவனே யென்று.

மழை - குளிர்த்தி. " கோலமாமழைக்கண் " இத்யாதி பதப்ரயோகத்துக்கு பாவம் ( கண்ணும்கண்ணநீருமித்யாதி வாக்யத்வயம் ) " தண்புனல்சூழ்திருவரங்கத்தாய் " என்றத்தைப்பற்ற ( சாதநாநுஷ்டாநத்தைப் பண்ணி யென்றது )

"கோமளம்" என்றதுக்கு பாவம் (கலக்கவித்யாதி) கலக்கப்பொருத - காடாலிங்கநார்த்தமாக விட்டணைக்கவும் பொருத வென்றபடி. கீழ்ப்பாட்டுக்களிற் போலே "திருவரங்கத்தாய்" என்று அவனை சம்போதியாதே, ஸ்வகதமாகச் சொல்லுகிறதுக்கு பாவம் (தசைமுறுகினலித்யாதி) ( அருளிச்செய்வர் ) ஜீயரென்றத் யாஹார்யம். "கொழுந்து" என்றதுக்கு பாவம் ( உபக்ரமித்யாதி ) "கொழுந்து" என்றதுக்கு ப்ரமாணம் ( பதீத்யாதி ) " பதிஸம்யோகஸுலபம் வயோத்ருஷ்ட்வா ச மே பிதா । சிந்தார்ணவகத: பாரம் நாஸஸாதாப்லவோ யதா " ( பதிஸம்யோகஸுலபம் வயோத்ருஷ்ட்வாசமேபிதா । சிந்தார்ணவகதঃபாரம்நாஸஸாதாப்லவோயதா ) இதி அநஸூயாம் ப்ரதிஸீதா.

" தசைமுறுகினல் " இத்யாதிவாக்யவிவரணமாதல், க்ரியாபதமில்லாமைக்குபாவமாதல் (இப்பாட்டிலித்யாதி) நலைக்கட்டு - க்ரியாபதம். "கோலமாமழைக்கண்" இத்யாதிக்கு -" தர்ஶநீயமாய்ப் பெருத்துக்குளிர்ந்த கண்ணானது நீர் விஞ்சும்படி நிர்வ்யாபாராயாயிராநிற்கும் " என்றுரையில் சப்தார்த்தம்..................*

# எட்டாம்பாட்டு.

கொழுந்துவானவர்கட்கென்னுங்குன்றேந்திக்கோநிரைகாத்தவனென்னு
மழுந்தொழுமாவியனலவெவ்வுயிர்க்குமஞ்சனவண்ணனேயென்னு [ஞ்
மெழுந்துமேனோக்கியிமைப்பிலளிருக்குமெங்ஙனேநோக்குகேனென்னு
செழுந்தடம்புனல்சூழ்திருவரங்கத்தாயென்செய்கேனென்றிருமகட்கே.

## ஆறாயிரப்படி.

(கொழுந்து) ஸ்ரீவைகுண்டநிலயனாய் * அயர்வறுமமரர்க ளதிபதியா யவாப்த ஸமஸ்தகாமனாயிருந்துவைத்து, கோபவேஷபூஷிதனாய்க்

கொண்டு பிறந்தருளி, வர்ஷத்திலே யதிபீட்யமாநமான கோப கோபி ஜநங்களையும் பசுக்களையும் ஸ்ரீகோவர்த்தநத்தையெடுத்து ரக்ஷித்தருளி ன வுன்னுடைய நிரவதிகமான காருண்யகுணத்துக்குங்கூட விஷயமல் லலேனோவென்னும். பின்னையும் நீபார்த்தருளா தொழிந்தவாறே யழாநிற் கும். தன்னுடைய வபேக்ஷிதம்பெறுகைக்காக வுன்னைத்தொழாநிற்கும். தன்னுடைய வாத்மஸ்வரூப மங்காரமயமாம்படி தீர்க்கோஷ்ண நிஶ்வா ஸத்தைப்பண்ணும். என்னுடைய ஸந்தாபமெல்லாம் போம்படி, உன் னுடைய வதிசீதளமான வஞ்சனமேனியைக்காட்டி யருளாயென்னும். நீவரும்படி காணவேணுமென் றெழுந்திருந்த நிமிஷலோசனையா யாகா சத்தைப் பார்த்துக்கொண்டிருக்கும். அங்குக்காணாதொழிந்தவாறே, உ ன்னைக்காண்கைக் குபாயமேதோவென்னும். செழுந்தடம்புனல்சூழ் தி ருவரங்கத்தாய், என்திருமகட்கினி நான்செய்வ தென்னென்று கூப்பி டுகிறாள்... ... ... ... ... ... ... ... ... ... ... ... *

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், உன்னுடைய வதிமாநுஷசேஷ்டிதத்திலே யகப்பட்டு மேன்மே லன க்லிஷ்டையாகிற விவளுக் கென்செய்வேனென்கிறாள்.

வானவர்கட்கு-நித்யசூரிகளுக்கு. கொழுந்து-சிரோபூதனானவன். என்னும்-என்னும். அந்தமேன்மையோடேகூட ஆஶ்ரிதரக்ஷணார்த்தமாக வவதரித்து, குன்று-மலையை. ஏந்தி-அநாயாஸேநவேந்தி. கோநிரை-பசுக்களை. காத்தவன்-ரக்ஷித்தவதி மாநுஷசேஷ்டிதத்தையுடையவனே. என்னும்-என்னும். அந்தரக்ஷணம் தன்னளவி லேபலியாமையாலே, அழும்-பக்திபரவசரைப்போலே கண்ணும் கண்ணநீருமாயிரு க்கும். தொழும்-ப்ரபந்நரைப்போலே அஞ்சலிபந்தம்பண்ணாநிற்கும். இரண்டும்பலி யாமையாலே, ஆவி-அதாஹ்யமான ஆத்மவஸ்து. அனல-தக்தமாம்படி. வெ-வெவ் விதாக. உயிர்க்கும்-மூச்சுவிடும். அஞ்சனவண்ணனே - இப்படியார்த்தையாக்கின ஶ்யாமளவிக்ரஹத்தையுடையவனே. என்னும் - என்னும். "இக்குரலைக்கேட்டுவரக் கூடும்" என்று, மேல்-மேலே. எழுந்து-தலையெடுத்து. நோக்கி-பார்த்து. இமைப்பி லள்-இமையாதே. இருக்கும்-இருக்கும். எங்ஙனே-எந்தப்ரகாரத்தாலே. நோக்குகே ன்-உன்னைக்காண்பேன். என்னும்-என்னும். செழு-தர்ஶநீயமாய். தடம் - பெருத்த. புனல்-புனல். சூழ்-சூழ்ந்த. திருவரங்கத்தாய் - கோயிலிலேஸந்நிஹிதனானவனே. என்-என்னுடைய. திருமகட்கு-லக்ஷ்மீஸமானையானவிவளுக்கு. என்-எத்தை. செய் கேன்-செய்வேன்.

ஆர்த்திக்கடியான ப்ரேமத்தை யளவுபடுத்துவேனோ, வாராதவுன்னை வரப் பண்ணுவேனோ, இரண்டும் முடியாதிறேயென்று கருத்து ......................... .....*

## ஈடு - எட்டாம்பாட்டு.

இவளுக்கு மேன்மேலனவருகிறநோவுகள் தீர்க்கைக்கு நான்செ ய்வதென்னென்கிறாள்.

(கொழுந்துவானவர்கட்கென்னும்) நித்யசூரிகளுக்கும் தலையான வனேயென்னும். அன்றியே, அவர்கள் வேராகத்தான் கொழுந்தானவ னென்னுதல். (அவர்களாலே லப்தஸத்தாகனாகை.)

(குன்றேந்தி) லோகாந்தரத்தில் பரிமாற்றந்தேடவேணுமோ, பசுக்களுக்கும் தத்ப்ராயரான விடையர்க்கு முதவினவனன்றோ. மேன்மையில்லாமையிழக்கிறேனோ, நீர்மையில்லாமை யிழக்கிறேனோவென்னும்.

(அழும்) மலையைதரித்தொருவர்ஷத்தைப்பரிஹரித்த நீரிவ்வர்ஷத்தைப் பரிஹரித்தாலாகாதோ. " வஹுயாஸ தஃவவஷிணி " (பஹுதாஸந்ததது:கவர்ஷிணி), என்கிறவிது பரிஹரித்தாலாகாதோ. (அழும்) பாலர்செய்வதையும் செய்யுமென்னுதல், ஸ்நேஹிகள் செய்வதையும் செய்யுமென்னுதல்.

(தொழும்) புகலற்றார்செய்வதைச் செய்யுமென்னுதல், வேதாந்தஜ்ஞாநமுடையார் செய்வதைச்செய்யுமென்னுதல்.

(ஆவியனலவெவ்வுயிர்க்கும்) தொழுதவநந்தரம் வரக்காணாமையாலே, " ப்ரஹ்மாஸ்த்ரம்வாய்மடிந்தது " என்று, அதாஹ்யமான வாத்மவஸ்து அக்நிமயமாம்படி நெடுமூச்செறியும். "தீர்க்கமுஷ்ணம்சநிஶ்வஸ்ய" (தீர்க்கமுஷ்ணம்சநிஶ்வஸ்ய) என்கிறபடியே.

(அஞ்சனவண்ணனேயென்னும்) நெருப்பிலே நீரைச்சொரிந்தாப்போலே அக்குளிர்ந்த வடிவைக்கொண்டுவந்து தோற்றவல்லையேயென்னும். " மேகஶ்யாமம் " (மேகஶ்யாமம்) என்னும்வடிவிறே - கைகேயிவார்த்தையால் பிறந்ததாபமடைய வாறுங்கிடீ! ரவ்வடிவழகிலே விழிக்கப்பெற்றோமாகி லென்றார்களிறே.

(எழுந்தித்யாதி) வடிவைநினைத்தவாறே தரித்தெழுந்திருந்து, வரஸம்பாவனையுள்ள திக்கைப்பார்த்து, "ப்ரதமபரிஸ்பந்தமேதொடங்கிக் காணவேணும்" என்றிமைகொட்டாதே பார்த்துக்கொண்டிருக்கும்.

(எங்ஙனேநோக்குகேனென்னும்) தான்பார்த்ததிக்கில் வரக்காணாமையாலே, "பின்னேக்கிவந்துகட்டிக்கொள்ளும்" என்று புரிந்துபாரா நிற்கும். (எழுந்து மேல்நோக்கி) வடிவைநினைத்தவாறே தளர்த்தியிலே யெழுந்திருந்து, " ஆனைக்குதவினாப்போலே வரக்கூடும் " என்று மேல்நோக்கிப்பார்த்து, " ப்ரதமபரிஸ்பந்தமேதொடங்கிக்காணவேணும் " என்றிமைகொட்டாதே யிருக்கும்; (எங்ஙனேநோக்குகேனென்னும்) பின்னையும்தோற்றக்காணாமையாலே, நானுன்னைக்காணும் விரகேதென்னும்.

(செழுந்தடம்புனல்சூழ் திருவரங்கத்தாய்) அழகிதாய்ப்பெருத்த நீர்சூழ்ந்தகோயிலை யிடமாகவுடையவனே. இப்படி ப்ரமஹரமானதேசத்திலே நீர்வந்துசாய்ந்த திவள்வரவுபார்த்தன்றோ. அத்தலை யித்தலையாயிற்றோ. ( என்செய்கேன் ) கர்த்தவ்யமடங்கலும் தானேயநுஷ்டித்தாள், நானினிச்செய்வதென். உபாயாந்தரசாத்யமோ வும்முடையதர்மம். (என்திருமகட்கே) இவ்ளையிழக்கலாமோவுமக்கு. உம்மையொருவரை மாசைப்பட்ட வெற்றமன்றோவவளது, உம்மையுமவளையும்

சேரவாசைப்பட்ட வேற்சமாடை யவளல்லளோவிவள். சாக்ஷால்லக்ஷ்மியோடொக்கச் சொல்லலாமாகாதே யிவளை............................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (கொழுந்தித்யாதி) "கொழுந்துவானவர்கட்கென்னும்" என்றுதொடங்கி "என்திருமகட்கு - என்செய்கேன்" என்னுமளவுங்கடாக்ஷித்தவதாரிகை (இவளுக்கித்யாதி)

கொழுந்து வ்ருக்ஷத்துக்கு ப்ரதாநமாகையாலே (தலையானவனேயென்றது) இரண்டாமர்த்தத்துக்கு, அவர்கள் வ்யஸநத்துக்குத்தா னபிமாநியென்றுபலிதம்.

கீழ்ப்பதத்தோடே யிப்பதத்துக்கு ஸங்கதி (லோகாந்தரத்திலித்யாதி) "கோன், நிரை" என்று பதச்சேதமாய் (தத்ப்ராயரானவிடையர்) என்னுதல். கோநிரையென்று - பசுநிரையென்னுதல். "கொழுந்துவானவர்கட்கு" என்றத்தையுங் கூட்டிபாவம் (மேன்மையில்லாமையித்யாதி)

"குன்றேந்தி" என்றத்தோடேகூட்டி "அழும்" என்றதுக்குபாவம் (மலையையித்யாதி) விவரணம் (பஹுதேத்யாதி) "அவிவேககநாந்தदिங்முகே பஹுதா ஸந்தததுःகவர்ஷிணி" (அவிவேககநாந்ததிங்முகேபஹுதாஸந்ததது:கவர்ஷிணி) இதிஸ்தோத்ரே. "அழும்" என்றதுக்கர்த்தத்வயம் (பாலரித்யாதிவாக்யத்வயம்)

"தொழும்" என்றதுக்கர்த்தத்வயம் (புகலற்றரித்யாதிவாக்யத்வயம்) புகலற்றாென்றது - "க்ருதாபராதஸ்ய" (க்ருதாபராதஸ்ய) இத்யாதிப்படியே சாபராதரென்றபடி. வேதாந்தஜ்ஞாநமுடையாரென்றது - "அஞ்ஜலி: பரமா முத்ரா" (அஞ்ஜலி:பரமாமுத்ரா) இத்யாதிப்படியே ப்ரபத்திவைபவமறிந்தவர்களென்றபடி. யத்வா, புகலற்றாென்றது - ப்ரபத்திநிஷ்டரை; வேதாந்தஜ்ஞாநமுடையாரென்றது-உபாசகரை. உபாசகர்க்கு "மாம் நமஸ்குரு" (மாம்நமஸ்குரு) என்று தொழுகையுண்டிறே. புகலற்றார் - அநந்யகதிகள்.

"ஆவி -" ஆத்மா. "அனல -" அக்நிமயமாம்படி. தக்தமாம்படி. "வெவ்வுயிர்க்கும்" வெவ்விதாக மூச்சுவிடுமிதிசப்தார்த்த:. (அக்நிமயமாம்படி நெடுமூச்செறியும்) என்றதுக்குப்ரமாணம் (தீர்க்கமித்யாதி) "தீர்கமுஷ்ணஞ்ச நிஃச்வஸ்ய மைதிலீமவலோகயந் । உவாச மேகஸங்காஶம் விபீஷணமுபஸ்திதம்" (தீர்க்கமுஷ்ணம்சநிஶ்வஸ்ய மேதிநீமவலோகயந் । உவாசமேகஸங்காஶம் விபீஷணமுபஸ்தித்தம்) இதிராவணவதாநந்தரோராம:.

"அஞ்சனம்" என்று-கறுப்பாய், அத்தால்-குளிர்த்திசித்தம். "வடிவுநாபஹரம்" என்றதுக்குப்ரமாணம் (மேகஶ்யாமமித்யாதி "மேகஶ்யாமம் மஹாபாஹும் ஸ்திரஸத்த்வம் த்ருடவ்ரதம் । கதா த்ரக்ஷ்யாமஹே ராமம் ஜகதஶ்ஶோகநாஶநம்" (மேகஶ்யாமம்மஹாபாஹும்ஸ்த்திரஸத்த்வம்த்ருடவ்ரதம்|கதாத்ரக்ஷ்யாமஹேராமம் ஜகதஶ்ஶோகநாஶநம்) இத்யயோத்யாகாண்டே ராமநிர்த்ருக்ஷயாஸித்ரகூடம் ப்ரதிகச்சந்த:பௌரா:. இஶ்ஶ்லோகத்துக்கர்த்தம் (கைகேயியித்யாதி) "த்ரக்ஷ்யாமஹே" (த்ரக்ஷ்யாமஹே) என்றதுக்குபாவம் (அவ்வடிவழகிலேயித்யாதி) என்றார்களிறேயென்றது - பஹுவசநத்தைப்பற்ற.

மோஹித்தவளெழுந்திருக்கக் கூடுமோவென்ன (வடிவையித்யாதி) "இமைப்பு -" இமைகொட்டுகை. இமைப்பிலளிருக்கும்-இமைகொட்டாதே யிருக்கும்.

"எங்ஙனே நோக்குகேனென்னும்" என்றதுக்கர்த்தம் (தான்பார்த்தவித்யாதி) அதாவது - பின்னேகட்டிக்கொள்ளுமென்று புரிந்துபார்த்து, பின்னேயிருந்தால் நான் நோக்கும்படியெங்ஙனே யென்னுமென்றபடி. புரிந்து - திரும்பி "எழுந்து மேநோக்கி யிமைப்பிலளிருக்கும்" என்றதினர்த்தத்தை யநுவதித்துக் கொண்டு, "எங்ஙனேநோக்குகேன்" என்றதுக்கர்த்தாந்தரமருளிச்செய்கிறுர் (வடிவையித்யாதி) "எங்ஙனேநோக்குகேன்" என்றதுக்கர்த்தாந்தரம் (பின்னையுமித்யாதி) அதாவது - பின்னையும் தோற்றக்காணுமையாலே "சாதநாநுஷ்ட்டாநம்பண்ணவேணும்" என்று வாராதிருக்கிறுனென்றுபார்த்து, நானுன்னைக்காணும்விரகேதென்னுமென்றபடி. விரகு-ஸாதநம்.

தடம் - பெருமை. "செழுந்தடம்" இத்யாதி பதப்ரயோகத்துக்குபாவம் (இப்படியித்யாதி)

"என்செய்கேன்" என்றதுக்கிரண்டுபாவம்; முந்தினது (கர்த்தவ்யமித்யாதி) கர்த்தவ்யமடங்கலுமென்றது - "அழுந்தொழும்" இத்யாதியை. அன்றிக்கே, சாதநாநுஷ்ட்டாநம் பண்ணவேண்டாவோவென்கிற சங்கையிலே "என்செய்கேன்" என்றதுக்கர்த்தாந்தரம் (உபாயாந்தரேத்யாதி) "என்திருமகள்" என்றதுக்கு-லக்ஷ்மீயில் வ்யாவ்ருத்தியாகபாவம் (இவளையித்யாதி) அவளில் வ்யாவ்ருத்தி தன்னையருளிச்செய்கிறுர் (உம்மையொருவளையு மித்யாதிவாக்யத்வயத்தாலே) "திருமகள்" என்றதுக்குபாவம் (சாக்ஷாதித்யாதி) .................................................*



## ஒன்பதாம்பாட்டு.

என்திருமகள்சேர்மார்பனேயென்னுமென்னுடையாவியேயென்னு
நின்திருவெயிற்றிலிடந்துநீகொண்டநிலமகள்கேள்வனேயென்னு
மன்றுருவேழுந்தழுவிநீகொண்டவாய்மகளன்பனேயென்னுந்
தென்திருவரங்கங்கோயில்கொண்டானேதெளிகிலேன்முடிவிவடனக்கே.

## ஆறுயிரப்படி.

(என்திருமகள்) சர்வலோகமஹேச்வரியாய் * ஸமஸ்த கல்யாணகுணம்ருதோததியா யிருந்த பெரியபிராட்டியார்க்கும் சேஷியாய், உன்னுடைய குணங்களாலே தாஸ்யமுபாகதையான ஸ்ரீபூமிப்பிராட்டியாருக்கும் சேஷியாய், தன்னுடைய நிரவதிக சௌந்தர்ய சௌகந்த்ய சௌகுமார்ய லாவண்ய யௌவநாத் யஸங்க்யேய கல்யாண குணங்களாலே பரமபோக்யபூதையான நப்பின்னைப்பிராட்டிக்கும் ப்ரணயிநியாயிருந்த நீ; தத்பரிக்ரஹமாகையாலே யென்னை த்வதேகதாரகை யாக்கினுப்போலே, இன்னமும் "தத்பரிக்ரஹம்" (தத்பரிக்ரஹம்) என்றென்னை யுன்திருக்கண்களாலே பார்த்தருளா யென்று சொல்லும். இவளுக்காகக் கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற நீ யிவளைப் பார்த்தருளுகிறிலே, இனியிவளுக்கென்றுய்விளையுமென் றுென்று மறிகிறிலேனென்கிறுள்............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், லக்ஷ்மீபூமிநீளாநாயகனான வுன் ப்ரணயித்வாதிசயத்திலே யகப்பட்ட விவளுக்குக் காரியந் தலைக்கட்டவிருக்கிறபடி யறிகிறிலேனென்கிருள்.

என் - எனக்கு ஸ்வாமிநியான. திருமகள் - லக்ஷ்மியானவள். சேர் - தனக்கபிமதஸ்த்தாநமாகச் சேர்ந்த. மார்பனே - திருமார்பை யுடையவனே. என்னும்- என்னும். அச்சேர்த்தியழகோடே, என்னுடை - எனக்கு. ஆவியே - தாரகமான ப்ராணனுய்க்கொண் டென்னெஞ்சிலே யிருந்தவனே. என்னும் - என்னும். “நீலவரையிரண்டுபிறைகவ்வி” என்கிற கணக்கிலே வடிவுக்குப் பரபாகமான. நின்-உன்னுடைய. திருவெயிற்றால் - திருவெயிற்றாலே. இடந்து - ப்ரளயத்திலேமுழுகிஅண்டகபாலத்தினின்று மிடந்தெடுத்து. நீ - நீ. கொண்ட - உனக் கபிமதை யாகக்கொண்ட. நிலமகள் - ஸ்ரீபூமிப்பிராட்டிக்கு. கேள்வனே - சத்ருஶநாயகனே. என்னும் - என்னும். அன்று - ருஷபங்களை சுலபமாகநியமித்தவன்று. உரு - இடிபோலே பயாவஹத்வநியான ருஷபங்கள். ஏழும் - ஏழையும். தழுவி - அபிமதவிஷய கண்டா ஶ்லேஷம்போலே அநாயாஸேந தழுவி. நீ - நீ. கொண்ட - நிதியெடுத்துக் கொண்டாப்போலே ஸ்வீகரித்த. ஆய்மகள் - சத்ருஶகோபகுலத்திலேபிறந்த நப்பின்னைப்பிராட்டிக்கு. அன்பனே - பத்தபாவனானவனே. என்னும் - என்னும். இப்படி யவர்கள்பக்கலிலே யுன் ப்ரணயித்வத்தை ப்ரகாசிப்பித்தாப்போலே யிவளுக்கு முதவுகைக்காக, தென் - கட்டளைப்பட்ட. திருவரங்கம் - ஸ்ரீரங்கக்ஷேத்ரத்தை. கோயில் - வாஸஸ்த்தாநமாக. கொண்டானே - அங்கீகரித்தவனே. இவள்தனக்கு- இவளுக்கு. முடிவு - ஆர்த்திபர்யவஸாந ப்ரகாரம். தெளிகிலேன் - அறிகிறிலேன்.

உருமென்றும் பாடமாம். ..........................................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

இவளுடைய துஃகத்துக் கொருமுடிவு காண்கிறிலேனென்கிருள்.

(என்றிருமகள்சேர்மார்பனே யென்னும்) என் பேற்றுக்குப் புருஷகாரமில்லாம லிழக்கிறேனோவென்னும். விசிஷ்டத்திலன்று, என்னென்கிறவிது - விசேஷணம்ஶத்திலே. (அதாவது; என் என்கிறவிடம் - திருமகளிலே யந்வயிக்கிறது, மார்பனே என்கிறவிடத்திலந்வயிக்கிறதன்று.) அநந்தாழ்வான் தன் பெண்பிள்ளையை “என்திருமகள்” என்று திருநாமஞ் சாத்தினான். பட்டர் பெருமாளுக்கு, “அடியேனை ‘ஸ்த்ரீதநமாகப் பிராட்டிக்குவந்தவன்’ என்று திருவுள்ளம்பற்றவும், நானும் ‘இவரெங்கள் நாய்ச்சியார்க்கு நல்லர்’ என்று, அவ்வழியே ‘அழகியமணவாளப்பெருமாள்’ என்று நினைத்திருக்கவுமாகவேணும்” என்று வேண்டிக்கொண்டார். (சேர்மார்பனே) ரஹஸ்யத்தில் நித்யயோகத்தைச்சொல்லுகிறது. அவளொருக்ஷணம் பிரியவிருக்கிலன்றோ வெனக்குப் பேறு தாழ்க்கவேண்டுவது. “பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்யுமவைகேட்கைக்காக நஞ்சீயரை யழைத்தருளித் தாமமுதுசெய்யா நிற்கச்செய்தே, இத்திருவாய்மொழி யியலைக் கேட்டருளாநிற்க இப்பாட்டளவிலே வந்தவாறே ‘என்திருமகள்சேர்மார்பனேயென்னு மென்னுடையாவியே யென்னும்’ என்றியலைச் சேர்த்தருளிச்செய்ய, அத்தைக் கேட்டுக் கையை

யுதறி 'ஸ்ரீரங்கநாத' என்றணையிலே சாய்ந்தருளினார் பட்டர்" என்ற ருளிச்செய்வர். "அப்போது திருமேனியிலே பிறந்த விக்ருதியைக்கண்டு 'இவர்க்கு பகவத்ப்ராப்தி யணித்தாகிறதோ' என்றஞ்சி யிருந்தேன்" என்று ஜீயரருளிச்செய்வர். (என்னுடையாவியே யென்னும்) இவர்க்கு ப்ராண னொருவாயுவிசேஷமல்ல, ஒருமிதுநமாயிற்று. திருமகள்சேர்மார்பனைக்கொண் டெனக்கு தாரகனானவனே யென்னும்.

(நின்னித்யாதி) ப்ராணயிநிகளுக்குக் காரியஞ்செய்யும்போதுன்னை யழியமாறியன்றோ கார்யஞ்செய்வது. ஸ்ரீபூமிப்பிராட்டிபக்கல்முகம் பெறலாவ தவள்விபூதியைத் தன்முகேந நோக்கினாலிறே. "நின்திருவெயிறு" என்னுமித்தனை யழகுக்கு. (இடந்து நீகொண்ட) நீ யிடந்து கொண்ட. ஸ்ரீபூமிப்பிராட்டிக்கு வல்லபனானவனே.

(அன்றித்யாதி) ஒருநாளுதவின நீ யின்றுதவினாலாகாதோ. நப்பின்னைப் பிராட்டியுடைய தசையை - அன்றென்னு மித்தனை. ஒன்றிரண்டன்றிக்கே யிருக்கிற ருஷபங்களேழையும் தழுவி. அவள்திருமுலைத்தடத்தை யணைத்தாப்போலே யிருக்கிறதாயிற்று அவளைப்பெறுகைக் குபாயமாகையாலே. உருவென்று - இடி. இடிபோலே பயங்கரமான குரலையுடைய வேறென்னுதல். உருவென்று – மிடுக்காய், மிடுக்குத்தான் வடிவுகொண்டாப்போலே யென்னுதல். "உருவுட்கு" என்றுருச்சொல்லு. நீகொண்ட - நீகைக்கொண்ட. (ஆய்மகளன்பனேயென்னும்) என்னைக் கைவிட்டு என் ஸ்வாமிநிகள்பக்கலி லெங்ஙனே முகம்பெற விருக்கிறாயென்னும்.

(தென்றிருவரங்கங்கோயில்கொண்டானே) தெற்குத்திக்குக்கு ஶ்லாக்யமான ஸ்ரீரங்கக்ஷேத்ரத்தை வாஸஸ்த்தாநமாக வுடையவனே. "எருதேழடர்த்தவவதாரத்திலே முகங்காட்டப் பெற்றதில்லை" என்னும் குறையுண்டோ. அவதாரங்கள்போலன்றியே நித்யவாசம்பண்ணுகிறது, பிற்பாடர்க்குதவவன்றோ. "गतस्स्वंस्थानमुत्तमम्" (கதஸ்ஸ்வம்ஸ்த்தாநமுத்தமம்) என்னவேண்டாதபடி கோயில்கொண்டானாயிற்று. (தெளிகிலேன்) அங்குக் குறையற்றபின்பு "தப்பாது" என்று தெளியவிறே யடுப்பது, அது மாட்டுகிறிலேன். "माशुचः" (மாஶுச:) என்றத்தை யநுஷ்ட்டாநபர்யந்த மாக்கிக்கொண்டு நீ கிடந்தால், "स्थितोऽस्मि गतसन्देहः" (ஸ்த்திதோஸ்மிகதஸந்தேஹ:) என்றிருக்கவிறேயடுப்பது; அதுமாட்டுகிறிலேன். இவள் தனக்கு – முடிவு - தெளிகிறிலேன். இவளவஸ்த்தை யிதுவாயிருக்க, ஒரு ஜ்ஞாநலாபத்தாலே யாறியிருக்கப்போமோ..........................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. (என்றிருமகளித்யாதி) "தெளிகிலேன் முடிவிவள்தனக்கே" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை (இவளுடையவித்யாதி)

பிராட்டியோட்டைச் சேர்த்தி சொன்னதுக்கு பாவம் (என்பேற்றுக் கித்யாதி) "என்" என்கிறது - * திருவுக்கு விசேஷணமென்கிறார் (விசிஷ்டத்திலித்யாதி) * திருவுக்கு விசேஷணமாக்கினதுக்கு சம்வாதம் (அநந்தாழ்வானித்யாதி) சம்வாதாந்தரம் (பட்டரித்யாதி) (வேண்டிக்கொண்டார்) "[illegible]" (மாதர்லக்ஷ்மி) இத்யாதியாலே வேண்டிக்கொண்டாரென்றபடி. "சேர்" என்கிறவர்த்தமாநத்தாலே - மதுப்பிலர்த்தம் சொல்லுகிறதென்கிறார் (ரஹஸ்யத்திலித்யாதி) ரஹஸ்யமாவது - மந்த்ரரத்நம். நித்யயோகத்துக்கு பாவம் (அவளொருக்ஷணமித்யாதி) இவளுக்கு மிதுநம் ப்ராணனென்று வக்ஷ்யமாணத்துக்குசம்வாதம் (பெருமாளுக்கித்யாதி) விண்ணப்பஞ் செய்யுமவை கேட்கைக்காக வென்றது - ஸந்நிதியிலே புராணஶ்லோகார்த்தோபந்யாஸோப யுக்தமாகச் சந்தைத்திரட்டுக்களொடுக்கைக்கு மூலம் கேட்கைக்காகவென்றபடி. இயலே - சப்தத்தை. இயல்-சப்தமும், கரநமும். இப்படி சேர்த்தத்தால் தோற்றின வர்த்தமேதென்ன (இவர்க்கு ப்ராணனித்யாதி) "என்திருமகள்சேர்மார்பனே" என்று சொல்லப்படுகிற வென்னுடைய ப்ராணனேயென்னுமென்று சப்தார்த்தம்.

பதப்ரயோகத்துக்கு பாவம் (ப்ரணயிநிகளுக்கித்யாதி) சாடு (ஸ்ரீபூமிப்பிராட்டி யித்யாதி) அவள்விபூதியை - பூமியை. தன்முகேந - தான் ப்ரதாநமாக வென்றும், தன்முகத்தாலே யென்று மர்த்தத்வயம். ஒருத்ருஷ்டாந்தம் சொல்லாதே, கேவலம் "திருவெயிறு" என்றதுக்கு பாவம் (நின்திருவெயிறென்னு மித்யாதி) திரு-அழகு.

"அன்று" என்று சொல்லுகிறவளுடைய ஹார்த்தபாவம் (ஒருநாளித்யாதி) "அன்று" என்றதுக்கு பாவாந்தரம் (நப்பின்னையித்யாதி) அதாவது - வாக்குக்கு விஷயமன்றென்றபடி. அடர்த்தென்னுதே, "தழுவி" என்பானென்னென்ன (அவள் திருமுலையித்யாதி) "அன்று-ருஷபங்களை சுல்கமாகநியமித்தவன்று" என்றுரையிலர்த்தம். "உரு" என்றால் - மிடுக்கைக் காட்டுமோவென்ன (உருவுட்கென்றித்யாதி) உருச்சொல்லு - நைகண்டுகவிசேஷமித்யர்த்தஃ. உட்கு - மிடுக்கு. உரு - இடியும், மிடுக்கும். வெறுப்பாகபாவம் (என்னையித்யாதி) ஸ்வாமிநிகளென்று - கீழுக்தரான மூவரையும் சொல்லுகிறது. "அன்பனே" என்றது - அன்புக்கு விஷயமானவனே யென்றபடி.

"கோயில்கொண்டானே" என்றதுக்கு பாவம் (எருதேழடர்த்தவித்யாதி) விவரணம் (அவதாரங்களித்யாதி) "அவதாரம் காதாசித்கம்" என்னுமதுக்கு ப்ரமாணம் (கதஇத்யாதி) மஹாபாரதே, "[illegible]" (க்ருத்வாபாராவதரணம் ப்ருதிவ்யாஃப்ருதுலோசநஃ। மோஹயித்வாஜகத்ஸர்வம் கதஸ்ஸ்வம்ஸ்த்தாநமுத்தமம். ) (கதஸ்ஸ்வம்ஸ்த்தாநம்) இத்யாதிவாக்யம் - கீழ்வாக்யவிவரணம்.

"தெளிகிலேன்" என்றதுக்கு பாவம் (அங்கித்யாதி) குறையற்றபின்பென்றது - "திருவரங்கம் கோயில் கொண்டானே" என்றத்தைப்பற்ற. விவரணம் (மாஸுச இத்யாதி) தெளிந்திருக்கமாட்டாமைக்கு ஹேதுவேதென்ன (இவளவஸ்த்தையித்யாதி) "இவள் தனக்கு - முடிவு - தெளிகிலேன்" என்றதுக்கு-இவளுடைய துஃகாவதி காண்கிறிலேனென்றுசப்தார்த்தம். முடிவு - துஃகாவதி...............*

# பத்தாம்பாட்டு.

முடிவிவடனக்கொன்றறிகிலேனென்னுமூவுலகாளியேயென்னுங்
கடிகமழ்கொன்றைச்சடையனேயென்னுநான்முகக்கடவுளேயென்னும்
வடிவுடைவானோர்தலைவனேயென்னும்வண்டிருவரங்கனேயென்னு
மடியடையாதாள்போலிவளனுகியடைந்தனள்முகில்வண்ணனடியே.

## ஆறாயிரப்படி.

( முடிவிவள்தனக்கு ) இப்பெண்பிள்ளை, தனக்கு முடிகைக்கோருபாயமறிகிறிலேனென்னும். ப்ரஹ்மருத்ராதி ஸகலதேவதைகளுக்கு மந்தராத்மதயாவஸ்த்திதனு யவர்களுடைய ஸ்வரூபஸ்த்திதி ப்ரவ்ருத்தியைப்ரவர்யாதி ஹேதுபூதனானவனே, உன்றிருவடிகளி லவர்களோபாதி யுறவுபோராதோவென்னும். * அயர்வறுமமரர்களையுங்கூடத் தோற்பித்தடிமையாக்கிக்கொண்டிருக்கிற வுன்னைக்காட்டி யருளாயென்னும். கோயிலிலே புகுந்து கண்வளர்ந்தருளி யாஸ்ரிதர்க் காத்மதாநம்பண்ணிக்கொண்டிருக்கிற பரமோதாரனேயென்னும். "இனிப்பெருமாள் திருவடிகளைச்சேர்ந்து முடியமாட்டாள், போய்முடிந்தாள்" என்னும்படி துர்த்தஶாபந்நையானவிவள், வ்ருத்தமான விந்தவிஶ்லேஷ நிபந்தநமான நிரவதிக து:கமெல்லாம் விஸ்ம்ருதமாம்படி, தானுசைப்பட்டபடியே பெரியபெருமாள் திருவடிகளையே ஸம்ஶ்லேஷிக்கப்பெற்றாளென் றிவளுடைய திருத்தாயார் ப்ரீதையாகிறாள் ....................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஈஶ்வராபிமாநிகளுக்கு மந்தராத்மாவான சர்வேஶ்வரனானவனிவளுடைய வார்த்தியையறிந்து தன்சீலாதிசயத்தாலு மௌதார்யத்தாலும் தன் வடிவழகாலும் ஆந்தர ஸம்ஶ்லேஷத்தை விஶ்லேஷித்து ப்ரகாஶிப்பிக்க, இவளுக்கத்தால்பிறந்த விஶ்வாஸத்தைக்கண்டு ஸ்வகதமாகத் தாயார் சந்துஷ்டையாய்ச் சொல்லுகிறாள்.

இவள்-ப்ரத்யக்ஷசித்தாவஸாதத்தையுடையவிவள். தனக்கு-இப்படியவஸந்நையான தன்படிக்கு. முடிவு-முடிவு. ஒன்று-ஒன்று. அறிகிலேன் - அறிகிறிலேன். என்னும்-என்னும். மூவுலகாளியே - த்ரைலோக்யேஶ்வரனான விந்த்ரனுக்கந்தராத்மாவாய்க்கொண்டு நிர்வஹித்தவனே. என்னும்-என்னும். கடிகமழ் - பரிமளப்ரவாஹியான. கொன்றை-கொன்றைத் தாரையுடைத்தான. சடையனே - ஜடையையுடையனான ருத்ரனையதிஷ்டித்துநின்று அவனுடைய ஈஶ்வரத்வோபாஸகத்வங்களுக்குள்ளீடானவனே. என்னும் - என்னும். நான்முகன் - இவர்களுக்கு சேஷியான சதுர்முகனான. கடவுளே-தைவத்துக்காத்மாவானவனே. என்னும்-என்னும். இப்படி யீஶ்வராபிமாநிகளான ப்ரயோஜநாந்தரபரர்க்கும் ப்ரகாரியானசீலத்துக்குமேலே, வடிவுடை-தன்னோடுலப்தஸாரூப்யரான. வானோர் - நித்யஸூரிகளுக்கு. தலைவனே-சேஷியானவனே. என்னும்-என்னும். அம்மேன்மையோடே, வண்-ஆசைப்பட்டார்க்குத் தன்னைக்கொடுக்குமௌதார்யத்தையுடையனுய்க்கொண்டு. திருவரங்க

னே-கோயிலுக்குநிர்வாஹகனானவனே. என்னும்-என்னும். இப்படி நீர்மையையும் மேன்மையையு மௌதார்யத்தையு மநுஸந்தித்தீடுபட்டு, இனி, அடி-அவன்றிருவடிகளை. அடையாதாள்போல்-கிட்டமாட்டாள்போலேயென்னும்படியிருந்த. இவள்-இவள். முகில் - ஜலஸ்த்தலவிபாகமறவுபகரிக்கும் காளமேகம்போலேயிருக்கிற. வண்ணன்-வடிவையுடையவனுடைய. உபகாரகத்வாதிசயத்தாலே, அடி-அவன்றிருவடிகளை. அணுகி-கிட்டி. அடைந்தனள் - ப்ராபித்தாளாயிருந்தது.....................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

இனிக்கிட்டமாட்டாளோ ! வென்னும்படி யவஸந்நையானவிவள், பெரியபெருமாள்திருவடிகளை ஸம்ப்ஂலேஷிக்கப் பெற்றுளென்கிறுள்.

(முடிவிவள்தனக்கொன்றறிகிலேனென்னும்) பெண்பிள்ளைவார்த்தையைத் திருத்தாயாரநுபாஷிக்கையாலே; " இவள், தனக்கு - முடிவு-ஒன்றறிகிலேன் " என்றுநின்றுளென்கிறுள். இத்துஃகஸாகரத்தைக்கரை காணும் விரகறிகிறிலேனென்னுதல், முடிந்துபிழைக்கும் விரகறிகிறிலேனென்னுதல். (மூவுலகித்யாதி) " மூவுலகாளியே, கடிகமழ்கொன்றைச் சடையனே, நான்முகக்கடவுளேயென்னும் - வடிவுடைவானோர்க்குத்தலைவனேயென்னும் " என்று திருமாலையாண்டான் வையதிகரண்யமாக்கி நிர்வஹிக்கும். என்னு மென்னுமது - என்னுமவனுய். எம்பெருமானர் கேட்டருளி, சாமாநாதிகரண்யத்தாலே யருளிச்செய்தருளினுர் - த்ரைலோக்யத்துக்கும் கடவனான விந்த்ரனுக் கந்தர்யாமியாய் நின்று அவனுடைய வதிகாரத்தை நிர்வஹிக்கிறவனேயென்னும்; பரிமளத்தையுடைத்தான கொன்றையை ஜடையிலேயுடைய ருத்ரனுக் கந்தர்யாமியாய்நின்று அவனுடைய பதத்தை நிர்வஹிக்கிறவனேயென்னும்; அவர்களோடிவ்வருகுள்ளாரோடு வாசியற வெல்லார்க்கும் நிர்வாஹகனுயிருக்கிற சதுர்முகனுகிற தேவதைக் கந்தர்யாமியானவனேயென்னும். (வடிவுடையித்யாதி) பகவதநுபவத்தால்வந்தஹர்ஷம் வடிவிலே தோற்றும்படியிருக்கிற நித்யஸூரிகளுக்கு நாதனானவனேயென்னும். வடிவுடைவானோர்தலைவனே என்றத்தோடு, மூவுலகாளியே என்றத்தோடு, கடிகமழ்கொன்றைச்சடையனே என்றத்தோடு, நான்முகக்கடவுளே என்றத்தோடு வாசியற்றிருக்கிறதாயிற்றிவர்க்கு * மயர்வறமதிநலம்பெறுகையாலே. விசேஷணம்ஸத்தில் பர்யவஸிக்குமவரல்லரே. சர்வநிர்வாஹகனென் றுணர்ந்திருக்கு மவராயிற்றிவர்.

( வண்டிருவரங்கனேயென்னும் ) நித்யஸூரிகளே யநுபவித்துப் போகையன்றிக்கே, நித்யசம்சாரிகளு மிழவாமைக்கன்றே விங்குவந்து கண்வளர்ந்தருளுகிறது. இங்குச்சாய்ந்தருளினதிண்பலம் நான்பெறவேண்டாவோவென்னும். ஆசைப்பட்டார்க்குத் தன்னைக் கொடுக்கு மௌதார்யம். (அடியடையாதாளித்யாதி) " ஜீவிப்பாளைப்போலேயிருந்து; கடுகமுடிந்துகொடுநின்றுள்" என்று நிர்வஹிப்பாருமுண்டு; " அப்போ

து மேல்ப்ரபந்தம் நடவாது. ஆகையாலே, திருவடிகளைக்கிட்டாதாளைப் போலே யிருந்து க்ரமத்திலே கிட்டிக்கொண்டுநின்றாள்'' என்றருளிச்செய்யும்படி. இதுதான் - மாநஸாநுபவத்திலே யொருவைஶத்யத்தைச்சொன்னபடி. (அடியடையாதாள்போல்) இவளிப்போதே திருவடிகளைச்சேர மாட்டாள், இன்னம் சிறிதுகாலமிருக்குமென்றுபோலேயிருந்தது; முடிந்துகொடுநின்றாளென்னுதல். இனி சம்ஶ்லேஷிக்கப்பெறாளோவென்று தோற்றும்படி. யவஸங்கையானவிவள் கிட்டி சம்ஶ்லேஷிக்கப்பெற்றாள் காளமேகநிபஶ்யாமமான பெரியபெருமாள் திருவடிகளையேயென்னுதல்.

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. (முடிவிவளித்யாதி) ''அடியடையாதாள்போலிவளணுகி'' இத்யாதிகளைக் கடாக்ஷித் தவதாரிகை (இனிக் கிட்டமாட்டாளோ வித்யாதி)

முடிவிவளெனக்கென்னுமல், ''தனக்கு'' என்பானென்னென்ன (பெண்பிள்ளைவார்த்தையை யித்யாதி) ''இவள், தனக்கு - முடிவு - ஒன்றறிகிலேனென்னும்'' என்றந்வயிப்பது. ''முடிவு - அறிகிலேன்'' என்றதுக் கிரண்டுவகையாக வர்த்தமருளிச்செய்கிறார் (இத்துஃகசாகரத்தை யித்யாதி வாக்யத்வயத்தாலே) ''முடிவு'' - துஃகாவஸாநமென்னுதல், நாசமென்னுதல்.

திருமாலையாண்டான் நிர்வாஹத்துக்கு, ''என்னும்'' என்கிறது - சொல்லப்படுகையாய், ''மூவுலகாளியே'' இத்யாதியாற் சொல்லப்படுகிற வடிவுடையானோரான விந்த்ராதிகளுக்குத் தலைவனென்றபடி. ''மூவுலகாளியே'' இத்யாதியில் ஏகாரம் - ''ஒன்றே, இரண்டே'' என்னுமாபோலே எண்ணிலேயாகிறது. இந்தநிர்வாஹத்துக்கு, ''மூவுலகாளியே'' என்று பாட்டுத்தோறும் சம்போதநமாய் வருகிறவற்றையும், ''என்னும், என்னும்'' என்று மகள்வார்த்தையைத் தாயாரநுபாஷிக்கிறத்தையு மிருக்கி யோஜிக்கையாகிற வஸ்வாரஸ்ய முண்டென்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (எம்பெருமானாரித்யாதி) சாமாநாதிகரண்ய ப்ரக்ரியையை விவரிக்கிறார் (த்ரைலோக்யத்துக்குமித்யாதி) திருமாலையாண்டான் நிர்வாஹத்தில் - லீலாவிபூதிமாத்ரநாதத்வம்; எம்பெருமானார் நிர்வாஹத்தில் - உபயவிபூதிநாதத்வமேற்றம். ''வானோர்தலைவனே'' என்று - அசாதாரண விக்ரஹ விசிஷ்டனையும், ''மூவுலகாளியே'' இத்யாதியாலே - சாதாரண விக்ரஹ விசிஷ்டனையு மொக்க வநுபவிப்பானென்னென்ன (வடிவுடையித்யாதி) பலிதம் (விசேஷணம்ஶத்திலித்யாதி) அந்யாபதேச ப்ரக்ரியைக்கு சாமாநாதிகரண்ய முபயோகமல்லவே யென்ன (சர்வநிர்வாஹகனித்யாதி)

எம்பெருமானார் நிர்வாஹம் (ஆகையாலேயித்யாதி) (அருளிச்செய்யும்படி) எம்பெருமானாரொன்று கூட்டுவது. ஆனால், ப்ரத்யக்ஷமாகக் கிட்டினாளோவென்ன (இதுதானித்யாதி) அணுகியடைந்தனள் - கிட்டி ப்ராபித்தா ளென்றபடி. முகில்வண்ணன் - மேகம்போன்ற வடிவையுடையவன்..............................*

# பதினொன்றாம்பாட்டு.

முகில்வண்ணனடியையடைந்தருள்சூடி யுய்ந்தவன்மொய்புனற்பொருந ற், றுகில்வண்ணத்தூநீர்ச்சேர்ப்பன்வண்பொழில்சூழ்வண்குருகூர்ச்சட கோபன், முகில்வண்ணனடிமேற்சொன்னசொன்மாலையாயிரத்திப்பத்து ம்வல்லார், முகில்வண்ணவானத்திமையவர்சூழவிருப்பர்பேரின்பவெள் ளத்தே.

## ஆறாயிரப்படி.

(முகில்வண்ணன்) பெரியபெருமாள் திருவடிகளைச்சேர்ந்து சர்வ ப்ரகார ஸம்ப்லேஷமும்பண்ணப் பெறுகையாலே லப்தோஜ்ஜீவநராய்; சுப்ரஸந்நஸலிலபூரபரிபூர்ணமான திருப்பொருநலாலும், அதிரமணீய திவ்யகந்தசுமனோபிராம தருநிகரங்களாலும் பரிகர்மிதமான திவ்யநகர நிலயராயிருந்த சடகோபன், முகில்வண்ணனடிமேற் சொன்னசொன்மாலையாயிரத்துளிப்பத்தும் வல்லார், பெரியபெருமாள்திருமேனியில் நீலமான ஜ்யோதிஸ்ஸின் வெள்ளத்தாலே திவ்யமான திருநாட்டிலே * அயர்வறுமமரர்கள்சூழ, சவிபூதிகபரமபுருஷாநுபவஜநித நிரவதிகாநந்த மஹார்ணவாந்தர்நிமக்நராயிருப்பாரென்கிறார்.........................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழியை யப்யஸித்தவர்கள் பரமபதத்திலே சூரிகள் நடுவே ஆநந்த நிர்ப்பரராயிருப்பரென்று பலத்ஸதயருளிச்செய்கிறார்.

முகில்வண்ணன் - உதாரமானமேகஸ்வபாவரான பெரியபெருமாளுடைய. அடியை - திருவடிகளையே. அடைந்து - ப்ராபித்து. அதுக்கடியான, அருள் - அவருடையக்ருபையை. சூடி - தலைக்கொண்டு. உய்ந்தவன்-உஜ்ஜீவித்தவராய். மொய்-மிக்க. புனல் - புனலையுடைத்தான. பொருநல் - திருப்பொருநலினுடைய. துகில்-துகிலின். வண்ணம் - நிறம்போலே. தூ - பரிசுத்தமான. நீர்-ஜலத்தையுடைத்தான. சேர்ப்பன் - பர்யந்தப்ரதேஸத்தையுடையராய். வண்-மதுபுஷ்ப சம்ருத்தியாலுள்ள வைலக்ஷண்யத்தையுடைய. பொழில் - பொழில்களாலே. சூழ் - சூழப்பட்டு. வண் - நிரதிசயசம்பத்விசிஷ்டமான. குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான. சடகோபன் - ஆழ்வார். முகில் - காளமேகம்போலே. வண்ணன் - நிரதிசயசௌந்தர்ய யுக்தரானபெரியபெருமாள். அடிமேல் - திருவடிகள்விஷயமாக. சொன்ன - அருளிச்செய்த. சொல் - சப்தாத்மகமான. மாலை - மாலைகள். ஆயிரத்து - ஆயிரத்து. இப்பத்தும் - இப்பத்தையும். வல்லார் - பாவவ்ருத்தியோடே யப்யஸிக்கவல்லவர்கள். ஸ்ரீவைகுண்டநாதன்திருமேனியில்நிழலீட்டாலே, முகில் - மேகஸ்யாமளமான. வண்ணம் - நிறத்தையுடைய. வானத்து - பரமபதத்திலே. இமையவர் - நித்யசூரிகள். சூழ - பரிவேஷ்டிக்க. பேரின்பவெள்ளத்தே - நிரதிசயாநந்தசாகரமத்யத்திலே. இருப்பர்- இருப்பர்கள்.......................................................*

இது - எழுசீராசிரியவிருத்தம்.

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில் - இத்திருவாய்மொழி யப்யஸிக்கவல்லார், இவர்பட்ட க்லேசம்படாதே திருநாட்டிலே நிரதிசயாநந்த யுக்தராய், நித்யஸூரிகள் சூழவிருக்கப்பெறுவரென்கிறார்.

(முகில்வண்ணனித்யாதி) பெரியபெருமாள் திருவடிகளைக்கிட்டி யநுக்ரஹத்தைப்ரஸாதத்தைப் பெற்று தரித்தவன். பூர்வாவஸ்த்தையில், ஸத்தையு மழியும்படியாயிருக்கையாலே-உய்ந்தவனென்கிறது. மொய்யென்று - மிகுதிக்கும், வலிக்கும்பேர். இப்போது, நீரோட்டத்தால் வந்தவலியைநினைக்கிறது. வலியையுடைத்தான ஜலத்தோடேகூடின பொருனலில் துகிலினுடைய வண்ணத்தையுடைத்தான தூநீர்த்துறைவன். சேர்ப்பன்-துறைவன். நெய்தல் நிலத்தில் தலைமகன். மொய்புனலென்னாநிற்க, தூநீரென்றது - பெருவெள்ளமாயிருக்கச்செய்தே தெளிந்திருக்கும்படியைப்பற்ற. “ரமணீயம்ப்ரஸந்நாம்பு ஸந்மநுஷ்யமநோயதா” (ரமணீயம்ப்ரஸந்நாம்பு ஸந்மநுஷ்யமநோயதா ) என்கிறபடியே. தர்ஶநீயமான பொழிலையுடைத்தாய் உதாரமான திருநகரிக்குநாதன். ( முகிலித்யாதி ) காளமேகம்போலே நிரதிசய ஸௌந்தர்ய யுக்தரான பெரியபெருமாள் விஷயமாக வருளிச்செய்த சப்தாத்மகமான மாலைகளாயிரத்திப்பத்தையும் பாவவ்ருத்தியோடே யப்பசிக்கவல்லவர்கள். “பெரியபெருமாள்திருவடிகளிலே-திருவாய்மொழி யாயிரமுஞ்சொல்லிற்று ; ‘திருமோகூர்க்கித்தபத்து,’ ‘திருவேங்கடத்துக்கிவைபத்து’ என்றுபிரித்துக்கொடுத்தவித்தனை ; பெருமாள்திருப்பலகையிலமுது படியிலே மற்றைத்திருப்பதிகள் நாயன்மார்க்கு மளந்துகொடுக்குமாபோலே” என்று பிள்ளையருளிச்செய்வர். (முகில்வண்ணவானத்து) அங்கிருக்கிறவனுடைய நிழலீட்டாலே யவன்படியாயிருக்கிறவானமென்னுதல், முகில்வண்ணனுடைய வானமென்னுதல். (இமையவரித்யாதி) இவள்மோஹித்துக் கிடக்கத் திருத்தாயார் தனியேயிருந்து கூப்பிட்டவெளிவாவுதீர, நித்யஸூரிகள் திரளவிருக்க அவர்கள்நடுவே யாநந்தநிர்ப்பரராயிருந்தநுபவிக்கப் பெறுவர்கள்.

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (முகிலித்யாதி) “இப்பத்தும் வல்லார் முகில்வண்ணவானத்திமையவர் சூழவிருப்பர் பேரின்பவெள்ளத்தே” என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை ( இத்திருவாய்மொழியித்யாதி )

மேலித்திருவாய்மொழி - க்லேசமாயிருக்க, “ உய்ந்தவன் ” என்று - தரிப்புண்டாகச்சொல்லலாமோவென்ன ( பூர்வாவஸ்த்தையிலித்யாதி ) “ துறைவன் ” என்றதுக்குபாவம் (நெய்தல்நிலத்தில் தலைமகனென்றது) “சேர்ப்பன்” என்றது - துறைவனுக்கும், நெய்தல்நிலத்தில் தலைமகனுக்கும்பேர். இங்கு, துறைவனைச்சொல்லுகிறது. “மொய்” என்று - மிகுதியாகவர்த்தாந்தரம் விவக்ஷித்து, மிகுதியானால் “தூநீர்” என்கிறதுகூடுமோவென்ன (மொய்புனலித்யாதி) இதுக்குப்ரமாணம்

(ரமணீயமித்யாதி) "அகர்தமமிதம் தீர்த்தம் பரத்வாஜ நிஶாமய | ரமணீயம் ப்ரஸந்நாம்பு ஸந்மநுஷ்யமநோ யதா" (அகர்த்தமமிதம்தீர்த்தம்பரத்வாஜநிஶாமய|ரமணீயம்ப்ரஸந்நாம்புஸந்மநுஷ்யமநோயதா) இதிபாலகாண்டே. "மொய்புனல்" இத்யாதிக்கு - "மிக்கஜலத்தையுடைய திருப்பொருநலினுடைய, துகிலின் நிறம்போலே பரிசுத்தமான ஜலத்தையுடைத்தான பர்யந்தப்ரதேசத்தையுடைய" என்றுரையிலேசப்தார்த்தம்.

ஆயிரமுமிவர் விஷயமானல், திருவேங்கடமுடையான் முதலானார்க்கின்றிக்கேபோமேயென்ன (திருமோகூர்க்கித்யாதி)

"முகில்வண்ணவானத்து" என்றதுக் கர்த்தத்வயமருளிச்செய்கிறார் (அங்கிருக்கிறவனுடைய வித்யாதிவாக்யத்வயத்தாலே) முகில்வண்ணமானவானத்து - மேகஶ்யாமளமான நிறத்தையுடைய பரமபதத்திலே யென்று முந்தினவர்த்தம்.

முகில்வண்ணனடியை யடைந்தென்றுதொடங்கி, இமையவர்சூழ-பேரின்பவெள்ளத்தே-இருப்பரித்யந்வய:. வண்பொழில்சூழ் வண்குருகூர்ச்சடகோபன்-விலக்ஷணமான பொழிலாலேசூழப்பட்டு நிரதிசய சம்பத்விசிஷ்டமான திருநகரிக்கு நிர்வாஹகரான வாழ்வாரென்று சப்தார்த்தம். சொன்மாலை-சப்தாத்மகமானமாலை. வல்லார் - அப்யசிக்கவல்லார்கள். பேரின்பவெள்ளத்தே - நிரதிசயாநந்த சாகரமத்யத்திலே..........................................................................*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

## (கங்குலும்பகலும்.)

ஶ்ரீரங்கே ஸந்நிதாநாந்நிகிலஜகதநுஸ்ரஷ்ட்ருதாத்யை: ஶுசித்வா
த்வித்வஸ்தாநிஷ்டபாவாதுரகஶயநத: பும்ஸ்கர்மாநுரூபம் | ஶர்மா
ஶர்மப்ரதாநாஜ்ஜலததநுதயோபக்ரியாதத்பரத்வாத் ஸ்வாமீ ஸ்வாநாம் விம
ர்ஶாதபவஸ்ய திவேதத்ரஹயீதாநுஶாஸி:. (௭௨)

(ஶ்ரீரங்கேஸந்நிதாநாத்) செங்கயல்பாய்நீர்த் திருவரங்கத்தாய் - திர்யக்குக்களுங்கூடக்களித்து வர்த்திக்கும்படி ஶ்ரமஹரமான ஜலஸம்ருத்தியையுடைய ஶ்ரீரங்கத்திலே யெழுந்தருளியிருக்கையாலும்; (நிகிலஜகதநுஸ்ரஷ்ட்ருதாத்யை:) முன்செய்திவ்வுலக முண்டுமிழ்ந்தளந்தாய் - எல்லாலோகங்களையும் ஸ்ருஷ்டிக்கையாலும்; ஆத்யசப்தத்தாலே - அநந்தரகாதையிலே "காகுத்தா கண்ணனேயென்னும்" என்றுசொல்லுகிற அவதீர்யரக்ஷகத்வம் ஸங்க்ரஹிக்கப்படுகிறது; (ஶுசித்வாத்) சிட்டனே - பரிசுத்தனாகையாலும்; (வித்வஸ்தாநிஷ்டபாவாத்) அந்திப்போதவுணனுடலிடந்தானே-விரோதியானஹிரண்யனை ஸம்ஹரிக்கையாலும்; (உரகஶயநத:) பைகொள்பாம்பணையாய்-தன்திருமேனிஸ்பர்ஶத்தாலுண்டான ஹர்ஷத்தாலே விகஸிதமான பணங்களையுடைய திருவநந்தாழ்வானைத் திருப்படுக்கையாகவுடையனாகையாலும்; (பும்ஸ-கர்மாநுரூபம்ஶர்மாஶர்மப்ரதாநாத்) பாலதுன்பங்க ளின்பங்கள் படைத்தாய் - சேதநருடைய கர்மாநுரூபமாக சுகது:கங்களைக்கொடுக்குமவனாகையாலும்; (ஜலததநுதயா, உபக்ரியாதத்பரத்வாத்) இங்கே - க்ரமம்விவக்ஷிதமன்று. குன்றேந்திக்கோநிரைகாத்தவனென்னும், நின்திருவெயிற்றுலித்யாதி, முகில்வண்ணனடியை - கோவர்த்தநத்தையெடுத்து கோகோபாலர்க் குபகரிக்கையாலும்,

வராஹரூபத்தைக்கொண்டு பூமிக்குபகரிக்கையாலும், வர்ஷுகவலாஹகம்போலே ஸ்யாமமாய்க் குளிர்ந்திருக்கிறவடிவை யுடையனாகையாலும்; எல்லார்க்கும் ஸ்வாமியான ஸ்ரீரங்கநாதன் ஸ்வாஸ்ரிதருடைய கர்ஹையை சமிப்பியாநிற்கிருனென்று "கங்குலும்பகலும்" என்கிறதஸகத்திலே காரிமாறனருளிச்செய்தானென்கிருர்.எஉ

---

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

---

கங்குல்பகலரதிகைவிஞ்சிமோகமுற
வங்கதனைக்கண்டோரரங்கரைப்பார்த்-திங்கிவள்பா
லென்செயநீரொண்ணுகின்றதென்னுநிலைசேர்மாற
னஞ்சொலுறநெஞ்சுவெள்ளையாம். (கூஉ)

(கங்குல்பகல்) இதில் – அரதியாயலற்றினபடியைப் பேசினபாசுரத்தையநுவதித்தருளிச்செய்கிருர். அதாவது - * உண்ணிலாவியிலார்த்தராய்க் கூப்பிடுகிற தம்மைப் பரிஹரிக்கும் விரகுசிந்தித்துக்கொண்டு கண்வளர்ந்தருளுகிற பெரியபெருமாள் நினைவையறிந்து அவர்பரிஹரிக்குமளவு மாறியிருக்கவேண்டியிருக்க, அவர்தம்மை யுபேக்ஷித்தாராகக்கொண்டு கலங்கிமோஹித்திவர்கிடக்க; பார்ஸ்வஸ்த்தரானபரிவர் பெரியபெருமாளுடைய ஸரண்யஸரண்யத்வாதி குணங்களைச்சொல்லிக்கொண்டு, இவர்திறத்தில் நீர்நினைத்திருக்கிற தென்னென்று கேட்கிறபடியை; பெரியபெருமாளோடே கலந்து பிரிந்தாளொருபிராட்டி யாற்ருமையாலே யழுவது தொழுவது விழுவதெழுவ தலற்றுவதாய்ப்படுகிற வரதியைத் திருத்தாயார் அவர் திருமுகத்தைப்பார்த்துச்சொல்லி ப்ரலாபிக்கிற பாசுரத்தாலே யருளிச்செய்கிற * கங்குலும்பகலிலர்த்தத்தை " கங்குல்பகலரதி " இத்யாதியாலே யருளிச்செய்கிருரொன்கை.

(கங்குல்பகலரதிகைவிஞ்சிமோஹமுற) அதாவது - "ஹ்ருஸம்விஸம்ஜ்ஞா-கதாஸுகல்பேவ" (ப்ருஸம்விஸம்ஜ்ஞா - கதாஸுகல்பேவ) என்றும், "ஸிரோணஸம்ஜ்ஞாம்ப்ரதிலப்யசைவ" (சிரோணஸம்ஜ்ஞாம்ப்ரதிலப்யசைவ) என்றும், "ராமம்ரக்தாந்தநயநமபஸ்யந்தீஸுதுஃகிதா" (ராமம்ரக்தாந்தநயநமபஸ்யந்தீஸுதுஃகிதா) என்றும் சொல்லுகிறபடியே, " கங்குலும் பகலுங் கண்டுயிலறியாள், " " இட்டகாலிட்டகைகளாயிருக்கும், " " சிந்திக்குந்திசைக்கும் " இத்யாதிப்படியே திவாராத்ரவிபாகமற வழுவது தொழுவது மோஹிப்பது ப்ரலாபிப்பது அடைவுகெடப்பேசுவது நெடுமூச்செறிவது அதுதானும் மாட்டாதொழிவது ஸ்தப்தையாயிருப்பதா யிப்படி யரதிவிஞ்சி மோஹத்தைப்ராப்தையாக. ( அங்கதனைக்கண்டு ) தன்பெண்பிள்ளையிடத்திலே அத்தசையைக்கண்டு. (ஓரரங்கரைப்பார்த்து) ஆர்த்திஹரதையிலே சிந்தித்துப்போருகிற வத்விதீயரான பெரியபெருமாளைப்பார்த்து. (இங்கிவள்பால்) இத்தசையி லிவளிடையாட்டமாக. ( என்செயநீரொண்ணுகின்றது ) ஆஸ்ரிதரக்ஷணசிந்தைபண்ணுகிறதேவர், ரக்ஷகாபேக்ஷயுடைய விவள்திறத்தெது திருவுள்ளம்பற்றியிருக்கிறது. எடுக்கவோமுடிக்கவோ ஒன்றும்தெரிகிறதில்லை. எல்லாதசையிலு மிவள்பேற்றுக்கு "உன்மனத்தாலென்னினைந்திருந்தாய்" என்கிறபடியே அத்தலையில் நினைவேயிறே யுபாயம், இத்தலையிலேயுள்ளதெல்லாமாற்ருமையிலே முதலிடமத்தனை. " இவள்திறத்தென்செய்கின்ருயே, " " இவள்தி

றத்தென்செய்திட்டாயே," "இவள்திறத்தென்சிந்தித்தாயே" என்றத்தைப்பின் சென்றபடி. (என்செயநீயொண்ணுகின்றதென்னுநிலைசேர்மாறன்) த்வராஜ்ஞாநத்தாலே தலைமகளென்று பேரையுடையதாம் மோஹித்துக்கிடக்க, "இந்தமோஹாதிகளுமுபாயமாகா, அத்தலையில் நினைவேஸாதநம்" என்னு மத்யவஸாய ஜ்ஞாநத்தாலே தாயாரென்றுபேரையுடையராய்த் தெளிந்திருந்து தெரிவிக்கும் தசையையடைந்தவாழ்வாருடைய. (அஞ்சொலுற) அழகிதான வித்திருவாய்மொழியை யாதரித்தநுசந்திக்க. (நெஞ்சுவெள்ளையாம்) உபாயாந்தரவிஷயமான மநோமாலிந்யம் நிவ்ருத்தமாய், ததேகோபாயத்வாநுஸந்தாநத்தாலே மநஶ்ஶுத்திபிறக்கும்.

((கங்குல்பகலரதியித்யாதி, வெள்ளையாம்) உபாயாந்தரவிஷயமான, ஓரரங்கனைப்பார்த்து - ஒருகிறவரங்கனைப்பார்த்து. அதாவது - * உலகமுண்ட பெருவாயனிலே, "அகலகில்லேன்" என்று - பூர்ணப்ரபத்தி பண்ணினவிடத்திலும் பலித்ததில்லையென்று, * உண்ணிலாவியிலே, "அப்பனேயென்னையாள்வானே" என்று - நின்றவிடத்திலே நிற்கவொட்டாமல் கூப்பிட, "திருவேங்கடத்தென்னானையென்னப்பன்," "அரங்கநகர்மேயவப்பனாய்," "மந்திபாய்" இத்யாதிப்படியே, * பைத்தபாம்பணையானனவன் * அரங்கத்தரவினணையானாய் "பைகொள்பாம்பணையா யிவள்திறத்தருளாய்," "இவள்திறத்தென்சிந்தித்தாய்" என்றுகேட்கும்படி * உறங்குவான்போல்யோகுசெய்து * யோகநித்திரை சிந்தைசெய்து இவர் ரக்ஷணசிந்தை பண்ணிக்கொண்டாறலைக்கக் கிடக்கிறவனைப்பார்த்தென்றபடி. "தொடங்கினகார்யம் தலைக்கட்டுந்தனையும் பற்றுதுபோலேயிருந்த திவளாற்றாமை, இதுக்கென்செய்வோம்" என்று அவராராயப்புக்கார். அங்கு "அலர்மேல்மங்கையுறைமார்பா" என்றத்தை - இங்கு "என்திருமகள்சேர்மார்பனே" என்றார்; "வண்ணமருள்கொளணிமேகவண்ணா" என்றத்தை - "முகில்வண்ணன்" என்றார்; "அடிக்கீழமர்ந்துபுகுந்தேனே" என்றத்தை - "அடியையடைந்தருள்சூடியுய்ந்தவன்" என்றார். "துளங்குநீண்முடி" என்றுதொடங்கி "ஆழிவண்ணநின்னடியிணையடைந்தேன்" என்றிறே ஐக்யமாகவருளிச்செய்தது. * சென்னியோங்குதண்டிருவேங்கடமுடையானேயிறே * பொன்னிசூழ் திருவரங்கனுகக் கண்வளர்ந்தருளுகிறது. இவர் ரக்ஷணசிந்தைக்குப் பாங்கான பாற்கடல் தேசம் அரங்கம்போலே. )...(௬௨)

ஏழாம்பத்தில் - இரண்டாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக - திருவாய்மொழி ௬௨.—பாட்டு - ௬௮௯.

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஏழாம்பத்து.

## மூன்றாந்திருவாய்மொழி.

### வெள்ளைச்சுரிசங்கு - ப்ரவேஸங்கள்.

#### ஆறாயிரப்படி.

(வெள்ளைச்சுரிசங்கு) இப்பிராட்டியோடே பெரியபெருமாள் சம்ஸ்லேஷ ரஸத்தை யநுபவித்து, அந்த சம்ஸ்லேஷரஸ முள்ளடங்காதபடி பெருகினவாறே யது சாத்மிக்கைக்காகவு மாஶ்ரிதப்ரதிகூல ம்ருகம்ருகயார்த்தமாகவும் தென்றிருப்பேரையிலே யெழுந்தருளத் திருவுள்ளத்தே கோலியருளி, இவளுடைய சம்வாதார்த்தமாக விவளிடத்திலே யதிமாத்ர சம்மாநத்தைப் பண்ணியருளி “தென்றிருப்பேரையிலேவேட்டைக்குப் போய்வருகிறோம்”. என்றருளிச்செய்ய, இப்படி *பதிசம்மாநிதையான விவளவ்யுத்பந்ந விப்ரலேஷையாகையாலுமிவனெழுந்தருளுகை யிவனைக் காணுதொழிகைக்கு ஹேதுவென்னுமிட மறியாமையாலுமெழுந்தருள சம்வதித்து விஜயத்தை யாஶாஸித்து திவ்யாயுதங்களைக் கொடுத்தருளி “ஸூஆாஊநவவ்ராஜஊஜஊாநஹிஊயஷீ” (ஆத்வாரமநுவவ்ராஜமங்களாங்யபிதத்யுஷீ) என்னும் ப்ரக்ரியையாலே திருப்பல்லாண்டுபாடிக்கொண்டு திருவணுக்கன் திருவாசலளவும் பின்னேயெழுந்தருளப் பெரியதிருவடி திருத்தோளிலே யேறியருளி, ஒரு தாமரைத்தடாகம் மலர்ந்தாப்போலே யிருந்த திருக்கண்களாலே யிவளைப்புரிந்து பார்த்தருளி யிவளாலேயநுஜ்ஞாதனாய்த் தென்றிருப்பேரையிலே யெழுந்தருள, இவளவனைக்காணாமையாலே யத்யந்த மவஸந்நையாய் அவனெழுந்தருளியிருந்த தென்றிருப்பேரையிலே யெழுந்தருள வுத்யோகிக்க, இவளுடைய திருத்தாயாரும் தோழிமாரும் மற்றுமுள்ள பந்துக்களு மிவளை ப்ரதிபந்திக்க; நான் போகை தவிரேன், தனியேபோனாளென்னும் பழி யுங்களுக்கு வாராமே நீங்களே யென்னைத் தென்றிருப்பேரையிலே யிண்டக்கொண்டு போய்விடுங்கோளென்கிறாள்... ...........*

#### பன்னீராயிரப்படி.

மூன்றாந்திருவாய்மொழியில், கீழ் - பெரிய பெருமாளுடைய வௌதார்ய குணாநுசந்தாநத்தாலே யாஶ்ரவஸ்தரான விவர்க்கு பாஹ்யாநுபவாலாப மநுவர்த்

திக் கையாலே யத்யந்த மார்த்தராய், அந்தவார்த்தி சமிக்கைக்கவனுலந்நமாகத்திருப்பேரையிலே யெழுந்தருளி யிருக்கிறபடியை யநுசந்தித்து; ஆந்தராநுபாவ்யமான வவனுடைய வாயுதாதி வைலக்ஷண்யத்தையும், அதிசயிதமான பரத்வசௌலப்யங்களையும், ஆகர்ஷகமான வவயவாதி சோபையையும், அநுபாவ்யமான வாஸ்சர்யகுணாதி யோகத்தையும், அநிஷ்டவர்க்க நிரசநத்தையும், ஔதார்யாதிசயத்தையும், ப்ரபல ப்ரதிபந்தக பங்கத்தையும், ப்ரக்ருஷ்டபக்தி வர்த்தகத்வத்தையும், ப்ரளயாபத்ஸகத்வத்தையும், ஆஸ்ரிதவிரோதி நிபர்ஹணத்தையும் சிந்தித்து, ஏவம்பூதனவ னெழுந்தருளி யிருக்கிற தேசத்திலே செல்லுகையிலுண்டான த்வராவிசேஷத்தைக்கண்ட பார்ஸ்வஸ்த்தரான ஸுஹ்ருத்துக்களுக்கும் பரிவர்க்கும் ப்ராப்திஜநித வ்யவசாயத்தை யறிவித்த ப்ரகாரத்தை; நாயகனான மகரநெடுங்குழைக்காத னெழுந்தருளியிருக்கிற தென்றிருப்பேரையிலே செல்லுகையிலே த்வரையை யுடைய நாயகியானவள், "இதநுரூபமன்று" என்று விலக்கத்தேடுகிற தோழிமார் தாய்மார் முதலானாரைக்குறித்து, "நானத்தேசத்திலே செல்லல் தவிரேன்" நீங்கள் கொடுபோய்விடுங்கோள், இல்லையாகில் நானேபோவேன்" என்றுதன் துணிவை வெளியிட்ட பாசுரத்தாலே யருளிச்செய்கிறார். ........................................*

ஈடு.

கீழ் "இட்டகாலிட்டகை" என்கிறபடியே யிவள்மோஹித்துக் கிடக்க, இவளுக்குமுன்னே தோழிமாரும் தறைப்பட, திருத்தாயாரொருத்தியு மிவள்தசையை யநுசந்தித் தருகே யிருந்து கூப்பிட்டுப் போருமது தவிர்ந்து; இப்பெண்பிள்ளை தானே யெழுந்திருந்து கால்நடை தந்து போம்ளவாய் விழுந்தது. அதுக்கடி – "பற்றிலார்பற்றநின்றானே" என்று - பெரியபெருமாளுடைய வஸரண்ய ஸரண்யத்வந் தொடக்கமான விவளுக்குப் பற்றாசான குணங்களையும் சௌந்தர்யாதி விக்ரஹகுணங்களையும் இவள் தான்வாய்வெருவியும் திருத்தாயார் சொல்லவும்கேட்டு அத்தாலே தரித்தாள். போனவுயிரை மீட்கவற்றாயிறே குணஸ்வபாவமிருப்பது. கீழ்ப்பிறந்த மோஹமும் தெளிந்து, விப்லேஷ வ்யஸநமுமநுசந்திக்க வல்லளாய், பின்பு "அவனைக்கிட்டியல்லது நில்லேன்" என்னுமாற்றாமையும்பிறந்து, அது பெருமையாலே அவசந்நையாக, இவள்விடாய்க் கீடாம்படி அணித்தாகத் தென்றிருப்பேரையிலே யிற்றிருந்த மகரநெடுங் குழைக்காதனுடைய வபேக்ஷிதாதிகளிலே யபஹ்ருதசித்தையாய், "அவனிருந்தவிடத்தேறப்போகவேணும்" என்றொருப்பட, பழையபடியே தோழிமாரும் தாய்மாரு மவளைச் சூழப்போந்து "உனக்கித்தனை யதிமாத்ரப்ராவண்யமாகாது, நமக்கிது பழியாய் விளையும்" என்ன, "நீங்கள் சொல்லுகிறவற்றால் ப்ரயோஜநமுண்டாகமாட்டாது, நானவன்பக்கலிலே யபஹ்ருதசித்தையானேன், ஆனபின்பு நானேபோனேனாகாமே நீங்களென்னை யுடன்பட்டு அங்கே கொடுபோய்ச் சேர்க்கப்பாருங்கோள்" என்று தனக்குப் பிறந்த துணிவை யவர்களுக் கறிவித்துச் சொல்லுகிறதா யிருக்கிறது.

அங்ஙனன்றிக்கே பிள்ளான் பணிக்கும்படி - " ('முகில்வண்ணனடியே - இவளணுகியடைந்தனள்' என்றதாகையாலே) 'ஸமாத்வாதஸதத்ராஹம்' (ஸமாத்வாதஸதத்ராஹம்) என்கிறபடியே பெரிய பெருமாளோடே சிரகால முந்மஸ்தகரஸமான சம்ஸ்லேஷம் ப்ரவ்ருத்தமாய், பிரிந்துகூடாவிடி லிரண்டுதலைக்கு மழிவு வருமளவாச்சுதாய்; இனி யெல்லாவளவிலு மொரு நீராகக்கலக்கிறது தர்மியிரண்டும்கூடியிறே, ஆகையாலே பிரியாவிடில் தர்மிலோபபர்யந்தமாகப் புக; இவ்வளவில், நாயகனவிவன் இரண்டுதலையும் ஜீவிக்கப்பார்ப்பானொருவ னாகையாலே பிரிவை ப்ரஸங்கிக்க, இவளும் விஸ்லேஷத்தில் வாசனையில்லாதா ளொருத்தியாகையாலே, 'கலவியிலேயொருவகையோ' என்றுகொண்டு இவளுமநுமதிபண்ண, அவனுமவ்வேட்டைநிமித்தமாகப்புறப்பட, இவளும் திருவணுக்கன் திருவாசலினளவுமொருப்படுத்திமீள; எல்லாவளவிலும் பிரிவு தன் காரியம் செய்தன்றி நில்லாதிறே; அநந்தர மிவள் நோவுபடப்புக, இந்தைக்கண்ட தோழிமாரும் தாய்மாரும் 'உனக்கோடுகிறதென்'என்றுகேட்க, 'ஸ்ரீஜநகராஜன்றிருமகள் காட்டிலே கூடப்போய் அவரிருந்தவிடம் நின்றவிட முலாவினவிடந்தோறும் கூடவிருந்தநுபவித்தாப்போலே, நானுமவனிருந்தவிடத்தே போய்ப் புக்கல்லது நில்லேன்' என்ன, 'உனக்கிதுதலைமைக்குப்போராது, நீ சொல்லுகிறவை வார்த்தை யன்று' என்ன, அவர்களை 'நீங்கள் நிரோதிக்கிறத்தால் பெற்றதென், நான் போகை தவிரேன், நீங்களே யென்னைக் கொடுபோய்விடுங்கோள்' என்ன, அவர்கள் 'அதுக்கு நாங்கள் வழிப்படோம்' என்ன, ஆகில் நானேயாகிலும் போகை தவிரேனென்கிறாள்" என்று. [ஸமாத்வாதஸதத்ராஹம்] [ஸமாத்வாதஸதத்ராஹம்] இப்போது காதாசித்க தர்ஸநமுங்கூட வரிதாம்படியிருக்கிறநான், முன்பு சிரகாலமவரோடே யநுபவிக்கப்பெற்றேன்காண். [ராகவஸ்யநிவேஸநே] [ராகவஸ்யநிவேஸநே] எங்கள்மாமனாருடைய மாளிகையிலே யவர் தண்ணீர்த்துரும்பறுத்துத் தர, நெடுங்காலமநுபவித்தேன். [புஞ்ஜாநாமாநுஷாந்போகாந் ஸர்வகாமஸம்ருத்திநீ] [புஞ்ஜாநாமாநுஷாந்போகாந் ஸர்வகாமஸம்ருத்திநீ] "ஸர்வாந்காமாந்" (ஸர்வாந்காமாந்) என்கிறபடியே எல்லாமநுபவிக்கப் பெற்றேன். அப்படியுமன்றிறே யிங்கு; "பஹவோந்ருபகல்யாணகுணாః" (பஹவோந்ருபகல்யாணகுணః) என்று குணங்களிரட்டித்தவிடமிறேயிது. ஆக வித்தால் சொல்லிற்றாயிற்று - நமக்கு சப்தாதிவிஷயங்களினின்று மிந்த்ரியங்களை மீட்கவொண்ணாதாப்போலேயிறே யிவளை பகவத்விஷயத்தி னின்றும் மீட்கவொண்ணாதபடி. அது கர்மமடியாக வருகிறது, இது பகவத்ப்ரஸாதமடியாக வருகிறது. திருத்தாயார் பேச்சாய்வருகிறவை-ஆழ்வார் தமக்குப் பிறந்த தசாவிசேஷம், தலைமகளாய்ப் பேசுகிறதும் - இவர்க்குப் பிறந்ததோ ரவஸ்த்தாவிசேஷம்; அதில், நிஷேதிக்கிற திருத்தாயா

ர்முகத்தால் சொல்லுகிறது - ஸ்வரூபமான ப்ராவண்யத்திலே யுபாயம் சொருகிற்செய்வதென்னென்னு மதுக்குச் சொல்லுகிறது; பெண்பிள்ளை கருத்தால் சொல்லுகிறது - உபாயமவனேயாகில் ப்ராவண்யம் ஸ்வரூப மாமத்தனையன்றோ வென்று. ஆக, இவ்விரண்டர்த்தத்தையு மிரண்டு மு கத்தாலே யாழ்வார் தாமநுசந்தித்த படியைச் சொல்லுகிறது. மோஹ முந்தெளிந்து தானே கூப்பிடவல்லளானவிதுவே - இத்திருவாய்மொழி க்கேற்றம்....... ............................................................*

## ஜீயர் அரும்பதம்.

வெள்ளைச்சுரிசங்குப்ரவேஶே, சங்க்ரஹசங்கதி (இட்டகாலீத்யாதி) மோ ஹித்தவளுக்குத் தெளிவுபிறக்கைக்கு ஹேதுவேதென்ன (அதுக்கடியித்யாதி) குண ங்கள் தரிப்பிக்குமோவென்ன (போனவுயிரையித்யாதி) இவ்விடத்திலே - " ஐதஃ வரம்ம்ருதஸஞ்ஜீவநம்ராமவ்ருத்தாந்ததாரமாஹ" (இதஃபரம்ம்ருதஸஞ்ஜீவநம்ரா மவ்ருத்தாந்தகதாமாஹ) என்றஸஹஸ்ரநாமபாஷ்யவாக்யத்தைநினைப்பது.

விஸ்தரஸங்கதி (கீழ்ப்பிறந்தமோஹமுமித்யாதி) ஒருப்பட-உத்யோகிக்க "என்னெஞ்சினுருமங்கேயொழிந்தார்" என்றத்தைப்பற்ற (அபஹ்ருதசித்தையானே னென்றது) "என்னைக்காட்டுமினே" என்றத்தைப்பற்ற (நீங்களென்னோடுடன்ப ட்டித்யாதி)

"'அணுகியடைந்தனள்' என்றது - சாக்ஷாத்ஸம்ஶ்லேஷத்தை" என்றுபி ள்ளான் நிர்வாஹம்; அத்தையருளிச்செய்கிறார் (அங்ஙனன்றிக்கேயித்யாதி) பிள் ளான் நிர்வாஹத்தில்; சம்ஶ்லேஷமுண்டாகு லொருதிருவாய்மொழியருளிச்செய் வர், அது செய்யாமையாலே அஸ்வரஸம். உன்மஸ்தகரஸமான சம்ஸ்லேஷம் ப்ரவ்ருத்தமானல் பிரியவேண்டுவானென்னென்ன (பிரிந்துகூடாவிடிலித்யாதி) ஏ கதத்வமென்னலாம்படி. கலந்துவைத்துப் பிரியக்கூடுமோவென்ன (இனியெல் லாவளவிலுமித்யாதி) பிரிவை ப்ரஸங்கித்தால் "வேண்டா" என்னவொண்ணு தோவென்ன (இவளுமித்யாதி) ஒருப்படுத்தி-அனுப்புவித்து. வழிவிட்டென்றபடி. இப்படி வழிவிட்டு மீண்டாளாகில் துஃகப்படுவானென்னென்ன (எல்லாவளவிலுமி த்யாதி) நானேயாகிலும் போகைதவிரேனென்றது - "சென்றே - சேர்வன்" என்ற த்தைப்பற்ற.

கீழ் ப்ரஸ்துத ஶ்லோகத்துக் கர்த்தம் (ஸமாத்வாதஶேத்யாதி) * காலாத் வநோரத்யந்தஸம்யோகே த்விதீயையாகையாலே தத்பலிதம் (தண்ணீர்த்துரும்ப றுத்தித்யாதி) தண்ணீர்த்துரும்பு - ப்ரதிபந்தகம். " மாநுஷாந்போகாந் - புஞ்ஜாநாஸதீ, ஸர்வகாமஸம்ருத்திநீ அபவம் " (மாநுஷாந்போகாந் - புஞ்ஜா நாஸதீ, ஸர்வகாமஸம்ருத்திநீ அபவம்) - சமஸ்த கல்யாண குணநுபவத்தாலும் பூ ர்ணையானேனென்றபடி. " ஸர்வாந்காமாந் " (ஸர்வாந்காமாந்) என்றது - பரத் வத்திலேயன்றோ, இங்குண்டோ வென்ன (அப்படியுமித்யாதி) இங்கு - ராமாவ தாரத்திலென்றபடி. ப்ரமாணமேதென்ன (பஹவஇத்யாதி)

இத்திருவாய்மொழிக்கு ஸ்வாபதேஶம் (ஆகவித்தாலித்யாதி) இவ்வுபயத் துக்கும் ஹேதுவேதென்ன (அதுகர்மமித்யாதி) திருத்தாயாரான வவஸ்த்தைக்கு ம் தலைமகளான வவஸ்த்தைக்கும் பேதம் சொல்லுவதாக வதுதன்னை யநுவதிக்கி றார் (திருத்தாயாரித்யாதி) (அவஸ்த்தாவிசேஷம்) என்றவநந்தரம்; ஆயிருக்க,

விஷேதிக்கிறதும் ப்ரவர்த்திக்கிறது மொருவர்க்கே கூடுமோவென்ன என்றத்யாஹ ரிப்பது. அந்யோந்ய வைஷம்ய கதநபூர்வகமாக வுத்தரமருளிச்செய்கிறார் ( அதிவி த்யாதி வாக்யத்வயத்தாலே )

முந்தினயோஜனையில் கீழ்த்திருவாய்மொழியைப்பற்ற விதுக்கு வாசியே தென்ன ( மோஹமுமித்யாதி ) ..........................................................*

# மூன்றுந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

வெள்ளைச்சுரிசங்கொடாழியேந்தித்தாமரைக்கண்ணனென்னெஞ் சினூடே, புள்ளைக்கடாகின்றவாற்றைக்காணீரென்சொல்லிச்சொல்லுகே னன்னைமீர்காள்,வெள்ளச்சுகமவன்வீற்றிருந்தவேதவொலியும்விழாவொ லியும், பிள்ளைக்குழாவிளையாட்டொலியு மறாத்திருப்பேரையிற்சேர்வனே.

### ஆறாயிரப்படி.

நிரதிஶயௌஜ்ஜ்வல்ய பரிபூர்ணநிர்மல ஶாரத சந்த்ரமண்டலம் போலேயிருந்த ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும், நிரதிஶயதீப்தி யுக்தசூர்யமண் டலம்போலே யிருந்த திருவாழியையுமேந்தி, * பொன்மலையின் மீமிசை க்கார்முகில்போலேபெரியதிருவடி திருத்தோளிலே யேறி யருளி, * இ லங்கொளிசே ரரவிந்தம்போன்ற நீண்ட கண்களையுடையனனவ் னென் னெஞ்சி னூடே சாரிகைத் திரிந்தருளுகிறபடி நீங்கள்காண்கிறிலிகோள். இன்னபடி யென்றெனக்குச் சொல்ல நிலமாகிறதில்லை. ஆதலாலவனை யொருக்ஷணம் காணாதொழியில் தரிக்கமாட்டேன்; வேதகோஷத்தாலும் மஹோத்ஸவ கோஷத்தாலும் *க்ரீடமாநரான பாலர்களுடைய பரமபுரு ஷ குணஸ்துதி கோஷத்தாலும் பரிபூர்ணமான திருப்பேரையிலே, மத்ஸ ம்ப்லேஷ நிரவதிக ஸுகமஹோததி நிமக்நனாய் பரிபூர்ணனாய்க்கொண் டிருக்கிற விருப்பைக்காணவேணும்; நீங்களென்னைக் கொண்டுபோய் வி டீர்களாகில் நானேயாகிலும்போவேனென்று, தன்னை ப்ரதிபந்திக்கிறதா யாரையுந் தோழிமாரையுங் குறித்துச்சொல்லுகிறாள்....................*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், அநுபாவ்யமான வாயுதங்களோடு மவயவங்களோடும் த ன்னெஞ்சிலே பெரியதிருவடியை நடத்திப்ரகாசிக்கிற வாகாரத்தாலே யீடுபட்டு, அவனிருந்த தென்திருப்பேரையிலே செல்லுகையிலுண்டான துணிவைத்தாயாரை க்குறித்துச்சொல்லுகிறாள்.

அன்னைமீர்காள்-வாசாமகோசரமான வகவாயில் விகாரமறியாதே, "பெற்ற வர்களிறேநாம்" என்றே விலக்கத்தேடுகிறவர்களே. நானாசைப்பட்டபடியே, வெள்ளை - வெளுத்தநிறத்தையும். சுரி-சுரியையுமுடைத்தான. சங்கொடு-ஸ்ரீபாஞ்சஜந்

யத்தோடே. ஆழி - திருவாழியையும். ஏந்தி - ஏந்தி. தாமரைக்கண்ணன்-நான்தள ரும்படி யநங்யார்ஹையாக்கினதாமரைக்கண்ணையுடையவன். தானும்தன்விபூதியும் புகுந்தாலுமிடமுடைத்தான, என் - என். நெஞ்சின் - நெஞ்சின். ஊடே-உள்ளே. புள்ளை - பெரியதிருவடியை. கடாகின்ற - தன்னபிநிவேஶாநு ரூபமாகநடத்துகிற. ஆற்றை - ப்ரகாரத்தை. காணீர் - நீங்களறிகிறிலிகோள். இவ்வநுபவத்துக்கு,என் சொல்லி-என்னபாசுரமிட்டு. சொல்லுகேன் - நான்சொல்லுவேன். இவ்வளவில், வெள்ளச்சுகம் - பகவதநுபவத்தாலே யபரிமித சுகார்ணவத்தை யுடைத்தாய். அவ ன் - என்னெஞ்சுக்குள்ளே ப்ரகாசிக்கிறவன். வீற்று - தன்மேன்மைதோன்ற. இரு ந்த - இருக்குமிடமாய். வேதவொலியும் - அந்த ஆசநசோபையை யநுபவிக்கிறவர் களுடைய வேதகோஷமும். விழா - நிரந்தரோத்ஸவத்தாலுண்டான. ஒலியும் - வா த்யாதிகோஷமும். “ பாலா அபிக்ரீடமாநா꞉ ” (பாலா அபிக்ரீடமாநாঃ) என்கிற படியேஅவனுடைய குணசேஷ்டிதாதிகளைப்போற்றிட்டுக்கொண்டு, பிள்ளைக்குழா- பிள்ளைகள் திரள். விளையாடு - விளையாடும். ஒலியும் - கோஷமும். அறு - அவிச்சி ந்நமாய் நடக்கும். திருப்பேரையில் - திருப்பேரையிலே. நான் - நான். சேர்வன் - சேருவன்.............................................................................*

## ஈடு - முதற்பாட்டு.

இப்பிராட்டி வாசாமகோசரமாம்படி தனக்குவர்த்திக்கிற வ்யஸந த்தாலே, தென்திருப்பேரையிலே போகவேணுமென்று தனக்குப்பிறந்த தசையை, வினவுகிறதிருத்தாய்மார்க்குச் சொல்லுகிறாள்.

( வெள்ளைச்சுரிசங்கொடாழியேந்தி ) “ தவளவொண்சங்குசக்க ரம் ” என்றும், “ கூராராழிவெண்சங்கு ” என்றும், “ சங்குசக்கரங்க ளென்று கைகூப்பும் ” என்றும் கையுந்திருவாழியுமான வழகு கைவி டாதே யிவளை யநுவர்த்திக்கிறபடி. * முகில்வண்ணனிறே, அந்நிறத்து க்குப் பரபாகமானவெளுப்பையும், சுரியையுமுடைத்தான ஸ்ரீபாஞ்சஜந் யத்தையும்; அங்ஙனுமொருவிசேஷணமிட்டுச் சொல்லவேண்டாதபடி யான வழகையுடைத்தான திருவாழியையுமேந்தி. (தாமரைக்கண்ணன்) “ தாமரைக்கண்ணென்றேதளரும் ” என்றது பின்னாட்டுகிறபடி. திருமே னிக்கு திவ்யாயுதங்கள் ப்ரகாசகமாயிருக்குமாபோலே, ஆத்மகுணங்க ளுக்கு நோக்கு ப்ரகாசகமாயிருக்கிறபடியும். அகவாயில் தண்ணளியெல் லாம் கண்வழியேயிறே தோற்றுவது. ப்ரதிகூலர்க்கு திவ்யாயுதங்களோ டொக்கத் திருக்கண்களும் விரோதியாய்த் தோற்றுமாபோலேயிறே ய நுகூலர்க்குத் திருக்கண்களோபாதி திவ்யாயுதங்களுமழகுக் குடலாய்த் தோற்றும்படி. திருக்கண்களோடே திவ்யாயுதங்களையும், திவ்யாயுதங்க ளோடே திருக்கண்களையும் சேர்த்தநுபவிப்பர்கள். ஆயுதங்களோடே தி ருக்கண்களைக் கூட்டுகிறது தோற்பித்த படிக்கு; “ ஜிதந்தே ” என்னப் பண்ணுமிறே. கண்களோடு திவ்யாயுதங்களைக்கூட்டுகிறது அழகுக்கு. இ வ்விடத்தேநிலாத்துக்குறி பகவர்வார்த்தையை யருளிச்செய்வர் ஜீயர். கைக்கு ஆழ்வார்களாபரணமா யிருக்குமாபோலேயாயிற்று முகத்துக்குத்

திருக்கண்களாபரணமாயிருக்கும்படியும். " திருக்கண்டேன் பொன்மேனிகண்டேன் திகழு - மருக்கனணி நிறமுங்கண்டேன் – செருக்கிளரும்-பொன்னாழிகண்டேன் புரிசங்கங்கைக்கண்டே–னென்னாழிவண்ணன்பாலின்று" என்று வடிவழகோபாதி திவ்யாயுதங்களுமாபரணமா யழகிதாயிறேயிருப்பது. ஆழ்வார்கள்தானவனைக்கைசெய்திருக்கையாலே ஆபரணகோடியாயிறே யிருப்பது. கைசெய்கையென்று - அலங்கரிக்கைக்குப்பேர். ( என்னெஞ்சினூடே ) தங்கள் நெஞ்சிலில்லாமையாலே " இதுகூடாது " என்றிருப்பர்களிறே. ( என்னெஞ்சினூடேபுள்ளைக்கடாகின்ற ) இவர்க்கு * மயர்வறமதிநலமருளி, [நெஞ்சமேநீணகர்] என்னும்படியிறே திருத்திற்று, ஒரு த்ரிபாத்விபூதியிலு மிடமுடைத்தாயிருக்கை. திருவடி திருத்தோளிலேயேறி அங்குள்ளார்க்குஜ்ஜீவநமாகச் சாரிகைவந்துகாட்டுமாபோலே, இவர் நெஞ்சினுள்ளே ப்ருங்கலமாக வழகுசெண்டேறுகிறபடி. ( நெஞ்சினூடே ) " அகவாயிலுள்ளது கண்ணுக்குத்தெரியாதோ" என்றிருக்கிறார்களாயிற்றிவர்கள்; ( " நிஃகுணஃவரமாதூவஸௌ தெஹம்வ்யாவ்ய திஷ்டதி" (நிர்க்குணஃபரமாத்மாஸௌதேஹம்வ்யாப்யதிஷ்டதி ) என்னுமாபோலே "நெஞ்சிலில்லையாகில் நானுமில்லையென்றுநினைத்திருக்கலாயிற்றுக்கிடீர்"என்றிருக்கிறாளிவள். (ஒருவாசத்தடத்தில்) ஹம்ஸசக்ரவாகங்கள்போலே ஆழ்வார்களும், காடு படவலர்ந்த தாமரைபோலே யிருக்கிற திவ்யாவயவங்களும், அத்தடாகத்தில் நீருமிலையும்போலே யிருக்கிறதிருமேனியுமாய், அத்தைக்கினிய வொருமேருவஹித்தாப்போலே யிருக்கிற பெரிய திருவடியோடேகூட விவர் திருவுள்ளத்தே யுலாவுகிறபடி. இப்படியேயிறே அநுகூலரோடு பரிமாறும்படி. நஞ்சியர்கோயிலுக்கெழுந்தருளாநிற்க, வழியிலேபிள்ளானைக்கண்டு " ஈப்வரனுக்கு ஸ்வரூபவ்யாப்தியேயோ, விக்ரஹவ்யாப்தியு முண்டோ " என்று கேட்க, " பாஷ்யகாரர்தோற்றச்செய்துகொண்டுபோந்தது ஸ்வரூபவ்யாப்தியாயிருக்கும், ஆகிலும் எம்பாரொருநாள் 'உபாஸகாநுக்ரஹார்த்தமாக வாஶ்ரிதருடைய நெஞ்சிலே விக்ரஹத்தோடே வ்யாபித்திருக்கும்' என்றருளிச்செய்யக் கேட்டேன் " என்று பணித்தான்; (" 'குஹாயாஂ' (குஹாயாம்) 'கஹ்வரேஷ்டம்புராணஂ' (கஹ்வரேஷ்டம்புராணம்) " 'அரவத்தமளியினோடு மழகிய பாற்கடலோடு மரவிந்தப் பாவையுந்தானு மகம்படிவந்து புகுந்து' என்றும், 'யெஷாமிந்தீவரஶ்யாமோ ஹ்ருதயெஸுப்ரதிஷ்டிதஃ' ( யேஷாமிந்தீவரஶ்யாமோ ஹ்ருதயேஸுப்ரதிஷ்டிதஃ ) என்றும், ' என்னெஞ்சினூடே புள்ளைக்கடாகின்ற ' என்றுஞ் சொல்லுகிறபடியே " சுபாஶ்ரயப்ரகரணங்களிலும் "தஸ்யைஷ ஆத்மாவிவ்ருணுதெதநூஂஸ்வாஂ" (தஸ்யைஷ ஆத்மாவிவ்ருணுதேதநூம்ஸ்வாம்) என்கிறபடியே அவ்வடிவேயாயிற்று த்யேயமாகச் சொல்லுகிறது ; பின்பு " ஏஷஸர்வஸ்வபூதஸ்தஃ " ( ஏஷஸர்வஸ்

வபூதஸ்து ) என்று கொடுப்பது மவ்வடிவேயாயிற்று. புறம்புள்ளார் சொன்னபடி சொல்லுகிறுர்கள்; நம்மாழ்வார்கள் போனவழியிதுக்கு மேற்படவில்லை. “ இதுக்குமுள்ளேயொன்றுண்டு ” என்று சொல்லுகி றவர்கள் - ஸ்வரூபஸத்பாவஞ் சொல்லுகிறுர்களித்தனை, விக்ரஹமில்லை யென்றன்று. (புள்ளைக்கடாகின்ற) “ அகவாயில் நின்று சுழிக்குமத்தனை யோ ” என்று அவன் த்வரித்து வடிம்பிட்டுத்தாக்க “ ஓங்காண், நீயறிந் தாயோ ” என்று ப்ரேரித்து மீளாநிற்கும்; “ யீ௨க்ஃ ” (தீமதঃ) என்கிறப டியே, பக்ஷபாதத்தோடே சேர்க்கையிலேயிறே யவனுக்கும்பணி. (கடா கின்ற) பூதமாய் விஸ்மரிக்கிறிகோளன்று, பவிஷ்யமா யுபதேசிக்கிறதன் று, வர்த்தமாநத்துக்குபதேசம் வேணுமோ. (காணீர்) காண்கிறிலீர். வர் த்தமாநமும் ” கார்யகரமன்றிக்கே யொழிகிறது நிரோதிக்கிற நிர்ப்பந்த த்தாலேயிறே. உங்களுக்குக்குரகோஷம்கேட்கிறதில்லையோ. ப்ரஸித்தமா ன வர்த்த முபதேசிக்கவேண்டுவதே. (காணீர்) உங்களுக்குக் கண்ணும் செவியுமின்றிக்கே யிருந்தோ நிஷேதிக்கிறது. என்னைப்போலே * உட்க ண்ணாலேகாணிகோள்.

நாங்கள் கண்டிலோம், கண்டநீசொல்லிக்காணுயென்றுர்கள் (எ ன் சொல்லிச்சொல்லுகேன்) எனக்குச் சொல்லலாவதில்லை, என்னபா சுரமிட் டெத்தைச்சொல்லுவது. உங்கள் கண்ணுக்கு விஷயமாகாதாப் போலே யென்வாக்குக்கும் விஷயமாகிறதில்லை. இவர்க்குநெஞ்சுநிறைந் தது வாய்கொள்ளுகிறதில்லைகாணும். (என்சொல்லிச்சொல்லுகேன்) நா ன்பலஹாநியாலே சொல்லமாட்டேன், விஷயமியத்தாராஹித்யத்தாலே சொல்லிமுடிக்கப்போகாது, உங்களுக்கு ப்ரதிபத்திபண்ணுகைக்கு பரிக ரமில்லாமையாலே சொல்லத்தான் வேண்டா, ( அன்னைமீர்காள் ) ஜ்ஞா தாம்ஸங்கொண்டு * போதயந்தঃ பரஸ்பரம் பண்ணலாயிற்றிறே ஸஜாதி யைகளானிகோளாகில். ( என்சொல்லிச் சொல்லுகேனன்னைமீர்காள் ) எனக்கோடுகிற வ்யஸநத்துக்குப் பாசுரமில்லை, அவஸ்த்தாஜ்ஞாநமின்றி க்கேபழமைகொண்டாடுகிறிகோளித்தனையிறே, நிஷேதிக்கைக் கநுவர்த் தநீயைகளாமத்தனையோ வேண்டுவது.

எங்களுக்குக் காணவும் கேட்கவும் கண்ணும்செவியுமில்லையாகில், நீதான்செய்யப்பார்த்ததென்னென்ன; ஹிதஞ் சொல்லி மீட்க நினைப்பா ரில்லாத வூரிலே போய்ப்புகு மித்தனையென்கிறுள். பிரிந்துபோனுளை நி னைக்கவொட்டாத தேசமிறே. “ நொவஜநம்ஸ்மரந ” (நோபஜநம்ஸ்மர ந்) என்கிறபடியே. ( வெள்ளச்சுகமவன் ) சுகவெள்ளத்தையுடையவன். விப்ரலேஷதசையிலும் ஸம்ப்ரலேஷ ஜநிதமான நிரதிசயசுகம் மாருதவன். பிரிவிலுமனையாறுபடாதபடி காணும் கலவியி லவன்தேக்கின சுகாதிசய மிருந்தபடி. (வெள்ளை) என்று பாடமானபோது-மறுவற்றசுகமென்கை. ( துঃகாமிப்ரசுகமென்றபடி. ) ( அவன்வீற்றிருந்த ) ( தென்திருப்பே

ணாயில் ) என்றந்வயம். * இட்டகாலிட்டகையளாயிருக்கிற விருப்புக்கெ திர்த்தட்டாயிருக்கிற விருப்பிறே யது. இத்தலையைத் துடிக்கவிட்டுத்தன் னைப்வர்யந்தோற்ற சுகோத்தரமாக விருக்கிறபடி. ( அவன்விற்றிருந்த ) இத்தலையைத் தோற்பித்த தன்வெற்றியெல்லா மவ்விருப்பிலே தோற்று ம்படி யிருந்த. அவன் மெய்மறந் தப்படி யிருந்தால் நாமும் மெய்மறந்தி ருக்கவோ. பரிபூர்ணனு யவன் செருக்காலே யிருந்தால், குறைவாளரா ய் நோவுபடுகிற நாமுமிருக்கவோ. அவன் முறைதப்பநின்றல் நாமும் முறைதப்புமித்தனையன்றே. பிரிந்தால் முறைபார்த்திருக்கலாம் விஷயத் துடனே கலந்தோமாகிலன்றே நாமாறியிருக்கலாவது; முறையை யழி த்தாகிலும் மடலெடுத்துக்கொண்டு போமித்தனையன்றே. "நமக்கேந லமாதலில்" என்னக்கடவதிறே. ( வேதவொலியும் ) அவன்நெஞ்சொ ழிந்து பழம்புணர்ப்புக் கேளாநின்றான்காணும். அதாவது - பண்டு தான் வென்ற வெற்றிமாலைகள் கேட்கையிறே. அதாவது – "ஜிதஂதெ வுண்டரீ காக்ஷ" (ஜிதந்தேபுண்டரீகாக்ஷ) என்கிற வெற்றிமாலைகளிறே. ( விழா வொலியும் ) இவளைத் தோற்பித்ததுக்கு நெய்யாடல் போற்றுகிறபடி. (அரு) தீர்த்தம் ப்ரஸாதித்த பிற்றைநாளே திருமுளைச்சாத்தா நிற்குமத் தனை. ஸ்யமந்தகமணி கைப்பட்டபின்பு அக்ரூரனடுத்தடுத்து அஸ்வமே தம்பண்ணினுப்போலே, அவர்க்கு மடுத்தடுத் துத்ஸவமாய்ச் செல்லுகிற வித்தனை ; ஸ்த்ரீரத்நமிறே இவள். இவளிருக்கிறவிடமிறே மங்களகோ ஷங்கள் மாறிக்கிடக்கிறது. ( பிள்ளைக்குழா விளையாட்டொலியுமரு ) ப ருவம் நிரம்பியிருக்கச்செய்தே நிஷேதிப்பா ரிருக்கிற வூரைவிட்டு, பருவ ம்நிரம்புவதற்குமுன்னே பகவதநுபவமே யாத்ரையாய்ச்செல்லுவா ரிரு ந்தவூரில்போய்ப் புகுமித்தனையென்கிறள். அவ்வூரில் பருவம் நிரம்பாத பிள்ளைகளு மகப்பட மகரநெடுங்குழைக்காதனுடைய வடிவழகிலே தோ ற்று, வாய்வெருவாநிற்பர்கள். "வாலாஅவி க்ரீ஡ாநாஹ்ருஹாரோஷ ஸம்யுக்தாச்ச ராமாபிஷேகஸஂயுக்தாஃ ப்ரவஃ" (பாலா அபிக் ரீடமாநாக்ருஹத்வாரேஷுஸம்கஶ: । ராமாபிஷ்டவஸம்யுக்தாப்ரசக்ருரே வமிதஃகதாஃ ) என்னும்படியே. [ராமோராமோராமஇதி] [ராமோரா மோராம இதி] "சோறு சோறுசோறு" என்பாரைப்போலே. [ப்ரஜா நாமபவஂகதாஃ] [ப்ரஜாநாமபவங்கதாஃ] ஜநிதர்மாக்களுக்கெல்லாம் பா சுரமிதுவே. [ராமபூதஂஜகதபூத்] [ராமபூதம்ஜகதபூத்] நாடடங்கரா மாத்வைதமானபடி. நித்யவிபூதியிலே பரிமாறக்கடவதிங்கே பரிமாறுகை க்கு ஹேதுவென்னென்னில் [ராமோராஜ்யம்ப்ரஶாஸதி] [ராமோராஜ்யம் ப்ரஶாஸதி] நாடடங்கலும் தந்தாமுடைய கர்மபலம்புஜிக்கப் பெற்றார்க ளில்லை, ராமபாக்யமே யநுபவித்துவிட்டது, [நவாக்நிஜஂபயஂகிஞ்சித்] [ந சாக்நிஜம்பயம்கிஞ்சித்] அக்நியும் சோறுவேவிக்கவேண்டுமெளஷ்ண்யத் துக்குமேற்படவுடைத்தாவதில்லை. [நாப்ஸுமஜ்ஜந்திஜந்தவஃ] [நாப்ஸுமஜ்ஜ ந்திஜந்தவஃ] கொண்டாழக்கடவ ஜலந்தானே கொண்டுமிதக்கப்புக்கதுரா

மசரத்துக்கஞ்சி. பண்டேகைகண்டிருப்பதொன்றே ஜலந்தான். * வேலை வேவ வில்வளைத்தவனிறே. (திருப்பேரையிற்சேர்வன்நானே) ஜயித்தாரிருந்தவிடத்தே தோற்றார்சென்று விழுமத்தனையிறே. * தாமரைக்கண்ணனென்னெஞ்சினூடே யிறே, ஆகையாலே "ஜிதந்தே" (ஜிதந்தே)என்று சென்று விழுமத்தனையிறே ..........................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (வெள்ளையித்யாதி) "என்சொல்லிச்சொல்லுகேன், திருப்பேரையிற்சேர்வன்நான், அன்னைமீர்காள்" என்கிறபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை (இப்பிராட்டியித்யாதி)

திருக்கண்களுக்குமுன்னே திவ்யாயுதங்களைச் சொல்லுவானென்னென்ன; போக்யதையாலேயென்கிறார் (தவளமித்யாதி) சப்தார்த்தம் (முகில்வண்ணனித்யாதி) முகில்வண்ணனிறேயென்றது- "நிகரில்முகில்வண்ணன்" என்றத்தைப்பற்ற, "வெள்ளை" என்று சங்குக்குவிசேஷண மிட்டுச்சொன்னாப்போலே சொல்லாதே. வெறுமனே "ஆழி" என்றதுக்குபாவம் (அங்ஙனுமித்யாதி) இதுக்கநந்தரம் " தாமரைக்கண் " என்றதுக்குபாவம் ( தாமரைக்கண்ணென்றேயித்யாதி ) திவ்யாயுதங்களோடே திருக்கண்களைக்கூட்டிச்சொன்னதுக்கு பாவத்வயம் (திருமேனிக்கித்யாதியாலும், ப்ரதிகூலர்க்கித்யாதியாலும்) அதாவது-ப்ரகாஶகத்வாகாரமும், ஆகர்ஷகத்வாகாரமு மிரண்டுக்கு மொத்திருக்கையாலே கூட்டிச்சொல்லுகிறானென்று-க்ரமேண விரண்டு வாக்யத்துக்கும்பாவம். அப்படி ப்ரகாஶகமோவென்ன ( அகவாயிலித்யாதி ) ப்ரதிகூலர்க்குத் திருக்கண்கள் விரோதியாய்த் தோற்றுமென்னுமதுக்கு, "சோதனையமலவிழித்தானே" என்றதுப்ரமாணம். இந்தப்ரஸங்கத்திலே; திவ்யாயுதங்களோடே திவ்யாவயவங்களைச்சேர்த்தும், திவ்யாவயவங்களோடே திவ்யாயுதங்களைச்சேர்த்து மாழ்வார்க ளநுபவிப்பர்களென்கிறார் ( திருக்கண்களோடேயித்யாதி ) இவ்வுபயத்துக்கும் ஹேதுவேதென்ன (ஆயுதங்களோடே யித்யாதிவாக்யத்ரயத்தாலே) ஆயுதம்போலே திருக்கண் தோற்பிக்குமோவென்ன (ஜிதந்தேயித்யாதி) திருக்கண்களோடே திவ்யாயுதங்களைச்சேர்த்ததுக்கு, " செய்யகண்ணுருவச்செஞ்சுடராழிவல்லானே " என்றத்தைக்கண்டுகொள்வது. திவ்யாயுத ப்ரஸங்கத்திலே, த்விபுஜனோ சதுர்ப்புஜனோ சர்வேஶ்வரனென்று சங்கைவர (இவ்விடத்தேயித்யாதி) அதாவது - நிலாத்துக்குறிபகவர் ப்ரஶ்நத்துக்கு பட்டர் பரிஹரித்த வார்த்தையை யருளிச்செய்வனொன்றபடி. * பயிலும்சுடரொளி யிரண்டாம்பாட்டிலே யிந்தவைதிஹ்யங்கண்டுகொள்வது. ஒப்பனையழகாலும் திவ்யாயுதங்களுக்கும் திருக்கண்களுக்கும் சேர்த்தியுண்டென்று மூன்றாம்பாவம் (கைக்கித்யாதி) "திவ்யாயுதங்களாபரணம்" என்னுமதுக்கு ப்ரமாணம் ( திருக்கண்டேனித்யாதி ) பாட்டுக்குக்ரமேணார்த்தம்-பெரியபிராட்டியாரைக்கண்டேன், பொன்போலே ஸ்ப்ருஹணீயமான திருமேனியைக்கண்டேன், விளங்குகிற பாலார்க்கனைப்போலே யிருவருடையவொளியும் தன்னிலேகலசி விளங்காநின்றுள்ள வழகியநிறத்தையுங்கண்டேன், யுத்தோன்முகமாய்க் கிளருகிற பொற்கென்ற நிறத்தையுடைய திருவாழியைக் கண்டேன், சுற்றும் முற்றும் சீறிப்பார்க்கிற ஸ்ரீபாஞ்சஜந்யத்தையுங்கண்டேன். புரிசங்கம் - சேஷத்வத்தாலே ப்ரஹ்வீபாவத்தையுடைய சங்கென்றுமாம். என்னுடைய, கடல்போலே ஶ்ரமஹரமான வடிவையுடையவன்பக்கலிலே யாழ்வார்க

ளிருவரும் காட்டக்கண்டவின்று. சாடு (ஆழ்வார்கள்தானித்யாதி) கைசெய்கை-அலங்கரிக்கையும், ஸஹாயம் செய்கையும், யுத்தம்பண்ணுகையும்.

"என்" என்றதுக்குபாவம் (தங்கள்நெஞ்சிலித்யாதி) அணுவானநெஞ்சுக்குள்ளுண்டோவென்ன (இவர்க்கித்யாதி) "நீணகர்" என்றதுக்கர்த்தம் (ஒரு த்ரிபாத்விபூதியித்யாதி) "கடாகின்ற" என்றதுக்குபாவம் (திருவடியித்யாதி) சாரிகை-வையாளி. அழகுசெண்டேறுகை - விளையாட்டுச்சாரிகைவருகை. அழகுகாட்டிக்கொண்டு புறப்படுகையுமாம். "நெஞ்சு" என்றதுக்குபாவமாதல், "நெஞ்சினூடே" என்றவவதாரணத்துக்கு பாவமாதல் (அகவாயிலித்யாதிவாக்யத்வயம்) அகவாயிலுள்ளது மேலேதோன்றுமென்றதுக்கு ப்ரமாணம் (நிர்க்குணஃபரமாத்மாஸௌதேஹந்தேவ்யாப்யதிஷ்டதி) என்கிறவசனம். கீழெல்லாங்கூட்டிபாவம் (ஹம்ஸேத்யாதி) அத்தை-தடாகத்தை. கினிய - கபளீகரிக்க. எல்லாருமிருக்க விவருடைய ஹ்ருதயத்திலே செய்வானென்னென்ன (இப்படியேயிறே யித்யாதி) "நெஞ்சினூடேபுள்ளைக்கடாகின்ற" என்றப்ரஸங்கத்திலே, அநுகூலரோடே ஸவிக்ரஹனாய்ப்பரிமாறுமென்றதுக்காப்தஸம்வாதம் (நஞ்சீயரித்யாதி) தோற்றவருளிச்செய்து-வ்யாக்யாநம்செய்து. விக்ரஹவ்யாப்திக்கு ப்ரமாணங்கள் (அரவத்தமளியித்யாதி) (சொல்லுகிறபடியே) என்னுமளவும் - பிள்ளான்வார்த்தை. பெரியாழ்வார் திருமொழி அஞ்சாம்பத்து இரண்டாந்திருமொழி. (அரவத்தமளியினோடும்) திருவநந்தாழ்வானாகிற படுக்கையோடும்; அமளி - படுக்கை; அத்து - சாரியைச்சொல்; (அழகிய பாற்கடலோடும்) அழகிய திருப்பாற்கடலோடும்; (அரவிந்தப்பாவையும்) பிராட்டியும்; (தானும்) உபயவிபூதிவிசிஷ்டனானதானும்; (அகம்படிவந்துபுகுந்து) அந்தரங்கரான வடியாரோடேவந்து புகுந்தென்றபடி. அகம்படி - அந்தரங்கரானவடியார். "𑌲𑌾𑌭𑌸𑍍𑌤𑍇𑌷𑌾𑌂𑌜𑌯𑌸𑍍𑌤𑍇𑌷𑌾𑌂𑌕𑍁𑌤𑌸𑍍𑌤𑍇𑌷𑌾𑌂𑌪𑌰𑌾𑌭𑌵𑌃 । 𑌯𑍇𑌷𑌾𑌮𑌿𑌨𑍍𑌦𑍀𑌵𑌰" (லாபஸ்தேஷாம் ஜயஸ்தேஷாம்குதஸ்தேஷாம்பராபவஃ। யேஷாமிந்தீவர) இத்யாதி. விக்ரஹம் கால்பநிகமென்கிறார்களேயென்ன; பரமார்த்தமென்கைக்குபபத்தி யருளிச்செய்கிறார் (சுபாஶ்ரயேத்யாதிவாக்யத்வயத்தாலே) ஆக, இத்தால் - உபாஸநவேளையிலே விக்ரஹத்தை த்யேயமாகச் சொல்லுகையாலும், பலவேளையிலுங்கொடுப்பதும் * சதாபஶ்யந்திக்குவிஷயமும் விக்ரஹமேயாகையாலும் விக்ரஹம் கால்பநிகமன்றென்றபடி. ஆனால், மாயிகளிதுக்கிசைய வில்லையேயென்ன; நமக்கவர்களைக்கொண்டு கார்யமென், நம்மாழ்வார்கள் சொன்னதே நமக்கு விஶ்வஸநீயமென்கிறார் (புறம்புள்ளாரித்யாதிவாக்யத்வயத்தாலே) "இவ்வுபபத்திகளெல்லாம் '𑌤𑌸𑍍𑌯𑌾 𑌉𑌪𑌾𑌸𑍍𑌯𑌾𑌯𑌾𑌦𑍇𑌵𑌤𑌾𑌯𑌾𑌰𑍂𑌪𑌮𑍁𑌪𑌦𑌿𑌶𑍍𑌯𑌤𑍇' (தஸ்யா உபாஸ்யாயாதேவதாயாரூபமுபதிஶ்யதே) இத்யாதியாலேத்ரமிடபாஷ்யகாரராலுமுக்தங்கள்" என்றருளிச்செய்வர். ஆனால், "𑌤𑌦𑍇𑌕𑌾𑌵𑌯𑌵𑌂𑌦𑍇𑌵𑌂" (ததேகாவயவம்தேவம்) இத்யாதியாலே - விக்ரஹத்தை விட்டவ்வருகே போவானென்கிறதேயென்ன (இதுக்குமுள்ளேயித்யாதி) இதுக்கும் - விக்ரஹத்துக்கும். "கடாகின்ற" என்று-திருவடியையசேதநமாகச் சொல்லுவானென்னென்ன (அகவாயிலித்யாதி) (வடிம்பிட்டு - ப்ரேரித்து - தாக்க, ஓங்காண் நீயறிந்தாயோவென்று-மீளாநிற்கும்) என்றந்வயிப்பது. வடிம்பிட்டு - தனிபோட்டு. அப்படி யீஶ்வரனைப்பற்றவுமிவர்க்கு ரக்ஷணப்பாரிப்புண்டோவென்ன (நீமத இத்யாதி) "𑌰𑌾𑌮𑌸𑍍𑌯𑌵𑍍𑌯𑌵𑌸𑌾𑌯𑌜𑍍𑌞𑌾𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑌸𑍍𑌯𑌚𑌧𑍀𑌮𑌤𑌃 । 𑌨𑌾𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌂𑌕𑍍𑌷𑍁𑌭𑍍𑌯𑌤𑍇𑌦𑍇𑌵𑍀𑌗𑌙𑍍𑌗𑍇𑌵𑌜𑌲𑌦𑌾𑌗𑌮𑍇" (ராமஸ்யவ்யவஸாயஜ்ஞாலக்ஷ்மணஸ்யசதீமதஃ। நாத்யர்த்தம்க்ஷு

ப்யதேதேவிகங்கேவஜலதாகமே) இதி ஸுந்தரகாண்டே. "யீ௨தஃ" (தீமதஃ) என்கிறது - த்ருஷ்டாந்ததயாவந்ததித்தனை யிப்பதத்தில். நடாகின்ற - நடத்துகிற வித்யர்த்தஃ. நடாகின்ற" என்றத்தை - "காணீர்" என்றத்தோடே கூட்டிபாவம் (பூதமாயித்யாதிவாக்யத்ரயத்தாலே) இப்படியானுலுபதேசிக்க வேண்டுவானென்னென்ன; "காணீர்" என்கிறபதத்துக்கர்த்தத்தையு மருளிச்செய்யாநின்றுகொண்டு. அதுக்குஹேதுவையருளிச்செய்கிறுர் (காண்கிறிலீரித்யாதிவாக்யத்வயத்தாலே) "காணீர்" என்றதுக்கிரண் டர்த்தம் - காண்கிறிலீரொன்னுதல், காணுங்கோளென்னுதல். இந்த விரண்டாமர்த்தத்தை, ஸ்ரவணேந்த்ரியத்தாலும். சக்ஷுரிந்த்ரியத்தாலும், உட்கண்ணுலுங்காணுங்கோளென்று த்ரிவிதமாக வருளிச்செய்கிறுர் (உங்களுக்கு குரகோஷமென்றுதொடங்கி, உட்கண்ணுலே காணிகோளென்னுமளவாலே) இத்தால்பலிதம் (ப்ரஸித்தமானவித்யாதி) கீழ்ச்சொன்ன வர்த்தத்வயத்தையுங்கூட்டி யருளிச்செய்து, உட்கண்ணுலே காணுங்கோளென்ற மூன்றும் ப்ரகாரத்தை யருளிச்செய்கிறுர். (உங்களுக்குக்கண்ணுமித்யாதி)

"என்சொல்லி" என்றதுக்கவதாரிகை (நாங்களித்யாதி) எத்தைச்சொல்லுவதென்றது - எந்தவர்த்தத்தைச் சொல்லுவதென்றபடி. பாசுரமிட்டுச் சொல்லவொண்ணுதோவென்ன (உங்களித்யாதி) ஹார்த்தபாவமாதல். ஏதத்விவரணமாதல், "என்னெஞ்சினூடே" இத்யாதியையும் "என்சொல்லிச்சொல்லுகேன்" என்றத்தையுங்கூட்டிரஸோக்தியாதல் (இவர்க்குநெஞ்சித்யாதி) சொல்லப்போகாமைக்கு ஹேதுத்ரயமருளிச்செய்கிறுர் (நான்பலஹாநியித்யாதிவாக்யத்ரயத்தாலே)

எல்லாம்சொல்லப் போகாவிட்டாலும், அறிந்தவம்சம் சொல்லவொண்ணுதோவென்ன (ஜ்ஞாதாம்ஸமித்யாதி) ஸஜாதீயைகளானிகோளாகில் - தோழிமாரானிகோளாகிலென்றபடி. "அன்னைமீர்காள்" என்றதுக்கு - கீழ், வ்ருத்தைகளென்றருளிச்செய்து, நியாமகத்வவிவக்ஷயாபாவாந்தரம் (எனக்கோடுகிறவித்யாதிவாக்யத்வயம்) பழமைகொண்டாடுகிறிகோள்) என்றதின் விவரணம் (நிஷேதிக்கைக்கித்யாதி)

உத்தரார்த்தத்துக்கவதாரிகை (எங்களுக்கித்யாதிவாக்யத்வயம்) அவனே வாராளுேவென்ன (பிரிந்துபோனுனையித்யாதி) நினைக்கவொட்டாததேஸமுண்டோவென்ன (கோபஜநமித்யாதி) "வெள்ளச்சுகமவன்" ஸுகார்ணவத்தையுடையவனித்யர்த்தஃ. ஸுகாதிசயம்வருகைக்குஹேதுவருளிச்செய்கிறுர் (பிரிவிலுமித்யாதி) மறுவற்ற-ஸ்வஸ்சமானவித்யர்த்தஃ. மறுவற்றசுகத்தையுடையவனித்யர்த்தஃ. "வெள்ளம்" என்றபோது, வெள்ளமென்று - சமுத்ரம். வீற்றிருந்த - வேறுபாடு தோற்றவிருந்த. "வீற்றிருந்த" என்றதுக்கு வ்யாவர்த்யம் (இட்டகாலித்யாதி) வேறுபாடேதென்ன (இத்தலையையித்யாதி) "வீற்றிருந்த" என்றதுக்கு - ராஜாவாயிருந்தவென்றர்த்தாந்தரம் (இத்தலையைத்தோற்பித்தவித்யாதி) வெற்றி - ஜயம். அவனப்படி வீற்றிருந்தால் நீயுபேக்ஷியாதே "சேர்வன்" என்கிறதென்னென்ன (அவன் மெய்மறந்தித்யாதி) அவன் மெய்மறந்து - அவன் நம்முடைய வைலக்ஷண்யத்தை மறந்து. அப்படியிருந்தால் - உபேக்ஷித்திருந்தால். நாமும் மெய்மறந்திருக்கவோ - நாமுமவன் வைலக்ஷண்யத்தைமறந் துபேக்ஷித்திருக்கவோ வென்றபடி. அதுக்கடியேதென்ன (பரிபூர்ணனுயவனித்யாதி) அவன் வாராதிருந்தால். "தத்ஸ்ய ஸ ஏவ ஸம்ஸவெத்" (தத்தஸ்யஸத்ருஸம்பவேத்) என்றிருக்கக்கடவநாம் த்வரிக்கலாமோவென்ன (அவன்முறையித்யாதி) அவன் முறைதப்பினுனென்று, நமக்குத்தப்பலாமோ வென்ன (பிரிந்தாலித்யாதி) முறைதப்பும் ப்ரகாரத்தைச் சொல்லுகிறுர்

( முறையையழித்தாகிலுமித்யாதி ) அப்படி ஸ்வயத்நத்திலே யங்வயித்தாருண்டோ வென்ன ( நமக்கேயித்யாதி ) நமக்கே நன்மை பார்க்கக் கடவோமென்றபடி. திருமொழி ஒன்பதாம்பத்து மூன்றாந்திருமொழி ஒன்பதாம்பாட்டு, "ஓதிநாமம்" இத்யாதி.

"வேதவொலி" என்றதுக்கு பாவம் ( அவன் நெஞ்சித்யாதி ) பழம்புணர்ப்பு - பழையவெற்றிமாலைகள். புணர்ப்பு - வெற்றிமாலை.

நெய்யாடல்போற்றுகை - நெய்யிறைத்து விளையாடுகை. "அரு" என்றதுக்குபாவம் ( தீர்த்தம் ப்ரசாதித்தவித்யாதி ) த்ருஷ்டாந்தபூர்வகோபபாதநம் (ஸ்யமந்தகேத்யாதி) வ்யதிரேக சித்தார்த்தம் (இவளிருக்கிறவித்யாதி) "பிள்ளைக்குழா விளையாட்டொலியும்" என்றதுக்குபாவம் (பருவம்நிரம்பியித்யாதி) அப்படி பால்யத்திலும் பகவதநுபவபரரா யிருப்பர்களோவென்ன ( அவ்வூரிலித்யாதி ) இதுக்கு ப்ரமாணம் ( பாலாஅபீத்யாதி ) "஬ாலாஅபி க்ரீடமாநா ரு஥ஹாரேஷு ஸம்ஸ்தா: । ராமாபிஷ்டவஸம்யுக்தாஶ்சக்ருரேவமித:க஥ா:" ( பாலாஅபி க்ரீடமாநா க்ருஹத்வாரேஷுஸம்ஸ்தா:। ராமாபிஷ்டவஸம்யுக்தாஸ் சக்ருரேவமித:கதா: ) இத்யயோத்யாகாண்டே. பாலர்களேயன்றிக்கே, ஜநிதர்மாக்களெல்லாருமிப்படியே யென்று விவக்ஷித்து, அதுக்கு ப்ரமாணம் ( ராமஇத்யாதி ) "ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாமபவந்க஥ா: । ராம஭ூதம் ஜக஦஭ூ஦் ராமே ராஜ்யம் ப்ரஶாஸதி" ( ராமோராமோராமஇதி ப்ரஜாநாமபவங்கதா:। ராமபூதம்ஜகதபூத் ராமேராஜ்யம்ப்ரஶாஸதி ) இத்யுத்தரஸ்ரீராமாயணே. வீப்ஸைக்கர்த்தம் (சோறித்யாதி) ஜநிதர்மாக்கள் - பிறந்தவர்களென்றபடி. அப்படி ஸ்வகர்மபலம் புஜித்திலர்களோ வென்ன, ப்ரமாணம் ( நசாக்நிஜ மித்யாதி ) ஸ்ரீலங்கேஷபே, "ந சாக்நிஜம் ஭யம் கிஞ்சிந்நாப்ஸு மஜ்ஜந்தி ஜந்தவ: । ந வாதஜம் ஭யம் கிஞ்சிந்நாபி ஜ்வரக்ருதம் த஥ா." ( நசாக்நிஜம்பயம்கிஞ்சிந் நாப்ஸுமஜ்ஜந்திஜந்தவ:। நவாதஜம் பயம்கிஞ்சிந்நாபிஜ்வரபயம்ததா. ) ராமசரத்துக் கஞ்சியிருக்குமோவென்ன ( பண்டேயித்யாதி ) சாத்தாலே ஸமுத்ரத்தை தஹித்ததுக்கு ப்ராமணம் (வேலையித்யாதி) திருச்சந்தவிருத்தம் முப்பத்தோராம்பாட்டு. "காலநேமி" இத்யாதி. ஸமுத்ரம் தக்தமாம்படி வில்வளைத்தவனித்யர்த்த:.

தான் சேருகிறதென், அவன்வரப்பார்த்திருந்தாலோ வென்கிற சங்கைக்கு, பூர்வார்த்தத்திலே நோக்காக பரிஹாராந்தரம் (ஜயித்தாரித்யாதி) முந்தின பரிஹாரம் (பிரிந்துபோனாரை) இத்யாதிவாக்யம். அப்படி தான் தோற்றாளோ வென்ன ( தாமரையித்யாதி வாக்யத்வயம் )..................................................*



# இரண்டாம்பாட்டு.

நானக்கருங்குழற்றோழிமீர்காளன்னையர்காளயற்சேரியீர்கா
ணனித்தனிநெஞ்சங்காக்கமாட்டேனென்வசமன்றிதிராப்பகற்போய்த்
தேன்மொய்த்தபூம்பொழிற்றண்பணைசூழ் தென்றிருப்பேரையில்வீற்றிரு
வானப்பிரான்மணிவண்ணன்கண்ணன்செங்கனிவாயின்றிறத்ததுவே.[ந்த

கரு

## ஆறாயிரப்படி.

(நானக்கருங்குழல்) அதி பரிமள நீலாலகாலங்க்ருத வதநாரவிந்தங்களை யுடைய தோழிமாரு மன்னையரும் மற்றுமுள்ள பந்துஜநங்களும் "நீதனியேபோகையிடல்ல" என்றுசொல்ல, அவர்களைக்குறித்து; நானென்னுடைய ஸ்வதந்த்ரமான நெஞ்சைக்காக்கமாட்டேன், எனக்கு விதேயமன்று, ஆஶ்ரயஸுலபனுகைக்காகத் திருநாட்டில் நின்றும் ஸ்ரீவஸுதேவர் திருமகனுய்வந்து பிறந்தருளி, அக்காலத்தில் பெறுதாருடைய விழவுதீரும்படி, தேன்மொய்த்த பூம்பொழில் தண்பணைசூழ் தென்திருப்பேரையில் பரிபூர்ணனு யெழுந்தருளி யிருந்தவவனுடைய, மத்ஸம்ஶ்லேஷத்தாலே புறுக்கணித்த திருப்பவளத்திலே யென்னெஞ்சிராப்பகல் போய்ப்படிந்து கிடக்கும், இனிநானெங்ஙனே போகாதிருக்கும்படி யென்கிருள்........................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நிரவதிகமான பரத்வ ஸௌலப்யங்களையுடையவன்பக்கலிலே சக்தமாய்ப்போன வென்னெஞ்சைத் தகையமாட்டுகிறிலே னென்று தோழிமாரையும் தாய்மாரையு மயலாரையுங்குறித்துச் சொல்லுகிருள்.

நானம்-பரிமளோத்தரமான கந்தத்ரவ்யத்தாலே வாசிதமாய். கரு-கறுத்த. குழல்-குழலையுடையரான. தோழிமீர்காள்-தோழிமீர்காள். அன்னையர்காள் - அவர்களோ டென்னேடுவாசியற நியந்த்ரிகளான வன்னைமீர்காள். அயற்சேரியீர்காள்-செய்திவினவவந்த அயற்சேரியீர்காள். நான்-அதிப்ரவணையானநான். தனி-என்னிலுமதிசயித ப்ராவண்யத்தையுடைத்தாய் ஸ்வதந்த்ரமான. இ-இந்த. நெஞ்சம்-நெஞ்சை. காக்கமாட்டேன்-என்னைவிட்டுப்போகாமல் தகையமாட்டேன். என்-எனக்கு. வசம்-விதேயம். அன்று-அல்ல. இது - இது. இராப்பகல் - இரவோடு பகலோடு வாசியற. போய்-என்னைவிட்டுப்போய். தேன்-வண்டுகள். மொய்த்த - மொய்த்த. பூம்பொழில்-பூம்பொழிலையுடைத்தாய். தண்-குளிர்ந்த. பணை-நீர்நிலங்கள். சூழ்-சூழ்ந்திருக்கிற. தென்-கட்டளைப்பட்ட. திருப்பேரையில் - திருப்பேரையிலே. வீற்று-தன்பெருமைதோன்றும்படி. இருந்த-இருக்கிற. வானம் - பரமபதநிலயனை. பிரான்-மேன்மையுடையனுய். மணி-உஜ்ஜ்வலமான மாணிக்கம்போலேயிருக்கிற. வண்ணன்-வடிவையுடையனுய். கண்ணன்-ஆஶ்ரிதபவ்யனுன க்ருஷ்ணனுடைய. செம்-சிவந்த. கனி-கனிபோலேயிருக்கிற. வாயின் - அதரசோபையிலே. திறத்தது - சக்தமாயிற்று.

நானம்-மயிர்க்கிடும் கந்தத்ரவ்யம், புழுகாகவுமாம்........................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

தாய்மார் முகம்பார்த்துச் சொன்னளாயிறே - கீழ்ப்பாட்டில் நின்றது; "இவளிவ்வளவில் மீளுமவளன்றிக்கே யிருந்தாள்" என்றுதாய்மாரோடு தோழிமாரோடு அயற்சேரி யுள்ளாரோடு வாசியறவந்து திரண்டு ஹிதஞ்சொல்லப் புக்கார்கள்; உங்கள் ஹிதவசநங்கேளாதபடி நிரவதிகமான பரத்வஸௌலப்யங்களையுடையவன் பக்கலிலே சக்தமாய்

அவ்வளவிலுமிவள் மறுவற்ற சந்த்ரமண்டலம்போலே முகத்தில் குளிர்த்திமாருதே யிருந்தாள். [ நீவொநெத்ராதுரஸ்யெவப்ரதிகூலாஸிமெத்ருடம் ] [நீபோநேத்ராதுரஸ்யேவ ப்ரதிகூலாஸிமேத்ருடம்] இதுக்காளவந்தா ரருளிச்செய்யும்படி –“நேத்ரதோஷத்தால் வந்ததுபோக்கி, நீயதோஷத்தால் வந்ததன்று” என்று. ( செற்றபிரான் வந்து வீற்றிருந்த) ப்ரதிகூலநிரஸநம் பண்ணி விடாய்த்து வந்திருக்கும், “ ஹத்தாரம்பரிஷஸ்வஜெ ” ( பர்த்தாரம் பரிஷஸ்வஜே ) என்னும்படியே ஸிஸிரோபசாரம்பண்ணப் போகவேணும். (பேரையிற்கே யித்யாதி) அவனிருந்த திருப்பேரையிலேபுக்குத்தேடி யென்னெஞ்சான தோரிடத்திலும் மீண்டுவரக்காண்கிறிலேன். மீளவொண்ணாத லங்கையிலே புக்க திருவடியும் மீண்டுவந்தான், அணித்தான விவ்வூரிலே புக்க நெஞ்சு மீண்டுவரக்காண்கிறிலேன். நெஞ்சுங்கூடவாராதபின்பு அவன் வாராமை சொல்லவேண்டாவிறே. நெஞ்சின்வரவுபார்த்துக் கண்மறைந்துகாணு மிவள் நிற்கிறது. (மாட்டேன்) கண்டு ஜீவியாதே நானிங்ஙனே முடிந்து போமித்தனையாகாதே.

அபிமதன்வருந்தனையும், அவனுக்காக வ்ருத்தகீர்த்தநம்பண்ணி தரித்திருக்கவேண்டாவோவென்னில் (ஆரையினி யிங்குடையந்தோழீ) நெஞ்சுமில்லாதவன்றினியாருண்டு. (தோழீ) “நெஞ்சிலண்ணியனோ” என்றுயாகில், நீயானுயே.

இப்போது நானிங்கில்லையோ ( என்னெஞ்சங் கூவவல்லாருமில்லை ) நெஞ்சைமீட்கைக்கு நீவேணுமே, நெஞ்சை யவனுக்காக்கின நீ வேணுமே யெனக்காக்கும்போதும்; உன்தசையிது, உனக்குக்கால்கள் நடைதாராது. அல்லாதார்க்கு “ கூட்டவேணும் ” என்னும் த்வரையில்லை. ஆர் நெஞ்சையழைப்பார்.

(ஆரையினிக்கொண்டென் சாதிக்கின்றது) ஆரைக்கொண்டுதான் சாதிப்பது, இனி ஸாத்யந்தானெது. நெஞ்சுமவனும் வந்தாலினி நான்றானுண்டாக வேணுமே, இங்கு வெறுந்தரையாயிறே கிடக்கிறது.

ஆறுல் செய்யப்பார்த்த தென்னென்னில் ( என்னெஞ்சங்கண்டதுவேகண்டேனே ) மீளாதே நெஞ்சுபோனவழியே போகப்பார்த்தேன். “அத்யைவாஹம்கமிஷ்யாமி லக்ஷ்மணேநகதாம்கதிம் ” (அத்யைவாஹம் கமிஷ்யாமி லக்ஷ்மணேநகதாம்கதிம்) என்கிறபடியே நெஞ்சுபோனவழியே போகப்பார்த்தேன்...................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (பேரெயிலித்யாதி) “ என்னெஞ்சங்கண்டதுவேகண்டேன் ” என்றத்தைப்பற்ற ஸகிதர்ஸநமாகவவதாரிகை (அஹஞ்சாநுகமிஷ்யாமீத்யாதி) கீழிற்பாட்டோடேசங்கதி ( கிழிலளவுகளித்யாதி ) “ இனி ” என்றதுக்கு பாவமாதல்.

கிழிலளவுகள் குலைந்தபின்பென்றது - நிறந்தொடக்கமானவற்றையும் உசாத்துணையான நெஞ்சையுமிழந்து, தாய்மார்காட்ட வொருப்படுகையன்றிக்கே நிஷேதிக்குமளவானபின்பென்றபடி.

"தென்னிலங்கைசெற்றபிரான்" என்றத்தையுங்கூட்டி "வந்துவீற்றிருந்த" என்றதுக்குபாவம் அப்போதித்யாதி) அப்போது - ராவணவதாநந்தரம். முகம்மாறவைத்த - இவளுக்கபிமுகராகாதிருந்தவென்றபடி. அவர்முகம் மாறவைத்தபோதிவளிருந்தப்ரகாரமேதென்ன; அதுக்குப்ரமாணம் (விமலேத்யாதி) "[illegible]" (அதஸமபநுதசந்மநக்லமம்ஸாஸசிரமத்ருஷ்டமுதீக்ஷ்யவைப்ரியஸ்ய । வதநமுதிதபூர்ணசந்த்ரகாந்தம் விமலஶஶாங்கநிபாநநாததாஸீத் ) இதியுத்தகாண்டே ஸப்ததஶஶததமே. "[illegible]" ( ததா - விமலஶஶாங்கநிபாநநா ) என்றதுக்குப் பொருள் (எப்போதித்யாதி) எப்போது - யாதொருபோதென்றபடி. முகத்தில்குளிர்த்திமாறுமைக்கடி-சிரகாலம் பிரிந்து சேவிக்கப்பெற்றப்ரீதியும், அங்யஸ்பர்ஶதோஷமில்லாமையும், "சேஷியின் விநியோகப்ரகாரங்கொண்டு கார்யமென்" என்கிற நினைவுமென்றபடி. "ததா" என்றதுக்குச்சேர, யதா என்றத்யாஹார்யமென்று திருவுள்ளம்பற்றி (எப்போதென்றது) அவர்முகம் மாறவைத்ததுக்குப்ரமாணம் (தீபஇத்யாதி) "[illegible]" (ப்ராப்தசாரித்ரஸந்தேஹாமமப்ரதிமுகேஸ்த்திதா । தீபோநேத்ராதுரஸ்யேவப்ரதிகூலாஸிமேத்ருடம் ) இதிராவணவதாநந்தரே. த்ருஷ்டாந்தபலத்தாலே - பிராட்டிக்கு நைர்த்தோஷ்யந்தோற்றுகிறதென்கைக்கு பரமாசார்யஸம்வாதம் (இதுக்கித்யாதி) "இலங்கைசெற்றபிரான் வந்துவீற்றிருந்த திருப்பேரையிலேபோகவேணும்" என்கிறவளுடைய பாவம் (ப்ரதிகூலேத்யாதி)

சப்தார்த்தம் (அவனிருந்தவித்யாதி) "பேரையிற்கே" என்கிறவவதாரணத்துக்கர்த்தம் ( மீளவொண்ணுதவித்யாதி வாக்யத்வயம் ) தாதானநெஞ்சு வாராமையாலே, அவன் வாராமை சொல்லவேண்டாவென்கிருள் ( நெஞ்சுங்கூடவித்யாதி ) "மாட்டேன்" என்றதுக்கு முந்தினபாவம் (நெஞ்சின்வரவித்யாதி) கண்மறைந்து-கண்பூத்து. பாவாந்தரம் (கண்டுஜீவியாதேயித்யாதி)

"ஆரையினி" என்றதுக்கவதாரிகை (அபிமதனித்யாதி) "இனி" என்றதுக்கு பாவம் ( நெஞ்சுமித்யாதி ) நீயேயாஞயேயென்றது - நீதோழியாம்படி யாயேயிருந்தாயென்றபடி. அதாவது-என்வ்யஸநத்தைக்கண்டெனக்கு முன்னேதளர்ந்துகிடந்தாயென்றபடி.

இப்போது நானிங்கில்லையோ வென்றது - தோழிவார்த்தை. ( நானிங்கில்லையோ ) என்றவநந்தரம், உன்னெஞ்சை யழைத்துக்கொள்ளுகிறதுக் கென்னவென்று கூட்டுவது. நெஞ்சைமீட்கைக்கு நான்வேணுமோவென்ன (நெஞ்சையவனுக்கித்யாதி) நான்மாட்டேனோவென்ன (உன்தசையித்யாதி) வேறேசிலரையிட்டழைத்துக்கொண்டாலோவென்ன (அல்லாதார்க்கித்யாதி) (உன்தசை) இத்யாதிவாக்யத்வயமும் - "கூவவல்லார்" என்றபஹுவசநார்த்தம்.

சப்தார்த்தம் ( ஆரைக்கொண்டுதானித்யாதி ) "ஆரையினியிங்குடையம்" என்றதுக்கும் "ஆரையினிக்கொண்டு" என்றதுக்கும் வாசியேதென்ன ( நெஞ்சுமவ

னுமித்யாதி) அதாவது-கிழே-தோழியுமில்லையென்றது, இங்கே - தானுமில்லையென்கிருளென்றபடி.

க்ரமேணுர்வய: "ப்ரவேஶய தஸம்ஹாராந் மாபூத்காலாத்யயோ யதா । அத்யைவாஹம் கமிஷ்யாமி லக்ஷ்மணேந கதாம் கதிம்" (ப்ரவேஶயத ஸம்பாராந் மாபூத்காலாத்யயோயதா। அத்யைவாஹம்கமிஷ்யாமிலக்ஷ்மணேநகதாம்கதிம்) இத்யுத்தரஸ்ரீராமாயணே ஸப்தஸததமே ................................*

---

## எட்டாம்பாட்டு.

கண்டதுவேகொண்டெல்லாருங்கூடிக்கார்க்கடல்வண்ணனேடென்றிறத்துக், கொண்டலர்தூற்றிற்றதுமுதலாக்கொண்டவென்காதலுரைக்கிற்றேழீ, மண்டிணிஞாலமுமேழ்கடலும்நீள்விசும்புங்கழியப்பெரிதாற், றெண்டிரைசூழ்ந்தவன்வீற்றிருந்ததென்றிருப்பேரையிற்சேர்வன்சென்றே.

### ஆறுயிரப்படி.

(கண்டதுவேகொண்டு) ஆந்தரமானவபிநிவேஶம் ஸமக்ரமாயிருக்கச்செய்தே புறம்புதோற்றுகிற மாத்ரத்தையேகொண்டு, தத்ஸௌந்தர்ய குணஜநிதமான வென்னபிநிவேஶத்தைக் குற்றமாகவுங்கொண்டுலோகமெல்லாங்கூடி "ஒருத்திக்கெம்பெருமான் பக்கலுள்ள வபிநிவேஶமே!, இப்படி யபிநிவேஶிக்கை குடிப்பழியன்றே" என்று என்னையலர்தூற்ற, அதடியாகக்கொண்டு கிளர்ந்தெழுந்த வென்னபிநிவேஶத்தின் பெருமை சொல்லநிலமன்று. சொல்லில், தோழீ, இவ்வஸங்க்யேயமான வண்டங்களூ மளவிறந்த திருநாடும் நிறையப்பெருகி, அதுவுமிடம் போராமல்பொங்கிப்பெருகாநின்றது. ஆதலாலவனெழுந்தருளியிருந்த தென்றிருப்பேரையிலே நானேயாகிலும்சென்று ஸம்ஶ்லேஷிக்கைதவிரேனென்கிருள்.

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவனேட்டை சம்பந்தமடியாக வூர்ப்பழிவிளையும்படி வந்தகாதலானது சர்வலோகத்தையும் விளாக்கொலைகொண்டு போகாநின்றது; ஆனபின்பு, அவனிருக்கிறதிருப்பேரையிலே சென்று புகுவேனென்கிருள்.

கண்டதுவே - புறவாயில்கண்ட வைவர்ண்யாதிகளையே. கொண்டு-கொண்டு. எல்லாரும்-தாய்மாரோரோரோடு வாசியற வெல்லாரும். கூடி-ஒருமிடருய்க்கூடி. கார் - கறுத்த. கடல் - கடல்போலே ஶ்ரமஹரமான. வண்ணனேடு - வடிவையுடையவனேடேகூடி. என்றிறத்து - என்னிடையாட்டமான சைதில்யத்தை. கொண்டு - அவலம்பித்துக்கொண்டு. அலர் - பழியை. தூற்றிற்றது - தூற்றினவதுவே. முதலா - ஹேதுவாக. கொண்ட-இடங்கொண்ட. என் - என். காதல் - காதல். தோழீ - அடியிலேயிதுக்கு ப்ரவர்த்தகையானதோழீ. உரைக்கில் -பாசுரமிட்டுரைக்கப்பார்க்கில். "கடலின்மிகப்பெரிது" என்றவளவேயல்ல, மண் - மண். திணி-செறிந்த. ஞாலமும்-பூமியும். அத்தைச்சூழ்ந்த, கடல்-கடல். ஏழும்-ஏழும். நீள் - இதெ

ல்லாவற்றுக்கு மிடங்கொடுக்கும் மஹாவகாசமான. விசும்பும்-ஆகாசமும். கழிய-தனக்குள்ளேயாம்படியவ்வருகே. பெரிது - பெருத்திராநின்றது. ஆனபின்பு, தெள்-தெளிந்த. திரை-நீர்த்திரையையுடைத்தாகையாலே ப்ரமஹரமாய். சூழ்ந்தவன்-காதலைப்பெருக்கவளைத்தவன். வீற்றிருந்த-இருக்கிற. தென்-தென். திருப்பேரையில்-திருப்பேரையிலே. சென்று-என்தாபமாறும்படிசென்று. சேர்வன்-சேரக்கடவேன்.

## ஈடு - எட்டாம்பாட்டு.

எனக்கு "அவனைக்காணவேணும்" என்னுமபிநிவேசம் "கடலில் மிகப்பெரிது" என்னுமளவன்றிக்கே, அறமிக்கது; ஆனபின்பு நீங்களாகவிசையிர்கோளாகில், தன் வேண்டற்பாடுதோற்ற வெழுந்தருளியிருக்கிற தென்திருப்பேரையிலே நான்போய்ப் புகுவேனென்கிறாள்.

(கண்டதுவேகொண்டு) அவன்பேர்சொல்லுதல், "தலையில்வணங்கவுமாங்கொலோ" என்று ஒருப்ரணாமஞ்செய்தல் செய்யுமிறே; அம்மாத்ரத்தையேகொண்டு. புறவிதழ்கண்டு படுகிறபடி யிதுவானால், அகவாயிலோடுகிற தறியிலென்படுவர்கள். (எல்லாருங்கூடி) பரிவரோடு,ஹிதகாமரோடு, "இவையிரண்டுந்தானென்" என்றிருப்பாரோடு வாசியறக்கூடி. பிறரைப்பழிசொல்லவென்னில், தம்மில் தாம் சேராதவர்களும் சேர்வர்களிறே. (கார்க்கடல்வண்ணனோடென்றிறத்துக்கொண்டு) இவள் நிறம்விவர்ணமாம்போது, அவன்றிறத்தே யிழந்ததாகவேண்டாவோ கடலேறிவடிந்தவிடமென்று தோற்றுகிற தில்லையோ. என்னிடையாட்டத்தை ப்ரமஹரமான நிறத்தையுடையவனோடே கூட்டி. (அலர்தூற்றிற்றதுமுதலாக்கொண்ட வென்காதலுரைக்கில்) இவர்கள் பேசாதேயிருந்தார்களாகில் நானும் சுகமேயிரோனே. நான்பழிக்கஞ்சி மீளுவேனென்று காணுமிவர்கள் பழிசொல்லப்புக்கது. (அலர்தூற்றிற்று) அலர்தூற்றினர்கள். (அதுமுதலித்யாதி) அதுதானே யடியாகக்கொண்ட வென்காதலானது சதசாகமாகப்பணைக்கப்புக்கது ; (காதலுரைக்கில்) தன் காதல் தன்னாலும் சொல்லிமுடிய வொண்ணாதுகாணும். "யதோவாசோ நிவர்த்தந்தே" (யதோவாசோநிவர்த்தந்தே) என்கிறவிஷயத்தைச்சொல்லிலு மிவள்காதல் பேச்சுக்குநிலமன்று. இக்காதலுக்கு விஷயபூதனானவனையும் விளாக்கொலைகொள்ளவற்றான காதலிறே. "சுடர்ஞானவின்பம்" என்று - பகவதாநந்தத்தைச்சொல்லிவைத்து, "அதனிற்பெரியவென்னவா" என்றதிறே. (தோழீ) இக்காதலைவிளைக்கைக்கு நீபண்ணும் க்ருஷிபறிதியிறே. இதிருந்தபடிபாராய் (மண்திணிஞாலமித்யாதி) "காதல்கடலில்மிகப்பெரிதால்" என்றவிடம் - ஓராதே சொன்னோம்; ஆனாலெங்ஙனே சொல்லும்படியென்னில் பெரியவற்றில் பெரியதென்னுமித்தனையல்லது, ஒருபாசுரமிட்டுச்சொல்லலாவதில்லை. மண்ணாலே நெருங்கின பூமியென்றபடி. அத்தையும் சூழ்ந்தகடலேழும், அவற்றுக்கெல்லா மவகாசமான வாகாசமும், இவை யித்தனைக்கு மவ்வருகுபட்டிருக்கை.

இப்படி காதல்கரைபுரண்டால் செய்யப்பார்த்த தென்னென்ன (தெண்டிரையித்யாதி) இக்காதல் மறுநனையும்படியான விஷயமிருந்தவிடத்தே போய்ப்புகுமத்தனை. தெளிந்ததிரைகளாலே சூழப்பட்டு அவன் வீற்றிருந்த தென்றிருப்பேரையிலே போய்ப்புகுமத்தனை. "𑌤𑌸𑍍𑌯𑍋𑌪𑌵𑌨𑌷𑌣𑍍𑌡𑍇𑌷𑍁 𑌨𑌾𑌨𑌾𑌪𑍁𑌷𑍍𑌪𑌸𑍁𑌗𑌨𑍍𑌧𑌿𑌷𑍁। 𑌵𑌿𑌹𑍃𑌤𑍍𑌯 𑌸𑌲𑌿𑌲𑌕𑍍𑌲𑌿𑌨𑍍𑌨𑌾 𑌤𑌵𑌾𑌙𑍍𑌕𑍇 𑌸𑌮𑍁𑌪𑌾𑌵𑌿𑌶𑌮𑍍" (தஸ்யோபவநஷண்டேஷு நாநாபுஷ்பஸகந்திஷு। விஹ்ருத்யஸலிலக்லிந்நாதவாங்கேஸமுபாவிஶம்) என்கிறபடியே அநுபவயோக்யமான தேசத்திலேபோய்ப் புகக்கடவோம். (சேர்வன்சென்றே) இனிப்பகட்டால் தீராது, புக்கல்லது விடேன். ஆள் விடுதல், அவன் வரவுபார்த்திருத்தல் செய்யேன். (சென்றே-சேர்வன்) இனியெதிரே யவன்வரிலும் மீளேன். அவனைச்சேருகையன்றுத்தேஶ்யம், அங்கே சென்று கிட்டுகை.........................................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (கண்டதுவேயித்யாதி) "மண்டிணிஞாலமும்" என்றுதொடங்கி "சேர்வன்சென்றே" என்னுமளவுங்கடாக்ஷித்தவதாரிகை (எனக்கவனையித்யாதி) வேண்டற்பாடு - பெருமையும், வைலக்ஷண்யமும்.

கண்டதாகிறதேதென்ன (அவன்பேர்சொல்லுதலித்யாதி) பலிதமாதல், அவதாரணார்த்தமாதல் (புறவிதழித்யாதி) புறவிதழ் - பாஹ்யவ்யாபாரம். அகவாயில்-நெஞ்சில். "எல்லாரும்"என்றதுக்கர்த்தம் (பரிவரோடித்யாதி) தாய்மார் தோழிமாரொழிய, அயற்சேரியார் கூடுவர்களோவென்ன (பிறரையித்யாதி)

கார்க்கடல்வண்ணனிடத்திலிவள் ப்ரவணையாளென்கிறதறிந்தபடி யென்னென்ன (இவள்திறமித்யாதி) இதுக்குநியாயகமேதென்ன (கடலேறியித்யாதி) சப்தார்த்தம் (என்னிடையாட்டத்தையித்யாதி) இடையாட்டம்- பாரிப்பு, வ்யாபாரமாதல். "அலர்தூற்றிற்றதுமுதலா" இத்யாதியில் வ்யதிரேகசித்தார்த்தம் (இவர்கள்பேசாதேயித்யாதி) அவர்கள் பழிசொல்லுகைக்கு ப்ரயோஜநமேதென்ன (நான்பழிக்கஞ்சியித்யாதி) அவர்கள் சொன்னது விபரீதமாகவே பலித்ததென்கிறாள் (அதுதானேயித்யாதி)

யதிசப்தார்த்தம் (தன்காதலித்யாதி) சொல்லிமுடிக்கவொண்ணாமையினெல்லையை யருளிச்செய்கிறார் (யதோவாச இத்யாதி) பேச்சுக்கு நிலமல்லாமைக்கு ஹேதுவேதென்ன (இக்கர்தலுக்கித்யாதி) விளாக்கொலைகொள்ளுகை - கபளீகரிக்கை. அவனையும் விளாக்கொலைகொள்ளவற்றேவென்ன (சுடர்ஞானமித்யாதி) "தோழீ" என்று சம்போதிக்கிறவளுடைய ஹார்த்தபாவம் (இக்காதலையித்யாதி) "மண்டிணி" என்றதுக்கவதாரிகை (இதிருந்தபடியாராயென்று) இப்போதிப்படி சொல்லுகிறநீ "காதல்கடலில் மிகப்பெரிதால்" என்று முன்பு சொல்லுவானென்னென்ன (காதல்கடலிலித்யாதி)

"அவன்வீற்றிருந்ததென்றிருப்பேரை" என்றதுக்குபாவம் (இக்காதல்மறுவித்யாதி) "தெண்டிரைசூழ்ந்தவன்" என்றதுக்குபாவம் (தஸ்யோபவநேத்யாதி) "𑌤𑌸𑍍𑌯𑍋𑌪𑌵𑌨𑌷𑌣𑍍𑌡𑍇𑌷𑍁 𑌨𑌾𑌨𑌾𑌪𑍁𑌷𑍍𑌪𑌸𑍁𑌗𑌨𑍍𑌧𑌿𑌷𑍁। 𑌵𑌿𑌹𑍃𑌤𑍍𑌯 𑌸𑌲𑌿𑌲𑌕𑍍𑌲𑌿𑌨𑍍𑌨𑌾 𑌤𑌵𑌾𑌙𑍍𑌕𑍇 𑌸𑌮𑍁𑌪𑌾𑌵𑌿𑌶𑌮𑍍" (தஸ்யோபவநஷண்டேஷுநாநாபுஷ்

பஸாகர்திஷு। விஹ்ருத்யஸலிலக்லிந்நாதவாங்கேஸமுபாவிஸம் ) இதி ஸுந்தரகாண்டே ஸீதா. "சென்றே" என்கிற வேவகாரத்துக்கர்த்தம் (இனிப்பகட்டாலித்யாதி) பகட்டுகை - "போவேன்" என்றச்சமுறுத்துகை. "சென்று-சேர்வன்" என்றதுக்குபாவம் ( ஆள்விடுதலித்யாதி )

தோழீ, கண்டதுவே கொண்டென்றுதொடங்கி, சென்றே-சேர்வனித்யந்வயஃ. மண்டிணிஞாலம் - மண்செறிந்தபூமி. நீள்விசும்பு - மஹாவகாசமானவாகாசம். கழியப்பெரிது - இவைதனக்குள்ளே யடங்கும்படி யவ்வருகே பெருத்திருந்தது...*

---

## ஒன்பதாம்பாட்டு.

சேர்வன்சென்றென்னுடையதோழிமீர்காளன்னையர்காளென்னைத்தேற்றவேண்டா, நீர்களுரைக்கின்றதென்னிதற்குநெஞ்சுநிறைவுமெனக்கிங்கில்லை, கார்வண்ணன்கார்க்கடன்ஞாலமுண்டகண்ணபிரான்வந்துவீற்றிருந்த, வேர்வளவொண்கழனிப்பழனத்தென்றிருப்பேரெயின்மாநகரே.

### ஆறாயிரப்படி.

(சேர்வன்சென்று) "இப்போதே தானே யெழுந்தருளுகிறானிறே, இப்படிபதறவேணுமோ" என்றும், "போகைதானுமீடல்ல" என்றும் தோழிமாருமன்னையருஞ்சொல்ல; நீங்களென்னையொன்றும் தேற்றவேண்டா. போகைக்குநீங்கள் சொல்லுகிற விரோதமென்; போனால் வரக்கடவு விரோதமுண்டோ என்றிவள்சொல்ல, "உன்னுடைய தைர்யசாதுர்யாதிகளுக்குப்போராது" என்று அவர்கள்சொல்ல, அவனுடைய ஸௌந்தர்யஸௌஸீல்யகாருண்யாதி குணங்களாலே யென்னுடைய தைர்யசாதுர்யாதிக ளபஹ்ருதங்களாயிற்றின; ஆதலால், அதிஸம்ருத்தமாயதிரமணீயமா யென்னோடு ஸம்ஶ்லேஷிக்கைக்காக வவன் வந்தெழுந்தருளி யிருந்த தென்றிருப்பேரையிலே சேர்வன் சென்றென்கிறாள்....*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ப்ரளயாபத்ஸகனானவன் வர்த்திக்கிற தேசத்திலே சென்று புகத்தவிரேன். நீங்களென்னைத் தேற்றி யுரைக்கிறதுக்கு ப்ரயோஜந மில்லையென்று தோழிமாரையும் தாய்மாரையும்பார்த்துச் சொல்லுகிறாள்.

என்னுடை - எனக்குசமாந துஃகைகளாயிருக்கச்செய்தே ஹிதஞ்சொல்லவொருப்பட்ட. தோழிமீர்காள் - தோழிமீர்காள். அன்னையர்காள் - ஹிதபரைகளாயேபோருமன்னைமீர்காள். என்னை - என்னை. தேற்றவேண்டா - தேற்றவேண்டுவதில்லை. இதற்கு - இந்தவவஸ்த்தைக்கு. தேறுகைக்குறுப்பாக, நீர்கள் - நீங்கள். என் - என்னவார்த்தை. உரைக்கின்றது-சொல்லுவது. நெஞ்சும் - தேறியிருக்கைக்கடியானநெஞ்சும். நிறைவும் - பூர்த்தியும். எனக்கு - எனக்குறுப்பாம்படி. இங்கு-இங்கு. இல்லை-இல்லை. அவையங்கேயானபின்பு தேற்றமுமங்கேபோயிற்று. ஆதலால், நெஞ்சையும் நிறைவையுமபஹரிக்கைக்கடியான, கார் - ஶ்யாமளமான. வண்ணன்-வடிவையும். கார்க்கடல் - ப்ரளயாபந்நமான. ஞாலம் - ஜகத்தை. உண்ட - அமுது

செய்தவாபத்ஸகத்வத்தையும். பிரான் - ஆஶ்ரிதோபகாரகமான பவ்யதையையுமுடைய. கண்ணன் - க்ருஷ்ணன். வந்து - வந்து. வீற்றிருந்த - இருக்குமிடமாய். ஏர் - ஏரினுடைய. வளம்-ம்ருத்தியையுடைத்தாய். ஒண் - தர்ஶநீயமான. கழனி-கழனியையும். பழனம்-நீர்நிலங்களையுமுடைத்தான. தென், திருப்பேரெயில்-திருப்பேரெயிலாகிற. மாநகர்-மஹாநகரத்தை. சென்று-சென்று. சேர்வன்-கிட்டிவிடக்கடவேன்.

## ஈடு-ஒன்பதாம்பாட்டு.

நீங்களினியென்னைத் தேற்றிப்ரயோஜநமில்லை, தென்திருப்பேரையிலே போய்ப் புகக்கடவேனென்கிறாள்.

(சேர்வன்சென்று) உன்னுற்றாமையாலே சில சொல்லுகிறாயாகிலிது கடைப்படவற்றோவென்ன; அவஶ்யமங்கே புக்கல்லது விடேனென்கிறாள்.

(என்னுடைத்தோழிமீர்காளித்யாதி) எனக்காயிருப்பாரும், என்னைத்தங்களுக்காக நினைத்திருப்பாருமொன்றும் சொல்லவேண்டா. தோழிமாரோடு தாய்மாரோடு வாசியில்லைகாணு மிவளைத்தேற்றப்போகாமைக்கு. அஜ்ஞரோ வ்யவஸிதரை யுபதேசத்தாலே மீட்கப்பார்ப்பார். விஷயாதீநமாக வருகிறத்தை சாதநத்திலே சிலவெழுதுகிறவர்களோ வெனக்கு வார்த்தைசொல்லுவார். இவள்தன்னை மறந்து, அவனையே பார்த்துப் பேசுகிறாள்; அவர்களவனை மறந்து, தந்தாமையே பார்த்துமீட்கத் தேடுகிறார்கள்.

(நீர்களுரைக்கின்றதென்னிதற்கு) கலங்கினரோ! தெளிந்தாரைத்தேற்றுவார். நீங்கள் நிற்கிற நிலையெது, என்னிலையெது. போகையிலே துணிந்திருக்கிறவென்னை, "புறப்படுகைபழி" என்றிருக்கிற நீங்கள் சொல்லுவதென். (இதற்கு) எனக்கோடுகிறதசைக்கு. ஆனாலும், நெஞ்சுமடக்கமுமுடையார்க்கிது வார்த்தையோ; நாங்கள்சொன்னபடி செய்து எங்கள் வழியேபொழுகவேண்டாவோவென்ன (நெஞ்சுநிறைவுமெனக்கிங்கில்லை) அதுவேணுமாகி லங்கேபோய்ச்சொல்லுங்கோள். மநஸ்ஸூ மடக்மு மவன்பக்கலின. நிறைவாவது-அடக்கம். நெஞ்சாவது- அதிட்டுவைக்கும் கலம்.

(கார்வண்ணனித்யாதி) நெஞ்சும் நிறைவுமெனக்காம்படியாயோவவன்படியிருக்கிறது, (கார்வண்ணன்) தாய்மார் தோழிமாரானவர்கள் வார்த்தைகேளாதபடியாக வடிவுபடைத்தவன். வெறும் வடிவழகேயோவுள்ளதென்னில் (கார்க்கடல் ஞாலமுண்ட)தளர்ந்தார்தாவளம். ஆபத்துவந்தால் ரக்ஷித்துவிடுமத்தனையோவென்னில் (கண்ணபிரான்) தன்னைப்பிறர்க்காக்கிவைக்கு முபகாரகன். (வந்துவீற்றிருந்த) தன்னைஸ்வர்யமெல்லாந் தோற்றும்படியிருந்த. (ஏரித்யாதி) ஏரினுடைய ஸம்ருத்தியையுடைத்தாய், அழகிதான கழனியையும் நீர்நிலங்களையுமுடைய திருப்பேரெயிலாகிற மாநகரிலே - சென்று - சேர்வன். உங்கள் தடைக்குமீளுத

ல், அவ்வழியில் நிற்றல் செய்யேன். என்னைத்தேற்றவேண்டா. வளமென்று - மிருதிக்குப்பேர் ......................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (சேர்வனித்யாதி) "அன்னையர்காள், என்னைத்தேற்றவேண்டா, தென்திருப்பேரெயில் மாநகர் - சேர்வன் சென்று" என்கிறபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (நீங்களினியித்யாதி) தேற்றுகையாவது - இப்படி ஸாஹஸத்திலே துணியுமது ஸ்த்ரீத்வத்துக்குப்போராது, செய்து தலைக்கட்டவும்போராது, ஆகையாலித்தை விடென்கை.

கீழேயும் "சேர்வன் சென்று" என்றுவைத்து, திரியவும் சொன்னதுக்குபாவம் (உன்னாற்றாமையித்யாதி) கடைப்படவற்றே-நிறைவேறவற்றே. கடைப்படுகை-நிறைவேறுகை.

தோழிமீர்காளென்னாதே, "என்னுடைத்தோழிமீர்காள்" என்று விசேஷிக்கையைப்பற்ற (எனக்காயிருப்பாரும்) என்கிறது. "அன்னையர்காள்" என்று-கௌரவிக்கையாலே ( என்னைத்தங்களுக்காக நினைத்திருப்பாரும் ) என்றது. தாய்மார்க்கொழியத் தோழிமார்க்கும் தேற்றப்போகாதோவென்ன (தோழிமாரோடித்யாதி)

"நீர்கள்" என்றதுக்குபாவம் (கலங்கினரோவித்யாதி) விவரணம் ( நீங்களித்யாதிவாக்யத்வயமும்)

" இங்கில்லை " என்றதுக்குபாவம் (அதுவேணுமாகிலித்யாதி)

" கார்வண்ணன் " என்றத்தை " நெஞ்சுநிறைவு மெனக்கிங்கில்லை " என்றத்தோடே கூட்டிபாவம் (நெஞ்சும் நிறைவுமித்யாதி) " தோழிமீர்கா ளன்னையர்காள் " இத்யாதியோடேகூட்டி பாவாந்தரம் (தாய்மார் தோழிமாரானவித்யாதி) தளர்ந்தார்தாவளம் - தளர்ந்தார்க்காதாரம்.

"சென்று – சேர்வன்" என்றதுக்குபாவம் (உங்கள்தடைக்கித்யாதி)

என்னுடைத்தோழிமீர்காளித்யாரப்ய, மாநகரோ - சென்று - சேர்வனித்யந்வயஃ. இதற்கு - இந்தவவஸ்த்தைக்கு. நீர்களுரைக்கின்றதென்-தேறுகைக்குறுப்பாக நீங்கள் சொல்லுகிறவார்த்தையெது ............ ........................................*

---

# பத்தாம்பாட்டு.

நகரமுநாடும்பிறவுந்தேர்வேனெனக்கில்லையென்றேழிமீர்காள்
சிகரமணிநெடுமாடநீடுதென்திருப்பேரையில்வீற்றிருந்த
மகரநெடுங்குழைக்காதன்மாயநூற்றுவரையன்றுமங்கநூற்ற
நிகரின்முகில்வண்ணனேமியானென்னெஞ்சங்கவர்ந்தெனையூழியானே.

## ஆறாயிரப்படி.

( நகரமும் ) அவனெழுந்தருளியிருந்த தென்திருப்பேரையிலே நீயே போகில் ஊரும் நாடும் மற்று மெல்லாரு முன்னைப் பழிசொல்லாரோவென்று தோழிமார் சொல்ல ;

அவர்களையிறே நான் தேடுகிறது என்றிவள் சொல்ல, "பழிசொன்னாலுனக்கு லஜ்ஜையாகாதோ" என்றுபின்னையும் தோழிமார் சொல்ல;

அவனுடைய நிரதிசயாஸ்சர்ய ஸௌந்தர்யாதி கல்யாணகுணங்களாலும், அவனுடைய வாஸ்சர்ய திவ்யசேஷ்டிதங்களாலு மென்னுடைய நெஞ்சும் லஜ்ஜையு மபஹ்ருதமா யெத்தனைகாலமுண்டு; ஆதலாலினித்தென் திருப்பேரையிலே நானேயாகிலும் போமத்தனையென் றத்யவஸிக்கிறாள்.

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்ரிதவிரோதி நிரஸநசீலனாய்த் திருப்பேரையிலேயிருந்த மகர நெடுங்குழைக்காத னென்னெஞ்சை யபஹரித் தநேககாலமுண்டு, அவனிருந்த நகரத்தோடு நாட்டோடு மற்றுமுள்ள தேசங்களோடு வாசியற நானேபுறப்பட்டாராயக்கடவேன், எனக்கு லஜ்ஜையில்லை யென்கிறாள்.

என் - எனக்கு. தோழிமீர்காள் - தோழிமாரென்று பெயராய் ஹிதஞ்சொல்லி நியமிக்கத்தேடுகிறவர்களே. சிகரம் - சிகரங்களையுடைத்தாய். மணி - மணிமயமாய். நெடு - ஓங்கின. மாடம் - மாடங்களையுடைத்தாய். நீடு - சிரகாலஸ்த்தாயியான. தென் - தென். திருப்பேரையில் - திருப்பேரையில். வீற்றிருந்த - எழுந்தருளியிருக்கிற. மகரம் - மகராகாரமான. நெடு - பெரிய. குழை - ஆபரணத்தையுடைய. காதன் - கர்ணபாசங்களையுடையனாய். மாயன் - அவ்வாபரணசோபையோபாதி ஆஸ்சர்யங்களான குணசேஷ்டிதங்களை யுடையனாய். நூற்றுவரை - ஆஸ்ரிதவிரோதிகளான துர்யோதநாதிகளை. அன்று - பாரதஸமரம் ப்ரவ்ருத்தமானவன்று. மங்க - நசிக்கும்படி. நூற்ற - மந்த்ரித்து. அத்தாலே, நிகர் - ஒப்பு. இல்-இல்லாத. முகில் - காளமேகநிபமான. வண்ணன் - வடிவிற்புகரையுடையனாய். நேமியான் - ஆஸ்ரிதசம்ரக்ஷணார்த்தமான திருவாழியை யுடையனானவன். இவ்வபதாநத்தைக்காட்டி, என்-என். நெஞ்சம் - நெஞ்சை. கவர்ந்து - அபஹரித்துக்கொண்டு. எனையூழியான் - எத்தனைகாலத்தான். ஆனபின்பு, நகரமும் - அவனிருந்தநகரமும். நாடும்- அத்தோடு சேர்ந்த நாடும். பிறவும் - மற்றுமுண்டான பத்தநாதிகளும். நானே,தேர்வேன் - போயாராயக்கடவேன். நாண் - "இவர்கள் பழிக்கும்படி யிவர்கள் சந்நிதியிலே போகும்படியென்" என்கிற ஸ்த்ரீத்வப்ரயுக்தமான லஜ்ஜை. எனக்கு-எனக்கு. இல்லை - இல்லை.......................................................................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

"இருந்ததே குடியாக நாட்டாருன்னைப் பழிசொல்லார்களோ" என்று தோழிமார்கள்சொல்ல ; அவர்களன்றோ வெனக்குத் தேட்டமென்கிறாள்.

( நகரமுநாடுமித்யாதி ) உன் துணிவுதுணிவாக, நாட்டார் நகரத்தார் மற்றுமுள்ளாரு மெல்லாமறிந்து பழிசொல்லுகிறார்களிறேயென்ன; எனக்குத்தானவனேயோதேட்டம். நகரம், நாடு, பத்தநாதிகள், இவற்றிலுள்ளாருடைய பழியேயன்றோ வெனக்குத் தேட்டம். ( தேர்வேன் ) தேடுகிறேனென்றபடி. நீங்கள் சேரிகோளாகில், அவன் தானாகவாரானாகில், அவனுடனே கூட்டிப் பழிசொல்லுகிறவிவர்களன்றோ ஸத்தையை நோக்குகிறார்கள் ; "அலமொழிலாருயிர்நிற்கும்" என்றானிறே. பிறவும்- மற்றுமுள்ளனவும்.

(நானெனக்கில்லை) லஜ்ஜை யிங்கில்லாமையேயன்று, அங்குப் போனதுமில்லை; இவ்வ்யக்திதன்னில் முதலிலே யில்லாமை. (என்தோழிமீர்காள்) இது நானுங்களுக்குச் சொல்லி யறியவேண்டும்படியாவதே.

(சிகரமித்யாதி) பர்வதசிகரங்களைக் கொடுவந்து வைத்தாப்போலே ஒக்கமுடைத்தாய், ரத்நமயமான மாடங்களையுடைய பெரிதான தென்திருப்பேரையிலே வீற்றிருந்த. (மகரநெடுங்குழைக்காதன்) மகராகாரமான பெரியவாபரணத்தையுடைய கர்ணபாசங்களை யுடையவன். அவனுடைய வேறோரவயவங்களிலே படிந்தாரை மீட்கலாயோவிருப்பது. (மாயன்) சொல்லிச்சொல்லாத தேஹகாந்தியையு மாத்மகுணங்களையும் நினைக்கிறது. (மாயன்) ஆஸ்ரிதபக்ஷபாதம். (நூற்றுவரையன்று மங்கநூற்ற) சிலரை யழிக்கநினைத்தால், ஒன்றும் சேஷியாதபடி யழிக்குமவன். துர்யோதநாதிகளை பாரதஸமரம் ப்ரவ்ருத்தமானவன்று நசிக்கும்படி மந்த்ரித்த. (நிகரில்முகில்வண்ணன்) ஒப்பில்லாத காளமேகம்போலேயிருக்கிறவடிவழகு. இத்தால் - விரோதியைவளர்த்தாலும் விடவொண்ணாதவடிவழகென்கை. (நேமியான்) ஆஸ்ரிதவிரோதிகளைப் போக்கும்போது பகலை யிரவாக்கும் பரிகரத்தையுடையவன். திருவாழியைக் கொண்டு பீஷ்மாதிகளையும் தொடராநிற்குமிறே. (நிகரில் முகில்வண்ணன் நேமியான்) துர்யோதநாதிகளுக்கு மின்னுமிடியுமாய், பாண்டவர்க ளார்த்திதீர வர்ஷித்து நின்றபடி. அவனுன்விரோதிகளைப் போக்கிக் கூடநினையாதபின்பு, அவன் தானே வந்துன்காலிலே விழும்படி மந்த்ரித்தாலோ வென்ன (என்னெஞ்சங்கவர்ந்தெனையூழியானே) அதுக்கீடான பரிகரமிழந்து நானெத்தனைகாலமுண்டு. வடிவழகையு மாயுதச்சேர்த்தியையுங் காட்டியென்னெஞ்சை யபஹரித்துப்போ யெத்தனைகாலத்தான். (எனையூழியானே) அநேககல்பமுண்டு. துர்யோதநாதிகளைவெல்ல வெண்ணினாப்போலே என்னெஞ்சை யபஹரிக்கைக் கெத்தனைகாலமெண்ணினானோ.......*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (நகரமுமித்யாதி) "நகரமுநாடும் பிறவும்தேர்வேன்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (இருந்ததேயித்யாதி) இருந்ததேகுடியாக - குடியிருக்கிறபேரொல்லாரு மென்றபடி.

நகரமும்நாடும், பிறவும் - மற்றுமுண்டான பத்தநாதிகள், இவற்றிலுள்ளாருடைய பழியைத்தேடுவேனென்று சப்தார்த்தம். தேருகை - தேடுகை. விவரணம் (நகரம்நாடித்யாதி) தேட்டமாகைக்குஹேதுவேதென்ன (நீங்களித்யாதி) சேரிகோளாகில் - சேரவிடாதவர்களாகில். "பழிசத்தையைநோக்கும்" என்னுமதுக்குப்ரமாணம் (அலரித்யாதி) அலரொழில் - பழிகிளம்பில். அலர் - பழி. ஆருயிர்நிற்கும்-ப்ராணன் நிற்குமென்றபடி.

இங்கில்லையென்னாதே, "எனக்கில்லை" என்றதுக்குபாவம் (லஜ்ஜையித்யாதி) விவரணம் (இவ்வ்யக்தியித்யாதி) "தோழிமீர்காள்" என்றதுக்குபாவம் (இது நானித்யாதி)

"சிகரம் – நெடு – மணி - மாடநீடு" என்றந்வயித்தர்த்தம் (பர்வதேத்யாதி) "மகரநெடுங்குழைக்காதன்" என்றத்தோடே "என்னெஞ்சங்கவர்ந்து" என்று கூட்டிபாவம் (அவனுடையவித்யாதி) மாயன் – ஆஸ்சர்யபூதனிந்யர்த்தஃ. இன்னத்தா லாஸ்சர்யபூதனென்று விசேஷியாமையாலே யருளிச்செய்கிறார் (சொல்லியித்யாதி)

"நூற்றுவரை" இத்யாதியோடேகூட்டி "மாயன்" என்றதுக்கர்த்தாந்தரம் (ஆஸ்ரிதேத்யாதி) "மங்க" என்றதுக்கு பாவம் (சிலரையித்யாதி) கீழ்ப்பதத்தைக்கடாக்ஷித்துபாவம் ( இத்தால்விரோதியையித்யாதி ) "நேமியான்" என்றத்தை- "நூற்றுவரை" இத்யாதியோடேகூட்டிபாவம் ( ஆஸ்ரிதவிரோதிகளையித்யாதி ) அந்தரங்கராயிருப்பாரு மாஸ்ரிதவிரோதிகளாகி லித்தைக்கொண்டே ஜயிப்பதென்கிறார் (திருவாழியையித்யாதி) "முகில்வண்ணன் நேமியான்" என்றத்தை-"நூற்றுவரை" இத்யாதியோடேகூட்டி, விஷயவிபாகத்தாலே பாவாந்தரம் (துர்யோதநாதிகளுக்கித்யாதி)

"என்னெஞ்சங்கவர்ந்து" என்றதுக்கவதாரிகை (அவனித்யாதி) "நூற்றுவரை" இத்யாதியோடே "என்னெஞ்சங்கவர்ந்து" என்றத்தைக்கூட்டி பாவமாதல், விவரணமாதல் (துர்யோதநாதிகளையித்யாதி)

என்தோழிமீர்காள், சிகரமணியென்றுதொடங்கி, எனையூழியான், நாணெனக்கில்லை, நகரமுநாடும் பிறவும் தேர்வேனித்யந்வயஃ. அன்று - பாரதஸமரம் ப்ரவ்ருத்தமானவன்று. மங்க-நசிக்க. நூற்ற-மந்த்ரித்த. ஆலோசித்த. கவர்ந்து-அபஹரித்து. எனையூழியானே-எத்தனைகாலத்தான். எத்தனைகாலத்தை யுடையவனென்றபடி.*

---

## பதினொன்றாம்பாட்டு.

ஊழிதோறூழியுருவும்பேருஞ்செய்கையும்வேறவன்வையங்காக்கு
மாழிநீர்வண்ணனையச்சுதனையணிகுருகூர்ச்சடகோபன்சொன்ன
கேழிலந்தாதியோராயிரத்துள்ளிவைதிருப்பேரையின்மேயபத்து
மாழியங்கையனையேத்தவல்லாரவரடிமைத்திறத்தாழியாரே.

### ஆறாயிரப்படி.

( ஊழிதோறூழி ) ப்ரதியுகம் பிந்நரூப நாமசேஷ்டிதனாய்க்கொண்டு ஸ்வாஸாதாரண திவ்யரூபேணவதீர்ணனா யாஸ்ரிதரை ரக்ஷித்தருளும் ஸ்வபாவனாயிருந்த வச்சுதனை யணிகுருகூர்ச்சடகோபன்சொன்ன, சகலகுணங்களாலும் நிருபமமாயிருந்த திருவாய்மொழியில் தென்திருப்பேரையைச்சொன்ன வித்திருவாய்மொழியைக்கொண்டு, அவனுடைய, திருவாழியுங்கையுமாயிருக்குமழகை யேத்தவல்லார், திருவாழியோடொக்க வடிமைசெய்யப் பெறுவாரென்கிறார்.........................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழியைச்சொல்லி ஸ்துதிக்கவல்லவர்கள் பகவத்கைங்கர்யத்தி லவகாஹநத்தையுடையவராவரென்று பலத்தையருளிச்செய்கிறார்.

ஊழிதோறூழிதோறு - கல்பந்தோறும் கல்பந்தோறும். பேருமுருவும்செய்கையும் - நாமரூபவ்யாபாரங்களை. வேறவன் - வேறாகவுடையனாய்க்கொண்டு. வையம்-ஜகத்தை. காக்கும் - ரக்ஷிக்குமவனாய். ஆழிநீர் - சமுத்ரஜலம்போலேபசுத்த. வண்ணனை - அஸாதாரணவிக்ரஹத்தையுடையனாய். அச்சுதனை - ரக்ஷ்யவர்க்கத்தை நழுவவிடாதவனானவனை. அணி - ஜகத்துக்கலங்காரமான. குருகூர் - திருநகரிக்குநிர்வாஹகரான. சடகோபன் - ஆழ்வார். சொன்ன - அருளிச்செய்த. கேழ் -ஒப்பு. இல்-இல்லாத. ஓரந்தாதி, ஆயிரத்துள்-ஆயிரத்துள். திருப்பேரையில் - திருப்பேரையில். மேய - சேர்ந்த. இவைபத்தும்-இப்பத்தை. கொண்டு, ஆழியங்கையனை-கையுந்திருவாழியுமான சர்வேஶ்வரனை. ஏத்த - ஸ்துதிக்க. வல்லாரவர்-வல்லரானவர்கள். அடிமைத்திறத்து-சேஷவ்ருத்திவிஷயத்தில். ஆழியாரே - அவகாடரே ...................................................................................................*

இது - எண்சீராசிரியவிருத்தம்.

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில் - இத்திருவாய்மொழி கற்றார் பகவத்கைங்கர்யத்திலே மிகவு மவகாஹித்தாரென்கிறார்.

( ஊழியித்யாதி ) ஆஶ்ரிதரக்ஷணார்த்தமாக, கல்பந்தோறும் கல்பந்தோறும், திருமேனியும் திருநாமமும் சேஷ்டிதங்களும் வேறுபடக் கொள்ளுமவன். இதுக்குப்ரயோஜநமென்னென்னில் ( வையங்காக்கும் ) ஜகத்ரக்ஷணார்த்தமாக. (ஊழிதோறூழியித்யாதி) அப்படியே ரக்ஷித்திலனாகில் இப்படி விஶ்வஸிப்பாரில்லையே யிவனை "ரக்ஷகன்" என்று. (ஆழிநீர்வண்ணனை) நோக்காதே படுகொலையடிக்கிலும் விடவொண்ணாதவடிவு. வேறுபடாதே யங்குள்ளார்க்குக் காட்சிகொடுக்கு மஸாதாரணவிக்ரஹத்தைச்சொல்லுகிறது. (அச்சுதனை) அவ்வடிவு தனக்கொருநாளுமழிவில்லையென்னுதல், பற்றினாரை யொருநாளும் விடானென்னுதல். (அணிகுருகூர்) ஆபரணமானதிருநகரி. (கேழிலந்தாதி) ஒப்பில்லாதவந்தாதி. தம்மாலும் பிறராலும் மீட்கவொண்ணாதபடி பகவத்விஷயத்திலுண்டான வ்யவஸாயத்தைச்சொன்ன பத்தாகையாலே ஒப்பின்றிக்கேயிருக்கிறபடி. ஒப்பில்லாதவாயிரத்துள் திருப்பேரையிலே சேர்ந்த விப்பத்தைக்கொண்டு (ஆழியங்கையனையேத்தவல்லார்) இதெல்லாவற்றாலும் சொல்லிற்றாயிற்று - கையுந்திருவாழியுமானவழகிலே யிவரகப்பட்டபடி. அல்லாதவழகுக ளொருபடியு மிதொருபடியுமாயிருக்கை; இது கைமேலே யநுபவித்துக்காணலாமே. (அவரடிமைத்திறத்தாழியாரே) அடிமைவர்க்கத்தில் திருவாழியின் தன்மையையுடையவரென்னுதல், அடிமையிடையாட்டத்திலொருவரால் மீட்கவொண்ணாதபடியுட்புகுவரென்னுதல்.

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (ஊழிதோறித்யாதி) "ஏத்தவல்லாரவரடிமைத்திறத்தாழியார்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (இத்திருவாய்மொழிகற்றாரித்யாதி)

சப்தார்த்தம் (ஆஶ்ரிதேத்யாதி) இதுக்கு - வேறுபடக்கொள்ளுகைக்கு. (ஆஶ்ரிதரக்ஷணார்த்தமாக) என்று கீழேயருளிச்செய்திருக்க, (இதுக்குப்ரயோஜநமென்னென்னில்) என்கிறசங்கை யுதிக்கக்கூடுமோவென்னில்; "கீழே - வ்யாக்யாதாவருளிச்செய்தமாத்ரம், இங்கே - மூலஸ்பர்ஶியாக சங்கிக்கிறார்" என்றருளிச்செய்வர். (ஜகத்ரக்ஷணார்த்தமாக) என்றதுக்கு விவரணம் (ஆஶ்ரிதரக்ஷணார்த்தமாக) என்ற கீழ்வாக்யமென்று கண்டுகொள்வது. "வேறவன்" வேறாகவுடையவனுயித்யர்த்தஃ. சாடுவுக்காக பதோபாதாநம் (ஊழிதோறித்யாதி) சாடு (அப்படியேயித்யாதி) அப்படி-அந்தப்படியாலே. இப்படி - இந்தபூமியிலே. படி-ப்ரகாரமும், விக்ரஹமும், பூமியும். "வையங்காக்கும்" என்றவநந்தரம் "ஆழிநீர்வண்ணனை" என்றதுக்குபாவம் (சோக்காதேயித்யாதி) படுகொலையடிக்கிலும்- கொலையிலேபட்டுவிழும்படி ஹிம்ஸிக்கிலும். "வேறவன்" என்றவநந்தரம் "ஆழிநீர்வண்ணனை" என்றுகூட்டிபாவாந்தரம் (வேறுபடாதேயித்யாதி) கடல்நீர்போலே குளிர்ந்து பசுத்தவடிவையுடையவனை யென்று சப்தார்த்தம். கீழ்ப்பதத்தைக்கடாக்ஷித்து "அச்சுதன்" என்றதுக்கர்த்தம் (அவ்வடிவித்யாதி) "வையங்காக்கும்" என்றத்தைக்கடாக்ஷித்தர்த்தாந்தரம் (பற்றினாரையித்யாதி) இந்த வர்த்தத்வயமும் - ச்யுதோநபவதீத்யச்யுதஃ, ஆஶ்ரிதாந்நச்யாவயதீத்யச்யுதஃ என்கிற வ்யுத்பத்தி த்வயத்தைப்பற்ற.

ஒப்பில்லாமைக்கு ஹேதுவேதென்ன (தம்மாலுமித்யாதி) இதெல்லாவற்றாலும் - இத்திருவாய்மொழி யெல்லாவற்றாலுமென்றபடி. "தாமரைக்கண்ணன்" என்றும் "செங்கனிவாய்" என்றும் "செஞ்சுடர்நீண்முடி" என்றும் சொல்லிற்றேயென்ன (அல்லாதவித்யாதி) ஒருபடியும்-ஒருதட்டுமென்றபடி. அதெப்படியென்ன (இதுகைமேலேயித்யாதி)

முந்தினவர்த்தத்தில், "அடிமைத்திறத்து" என்றது; "திறம்" என்று - ஸமூஹமாய், (அடிமைவர்க்கத்தில்) என்றபடி; "ஆழியார் -" (திருவாழியின்தன்மையையுடையவர்) என்றபடி; தன்மை - ஸ்வபாவம். த்விதீயார்த்தத்தில், "திறம்" என்று - இடையாட்டமாய், அடிமைவிஷயத்திலென்றபடி; "ஆழியார் -" ஆழ்ந்தவர்கள்; அவகாஹித்தவர்களென்றபடி.

ஊழிதோறூழியித்யாரப்ய, க்ரமேணார்வயஃ. திருப்பேரெயில் மேயபத்தும்- திருப்பேரெயிலேசேர்ந்த விப்பத்தையுங்கொண்டு; ஏத்தவல்லாரவர் - ஏத்தவல்லாரானவர்கள்.................................................*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

(வெள்ளைச்சுரிசங்கு.)

[illegible]

[illegible]

[illegible]

[illegible] (எரு)

(பத்மாக்ஷத்வேநஹ்ருத்ஸ்த்தஃ) தாமரைக்கண்ண னென்னெஞ்சினூடே - ஸரஸிஜஸத்ருஶநயநனாய்க்கொண்டு ஹ்ருதயத்திலே ப்ரகாசிக்குமவனாய்; (பரமக

நிலயঃ) வானப்பிரான் - பரமபதநிலயனுமாய்; (ஸ்வோபகாரி) தென்றிருப்பேரை யில் வீற்றிருந்த நங்கள் பிரானுக்கு - ஆஶ்ரிதார்த்தமாகத் தென்றிருப்பேரையிலேவந்து வீற்றிருந்துபகரிக்குமவனுய்; (விகர்ஜச்சங்கঃ) முழங்குசங்கக்கையன் - அநுகூலர்வாழவும், ப்ரதிகூலர் நடுங்கவும் முழங்காநிற்கிற ஸ்ரீபாஞ்சஜந்யத்தையுடையனுமாய்; (அரிஷ்டப்ரஹர்த்தா) முனிந்துசகடமித்யாதி - சகடாஸுரநிரஸநபூதநாநிரஸந யமளார்ஜுநபஞ்சநாதிகளைப் பண்ணுமவனுய்; (ஆதரவிலஸநக்ருத்) காதல்கடலில்மிகப்பெரிதால் - ஆஶ்ரிதர்க்குத் தன்னிடத்திலே ஸ்நேஹத்தை வர்த்திப்பிக்குமவனுமாய்; (ரக்ஷகঃ) பேரெயில்சூழ்கடலித்யாதி - அவதரித்தருளி, விரோதிநிராகரண பூர்வகமாக லோகங்களுக்கு ரக்ஷகனுமாய்: (அம்போதித்ருஶ்யঃ) கார்க்கடல்வண்ணனேடென்றிறத்து - கடல்போலே ஶ்ரமஹரமான வடிவையுடையனுமாய்; (ஆபத்ஸம்ரக்ஷகঃ) கார்க்கடல் ஞாலமுண்டகண்ணபிரான் - ப்ரளயாபத்திலே யெல்லாரையும் திருவயிற்றிலே வைத்துரக்ஷிக்குமவனுமாய்; (ஸ்ரீமகரவரலஸத்குண்டலஸ்ஸ்வாங்ககாந்த்யா) மகரநெடுங்குழைக் காதன்மாயன் - மகரஸந்நிவேஶமாய்த் திருமேனிகாந்தியாலே விளங்காநிற்கிற திருக்குண்டலங்களை யுடையனுமா யிருக்கிற தென்றிருப்பேரையி லெம்பெருமான், ஸ்வாஶ்ரிதவிஷயத்திலே தன்னுடைய ரக்ஷகத்வத்தை ப்ரகாஶிப்பியா நிற்கிறுனென்று "வெள்ளைச்சுரிசங்கு" என்கிற தஶகத்திலே யாழ்வார் வெளியிட்டருளினுரென்கிறுர்..................(எ௩)

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

வெள்ளியநாமங்கேட்டுவிட்டகன்றபின்மோகந்
தெள்ளியமால்தென்றிருப்பேர்சென்றுபுக - வுள்ளமங்கே
பற்றிநின்றதன்மைபகருஞ்சடகோபர்க்
கற்றவர்கடாமாழியார். (௬௩)

(வெள்ளியநாமங்கேட்டு) இதில் - தென்றிருப்பேரிலே யபஹ்ருத சித்தராணபடியைப் பேசுகிறபாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறுர். அதெங்ஙனேயென்னில்; கீழ் - தம்தசை தாம் வாய்விட்டுப்பேசமாட்டாதே மோஹித்துக்கிடந்தவர் பெரியபெருமாளுடைய திருநாமப்ரஸங்கமே ஶிஶிரோபசாரமாகவத்தாலே யாஶ்வஸ்த்தராயுணர்ந்து, தத்ஸௌலக்ஷண்யாநுசந்தாநத்தாலே யபஹ்ருதசித்தராய், பெரியபெருமாளெழுந்தருளி யிருக்கிற தென்றிருப்பேரிலே போவதாகப் புறப்பட, "இப்படிபதறுகை நம் ஸ்வரூபத்துக்குச்சேராது, அவர்தாமேவரக்கண்டுநம் சேஷத்வத்தைநோக்கிக்கொண்டு பாடாற்றியிருக்கவேண்டாவோ" என்று பரிசரவர்த்திகள்நிவாரிக்க, "சர்வதா நானங்கேபோய்ச்சேருகைதவிரேன்" என்று தன்துணிவையவர்களுக்குச்சொல்லுகிறபடியை யந்யாபதேஶத்தாலே யருளிச்செய்கிற *வெள்ளைச்சுரிசங்கிலர்த்தத்தை "வெள்ளியநாமம்" இத்யாதியாலே யருளிச்செய்கிறுரென்கை.

(வெள்ளியநாமங்கேட்டு - மோகம் - விட்டகன்றபின்) பாவநத்வபோக்யத்வ தாரகத்வாதிகுணங்களையுடைய, முகில்வண்ணரான பெரியபெருமாளுடைய திருநாமங்களைப்பாட்டுத்தோறும் திருத்தாயார் சொல்லக்கேட்டு கீழில் மோஹமானது விட்டுப்போனபின்பு. (தெள்ளியமால்தென்றிருப்பேர்சென்றுபுக) ஆஶ்ரிதரக்ஷ

ணத்திலே விவேகஜ்ஞனசர்வேஸ்வரன் வர்த்திக்கிறதென்திருப்பேரிலே, "திருப்பேரையிற்சேர்வன்நானே" என்றும் "திருப்பேரையிற்சேர்வன் சென்றே" என்றும் சென்றுபுகுவதாகவொருப்பட. இவ்வதிப்ரவ்ருத்தியைத் தாய்மாரும் தோழிமாரும் தடஸ்த்தராயுள்ளாருங்கண்டு, "இப்படிஸாஹஸத்திலே பொருப்படுகை யுக்தமன்று" என்றுநிஷேதிக்க (உள்ளமங்கேபற்றிநின்றதன்மைபகரும்) திருவுள்ளம்தம்மையொழியவும் * முந்துற்றநெஞ்சாய் வீற்றிருந்த விஷயத்திலே மறுபாடுருவ வூன்றிநின்ற ஸ்வபாவத்தை நிஷேதிப்பார்க்கருளிச்செய்யுமாழ்வார். அதாவது - "நாணக்கருங்குழல் தோழிமீர்காளன்னையர்கா ளயற்சேரிபீர்காள் நானிந்தனிநெஞ்சங் காக்கமாட்டேன்" என்று தொடங்கி "கண்ணன்செங்கனிவாயின்றிறத்ததுவே" என்றும், "செங்கனிவாயின்றிறத்ததாயும்" என்றுதொடங்கி "நங்கள்பிரானுக்கென்னெஞ்சந்தோழீ நாணுநிறையுமிழந்ததுவே" என்றும், "இழந்தவெம்மாமைத்திறத்துப்போன வென்னெஞ்சினுருமங்கேயொழிந்தார்" என்று தொடங்கி "அன்னையர்காளென்னையென்முனிந்தே" என்றும், "கண்ணபிரானுக்கென்பெண்மைதோற்றேன் - காலம்பெறவென்னைக் காட்டுமினே" என்றும், "காலம்பெறவென்னைக்காட்டுமின்கள்" என்றும், "பேரையிற்கேபுக்கென்னெஞ்சம் நாடிப்போர்த்துவர வெங்கும் காணமாட்டேன் - என்னெஞ்சங்கண்டதுவே கண்டேனே" என்றும், "நெஞ்சுநிறைவுமெனக்கிங்கில்லை" என்றும், நிகரில்முகில்வண்ணன்நேமியானென்னெஞ்சங்கவர்ந்தெனையூழியானே" என்றுமிப்படி தாமங்கே பத்தபாவரானபடியை யருளிச்செய்தவையென்கை. "[Grantha script quotation]" (அஸ்யாதேவ்யாமநஸ்தஸ்மிந்) என்னக்கடவதிறே. அன்றிக்கே, (வெள்ளியநாமங்கேட்டுவிட்டகன்றபின் மோகம், தெள்ளியமால்தென்திருப்பேர்சென்றுபுகுந்துள்ளமங்கேபற்றிநின்றதன்மைபகரும்) என்று ஏகவாக்யமாக யோஜிக்கவுமாம். (உள்ளமங்கேபற்றிநின்றதன்மை பகரும்சடகோபர்க்கற்றவர்கள்தாமாழியார்) இத்திருவாய்மொழிமுகேந, தந்திருவுள்ளம் திருப்பேரிலிருப்பிலே யபஹ்ருதமானபடியை யருளிச்செய்தவாழ்வார் விஷயத்திலே, "தேவுமற்றறியேன்" என்றவர்கள். (தாம்) இப்படியான பெருமையையுடைய தாங்கள். (ஆழியார்) "அவரடிமைத்திறத்தாழியார்" என்னுமவர்களிலுமிவர்களே * அகாத பகவத்பக்திஸிந்துவான நாதமுநிகளைப்போலே * மிக்கவேதியர் வேதத்தினுட்பொருளை யறியவல்லரான அகாதஜ்ஞாநப்ரேமங்களையுடையார்.......................................................(சுஙு)

ஏழாம்பத்தில் - மூன்றாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக - திருவாய்மொழி - சுங. — பாட்டு - சுகூடு.

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஏழாம்பத்து.

## நான்காந்திருவாய்மொழி.

### ஆழியெழ - ப்ரவேஶங்கள்.

### ஆருயிரப்படி.

( ஆழியெழ ) இப்படி தென்திருப்பேரையிலே தாமேபோகவத்யவஸித்திருந்த சமயத்திலே, " 𑌯𑌦𑌾 𑌵𑍍𑌰𑌜𑌤𑌿 𑌸𑌂𑌗𑍍𑌰𑌾𑌮𑌂 𑌗𑍍𑌰𑌾𑌮𑌾𑌰𑍍𑌥𑍇 𑌨𑌗𑌰𑌸𑍍𑌯 𑌵𑌾 । 𑌗𑌤𑍍𑌵𑌾 𑌸𑍌𑌮𑌿𑌤𑍍𑌰𑌿𑌸𑌹𑌿𑌤𑍋 𑌨𑌾𑌵𑌿𑌜𑌿𑌤𑍍𑌯 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 ॥ 𑌸𑌙𑍍𑌗𑍍𑌰𑌾𑌮𑌾𑌤𑍍𑌪𑍁𑌨𑌰𑌾𑌗𑌮𑍍𑌯 𑌕𑍁𑌞𑍍𑌜𑌰𑍇𑌣 𑌰𑌥𑍇𑌨 𑌵𑌾 । 𑌪𑍌𑌰𑌾𑌨𑍍𑌸𑍍𑌵𑌜𑌨𑌵𑌨𑍍𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌕𑍁𑌶𑌲𑌂 𑌪𑌰𑌿𑌪𑍃𑌚𑍍𑌛𑌤𑌿" (யதாவ்ரஜதிஸம்க்ராமம் க்ராமார்த்தேநகரஸ்யவா।கத்வா ஸௌமித்ரிஸஹிதோ நாவிஜித்யநிவர்த்ததே. ஸங்க்ராமாத்புநராகம்ய குஞ்ஜரேணரதேநவா । பௌராந்ஸ்வஜநவந்நித்யம் குஶலம்பரிப்ருச்சதி ) என்னும்'ப்ரக்ரியையாலே தென்திருப்பேரையிலே ம்ருகயார்த்தமாக வெழுந்தருளின பெரியபெருமாள் விஜயலக்ஷ்மீ பரிவ்ருதராய்க்கொண் டெழுந்தருளினபடியைக்கண்டு நிரதிசயப்ரீதியுக்தராய் ஸம்ப்ராந்தமாநஸராய்க்கொண்டு, " 𑌤𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌶𑌤𑍍𑌰𑍁𑌹𑌨𑍍𑌤𑌾𑌰𑌂 𑌮𑌹𑌰𑍍𑌷𑍀𑌣𑌾𑌂 𑌸𑍁𑌖𑌾𑌵𑌹𑌮𑍍 । 𑌬𑌭𑍂𑌵 𑌹𑍃𑌷𑍍𑌟𑌾 𑌵𑍈𑌦𑍇𑌹𑍀 𑌭𑌰𑍍𑌤𑌾𑌰𑌂 𑌪𑌰𑌿𑌷𑌸𑍍𑌵𑌜𑍇" (தம்த்ருஷ்ட்வா ஶத்ருஹந்தாரம் மஹர்ஷீணும்ஸுகாவஹம் । பபூவஹ்ருஷ்டாவைதேஹீ பர்த்தாரம்பரிஷஸ்வஜே) என்னும் ந்யாயத்தாலே ப்ரதிகூலநிரஸநஜநித ஶ்ரமத்துக்கு ஶிஶிரோபசாரமாகப் பெரியபெருமாளோடே ஸம்ஶ்லேஷித்து, ததீய திவ்யசேஷ்டிதங்களைச்சொல்லி ; என்னப்பன் செய்தருளினபடியென், பிரான்செய்தருளினபடி யென்னென்றநுபவிக்கிருர்......*

### பன்னீராயிரப்படி.

நாலாந்திருவாய்மொழியில், விஶ்லேஷஜநிதமான வார்த்தியாலே ப்ராப்தித்வரையை யுடையவிவர்; தம்முடைய வார்த்திஹேதுவான ப்ரபல ப்ரதிபந்தகங்களைப் போக்குகைக்கு, சர்வசக்தியான சர்வேஶ்வரனையொழிய சமர்த்தரில்லையென்றறுதியிட்டு; அவனுடைய த்ரைவிக்ரம வ்யாபாரத்தையும், அம்ருத மதநத்தையும், பூம்யுத்தரணத்தையும், ஜகந்நிகரணத்தையும், பாரதஸமரப்ரவர்த்தகத்வத்தையும், ஹிரண்யவதத்தையும், லங்காபங்கத்தையும், பாணயுத்தத்தையும், ஜகத்ஸ்ருஷ்டிப்ரகாரத்தையும், கோவர்த்தநோத்தரணத்தையு மநுசந்தித்து, ஏவம்விதவிஜயாபதாந

விசிஷ்டனான சர்வேஶ்வரனுடைய விரோதி நிரஸந சாமர்த்யத்தை யநுசந்தித்தருளுகிறார். ................................................................................*

ஈடு.

கீழ்த்திருவாய்மொழியிலே - பகவத்விஷயத்திலே யிவரபஹ்ருத சித்தரானபடி சொல்லிற்று ; கீழிவர்க்குப் பிறந்த வ்யவஸாயம், ஒன்றைக் கொடுத்து மாற்றுதல் ஒருவராலே பரிஹரித்தல் செய்யுமதொன்றன்றிறே; "இனியிவர்க்குச் செய்யலாவதென்" என்றுபார்த்தருளி, "ஒன்றுகொடுக்கலாவதிதுக்குமேலில்லையிறே" என்றுபார்த்துத் தன்னுடைய விஜயபரம்பரைகளைப் பத்தும்பத்தாகக் காட்டிக்கொடுக்கக் கண்டநுபவித்து ஹ்ருஷ்டராகிறார். அவனுக்குறுப்பாமன்று தாமும்வேண்டி, அவனுக்குறுப்பாகாதவன்று தாமும் வேண்டாவென்றிருக்கும் - * வளவேழுலகிலாழ்வாரிறே யிவர்தாம் ; தம்மையழியமாறியு மத்தலைக்கு நன்மைதேடுமவரிறே ; இப்படி யிவர் ப்ரக்ருதி யறியுமவனாகையாலே, தன்னுடைய வபதாநங்களைக்காட்டி யிவருடைய விழவெல்லாந் தீரும்படி சமாதாநம் பண்ண, அநுபவித்துத் தலைக்கட்டுகிறார். பூதகாலத்திலுள்ளவையடங்கலும் ஸமகாலத்திற்போலே ப்ரத்யக்ஷவிஷயமாம்படிபண்ணிக்கொடுத்தான். அடியிலே யிவர்தாம் ஸாக்ஷாத்கரிக்கவல்லராம்படி பண்ணிக்கொடுத்தானிறே. * மயர்வறமதிநலமருளினபின்பு மிவ்வளவும்வர வாசனைபண்ணுவித்தானே, ஆகையா லிவர்க்கொரு குறைகளில்லையே.

அன்றிக்கே, கீழே "பேரெயில்சூழ்கடல்தென்னிலங்கைசெற்றபிரான்" என்று - ராமாவதாரவிஜயம் ப்ரஸ்துதமாகையாலே, அவ்வழியாலு மெல்லாவவதாரங்களிலுமுண்டான விஜயங்களை யநுசந்தித்து; ராமாவதாரத்தில் விஜயங்களைக் கண்டுகக்கும் சக்ரவர்த்தியைப்போலவும், க்ருஷ்ணாவதாரத்தில் விஜயங்களைக் கண்டுகக்கும் ஸ்ரீவசுதேவரைப்போலவுமிவருமுகந்துபேசுகிறாரென்னுதல். [ ஈஹஂவ-நஃ ] [அஹம்புநः] என் ப்ரக்ருதியையறிந் தென்வழியே போந்தநீ, "பெருமாள்காடேறப்போக" என்றால் நான் ஜீவிப்பேனென்று சொன்னாயே. [஦ெவகுமாரரூபம்] [தேவகுமாரரூபம்] அதுகிடக்க, இவரையே நீதான் "காடேறப்போக" என்கிறது. "இவர்க்குமவ்வளவேயோ" என்று சிறியாத்தான் கேட்க, "'கண்ணெச்சிலாம்' என்று தரம்போராதாரை யொப்பாகச் சொல்லி ருஷி கரிபூசுகிறான்" என்றார். [ ஈலஂக்ருதஂ ] [ அலங்க்ருதம் ] அத்தாலும் வெறும்புறங்கிடீ ! ரொருபோலி சொல்லலாவது, ஒப்பித்தாலொக்கச் சொல்லலாவாரில்லை. [தஂவஸ-தஂ] [தம்ஸ-தம்] இவனுக்கிரண்டுபடியு முத்தேஶ்யமாயிருக்கிறபடி. [ ஆவ்ரஜந்தஂ ] [ ஆவ்ராஜந்தம் ] புஷ்பமலரும்போ தெங்குமொக்கப் பிறக்கும் விகாசம்போலே. அதுவும் வண்டைநோக்கியிறே யலருவது, இவரும் போக்தாக்களைக்குறித்திறே. [ நந்தாமீத்யாதி ] கண்டபடியே யிருக்கச்செய்தே, காணாதுகண்டாரைப்போலேயாயிற்று நாடோறும் நாடோறும் க்ஷணந்தோறும் க்ஷணந்தோறுமுகக்கும்படி. [ ஦ஶநெந ] [ தர்ஶநேந ] அணைத்தல், வார்த்தைசொல்

ஆுதல் செய்யவேண்டா; காட்சியேயமையும். கரைபுரண்டவநுபவமுள்ளவிடத்திற்போலேகாணும் ப்ரயோஜநம்; * ஸதாபஶ்யந்தியிறே. [ஹவாஙிஜூஷாவவ-நாஶ்-வெவ] [பவாமித்ருஷ்ட்வாசபுநர்யுவேவ] அறுபதினாயிரம் ஸம்வத்ஸரம் வயஸ்ஸைப்புக்கு வ்ருத்தனானசக்ரவர்த்தி,பெருமாளைக்கண்டபின்பு, பெருமாளுக்கும் தனக்கும் வாசிதெரியாதபடியானான். "காமனைப்பயந்தகாளை" என்னுமாபோலே. தன்னையநுபவிப்பாரையும் தன்னைப்போலேயாக்கி யுஜ்ஜீவிப்பிக்கும் விஷயம்போலேகாணும். "யவெவவஸ-ஜெவொஹ-ஏ விஹாயாஹ்ராமதாஂஜராஂ" (யுவேவ வஸுதேவோபூத் விஹாயாப்யாகதாம்ஜராம்) என்னும்படியானாரிறே ஸ்ரீவசுதேவரும்.

"கீழே 'கண்ணபிரானுக்கென்பெண்மை தோற்றேன்' என்றுகொண்டு - இத்தலையில் தோல்விக் கெதிர்த்தலையான வத்தலையில் விஜயங்களை யநுசந்திக்கிறார்" என்று பிள்ளை திருநறையூரரையர் பணிக்கும்படி.......................................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஆழியெழப்ரவேசே, வ்ருத்தாநுவாத பூர்வகமாக வர்த்திஷ்யமாணஸங்கதி (கீழிற்றிருவாய்மொழியிலே யென்று தொடங்கி, ஹ்ருஷ்டராகிறா ரென்னுமளவாலே) விஜயபரம்பரைகளைக் காட்டிக் கொடுக்கைக்கு ஹேதுவை யருளிச்செய்கிறார் (கீழிவர்க்கித்யாதி) மாற்றுதல் - பரிஹரித்தல். பரிஹரிக்கும் ப்ரகாரமருளிச்செய்கிறார் (இனியிவர்க்கித்யாதி) பத்தும்பத்தாக - பத்துப்பாட்டிலுமென்று ஸ்வபாவார்த்தம், நன்றாகவென்று த்வநி. சம்ஶ்லேஷார்த்தமாக துஃகப்படுகிற விவர்க்கு விஜயபரம்பரைகளைக் காட்டிக்கொடுத்தால் தீருமோவென்ன (அவனுக்குறுப்பாமன்றித்யாதிவாக்யத்ரயம்). விவரணம் (தம்மையித்யாதி) அதீதகாலத்திலுள்ளவற்றை யிப்போது ப்ரத்யக்ஷமாகக் காணும்படியென்னென்ன (பூதகாலத்திலித்யாதி) அப்படி கொடுத்தானோவென்ன (அடியிலேயித்யாதி) ஆனாலு மெல்லா வவதாரவிஜயங்களையு மொருகாலே யநுபவிக்க சக்தியுண்டோவென்ன (மயர்வறவித்யாதி) வாஸனை பண்ணுவிக்கையாவது - அந்த ஜ்ஞாநத்தை யிவ்வளவாக விசதமாக்குகை.

ஸங்கத்யந்தரம் (அன்றிக்கேயித்யாதி) அப்படி ராமாவதாரவிஜயத்தைக்கண்டு சக்ரவர்த்தியுகந்தானோவென்ன (அஹம்புநரித்யாதி) "அஹஂவ-நமெ்ரவகூஶாஶ-ஏவஶெஜூூதஂதஂவஸ-தஶாவ்ஜஜுஃ । நநாஶிவஶ்ஜவிஷெ நநஹவாஙிஜூஷாவவ-நாஶ்-வெவ" (அஹம்புநர்த்தேவகுமாரரூபமலங்க்ருதம்தம்ஸுதமாவ்ரஜந்தம் । நந்தாமிபஶ்யந்பிதர்ஸுநேபவாமித்ருஷ்ட்வாசபுநர்யுவேவ) இத்யயோத்யாகாண்டே தஶரதப்ரலாபே. இது - போக்யதைக்கு ப்ரமாணமேயாகிலும், விஜயங்களுமிப்படி போக்யமாயிருக்குமென்கைக்காக வித்தையெடுத்தருளினானென்னுதல்; ஸ்வவ்யதிரிக்தகாந்திகளை கத்யோதகல்பமாக்கும் வடிவழகும் விஜயாந்தர்ப்பூதமென்று கருத்தென்னுதல். புநஃ-வ்யாவ்ருத்தியுண்டென்றபடி. கைகேயியைப்பார்த்து "இப்போது நான் வ்யாவ்ருத்தன்" என்று சொல்லுகிறவனுடையபாவம் (என்ப்ரக்ருதியையித்யாதி) அதுகிடக்க-எனக்கு ஹிதகாமையா

யிருக்கிற வாகாரமில்லாவிட்டாலுமென்றபடி. இவனையே - இவ்வழகையுடையவனையே. தேவகுமாரஃ - சுப்ரஹ்மண்யஃ. இவர்க்கும் - பெருமாளுக்கும். அவ்வளவேயோ-அழகு சுப்ரஹ்மண்யனளவோவென்றபடி. நம்பிள்ளையை (கேட்க)என்றபடி. கண்ணெச்சில் - த்ருஷ்டிதோஷம். கரிபூசுகை - த்ருஷ்டிதோஷ பரிஹாரமாகக்கரியைப்பூசுகை. அழகைமறைக்கிறுனென்றபடி. "தேவகுமாரரூபம்" என்றவநந்தரம் "அலங்க்ருதம்" என்றதுக்குபாவம் ( அத்தாலுமித்யாதி ) அத்தாலும் - கரிபூசுகிறவாகாரத்தாலுமென்றபடி. இவனுக்கென்றது - சக்ரவர்த்திக்கென்னுதல், ருஷிக்கென்னுதல். இரண்டுபடியும் - அழகும் புத்ரத்வமுமென்றபடி. ஆஸமந்தாத்வ்ரஜந்தமென்று விவக்ஷித்துபாவம் ( புஷ்பமித்யாதி ) அதாவது - பூவலரும்போது ஓடையெங்குமொக்க வொருவிகாஸம்பிறக்குமாபோலே, இவர் நடக்கும்போது திருமேனியெங்குமொக்க வொருசெவ்விபிறக்குமென்றபடி. எங்குமொக்க-ஓடைமுதலான ப்ரதேஶமெங்குமொக்கவென்றபடி. ஆபிமுக்யேந வ்ரஜந்தமென்று விவக்ஷித்தர்த்தாந்தரம் ( அதுவும் வண்டையித்யாதி ) " வஶ்யநவி, நநூாவி " ( பஶ்யந்நபி, நந்தாமி ) என்கிறவர்த்தமாநத்வயத்துக்கர்த்தம் ( கண்டபடியேயித்யாதி ) " வஶ்யநவி " ( பஶ்யந்நபி ) என்றது - (நாள்தோறும்) என்றபடி; " நநூாவி " (நந்தாமி) என்றது - (க்ஷணந்தோறும்) என்றபடியென்று வர்த்தமாநத்வயத்துக்கர்த்தம். இப்படி க்ஷணந்தோறு முகக்கிறது ஸம்பாஷண ஸம்ஶ்லேஷங்களாலேயோவென்ன (தர்ஶநேந) என்று ஸங்கதி. கரைபுரண்ட வநுபவமுள்ள விடமாவது-பரமபதம். காட்சிமாத்ரமேபோருமோவென்ன ( கரைபுரண்டவித்யாதி ) அங்கும் காட்சியேயோ ப்ரயோஜநமென்ன (ஸதேத்யாதி) " வஶ்யந்தி " ( பஶ்யந்தி ) என்கிறவர்த்தமாநத்தாலே - ஸர்வகாலமுமென்கிறவர்த்தம் ஸித்தியாநிற்க, " ஸதா " (ஸதா) என்கிறது - ஸர்வாவஸ்த்தைகளிலுமென்றபடி. கீழ்ச்சொன்ன தர்ஶநந்தன்னையே - " ஜ்ருஷ்டாவ " (த்ருஷ்ட்வாச) என்று அர்த்தாந்தரவிதாநார்த்தமநுவதிக்கிறது. " வுநநவெவ-ஹவாமி " (புநர்யுவேவ-பவாமி) என்றதுக்கர்த்தம் (அறுபதினுயிரமித்யாதி) வ்ருத்தனுனவன் மகனைப்போலே யாகக்கூடுமோவென்ன, த்ருஷ்டாந்தம் ( காமனையித்யாதி ) காமனைப்பெற்ற யுவாவென்றபடி. சர்வசக்தியாகையாலே யவனுக்குக்காளையாகலாம், இவனுக்குக்கூடுமோவென்ன (தன்னையித்யாதி) க்ருஷ்ணுவதாரத்தில் விஜயங்களைக்கண்டு ஸ்ரீவஸுதேவரு முகந்ததுக்குப்ரமாணம் ( யுவேவேத்யாதி ) " ...... " (மஹோத்ஸவமிவாஸாத்யபுத்ராநநவிலோகநம் । யுவேவவஸுதேவோபூத்விஹாயாப்யாகதாம்ஜராம்) இதிபஞ்சமேம்ஶே.

மூன்றும்சங்கதி (கீழேகண்ணபிரானுக்கித்யாதி).............................*

---

## நான்காந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

ஆழியெழச்சங்கும்வில்லுமெழத்திசை
வாழியெழத்தண்டும்வாளுமெழவண்ட
மோழையெழமுடிபாதமெழவப்ப
னூழியெழவுலகங்கொண்டவாறே.

## ஆறாயிரப்படி.

சதுர்த்தஶபுவநாந்தர் வர்த்திகளான சர்வாத்மாக்களினாலும் ஸம்ஸ்துத்யமானனாய், ஸ்ருஷ்ட்யந்த மென்னும்படி பிதுரிதாண்டபித்திகமாக சம்வர்த்திததிவ்யாவயவ திவ்யாயுதோபேதனாய்க் கொண்டு என்னப்பன் மஹாபலியைஜயித்து லோகத்தை யளந்துகொண்டருளினபடி யென்னென்கிறார் ......................................................................*

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், திருவுலகளந்தருளின ப்ரகாரத்தை யநுஸந்தித்து சந்துஷ்டராகிறார்.

திருவுலகளந்தருள வளருகிறபோது, திவ்யாயுதங்கள், பரிவாலே "ஸ்புரதாயுதஃ" (ஸ்ப்புரதாயுதஃ) என்கிறகணக்கிலே, ஆழி - ப்ரதானனை திருவாழியாழ்வான். எழ-முன்னேயுயர்ந்துதோன்றவும். அநந்தரம், சங்கும்-ஸ்ரீபாஞ்சஜந்யமும். வில்லும்-ஸ்ரீஶார்ங்கமும். எழ-தோன்றவும். தண்டும் - கதையும். வாளும்-நந்தகமும். எழ-தோன்றவும். இவ்வாயுதபூர்த்தியைக் கண்டுகந்து, "ஸங்கைஸ்ஸுராணாம்" (ஸங்கைஸ்ஸுராணும்) என்கிறபடியே. திசை-திக்குத்தோறும் நின்றநின்றநிலையிலே. வாழி - தேவமநுஷ்யாதிகளுடைய மங்களாஶாஸநகோஷம். எழ - கிளம்பும்படியாகவும். அவிளம்பமாக வளர்ந்தபடியாலே, அண்டம் - அண்டகபாலம்பிளந்து. ஆவரணஜலம், மோழை - குமிழி. எழ - கிளம்பும்படியாகவும். வளர்ந்தருளின சடக்காலே, முடி - திருமுடியும். பாதம் - எடுத்ததிருவடியும். எழ-ஒக்கக்கிளம்பும்படியாகவும். ஆசுரப்ரக்ருதியான மஹாபலி யபிமாநம்நடந்தகாலம் போய், ஊழி - விலக்ஷணகாலம். எழ - கிளம்பும்படியாகவும். அப்பன்-சர்வஸ்வாமியான சர்வேஸ்வரன். உலகம் - லோகத்தை. கொண்ட-அளந்துகொண்ட. ஆறு-ப்ரகாரம். ஏ - இருந்தபடியே.

மோழை - குமிழி......................................................................*

## ஈடு - முதற்பாட்டு.

அவையெல்லாவற்றுக்கு மடியாக, திருவுலகளந்தருளின பெரிய விஜயத்தை யநுசந்திக்கிறார்.

"தேவாஸ்ஸ்வாஸ்த்ராநமாயாந்தி நிஹதாதைத்யதாநவாঃ। நபயம்வித்யதே கிஞ்சிஜ்ஜிதம்பகவதாஜகத்" (தேவாஸ்ஸ்வாஸ்த்தாநமாயாந்தி நிஹ்தாதைத்யதாநவாঃ। நபயம்வித்யதேகிஞ்சிஜ்ஜிதம்பகவதாஜகத் ) என்கிறபடியே தனக்காக்கிக்கொண்ட செயலிறே. ராவணனைப்போலே யெதிரியாக்கிக்கொல்லாதே, குணலவமுண்டாகையாலே நின்றநிலையிலே தோற்பித்து, கொண்டபடி.

நாயகனுக்கடியாரிறே வென்று கொடுப்பார் (ஆழியெழ) "த்ரைலோக்யத்தையும் காற்கீழேயிட்டுக்கொள்ளவேணும்" என்னும் கறுவுதலுள்ளது சர்வேஸ்வரனுக்கேயிறே, அவ்வபிசந்தியின்றிக்கே யிருக்கச்

செய்தேயு மவனுக்குமுன்பே பரிகரம் முற்பட்டபடி. "காட்டுக்குப்போம்" என்றுநியமித்தது பெருமாளையே யாயிருக்க, இளையபெருமாள் முற்பட்டாப்போலே. "𑌪𑍂𑌰𑍍𑌵𑌜𑌸𑍍𑌯𑌾𑌨𑍁𑌯𑌾𑌤𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑍇 𑌦𑍍𑌰𑍁𑌮𑌶𑍈𑌲𑍈𑌰𑌲𑌂𑌕𑍃𑌤𑌃" (பூர்வஜஸ்யாநுயாத்ராத்தே த்ருமசைலைரலங்க்ருத:) என்று கொண்டுபோக்குக்கீடாக முற்கோலி யலங்கரித்துக்கொண்டு நின்றரிறே. (ஆழியெழ) தோற்றத்திலே யரசுபோராயிற்று; * ஹேதிராஜனிறே-திவ்யாயுதங்களுக்கெல்லாம் ப்ரதாநமிறே திருவாழி. பரிகரம் நிற்கமஹாராஜர் ராவணன்மேலே பாய்ந்தாப்போலே. "பையல்முடியுந் தானுமாய்ப் பெருமாள்திருமுன்பேநிற்பதே, ஈரரசாயிற்றே" என்றுபொறுமையாலே மேல்விழுந்தாரிறே. [𑌅𑌥 𑌹𑌰𑌿𑌵𑌰𑌨𑌾𑌦𑌃] [அதஹரிவரநாத:] தம்மோடொக்கவினைசெய்யவல்லபேர் தனித்தனியேயநேகரிறே. [𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌸𑌂𑌗𑍍𑌰𑌾𑌮𑌕𑍀𑌰𑍍𑌤𑍍𑌤𑌿𑌂] [ப்ராப்யசங்க்ராமகீர்த்திம்] இவர்களோடுகூடி நின்றுத்தபோராகவொண்ணாது, தூசித்தலையிலே யோரேற்றம்செய்து தரம்பெறவேணுமென்றிருந்தார். பூசல்தலையிலே பெருமாளுக்குண்டான கீர்த்தியையும் தந்தலையிலே யேறிட்டுக்கொண்டார். [𑌨𑌿𑌶𑌿𑌚𑌰𑌪𑌤𑌿𑌂] [நிசிசரபதிம்] அத்தலையிலு மவனோடொக்க வினைசெய்யவல்லாரநேகரிறே. "அவன்கிழ்த்திரியுமவர்கள் தரம்போரார்" என்று அவன்றன்னோடே பொருதபடி. [𑌆𑌜𑍌] அவர்களைப்போலே வழியல்லாவழியே யிளைப்பிக்கையன்றிக்கே, செவ்வைப்பூசல்செய்திளைப்பித்தபடி. [𑌯𑍋𑌜𑌯𑌿𑌤𑍍𑌵𑌾 𑌕𑍍𑌰𑌮𑍇𑌣] [யோஜயித்வாக்ரமேண] இதுக்குமுன்பு கூடாததொன்றோடே கூட்டினார். [𑌗𑌗𑌨𑌮𑌤𑌿𑌵𑌿𑌶𑌾𑌲𑌂 𑌲𑌙𑍍𑌘𑌯𑌿𑌤𑍍𑌵𑌾] [ககநமதிவிசாலம்லங்கயித்வா] பரப்பையுடைத்தான வாகாசத்தைத்திறலாலேவருத்தமறக்கடந்தார், [𑌅𑌰𑍍𑌕𑍍𑌕𑌸𑍂𑌨𑍁𑌃] [அர்க்கஸூநு:] மீட்சியில் தம்வரவு தெரியாதபடிமீண்டார். பிறப்புக்கீடாகச்செய்தார். தன்னிலமிறே ஆதித்யனோரிடத்தினின்று மோரிடத்தேறப்போம்போது தெரியாதிறே. [𑌹𑌰𑌿𑌵𑌰𑌗𑌣𑌮𑌧𑍍𑌯𑍇] [ஹரிவரகணமத்யே] "இவர்களிலொருவ்யாவ்ருத்திதோற்றவொண்ணாது" என்று இவர்கள்நடுவேநின்றார். [𑌰𑌾𑌮𑌪𑌾𑌰𑍍𑌶𑍍𑌵𑌂 𑌜𑌗𑌾𑌮] [ராமபார்ச்வம்ஜகாம] தூசித்தலையிலே மதிக்க வொருவினைசெய்தாரன்றே முன்னிற்கப்பெறுவார்" என்று பெருமாள் பார்ச்வத்திலேவந்துநின்றார். (ஆழியெழ) "ஆயிரக்காதம் பறப்பதின்குட்டி ஐஞ்ஞூற்றுக்காதம் சிறகடிக்கொள்ளும்" என்னுமாபோலே முற்கோலிவளர்ந்தபடி. சிறகடிக்கொள்ளுகை யாவது-பின்புதூரப்பறக்கைக்கு யோக்யமாம்படி பால்யத்திலேயப்பஸிக்கை. பயசங்கையில்லாதவிடத்தே யிருந்து பயப்படக்கடவார், பயஸ்த்தாநத்தைக்கண்டால் பேசாதிரார்களிறே. பயசங்கையில்லாதவிடத்திலும் பயப்படப்பண்ணுகிறது விஷயவைலக்ஷண்யமிறே. துர்யோதநகோஷ்ட்டியிலே க்ருஷ்ணனெழுந்தருளினபோது அவர்கள்பண்ணின வஞ்சநத்தைக்கண்டதிசங்கைபண்ணி, தம்முடைய திருமாளி

கையில் படுக்கையையும் தடவிப்பார்த்தாரிறே; "ஸம்ப்ருஸந்நாஸநம் ஸௌரேர்விதுரஸ்ஸமஹாமதி:" (ஸம்ஸ்ப்ருஸந்நாஸநம்ஸௌரோர்விதுரஸ்ஸமஹாமதி:) என்கிறபடியே - கடல்கலங்குவது தன்னளவிலேயிறே. பிள்ளையுறங்காவில்லிதாசர் "மஹாமதி: என்றது - மதிகேடரென்கிறபடியோ" என்றார். பிள்ளைதாம் பெருமாளெழுந்தருளும்போது "எங்கேனுமொரு சலநம்பிறக்கில் நம்ப்ராணனை விடுமத்தனை" என்று சொட்டையையுருவிப்பிடித்துக்கொண்டு சேவிப்பராம்; நம்முதலிகளத்தைக்கண்டு இவரை "மஹாமதிகள்" என்றழைப்பர்கள். அறிவுண்டாகையாவது - பகவத்விஷயத்திலே மதிகெடுகையிறே. (ஆழியெழ) இவன் வளர்ந்தருளுகைக்குக் கணிசித்தபடியைக்கண்டு, "தனியாகவொண்ணாது" என்று பயப்பட்டுத் திருவாழியாழ்வானருகையிலேயேறினார். (சங்கும் வில்லுமெழ) தூசியேறினவர்கள் பொரப்புக்கவாறே நின்றவிளவணி கலங்கி மேலேநடக்குமாபோலே, மற்றையாழ்வார்களும் மற்றைக்கையிலே யேறினர்கள். இளைபெறுதவிடத்தே யிருந்துசிறுபாறு என்னக்கடவவர்களிறையுள்ள விடத்திலொருவர்க்கொருவர் விட்டுக்கொடார்களிறே. இனத்திலே யொருவன்ஜீவிக்கக்கண்டவாறே பந்துவர்க்கம்வந்து மேல்விழுமாபோலே, மற்றைதிவ்யாயுதங்களும் மேல்விழுந்தபடி. [இடங்கைவலம்புரிநின்றார்ப்ப] இவனுடைய வடிவழகை யநுசந்தித்து ஸ்ரீபாஞ்சஜந்யமானது நின்றார்ப்ப. [எரியித்யாதி] அவனைப்போலார்த்துக்கொள்ள வவஸரமற்று அக்நியையு மிழ்ந்துகொண்டு, நமுசிப்ரப்ருதிகளை வாய் வாய் என்றது திருவாழி. [விடங்காலுமித்யாதி] கிடந்தவிடத்தேகிடந்து ஶத்ருக்கள்மேலே விஷாக்நியையுமிழுமத்தனையிறே திருவநந்தாழ்வானுலாவது. [அரவணைமேற்றேன்றல்] திருவநந்தாழ்வானைப் படுக்கையாகவுடையப்ரதாநன். [திசையளப்பான் பூவாரடிநிமிர்த்தபோது] ஒருபூவைக்கொண்டாகாதே காடுமோடையு மளந்துகொண்டது. பூவையிட்டுப்பூவைக் கொண்டான்காணும். அப்படுக்கையிலே பொருந்தும் ஸௌகுமார்யத்தை யுடையவனிக்காடுமோடையுமான ஜகத்தையளக்கப்புக்கால், இவர்களுக்கிப்படி படவேண்டாவோ. அவனிப்படியளவா நின்றாலிவர்கள் பேசாதிரார்களிறே. (திசைவாழியெழ) "அவனுக்கென்வருகிறதோ" என்றாயிற்று திவ்யாயுதங்கள்கிளருகிறது, "அவைதனக்கென்வருகிறதோ" என்று "வடிவார்சோதிவலத்துறையும் சுடராழியும்பல்லாண்டு|படைபோர்புக்கு முழங்கு மப்பாஞ்சசன்னியமும் பல்லாண்டு" என்னுநிற்பர்களிறே. "நின்கையில் வேல்போற்றி" என்று-வேல் தனக்கும் பரியவேண்டியிருக்குமிறே. திக்குக்கள்தோறு மநுகூலருடைய, வாழிவாழி என்கிற மங்களாஶாஸநத்வநிகள்கிளர. திவ்யாயுதங்களிலுமவனுக்கு ரக்ஷையிவர்களுடைய மங்களாஶாஸநமென்றிருக்கிறார் - திவ்யாயுதங்களுக்கு நடுவே யிவற்றைச் சொல்லுகையாலே. (திசைவாழியெழ) * ஏத்தவேழுலகங்கொண்ட கோலக்கூத்தனிறே. "தீவி

த்ரிவிக்ரமஃக்ரமாக்ராந்தத்ரைலோக்யஸ்ஸ்புரதாயுத:" ( த்ரிவிக்ரமஃக்ரமாக்ரா ந்தத்ரைலோக்யஸ்ஸ்புரதாயுத: ) ( தண்டும்வாளுமெழ ) "தூசித்தலையிலவர்களைகைதொடராய்த் தரம்பெற்றுப்போகவொண்ணாது" என்று நின்றபேரணியும் குலைந்துமேல்விழுமாபோலே; "பிறப்பட்டோம், கெட்டோம்" என்றொருவர்க்கொருவர் படுகிறபடி, ஒருவர்க்கிட்ட சோற்றைப்பலராசைப்படுமாபோலே காணுமிவர்கள் படுகிறபாடு. அநுகூலன்வந்துபுகுர, "வத்யதாம்" (வத்யதாம்) என்கிறவர்கள், ப்ரதிகூலருள்ளவிடத்தில் பேசாதிரார்களிறே. [என்னிதுமாயமென்னப்ப னறிந்திலன் । முன்னையவண்ணமேகொண்டளவாய் என்று] நமுசிவந்து; என் பிதா உன் வஞ்சநமறிந்திலன். நீமுன்புபோலே நின்றளக்கவேணுமென்று திருவடிகளைக்கட்டிக்கொண்டு கிடந்தானிறே. அன்றேபிறந்தன்றே வளர்ந்தானொருவனுடைய வ்யாபாரமிறேயிதடைய; ஆகையாலேபரிகைக்கு ஹேதுவுண்டென்றபடி. [சீராற்பிறந்தித்யாதி] உன்கையிலேபருத்திபட்ட பன்னிரண்டும் படுகிறபூமியை நீரேற்கும்போது இப்படிபடவேணுமோவென்கிறார். (அண்டம்மோழையெழ) இந்த்ரனுக்காக த்ரைலோக்ய மித்தனையு மளந்துகொடுப்பதாக விறேயுபக்ரமித்தது; கணிஶ மவ்வளவல்லாமையாலே அண்டாவகாசமுள்ள விடமெங்கும் சென்றளந்து, அண்டகடாஹத்திலே திருவடிசென்று "ஒண்மிதியிற்புனலுருவி யொருகால்நிற்ப" என்கிறபடியே கீழிலண்டகடாஹத்தை யுருவிநிற்க, கீழிலாவரணஜலம் மேலேயெழ. ஆவரணஜலத்துக்கு நடுவே யொருகழல்போலே மிதக்கு மித்தனையிறேயண்டம். "ரக்ஷகமானசெயலே பாதகமாகிறதோ" என்றஞ்சவேண்டும்படியிறே அப்போதைக்கறுவுதல். மோழை - குமிழி. (முடிபாதமெழ) திருவபிஷேகத்தளவும் திருவடிகள் கிளர. "முடிமேலேபாதமெழ" என்றுஞ்சொல்லுவர்கள் ந்ருத்தலக்ஷணத்துக்காக. (அப்பனூழியெழ) மஹாபலி அப்ராப்தமாகராஜ்யம்பண்ணுகையால் வந்தபொல்லாக்காலமானதுபோய், நல்லடிக்காலமாயிற்று. நல்லடிக்காலம் கிளரும்படியாகவும் (அப்பன் - உலகங்கொண்டவாறே ) மஹோபகாரகனான சர்வேஸ்வரன் லோகத்தைக்கொண்ட வாப்சர்ய மிருந்தபடியென்னென்னுதல். அன்றியே. லோகத்தைக்கொண்ட ப்ரகாரமிருந்தபடி யென்னென்னுதல். அப்பன், அப்பன் என்று ஹ்ருஷ்டராகிறாராகவுமாம். (அப்பன்) இந்த்ரனுக்கு ராஜ்யத்தைக்கொடுத்த செயலாலே யெனக்கு ஸத்தையைத்தந்தானென்கிறார்.................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு. (ஆழியெழவித்யாதி) "உலகங்கொண்டவாறே" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை ( அவையித்யாதி ) அவையெல்லாவற்றுக்கும் - பத்துப்பாட்டில் விஜயங்களெல்லாவற்றுக்கு மென்றபடி. இது பெரிய விஜயமோ வென்ன ( தேவாஇத்யாதி ) "தேவாஸ்ஸுராமநுஷ்யாஶ்ச நிஹதாஶ்சைத்யதாநவா:।

நபயம்விக்ரமெதெகிஞ்ஜிதம்பகவதாஜகத்" (தேவாஸ்ஸ்வஸ்த்தாநமாயாந்தி நிஹதாதைத்யதாநவா:। நபயம்வித்யதேகிஞ்சிஜ்ஜிதம்பகவதாஜகத்) என்று - திருவுலகளந்தருளினபோது ஜாம்பவாங்மஹாராஜர் பறையறைந்தபடியிது. மஹாபலி பக்கலிலே யிரந்தளக்கவேணுமோ, அவனை ஸம்ஹரித்து விடவொண்ணாதோ வென்ன (ராவணனைப்போலேயித்யாதி) குணலவமாவது - ஔதார்யம்.

முந்தற திவ்யாயுதங்களைச் சொல்லுகிறதுக்குபாவம் (நாயகனுக்கித்யாதி) அடியாரொன்றது - சாடு. திருவடிகளும், ப்ருத்யரும். வென்றுகொடுப்பார்-ஜயித்துக்கொடுப்பார். அவனிருக்க, ஆழியெழுவானென்னென்ன (த்ரைலோக்யத்தையுமித்யாதிவாக்யத்வயத்தாலே) அதாவது - பரிவினாலேயென்றபடி. கறுவுதல் - ஆக்ரஹம். பரிகரம் முற்பட்டதுண்டோவென்ன (காட்டுக்கித்யாதி) அவர் முற்பட்டாரோவென்ன, ஸப்ரமாணமாக வருளிச்செய்கிறார் (பூர்வஜஸ்யேத்யாதி) "ப்ராகேவதுமஹாபாகஸ் ஸௌமித்ரிர்மித்ரநந்தந:। பூர்வஜஸ்யாநுயாத்ரார்த்தே த்ருமசீரைரலங்க்ருத:" (ப்ராகேவதுமஹாபாகஸ் ஸௌமித்ரிர்மித்ரநந்தந:। பூர்வஜஸ்யாநுயாத்ரார்த்தே த்ருமசீரைரலங்க்ருத:) இதி சுந்தரகாண்டே ஹநூமந்தம் ப்ரதிஸீதா. இஸ்ஸ்லோகத்தில் "ப்ராகெவ" (ப்ராகேவ) என்றத்தைக்கடாக்ஷித்து (முற்கோலி) என்றது.

அல்லாத திவ்யாயுதங்களிருக்க, திருவாழியெழுவானென்னென்ன; பாவம் (தோற்றத்திலேயித்யாதி) தோற்றத்திலே - உபக்ரமத்திலே. அரசுபோர்-ராஜயுத்தம். இவனரசோவென்ன (ஹேதிராஜனிறேயென்று) இதுக்கர்த்தம் (திவ்யாயுதங்களுக்கெல்லாமித்யாதி) "தோற்றத்திலேயரசுபோர்" என்றதுக்கு த்ருஷ்டாந்தம் (பரிகரமித்யாதி) மஹாராஜர் மேல்விழுகைக்கு ஹேதுவருளிச்செய்கிறார் (பையலித்யாதி) அப்படி மேல்விழுந்தாரோவென்ன, ப்ரமாணம் (அதேத்யாதி) "அதஹரிவரநாத: ப்ராப்யஸங்க்ராமகீர்த்திம் நிஸிசரபதிமாஜௌயோஜயித்வாஸ்ரமேண। ககநமதிவிஸாலம்லங்கயித்வார்க்கஸூநுர் ஹரிவரகணமத்யே ராமபார்ஸ்வம்ஜகாம" (அதஹரிவரநாத: ப்ராப்யஸங்க்ராமகீர்த்திம் நிஸிசரபதிமாஜௌயோஜயித்வாஸ்ரமேண। ககநமதிவிஸாலம்லங்கயித்வார்க்கஸூநுர்ஹரிவரகணமத்யே ராமபார்ஸ்வம்ஜகாம) இதியுத்தகாண்டே. ஹரிநாத: என்றதே, "ஹரிவரநாத:" (ஹரிவரநாத:) என்றதுக்குபாவம் (தம்மோடொக்கவித்யாதி) வினை - யுத்தம். ஆனால் தாம் முற்பட மேல்விழுவானென்னென்ன (இவர்களோடித்யாதி) ஒத்தபோர் - சமாநயுத்தம். தூசித்தலை-யுத்தமுகம். தரம்-ஸ்ரைஷ்ட்யம். "அபியாதாப்ரஹர்த்தாச" (அபியாதாப்ரஹர்த்தாச) இத்யாதியைக்கடாக்ஷித்துபாவம் (பூசற்றலையித்யாதி) பூசல் தலை - யுத்தமுகம். "நிஸிசரபதிம்" (நிஸிசரபதிம்) என்றதுக்கு பாவம் (அந்தலையிலுமித்யாதி) (அத்தலையிலும்) என்ற சம்பந்தம் - (தம்மோடொக்க வினைசெய்யவல்லபேர்) என்றத்தை சமுச்சயிக்கிறது. அத்தலையிலும் - ராவணனிடத்திலும். ஆனாலவர்களோடே யுத்தம்பண்ணுகிறதுக்கென்னென்ன (அவன்கீழ்த்திரியுமிந்யாதி) செவ்வைப்பூசல் - தர்மயுத்தம். "யோவஜ்ரபாத" (யோவஜ்ரபாத) இத்யாதி பூர்வார்த்தத்தைக் கடாக்ஷித்து பாவம் (இதுக்குமுன்பித்யாதி) "லங்கயித்வா" (லங்கயித்வா) என்றதுக்குபாவம் (பரப்பையித்யாதி) திறலாலே - மிடுக்காலே. இப்படி மீளுகைக்கு ஹேது வேதென்ன; அர்க்கஸூநுவாகையாலே யென்கிறார் (பிறப்புக்கித்யாதி) அப்படிசெ

ய்கைக்கு ஹேதுவேதென்ன (தன்னிலமிறேயென்று) தம் வரவு தெரியாதபடி மீண்டவாகாரம் ஸூர்யனுக்குண்டோவென்ன (ஆதித்யனித்யாதி) (மத்யே) என்றதுக்குபாவம் (இவர்களிலித்யாதி) "வாஸ்வ-ஃஜமாஃ" (பார்ஸ்வம்ஜகாம) என்றதுக்குபாவம் (அசித்தலேயிலேயித்யாதி) மதிக்க - பெருக்க. எல்லாரும் சந்தோஷப்படவென்றுமாம்.

"அவனுக்குமுன்பே பரிகரம் முற்பட்டபடி" என்றதிலே ரஸோக்தி (ஆயிரக்காதமித்யாதி) முற்கோலுகைக்கு ஹேதுவேதென்ன (பயசங்கையித்யாதி) பயசங்கை யில்லாதவிடத்தே பயஹேதுவேதென்ன (பயசங்கையித்யாதி) வைலக்ஷண்யத்தைக்கண்டு அஸ்த்தானே பயசங்கைபண்ணிருண்டோவென்ன (துர்யோதநேத்யாதி) தடவிப்பார்த்ததுக்குப்ரமாணம் (ஸம்ஸ்ப்ருஸ்ந்நித்யாதி) "ஃஹாஃதிஃ" (மஹாமதிঃ) என்றதுக்கு பாவம் (கடலித்யாதி) "ஜ்ஞாநாதிக்யம் ப்ரேமத்தாலே கலங்குகைக்குடல்" என்னுமத்தை யாப்தசம்வாதத்தாலே தர்ஸிப்பிக்கிறர் (பிள்ளையுறங்காவில்லியித்யாதி) இந்தவாகாரமவர்க்குமுண்டென்கிருர் (பிள்ளைநாமித்யாதி) சொட்டை - ஆயுதம். "ஃஹாஃதிஃ" (மஹாமதிঃ) என்றால் - மதிகேடொன்று காட்டுமோவென்ன (அறிவுண்டாகையாவதித்யாதி) கீழ் "த்ரைலோக்யத்தையும்" இத்யாதி வாக்யவிவரணம் (இவன்வளர்ந்தருளுகைக்கித்யாதி) கணிசித்த-சிந்தித்த. எழ - கிளரவென்றபடி.

பொரப்புக்கவாறே - யுத்தம்பண்ணப்புக்கவாறே. இளவணி-காலாள். ஏறினர்களென்றது-அர்த்தஸித்தம். மற்றையாழ்வார்கள் திருவாழியாழ்வானிடத்தில் பரிவிலேகிளம்பினதாக - கீழருளிச்செய்து, ஈஸ்வரனிடத்தில் பரிவிலே கிளம்பினதாக விவக்ஷித்தத்தை த்விவிதமாகக்காட்டுகிருர் (இரைபெருதவிடத்தேயித்யாதி வாக்யத்வயத்தாலே) முந்தினவிதம். கேவலம் பரிவிலே மேல்விழுந்தது, இரண்டாம்விதம்-பொருமையால்வந்த பரிவிலே மேல்விழுந்ததென்றபடி. இனத்திலே-ஸ்வஜநத்திலே. திருவுலகளந்தபோது திவ்யாயுதங்கள் பரிவாலேகிளம்பிற்றேவென்ன, ப்ரமாணம் (இடங்கையித்யாதி) ஆர்த்துக்கொள்ள - சம்ப்ரமிக்க. வாய்வாய்-கபோலதாடநம். அடங்கார்-சத்ருக்கள். காலும்-உமிழாநிற்கும். விடங்காலும்தீவாய்-அரவு, "அரவு-அணைமேல்" என்றிரண்டிடத்திலுமர வங்வயிப்பது. தோன்றல்-ஸ்வாமி. சாடு (பூவையிட்டித்யாதி) பூவை-பூமியை. பூவையிட்டு - புஷ்பம்போன்ற திருவடிகளையிட்டு. அவனளந்தா ளிவர்களிப்படி படவேணுமோவென்ன (அப்படுக்கையிலேயித்யாதி) சாடு (அவனிப்படியித்யாதி) படி-ப்ரகாரமும், பூமியும், ஜீவநமும். பேசாதிரார்களிறே-வெறுமனிரார்களிறேயென்றபடி.

"ஆழியெழச்சங்கும்வில்லுமெழ" என்றவநந்தரம் "திசைவாழியெழ" என்கையாலே - திவ்யாயுதங்களுக்கு மங்களாசாஸநம் பண்ணுகிருர்களென்கிருர் (அவனுக்கித்யாதிவாக்யத்வயத்தாலே) ஆயுதங்களுக்கு மங்களாசாஸநம்பண்ணுகிறதுக்கு ப்ரமாணாந்தரம் (நின்கையிலித்யாதி) ஈஸ்வரவிஷயமாக மங்களாசாஸநம்பண்ணுகிருர்களென்று பாவாந்தரம் (திவ்யாயுதங்களினுமித்யாதி) இதுக்குரியாமகம் (திவ்யாயுதங்களுக்கித்யாதி) திருவுலகளந்தபோது மங்களாசாஸநம் பண்ணினர்களோவென்ன (எத்தவேழுலகமித்யாதி) திவ்யாயுதங்கள் கிளர்ந்ததுக்கு ப்ரமாணாந்தரம் (த்ரிவிக்ரமஇத்யாதி) "[illegible]" (வாமநோரக்ஷதுஸதாபவந்தம்யঃக்ஷணதபூத் । த்ரிவிக்ரமঃக்ரமாக்ராந்தத்ரைலோக்

யஸ்ஸ்ப்புரதாயுதஃ) இதி பஞ்சமேம்ஸே நந்தகோபஃ. இதில் (ஸ்ப்புரதாயுதஃ) என்ற திங்கு வேண்டுவது.

கைதொடராய் - கைவிடாதவராய். ஸஹாயபூதராயென்றுமாம். தரம்-பஹுமானம். பேரணி - சேநாவ்யூஹம். இதுக்கு த்ருஷ்டாந்தம் (ஒருவர்க்கித்யாதி) அஸ்த்தானே பயசங்கைபண்ணினதுக்கு விதுரனையே யன்றிக்கே மஹாராஜரையுங்காட்டுகிறார் (அநுகூலனித்யாதி) ப்ரதிகூலருண்டோ வென்ன (என்னிதுமாயமித்யாதி) பெரியாழ்வார் திருமொழி முதற்பத்து ஒன்பதாந்திருமொழி எட்டாம்பாட்டு. எடுத்தபாசுரத்துக்கர்த்தம் (நமுசிவந்தித்யாதி) மாயம்-வஞ்சநம். முன்னைய வண்ணமேகொண்டு - முற்பட்டவடிவையேகொண்டு. "மன்னு" என்றதுக்கர்த்தம் (திருவடிகளையித்யாதி) கீழே - பரிகைக்கு ஹேது சௌகுமார்யாதி வைலக்ஷண்ய மென்றருளிச்செய்து, ஹேத்வந்தரம் (அன்றேபிறந்தித்யாதி) அன்றேபிறந் தன்றேவளர்ந்த வ்யாபாரத்துக்குப் பரிந்தபேருண்டோவென்ன (சீராலித்யாதி) இப்பாட்டுக்கு பாவம் (உன்கையிலேயித்யாதி) "மார்பாரப்புல்கிநீயுண்டுமிழ்ந்த" என்றத்தைக்கடாக்ஷித்து (உன்கையிலே பருத்திபட்ட பன்னிரண்டும் படுகிறபூமியை) என்றது, இப்படி படவேணுமோ வென்றது - "சீராற்பிறந்து சிறப்பால்வளராது, பேர்வாமனாகாக்கால்" என்றத்தைக் கடாக்ஷித்து. பெரியதிருவந்தாதி பதினாறும் பாட்டு. இந்தப்பாட்டுக்கு - கீழே வ்யாக்யான மெழுதிற்று. பருத்திபட்ட பன்னிரண்டும் படுகையாவது - இஷ்ட சர்வ சேஷ்டாவிஷயமாகை.

அண்டம் குமிழியெழுகைக்கு வகை யருளிச்செய்கிறார் (இந்த்ரனுக்காகவித்யாதி) கணிசம் - எண்ணம். ஒண்மிதியில் - அழகியவடிவைப்பில், புனலுருவி - கீழாவரணஜலத்தையுருவி, ஒருகால்நிற்ப - ஒருதிருவடிநிற்க வித்யர்த்தஃ. திருநெடுந்தாண்டகம் அஞ்சாம்பாட்டு. அண்டத்துக்குக்கீழே ஜலமுண்டோ வென்ன (ஆவரணேத்யாதி) கழல் - கழற்கொடி. அவன் செயல் ரக்ஷணத்துக் குடலாயிருக்க, இப்படி கலங்கவேண்டுவானென்னென்ன (ரக்ஷகமானவித்யாதி) கறுவுதல் - ஆக்ரஹமும், கோபமும்.

"ஊழியெழ" என்றதுக்கு - பொல்லாக்காலம் போகவென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (மஹாபலியித்யாதி) (நல்லடிக்காலமாயிற்று) என்றது-அர்த்தாத்ஸித்தம். நல்லடிக்காலம் - நல்லவடியையுடையவனுடைய காலம், நன்மைக்கு மூலமானகாலம்.

"ஆழியெழ" என்று தொடங்கி "உலகங்கொண்டவாறே" என்று - ஆஶ்சர்யத்திலே யாதல், ஆறு - ஆஶ்சர்யம்; "அப்பன் - உலகங்கொண்டப்ரகாரம்-ஆழியெழ" என்று தொடங்கியாதல்; ஆறு-ப்ரகாரம், என்றிப்படி யிரண்டந்வய மருளிச்செய்கிறார் (மஹோபகாரகேத்யாதிவாக்யத்வயத்தாலே) அன்றிக்கே, "ஆழியெழ" என்றுதொடங்கி "உலகங்கொண்டவாறே, என்னப்பன்" என்னுதல்; இத்தையருளிச்செய்கிறார் (அப்பனப்பனென்று ஹ்ருஷ்டராகிறாராகவுமாமென்று) இந்த மூன்றுமந்வயமும்-முந்தினவந்வயவிவரணமாதல். "அப்பன்" என்றதுக்கு - ஜநகனென்றர்த்தாந்தரம் (இந்த்ரனுக்கித்யாதி)...........................................*

## இரண்டாம்பாட்டு.

ஆறுமலைக்கெதிர்ந்தோடுமொலியர
வூறுசுலாய்மலைதேய்க்குமொலிகடன்
மாறுசுழன்றழைக்கின்றவொலியப்பன்
சாறுபடவமுதங்கொண்டநான்றே.

## ஆறாயிரப்படி.

( ஆறு ) கடைந்தருளுகிறபோது மலைகளிற்காட்டில் கடலுக்கு கையாலே, ஆறுமலையைநோக்கி யோடுகிற வோசையும், பாம்பினுடம்பைச்சுற்றி மலையைத்தேய்க்கிற த்வநியும், பர்வதத்தைவலித்தபோதிடமும் வலமுமாய்ச் சுழன்று கோஷிக்கிற கோஷமும், என்னப்பன் நீர்கோதாம்படி பசைபடக்கடைந் தம்ருதம்வாங்கின நாளிவையெல்லா முளவாயினவென்று ஸமுத்ரமதநப்ரக்ரியையை யநுபவிக்கிறார்...... ...........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அம்ருதமதந வ்ருத்தாந்தத்தையநுஸந்தித்து சந்துஷ்டராகிறார்

அப்பன்-மஹோபகாரகனான சர்வேஶ்வரன். தேவர்களுக்கு, சாறு-மஹோத்ஸவம். பட - உண்டாம்படியாக. கடலைக்கடைந்து, அமுதம் - அம்ருதத்தை. கொண்ட-கொண்ட. நான்று-நாள். கடைந்தவேகத்தாலே, ஆறு - ஆறுகளானவை. மலைக்கு - தனக்குப் பிறப்பிடமானமலையைநோக்கி. எதிர்ந்து - எதிரே. ஓடும் - ஓடுகிற-ஒலி-ஒலியும். அரவு-வாசுகியாகிற பாம்பினுடைய. ஊறு-உடம்பை. சுலாய்-சுற்றி. மலை-மந்தரத்திலே. தேய்க்கும்-தேய்க்கிற. ஒலி - ஒலியும். கடைகையாலே, கடல். கடல். மாறு—இடம்வலமாகமாறி. சுழன்று - சுழன்று. அழைக்கின்ற - கூப்பிடுகிற. ஒலி-ஒலியும். ஆயிற்றின-ஆயிற்றின.

சாறு-உத்ஸவம். சாரமுமாம். நான்று-நாள். ஊறு-உடம்பு. சுலாய்-சுற்றி.

## ஈடு - இரண்டாம்பாட்டு.

சமுத்ரமதந வைசித்ரியை யநுஸந்திக்கிறார்.

( ஆறுமலைக்கெதிர்ந்தோடுமொலி ) கடலிலே மந்தரத்தை நட்டவாறே கடல்கொந்தளித்து, ஸஹ்யம்போய்த்தாழ்ந்துகொடுத்தது; நீரானது தாழ்ந்தவிடத்தே யோடக்கடவதிறே. ஆறுகளானவை மலையைக்குறித் தெதிரிட்டோடுகிறபோதை, த்வநியான திவர்க்குச்செவிப்படுகிறபடி. இவர்க்குக் காலத்ரயத்திலுமுள்ளதெல்லாம் தெரியும்படியிறே யவன்வெளிச்சிறப்பித்தது. ( ஆறுஸஹ்யங்களைநோக்கி யெதிரேயோடுகிற வோசையும். ) ( அரவூறுசுலாய்மலைதேய்க்குமொலி ) ஊறு - உடம்பு. சுலாய்-சுற்றி. வாசுகியினுடைய வுடலைச்சுற்றிக் கடைகிறபோதைச் சர சரவென்கிற த்வநியும். (கடல்மாறுசுழன்றழைக்கின்றவொலி) மந்தரத்தைக்கொடுபுக்குநட்டுத்திரித்தபோது, கீழ்கடல் மேல்கடலாய்க் கிடாய்ப்பாய்த்தல்போலே திரையோடு திரைதாக்கிக்கிளருகிற வொலியும். (அப்பன்) உபகாரகன். (சாறுபட) கடலில் நீர்கோதாம்படி ப்ரயோஜநமான வம்ருதமுண்டாக. சாறென்று - உத்ஸவமாய், தேவஜாதிக் குத்ஸவமுண்டாம்படியாகவென்னுதல்; சாறுபட - விழவுபடவென்றபடி. நீரிலே ரஸமானபசைபடவென்னுதல், உத்ஸவமாம்படியென்னுதல். (அமுதங்கொண்டநான்றே) அம்ருதமதநம்பண்ணினகாலத்தி லிவையெல்லாமுண்டாயிற்று ...........................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (ஆறித்யாதி) "சாறுபட" இத்யாதியைக்கடாக்ஷித்தவ தாரிகை (சமுத்ரேத்யாதி)

ஆறுமலைக்கெதிரேயோடுகைக்கு ஹேதுவேதென்ன (கடலிலேயித்யாதி) கொந்தளித்து - பொங்கி. போய்-மிகவும். மலைதாழ்ந்தா லங்கேயோடவேணுமோ வென்ன (நீரானதித்யாதி) சப்தார்த்தம் (ஆறுகளானவையித்யாதி) பூதகாலத்தில் த்வநி செவிப்படக்கூடுமோவென்ன (இவர்க்கித்யாதி) வெளிச்சிறப்பித்தது-ஜ்ஞாந வைசத்யத்தைப்பண்ணிக்கொடுத்தது.

தேய்க்கும்-கடைகிற.

திரித்தபோது - திருப்பிக்கடைகிறபோது. கீழ்கடல் மேல்கடலாயென்றது-கிழக்குத்தையில் நீர் மேற்கேபோக, மேற்குத்தையில் நீர் கிழக்கேவரவென்றபடி. கிடாப்பாய்ச்சல் - மேஷயுத்தம். அழைக்கின்ற-கிளருகிற.

சாறு - ஸாரம். பட-உண்டாக. அர்த்தாந்தரம் (சாறென்றித்யாதி) நான்று-அன்று.

அப்பன் சாறுபட வமுதங்கொண்டநான்று - ஆறு மலைக்கென்றுதொடங்கி, அழைக்கின்றவொலி, இவையெல்லாமுண்டாயிற்றின வித்யந்வயஃ ..................*

---

# மூன்றாம்பாட்டு.

---

நான்றிலவேழ்மண்ணுந்தானத்தவேபின்னு
நான்றிலவேழ்மலைதானத்தவேபின்னு
நான்றிலவேழ்கடறானத்தவேயப்ப
னூன்றியிடந்தெயிற்றிற்கொண்டநாளே.

## ஆறாயிரப்படி.

(நான்றில) என்னப்பன், ரசாதலகதையான பூமியைத் திருவெயிற்றிலே யிடந்தெடுத்தருளினபோது, சப்தத்வீபங்களும் சப்தகுலபர்வதங்களும் சப்தசமுத்ரங்களும் தந்தாமுடைய ஸ்த்தாநங்களிலே நிஸ்சலமாயிருக்கும்படி யெடுத்தருளினான்; இதென்ன வாஸ்சர்ய மென்னப்பனென்னப்ப னென்கிறார்..........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், பூம்யுத்தரண வ்ருத்தாந்தத்தை யநுசந்தித்து ப்ரீதராகிறார்.

அப்பன் - தன்வடிவை யழியமாறி, நீருக்கிறுயாதவராஹ வேஷத்தைக்கொண்ட மஹோபகாரகன். ப்ரளயாந்தர்க்கதையானபூமியை, ஊன்றி - அண்டகபாலத்திலொட்டு விடும்படிகுத்தி. இடந்து - இடந்து. எயிற்றில் - எயிற்றின்மேலே. கொண்ட - கொண்ட. நாள் காலத்தில். ஏழ் சப்தத்வீபரூபமான. மண்ணும் - பூபேதங்களானவை. நான்றில-நழுவாதே. தானத்த-ஸ்வஸ்த்தாநஸ்த்தங்களாயிற்றின. பின்

ஹும் - அதுக்குமேலே. அதுக்குநாரகமான, ஏழ்மலை - சப்தகுலபர்வதங்களும். நான்றில - சலியாதனவாய்க்கொண்டு. தானத்த - ஸ்வஸ்த்தாநஸ்த்தங்களாயிற்றின. பின்னும் - அதுக்குமேலே. ஏழ்கடல் - சப்தசமுத்ரங்களும். நான்றில - உடைந்தொழுகாதே. தானத்த - ஸ்வஸ்த்தாநஸ்த்தங்களாயிற்றின.........................*

## ஈடு - மூன்றும்பாட்டு.

மஹாவராஹ வ்ருத்தாந்தத்தை யநுசந்திக்கிறார்.

(நான்றிலவேழ் மண்ணும் தானத்தவே) ஏழுபூமியும் நாலாதபடி யெடுக்கை. சப்தத்வீபவதியான பூமியை யெடுக்கச்செய்தே, ஒன்றும் நாலாதே முன்புபோலே ஸ்வஸ்த்தாநத்திலே கிடக்கும்படி. இவன் பெரியவானைத் தொழிலைச்செய்யா நிற்கச்செய்தேயும், முன்பு போலே யொருகுறையற, உண்பாருடுப்பாராய்ச் செல்லுகிறபடி. ஆதாரமானவன்கூட நிற்கையாலே யிவற்றுக்கொரு குறைவாராதே. சப்தத்வீபமும் சலித்ததில்லை, ஸ்வஸ்த்தாநஸ்த்தங்களாயிற்றின.

(பின்னும்) அதுக்குமேலே. (நான்றிலவேழ்மலைதானத்தவே) பூமிக்காணியடித்தாப்போலே யிருக்கிற சப்தகுலபர்வதங்களும் ஒன்றுங்குலையாதே ஸ்வஸ்வஸ்த்தாநங்களிலே நிற்கும்படி. ஒரு கோத்ரஸ்கலநம் பிறந்ததில்லை. பின்னும் பின்னுமென்று வருகிறதுக்குக்கருத்து - இவற்றிலே யொரு வ்யாபாரமமையுங்கிடீர், அதுக்குமேலே யிவையும் செய்தா னென்கைக்காக.

(நான்றிலவேழ்கடல்தானத்தவே) அவைதாம் காடிந்யத்தாலே குலையாதே யொழிந்த தென்னவுமாமிறே, அதுவுமில்லையிறே யிதுக்கு; த்ரவத்ரவ்யமிறேஜலம். அதுவும் ஸ்வஸ்த்தாநத்திலே கிடக்கும்படியாக அவற்றின்காடிந்யமு மிவற்றின் த்ரவத்வமுமப்ரயோஜகம்; அவன்திருவுள்ளக்கருத்துயாதொன்று, அதுவேகார்யகரமாவதென்கை. இவையிப்படிகிடக்கிறது அவனவஹிதனாய்க்கொண்டு ரக்ஷிக்கும்போதோ வென்னில் (ஊன்றியிடந்தெயிற்றிற்கொண்டநாளே) மறுபாடுருவத்தைக்கும்படிகுத்தி, அண்டபித்தியினின்று மொட்டுவிடுவித்தெடுத்தெறட்டு, எயிற்றிலே யெற்றிக் கொண்டு வ்யாபரித்தபோது, "மண்ணெல்லாமிடந்தெடுத்து மதங்கள் செய்து" என்கிறபடியே. அவனிப்படி முக்யமாக ரக்ஷிக்கப்புக்காலவை சலிக்குமோ. அசலங்களோடு சலங்களோடு வாசியற ஸ்வஸ்த்தாநத்திலே நின்றன.......................................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றும்பாட்டு (நான்றிலவித்யாதி) "அப்பனூன்றியிடந்து" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை (மஹாவராஹேத்யாதி)

விவரணம் (சப்தேத்யாதி) "ஏழ்மண்ணும் - நான்றில - தானத்தவே" - சப்தத்வீபவதியான பூமியும் நழுவாதபடி ஸ்வஸ்த்தாநத்திலே கிடந்ததென்றபடி. நா

ன்றில - நாலாதபடி. சலியாதபடியென்றுமாம். நழுவாதபடி. சலியாமையின் சரமாவதி (இவன்பெரியவித்யாதி) ஆனைத்தொழில் - அதிமாநுஷவ்யாபாரம், ஸ்வாதந்த்ர்யக்ருத்யமும். இதுக்குஹேதுவேதென்ன ( ஆதாரமித்யாதி ) முன்புபோலே- ஸ்ருஷ்டிகாலம்போலே.

மண்ணைச்சொன்னவநந்தரம் மலையைச்சொன்னதுக்குபாவம் (பூமிக்கித்யாதி) ரஸோக்தி (ஒருவித்யாதி) கோத்ரஸ்கலநம் - பர்வதஸ்காலித்யம், நாமவ்யத்யாஸமென்று சாடு. கோத்ரம்-பர்வதமும். பேரும், கோத்ரமும். "பின்னும், பின்னும்" என்கிறது-ஓரொன்றே அசக்யமென்றபடி.

கீழ்ச்சொன்னவைபோலன்றிக்கே, நாலாமைக் கஸம்பாவிதமானத்தையும் நாலாதே ஸ்வஸ்த்தாநத்திலே கிடக்கும்படிபண்ணின சாமர்த்யத்தை யருளிச்செய்கிறார் (அவைதானித்யாதிநாலுவாக்யத்தாலே) கீழுக்தத்தால்பலிதம் (அவற்றினித்யாதி வாக்யத்வயம்)

அவஹிதனாய் - சாவதாநனாய். எயிற்றிலே - தம்ஷ்ட்ராயிலே. அப்படியூன்றியிடந்தானேயென்ன (மண்ணெல்லாமித்யாதி) பூமிப்பரப்படையவிடந்தெடுத்து ஈஸ்வரத்வத்தால்வந்த செருக்காலே மதகார்யமான வ்யாபாரங்களைப்பண்ணியென்றபடி. திருமொழி மூன்றாம்பத்து நாலாந்திருமொழி மூன்றாம்பாட்டு, " வையமேந்த " இத்யாதி. ரஸோக்தி (அவனித்யாதி) முக்யம்-முகசம்பந்தியும், ஸ்ரேஷ்டமும்.

கீழெல்லாவற்றையும் நிகமிக்கிறார் (அசலங்களோடித்யாதி)

அப்பனூன்றியிடந் தெயிற்றிற்கொண்டநாளே - நான்றிலவே ழித்யாரப்யாந்வயஃ.............................................................................*

---

# நான்காம்பாட்டு.

நாளுமெழநிலநீருமெழவிண்ணுங்
கோளுமெழவெரிகாலுமெழமலை
தாளுமெழச்சுடர்தானுமெழவப்ப
னூளியெழவுலகமுண்டவூணே.

## ஆறாயிரப்படி.

( நாளுமெழ ) * கலாமுஹூர்த்தாதிமயமான காலத்தையும், ப்ருதிவ்யாதி பஞ்சபூதங்களையும், சகல குலாசலங்களையும், நக்ஷத்ர ஜ்யோதிஸ்ஸுக்களையும், ப்ரளயகால ஸலில பூர்ணாபிபூதமான சமஸ்த ஜகத்தையுமநாயாஸேந ருஷணம்பண்ணினாப்போலே நிரவசேஷமாகவுண்டருளினானென்னப்ப னென்னப்ப னென்கிறார்...... ...........................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஜகந்நிகரணத்தை யநுசந்தித்து சந்துஷ்டராகிறார்.

நாளும் - திவஸாதிவிபாகம். எழ - நிலைகுலைந்துபோகவும். நிலநீரும் - ப்ருதிவீஜலங்களும். எழ - நிலைகுலைந்துபோகவும். விண்ணும் - ஆகாசமும். கோளும்-

க்ரஹங்களும். எழ - நிலைகுலைந்துபோகவும். எரிகாலும் - அக்நிவாயுக்களும். எழ-நிலைகுலைந்துபோகவும். மலை - பர்வதங்கள். தாள் - அடி. எழவும் - பறிந்துபோகவும். சுடர்தானும் - நக்ஷத்ராதி தேஜஃபதார்த்தங்களும். எழ - குலையவும். அப்பன் - ப்ரளயாபத்ஸகனான மஹோபகாரகன். ஊளியெழ - "பசித்துண்டான்" என்றுதோன்றும்படியாக. உலகம் - லோகத்தை. உண்ட - உண்ட. ஊண் - ஊண். ஏ-இருந்தபடியே.

கோள்-க்ரஹம். ஊளி-பசி. "உறிஞ்சினவோசை" என்பாருமுளர்.........*

## ஈ0 - நான்காம்பாட்டு.

மஹாப்ரளயத்தில் ரக்ஷணப்ரகாரத்தை யருளிச்செய்கிறார். "'இப்போதிருக்கிறாப்போலே மார்க்கண்டேயன் திருவயிற்றினுள்ளேயொன்றுமழியாதே யிருக்கக்கண்டான்' என்கிற புராணாநுரூபமாக வவாந்தரப்ரளயத்தை யிவ்விடத்தே யருளிச்செய்கிறாராகவுமாம்" என்றருளிச்செய்வர்.

(நாளுமெழ) காலவ்யவஸ்த்தைபோக. "நாஹோ ந ராத்ரிஃ" (நாஹோராத்ரிஃ) என்னும்படியே. எழ - பேர. ஆண்டென்றும், மாசமென்றும், நாளென்றும், கலையென்றும், காஷ்ட்டையென்றும் சொல்லுகிறவையெல்லா மாதித்யனுடைய கத்யாகதியாலே வருகிறவையிறே; வ்யவச்சேதகனான வாதித்யனுள்ளேபுக்கால் வ்யவச்சேத்யமான விவையும் போமித்தனையிறே. (நிலநீருமெழ) காரணங்களோடு கார்யங்களோடுவாசியற வுள்ளேபுக. கார்யமுள்ளவிடத்தே காரணமநுவர்த்திக்கக் காணாநின்றோம்; "மாமாயை - மங்கவொட்டு" என்று - ப்ரக்ருதிதத்த்வத்தைச் சொல்லாநிற்கச்செய்தே, "இங்கிவ்வுயிரேய்பிரகிருதி" என்றுசொல்லாநின்றாரிறே - இதுதான் காரணத்திலே போகாமைக்காக. உயிரேய் பிரகிருதியென்கிறார் - சேதநஸம்ஸ்ருஷ்டையான ப்ரக்ருதியென்று தோற்றுகைக்காக. (விண்ணுங்கோளுமெழ) ஆகாசமு மங்குள்ள க்ரஹங்களுமெழ. (எரிகாலுமெழ) அக்நிதத்த்வமும் வாயுதத்த்வமும்போக. (மலைதாளுமெழ) பர்வதங்களடியோடே பறிந்துள்ளேபுக. வேர்க்குருத்தோடே பறிய. (சுடர்தானுமெழ) அநுக்தமான தேஜஸ்தத்த்வங்களுமுள்ளேபுக. (அப்பனூளியெழ) ஊளி-சப்தம். எழவென்றது - தோற்றவென்றபடி. ஓரோகோஷபங்களுண்டானால் நம்முடைய வடையவளைந்தானுக்குள்ளே புகும்போது திருவாசலில் பிறக்கு மாரவாரம்போலே, திருவயிற்றிற்புகுகிறபோது ப்ராணிகளுக் குண்டான சம்ப்ரமத்வநிகள் கிளர. அன்றியே, "'இவற்றை யுறிஞ்சுகிறபோதை த்வநிகாண்' என்றம்மாள்பணிக்கும்படி" என்றருளிச்செய்வர். அத்தால் நினைக்கிறது - ஈச்வரத்வப்பிடராலன்றியே பத்தும்பத்தாக வாச்ரிதரக்ஷணமேயா யிருக்கிறபடி..................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு (நாளுமித்யாதி) "உண்ட" என்று - சாமாந்யசப்தமாகையாலே, "அத்தா சராசர க்ரஹணாத்" (அத்தாசராசரக்ரஹணாத்) என்கிறபடியே

மஹாப்ரளயமாதல், அவாந்தரப்ரளயமாதலென்றவதாரிகாத்வயம் (மஹாப்ரளயத் திஸித்யாதிவாக்யத்வயத்தாலே) "ததபஸ்யமஹம்ஸர்வம்குக்ஷௌதஸ்யமஹாத்மந:" (ததபஸ்யமஹம்ஸர்வம்குக்ஷௌதஸ்யமஹாத்மந:) என்றதைப்பற்ற (திருவயிற்றினுள்ளேயென்றது)

நாளுமெழ-காலம்போகவென்றுவிவக்ஷித்து, "அநாதிர்ப்பகவாந்கால:" (அநாதிர்ப்பகவாந்கால:) என்ற நித்யமான காலம் போகக்கூடுமோவென்ன (காலவ்யவஸ்த்தைபோக) என்கிறார். காலவ்யவஸ்த்தைதா னின்னதென்னுமத்தையும், அவ்வ்யவஸ்த்தைக்கு ஹேதுவின்னதென்னுமத்தையும், ஹேதுபூத னுள்ளே புகுருகையாலே கார்யமான வ்வ்யவஸ்த்தையும் போமென்னுமத்தையு மடைவேயருளிச்செய்கிறார் (நாஹோநராத்ரிரித்யாதி வாக்யத்ரயத்தாலே) "நாஹோநராத்ரிர்நநபோநபூமிர் நாஸீத்தமோஜ்யோதிரபூந்நசாந்யத் । ஸ்ரோத்ராதிபுத்த்யாநுபலப்தமேகம் ப்ராதாநிகம்ப்ரஹ்மபுமாம்ஸ்ததாஸீத்" (நாஹோநராத்ரிர்நநபோநபூமிர் நாஸீத்தமோஜ்யோதிரபூந்நசாந்யத் । ஸ்ரோத்ராதிபுத்த்யாநுபலப்தமேகம் ப்ராதாநிகம்ப்ரஹ்மபுமாம்ஸ்ததாஸீத்) இதி ப்ரதமேம்ஶே த்விதீயே. நாஹோநராத்ரி: என்றது - மஹாப்ரளயபக்ஷத்துக்கு ப்ரமாணம். அவாந்தர ப்ரளயபக்ஷத்துக்கு ப்ரமாணமாகில், நாஹோநராத்ரி: என்றமாத்ரமே வேண்டுவது.

பஞ்சபூதங்க ளண்டத்துக்குப் புறம்பானபோது காரணங்களாய், அண்டத்துக்குள்ளானபோது கார்யங்களாயிருக்குமென்றிட்டு (காரணங்களோடு கார்யங்களோடு வாசியற) என்கிறார். "நிலநீருமெழ" என்றதிலே - கார்யமான பூதங்களையன்றே சொல்லுகிறது. காரணங்களையு மிதுக்கர்த்தமாக்கும்போது கார்யத்திலே காரணமுண்டோவென்ன (கார்யமுள்ளவிடத்தேயித்யாதி) இதுக்கு நியாமகமேதென்ன (மாமாயையித்யாதி) அதாவது - "மங்கவொட்டுன்மாமாயை" என்று-மூலப்ரக்ருதியைச் சொல்லச் செய்தேயும், "இங்கிவ்வுயிரேய்பிரகிருதி" என்று-ஸ்த்தூலசரீர விசிஷ்டசேதந ஸம்ஸ்ருஷ்ட ப்ரக்ருதியென்று காரணம்ஶத்தைப்பிரித்துச்சொன்னாரிறே - இந்த காரணம்ஶமானது மூலப்ரக்ருதியாய்ப் போகாமைக்காகவென்றபடி. இதுதானென்றது - ஸ்த்தூலசரீர விசிஷ்டசேதந ஸம்ஸ்ருஷ்டகாரணம்ஶமான விந்தப்ரக்ருதிதான். காரணத்திலே போகாமைக்காகவென்றது - மூலப்ரக்ருதியாய்ப் போகாமைக்காகவென்றபடி, "இதுதான் காரணத்திலே போகாமைக்காக" என்றத்தை விவரிக்கிறார். (உயிரேய்பிரகிருதியித்யாதி) ஏய்கை-பொருந்துகை. அயமர்த்த:; மாமாயையென்று - ப்ரக்ருதியைச்சொல்லச்செய்தே, உயிரேய் பிரகிருதியென்று - புந: ப்ரக்ருதியைச் சொன்னது - இந்த கார்யமானசரீரத்திலே காரணமான மூலப்ரக்ருதி யநுவர்த்திக்கிறதென்று தோற்றுகைக்காகவென்று. ஆக, இத்தால் - கார்யங்களிலும் காரணம்ஶ மநுவர்த்திக்கு மென்றபடி.

"கோள்" - ஜ்யோதிஸ்ஸு. "எழ" - போக.

விவரணம் (வேர்க்குருத்தோடேயித்யாதி)

"ஊளி" - த்வநி. இங்கே, "எழ" என்றது - கிளரவென்றபடி. ஈஶ்வரத்வப்பிடர் - ஈஶ்வரத்வத்தாலே வந்த கர்வம்.

நாளுமெழ வென்று தொடங்கி, உலகமுண்டவூணே யித்யந்வய:. உண்டவூணே - உண்டவூணிருந்தபடியே யென்றபடி.........................................*

# ஐந்தாம்பாட்டு.

ஊனுடைமல்லர்ததர்ந்தவொலிமன்ன
ரானுடைச்சேனைநடுங்குமொலிவிண்ணு
ளேனுடைத்தேவர்வெளிப்பட்டவொலியப்பன்
கானுடைப்பாரதங்கையறைபோழ்தே.

## ஆறாயிரப்படி.

(ஊனுடைமல்லர்) அதிபல பராக்ரமரான மல்லருடைய வித்வம்ஸந த்வநியும், சௌர்ய வீர்யாதி பரிபூர்ணஸைந்ய ஸஹிதரான ராஜாக்களுடைய பயஜநிதமான மஹாகோஷமும், ப்ரதிதரான ப்ரஹ்மேஸாநாதிகளுடைய ஸ்வவிஷய ஸ்துதிகோஷமு மெழும்படியாக, தர்ஸநீயமான மஹாபாரத யுத்தத்திலே யணிவகுத்தென்னப்பன் சாரத்யம்பண்ணினபடி யென்னென்கிறார்........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், பாரதஸமரப்ரவர்த்தகத்வத்தை யநுஸந்திக்கிறார்.

அப்பன்-ஆஸ்ரிதபக்ஷபாதியானக்ருஷ்ணன். கானுடை-தர்ஸநீயமான. பாரதம்-பாரதத்தை. கை-கைவகுத்து. அறை-பொருத. போழ்து-போது. ஊண்-பலகரமானவூணை. உடை-உடைய. மல்லர்-பெருமிடுக்கரானமல்லரானவர்கள். த்வந்த்வயுத்தம்பண்ணி, ததர்ந்த-நெரிந்துவிழுகிற. ஒலி-ஓசையும். மன்னர் - ராஜாக்களுடைய. ஆண்-வீரபுருஷரை. உடை-உடைத்தான. சேனை-ஸேநைகளானவை. க்ருஷ்ணபலாநுசந்தாநத்தாலே யஞ்சி, நடுங்கும்-நடுங்குகிற. ஒலி-சப்தமும், விண்ணுள்-ஆகாசத்திலே. ஏண்-தந்தாம்பதமர்யாதைகளை. உடை-உடைய. தேவர் - ப்ரதாநதேவர்கள். யுத்ததர்ஸநார்த்தமாக, வெளிப்பட்ட - வெளிப்பட்டுக்கொண்டாடுகிற. ஒலி-ஓசையும். ஆயிற்று-ஆயிற்று.

ததர்தல் - நெரிதல்........................................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

பாரதசமர வ்ருத்தாந்தத்தை யருளிச்செய்கிறார்.

( ஊனுடைமல்லர்ததர்ந்தவொலி ) ஏற்றிலக்கை பெற்றுண்கிற மிடுக்கையுடையரான துர்யோதநன் பரிகரம் தேர்க்காலிலே நெரிந்தவோசை. மல்லென்று - மிடுக்கு. மிடுக்கையுடைய பரிகரமென்றபடி. மல்லர்க்கு மிடுக்குண்டாகைக்காக துர்த்ரவ்யங்களையும் மாம்ஸங்களையும்புஜிப்பித்து ஆட்டத்துவெளியிலே நிறுத்தினுயிற்று நலிகைக்காக; அத்தையறிந்து பையல்களைத் தேர்க்காற்கீழேயிட்டு நெரித்தபோதை த்வநி. பலத்தைப்போரப்பொலியச்சொல்லிவைத்து, ததர்ந்தவென்கிறார்கானும் - பசளைக்கலம் நெரித்தாப்போலே அநாயாஸேந நெரித்தபடியைப்பற்ற. (மன்னரித்யாதி) ராஜாக்களுடைய வாண்பிள்ளைத்தனத்தையுடைத்தானசேனை, " க்ருஷ்ணன் சாரத்யம்பண்ணுவதாக வேறினான் " என்று

கேட்டவாறே "நாம்முடிந்தோமன்றே" என்றவ்வளவில் குடல்குழம்பி க்கூப்பிட்டவொலி. ஆண்பிள்ளைகளான பீஷ்மத்ரோணாதிகளிறே தூசி யேறினபேர். (விண்ணுளேனுடைத்தேவர் வெளிப்பட்டவொலி) சர் வேச்வரனோடொக்க இன்னாரின்னாரென்னும்படி தந்தாமைச் சமையவி ட்டுக்கொண்டபிமாநிகளா யோரோவிருப்பிடங்களையுடையராயிருக்கிற தேவஜாதி, கண்ணுக்குத்தோற்றும்படி நின்று ஸ்தோத்ரம்பண்ணுகிற த்வநி. "ஸப்ரஹ்மாஸஶிவஸ்ஸேந்த்ர:" (ஸப்ரஹ்மாஸஶிவஸ்ஸேந்த்ரஃ) என்றொருகோவையிலேயெண்ணலாம்படியிருக்கிறவர்கள். இந்த அந்த ரஜாதிகளைத் தன்னுடனே ஸஹபடிக்கலாம்படி தன்னைத்தாழவிட்டுவைக் குமே! தன் சௌலப்யத்தாலே. (அப்பன்) பூபாரநிர்ஹரணம்பண்ணின வுபகாரகன். (காணுடையித்யாதி) சக்ஷுராதி கரணங்களைப்படைத்தது க்கு ப்ரயோஜநம் அற்றைநிலையைக்காண்கையிறே. சேநாதூளியும், கை யுமுழவுகோலும் சிறுவாய்க்கயிறும், நாற்றின திருவடிகளுமாய் நிற்கிற நிலையிறே. "மாம்" என்கிறநிலையிறேயது. தர்ஶநீயமானபாரதம். (கைய றைபோழ்து) கையுமணியும்வகுத்தங்கோடிங்கோடுலாவிப்படைபொரு த்தி, "நீங்களின்னபடிசெய்யக்கடவீர்கோள். நாங்களின்னபடிசெய்யக்க டவோம்" என்று கைதட்டிவிட்டபோ தித்த்வநியெல்லாமுண்டாயிற்று.

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (ஊனுடையித்யாதி) "காணுடைப்பாரதம்" இத்யாதியைக் கடாக்ஷித்தவதாரிகை (பாரதேத்யாதி)

ஏற்றிலக்கை-அதிகசம்பளம். மல்லர்-மிடுக்கையுடையவர்கள். ததர்ந்த-நெ ரிந்த கீழே. "மல்லர்" என்று - மிடுக்கையுடையவர்களென்றருளிச்செய்து, ஸ்வபா வமான மல்லரென்றர்த்தாந்தரம் (மல்லர்க்கித்யாதி) "ஊனுடைமல்லர்" என்றது க்கு - பலகரமான வூணையுடைய மிடுக்கையுடையவர்களென்று முந்தினவர்த்தம். பலகரமான வூணையுடைய மல்லரென்றிரண்டாமர்த்தம். ஆட்டத்துவெளி - வையா ளிவிடுகிறவெளி. "ஊனுடைமல்லர்" என்று - இவர்களைவர்ணித்து, "ததர்ந்த" என் றதுக்குபாவம் (பலத்தையித்யாதி) பசளைக்கலம்-பச்சைப்பானை.

"ஆணுடை" என்கிறதாரையென்ன (ஆண்பிள்ளைகளானவித்யாதி)

"ஏணுடை" என்றதுக்கு - உயர்த்தியுடையவென்றர்த்தம் (சர்வேஸ்வரனோ டித்யாதி) சமையவிட்டுக்கொண்டு - சுக்ருதவிசேஷத்தாலே யாக்கிக்கொண்டு. அ தாவது-உத்க்ருஷ்டராம்படி பண்ணிக்கொண்டென்றபடி. "ஏண்" என்றதுக்கு-எ ண்ணிக்கையென்றர்த்தாந்தரம் (ஸப்ரஹ்மேத்யாதி) ஏண் - உயர்த்தியும், எண்ணிக் கையும். சர்வேஸ்வரனோடொக்க வெண்ணலாமோ வீஸ்வராபிமாநிகளானவர்களை யென்ன (இந்தவந்தரஜாதியித்யாதி) இந்தவந்தரஜாதிகளையென்றது - சாடு; ஆகாச த்திலேபிறந்தவர்களென்று ஸ்வபாவார்த்தம், ஹீநஜாதியென்று த்வநி.

"காணுடை-" தர்ஶநீயமான. பாரதஸமரம் காட்சியை யுடைத்தாயிருக்கு ம்படியை யருளிச்செய்கிறார் (சக்ஷுராதீத்யாதி) அற்றைநிலை - அப்போதையில்நி லை. "அற்றைநிலை" என்றதின்விவரணம் (சேநாதூளியுமித்யாதி) அந்நிலைக்கு ப்ராப் யத்வமாத்ரமேயன்றிக்கே, ப்ராபகத்வமு முண்டென்கிறார் (மாமென்கிறவித்யாதி)

"கையறைபோழ்து" என்றதுக்குபாவம் (கையுமணியுமித்யாதி) கையறைபோழ்து-(கைதட்டிவிட்டபோது) கையறைகை-கைதட்டுகை. கையுமணியும் வகுத்து-படையில் வ்யூஹவிபாகம்பண்ணி.

அப்பன்காணுடைப்பாரதம் கையறைபோழ்து-இத்வவிகளெல்லா முண்டாயிற்றினவென்றந்வயம் ..........................................................*

---

# ஆறும்பாட்டு.

போழ்துமெலிந்தபுன்செக்கரில்வான்றிசை
சூழுமெழுந்துதிரப்புனலாமலை
கீழ்துபிளந்தசிங்கமொத்ததாலப்ப
ஞழ்துயர்செய்தசுரனைக்கொல்லுமாறே.

## ஆருயிரப்படி.

(போழ்து) பஶ்சிம சந்த்யாசமயத்திலே சகலபுவன விவரமும் ருதிரபூரபூரிதமாம்படி, மேருசிகரத்திலேயேறி யொரு ஸிம்ஹமானது மேருசிகரத்தைப் பிளந்தாப்போலே, ஹிரண்யனை வ்யதிதனும்படி பண்ணி யென்னப்பன் பிளந்தருளினபடி யென்னென்கிறார்..................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஹிரண்யவத வ்ருத்தாந்தத்தை யநுசந்திக்கிறார்.

போழ்து - திவஸம். மெலிந்த - க்ஷயித்தவளவிலே. புன் - இளம். செக்கரில் - செக்கர்போலே. வான் - ஆகாசமும். திசை - திக்குக்களும். சூழும் - சூழ. எழுந்து - கிளம்பி. உதிரப்புனல் - ரக்தஜலம். ஆ - ஆம்படியாக. அப்பன் - ஆஶ்ரிதோபகாரகனான நரசிம்ஹரூபியானவன். ஆழ்துயர்-அதிசயிததுஃகத்தை. செய்து-விளைத்து. அசுரனை - அஸுரனான ஹிரண்யனை. கொல்லும் - கொல்லும். ஆறு-ப்ரகாரம். மலை - மலை. கீழ்து - கீழ்தாம்படி. பிளந்த - பிளந்த. சிங்கம்-சிங்கத்தை. ஒத்தது - ஒத்திருந்தது.

புன்செக்கரில் - புன்செக்கரான ஸந்த்யாகாலத்திலென்றுமாம்.............*

## ஈடு - ஆறும்பாட்டு.

ஹிரண்யவத வ்ருத்தாந்தத்தை யருளிச்செய்கிறார்.

(போழ்துமெலிந்த) "ஷலிதப்ராயொவாஸரஃ" (பலிதப்ராயோவாஸரஃ) என்னுமாபோலே, பொழுது போகாநிற்கச் செய்தே. (புன்செக்கரில்) செக்கர்வானமிடுகிறவளவிலே. அவன் வரத்திலகப்படாத ஸந்த்யாகாலத்திலே. "இராப்படற்பேன், பகல் படற்பேன்" என்று வரங்கொண்டானே. (வான்திசைசூழு மெழுந்துதிரப்புனலா) பரப்பையுடைத்தானவாகாசம், திக்குக்களடங்கலும், பள்ளங்கண்ட விடமெங்கும் வெள்ளம் பரக்குமாபோலே, ருதிரமானது கொழித்துப் பரக்கும்படி. (மலைகீழ்து பிளந்தசிங்கமொத்ததால்) ஒருமலையைக் கீழேயிட்டுக்கொ

ண்டு மேலேயிருந்து அத்தைப்பிளந்த ஸிம்ஹமென்னுதல். அன்றிக்கே, கிழித்துப்பிளந்த ஸிம்ஹம். மகிழ்ந்துபிளந்த ஸிம்ஹமென்றுமாம். ( மகிழ் – அநாயாசத்தால்ஸித்தம். அதாவது - இரண்டு கூறுக்கிப் பிளந்த சிம்ஹமென்கை. ) "இரண்டுகூறுசெய்துகந்தசிங்கம்" என்னக்கடவதிறே. ஒக்கப்பிளந்த சிங்கமொத்ததால். ( கீழ்ந்து - உகந்து. ) (அப்பனூழ்துயர்செய்து) நரஸிம்ஹத்தினுடைய மொருந்தமுகத்தைக்கண்டபோதே, மேல்போயநுபவிக்கக்கடவ வநுபவமடைய வப்போதே யநுபவித்தற்றுன். அநாதிகாலம் பகவத்பாகவத விஷயங்களிலேபண்ணிப்போந்த ப்ராதிகூல்யமடைய அரைக்ஷணத்திலே யநுபவித்தற்றபடி. மிகவும்துஃகத்தைவிளைத்து. (அசுரரைக்கொல்லுமாறே) அசுரனைக்கொன்றபடி. இத்தால் சொல்லிற்றாயிற்று - சர்வசாதாரணனாய் நிற்கும்நிலையொழிய, பித்ராதிகள் முகமாக ப்ரஜைகள் பக்கலிலே வத்ஸலனாய் நிற்பதொருநிலையுமுண்டிறே ; அது குலைந்தா லவன் சத்ருவாயும்நிற்குமிறே, அப்போது மிவன்றான் முன்னின்று ரக்ஷிக்குமென்கை. இத்தாலும்சொல்லிற்றாயிற்று - ஆபத்துக்கனத்ததனையும் கடுகவந்து ரக்ஷிக்கு மென்கை. தமப்பன் பகையாக வுதவினவன், அவனிலண்ணியனை தான் தனக்குப்பகையானா லுதவச்சொல்லவேணுமோ. "ஆத்மைவ ரிபுராத்மந:" ( ஆத்மைவ ரிபுராத்மந: ) என்கிறபடியே தனக்குத்தானேயிறே ஶத்ரு. ..............*

## ஜீயர் அரும்பதம்.

ஆரும்பாட்டு. (போழ்தித்யாதி) "ஆழ்துயர்செய்தசுரரைக்கொல்லுமாறே" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை (ஹிரண்யேத்யாதி)

"போழ்துமெலிந்த" என்றதுக்கு ஸப்ரமாணமாகவர்த்தம் (பலிதப்ராயஇத்யாதி) "திவஸம் க்ஷயித்தவளவிலே" என்னுமையில் சப்தார்த்தம். மெலிந்த-க்ஷயிக்கிறவளவிலே யென்றபடி. புன்செக்கரில் – இளம் செம்மான மிடுகிறவளவிலே யென்றபடி. விவரணம் ( அவன்வரத்திலித்யாதி ) அப்படி வரமுண்டோவென்ன ( இராவித்யாதி ) படற்பேன் - படக்கடவேனல்லே னென்றபடி.

"சூழும் - வான்திசை - எழுந்து" என்றந்வயித்தர்த்தம் ( பரப்பையித்யாதி ) "சூழும்-வான்-" பரப்பையுடைத்தான வாகாசம், திக்குக்கள், கொழித்து ரக்தஜலமாம்படி யென்று சப்தார்த்தம். உதிரம்-ரக்தம். புனல்-ஜலம். "புனலா"என்றது - புனலாம்படி யென்றபடி. எழுந்து-கொழித்தென்னுதல், கிளர்ந்தென்னுதல்.

முந்தினவர்த்தத்துக்கு, "மலைகீழ்து" என்றது - மலையைக் கீழே யிட்டுக்கொண்டென்றபடி. த்விதியார்த்தத்துக்கு, மலையையநாயாஸேந கிழித்தாப்போலே யிரண்டு கூறுகப் பிளந்த ஸிம்ஹம்போலே யென்று சப்தார்த்தம். மூன்றுமர்த்தத்துக்கு ; "மரையிதழ்புரையும்சேவடி" என்று, தாமரையை - மரையென்றுப்போலே தலைக்குறைத்தலாய் மகரம் லோபித்து ; "நீட்டுவழிநீட்டல்" என்னும் ந்யாயத்தாலே ஈகரம்வந்து,கீழ்து என்றுகிடக்கையாலே, மகிழ்ச்சியைச்சொல்லுகிறது. ஆக, மலையைப்பிளந்தாப்போலே மகிழ்ந்துபிளந்த ஸிம்ஹமென்றுமூன்றுமர்த்தம். "கிழித்துப்பிளந்த" என்ற விரண்டாமர்த்தத்துக்கு ப்ரமாணம் (இரண்டுகூறித்யாதி) இரண்டுகூறுகப் பிளந்துகந்த சிங்கமென்றபடி. திருச்சந்தவிருத்தம் அறுபத்தி

ரண்டாம்பாட்டு. "கரண்டமாடு" இத்யாதி. "இரண்டுகூறுசெய்து" என்றத்தால் பலிதம் (ஒக்கப்பிளந்தவித்யாதி) ஒக்கப்பிளந்த - சமபாகமாகப் பிளந்தவென்றபடி. ஆக, "கீழ்து" என்றதுக்கு - கீழேயிட்டுக்கொண்டென்றும், கிழித்தென்றும், மகிழ்ந்தென்று மர்த்தத்ரயம்.

"ஆழ்துயர்செய்து" என்றதுக்கு பாவம் (நரஸிம்ஹத்திறுடையவித்யாதி) மொருந்த - ஹுறுமண்டின. ஆழ்துயர்செய்து - அதிசயிததுஃகத்தை விளைத்தென்று சப்தார்த்தம். விவரணம் (அநாதிகாலமித்யாதி) ப்ராதிகூல்யமடைய-ப்ராதிகூல்யபலமடைய வென்றபடி. இத்தால் பலித்தவர்த்த மின்னதென்கிறார் (இத்தாலித்யாதி) இதிலும் பலித்தவர்த்தம் (இத்தாலுமித்யாதி) ஹிரண்ய நிரஸநம் சொல்லுகிறதுக்கு ப்ரயோஜநமருளிச்செய்கிறார் (தமப்பனித்யாதி) தான் தனக்குப்பகையோவென்ன, அதுக்கு ப்ரமாணம் (ஆத்மைவேத்யாதி) "உத்ரேதாத்மநாத்மாநம் நாத்மாநமவஸாதயேத் । ஆத்மைவ ஹ்யாத்மநோ பந்துராத்மைவ ரிபுராத்மந:" (உத்தரேதாத்மநாத்மாநம்நாத்மாநமவஸாதயேத் । ஆத்மைவஹ்யாத்மநோபந்து ராத்மைவரிபுராத்மநஃ) இதி பகவத்கீதாஸு ஷஷ்டே.

அடைவே யன்வயம்..........................................................*

# ஏழாம்பாட்டு.

மாறுநிரைத்திரைக்குஞ்சரங்களின
நூறுபிணமலைபோற்புரளக்கட
லாறுமடுத்துதிரப்புனலாவப்ப
னீறுபடவிலங்கைசெற்றநேரே.

## ஆறாயிரப்படி.

(மாறுநிரைத்து) சாரிகைவருகிற சைக்ர்யாதிசயத்தாலே சர்வதிக்குக்களிலும் நின்று விட்ட திருச்சரங்கள் யுகபதேவதன்னிலே சந்தித்திரைக்கும்படியாகவும், ராக்ஷஸசரீரங்கள் * சின்நமாம்படியும் பின்நமாம்படியும் சரார்தக்தமாம்படியும் ப்ரபக்நமாம்படியும் சஸ்த்ரபீடிதமாம்படியும், ருதிரவெள்ளத்தாலே கடலெல்லாம் நிறைந்தாறுகளிலே யெதிர்க்கும்படியும் சரவர்ஷத்தைவர்ஷித்து என்னப்பன் பொடிபட விலங்கையைச்செற்றானென்கிறார்.........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், லங்காபங்க ப்ரகாரத்தை யநுசந்திக்கிறார்.

சாரிகைதிரிந்தகடுமையாலே, மாறு-எதிரெதிராக. நிரைத்து - நிரைத்து. இரைக்கும்-சப்திக்கிற. சரங்கள்-சரங்களாலே. இனம்-இனமினமாக. நூறு-நூறுநூறும்படி. பிணம்-ராக்ஷஸசவங்களானவை. மலைபோல்-மலைபோலே. புரள-புரண்டு விழவும். ஆறு-ஆறுகளாலேசென்று. மடுத்து-மடுத்து. கடல்-கடல். உதிரப்புனல்-உதிரப்புனல். ஆ-ஆம்படியாகவும். அப்பன்-ஆஶ்ரிதோபகாரகனான சக்ரவர்த்திதிரு

மகனுனவன். இலங்கை-லங்கையை. நீறுபட-பஸ்மசாத்தாம்படி. செற்ற-பொருத. நேர்-செவ்வையிருந்தபடி.

நூறுதல் - நஶித்தலாகவுமாம் ........................................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

ராமவ்ருத்தாந்தத்தையருளிச்செய்கிறுர்.

(மாறுநிரைத்திரைக்கும்சரங்கள்) சாரிகைவந்தசடக்கு, நாலுதிக்கும் விட்டவம்புகளெதிரம்பாய் ஒன்ருேடொன்று பொருது கலார் கலார் என்று த்வநிக்கிற த்வநி, கடலிரைத்தாப்போலே யிராநின்றது. சாரிகைவந்த சடக்குத் தன்னில்தா னெதிரம்புகோத்ததுகாணும். (இனநூறு பிணமலைபோல்புரள) நூறுநூருக இனமினமான பிணங்களானவை, அம்புபட்டுருவின சடக்காலே யுயிரோரிடத்தொதுங்கப்பெருதே யிரண்டுதுண்டத்திலும் கலந்து மலைபோலே கிடந்துதுடிக்கிறபடி. (கடலாறுமடுத்துதிரப்புனலா) "ஆபூர்யமாணமசலப்ரதிஷ்டம்" (ஆபூர்யமாணமசலப்ரதிஷ்டம்) என்று புக்கதெல்லாங் கொண்டிருக்கக்கடவ கடல், ருதிரவெள்ளத்தாலே நிரம்பி ஆறுகளிலே மடுக்கும்படி. "வையமூடுபெருநீரில்மும்மைபெரிதே" என்ருரிறே. (நீறுபட) "ஶ்மஶாநஸத்ருஶீ" (ஶ்மஶாநஸத்ருஶீ) என்று சொன்னபடியே பஸ்மமாம்படியாக. (இலங்கைசெற்றநேரோ) (நேர்) பொழுதென்றும், நேரமென்றும் - காலபரம். இலங்கைசெற்றபொழுது-மாறுநிரைத்திரைக்கும்சரங்கள் என்றந்வயம். அன்றிக்கே, இலங்கையைச்செற்ற வாய்ப்பென்னுதல். மாயாப்ரயோகத்தாலல்ல, செவ்வைப்பூசலிலே நின்றுகிடீ ! ரிலங்கையையழித்ததென்னுதல். நேர்-நேராகவென்னுதல். அப்போது, ஏகாரம்-தேற்றேகாரம். ஆர்ஜவத்தாலே யிலங்கைசெற்றது........................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (மாறித்யாதி) "இலங்கைசெற்றநேரோ" என்றத்தைக்கடாக்ஷித்தருளிச்செய்கிறுர் (ராமேத்யாதி)

"சரங்கள்-மாறுநிரைத்திரைக்கும்" என்றந்வயிப்பது. சரங்களெதிரேகலந்து சப்திக்குமென்று சப்தார்த்தம். மாறு-எதிர். நிரைத்து - கலந்து. மாருகநிரைத்திரைக்கும் ப்ரகாரத்தையருளிச்செய்கிறுர் (சாரிகைவந்தவித்யாதி) சாரிகைவந்தசடக்கு - மண்டலாகாரகதியில்வேகம். ரஸோக்தி (சாரிகையித்யாதி)

பிணங்கள் புரளுகைக்கு ஹேதுவருளிச்செய்கிறுர் (நூறுநூருகவித்யாதி) சடக்காலே-வேகத்தாலே.

கடலானது ரக்தஜலத்தாலேநிரம்பி ஆறுகளிலே யெதிர்த்தோடும்படி யென்று சப்தார்த்தம். "புனலா" என்றது - புனலாலேயென்றபடி. (நிரம்பி) இத்யத்யாஹார்யம். ஆறுமடுத்து - ஆறுகளிலேயெதிர்த்தோடும்படி, மடுத்தல்-ப்ரவர்த்தித்தலாய், ப்ரவஹிக்கையென்றபடி. "கடலாறுமடுத்து" என்றதுக்குபாவம் (ஆபூர்யமாணமித்யாதி) "ஆபூர்யமாணமசலப்ரதிஷ்டம் ஸமுத்ரமாப: ப்ரவி

ஸமுத்ரமாப꞉ ப்ரவிஶந்தி யத்வத் । தத்வத்காமா யம் ப்ரவிஶந்தி ஸர்வே ஸ ஶாந்திமாப்நோதி ந காமகா மீ" (ஆபூர்யமாணமசலப்ரதிஷ்டம்ஸமுத்ரமாப꞉ப்ரவிஶந்தியத்வத் । தத்வத்காமா யம்ப்ரவிஶந்திஸர்வேஸஶாந்திமாப்நோதிநகாமகாமீ) இதிகீதாஸூத்விதீயே. அசல ப்ரதிஷ்டமென்றது - கரையையதிக்ரமியாதென்றபடி. "ஆபூர்யமாணம்" (ஆபூர்யமாணம்) என்றத்தையுங்கூட்டியர்த்தம் (புக்கதெல்லாமித்யாதி) ருதிரவெள்ளம் நிரம்பினதுக்கு ப்ரமாணம் (வையமூடித்யாதி) வையத்தைமூடுகிற ப்ரளய ஜலத்திலும் மும்மடங்கு பெரிதென்றபடி. திருமொழிபதினோராம்பத்து நாலாந்திருமொழி நாலாம்பாட்டு, "தளையவிழ்கோதை" இத்யாதி.

"நேரே" என்றதுக்கு மூன்றர்த்தம்-காலமும், சாதுர்யமும், ஆர்ஜவமும் முந்தினவர்த்தத்வயத்திலும், ஏகாரம் - அவ்யயம். மூன்றுமர்த்தத்தில், அவதாரணம் மூன்றுமர்த்தவிவரணம் (நேராகவென்னுதலென்று) தேற்றேகாரம் - நிஶ்சயார்த்தகைகாரமென்றபடி.

"நேர்" என்றதுக்கு-காலமர்த்தமானபோது; அப்பன் நீறுபடவிலங்கைசெற்றநேர்-போது, சரங்கள் - மாறுநிரைத்திரைக்கும்; இனமினமாக நூறுநூறுகப் பிணங்கள் மலைபோலேபுரண்டுவிழும்; கடல்-உதிரப்புனலாலேநிரம்பி-ஆறுகளிலே மடுக்குமென்றந்வயம். "நேர்" என்றது - சாதுர்யமானபோது; சரங்கள் - மாறுநிரைத்திரைக்கும்படியாகவும், இனநூறு பிணம்மலைபோல் புரளும்படியாகவும். கடல்-உதிரப்புனலாலேநிரம்பி-ஆறுகளிலே மடுக்கும்படியாகவும், அப்பன் நீறுபடவிலங்கைசெற்ற சாதுர்யமிருந்தபடி யென்னென்றந்வயம். ஆர்ஜவமர்த்தமானபோது; மாறுநிரைத்திரைக்கும்படியாகவும், மலைபோலே புரளும்படியாகவும், ஆறுகளிலே மடுக்கும்படியாகவும், அப்பன் நீறுபடவிலங்கைசெற்றது, நேரே - செவ்வையாகவே; ஆர்ஜவத்தாலேயென்றந்வயம். "ஶிதாயுதாகுலபதாக்ருத்ரமண்டலஸங்குலா । அசிரேணைவ லங்கேயம் ஶ்மஶாநஸத்ருஶீ பவேத்" ( சிதாயுதாகுலபதாக்ருத்ரமண்டலஸங்குலா । அசிரேணைவலங்கேயம்ஶ்மஶாநஸத்ருஶீபவேத் ) இதி ஸுந்தரகாண்டே ஸீதா ...........................................*

# எட்டாம்பாட்டு.

நேர்சரிந்தான்கொடிக்கோழிகொண்டான்பின்னு
நேர்சரிந்தானெரியுமனலோன்பின்னு
நேர்சரிந்தான்முக்கண்மூர்த்திகண்டீரப்ப
னேர்சரிவாணன்றிண்டோள்கொண்டவன்றே.

## ஆறாயிரப்படி.

(நேர்சரிந்தான்) பாணனுடைய தோள்களைத் துணித்தவன்று; தோற்கைக்குக் கொடிகட்டிக்கொண்டு வந்தாப்போலே ஸுப்ரஹ்மண்யன் முகம் மாறித்தோற்றான், கிளர்ந்தெரிகிற வக்நியு மப்படியே தோற்றான், த்ரிணேத்ரனும் பராஜயவ்ரீளையாலே யவகுண்டிதனாய்க் கொண்டு போனான், என்னப்பன் ஜயித்தருளினபடி யென்னென்கிறார்..............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், பாணயுத்தப்ரகாரத்தை யநுசந்தித்தருளுகிறார்.

அப்பன்-அநிருத்தனுக்குபகாரகனான க்ருஷ்ணன். ருத்ராதிகளைமுன்னிட்டு, நேர்சரி-ஓதுங்கின. வாணன்-பாணனுடைய. திண்-வரபலாதிகளாலே த்ருடமான. தோள்-தோள்களை. கொண்ட-துணித்துவென்றிகொண்ட. அன்று-அன்று. கோழி-மயிலை. கொடி - கொடியாக. கொண்டான்-கொண்டசுப்ரஹ்மண்யன். நேர்சரிந்தான்-எதிர்நில்லாமல் சாய்ந்துபோனான். பின்னும் - அதுக்குமேலே. எரியும் - “𑌰𑍁𑌦𑍍𑌰𑍋 𑌵𑌾 𑌏𑌷 𑌯𑌦𑌗𑍍𑌨𑌿𑌃” (ருத்ரோவாஏஷஃயதக்நிঃ) என்று ருத்ரன் தானும்படியான க்ரௌர்யத்தையுடையனு யுத்கதஜ்வாலாதிகனான. அனலோன் - அக்நியானவன். நேர்சரிந்தான்-எதிர்நில்லாமல்சரிந்தான். பின்னும்-அதுக்குமேலே. முக்கண்-த்ரிணேத்ரனாகையாலே சக்த்யதிஶயத்தையுடைய. மூர்த்தி - ப்ரதானனானருத்ரன். தான் முன்னிற்கமாட்டாமையாலே, நேர்சரிந்தான் - முதுகிட்டுப்போனான். கண்டீர்-கண்டிகோளே.

கோழி-மயில். கண்டீரென்று - ப்ரஸித்தியைச்சொல்லுகிறது ..............*

## ஈடு - எட்டாம்பாட்டு.

பாணவிஜய வ்ருத்தாந்தத்தை யருளிச்செய்கிறார்.

(நேர்சரிந்தான் கொடிக்கோழிகொண்டான்) மயிலை த்வஜமாகவுடையனாய் தேவஸேநாபதியாயிளமறியாய்த் தூசித்தலையிலே நிற்கிற சுப்ரஹ்மண்யன், தோற்றரவிலே கெட்டான்.

(பின்னுமித்யாதி) அவ்வளவிலே நாற்பத்தொன்பது தக்நிகளும் பெரிய கிளர்த்தியோடே யெரிந்து தோற்றிற்று, அவையுமெல்லாம் பின்னிட்டன.

(பின்னுமித்யாதி) “மகன்கொடிகட்டிக்கொண்டு சென்றிளிம்புபட்டான்” என்று தன் கொடியைப் பொகட்டுவந்து தோற்றின வநந்தரத்திலே, கண்ணைப்புதைத்துக் கெட்டோடத்தொடங்கினான். அவன் மறைத்துக்கொண்டுபோக, இவர், முக்கண்மூர்த்தி கண்டீர் என்று - கண்ணைக்காட்டிக் கொடுக்கிறார். எல்லாம் செய்தாலு முடம்பி லடையாளத்தை மறைக்கப்போகாதிறே. “வாணனீராய்ந்நூறு தோள்களைத் துணித்தநாளந்தவந்தவாகுலம்” என்றுபாசுரமிட்டுச்சொல்லவொண்ணாத வ்யாகுலமிறேயது. அப்பன்-நிருபாதிகரக்ஷகன். (நேர்சரிவாணன்) ப்ரதானனவாணன் தான்வாராத்தோற்றினான், அவனும் பின்னிட்டோடத்தொடங்கினானென்னுதல்; நின்றவிடத்திலேநின்று முதுகுகாட்டினானென்னுதல். கையிலாயுதம் பொகட்டாரையும், மயிர் விரித்தாரையும் கொல்லக்கடவதல்லவிறே. (திண்டோள்கொண்டவன்றே) தன்னோடொக்கவாறல் பிறலாயிருப்பதொரு தேவதையைப்பற்றி, அரணுக்குள்ளே யிருப்பாரைப்போலே திண்ணியனாயிருந்தானாயிற்று. புருஷோத்தமசமாஶ்ரயணம்பண்ணி யிருப்பாரைப்போலே, காபாலிகந்தனைப்பற்றி நிர்ப்பரனாயிருந்

தான். சர்வேப்ரவரனைப்பற்றி "நபிபேதிகுதப்ரந" (நபிபேதிகுதப்ரசந) என்றிருப்பானாபாவித்தான். (திண்டோள்கொண்ட) "உமைபித்ருஹீநையாகவொண்ணாது" என்றுகரத்தைக் கழித்துவிட்டான். "கரபாதையிறேயிவனைக்கண்டார் காலிலெல்லாம் விழப்பண்ணிற்று" என்று அவனுக்குள்ள கரத்தைக்கழித்து, இறையிலியாக்கிவிட்டான். "யௌதத்பூஜாகரௌகரௌ" (யௌதத்பூஜாகரௌகரௌ) என்றும், "விசித்ராதேஹஸம்பத்திரீஸ்வராயநிவேதிதும்" (விசித்ராதேஹஸம்பத்திரீஸ்வராயநிவேதிதும்) என்றும் விதித்துக்கிடக்கச் செய்தேயும், ஆயிரம் கையையுங்கொண்டு அப்ராப்தவிஷயத்திலே கார்யங் கொள்ளுகையாலே அவற்றையே கழித்துவிட்டான். அத்தேவதைதானேவந்து, "வரந்தந்தநீயே யத்தைக்கழிக்கவோ, நீயிவனைக்கொல்லிலென் காலில்குனிவாரில்லையினி" என்று பற்காட்டுகையாலேவிட்டான். [க்ருஷ்ணக்ருஷ்ண மஹாபாஹோ ஜாநே த்வாம் புருஷோத்தமம்] [க்ருஷ்ணக்ருஷ்ணமஹாபாஹோஜாநேத்வாம்புருஷோத்தமம்] தேவரையுள்ளபடியறியாதே அம்மைவிட்டுக்கொண்டுநின்ற நிலையைக்கண்டு "அவ்வளவோ" என்றிருந்தேன். "கழுத்திலேகயிறிட்டபின்புகாண் நானின்னதென்றறிந்தேன்" என்பாரைப்போலே. இத்தால் சொல்லிற்றாயிற்று - ஈப்ஸ்வரனையொழிந்தாரடங்கலும், தாங்களுளரானபோது ரக்ஷகராகவபிமாநித்து, ஆபத்துவந்தவாறே யிவர்களைக்காட்டிக்கொடுத்துத் தந்தாமைக்கொண்டு தப்புவர்கள்; சர்வாவஸ்தைகளிலும் தன்னையழியமாறியாயினு மாஸ்ரிதரக்ஷணம் பண்ணுவான் சர்வேப்ஸ்வரன்; ஆகையாலே ஆஸ்ரயணீயனிவனே, அல்லாதாராப்ரயணீயரல்லரென்னுமிடம் சொல்லிற்று......................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு நேரித்யாதி) "வாணன்திண்டோள்கொண்டவன்றே" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (பாணவிஜயேத்யாதி)

"கொடிக்கோழிகொண்டான்" என்றதுக்கர்த்தம் (மயிலையித்யாதி) கோழி-மயில். இளமறியாய்-இளங்குட்டியாய்-மறி-குட்டி. இளமறியென்று - குதிரைக்குட்டிக்கும்பேர். "நேர்சரிந்தான்" என்றதுக்கர்த்தம் (தோற்றரவிலேகெட்டானென்று) "நேர்சரிந்தான்" என்றதுக்கு - "எதிர்நில்லாமைசாய்ந்துபோனான்" என்றுாயில் சப்தார்த்தம். "பின்னும்" என்றது - அதுக்குமேலேயென்றபடி. இப்படி மேலுமர்த்தங்கண்டுகொள்வது.

"அனலோன்" என்றது-ஜாத்யேகவசநமென்றுவிவக்ஷித்தர்த்தம் (அவ்வளவிலேயித்யாதி)

சுப்ரஹ்மண்யனுக்குக் கொடியைச்சொல்லி, இவனுக்குக் கண்ணைச்சொன்னதுக்குபாவம் (மகனித்யாதி) இளிம்புபட்டான்-எளிமைபட்டான். இளிம்பு-எளிமையும், அசாதுர்யமும். "கண்டீர்" என்றதுக்குபாவம் (அவன்மறைத்தித்யாதி) அவன்மறைத்துக்கொண்டுபோனு லிவர்க்குத்தெரியுமோவென்ன (எல்லாம்செய்தா

னுமித்யாதி) எல்லாம்செய்தாலும்-கொடிமுதலானவற்றை மறைத்தாலுமென்றபடி. அப்படி கண்ணைப்புதைத்துக்கொண் டோடும்படியான வாபத்துண்டோவென்ன (வாணனித்யாதி) பாணனுடைய வாயிரந்தோள்களையுங்கழித்தவன்று, ருத்ரன்கெட்டுப்போன பாரவஸ்யம், க்ருஷ்ணனுடைய முகம்பெறுகைக்காக ஸ்தோத்ரம்பண்ணின பாரவஸ்யம்முதலான வந்தவந்த வ்யாகுலமென்றபடி. திருச்சந்தவிருத்தம் எழுபதாம்பாட்டு, "கொந்தமோடு" இத்யாதி.

"நேர்" என்று - ப்ரதாநமாய், (ப்ரதாநனானவாணன்) என்றபடி. வாராவந்தென்றபடி. சரிகை - தாழ்ந்துபோகையென்று விவக்ஷித்தர்த்தம் (அவனும்பின்னிட்டித்யாதி) சரிகை-சைதில்யமாகவிவக்ஷித்து, தத்கார்யமான கமநராஹித்யமாகவர்த்தாந்தரம் (நின்றவிடத்திலேநின்று முதுகுகாட்டினனென்னுதலென்று) அன்றிக்கே, சரிகை-முறிந்துபோகைக்கும், முதுகுகாட்டுகைக்கும் வாசகமாக வர்த்தத்வய மருளிச்செய்கிறார் (அவனுமித்யாதிவாக்யத்வயத்தாலே) தலையயறுமைக்கு மூன்றுஹேது. முந்தினஹேது (கையிலாயுதமித்யாதி) முதுகுகாட்டினபோதேயாயுதம் பொகட்டமை சித்தமென்றபடி. திண்மையேதென்ன; மநோதார்ட்யமாகவர்த்தம் (தன்னோடொக்கவித்யாதி) ஆறல்பீறலாய்-அநுபயுக்தமாய். கார்யாக்ஷமமாயென்றபடி. பிக்ஷுகனுமாய் கந்தாதாரியுமாயிருக்கையாலே (ஆறல்பீறல்) என்கிறார். விவரணம் (புருஷோத்தமேத்யாதி) காபாலிகந்தரொன்றது - சாடு. பிக்ஷுகராய் கந்தாதாரிகளாயிருப்பாரையென்று சாடுவுக்கர்த்தம்; கபாலத்தையுடைய ருத்ரன், கந்தன்-கந்தத்திலேபிறந்த ப்ரஹ்மாவென்று ஸ்வபாவார்த்தம். கீழ்வாக்ய விவரணம் (சர்வேஸ்வரனையித்யாதி) தலையயறுதலுக்கு த்விதீயஹேது (உஷையித்யாதி) சாடு (கரபாதையித்யாதி) கரம்-கையும், கப்பமும். இறையிலியாக்கி-இறையிறுப்பில்லாதவனுக்கியென்றும், வேறுஸ்வாமியில்லாதவனுக்கியென்று மர்த்தத்வயம். அவயவாந்தரங்களிருக்க, கையைக்கழிப்பானென்னென்ன (யௌதத்பூஜேத்யாதி) "ஸாஜிஹ்வாயாஹரிம்ஸ்தௌதி தச்சித்தம்யத்ததர்ப்பிதம் । தாவேவசகரௌஸ்லாக்யௌயௌதத்பூஜாகரௌகரௌ" (ஸாஜிஹ்வாயாஹரிம்ஸ்தௌதிதச்சித்தம்யத்ததர்ப்பிதம் । தாவேவசகரௌஸ்லாக்யௌயௌதத்பூஜாகரௌகரௌ.) "விசித்ராதேஹஸம்பத்திரீஸ்வராயநிவேதிதும் । பூர்வமேவக்ருதாப்ரஹ்மந்ஹஸ்தபாதாதிஸம்யுதா" (விசித்ராதேஹஸம்பத்திரீஸ்வராயநிவேதிதும் । பூர்வமேவக்ருதாப்ரஹ்மந்ஹஸ்தபாதாதிஸம்யுதா) இத்யாதிஸ்ரீவிஷ்ணுதர்மே. தலையயறுதலுக்கு த்ருதீயஹேது (அத்தேவதையித்யாதி) அப்படிபல்காட்டினனோவென்ன, ப்ரமாணம் (க்ருஷ்ணேத்யாதி) பஞ்சமேம்ஸே, பூர்வமேவ லிகிதமஸக்ருத். "மஹாபாஹோ-த்வாம்புருஷோத்தமம்-ஜாநே" (மஹாபாஹோ-த்வாம்புருஷோத்தமம் - ஜாநே) என்று - பாஹுபலங்கண்டபின்புன்னை "ஈஸ்வரன்" என்றறிந்தேனென்கிறவனுடைய வ்யதிரேகசித்தமான பாவத்தையருளிச்செய்கிறார் (தேவதையித்யாதி) அவ்வளவோவென்றது - இதரஸஜாதீயனோவென்றபடி. இன்னதென்றறிந்தேனென்றது - பூஜையென்றறிந்தேனென்றபடி. இவ்விடத்தில் பலித்தவர்த்தமேதென்ன (இத்தாலித்யாதி)

அப்பன்நேர்சரிவாணன் திண்டோள்கொண்டவன்று - நேர்சரிந்தானென்றுதொடங்கி, மூர்த்திகண்டரித்யந்வய:. (நேர்சரிவாணன்) நேர்-ப்ரதாநனாய், சரி-பின்னிட்டோடின, வாணனுடையவென்னுதல்; முதுகுகாட்டின வாணனுடையவென்னுதலென்று சப்தார்த்தம். "ருத்ராதிகளைமுன்னிட்டொதுங்கின பாணனுடைய"

என்றுரையில் சப்தார்த்தம். கொண்டவன்று - ஸ்வாதீநமாக்கிக்கொண்டவன்று. துணித்தவன்றென்றது பலிதார்த்தம். "தோள்களைத்துணித்துவென்றிகொண்டவன்று" என்றுரையில் சப்தார்த்தம்..........................................*

## ஒன்பதாம்பாட்டு.

அன்றுமண்ணீரெரிகால்விண்மலைமுத
லன்றுசுடரிரண்டுபிறவும்பின்னு
மன்றுமழையுயிர்தேவுமற்றுமப்ப
னன்றுமுதலுலகஞ்செய்ததுமே.

### ஆறாயிரப்படி.

(அன்று) ஸங்கல்ப லேஶத்தாலே நிகில ஜகத் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைப் பண்ணியருளுகிற ஸர்வேஶ்வரனுக் கத்யல்பபல ப்ரதிகூலநிரஸந மொரு பொருளோ வென்கிறார்.............................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஜகத்ஸ்ருஷ்டிப்ரகாரத்தை யருளிச்செய்கிறார்.

அப்பன் - ஜகதுத்பாதகனான மஹோபகாரகன். முதல்-ப்ரதமத்திலே. உலகம் - லோகத்தை. செய்ததும் - உண்டாக்கிற்றும். அன்று - ஆத்யமான ஸ்ருஷ்டி காலத்திலே. மண்ணீரெரிகால்விண் - அதுக்கு ஹேதுபூதமான ப்ருதிவ்யாதி பூதபஞ்சகங்களையும். மலைமுதல் - பௌதிகங்களில் பர்வதாதி பதார்த்தங்களையும். செய்ததும் - செய்ததும். அன்று - அக்காலத்திலே. சுடர் - சந்த்ராதித்யர்கள். இரண்டு - இருவரையும். பிறவும் - அல்லாத தேஜஃ பதார்த்தங்களையும். செய்ததும்-செய்ததும். அன்று - அக்காலத்திலே. பின்னும் - அதுக்குமேலே. மழை-வர்ஷத்தையும். உயிர் - வர்ஷோபஜீவிகளான ப்ராணிகளையும். தேவும் - வர்ஷப்ரதரான தேவர்களையும். மற்றும் - மற்றும் ப்ராணிபதார்த்தங்களையும். செய்ததும்-உண்டாக்கிற்றும். அன்று - அக்காலத்திலே.

க்ரமஸ்ருஷ்டியன்று, யுகபத்ஸ்ருஷ்டி யென்று கருத்து.......................*

### ஈடு - ஒன்பதாம்பாட்டு.

ஸ்ருஷ்டியும் விஸஜாதீய மாகையாலே, அத்தையும் விஜயமாக வநுசந்திக்கிறாராகவுமாம்.

((அப்பன்-முதலுலகம் செய்ததும்-அன்று) மஹோபகாரகன் ப்ரதமத்திலே லோகத்தை யுண்டாக்கிற்றும் ஆத்யமான ஸ்ருஷ்டிகாலத்திலே. அதுக்கு ஹேதுவாக (மண்ணீரித்யாதி)) அன்றிக்கே, கீழும் மேலும்-க்ருஷ்ணவ்ருத்தாந்தமாகையாலே, பாணனை தமித்தவன்றுகிடீர் ஜகத்தை யுண்டாக்கிற்றென்று அத்தையே பேசுகிறாராகவுமாம்; பயிர்செய்கையேயன்றே வேண்டுவது, பயிரழியாமல் நோக்கினவன்றிறே பயிர்செய்ததாவது.

(அன்றித்யாதி) காரணங்களோடு கார்யங்களோடு வாசியற வுண்டாக்கினபடி.

(சுடரிரண்டு) சந்த்ராதித்யர்களை யுண்டாக்கினபடி. (பிறவும்) மற்றுமுண்டான நக்ஷத்ராதி தேஜஃபதார்த்தங்களும்.

அதுக்குமேலே; வர்ஷிக்கக்கடவதான மேகம், (மழை-மேகம்.) வர்ஷத்தாலே ஜீவிக்கக்கடவ மற்றை யாத்மாக்கள், வர்ஷத்துக்குத்பாதகரான தேவர்கள், மற்றுமுண்டான திர்யக்ஸ்த்தாவராதிகள்.

(அப்பன்) சர்வோத்பாதகனானவன். (அன்றுமுதலுலகம்செய்ததுமே) தனித்தனியே சொல்லவேணுமோ, பாணனை தமித்திரரசறுத்தவன்றுகிடீ ரித்தையெல்லாம் ஸ்ருஷ்டித்ததென்கிறுர் (என்னுதல். நாமரூபங்களையிழந்து "ஸதேவ" (ஸதேவ) என்கிறதசையிலே "பஹு ஸ்யாம்" (பஹுஸ்யாம்) என்று ஸங்கல்பித்த வன்றுமுதலென்றுமாம்)*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. (அன்றித்யாதி) இப்பாட்டிலே - ஸ்ருஷ்டியை யருளிச்செய்ததுக் கிரண்டுபாவம் (ஸ்ருஷ்டியுமித்யாதிவாக்யத்வயத்தாலே) விஸஜாதியமாகையாலே யென்றது - நாட்டாரால் செய்யப்படுமதல்லாமையாலேயென்றபடி. முந்தினவவதாரிகை - (பத்தும்பத்தாக) என்ற ப்ரவேஶவாக்யத்துக்குச்சேரும். பாணனை தமித்தவன்றே ஜகத்துண்டாயிற்றென்ன (பயிர்செய்கையித்யாதி)

பூதபஞ்சகங்கள் காரணமாய், மலைமுதலானவை கார்யமாகையாலே யருளிச்செய்கிறுர் (காரணங்களோடித்யாதி)

ப்ருதிவ்யாதி ஸ்ருஷ்டியைச் சொன்னவநந்தரம் லோகஸ்ருஷ்டியைச் சொன்னதுக்கு பாவம் (தனித்தனியேயித்யாதி) ஈரரசு - த்வைராஜ்யம்.

மண்ணீரெரிகால் விண்மலைமுதல் - அன்றுண்டாயிற்று; இரண்டுசுடரும் பிறவும் - அன்றுண்டாயிற்று; பின்னும்-அதுக்குமேலே, மழையுயிர்தேவுமற்றும்-அன்றுண்டாயிற்று; அப்பன் உலகம் செய்ததும் - அன்றுமுதலென்றந்வயம். ஸ்ருஷ்டிபரமானபோது, அப்பன் - முதல் - ப்ரதமத்திலே, உலகம்செய்ததும், அன்று-ஆத்யமான ஸ்ருஷ்டிகாலத்திலே; மண்ணீரெரிகால் விண்மலைமுதல் - செய்ததும், அன்று - அக்காலத்திலே; சுடரிரண்டுபிறவும் - செய்ததும் - அன்று; பின்னும்-மழையுயிர்தேவும் மற்றும் - செய்ததும் - அன்று என்றந்வயம். "செய்ததும்"என்றத்தை-மூன்றுபாதத்திலுங் கூட்டுவது. பிறவும் - மற்றுமுண்டானவையுமென்றபடி. ...*

---

## பத்தாம்பாட்டு.

மேய்நிரைகீழ்புகமாபுரளச்சுனை
வாய்நிறைநீர்பிளிறிச்சொரியவின
வாநிரைபாடியங்கேயொடுங்கவப்பன்
றீமழைகாத்துக்குன்றமெடுத்தானே.

## ஆறாயிரப்படி.

(மேய்நிரை) பசுக்களுக்கு மிடையர்க்கும், கீழேபுக்கு நிர்ப்பயமாக வர்த்திக்கும்படியாகவும்; மஹீதரோ பரிவர்த்தமான வநகரியூதங்கள் கீழே புரளும்படியாகவும், பூர்ணரஸஸரஸ்ஸுக்களதோமுகமாய் ஸகோஷமாய் ப்ரவஹிக்கும்படியாகவும் ஸ்ரீகோவர்த்தநத்தை யெடுத்தருளி, பாதகமான வர்ஷத்தைத்தடுத்தருளி, இந்த்ரனை ஜயித்தருளின னென்னப்ப னென்னப்பனென்கிறார்........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், கோவர்த்தநோத்தரணத்தை யநுபவிக்கிறார்.

மேய்-மேய்கிற. நிரை-பசுக்களானவைகள். கீழ்-கீழே. புக-ஒதுங்கும்படியாகவும். கீழ்மேலாகவெடுத்தபடியாலே, மா-பர்வதவர்த்திகளானகஜாதிம்ருகங்கள். புரள - புரண்டுவிழும்படியாகவும். சுனை - சுனைகளினுடைய. வாய் - வாயளவும். நிறை - நிறைந்த. நீர் - நீரானது. பிளிறி - பெரியகோஷத்தோடு. சொரிய - சொரியும்படியாகவும். இனம் - இனமினமான. ஆய் - ஆயனையும். நிரை - பசுத்திரளையுமுடைய. பாடி - திருவாய்ப்பாடியும். அங்கே - அங்கே. ஒடுங்க - ஒடுங்கும்படியாகவும். அப்பன் - ஆபந்நிவாரகனான க்ருஷ்ணனானவன். தீ-விநாஸஹேதுவான. மழை-மழையை. காத்து - காத்து. குன்றம் - கோவர்த்தநமாகிற பர்வதத்தை. எடுத்தான் - எடுத்தான்........................................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

கோவர்த்தநோத்தரணம்பண்ணி ரக்ஷித்த செயலை யநுசந்திக்கிறார்.

(மேய்நிரைகீழ்புக) மேய்கிறபசுக்கள் புல்லுமுமிழாதே யசையிட்டுக்கொண்டு கீழேபுகுர. (மாபுரள) மலையையெடுத்து மறிக்கையாலே அங்குவர்த்திக்கிற ம்ருகங்களெல்லாம் புரண்டுவிழ, மா - ம்ருகம். (சுனைவாய்நிறைநீர்பிளிறிச்சொரிய) சுனையிடத்துநிறைந்து நிற்கிறநீரானது, நிறைகுடத்தைக் கவிழப்பிடித்தாப்போலே சப்தித்துக்கொண்டுசொரிய ஒருமழைகாக்கப்புக்கு, அங்கேயநேகம் மழையையுண்டாக்கினபடி. (இனவாநிரைபாடியங்கே யொடுங்க) பசுத்திரளும் திருவாய்ப்பாடியு மங்கே யொடுங்க. (ஒருதரத்தில் பசுவொழுங்கையுடையவூர்.) (அப்பன்) ஆபத்ஸகனானவுபகாரகன். (தீமழைகாத்து) விநாசத்தைவிளைக்கவந்தமழையாகையாலே தீமழையென்கிறார். இடையரும் பசுக்களுமன்றிக்கே அன்று தாமாகாதே நோவுபட்டார். (குன்றமெடுத்தானே) மலையை யெடுத்துக்காத்த மஹோபகாரகனென்கிறார். "பசிக்ராஹமாறுந்தனையும் வர்ஷித்துப்போவானுக்கு" என்றேழுநாளிறே மலையைதரித்துக்கொடுநின்று நோக்கிற்று. ராவணாதிகளாகிலிறே யழியச்செய்யலாவது, அநுகூலனுக்குவந்த ப்ராதிகூல்யமாகையாலே செய்யலாவதித்தனையிறே. இத்தால்சொல்லிற்றாயிற்று - ஆஸ்ரிதன் தப்பினாலும் தான் பொறுத்து ரக்ஷிக்குமென்றபடி........................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. (மேய்நிரையித்யாதி) "தீமழைகாத்து" இத்யாதியைக்க டாக்ஷித்தவதாரிகை (கோவர்த்தநேத்யாதி)

வர்த்தமாநார்த்தம் (மேய்கிறவித்யாதி)

"மா" என்று - நாற்காலுடைய ஜந்து. மறிக்கை - கவிழ்த்துப்பிடிக்கை.

பிளிறி - சப்தித்து. ரஸோக்தி (ஒருமழையித்யாதி)

"மேய்நிரை" என்று-காட்டில் வர்த்திக்கும் பசுக்களையும், "இனவாநிரை" என்று - வூரில் வர்த்திக்கும் பசுக்களையும் சொல்லுகையாலே, புநருக்தியில்லை.

மழைநல்லதன்றே, "தீமழை" என்பானென்னென்ன (விநாசத்தையித்யாதி) "காத்து" என்று - சாமாந்யமாகச் சொன்னதுக்குபாவம் (இடையருமித்யாதி) "அப்பன்" என்றதுக்கர்த்தம் (மலையையித்யாதி) மலையையெடுக்கிறதென்,அவனை நிரஸிக்கவொண்ணாதோவென்ன (பசிக்ராஹமித்யாதி வாக்யத்ரயம்) பசிக்ராஹம்-பசியினாலுண்டான கோபம். வர்ஷித்துப்போவானுக்கு - வர்ஷித்துப்போகட்டு. இத்தால் பலித்தவர்த்தம் (இத்தாலித்யாதி)

மேய்நிரை கீழ்புகும்படியாகவும் மாபுரளும்படியாகவுமித்யாரப்ய. ஒடுங்கும்படியாகவும், அப்பன் தீமழைகாத்துக் குன்றமெடுத்தானே இத்யந்வயஃ. .........*

---

# பதினொன்றாம்பாட்டு.

குன்றமெடுத்தபிரானடியாரொடு
மொன்றிநின்றசடகோபனுரைசெய
னன்றிபுனைந்தவோராயிரத்துள்ளிவை
வென்றிதரும்பத்துமேவிக்கற்பார்க்கே.

## ஆறாயிரப்படி.

(குன்றமெடுத்த) ஆழ்வார் தாமும் கோவர்த்தநத்தின்கீழே திருவாயரோடே கூடிநின்று கோவர்த்தநோத்தரண பூர்வக விஜயரூப ஸகல திவ்யசேஷ்டிதங்களையு மேத்தின வித்திருவாய்மொழியை சாதரமாகக்கற்பார்க்கு, இத்திருவாய்மொழியி லோரோர்பாட்டே விஜயத்தைக்கொடுக்குமென்கிறார். ..................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழி, கற்றார்க்கு சர்வப்ரகார விஜயத்தைக் கொடுக்குமென்று பலத்தை யருளிச்செய்கிறார்.

குன்றமெடுத்த - கோவர்த்தநோத்தரணம்பண்ணின. பிரான் - மஹோபகாரகனான க்ருஷ்ணனுக்கு. அடியாரொடும் - அசாதாரண சேஷபூதரான பாகவதர்களோடே. ஒன்றி - ஏகீபவித்து. நின்ற - நின்ற ஸ்வரூபத்தை யுடையராய்க்கொண்டு. சடகோபன் - ஆழ்வாருடைய. உரைசெயல் - வாசிகவ்ருத்திருபமாய். ஓர் - அத்விதீயமான. ஆயிரத்துள் - ஆயிரத்துள்ளே. நன்றி - சர்வேஶ்வரனுடைய விஜயாபதாநங்களை ப்ரதிபாதிக்கையாகிற நன்மையை. புனைந்த - உடைய. இவைபத்தும்-

ஸ்யதே । திர்யக்யோநிகதாஸ்சாபி ஸர்வேராமமநுவ்ரதா:, ) "[illegible] । [illegible]" (பிதாமஹவசஸ்ஸ்ருத்வாவிநிஸ்சித்யமஹாமதி: । விவேஸவைஷ்ணவம் தேஜஸ்ஸஸரீரஸ்ஸஹாநுக: ) இத்யுத்தரஸ்ரீராமாயணே. ராமாயணாதிகளிலே "ப்ரஹ்மலோகத்திலொருப்ரதேசத்திலே வைத்தான்" என்றிருக்கிறதேயென்ன (இன்னவிடத்திலே யித்யாதி) ( அன்று சராசரங்களையித்யாதி ) பெருமாள் திருமொழி. ஸ்பஷ்டோர்த்த:. ஸஹஸ்ரநாமபாஷ்யத்திலே "[illegible]" ( ருதுஸ்ஸுதர்ஸந:கால:பரமேஷ்டீபரிக்ரஹ: ) என்றவிடத்திலே, "[illegible]" (பரிக்ரஹ:) என்றதுக்கு - "[illegible]" (அத்ரசதத்ரசபரிதோக்ரஹ: அஸ்யேதிபரிக்ரஹ: - ஸ்வஸம்பந்திபௌரஜாநபததந்மந்திரவாஸ்துதேவதாராமதருதூர்வாதேரபிபரமபதப்ராபணாத் ) என்றருளிறேபட்டர்.

"நடந்தமை" - நடந்த ப்ரகாரமென்றபடி. நடந்தப்ரகாரமேதென்ன ( அதாவதித்யாதி ) பசித்தாரிளைத்தாரையென்று - முழுச்சொல்லு. அத்யந்தமார்த்தரையென்றபடி. அவன்பார்வை தாரகமோவென்ன, ப்ரமாணம் ( புண்டரீகாக்ஷேத்யாதி ) "[illegible]" ( கச்சதாம்தூரமத்வாநம் த்ருஷ்ணாமூர்ச்சிதசேதஸாம் । பாதேயம்புண்டரீகாக்ஷ நாமஸங்கீர்த்தநாம்ருதம். ) பலிதம் (ஜிதந்த இத்யாதி) பெருமாள் புண்டரீகாக்ஷரோவென்ன ( ராம இத்யாதி ) "[illegible]" ( ராம:கமலபத்ராக்ஷஸ் ஸர்வஸத்த்வமநோஹர: । ரூபதாக்ஷிண்யஸம்பந்ந: ப்ரஸூதோஜநகாத்மஜே ) இதி சுந்தரகாண்டே ஸீதாம் ப்ரதி ஹநுமான்.

இப்பாட்டுக் கவதாரிகையிற் சொன்ன தாத்பர்யமொழிய தாத்பர்யாந்தரம் (கீழிற்பாட்டிலித்யாதி)

நாட்டிற்பிறந்தவர் - நாட்டிற்பிறந்தென்று தொடங்கி, கேட்டும் - நாரணற்காளன்றியாவரோ வித்யந்வய:. ........................................................*

## மூன்றாம்பாட்டு.

கேட்பார்கள்கேசவன்கீர்த்தியல்லான்மற்றுங்கேட்பரோ
கேட்பார்செவிசுடுகீழ்மைவசவுகளேவையுஞ்
சேட்பாற்பழம்பகைவன்சிசுபாலன்திருவடி
தாட்பாலடைந்ததன்மையறிவாராயறிந்துமே.

### ஆறாயிரப்படி.

(கேட்பார்கள்) மநுஷ்யமாத்ர துஃகிரஸநம்பண்ணியருளு மிது தாநொருகுணமோ, ப்ரதிகூலனான சிசுபாலனுக்குங்கூடத் தன்றிருவடிகளைக்கொடுத்த விம்மஹாகுணத்தைப்பார்த்தாலென்கிறார்.

ஸ்வபரிவாத ஶ்ரவணைகபோகரான ப்ரதிகூலருடைய செவிகளும் வேம்படி பருஷபாஷணபரனாய் ப்ரதிபவ மிம்மஹாபராதயுக்தனாயிருந்த சிசுபாலனுக்குங்கூடத் தன்றிருவடிகளைக்கொடுத்தருளின இஸ்ஸ்வபாவத்தை யறிவாரையறிந்துவைத்தும், * ஸம்ஶ்ரவே மதுரமாயிருப்பதொன்றைக்கேட்கவேண்டி யிருப்பார், அவர்கள் பக்கலிலேசென்று இக்குணத்தையன்றி மற்றுமொன்றைக்கேட்பரோவென்கிறார்.......................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அநிஷ்டத்தை நிரஸித்து ரக்ஷித்தவளவன்றியே, அநிஷ்டகாரியான சிசுபாலனுக்கு மோக்ஷத்தைக் கொடுத்த குணாதிக்யத்தை யருளிச்செய்கிறார்.

கேட்பார்செவி - "பகவத்குணஹாநிகேட்கவேணும்" என்றபிசந்திபண்ணியிருக்கு மவர்கள்செவிக்கு. சுடு - அக்நிகல்பமாம்படி சுடக்கடவதாய். கீழ்மை - நிகர்ஷாபாதகமான. வசவுகளே - பருஷோக்திகளையே சொல்லி. வையும் - வையுமவனாய். ஹிரண்யராவணஜந்மங்களையே தொடங்கி, சேட்பால் - தூரகாலஸ்த்தனாய்க்கொண்டு. பழம் - பழையதாக. பகைவன் - பகைவனாய்ப்போருகிற. சிசுபாலன்- சிசுபாலனானவன். திருவடி - நிருபாதிக ஸ்வாமியான க்ருஷ்ணனுடைய. தாட்பால் - திருவடிகளிடத்திலே. அடைந்த - சாயுஜ்யத்தை ப்ராபித்த. தன்மை - அசாதாரணஸ்வபாவத்தை. அறிவாரை - அறிவாரான ஜ்ஞாநாதிகரை. அறிந்தும் - அறிந்துவைத்திருக்கச்செய்தேயும். கேட்பார்கள் - தங்களுக்குஜ்ஜீவநப்ரகாரத்தைக்கேட்கவேண்டி யிருக்குமவர்கள். அவ்வறிவுடையார் பக்கலிலே, கேசவன் - கேசிஹந்தாவான க்ருஷ்ணனுடைய. கீர்த்தி - * ப்ரதிபவமபராத்தாவுக்கு மோக்ஷப்ரதையான மௌக்த்யகீர்த்தியை. அல்லால் - ஒழிய. மற்றும் - விலக்காதார்க்கு மோக்ஷங்கொடுத்த வ்யக்த்யந்தரத்தை. கேட்பரோ - கேட்பரோ. ..............................*

## ஈடு - மூன்றாம்பாட்டு.

சிசுபாலனையு முட்படத்தன்றிருவடிகளிலே சேர்த்துக்கொண்ட பரமக்ருபையையறிந்தவர்கள், கேசிஹந்தாவினுடைய கீர்த்தியை யொழியவேறொன்றைக்கேட்பரோ வென்கிறார்.

(கேட்பார்கள்) கீழே - "கற்பரோ" என்றது - அதாவது - முதல் நடுவு இறுதிதன்னெஞ்சிலே யூற்றிருக்கும்படி வாசனைபண்ணுகையாயிற்று; இனி, கேட்கையாவது-வாசனைபண்ணினாெருவனாேரர்த்தத்தையுபபாதித்தால், அத்தைபுத்திபண்ணி விஸ்வஸித்திருக்கை. நடுவிருந்தநாளுநாளும் தன்னெஞ்சு தெளிவுபிறந்ததில்லையே யாகிலும், விழுக்காட்டிலிருவர்க்கும் பலமொத்திருக்கக்கடவது. கற்றிலனாகிலும் கேட்கவேண்டுவதுண்டிறே - கற்றுத்தெளியக்கண்டவர்த்தத்தைக் கேட்டு விஸ்வசித்திருக்கை. கல்வியுமதின் பலரூபமானகைங்கர்யத்திலு மந்வயிக்கப்பெற்றிலனாகிலும், ஆசார்யன்பக்கலிலே யோரர்த்தத்தைக் கேட்டமாத்ரமாயிருந்தாலும் தனக்கோராபத்திலே யுதவுகைக்கொருகுறையில்லை. இனி, தன்னிழவு - பரப்ரதிபாதந சக்தியில்லாமையும், தன்னெஞ்சு தெளியாமையால் வருவதுமேயிறேயுள்ளது. (கேட்பார்கள்) செவியில் தொளையுடையவர்கள். பகவத்குணங்கள் கேட்கையிறே செவிக்கு ப்ரயோஜ

நம்; "கேளாச்செவிகள்செவியல்லகேட்டாமே" என்னுகின்றதிறே, எறும்புவளையோபாதியிறே. (கேசவன்கீர்த்தியல்லால்) விரோதிநிரஸநசீலனான க்ருஷ்ணன்கீர்த்தியல்லது வேறேசிலவற்றைக்கேட்பரோ. பருவம் நிரம்பிக்கற்ற பின்பல்லவிரோதிகளைப்போக்கிற்று; பூதனைதொடக்கமானவிரோதிகளைத் தொட்டிற்பருவத்தேயிறே போக்கிற்று. விரோதிநிரஸநந்தான்ஜ்ஞாததயாவன்று, சத்தயாபாதகமா யிருக்கிறபடி. நஞ்சுகொல்லுகிறதறிவுண்டாயல்லவிறே.[வ்யாதிதாஸ்யோமஹாரௌத்ரஸ் ஸோஸுரஃக்ருஷ்ணபாஹுநா" (வ்யாதிதாஸ்யோமஹாரௌத்ரஸ் ஸோஸுரஃக்ருஷ்ணபாஹுநா) கேசியானவன், வாயையங்காந்துகொண்டு, கண்டாரெல்லாரும் நடுங்கும்படி வந்து தோற்ற; முக்தராயிருப்பார் த்வாரங்கண்டவிடத்தே கைநீட்டக்கடவதாயிருக்குமிறே, அந்தவாசனையாலே யிவன் வாய்க்குள்ளேகையைநீட்ட, அபூர்வாநுபவத்தாலே கைவிம்ம வளர்ந்துகொடுத்தது; அப்போதிடியேறுண்டமரம்போலே யிருபிளவாய்விழுந்தான் (மற்றுங்கேட்பரோ) கீழ்ச்சொன்ன ராமவ்ருத்தாந்தந்தான் கேட்பரோ. இவர் ஸ்வபாவமிருந்தபடியென்!. "இராமபிரானையல்லால் மற்றுங்கற்பரோ" என்றார் - கீழ், இங்கே - "கேசவன்கீர்த்தியல்லால் மற்றுங்கேட்பரோ" என்னுகின்றார்; இதுதனக்கடியென்னென்னில்; அவ்வவதாரத்தை யநுசந்தித்தபோது "தயரதற்குமகன்றன்னையன்றி மற்றிலேன்தஞ்சமாக" என்பர், இவ்வவதாரத்தை யநுசந்தித்தபோது "நங்கண்ணன்கண்ணல்லதில்லையோர்கண்ணே" என்பர்; இப்படியிழிந்த துறைகள்தோறுமழுந்த வல்லாரொருவரிறே. ஓரோகுணங்களையநுபவிக்கப்புக்கால் குணாந்தரங்களில் கால் வாங்கமாட்டாதாப்போலே யாயிற்று, ஓரோவவதாரத்திலே யிழிந்தால் அவதாராந்தரங்களில் போகமாட்டாமையும்.

(கேட்பார்செவிசுடு கீழ்மைவசவுகளேவையும்) இதுக்குக்கீழ்- "கேட்பார்" என்றதுபோலல்ல, கீழ்மைவசவுகளே கேட்பாரிறே - இங்கு. பகவந்நிந்தைக்கு ஜீவநம் வைத்துக்கேட்கும் தண்ணியவர்களுங்கூடப்பொறுக்கமாட்டாமை செவிபுதைத்து, "இத்தனை யதிரச்சொன்னாய், இப்படிசொல்லப்பெறாய்காண்" என்று சொல்லும்படியான வசவுகளே வைகை.(வசவுகளேவையும்) அநுகூலராயிருப்பார்க்கு மசித்ஸம்ஸர்க்கத்தாலே ப்ராமாதிகமாகவு மொரு ப்ராதிகூல்யம் விளையுமிறே; அப்படியே இவனுக்கும் யாத்ருச்சிகமாக வொரு நல்வார்த்தையும் கலசுமோவென்னில்; அதுவு மில்லை யென்கிறது - ஏவகாரத்தாலே. அதுக்கடி சொல்லுகிறது மேல் (சேட்பால் பழம்பகைவன்) மிகவும் ஜந்மஶத்ருவென்றபடி. இந்தஜந்மமே யன்றிக்கே பூர்வஜந்மமே தொடங்கி சத்ருவாய்ப் போருகிறானிறே - இவனேரோஜந்மங்களிலே பண்ணின ப்ராதிகூல்யத்துக்கோ ரளவில்லையிறே; இப்படிப்பட்ட ஜந்மந்தா னநேகம். அவ்வவஜந்மங்களிலுண்டான காலத்தின்மிகுதியும், பண்ணின ப்ராதிகூ

ல்யத்தினுடைய மிகுதியும், இவையெல்லாவற்றையும் நினைக்கிறது-பகையினுடைய பழமையாலே அபுத்திபூர்வகமாகச்சொல்லிலும் வாசனையாலே தப்பாதென்கை. அன்றின்றகன்று அப்போதே தாய்முலையிலே வாய்வைக்குமதஜ்ஜந்மத்திலே வாசனைகொண்டன்றிறே; இவனுக்கு மிஜ்ஜந்மத்திலே பகவந்நிந்தைக்கடி-ஜந்மாந்தரவாசனையிறே. (திருவடிதாட்பாலடைந்த) சர்வஸ்வாமியுடைய பாதபார்ஶ்வத்தைக்கிட்டின. சாயுஜ்யலக்ஷண மோக்ஷமாகிறது தானின்னதென்கிறது. அதாவது – விச்சேதமின்றிக்கே கிட்டிநின்று நித்யகைங்கர்யம்பண்ணப்பெறுகை. "஬்ரஹ்மவெ஡ ஬்ரஹ்மைவ ஭வதி"(ப்ரஹ்மவேதப்ரஹ்மைவபவதி)என்றும், "பரமம் ஸாம்யமுபைதி" (பரமம்ஸாம்யமுபைதி) என்றும், "தம்மையேயொக்கவருள்செய்வர்" என்றும், "மம ஸாதர்ம்யமாகதாঃ" (மமஸாதர்ம்யமாகதாঃ) என்றும், "ஸோஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபஶ்சிதா" (ஸமாநோஜ்யோதிஷா) என்றும் சொல்லுகிறவற்றால் - வஸ்த்வைக்யம்சொல்லுகிறதன்று, பேற்றில்வந்தாலவனோடிவனுக்கு சர்வதா சாம்யமுண்டென்கிறது, "ஜகத்வ்யாபாரவர்ஜம்" (ஜகத்வ்யாபாரவர்ஜம்) "போகமாத்ரஸாம்யலிங்காச்ச" (போகமாத்ரஸாம்யலிங்காச்ச) என்றும் சொல்லுகையாலே. சாயுஜ்யமாகிறது - "அவனோடொன்றும்" என்கிறதன்று, அவன்திருவடிகளிலே பரிசர்யைபண்ணுமென்கிறது; "ஸாயுஜ்யம் ப்ரதிபந்நாயே தீவ்ரபக்தாஸ்தபஸ்விநঃ। கிங்கரா மம தே நித்யம் பவந்தி நிருபத்ரவாঃ" (ஸாயுஜ்யம் ப்ரதிபந்நாயே தீவ்ரபக்தாஸ்தபஸ்விநঃ। கிம்கராமமதேநித்யம் பவந்திநிருபத்ரவாঃ) என்றுஞ்சொல்லுகையாலே. (தன்மையறிவாரையறிந்துமே) கேட்பார்க்குவிஷயமுண்டாக்குகிறார். இந்த குணஜ்ஞாநமுடையாரையறிந்து, ( அவர்கள்பக்கலிலேசெவிதாழ்த்து ) வைத்தும் - கேட்பார்கள் கேசவன்கீர்த்தியல்லால் மற்றுங்கேட்பரோ.

இவன் திருவடிகளைக் கிட்டிற்றென்கொண் டென்னில்; திருநாமங்களைச்சொல்லி த்வங்கரிக்கையும், கையுந்திருவாழியுமானவழகை யந்திமதசையிலே ஸ்மரிக்கவுங் கூடுமிறே. மேலெழ வாராய்ந்துபார்த்தால் சிலஹேது சொல்லலாம், இதுக்கினியோருபபத்தி தேடிச்சொல்லுகையாவ தவன் க்ருபைக் கொருகொத்தை சொல்லுகையிறே. "சர்வேஶ்வரன் க்ருபையாலே சிசுபாலன் திருவடிகளைப்பெற்றான்" என்று ஆழ்வார்களும் ருஷிகளுமெல்லாரும் சொல்லிக்கொண்டு போருவர்களிறே. இவன்பக்கலிலே பரமபக்திபர்யந்தமாக வுண்டானாலும், "அதுக்கும் கரணசம்பத்திகொடுத்தானீஶ்வரனன்றோ" என்று அதுவும் கழியாநிற்க, வருந்தியில்லாததொன்றுண்டாக்குகை பணியன்றிறே. ஆளவந்தார் "சிசுபாலன் பெற்றிலன்காண்" என்றருளிச்செய்வர்; "அதுவென்னென்னில், இதுக்கடியாகச் சொல்லலாவ தொரு சாதந மிவன்கையி லில்லாமையாலே; நாட்டை நலியாமைக்குக் கொற்றவன்வாசலுக்குள்ளே சுழற்றியெ

றிந்தானத்தனைகாண்" என்றருளிச்செய்வர். "காகம், திருமுன்பே யெய்த்துவிழுகையாலும், இவன் திருநாமங்களைச்சொல்லி த்வங்கரிக்கையாலும், அவன்குணங்கள் நினைத்தபடி விஸ்த்ருதமாகப்பெறுதே சங்குசிதங்களாயிற்றின" என்றிறே சொல்லுகிறது; "ஷலிஹுஜிஶிஶுபாலெதா ஜூமாகஸ்ரேவா ஗ுணலவஸஹவாஸாத்வக்ஷமாஸங்குசந்தீ" (பலிபுஜிஶிஶுபாலேதாத்ருகாகஸ்கரேவா குணலவஸஹவாஸாத்த்வத்க்ஷமா ஸங்குசந்தி) என்கையாலே. "பலபலநாழுஞ்சொல்லிப்பழித்தசிசுபாலன்றன்னை, யலைவலைமைதவிர்த்தவழகன்" என்றுரிறேபெரியாழ்வாரும். "வைதுநின்னைவல்லவாபழித்தவர்க்கும்" இத்யாதி. இப்பாட்டி லேற்றமாகிறது - "தன்னுலல்லதுசெல்லாமை விளைந்தாரைக்கூடக் கொடுபோனுன்" என்றதோரேற்றமோ, தன்பக்கலபராதம்பண்ணின சிசுபாலனுக்கு மவர்கள்பேற்றைக் கொடுத்ததுக்கென்றபடி..................................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்ரும்பாட்டு. (கேட்பார்களித்யாதி) "சிசுபாலன்திருவடி" என்று தொடங்கி, "அறிந்தும்-கேட்பார்கள் கேசவன்கீர்த்தியல்லால் மற்றுங்கேட்பரோ" என்றபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை (சிசுபாலனையுமித்யாதி)

கீழே - "கற்பார்" என்ருர், இங்கே - "கேட்பார்" என்கிருர்; இரண்டுக்கும் பேதமேதென்ன (கீழேயித்யாதி) அதாவது - கற்கையாவதென்றபடி. ஊற்றிருக்கும்படி - மாருதே யநுவர்த்திக்கும்படி. ஆனு லாசார்யசந்நிதியிலே சம்ஶய விபர்யயமறக் கற்றவனுக்கொழியக் கேட்டவனுக்கு முஜ்ஜீவநமுண்டோ வென்ன (நடுவிருந்தவித்யாதி) விழுக்காட்டில் - பர்யவசாநகதியிலே யென்றபடி. இருவர்க்கும் - கற்றவர்க்கும் கேட்டவர்க்கும். பலம்-பகவத்ப்ராப்தி. கல்லாதவனுக்கு ஶ்ரவணுதிகாரந்தானுண்டோவென்ன (கற்றிலனுகிலுமித்யாதி) ஏதத்விவரணம் (கற்றுத்தெளியவித்யாதி) "நடுவிருந்த" இத்யாதிவாக்யவிவரணம் (கல்வியுமித்யாதி) அதின் பலரூபமான கைங்கர்யமாவது - பிறரையும் தங்களோபாதி யப்யாசத்துக்கதிகாரிகளாக்கி யீஶ்வரன் திருவடிகளிலே சேர்த்து, அவனுக்கு முகவிகாஸத்தைப் பண்ணுகை யென்றபடி. (தனக்கோராபத்திலே யுதவுகைக்கொருகுறையில்லை)என்கிறவிடத்திலே - "அந்யெத்வெவமஜாநந்தஃ ஶ்ருத்வாந்யெப்ய உபாஸதெ। தெவி சாதிதரந்த்யெவ ம்ருத்யும் ஶ்ருதிபராயணாஃ"(அந்யேத்வேவமஜாநந்தஶ்ஶ்ருத்வாந்யேப்யஉபாஸதே|தேபிசாதிதரம்த்யேவம்ருத்யும்ஶ்ருதிபராயணாஃ) என்கிற ஶ்லோகமநுசந்தேயம். ஶ்ரோதாவுக்கிப்படி பலமுண்டானவோபாதி, இங்கிருக்கிற நாலுநாளு மிரண்டிழவு முண்டென்கிருர் (இனித்தன்னிழவித்யாதி) "கேசவன்கீர்த்தியல்லால் மற்றுங்கேட்பரோ" என்கையாலே - செவிக்கு ப்ரயோஜநமிதென்கிருர் (செவியிற்றுளையித்யாதி) "செவிக்கு ப்ரயோஜநம்" என்றதின் வ்யதிரேகசித்தமான வர்த்தத்தை யருளிச்செய்கிருர் (கேளாச்செவிகளித்யாதி) திருமொழி பதினோராம்பத்து ஏழாந்திருமொழி யிரண்டாம்பாட்டு, "நீள்வான்" இத்யாதி. அவன்கீர்த்தியைக்கேளாத செவிகள் செவியல்லவென்றபடி. "செவியல்ல" என்பானென், ரந்த்ரமிருக்கிறதேயென்ன (எறும்புவளையித்யாதி) க்ருஷ்ணனென்னுதே, "கேசவன்" என்றதுக்கு பாவம் (விரோதீத்யாதி) விரோதி நிரஸந

சீலமானபடியை விவரிக்கிருர் ( பருவம்நிரம்பி யித்யாதி வாக்யத்வயத்தாலே ) கற்றபின்பல்ல - ஜ்ஞாநம்பிறந்தபின்பல்லவென்றபடி. இத்தால் பலித்தவர்த்தமாதல், விவரணமாதல் (விரோதிநிரசநந்தானித்யாதி) ஸத்தயாபாதகமென்றது-ஸத்தாப்ரயுக்தமென்றபடி. இது கூடுமோவென்ன (நஞ்சித்யாதி) கேசியை சம்ஹரித்ததுக்கு ப்ரமாணம் ( வ்யாதிதாஸ்யஇத்யாதி ) "வ்யாதிதாஸ்யோமஹாரௌத்ரஸ்ஸோஸுர: க்ருஷ்ணபாஹுநா। நிபபாதத்விதாபூதோ வைத்யுதேநயதாத்ரும:" (வ்யாதிதாஸ்யோமஹாரௌத்ரஸ்ஸோஸுர:க்ருஷ்ணபாஹுநா । நிபபாதத்விதாபூதோ வைத்யுதேநயதாத்ரும:) இதி பஞ்சமேம்ஸே ஷோடஸே. அங்காந்துகொண்டு - திறந்துகொண்டு. பாஹுப்யாம் என்னுதே, "பாஹுநாத்விதாபூத:" (பாஹுநாத்விதாபூத: ) என்றதுக்கு பாவம் (முக்தராயிருப்பாரித்யாதி) விம்ம - அதிகமாக. பெருக்கவென்றபடி. "மற்றும்" என்றதுக்கு - இதரவிஷயங்களாக ( செவியிற்றுளை ) இத்யாதிவாக்யத்திலே யருளிச்செய்து, அவதாராந்தரமாக வர்த்தாந்தரம் ( கீழ்ச்சொன்னவித்யாதி ) வ்யாக்யாதாவினீடுபாடு (இவர்ஸ்வபாவமித்யாதி) ஒவ்வொன்றி லிவர்க்குண்டான ப்ராவண்யாதிசயஞ்சொல்லுகிறதாகையாலே விரோதமில்லையென்று விவக்ஷித் துத்தரமருளிச்செய்கிருர் (அவ்வவதாரத்தை யித்யாதிவாக்யத்ரயத்தாலே) ஓரோவவதாரங்களிலிவர்க்குண்டான ப்ராவண்யாதிசயத்தை ஸத்ருஷ்டாந்தமாக த்ருடீகரிக்கிருர் ( ஓரோகுணங்களையித்யாதி )

"பகவத்குணங்களைக்கேட்பார் செவிசுடு" என்ருல் இவன்ப்ருஷோக்தியின் க்ரௌர்யம் சித்தியாதென்று திருவுள்ளம்பற்றி, "கேட்பார்" என்றதுக்கு வேறேயர்த்தமருளிச்செய்கிருர் ( இதுக்குக் கீழித்யாதி ) இதுக்குக் கருத்து - கீழ் "கேட்பார்கள்" என்றதுக்கு - ( செவியிற்றுளையுடையவர்கள் ) என்ருப்போலே யிங்கும் சொல்லப்போகாது, அர்த்தௌசித்யத்துக்காகவென்றபடி. "கீழ்மைவசவுகளே - கேட்பார்செவிசுடுகீழ்மைவசவுகளேவையும்" என்று, "கீழ்மைவசவுகள்" என்றத்தை யிரண்டிடத்திலுங் கூட்டுவது. இப்படி சொல்லுகிறதுக்குபாவ மிவன்வசவின் க்ரௌர்யம் சித்திக்கைக்காக வென்கிருர் ( பகவந்நிந்தைக்கித்யாதி ) தண்ணியவர்களும் - நிக்ருஷ்டரும். அதிர - நடுங்க. அவதாரணார்த்தம் ( அநுகூலராயித்யாதி )

"சேட்பால்பழம்பகைவன்" என்றதுக்குபாவம் (மிகவுமித்யாதி) சேழ்ப்பழம்பகையைப் பாலாகவுடையவன்; "சேழ்" என்று - மிகுதியாய், மிகவும் பழையதான பகையை ஸ்வபாவமாக வுடையவனென்று சப்தார்த்தம். மிகவும் ஜந்மமூத்ருவானபடி யென்னென்ன (இந்தஜந்மமித்யாதி) விவரணம் ( இவனேரோவித்யாதி ) பகையினுடைய பழமைசொன்னதுக்கு ப்ரயோஜநமேதென்ன (அவ்வவஜந்மங்களிலித்யாதி) பலிதம் (அபுத்திபூர்வகமாகவித்யாதி) இஜ்ஜந்மத்தில் வாசனையாலே யானுலோவென்ன (அன்றீன்றவித்யாதி)

"தாட்பாலடைந்த" என்கையாலே - சாயுஜ்யமாவது ஐக்யமன்றென்று பரிஹரிக்கிருர் ( சாயுஜ்யலக்ஷணேத்யாதி வாக்யத்வயத்தாலே ) ( ப்ரஹ்மைவ ) என்றவிடத்தில் ஏவகாரம் - "விஷ்ணோரேவபூத்வா" ( விஷ்ணோரேவபூத்வா ) என்றவிடத்திற்போலே, "ஸாம்யமுபைதி" ( ஸாம்யமுபைதி ) இத்யாதிவசநாநுகுணமாக, இவசப்தார்த்தத்தைக் காட்டுகிறது. ஜ்யோதிஷா - பரமாத்மநேத்யர்த்த:. மோக்ஷமாவ தைக்யமன்றென்கைக்கு ப்ரமாணாந்தரம் ( ஜகத்வ்யாபாரேத்யாதி ) "நித்யகைங்கர்யம்பண்ணப்பெறுகை" என்றத்தை விவரிக்கிருர் (சாயுஜ்யமா

கிறதித்யாதி) "யுஜ்யத இதியுக் - குண:, ஸமாநா:யுஜ:யயோஸ்தௌ-ஸயுஜௌ, ஸயுஜோர்ப்பாவ:-ஸாயுஜ்யம்" (யுஜ்யத இதியுக்-குண:, ஸமாநா:யுஜ:யயோஸ்தௌ-ஸயுஜௌ, ஸயுஜோர்ப்பாவ:-ஸாயுஜ்யம்) என்று பாஷ்யோக்தலக்ஷணம். சாயுஜ்யமென்று கைங்கர்யத்தைச்சொல்லுமோவென்ன, ப்ரமாணம் (சாயுஜ்யம்ப்ரதிபந்நாஇத்யாதி)

"புண்யபாபேவிதூய நிரஞ்ஜந: பரமம்ஸாம்யமுபைதி" (புண்யபாபேவிதூய நிரஞ்ஜந: பரமம்ஸாம்யமுபைதி) இதி முண்டோபநிஷதி. "இதம்ஜ்ஞாநமுபாஶ்ரித்ய மமஸாதர்ம்யமாகதா:" (இதம்ஜ்ஞாநமபாஶ்ரித்ய மமஸாதர்ம்யமாகதா:) இத்யாதி கீதாயாம். "ஜகத்வ்யாபாரவர்ஜம் ஸமாநோஜ்யோதிஷா" (ஜகத்வ்யாபாரவர்ஜம் ஸமாநோஜ்யோதிஷா) இதிவ்ருத்தி:. "ஜகத்வ்யாபாரவர்ஜம் ப்ரகரணாதஸந்நிஹிதத்வாச்ச," (ஜகத்வ்யாபாரவர்ஜம் ப்ரகரணாதஸந்நிஹிதத்வாச்ச,) "போகமாத்ரஸாம்யலிங்காச்ச" (போகமாத்ரஸாம்யலிங்காச்ச) இதி ப்ரஹ்மமீமாம்ஸாயாம். (தம்மையே யொக்க வருள்செய்வர்) தம்மோடு ஸாம்யாபத்தியைத் தந்தருளுவரித்யர்த்த:. திருமொழி. "ஸாயுஜ்யம்ப்ரதிபந்நாயே" (ஸாயுஜ்யம்ப்ரதிபந்நாயே) இத்யாதிக்கு ஆகரங்கண்டுகொள்வது.

தன்மையறிந்துமென்னுதே, "தன்மையறிவாரையறிந்தும்" என்றதுக்கு பாவமேதென்ன (கேட்பார்க்கித்யாதி) அதாவது - ஓராசார்யன்பக்கலிலே கேட்கவேண்டுகையாலே, அடியிலே "கேட்பார்கள்" என்றவர்களுக்கு, "தன்மையறிவாரை" என்று கேட்கைக்கு விஷயமுண்டாக்குகிறு ரென்றபடி. கீழ்வாக்யத்தை விவரியாநிற்கச்செய்தேயு மந்வயமுங்காட்டுகிறார் (இந்தகுணஜ்ஞாநமித்யாதி) தன்மை - ஸ்வபாவம். குணமென்றபடி.

த்வேஷபரனான சிசுபாலன், திருவடிகளைக் கிட்டுகைக்கு ஹேதுவேதென்கிற சங்கையை யநுவதிக்கிறார் (இவனித்யாதி) ஹேதுவையருளிச்செய்கிறார் (திருநாமங்களையித்யாதி) த்வங்கரிக்கையும், வடிவழகை ஸ்மரிக்கையுமாகிற வித்தையொரு ஹேதுவாகச் சொல்லவேணுமோ; "சத்ருஸாதநமுண்டு" என்று கார்யத்தைக்கொண் டநுமித்தாலோ வென்கிற சங்கையை யுட்கொண்டு பரிஹரிக்கிறார் (மேலெழவித்யாதிவாக்யத்வயத்தாலே) நிர்ஹேதுகமென்கிற தென்கொண்டென்ன (ஸர்வேஶ்வரனித்யாதி) த்வங்கரிக்கைமுதலானவை தான் சத்ருஸாதநமானாலோ வென்ன (இவன்பக்கலிலேயித்யாதி) சிசுபாலனைப்போலே நாமும் வைது மோக்ஷம்பெறலாமேயென்ன; "அதுமோக்ஷமன்று" என்கைக்கு சம்வாதம் (ஆளவந்தாரித்யாதிவாக்யத்ரயத்தாலே) சாதநமிவன்கையி லில்லாமையாலே - அர்த்தித்வ மில்லாமையாலே யென்றபடி. எப்படியாகிலும் பெற்றானேயென்ன (நாட்டையித்யாதி) கொற்றவன் - ஸ்வாமி. "இதுக்கினியோருபபத்தி தேடிச் சொல்லுகையாவது அவன் க்ருபைக்குக் கொத்தை சொல்லுகை" என்றதுக்கு ப்ரமாணங்காட்டுவாராக, ததர்த்தத்தை யருளிச்செய்கிறார் (காகமித்யாதி) ப்ரமாணந்தன்னை யருளிச்செய்கிறார் (பலிபுஜீத்யாதி) ஸ்ரீரங்கராஜஸ்தவே. "மயிகுணபரமாணுதந்தசிந்தாநபிஜ்ஞே விஹரதுவரதாஸௌஸர்வதாஸார்வபௌமீ" (மயிகுணபரமாணுதந்தசிந்தாநபிஜ்ஞே விஹரதுவரதாஸௌஸர்வதாஸார்வபௌமீ) இத்யுத்தரார்த்தம். (சர்வேஶ்வரன் க்ருபையாலே சிசுபாலன் திருவடிகளைப்பெற்றானென் றுழ்

வார்களருளிச்செய்தார்கள் ) என்றார் - கீழே; அவர்களருளிச்செய்த தெங்கேயென்ன (பலபலவித்யாதி) "சிசுபாலன் நிர்ஹேதுகமாக மோக்ஷம்பெற்றான்" என்றதுக்கு ப்ரமாணம் (வைதுநின்னையித்யாதி) கீழ்ப்பாட்டைப்பற்ற விப்பாட்டுக் காதிக்யமேதென்ன ( இப்பாட்டிலேற்றமாகிறதித்யாதி )

பெரியாழ்வார்திருமொழி நாலாம்பத்து மூன்றாந்திருமொழி அஞ்சாம்பாட்டு, "பலபலநாழும்" இத்யாதி. இதுக்கர்த்தம் - பலபல குற்றங்களையும் சொல்லி நிந்தித்த சிசுபாலன்றன்னை; (அலைவலைமைதவிர்த்தவழகன்) சரமதசையிலே தன்னழகைக்காட்டித் தன்னளவிலவனுடைய த்வேஷத்தை மாற்றுகையாலே, "தான்" என்றால் நிந்தித்துக்கொண்டு மலைவலைத்தனத்தைப் போக்கி ரக்ஷித்த வழகையுடையவனென்றபடி. திருச்சந்தவிருத்தம் நூற்றுப்பதினோராம்பாட்டு ( வைதுநின்னை ) புகழப்படுமுன்னைப் பருஷித்து; (வல்லவாபழித்தவர்க்கும்) சக்தியுள்ளவளவும் நிந்தித்தவர்களாய்; (மாறில்போர்செய்து நின்னசெற்றதீயில்வெந்தவர்க்கும்) எதிரில்லாத யுத்தத்தைப்பண்ணி, உன் கோபாக்நியாலே தக்தரான சிசுபாலன்வாலி முதலானார்க்கும்; (வந்துனை) வந்தென்னை; ( எய்தலாகுமென்பர் ) சர்வாதிகனானவுன்னை வந்து ப்ராபிக்கலாமென்று ருஷிகள் சொல்லாநின்றார்கள். "ഭഗവന്തമുപനീതസ്തസ്മിന്നേവലയമുപയയൌ" (பகவந்தமுபநீதஸ்தஸ்மிந்நேவலயமுபயயௌ) என்று சிசுபாலமோக்ஷத்தை ஸ்ரீபராஶரபகவான் சொன்னான். "രാമബാണാസനക്ഷിപ്ത മാവഹത്പരമാംഗതിം" (ராமபாணாஸநக்ஷிப்த மாவஹத்பரமாங்கதிம் ) என்று வாலியினுடைய பரகதியைச் சொன்னான் ஸ்ரீவால்மீகிபகவானென்றபடி. கேட்பார்கள் - கேட்பார் செவிசுடு என்று தொடங்கி, தன்மையறிவாரை யறிந்தும்- கேசவன்கீர்த்தியல்லால் மற்றுங்கேட்பரோவித்யந்வயஃ............*

## நான்காம்பாட்டு.

தன்மையறிபவர்தாமவற்காளன்றியாவரோ
பன்மைப்படர்பொருளாதுமில்பாழ்நெடுங்காலத்து
நன்மைப்புனற்பண்ணிநான்முகனைப்பண்ணித்தன்னுள்ளே
தொன்மைமயக்கியதோற்றியசூழல்கள்சிந்தித்தே.

## ஆறாயிரப்படி.

( தன்மையறிபவர் ) ப்ரதிகூலனான சிசுபாலனை ரக்ஷித்தருளினானென்னுமிதுதானொருகுணமோ, அஸங்க்யேய ப்ரதிகூலாநுகூல சகலஜந்துஜாதத்துக்குமசேஷ புருஷார்த்தசாதநபூதகரண களேபராத்யுபகரண ப்ரதாநம்பண்ணின மஹாகுணத்தைப் பார்த்தாலென்கிறார்.

தேவாதிஸ்த்தாவராந்த நிகிலஜந்துக்களும் த்விபரார்த்தகாலம்ஸ்வஸ்மிந் ப்ரலீநமாய் சேதநேதராயமாணமாய் சகலபுருஷார்த்த சூந்யமாயிருக்க, ஸ்வகீயநிரவதிக காருண்யத்தாலே, சலிலசதுர்முகாதி சேதநாசேதந சமஸ்தவஸ்துக்களையும் தன்னுடைய சங்கல்பமாத்ரத்தாலேஸ்ருஷ்டித்தருளின விம்மஹாகுணத்தை யநுசந்தித்தால், சமஸ்த

வஸ்துயாதாத்ம்யத்தை யறிவாரந்தப் பரமகாருணிகனுக்கன்றி யாளாவரோ வென்கிறார்..................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இல்லாதஜகத்தையுண்டாக்கின வதிசயத்தையநுசந்தித்தருளுகிறார். பன்மை - பலவகைப்பட்ட தேவாதிபேதங்களை யுடைத்தாய். படர் - புண்யபாபாநுரூபமாகவிஸ்தீர்ணமான. பொருள் - பதார்த்தங்களெல்லாம். ஆதும்-ஒன்றும். இல் - இன்றியே. பாழ் - சூந்யமாய்க்கிடந்த. நெடுங்காலத்து - த்விபரார்த்த காலாவஸாநத்திலே. நன்மை-பூதாந்தர ஸம்ஸ்ருஷ்டமாய், கார்யோத்பத்திஹேதுவான நன்மையையுடைத்தான. புனல் - காரணஜலத்தை. பண்ணி - "அபஏவஸஸர்ஜாதௌ" (அபஏவஸஸர்ஜாதௌ) என்கிறகணக்கிலே ஸ்ருஷ்டித்து "ததண்டமபவத்தைமம்-தஸ்மிந்ஜஜ்ஞேஸ்வயம்ப்ரஹ்மா" (ததண்டமபவத்தைமம்-தஸ்மிந்ஜஜ்ஞேஸ்வயம்ப்ரஹ்மா) என்கிறமர்யாதையிலே அஜ்ஜலத்திலே யுத்பந்நமான அண்டத்திலே. நான்முகனை - ப்ரஹ்மாவை. பண்ணி - ஸ்ருஷ்டித்து. இந்தசமஷ்டி ஸ்ருஷ்ருட்யநந்தரம், தொன்மை - பூர்வவாசனையழியும்படி. தன்னுள்ளே தன் ஸ்வரூபைகதேசத்திலே. மயக்கிய - "ஏகீபவதி" (ஏகீபவதி) என்கிறபடியே மயங்குவித்துக்கிடந்த சமஸ்தபதார்த்தங்களையும். தோற்றிய-விபக்தமாம்படிஸ்ருஷ்டிமுகத்தாலேதோற்றுவித்த. சூழல்கள்-ஈக்ஷணஸ்ருஷ்ட்யநுப்ரவேச நாமரூபவ்யாகரணங்கள்தொடக்கமானவிரகுகளை. சிந்தித்து-வேதாந்தமுகத்தாலேயநுசந்தித்து. தன்மை-அவனுடைய வஸாதாரணலக்ஷணமானகாரணமான ஸ்வபாவத்தை. அறிபவர்-அறியுமவர்கள். தாம்-தங்கள் தத்த்வஜ்ஞாநவைபவாநுரூபமாக. அவற்கு-"க்ருஷ்ணஏவஹிலோகாநாமுத்பத்திஃ" (க்ருஷ்ணஏவஹிலோகாநாமுத்பத்திஃ) என்று ஜகத்காரணபூதனனக்ருஷ்ணனுக்கு. அன்றி - ஒழிய. வேறொருவர்க்கு, ஆள்-ஆள். ஆவரோ - ஆவரோ..................................................................*

## ஈடு - நான்காம்பாட்டு.

சிசுபாலனுக்குத் தன்னைக்கொடுத்ததோ ரேற்றமோ, ப்ரளயத்திலே மங்கிக்கிடந்த ஜகத்தையுண்டாக்கின விம்மஹாகுணத்துக் கென்கிறார். சிசுபாலனிற்குறைந்தாரில்லையிறே சம்சாரிகளில்.

(தன்மையறிபவர்தாம்) தத்த்வஸ்த்திதியறியுமவர்தாம். அதாவது இதினுடையவுத்பத்தி யவனுக்காகக் கண்டதென்றிருக்குமவர்கள்; * ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாயபோலே. ஜகத்காரணவஸ்துவே யுபாஸ்யமென்றறியுமவர்கள்; * கர்ரணந்துத்யேயஃஇறே, "அதாதோப்ரஹ்மஜிஜ்ஞாஸா" (அதாதோப்ரஹ்மஜிஜ்ஞாஸா) என்று "ஜந்மாத்யஸ்யயதஃ" (ஜந்மாத்யஸ்யயதஃ) என்றுநின்றதிறே. (அவற்காளன்றியாவரோ) கரணகளேபரங்களைக்கொடுத்தது தனக்கடிமைசெய்கைக்கிறே.

(பன்மைப்படர்பொருளாதுமில்பாழ் நெடுங்காலத்து) தேவாதிபேதத்தாலே பலவகைப்பட்டு, கர்மாநுகுணமாக விஸ்த்ருதமான பதார்த்தங்களொன்றுமில்லாதகாலத்து. தேவதிர்யகாதிரூபேண வுண்டாகக்

கடவவஸ்துக்க ளொன்றுமில்லாதபடி பாழ்கூவிக்கிடக்கிற நெடுங்காலத்து. ஈப்ʼவரன்ஜகத்தை ஸம்ஹரித்து நெடுங்காலம் பாழ் கூவிக்கிடக்கும்படி யிட்டுவைக்கும். கர்ஷகனவன் விளைநிலமுவர்கழியும்படி நீரைத்தேக்கி வைக்குமாபோலே, இவற்றினுடைய துர்வாசனைபோகைக்காக ஸ்ருஷ்டியோபாதிகாலம் ஸம்ஹரித்திட்டுவைக்கும். கண்ணுக்கிட வொருதுரும்பில்லாதபடி ஸதவஸ்த்தமானகாலத்து. (நன்மைப்புனல்பண்ணி) அழிக்கப்பரப்பின நீர்போலல்ல. "அபஏவ ஸஸர்ஜாதௌ" (அபஏவ ஸஸர்ஜாதௌ) என்கிறபடியே முற்படஜலஸ்ருஷ்டியைப்பண்ணி. இவ்வளவும்வர வசித்தைக்கொண்டுகார்யங்கொண்டு, "இவையிரண்டும் நம் புத்த்யதீனமானபின்பு இனிச்சித்தையுங்கொண்டு கார்யங்கொள்ளுவோம்" என்றுபார்த்து சதுர்முகனையும் ஸ்ருஷ்டித்து. "யஸ்யாத்மாஶரீரம்" (யஸ்யாத்மாஶரீரம்) "யஸ்யப்ருதிவீஶரீரம்" (யஸ்யப்ருதிவீசரீரம்) என்று இரண்டுமிவனுக்குறுப்பாய் பரதந்த்ரமாயிறேயிருப்பது. "யோப்ரஹ்மாணம்விதததிபூர்வம்" (யோப்ரஹ்மாணம்விததாதிபூர்வம்) (நன்மைப்புனல்பண்ணி நான்முகனைப்பண்ணியென்று) "ஒருகுழமணனைப்பண்ணி" என்பாரைப்போலே. (தன்னுள்ளே) தன் சங்கல்பசஹஸ்ரைகதேஶத்திலே. (தொன்மையித்யாதி) பழையதாக, "ஸதேவ" என்கிறபடியே - தானென்கிறசொல்லுக்குள்ளேயாம்படி பண்ணியிட்டுவைத்து, பின்னை "பஹுஸ்யாம்" (பஹுஸ்யாம்) என்கிறபடியேயிவற்றையாவிர்ப்பவிப்பித்தவிரகுகளைச்சிந்தித்து-தத்த்வஸ்த்திதி யறியுமவர்கள் அவனையொழியவேறேசிலர்க்காளாவரோ. (தன்மை-உண்மை. புனலென்றது - மற்றவற்றுக்குமுபலக்ஷணம். தோற்றிய - தோற்றுவித்த.) விரோதியான சிசுபாலனுக்குத் தன்றிருவடிகளைக் கொடுத்தானென்றது, இதோரேற்றமோ விரோதிகளையுண்டாக்கித் தன்னைவைவித்துக்கொண்ட நீர்மைக்கென்கிறார். பன்மைப்படர்பொருள் - தன்னுள்ளே தொன்மையயக்கிய - ஆதுமில்பாழ்நெடுங்காலத்து நன்மைப்புனல்பண்ணி நான்முகனைப்பண்ணி - தோற்றியசூழல்கள்சிந்தித்து - தன்மையறிபவர் தாமவற்காளன்றியாவரோ வென்றந்வயம்.........................................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு (தன்மையித்யாதி) "ஆதுமில் பாழ்நெடுங்காலத்து" என்றுதொடங்கி "தோற்றிய சூழல்கள்" என்னுமளவுங்கடாக்ஷித்தவதாரிகை (சிசுபாலனுக்கித்யாதி) உண்டாக்கினது மஹாகுணமானபடியென், அவனைப்போலேயெல்லாரும் வைத்துக்கொண்டிருந்தார்களோவென்ன (சிசுபாலனித்யாதி)

தத்வஸ்திதியாவதேதென்ன (அதாவதித்யாதி) அவனுக்காகக்கண்டது - அவனுடைய கைங்கர்யத்துக்குடலாக ஸ்ருஷ்டமாயிற்றென்றபடி. இதுக்கு த்ருஷ்டாந்தம் (ஸ்ருஷ்டஸ்த்வமித்யாதி) "தன்மையறிபவர்" என்றதுக்கர்த்தாந்தரம் (ஜகத்காரணேத்யாதி) "காரணவஸ்துவேயுபாஸ்யம்" என்னுமதுக்கு ஶ்ருதிசூத்ரங்

கள் (காரணத்வித்யாதி) "இதினுடையவுத்பத்தியவனுக்காகக்கண்டது" என்கிற வாக்யாநுகுணமாகவர்த்தம் (கரணேத்யாதி) இப்போது, "அவற்காளன்றியாவரோ" என்றதுக்கு - கரணகளேபரங்களைக்கொடுத்தவற்கொழிய வேறொருவர்க்காளாவரோவென்று சப்தார்த்தம். "தன்மையறிபவர்" என்றதுக்கு - "காரணவஸ்துவே யுபாஸ்யமென்றறியுமவர்கள்" என்றர்த்தமானபோது, "அவர்க்காளன்றியாவரோ" என்றதுக்கு-காரணபூதனானவனுக்கொழிய வேறொருவர்க்காளாவரோவென்று சப்தார்த்தம். இந்தவர்த்தம் இருபத்துநாலாயிரத்திலே கண்டுகொள்வது.

விவரணம் (தேவதிர்யகாதீத்யாதி) நெடுங்காலம் பாழாகவிட்டுவைக்கிறதேதுக்கென்ன (ஈஶ்வரனித்யாதிவாக்யத்வயம்) உவர்கழியும்படி - சவர்கழியும்படி. "ஆதுமில்" என்றதுக்கர்த்தம் (கண்ணுக்கிடவித்யாதி) கண்ணுக்கிட வொருதுரும்பில்லாதபடி-கண்ணாலேகாண்கைக் கொன்றுமில்லாதபடி யித்யர்த்தஃ.

புனலுக்குநன்மையேதென்ன (அழிக்கவித்யாதி) முந்தற ஜலஸ்ருஷ்டியைச்சொன்னதுக்கு ப்ரமாணம் (அபஏவேத்யாதி) இவ்வளவும் வரவென்றது-அண்டஸ்ருஷ்டிபர்யந்தமென்றபடி. இவையிரண்டும் - சிதசித்துக்களிரண்டும். இரண்டும் தன்புத்த்யதீநமோவென்ன, ப்ரமாணம் (யஸ்யாத்மேத்யாதி) சேதநஸ்ருஷ்டியில் முந்தற ப்ரஹ்மஸ்ருஷ்டியைச்சொன்னதுக்குப்ரமாணம் (யோப்ரஹ்மாணமித்யாதி) ஸ்ருஷ்டித்தானென்னுதே, "பண்ணி" என்றதுக்குபாவம் (நன்மைப்புனலித்யாதி) குழமணன் - மரப்பாச்சி.

மயங்கல்-கூடலாய், (இட்டுவைத்து) 'என்றபடி. தோற்றிய-தோற்றுவித்த.

கீழ்ற்பாட்டி லிதுக்காதிக்யமேதென்ன (விரோதியான வித்யாதிவாக்யத்வயம்) "ஆதுமில்பாழ்நெடுங்காலத்து - மயக்கிய" என்று - சம்ஹாரத்திலும், "நான்முகனைப்பண்ணி - தோற்றிய" என்று - ஸ்ருஷ்டியிலும் தோற்றுகிற புநருக்திகளைப் பரிஹரிக்கைக்காக வந்வயம் (பன்மையித்யாதி) மயக்கிய-மயக்குகையாலேயென்றபடி..........................................................................................*



# ஐந்தாம்பாட்டு.

சூழல்கள்சிந்திக்கின் மாயன்கழலன்றிச்சூழ்வரோ
வாழப்பெரும்புனறன்னுளமுந்தியஞாலத்தைத்
தாழப்படாமற்றன்பாலொருகோட்டிடைத்தான்கொண்ட
கேழற்றிருவுருவாயிற்றுக்கேட்டுமுணர்ந்துமே.

## ஆறாயிரப்படி.

(சூழல்கள்) கிணற்றிலேவிழுந்த தன்னுடைய ப்ரஜையை மாதாவானவள் வாத்ஸல்யாதிசயத்தாலே விழுந்தெடுக்குமாபோலே, ரஸாதலத்திலே நிமக்நையான ப்ருதிவியை வராஹரூபதரனாய் க்ஷணத்திலேசென்று முழுகியெடுத்தருளின விம்மஹாகுணத்தைக்கேட்டு, ப்ரஹ்ருதமானத்தை ஸ்மரித்திருந்துவைத்து; "தங்களுக்கொரு புருஷார்த்தஸாதநத்தைச்செய்யவேண்டும்" என்று நினைக்கில், அந்தவாஶ்சர்ய பூதனானவனுடைய திருவடிகளையல்ல தாஶ்ரயிப்பரோவென்கிறார்.......................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அழிந்தஜகத்தையுண்டாக்கினவளவன்றியே, தன்வடிவை யழிய மாறியு மாபத்ஸகனான ஸ்ரீவராஹரூபியினுடைய வ்ருத்தாந்தத்தை யருளிச்செய்கிறார்.

பெரு-அபர்யந்தமான. புனல் தன்னுள்-ப்ரளயஜலத்திலே. ஆழ - அண்டகபாலத்தளவுமாழ. அழுந்திய-அழுந்தின. ஞாலத்தை-பூமியை. தாழப்படாமல்-காலவிளம்பத்தாலேயுருமாயாதபடி. தன்பால்-தன்திருமேனியிலேகதேசமாயிருப்பது. ஒரு-ஒரு. கோட்டிடை-கோட்டினிடத்திலே. தான்-அபேக்ஷாநிரபேக்ஷமாம்படி, ஸ்வேச்சாமாத்ரத்தாலே. கொண்ட-இடந்தெடுத்துக்கொண்ட. கேழல்- "கோலவராகம்" என்கிறபடியே ஸ்ரீவராஹமான. திரு-அழகிய. உரு-வடிவை. ஆயிற்று-உடையனானவித்தை. கேட்டும்-வேதேதிஹாஸபுராணமுகங்களாலேகேட்டும். உணர்ந்தும்-மநநம்பண்ணியும்வைத்து. சூழல்கள்-தங்களுக்குஜ்ஜீவநோபாயமான நல்விரகுகள். சிந்திக்கில்-ஆராயநினைக்கில். மாயன் – "ஞானப்பிரானையல்லாலில்லைநான்கண்டநல்லதுவே" என்கிறபடியே ப்ரளயாபத்துக்குதவி, சம்சாரார்ணவோத்தரணோபாயபூதனுமா யாஸ்சர்யகரனான வராஹரூபியுடைய. கழல்-திருவடிகளை. அன்றி-ஒழிய. சூழ்வரோ-ஆஸ்ரயிப்பரோ ....................................................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

ஜகத்ஸ்ருஷ்டிபண்ணின தோரேற்றமோ, ஸ்ருஷ்டமானஜகத்தை ப்ரளயங்கொள்ள மஹாவராஹமாயெடுத்து ரக்ஷித்தகுணத்துக்கென்கிறார்.

(சூழல்கள்சிந்திக்கில்) தான் தன்னோடுறவற ஜீவிக்கைக்குறுப்பான விரகுபார்க்கில். தந்தாமபிமதங்கள் சித்திக்கைக்கு விரகுகள்பார்க்கில். ( உபாயங்கள் பலவுண்டிறே. அடியானுக்கடியோடேயிறே யந்வயம். ) (மாயன்கழலன்றிச்சூழ்வரோ) ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணமொருதலையானால் தான் தன்னைப்பேணாதேநோக்கு மாஸ்சர்யபூதனானவனுடைய திருவடிகளையல்லது பற்றுவரோ. (ஆழப்பெரும்புனல் தன்னுளழுந்திய ஞாலத்தை) ஆழத்தையுடைத்தான மிக்கஜலத்திலே யழுந்தினஞாலமென்னுதல், பெரும்புனல்தன்னுள்-ஆழ-அழுந்தியஞாலமென்னுதல். (அழுந்தியஞாலத்தை) அண்டபித்தியிலே சென்றொட்டினபூமியை. (தாழப்படாமல்) தறைப்படாமல். மங்காமல். உள்ளதுகரைந்துபோனபின்பு, இனி சத்தையுங்கூட வழியவொண்ணாதென்றுபார்த்து. ( தன்பாலொரு கோட்டிடைத்தான்கொண்ட ) மஹாப்ருதிவியைத் தன்னெயிற்றிலே நீலமணிபோலேகொண்ட. தன்திருவெயிற்றி லேகதேசத்திலேகொண்ட. உதாரராயிருப்பார் நாற்பதுபேருக்குச் சோறிடநினைத்து நூறுபேருக்குச் சோறுசமைக்குமாபோலே, ரக்ஷ்யத்தினளவல்லகாணும் கொண்டவெயிற்றின்பெருமை. முகாந்தரத்தாலே ரக்ஷிக்கையன்றியே, தன்முகேந வெடுத்து ரக்ஷித்தபடியிறே. (தான்கொண்ட) கரைந்துபோனபூமி யர்த்திக்கவன்றிறேசெய்தது. (கேழல்திருவுருவாயிற்று) அழிவுக்கிட்டவடிவுதன

க்கே யாலத்திவழிக்கவேண்டி யிருந்தபடி. ஆஶ்ரிதரக்ஷணத்துக்காகவந்து தன்னைப்பேணுதே யொழியவொழிய அதுதானே நிறம்பெறும்படியாய்க் காணுமிருப்பது; "மானமிலாப்பன்றியாந்தேசு" என்னும்படியே. [மாசுடம்பில்நீர்வாரா] எங்கேனுமுண்டான வழுக்கும் வந்துசேரும்படியிருப்பதொரு வடிவைக்கொண்டு. [மானமிலாப்பன்றியாம்] ஈஶ்வரத்வம் பின்னுட்டாதிருக்கை. சஜாதியங்கள் மோந்துபார்த்து "தன்னினம்"என்று விஶ்வஸிக்கும்படி யகவாயிற்புரையற் றிருக்கை. மாயாம்ருகத்தைமோந்துபார்த்து "ராக்ஷஸகந்தமுண்டு" என்றுபோயிற்றினவிறே ம்ருகங்கள். [பன்றியாந்தேசுடையதேவர்] இவ்வடிவுகொண்டிலனுகில் அருமந்ததேஜஸ்ஸையெல்லா மிழக்குமத்தனையாகாதே. நித்யசூரிகளுக் கோலக்கங்கொடுத்தங்கே யிருப்பதிற்காட்டிலும் தாழவிட்டதத்தால்வந்த வேற்றம். (கேட்டுமுணர்ந்துமே) ஶ்ரவணமநநங்கள்பண்ணியும் - சூழல்கள் சிந்திக்கில் மாயன்கழலன்றிச்சூழ்வரோ. தான் ஜகத்காரணத்வாதி குணங்களொன்றும் குறையாதபடி ஸங்கல்பத்தாலே ஜகத்தை ஸ்ருஷ்டித்தானென்னுமதோரேற்றமோ, ப்ரளயங்கொண்டபூமியை, தன்னுருக்கெடுத்து வேற்றுருக்கொண்டெடுத்த விவ்வுபகாரத்துக்கு.........................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (சூழல்களித்யாதி) "கேழற்றிருவுருவாயிற்று" என்றபதத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (ஜகத்ஸ்ருஷ்டியித்யாதி)

உபாயமென்னுதே, "சூழல்கள்" என்றதுக்குபாவமாதல், அந்வயமுகேநபாவமாதல் (தான் தன்னேடித்யாதி) பஹுவசநார்த்தம் (தந்தாமித்யாதி) "கேழற்றிருவுருவாயிற்று" என்றத்தைக்கடாக்ஷித்து, "மாயன்" என்றதுக்கர்த்தம் (ரக்ஷ்யவர்க்கத்தினித்யாதி) சூழ்வரோ - (பற்றுவரோ) சூழ்கை - ஆஶ்ரயிக்கை.

"ஆழ" என்றது - * பெரும்புனலுக்கு விசேஷணமாதல், "அழுந்திய" என்றதுக்கு விசேஷணமாதல். அழுந்தியிருக்க, "தாழப்படாமல்" என்னக்கூடுமோவென்ன (உள்ளித்யாதி)

ஶ்வேதவராஹமாகையாலே-பூமியை (நீலமணி) என்கிருர். "இடை" என்றதுக்கர்த்தம் (தன்றிருவெயிற்றிலித்யாதி) ஏகதேசமமைந்தால் மற்றையிடமெதுக்காகக்கொண்டானென்ன (உதாரராயித்யாதி) ரஸோக்தி (முகாந்தரத்தாலேயித்யாதி) கொண்ட என்னுதே, "தான்கொண்ட" என்றதுக்குபாவம் (கரைந்துபோனவித்யாதி)

"திரு" என்றதுக்கு - விக்ரஹஸௌந்தர்யமாகவர்த்தம் (அழிவுக்கிட்டவித்யாதி) ஆத்மகுணத்தால்வந்த வழகாகவர்த்தாந்தரம் (ஆஶ்ரிதரக்ஷணத்துக்கித்யாதி) அழிவுக்கிட்ட வடிவுதனக்கு - தன்மேன்மையைவிட்டு நீர்மையைக்கொள்ளுகையான வராஹவேஷத்துக்கென்றபடி. வராஹநாயனுரப்படி யழகியராயிருப்பாரோவென்ன (மானமிலாவித்யாதி) "மாசுடம்பு" என்றதுக்கர்த்தம் (எங்கேனுமித்யாதி) "மானமிலா" என்றதுக்கர்த்தம் (ஈஶ்வரத்வமித்யாதி) "ஆம்" என்றதுக்கர்த்தம் (ஸஜாதியங்களித்யாதி) வராஹமானுல் தன்னினமென்று விஶ்வஸியாதோவென்ன (மாயாம்ருகத்தையித்யாதி) "தேசு" என்றதுக்குபாவம் (இவ்வடிவித்

யாதி ) " தேவர் " என்றதுக்குபாவம் ( நித்யசூரிகளுக்கித்யாதி ) ( கேட்டுமுணர்ந்தும் ) அத்தாலே ஸ்வயத்நத்தைவிட்டவர்கள் (சூழல்கள்சிந்திக்கில் மாயன்கழலன்றிச்சூழ்வரோ) என்று கூட்டுவது. " ஜகத்ஸ்ருஷ்டி " ( ஜகத்ஸ்ருஷ்டி ) இத்யாத்யவதாரிகாவாக்யத்தை சோபபத்திகமாக வருளிச்செய்கிறார் ( தான்ஜகத்காரணத்வாதீத்யாதி )

ஆழப்பெரும்புனலென்றுதொடங்கி, கேட்டுமுணர்ந்தும் - சூழல்கள் சிந்திக்கில் மாயன்கழலன்றிச்சூழ்வரோ வித்யந்வயः ......................................*



## ஆறாம்பாட்டு.

கேட்டுமுணர்ந்தவர்கேசவற்காளன்றியாவரோ
வாட்டமிலாவண்கைமாவலிவாதிக்கவாதிப்புண்
டீட்டங்கொள்தேவர்கள்சென்றிரந்தார்க்கிடர்நீக்கிய
கோட்டங்கைவாமனனாய்ச்செய்தகூத்துக்கள்கண்டுமே.

### ஆறாயிரப்படி.

(கேட்டுமுணர்ந்தவர்) மஹாபலியாகிற மஹாஸுரனாலே பீடிதமாய் தந்நிரஸநார்த்தியான தேவஸமூஹத்தாலே யர்த்திதனான வெம்பெருமான், அவனுடைய வௌதார்யத்தாலே ஸ்வரூபேணவவனை, நிரசிக்கமாட்டாமை ஸ்ரீவாமனனாய்வந்து பிறந்தருளி, ஆஸ்ரிதார்த்தமாக " தத்யாந்நப்ரதிக்ருஹ்ணீயாத் " (தத்யாந்நப்ரதிக்ருஹ்ணீயாத்) என்கிற தன்ஸ்வரூபத்தையுங்கூட வ்யதாகரித்துக்கொண்டவனுடைய; ஜகத்தை, "கொள்வனன் மாவலிமூவடிதா " என்றிரந்துகொண்டு செய்தருளின வாஸ்சர்யங்களைக் கண்டுவைத்தும், அறிவுடையராயிருப்பார், ப்ரஹ்மேஸாநாதிகளுக்குக் காரணபூதனான ஸ்ரீவாமநனுக்கல்ல தாளாவரோ வென்கிறார்.

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆகாரத்தையழிய மாறினவளவன்றியே யத்தோடே யாத்மகுணத்தையுங்கூட வழியமாறின வர்த்தித்வ ஸாமர்த்த்யத்தையருளிச்செய்கிறார்.

வாட்டமிலா - ஒருகாலுஞ்சுவறாத. வண்-ஔதார்யத்தையுடைத்தான. கை-கையையுடைய. மாவலி - மஹாபலியானவன். வாதிக்க - தன்செருக்காலே நலிய. வாதிப்புண்டு - நலிவுபட்டு. ஈட்டங்கொள் - பரஸ்பரவிரோதமற்றுத்தம்மில் தாம்சேர்ந்துதிரண்ட. தேவர்கள் - உதாரஸ்வபாவரானதேவர்கள். சென்று - எழுந்தருளியிருந்தவிடத்தேதாங்களேசென்று. இரந்தார்க்கு- "ஸரணம் த்வாமநுப்ராப்தா:" (ஸரணம்த்வாமநுப்ராப்தா:) என்கிறபடியே ப்ரார்த்தநாரூபையான ஸரணாகதியைப்பண்ணினவர்களுக்கு. இடர்நீக்கிய - கார்யப்ரதிஜ்ஞாவசநத்தாலே மநோது:கநிவர்த்தகனாய்க்கொண்டு. மஹாபலியினுடையவௌதார்யமே பற்றாசாகவர்த்தியாய்ச்சென்று, தன்னுடையபலப்ரதாநதசையிலுங்காட்டில், கோடு-அர்த்தித்தேற்கையாலே. அம் - அழகுபெற்ற. கை - கையையுடையனான. வாமனனாய்-வா

மாவடிவைக்காட்டி. வசிகரித்தும், வார்த்தையாலே நெஞ்சைக்கலக்கியும், வளர்ந்த ளந்தபோதே அநாயாசேநவ்யாபரித்தும், செய்த - பண்ணின. கூத்துக்கள்-நாடகங்களை. கண்டும் - ப்ரத்யக்ஷஸமாநாகாரமாகவநுசந்தித்தும். கேட்டும்-அந்தவபதாநத்தைபுராணாதிமுகத்தாலேகேட்டும். உணர்ந்தவர் - அறிவுடையாரா யிருந்தவர்கள். கேசவற்கு - அலைந்தகுழலோடேவருகையாலே ப்ரஶஸ்தகேசனான வாமநனுக்கு. அன்றி - அல்லது. வேறொருவர்க்கு, ஆள் - அடிமை. ஆவரோ-ஆவரோ.

கேசவனென்று - ஒருவன்திருவடிவிளக்க, ஒருவன் தீர்த்தம் சுமக்கும்படி ப்ரஹ்மருத்ரர்களுக்கு நிர்வாஹகனென்றுமாம்......................................*

## ஈடு - ஆறும்பாட்டு.

கீழ்ச்சொன்ன குணங்கள்தானோரேற்றமோ * அலம்புரிந்த நெடுந்தடக்கையைக்கொண்டு கோட்டங்கைவாமனனா யிந்தபூமியை ரக்ஷித்த மஹாகுணத்துக்கென்கிறார்.

(கேட்டுமுணர்ந்தவர்) ஓராசார்யனோரர்த்தத்தை யுபதேசித்தாலத்தை ப்ரவணம்பண்ணி, "ஏவம் ஜ்ஞாத்வா விதுமர்ஹதி" (ஏவம்ஜ்ஞாத்வாபவிதுமர்ஹதி) என்கிறபடியே பின்னையவ்வர்த்தத்தைத் தெளிந்திருக்குமவர்கள். (கேசவற்காளன்றியாவரோ) புறம்பாஶ்ரயணீயரில்லாதபடி தானே யாஶ்ரயணீயனானவனுக்கொழிய வாளாவரோ. "ஆவாம் தவாங்கே ஸம்பூதௌ தஸ்மாத் கேஶவநாமவாந்" (ஆவாந்தவாங்கே ஸம்பூதௌ தஸ்மாத்கேஶவநாமவாந்) என்கிறபடியே யாதல், ப்ரஶஸ்தகேசனென்னுதல்.

(வாட்டமிலாவண்கை) கொடுத்துமாறக்கடவதன்றியே, எப்போதும் கொடுக்கையிலே யொருப்பட்டகை. ராவணாதிகளைப்போலே தலையறுத்துப்பொகடவொண்ணாமைக்கு நிபந்தநமுண்டாகையாலே யழியச்செய்திலன். (மாவலிவாதிக்கவாதிப்புண்டு) இதுபற்றாசாகவவன்நெருக்க நெருக்குண்டு. (ஈட்டங்கொள்தேவர்கள்) க்ராமணிகளைப்போலே, ஒருவருச்ச்ராயமொருவர்பொறாதே, தலையறுப்பாரும் தலையறுப்புண்பாருமாய்த்திரியக்கடவஜாதியிறே; இப்படிசேராச்சேர்த்தியாயிருக்கிறவர்கள் ஆபத்துமிக்கவாறே தந்தாமபிமாநங்களைப்பொகட்டு, எல்லாருமொருமிடறாய்வந்துவிழுந்தார்கள். ஈட்டம்-திரள். (சென்றிரந்தார்க்கிடர்நீக்கிய) கூறுசெய்வானுமம்பலத்தே யிருந்தால் "ஈஶ்வரனும் நம்பக்கல்வரத்தட்டென்" என்றிருக்குமாபோலே, "'எல்லாரும்நம்பக்கல்வரவேணும்' என்றிருந்தவர்கள் தங்களாபத்தின்கனமிறே துர்மானிகளாயிருக்கிறவர்கள் திரளவந்திரந்தது" என்று திருவுள்ளத்திலேகொண்டு அவர்களிடரைப் போக்கினபடி. "அதிகம் மேநிரே விஷ்ணும்" (அதிகம்மேநிரேவிஷ்ணும்) என்று - ஒருசொத்தைவில்லைமுறித்தபோதாக வெம்பெருமான் சர்வாதிகனென்பது, அல்லாதபோது "ஈஶ்வரோஹம்" (ஈஶ்வரோஹம்) என்பதானதேவஜாதிபற்காட்டி, அவர்களிடரைநீக்கினபடி. (கோட்டங்கைவா

மனுய்) நீரேற்கக்குவித்த வழகியகையையுடையனுய்; "பொல்லாக்குற ளுருவாய்ப்பொற்கையில்நீரேற்று" என்கிறபடியே. தேவர்களை நெருக்கு கையாலேயழியச்செய்யவேணும், குணவிசேஷத்தாலேயழியச்செய்யமா ட்டான்; இனி, இரண்டுக்கு மநுரூபமாகவொருவழி, ரக்ஷகனுனதான்பா ர்க்குமித்தனையிறே. [பொற்கை] பொலிவெய்தினகை. அழகியகையென்ற படி. கொடுத்து வளர்ந்தகை; "கோஸஹஸ்ரப்ரதாதாரம்" (கோஸ ஹஸ்ரப்ரதாதாரம்) என்றும், "தத்யாந்ந ப்ரதிக்ருஹ்ணீயாத்" (தத்யாந்ந ப்ரதிக்ருஹ்ணீயாத்) என்றும் சொல்லுகிறபடியே. (ஏற்றுக்குவிந்த கையையுடையனுய். அங்கை - அழகியகை.) (செய்தகூத்துக்கள் கண்டு மே) அன்றேபிறந் தன்றேவளர்ந் தன்றேபிக்ஷையிலேயதிகரித்து, மஹா பலியஜ்ஞவாடத்தளவும்செல்ல, பூமிநெளியும்படி பதறிநடந்து சென்று புக்கு, க்ருஷ்ணாஜிநமும் யஜ்ஞோபவீதமும் முஞ்ஜியுமான விநீதவேஷத் துடனேநின்று, "கொள்வனுன்" என்றுப்போலேசொன்ன முக்தஜல்பி தங்களும்; சிறுகாலைக்காட்டிப் பெரியகாலாலே யளந்ததுமாகிற வ்வ்வ் யாபாரங்களடங்கலு மிவர்க்குவல்லாராடினுப்போலே யிருக்கிறபடி. ஐஸ் வரமான மேன்மையுங்கிடக்கச்செய்தே, ஸ்ரியःபதியான தானிரந்தாஸ்ரித ரைரக்ஷித்தநீர்மைக்கு, ப்ரளயங்கொண்ட பூமியையெடுத்துரக்ஷித்ததொ ரு குணமாயிற்றதோவென்கிருர்..........................................*

## ஜீயர் அரும்பதம்.

ஆரும்பாட்டு (கேட்டுமித்யாதி) கீழெஞ்சுபாட்டிலும்சொன்ன குணங்களைப் பற்ற விப்பாட்டிற்சொல்லுகிறகுண மதிகமென்கிருர் (கீழ்ச்சொன்னவித்யாதி) திரு நெடுந்தாண்டகம் (அலம்புரிந்தநெடுந்தடக்கை) அர்த்திகளுக்கு "போரும்" என்னு ம்படி கொடுக்கவல்ல பெரியகையென்றபடி. (கோட்டங்கைவாமனுய்) நீரேற்க க்குவித்த வழகியகையையுடைய வாமனனுயென்றபடி. கோடு குவிக்கை.

"ஜ்ஞாத்வா - ஏவம் - பவிதமர்ஹதி" (ஜ்ஞாத்வா - ஏவம் - பவிதமர்ஹதி) என்றந்வயம். "ப்ரஹ்மருத்ரோத்பாதகன்" என்கிறவர்த்தத்திலேபாவ ம் (புறம்பாஸ்ரயணீயரித்யாதி) ப்ரதாநரான ப்ரஹ்மருத்ராதிகளுக் குத்பாதகனெ ன்றபோதே, இவனையொழிய வேறுஸ்ரயணீயரில்லையென்றபடி. ப்ரஹ்மருத்ரோத் பாதகத்வத்திலே ப்ரமாணம் (ஆவாமித்யாதி) ஹரிவம்ஸே கைலாஸயாத்ராயாம், "கஇதிப்ரஹ்மணோநாமஈஸோகம்ஸர்வதேஹிநாம்" (கஇதிப்ரஹ்ம ணோநாமஈஸோகம்ஸர்வதேஹிநாம்) இதி பூர்வார்த்தம்.

"வாட்டமிலா" என்றதுக்கர்த்தம் (கொடுத்துமாறவித்யாதி) இப்போதிவ னுடைய வௌதார்யத்தை வர்ணிக்கிறதுக்கு பாவம் (ராவணுதிகளையித்யாதி) இது பற்றுசாக - இந்த வௌதார்யம் பற்றுசாக.

தேவர்கள் திரளாயிரார்களோ, "ஈட்டங்கொள்" என்று விசேஷிக்கிறதெ ன்னென்ன, பாவம் (க்ராமணிகளையித்யாதி) ஆனுல், இப்படிப்பட்டவர்கள் திர ளுகைக்கு ஹேதுவேதென்ன (இப்படி சேராவித்யாதி) இரந்தார்க் கென்னுதே,

"சென்றிரந்தார்க்கு" என்றதுக்குபாவம் (கூறுசெய்வானித்யாதி) கூறுசெய்வான் - மணியம்பண்ணுமவன். அவர்கள் துர்மானிகளோ வென்ன (அதிகம்மேநீரே இத்யாதி)

கோடுதல் - குவித்தல். "அம்" என்று - அழகு. அதாவது - ஔதார்யம். "நீரேற்க" என்றதுக்கு ப்ரமாணம். (பொல்லாவித்யாதி) நாய்ச்சியார்திருமொழி. நீரேற்கவேண்டிவா னென்னென்ன (தேவர்களை யித்யாதி) கைக்கழ கேதென்ன (கொடுத்துவளர்ந்தவித்யாதி) இதுக்கு ப்ரமாணம் (கோஸஹஸ்ரேத்யாதி) "𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑍋 𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌂 𑌰𑌾𑌮𑌃 𑌮𑌹𑌾𑌪𑌰𑌿𑌘𑌸𑌨𑍍𑌨𑌿𑌭𑌮𑍍 । 𑌗𑍋𑌸𑌹𑌸𑍍𑌰𑌪𑍍𑌰𑌦𑌾𑌤𑌾𑌰𑌮𑍁𑌪𑌧𑌾𑌯𑌭𑍁𑌜𑌂𑌮𑌹𑌤𑍍" (தக்ஷிணோதக்ஷிணம்ராமஃ மஹாபரிகஸந்நிபம் । கோஸஹஸ்ரப்ரதாதார முபதாயபுஜம்மஹத்) இதி யுத்தகாண்டே, வருணம்ஶரணம்கச்சதோ ராமஸ்யக்ருத்யகதநே. "𑌤𑌦𑍍𑌯𑌾𑌨𑍍𑌨 𑌪𑍍𑌰𑌤𑌿𑌕𑍃𑌷𑍍𑌣𑍀𑌯𑌾𑌤𑍍 𑌨𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌤𑍍𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌦𑌪𑍍𑌰𑌿𑌯𑌮𑍍 । 𑌅𑌪𑌿𑌤𑍍𑌰𑍈𑌲𑍋𑌕𑍍𑌯𑌹𑍇𑌤𑍋𑌰𑍍𑌵𑌾 𑌰𑌾𑌮𑌸𑍍𑌸𑌤𑍍𑌯𑌪𑌰𑌾𑌕𑍍𑌰𑌮𑌃" (தத்யாந்நப்ரதிக்ருஷ்ணீயாத் நப்ரியாத்கிஞ்சிதப்ரியம் । அபித்ரைலோக்யஹேதோர்வா ராமஸ்ஸத்யபராக்ரமஃ) இதி சுந்தரகாண்டே ஹநூமந்தம்ப்ரதிஸீதா. "கூத்துக்கள்" என்ற பஹுவசநார்த்தம் (அன்றேபிறந்தித்யாதி) இத்தை "கூத்து" என்கிறது - ஆகர்ஷகத்வத்தைப் பற்றவென்கிறார் (வல்லாராடினுப்போலேயிருக்கிறபடியென்று) கீழ்ப்பாட்டைப்பற்ற விப்பாட்டுக் காதிக்யமேதென்ன (ஐஶ்வரமானவித்யாதி)

கூத்துக்களை - ஆசார்யமுகத்தாலே கேட்டுமுணர்ந்தும் - கண்டும், அதாவது - சாக்ஷாத்கரித்து மிருக்குமவர்கள் - கேசவற்காளன்றி யாவரோவித்யந்வயஃ. *

# ஏழாம்பாட்டு.

கண்டுந்தெளிந்துங்கற்றார்கண்ணற்காளன்றியாவரோ
வண்டுண்மலர்த்தொங்கன்மார்க்கண்டேயனுக்குவாழுநா
ளிண்டைச்சடைமுடியீசனுடன்கொண்டுசாச்செல்லக்
கொண்டங்குத்தன்னொடுங்கொண்டுடன்சென்றதுணர்ந்துமே.

## ஆறாயிரப்படி.

(கண்டுந்தெளிந்தும்) மாதாபிதாக்களாலே மஹாதபஸாலப்தனாயநவரதமுபலாலிதனாயிருந்த மார்க்கண்டேயன் தன்னுடைய வாயுரர்த்தமாக ருத்ரனையாஶ்ரயிக்க, அவனும் "மத்ஸமீஹித ஸித்த்யர்த்தமாக நானும் பரமபுருஷனைநோக்கி தபஶ்சர்யைபண்ணி வர்த்திக்கிறது" என்று சொல்லித் தன்னுடைய தபோவேஷத்தையுங்காட்டி, "அவனுடைய திருவடிகளை யாஶ்ரயிக்கப்போரு" என்று அவனைக்கொண்டு ருத்ரன்வந்தாஶ்ரயிக்க, அவனுக்காக மார்க்கண்டேயனுக்கு ஸமக்ரமான வாயுஸ்ஸைக்கொடுத்தருளி நித்யகிங்கரத்வேந விஷயீகரிப்பதுஞ்செய்தருளின விம்மஹாகுணத்தை யறிந்துவைத்தும், ஸாராஸாரவிவேகஜ்ஞராயிருப்பாரந்த க்ருஷ்ணனுக்காளன்றியாவ்ரோவென்கிறார் ......................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், தானர்த்தியாய்வைத்த சர்வதேவதைகளும் தன்காற்கீழேவள ரும்படியான வாதிக்யத்தளவன்றியே, தேவதாந்தரபரனான மார்க்கண்டேயனையு மங்கீகரித்த வதிசயிதகுணத்தை யநுசந்தித்தருளுகிறார்.

வண்டு-வண்டுகள். உண்-மதுபாநம்பண்ணுகிற. மலர்-மலரையுடைத்தான. தொங்கல்-மாலையையுடையனாகையாலே. போகயோக்யமான யௌவநாவஸ்த்தை யையுடைய, மார்க்கண்டேயனுக்கு-மார்க்கண்டேயனுக்கு. வாழுநாள்-உஜ்ஜீவநகா லத்தைத. இண்டை-போக்த்ருத்வசூசகமானமாலையையும். சடைமுடி - உபாஸகத்வ சூசகமான ஜடாமகுடத்தையுமுடைய. ஈசன்-ஈஶ்வராபிமாநியானருத்ரன். ஆஶ்ரித னானவவன்றன்னையும், உடன்-கூட. கொண்டு-கொண்டு. உசா - சர்வாதிகனானதன் பக்கலிலே யுசாவவேணுமென்று. செல்ல-செல்ல. அங்கு - அந்நிலையிலே. கொண்டு- அவனை ரக்ஷணியனாகத்திருவுள்ளத்திலேகொண்டு. தேவதாந்தராந்வயத்தைக்கழித் து, தன்னொடும்-தன்னோடே. கொண்டு-கூட்டிக்கொண்டு. உடன்-யாவதாத்மபாவி அவன்பிரியாதபடி. சென்றது-நடந்தப்ரகாரத்தை. உணர்ந்துமே - புராணாதிமுகத் தாலேயறிந்துமே. கண்டும்-தேவதாந்தரங்களிற்காட்டி லிவனுக்குண்டான வுத்கர் ஷத்தையபரோக்ஷித்தும். தெளிந்தும் - “ அதிகம் மேதிரோவிஷ்ணு ” ( அதிகம் மேதிரோவிஷ்ணும் ) என்னும் கணக்கிலேதெளிந்தும். கற்றார் - இப்படி விலக்ஷணபு ருஷமுகத்தாலே கல்வியையுடையவர்கள். கண்ணற்கு-ஆநந்தஜநகனானசர்வேஶ்வ ரனை. அன்றி-ஒழிய. வேறொருவர்க்கு, ஆள்-அடிமை. ஆவரோ-ஆவரோ.

இண்டை - மாலை. செறிவாகவுமாம்......................................................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

ஶ்ரியஃபதியான தன்னைத்தாழவிட்டிரந்து ரக்ஷித்தது பெரியவேற் றமோ, தேவதாந்தரபஜநம்பண்ணின மார்க்கண்டேயனை விஷயீகரித்த விம்மஹாகுணத்துக்கென்கிறார்.

(கண்டுந்தெளிந்துங்கற்றார்) (கற்று-தெளிந்து-கண்டார்) ஒருவ ன்பக்கலிலே யோரர்த்தத்தைசிக்ஷித்து, அதிலேதெளிய வாஸநைபண் ணி, பின்னை சாக்ஷாத்கார பர்யந்தமாக்கிவைப்பார். ஶ்ரவணமநநங்கள் தான் தர்ஶநஸமாநாகாரத்தளவும் சென்றுநிற்குமிறே. ( கண்ணற்காளன் றியாவரோ) த்யாநபரராயிருப்பார், த்யேயவஸ்துவைவிட்டுப் புறம்பே போவரோ.

(வண்டுண்மலரித்யாதி) வண்டுகள் மதுபாநம்பண்ணுகிற பூமாலை யையுடைய ஶ்ரீமார்க்கண்டேயனுக்கு வாழுநாளுண்டாகைக்காகவென்னு தல், (வாழுநாள்-உசாச்செல்ல) என்று மேலேகூட்டுதல். மாதாபிதாக் களிவனையொப்பித்து விளையாடவிட, அங்கே யோரசரீரிவாக்யம் “ இவ னுக்கு ம்ருத்யுகுறுகிற்று ” என்றுசொல்ல, அத்தைக்கேட்டு பித்ராதிக ள்வெறுக்க, “ இதுக்குநீங்களஞ்சவேண்டா, நான்பரிஹரித்துக்கொள் ளுகிறேன் ” என்றிவன்சென்று தேவனையாஶ்ரயிக்க, அவரும் பச்சையி டும்நாளெல்லா மிடுவித்துக்கொண்டு, ஒருநாளிலேவந்தவாறே, தலைக்க

டையையும் புழைக்கடையையுமடைத்து ஜடையைவிரித்துக்காட்டி, "உன்னைபாதி யாறல் பிறல்காணென்காரியமும், அருகில் மாலையைப்பாராதே யென்றலையில் ஜடையைபுத்திபண்ணாய்" என்றுகாட்டி, "ஆனாலும் நெடுநாள் பச்சையிட்டாஸ்ரயித்த நீபேசாதேபோகவொண்ணாதிறே, உனக்கோராஸ்ரயம் காட்டப்பாராய்" என்று, அவன் சௌலப்யாதிகுணங்களையும் மோக்ஷப்ரதத்வாதிகுணங்களையு முசாவிக்கொண்டு சர்வேஸ்வரன்பக்கலேறச்சென்றான். (கொண்டங்கு) "ஐயோ! ம்ருத்யுபயபீதனாய்வந்தாயாகாதே!" என்று திருவுள்ளத்திலேகொண்டு. "துர்மாநியானவிவன்கொடுவந்தான்" என்றுபாராதே, ஒருபிராட்டி புருஷகாரமாக வருவாளைக் கைக்கொள்ளுமாபோலே கைக்கொண்டு. "நெஞ்சிற்கொண்டு" என்னும்படியே. (தன்னொடுங்கொண்டு) இவன்வந்தகார்யம் தலைக்கட்டி, பின்பு தன்னுடன் சாம்யாபத்தியையுங்கொடுத்து. (உடன்சென்றதுணர்ந்துமே) ஒரு * கள்வன் கொல்லிற்பிராட்டியைக் கொடுபோமாபோலே கொடுபோனான்போலேகாணும். [பின்னையென்று நின்திருவடிப்பிரியாவண்ணமெண்ணிய] "ஒருப்ருதக்தர்மி" என்று தோற்றுதபடி, தன்னோடுவிளைகிற ரசத்தை புஜிப்பித்தபடியை புத்திபண்ணி-கண்டுந்தெளிந்துங் கற்றார் கண்ணற்காளன்றியாவரோ.

தன்னையாஸ்ரயித்த விந்த்ரனுக்காகத் தன்னைத்தாழவிட்டதோரேற்றமோ; "[Grantha] " (மாமேவயேப்ரபத்யந்தேமாயாமேதாந்தரந்திதே) என்னக்கடவவன்; தேவதாந்தரபஜநம்பண்ணி, அதுக்குமேலே, அவன் புருஷகாரமாகக்கொண்டுவந்து காட்டிக்கொடுக்க, "என்செய்வான், தன்னையாஸ்ரயித்தவனையழியவிடாதே புறம்பேயாகிலும் கொண்டுபோய் ரக்ஷிப்பித்தான்" என்னும் குணமவனுக்குண்டாக, மார்க்கண்டேயனை ரக்ஷித்தநீர்மைக்கு. தாமஸபுருஷர்களோட்டை ஸஹவாஸம் சர்வேஸ்வரனுக்கு த்யாகஹேது, ஸத்த்வநிஷ்டரோட்டை ஸஹவாஸமவனுக்கு ஸ்வீகாரஹேது; இங்ஙனேயிருக்கச்செய்தேயிறே யவன்முன்னிலையாக வந்தவிவனுக்கும் காரியஞ்செய்தது.............................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (கண்டுமித்யாதி) "மார்க்கண்டேயனுக்கு வாழுநாள்" இத்யாதிகளைக்கடாக்ஷித்தவதாரிகை (ஸ்ரிய:பதியானவித்யாதி)

ஸ்ரவணாதிகள் சாக்ஷாத்காரபர்யந்தமாயிருக்குமோவென்ன (ஸ்வணமநநங்களித்யாதி) "கண்டார்" என்றத்தைக்கடாக்ஷித்தர்த்தம் (த்யாநபரரித்யாதி) த்யேயவஸ்து-குணாதிகவஸ்து.

வாழுநாளுண்டாகைக்கு - அவன்குணங்களை யுசாவிக்கொண்டு செல்லவென்னுதல், வாழுநாளை-உசாவிக்கொண்டுசெல்லவென்னுதல். மார்க்கண்டேயனுக்கு மாலைக்குப்ரஸக்தியேதென்ன (மாதாபிதாக்களித்யாதி) "இண்டைச்சடைமுடி" என்றுவிசேஷித்ததுக்குபாவம் (அவருமித்யாதி) "தேவரை" என்றும் "அவரும்"

என்றும் சொன்னது-சோபாலம்பவசநம். ஆறல் பீறல் - கார்யாயோக்யம். அருகில் மாலை-ஜடையருகில் மாலையென்றபடி. இவனைக்கூட்டிக்கொண்டு சர்வேஸ்வரன்பக்கலிலே காட்டிக்கொடுக்கைக்கு ஹேதுவருளிச்செய்கிறார் (ஆனனுமித்யாதி) உசாவிக்கொண்டு-சொல்லிக்கொண்டு. "இண்டைச்சடைமுடியீசன்-" மாலையையும், ஜடையையும், கிரீடத்தையுமுடைய ருத்ரன். வாழுநாள்-ஜீவநகாலம். உடன்கொண்டு-ஆஶ்ரிதனான மார்க்கண்டேயனையும் கூட்டிக்கொண்டு.

"கொண்டு" என்றதுக்கு - காயிகஸ்வீகாரமாக வர்த்தாந்தரம் ( தார்மாநியானவித்யாதி ) "திருவுள்ளத்திலேகொண்டு" என்ற முந்தினவர்த்தத்துக்கு ப்ரமாணம் ( நெஞ்சிற்கொண்டித்யாதி ) "இத்தண்ணியனையிருக்கிறவனுக்கு நாமல்லது வேறுபுகலில்லை" என்று நெஞ்சிலேகொண்டென்றபடி. திருமொழி அஞ்சாம்பத்து எட்டாந்திருமொழிந ாலாம்பாட்டு, "நஞ்சுசோர்வதோர்" இத்யாதி. "அங்கு" அந்நிலையிலே. "உடன்சென்றது" என்றதுக்குபாவம் ( ஒருகள்வன்கொல்லித்யாதி ) சாம்யாபத்தியையுங் கொடுத்தானேவென்ன (பினனையென்றுமித்யாதி) ம்ருத்யுவை நிரஸித்ததுக்குமேலே, ஒருநாளு முன்றிருவடிகளைப்பிரியாதபடி திருவுள்ளம்பற்றினவென்றபடி. * ஏழையேதலனில் ஆறும்பாட்டு, "மன்னுநான்மறை" இத்யாதி. இதுக்கர்த்த மருளிச்செய்யாநின்றுகொண்டு, அந்வயங்காட்டுகிறார் (ஒரு ப்ருதக்தர்மியித்யாதி)

கீழிற்பாட்டைப்பற்ற விப்பாட்டுக் காதிக்யமருளிச்செய்கிறார் (தன்னையாஶ்ரயித்தவித்யாதி) இது நீர்மையானபடியை யுபபாதிக்கிறார் ( தாமஸேத்யாதி வாக்யத்ரயத்தாலே )

வண்டுண்மலர்த்தொங்கலென்றுதொடங்கி, உடன்சென்றதுணர்ந்தும் - கற்றும்-தெளிந்தும்-கண்டார்-கண்ணற்காளன்றியாவரோ வித்யந்வயஃ ..............*



## எட்டாம்பாட்டு.

செல்லவுணர்ந்தவர்செல்வன்றன்சீரன்றிக்கற்பரோ
வெல்லையிலாதபெருந்தவத்தாற்பலசெய்மிறை
யல்லலமரரைச்செய்யுமிரணியனாகத்தை
மல்லலரியுருவாய்ச்செய்தமாயமறிந்துமே.

### ஆறாயிரப்படி.

(செல்லவுணர்ந்தவர்) தன்னுடைய தபோபலத்தாலே தேவர்களுக்கு சர்வப்ரகார பாதகனான ஹிரண்யனுடைய சரீரத்தை யபரிமித பரிமாண ந்ருஸிம்ஹரூபதரனாய்க்கொண்டு பிளந்தருளின வாஸ்சர்யத்தை யறிந்துவைத்தும், அறிவுடையராயிருப்பார், ஆஶ்ரிதசம்ஶ்லேஷரூபநிரதிசய சம்பத்தையுடையனானவனுடைய வந்த வாஶ்ரித வாத்ஸல்ய குணத்தையல்லது கற்பரோவென்கிறார்....................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்ரிதோபகாரார்த்தமாக சத்வரனாய்க்கொண்டு ஒன்றின் தலையு மொன்றினுடலுமாய்க்கூட்டின நரசிம்ஹ விக்ரஹத்தை யுடையவனுடைய வாஸ்சர்யாதிக்யத்தை யருளிச்செய்கிறார்.

எல்லையிலாத - அபர்யந்தமான. பெருந்தவத்தால்-மஹாதபஸ்ஸுக்களாலே. பல - பலவகையாக. செய் - செய்யப்பட்ட. மிறை - லோகபீடையையுடையனாய். அமரரை - பலப்ரதரான தேவர்களுக்கும். “ஸிஹ்ராணம்மா நுஷீம்த நும்” (பிப்ராணம்மாநுஷீம்தநும்) என்று குடியிருப்பிழந்து நித்யதுஃகிகளாம்படி, அல்லல் - க்லேஶத்தை. செய்யும் - பண்ணும். இரணியன் - ஹிரண்யனுடைய. ஆகத்தை - சரீரத்தை. மல்லல் - “மஹாவிஷ்ணும்” என்கிறபடியே பெரிய. அரியுருவாய் - நரசிம்ஹரூபத்தை யுடையனாய்க்கொண்டு. செய்த - அநாயாஸேந கிழித்துப்பண்ணின. மாயம் - ஆஶ்சர்யத்தை. அறிந்தும் - ப்ரமாணமுகத்தாலேயறிந்துவைத்தும். செல்ல - அந்தவவதாரதாத்பர்யமான வாஶ்ரிதபக்ஷபாதத்தினுடைய வெல்லையளவும் செல்ல. உணர்ந்தவர் - உணர்ந்தவர். செல்வன்றன் - அந்த *நாரசிம்ஹவபுஸ்ஸான ஸ்ரீமானுடைய. சீர் - வீரசாரித்ரப்ரதையை. அன்றி - ஒழிய. வேறொன்றை, கற்பரோ - வ்யுத்பத்திபண்ணுவரோ.

மிறை - மிறுக்கு. மல்லல் - பெருமை; ஆரவாரமாய், அட்டஹாஸமாகவுமாம். ..........................................................................................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

தேவதாந்தரபஜநம் பண்ணினவனை விஷயீகரித்த மஹாகுணத்திற்காட்டிலும், நரத்வ சிம்ஹத்வங்க ளிரண்டையுமேறிட்டுக்கொண் டாஶ்ரிதரக்ஷணம்பண்ணின மஹாகுணத்தை யருளிச்செய்கிறார்.

( செல்லவுணர்ந்தவர் ) ஆபாஸமான வைஶ்வர்யாத்மப்ராப்திமாத்ரங்களில் பர்பவசியாதே, எல்லைநிலமான பகவத் புருஷார்த்தத்தளவும் செல்லவுணர்ந்தவர். அவனுடன் நித்யபோகம்வேண்டியிருக்குமவர்கள். வாய்க்கரையான ப்ரக்ருதிப்ராக்ருதங்களன்றிக்கே, ஆத்மயாதாத்ம்யஜ்ஞாநபூர்வகமாக பகவத்ப்ராப்தியளவும் செல்லவுணர்ந்தவர்கள். ( செல்வன்றன்சீரன்றிக்கற்பரோ ) ஸ்ரீமானுடைய கல்யாணகுணங்களை யொழியக்கற்பரோ. “இன்னஞ்சொல்லாய் சீமானை” என்னக்கடவதிறே.

(எல்லையிலாதபெருந்தவத்தால்) அளவிறந்தமஹாதபஸ்ஸாலே. வரப்ரதரான தேவஜாதிக்கும் குடியிருப்பரிதாம்படியிறே பலித்தது. (பலசெய்மிறையல்லலமரரைச்செய்யும்) தேவஜாதி கிடந்தவிடத்தில் கிடவாதபடி பலமிறுக்குக்களைச் செய்து, துஃகத்தைப்பண்ணுகிற ஹிரண்யனுடைய, (தேவர்களுடைய வரபல புஜபலங்களாலே பூண்கட்டின) சரீரத்தை. மிறுக்கின்கார்யம்-துஃகம். (மல்லலரியுருவாய்) மல்லல் - பெருமை. “மஹாவிஷ்ணும்” என்னும்படியே, ஹிரண்யன் குளப்படியாம்படியாகப் பெரியவடிவைக்கொண்டு. மல்லலென்று - சம்பத்தாய், அத்தால் - லக்ஷ்மீநரசிம்ஹமா யென்னவுமாம்; * நாராயணோந்ருஸிம்ஹஸ்து ஶக்திஸ்த்வமமரேஶ்வரியிறே. அவளையொழிந்திருப்ப தொருபோதில்லையிறே. (செய்தமாயமறிந்துமே) சிறுக்கனுடைய ப்ரதிஜ்ஞா சமகாலத்திலேதோற்றி, ஹிரண்யனுடைய வுடலை யிருபிளவாக்கின விவ்வாஶ்சர்யமான சேஷ்டிதங்களை யறிந்தும்.

ஒருவன் புருஷகாரமாகக் கொடுவர அவனை ரக்ஷித்ததொருகுண மோ; தமப்பன் பகையாக, உத்தமாங்க மொருவடிவும் திருமேனி யொருவடிவுமாகக் கொண்டு ரக்ஷித்த குணத்துக்கு. "பெற்றார் பெற்றொழிந்தார் பின்னுநின்றடியேனுக்குற்றானாய்வளர்த்து" என்கிறபடியே வந்து ரக்ஷித்தகுணமிறே. ......................................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. (செல்லவித்யாதி) "மல்லலரியுருவாய்ச்செய்தமாயமறிந்தும்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (தேவதாந்தரேத்யாதி)

பலிதம் (அவனுடையவித்யாதி) "ஆபாசமான" இத்யாதிவாக்யவிவரணம் (வாய்க்கரையானவித்யாதி) வாய்க்கரையான - மேலெழுந்தவாரியான. ஸ்ரீமானுடையகுண மப்யசிக்கவேண்டியிருக்குமோ வென்ன (இன்னமித்யாதி)

மஹர்தபஸ்ஸுண்டோவென்ன (வரப்ரதரானவித்யாதி) "அமரரை - பல - மிறை - செய்து - அல்லல் - செய்யும்" என்றந்வயிப்பது. மிறுக்குக்கும் து:கத்துக்கும் பேதமேதென்ன (மிறுக்கின்கார்யமித்யாதி) மிறுக்கு - பீடை.

"மஹாவிஷ்ணும்" இதிபதம் ந்ருஸிம்ஹ மந்த்ரே. "லக்ஷ்மீநரஸிம்ஹம்" என்னுமதுக்கு ப்ரமாணம் (நாராயணஇத்யாதி) சக்தியென்றது-பத்நீயென்றபடி. இங்குமவனைச் சொல்லவேணுமோ வென்ன (அவனையித்யாதி) செய்த மாயமாவதேதென்ன (சிறுக்கனுடையவித்யாதி)

ஒழைப்பற்ற விருக்காதிக்யமேதென்ன (ஒருவனித்யாதி) பிதாபகையானு மிவன் ரக்ஷகனேவென்ன, அதுக்கு ப்ரமாணம் (பெற்றாரித்யாதி) திருமொழி. ஸ்பஷ்டோர்த்த:. பூர்வமேவலிகிதஸ்ச.

செல்லவுணர்ந்தவர் - எல்லையிலாத பெருந்தவத்தால் - அமரரை-பல-மிறை-செய்-அல்லல்-செய்யுமென்று தொடங்கி, மாயமறிந்தும் - செல்வன்றன் சீரன்றிக் கற்பரோ வித்யந்வய:......................................................*



## ஒன்பதாம்பாட்டு.

மாயமறிப்வர்மாயவற்காளன்றியாவரோ
தாயஞ்செறுமொருநூற்றுவர்மங்கவோரைவர்க்காய்த்
தேசமறியவோர்சாரதியாய்ச்சென்றுசேனையை
நாசஞ்செய்திட்டுநடந்தநல்வார்த்தையறிந்துமே.

## ஆறாயிரப்படி.

(மாயமறிபவர்) பாண்டவர்களுக்கு சர்வலோகசாக்ஷிகமாக சாரத்யம்பண்ணி, அவர்களுடைய தாயப்ராப்தராஜ்யாநுபவ விரோதிகளான துர்யோதநாதிகளையும் அவர்களுடைய சேனையையும் நாசஞ்செய்திட்டுத்திருநாடேறவெழுந்தருளின கல்யாணகுணத்தையறிந்துவைத்து நல்லதறிவாரந்த வாத்ஸல்யபூதனுக்கன்றி யாளாவரோவென்கிறார்..........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அநபிபவநீயமான நரஸிம்ஹாவதாரத்திலு மாஶ்ரிதபவ்யதா ப்ரகாஶகமான சாரத்யத்தாலே தாழநின்றநிஷ்டவர்க்கத்தை நிரசநம்பண்ணின குணாதிக்யத்தை யநுசந்திக்கிறார்.

தாயம் - தாயப்ராப்தமான பாண்டவர்களுடைய ராஜ்யாம்சத்தை. செறும்-செறுத்துக்கைக்கொண்ட. நைர்க்ருண்யத்தாலும், பரிபவப்ராணாபஹாரபர்யந்தமான அதிப்ரவ்ருத்தியாலுண்டான மௌர்க்யத்தாலும், ஒரு - அத்விதீயரான. நூற்றுவர் - துர்யோதநாதிகள் நூற்றுவரும். மங்க - மங்க. ஓர் - தனியரான. ஐவர்க்கு - பாண்டவர்களைவர்க்கு. ஆய் - தானேசர்வவிதபந்துவுமாய். தேசமறிய - சர்வலோகப்ரஸித்தமாம்படி. இரண்டுபடைக்கும்நடுவே, ஓர் - அத்விதீயனான. சாரதியாய் - ஸாரதியாய். சென்று - சஞ்சரித்து. சேனையை - சகலசேனையையும். நாசஞ்செய்திட்டு - நசிப்பித்து. பூபாராவதாணகார்யம்சமைந்தவாறே, நடந்த - * தன்னுடைச்சோதிக்கெழுந்தருளின வபதாநத்துக்குப்ரகாசகமான. நல்வார்த்தை - மஹாபாரதமாகிறநல்வார்த்தையை. அறிந்தும் - அறிந்தும். மாயம் - அதில்தாத்பர்யமான ஆஶ்ரிதபவ்யதாரூபமான ஆஶ்சர்யத்தை. அறிபவர்-அறியுமவர்கள். மாயவற்கு-தன்பெருமைபாராதேயாஶ்ரிதர்க்கிழிதொழில்செய்யுமாஶ்சர்யபூதனுக்கு. அன்றி - ஒழிய. வேறொருவர்க்கு, ஆள் - அடிமை. ஆவரோ - செய்வரோ.....................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

ஆஶ்ரிதனுக்காக நரஸிம்ஹமானவதிலு மதிகுணமான சாரத்யவ்ருத்தாந்தத்தை யநுசந்திக்கிறார்.

(மாயமறிபவர்) அவன்வ்யாபாரமடங்கலு மாஶ்ரிதார்த்தமாய், ஆஶ்சர்யமாயிருக்குமென்றறியுமவர்கள். (மாயவற்காளன்றியாவரோ) ஆஶ்ரிதபரதந்த்ரனானவனுக்கன்றியாளாவரோ.

(தாயம்செறுமொருநூற்றுவர்மங்க) தாயப்ராப்தியாலே செறுகிற துர்யோதனாதி துர்வர்க்கம்மங்க. தாயங்கொண்டுநெருக்கிற்றுத் தம்மையோ அநுகூலரான பாண்டவர்களை நெருக்கிற்றும் தம்மைநெருக்கிற்றாயிருக்கிறபடி. (ஒருநூற்றுவர், ஓரைவர்) நெருக்குகிறவர்களும் நெருக்குண்கிறவர்களுமிருக்கிறபடி, (ஓரைவர்க்காய்) துர்வர்க்கமடையவங்கே திரண்டு, ஒருசாரதியையொழிய வேறொருதுணையின்றிக்கே யிருக்கிறவர்கள். தன்வழியேயொழுகாதவர்களை யழியச்செய்து, தன்னையொழியவறியாதவர்களுக்காகத் தான்தாழநின்று நோக்கினான். சம்பந்தமிரண்டு தலைக்குமொத்திருக்க,தாழ்ந்ததலைகண்டுநோக்கினானித்தனையிறே. [அர்ஜுநாங்ககதாவித்யாதி] ஒருவர்க்கொருவர் கால்மேல் காலெறட்டொருநாளாக விருந்தசமயத்திலே, “சஞ்சயன்வாசலிலேவந்தான்” என்றுசொல்ல, “அவனைப்புகுரவிடுங்கோள், இவ்விருப்புக்காணவுகப்பானொருவன், உகவாதார்நெஞ்சுளுக்கச்சொல்லவல்லானொருவன், ஆனபின்பு அவனையழையுங்கோள்” என்றான். உகவாதார்கண்படலாகாதாப்போலே,உகந்தார்கண்பட்டாலுள்ளநன்மையும். இப்படியிறேபாண்டவர்கள் விஷயத்திலவ

னிருக்கும்படி. (தேசமறியவோர் சாரதியாய்) "வாநூ்ரயிநகோதூாநஞ்ஞு ஸாரயிம் ஸவ-ிலொகவஸாக்ஷிகஂஅகாஈ" (பார்த்தம்ரதிநமாத்மாநஞ்ச ஸாரதிம் ஸர்வலோகஸாக்ஷிகம்சகார) என்னும்படியே, "இன்னார்தூதனெனநின்றான்" என்கிறபடியே. நாட்டில் ஸ்வாதந்த்ர்யபாரதந்த்ர்யங்கள் வ்யவஸ்த்திதமானவிடத்திலும். ரஹஸ்யத்திலேயிறே யவைப்ரயோகிப்பது. பர்த்தாவும் பார்யையைக்காலைப்பிடிப்பது ரஹஸ்யத்திலேயிறே இப்படியிருக்கச் செய்தேயிறே ஜகத்ப்ரசித்தமாம்படி தன்னைத்தாழவிட்டது. (சென்றுசேனையைநாசஞ்செய்திட்டு) இதுதானு மர்ஜுநாதிகளம்பாலே யன்றென்றபடி. "ஆயுதமெடுக்கவொண்ணாது" என்றுவேண்டிக்கொண்டபடியாலே, சாரத்யம்பண்ணித் தேர்க்காலாலே யுழக்கிப்பொகட்டான். (நடந்தநல்வார்த்தையறிந்துமே) தன்மேலே * சரவர்ஷமாக வர்ஷிக்கிறவித்தண்ணிய பூமியினின்றும், தன்வரவுக்கெதிர்கொள்வாரிருந்தவிடத்தேபோய்ப் புக்கானென்கிற பெரியவார்த்தையறிந்தும். [கூுதாவூாஈாவதரணமிதூாதி] [க்ருத்வாபாராவதரணமித்யாதி] துர்யோதநாதிகளில்லாதவிடத்தேபோய்ப்புகப்பெற்றதிறே.

கீழ்ச்செய்த செயலடங்கலும், தன்ஸ்வாதந்த்ர்யங் கிடக்கச்செய்தே செய்தவையிறே. ஸ்வரக்ஷணத்துக்குத் திருவுகிராகிலுமுண்டேயங்கு, அவைபோலன்றிறேயிங்கு; ஆஶ்ரிதபாரதந்த்ரனாய்த் தன்னையழியமாறி, பாண்டவர்களுக்காக, உடம்புக்கிடாதே யெதிரிகளம்புக் கிலக்காக்கினவிந்நீர்மைக்குப் போருமோ கீழ்ச்சொன்ன குணங்கள் .................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (மாயமித்யாதி) "தேசமறியவோர்சாரதியாய்ச்சென்று" என்றத்தைக்கடாக்ஷித்து, கீழிற்பாட்டைப்பற்ற விதுக்கேற்றமருளிச் செய்கிறார் (ஆஶ்ரிதனுக்காகவித்யாதி)

"தேசமறியவோர் சாரதியாய்ச்சென்று" என்றதுக்கநுகுணமாக, "மாயமறிபவர்" என்றதுக்கர்த்தம் (அவன்வ்யாபாரமித்யாதி)

"செறும்" என்றுசாமாந்யமாகச் சொன்னதுக்குபாவம் (தாயங்கொண்டித்யாதி) அதெப்படியென்ன (அநுகூலரானவித்யாதி) "நூற்றுவர், ஐவர்" என்றதுக்குபாவம் (நெருக்குகிறவித்யாதி) அதாவது - இவர்களுடைய ப்ராபல்யதௌர்ப்பல்யங்களைச்சொல்லுகிறதென்றபடி. "ஓரைவர்" என்கிறசப்தத்துக்கர்த்தம் (அர்வர்க்கமித்யாதி) சம்பந்தமொத்திருக்க, பாண்டவர்களை ரக்ஷித்து துர்யோதநாதிகளை யழிப்பானென்னென்ன (தன்வழியேயித்யாதி) பரிஹாராந்தரம் (சம்பந்தமித்யாதி) "ஆய்" என்றதுக்குபாவம் (அர்ஜுநாங்கேத்யாதி) "அஜ-ிுநாஙூமதௌவாதௌகேஶவஸ்யொவக்ஷயெ, அஜ-ுநஸ்யதுக்ருஷ்ணாயாஸ்ஸுஹாயாஶ்ஙூாவஹௌ" (அர்ஜுநாங்கதௌபாதௌகேஶவஸ்யோபலக்ஷயே । அர்ஜுநஸ்யதுக்ருஷ்ணயாஸ்ஸுபாயாஸ்சாங்ககாவுபௌ) இத்யுத்யோகபர்வணி ஸஞ்சயஃ. பாவம் (ஒருவர்க்கொருவரித்யாதி) இவ்விருப்பிலவனை யழைக்கவேண்டுவானென்னென்ன (உகவாதாரித்யாதி)

"தேசமறியவோர் சாரதியாய்" என்றதக்குதாஹரணத்வயம் (பார்த்தமித்யாதி, இன்னார்தூதனித்யாதி) (பார்த்தம்ரதிநமித்யாதி) கோபாஷ்யே. (இன்னரித்யாதி) திருமொழி. (உதாஹரணத்வயத்துக்குபாவம் - தூத்யம் சர்வலோகப்ரசித்தமானுப்போலே, ஸாரத்யமும் சர்வலோகப்ரசித்தமாகச் செய்தானென்றபடி. தேசமறியச் சாரதியானதிவனுக்கேற்றமோ, லோகத்திலுள்ளவர்களு மிப்படிசெய்யார்களோவென்ன, லோகத்தார்படியை யருளிச்செய்கிறார் (நாட்டிலித்யாதி) அதெங்ஙனேகண்டதென்ன (பர்த்தாவுமித்யாதி) லோகப்ரக்ரியைக்கு ப்ரதிகோடியாய், இவனுடையவேற்றத்தையருளிச்செய்கிறார் (இப்படியிருக்கச்செய்தேயித்யாதி) இத்தால்-லோகத்தில் பாரதந்த்ர்யவ்யாவ்ருத்தமென்றபடி. சேனையைநாசஞ்செய்தர்ஜுநாதிகளல்லவோவென்ன (இதுதானுமித்யாதி) சாரதியாய்ச்சேனையை நாசஞ்செய்கிறதென், ஆயுதமில்லையோவென்ன (ஆயுதமெடுக்கவித்யாதி) உழக்கி - மர்த்தித்து. துகைத்தென்னுதல். உழக்குகை - மர்த்திக்கையும், துகைக்கையும்.

பரமபதத்திலேபோனது நல்வார்த்தையானபடி யெப்படியென்ன (தன்மேலேயித்யாதி) நல்வார்த்தை - பெரியவார்த்தை. நன்மை-பெருமை. "போனான்" என்றதுக்குப்ரமாணம் (க்ருத்வேத்யாதி) "[illegible]" (க்ருத்வா பாராவதரணம்ப்ருதிவ்யா:ப்ருதுலோசந: | மோஹயித்வாஜகத்ஸர்வம் கதஸ்ஸ்வம் ஸ்தாநமுத்தமம்) "உத்தமம்" என்றதுக்கர்த்தம் (தூர்யோதநாதிகளித்யாதி)

கீழைப்பற்றவிதுக்காதிக்யம் (கீழ்ச்செய்தவித்யாதி) நரஸிம்ஹத்துக்கு ஸ்வாதந்த்ர்யமுண்டோவென்ன (ஸ்வரக்ஷணத்துக்கித்யாதி) ஈடடாதே-கவசமிடாதே. மாயமறிபவர் - தாயம்செறுமென்றுதொடங்கி, நல்வார்த்தையறிந்தும் - மாயவற்காளன்றியாவரோ வித்யந்வய:.......................................................*

---

# பத்தாம்பாட்டு.



---

வார்த்தையறிபவர்மாயவற்காளன்றியாவரோ
போர்த்தபிறப்பொடுநோயொடுமூப்பொடிறப்பிவை
பேர்த்துப்பெருந்துன்பம்வேரறநீக்கித்தன்றாளின்கீழ்ச்
சேர்த்துஅவன்செய்யுஞ்சேமத்தையெண்ணித்தெளிவுற்றே.

## ஆறாயிரப்படி.

(வார்த்தையறிபவர்) "[illegible]" (விவேஶவைஷ்ணவம்தேஜஸ்ஸஶரீரஸ்ஸஹாநுக:) என்றுகொண்டாஶ்ரிதரை * ஆத்மஸ்வரூப திரோதாநகர ஜந்மவ்யாதி ஜராமரணாதி நிரவதிக து:காகர ஸம்ஸாரத்தைப்போக்கி, கைவல்யரூப மஹாநர்த்தத்திலும் புகாமே தன்றாளிணைக்கீழ்ச்சேர்த்து ஆத்மாந்த ஸம்ஶ்லேஷத்தைப்பண்ணியருளும் மஹாகுணத்தை யுள்ளபடியே யறிந்துவைத்தும், சேதநராயிருப்பார், ஆஶ்சர்யபூதனான சக்ரவர்த்தி திருமகனுக்கல்லதாளாவரோவென்கிறார் ... ... ... ... ... ... ... ... ...*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், கீழ்ச்சொன்ன வுபகாரத்தளவன்றியே சகலசாம்சாரிகதோஷ நிவர்த்தகத்வமாகிற மஹாகுணத்தை யநுசந்திக்கிறார்.

வார்த்தை - "ஊமெகஂஶரணஂவ்ர஛-ஸவ-வாபெஹெ்ராமொக்ஷயி ஷ்ராமி" (மாமேகம்ஶரணம்வ்ரஜ-ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி) என்ற நல்வார்த்தை. அறிபவர்-அறியுமவர்கள். போர்த்த - ஸ்வரூபப்ரகாசம்பிறவாதபடி யஜ்ஞாநத்தாலே நிரோதம்பண்ணிப்போந்த. பிறப்பொடு - ஜந்மத்தோடும். நோயொடு-அந்தசரீராநுபந்தியாய்வரும் வ்யாதியோடும். மூப்பொடு - அதுபோலன்றியே அபரிஹார்யமான மூப்போடும். இறப்பு-அத்தோடே வர்ஜநீயமாய்வரும் விநாசமுமாகிற. அவை-அந்தஷட்பாவவிகாரங்களை. பேர்த்து-விட்டுக்கழியும்படிபண்ணி. பெருந்துன்பம்-அபர்யந்தது:கரூபமான கர்ப்பநரகக்லேசங்களையும். வேரற - தந்மூலமான கர்மவிநாசபர்யந்தமாக. நீக்கி-போக்கி. ஸ்வாத்மாநுபவங்களிலகப்படாதபடி, தன்-தன். தாளின்-திருவடிகளின். கீழ்-கீழே. சேர்த்திடவன்-சேரும்படிபண்ணி "ஊஶுசஃ" (மாஶுச:) என்று சோகநிவ்ருத்திபண்ணினவன். செய்யும்-"நவவுநராவத்ததெ" (நசபுநராவர்த்ததே) என்கிறபடியே மீண்டுவாராதபடிபண்ணும். சேமத்தை-ரக்ஷையை. எண்ணி-அநுசந்தித்து. தெளிவுற்று - வ்யவஸிதராய்க்கொண்டு. மாயவற்கு-தங்களுக்காஶ்ரயணீயனாய் விரோதிநிவர்த்தகனுன வாஶ்சர்யபூதனுக்கு. அன்றி-ஒழிய. வேறொருவர்க்கு, ஆள்-ஆள். ஆவரோ - ஆவரோ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...*

## ஈடு - பத்தாம்பாட்டு.

கீழ் சேதநர்க்குப்பண்ணின வுபகாரங்களெல்லாம் சம்சாரத்திலே யிருக்கச்செய்தே பண்ணினவையிறே; அவைபோலல்ல, சம்சாரம் மறுவலிடாதபடிபண்ணித் தன்றிருவடிகளிலே சேர்த்துக்கொண்டதொரு மஹோபகாரத்தை யருளிச்செய்கிறார்.

(வார்த்தையறிபவர்) மஹாபாரதமெல்லாவற்றாலும் சொல்லிற்றாயிற்றதொரு வார்த்தையாகாதே. ப்ரயோஜநவத்தாவதிறே - வார்த்தையாவது. "மாமேகம்" என்றத்தையிறே-இங்கு, வார்த்தையென்கிறது. கிழடங்கலும் கடல்போலே, அதிலம்ருதம்போலேயிது. (மாயவற்காளன்றியாவரோ) அவன் "என்னையேபற்று" என்றுசொல்லாநின்றால், இவர்களவனையொழியவும் பற்றுவர்களோ. (மாயவன்-வ்யாமோஹத்தையுடையவன்.) ரஹஸ்யங்களெல்லாம் வெளியிட்டானிறே யவள்குழல்முடிக்கைக்காக.

( போர்த்தபிறப்பித்யாதி ) பரணிக்கூடு வரிந்தாப்போலே, இவ்வாத்மாவையறியவொண்ணாதபடி சூழப்பொதிந்துகிடக்கிற ஜந்மங்கள், அவைபுக்கவிடத்தே புகக்கடவவ்யாதி, அங்ஙனேயாகிலும் சிறிதுநாள் செல்லாதபடி இடிவிழுந்தாப்போலே நிற்கிறஜரை, அங்ஙனேயாகிலுமிருக்கவொண்ணாதபடி யிவனுக்கநபிமதமானவிநாசம், இவற்றையெல்

லாம். (பேர்த்து) ஈஸ்வரனுக்கு மொருவிரகுபார்த்துத்தள்ளவேண்டும் படியிறே யவற்றின்கனம். விரகர் நெடுஞ்சுவர்தள்ளுமாபோலேதள்ளி. (பெருந்துன்பம் வேரறநீக்கி) ஜந்மம்போறு லநந்தரம்வரக்கடவதான கைவல்யமாகிற மஹாதுஃகத்தை சவாஸநமாகப்போக்கி. "கீழ்நின்றநிலைதான் நன்று" என்னும்படியிறே யிதின்தண்மை. அது பின்னையொரு சரீரபரிக்ரஹம்பண்ணியாகிலும் பகவத்ஸமாஶ்ரயணம்பண்ண யோக்யதையுண்டிறே, இது நித்யவிநாசமிறே. (தன்றாளின்கீழ்ச்சேர்த்து) பாதரேகைபோலேயிருக்கத் திருவடிகளிலேசேர்த்து. (அவன்செய்யும் சேமத்தையெண்ணி) பின்னை யிவனுடையமீட்சி தன்புத்த்யதீநமாம்படி பண்ணிவிடுகை. இவன் நினைவோடு தன் ஸங்கல்பத்தோடு வாசியறும்படிபண்ணுகை. இவனும் சேதநனாயிருக்கச்செய்தே, முக்தனானாற்கொள்ளும் நாநாபவநமு மவன்புத்த்யதீநமாயிறேயிருப்பது. இவன்கையிலே யிவனைக்காட்டிக்கொடுத்தாலு மவனுக்கஞ்சவேண்டாதபடியாயிருக்கை. (எண்ணித்தெளிவுற்று) இத்தை மநோரதித்துத்தெளிந்து. அவன் "என்னையேபற்று" என்று சொன்னதில், தலையாடியிலே "ஸகலவிரோதிகளாயும் நானேபோக்கி யென்னைத்தருவன்" என்று சொன்னத்தைத்தெளிந்திருக்குமவர்கள் - (தலையாடி - "ஸவஂவாவெஹ்யொமொக்ஷயி ஷ்யாமி" (ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி) என்றது.) அவனுக்கல்லதாளாவரோ.

கீழ்ச்சொன்ன குணங்களெல்லாம், "மண்தின்னவேணும்" என்றழுத ப்ரஜைக்கு அத்தையிட்டு அதுக்குப்பரிஹாரம் பண்ணுமாபோலேயாயிற்று; இங்கு - இவற்றினுடைய ஹிதமேபார்த்து சம்ஸாரந்தொடக்கமான சகலதுரிதங்களும் மறுவலிடாதபடிபோக்கித் தன்திருவடிகளின்கீழேவைத்து ரக்ஷித்த பெரியநீர்மைக்குப்போருமோ கீழ்ச்சொன்னவையடங்கலும். கீழ்ப்பண்ணினபரிஹாரங்கள், க்ரந்திகிடக்கப்பண்ணும் பரிஹாரங்கள்போலே; சம்ஸாரங்கிடக்கப்பண்ணின பரிஹாரங்களிறே. அது நிர்வ்ரணமாம்படி சிகித்ஸித்துநோக்குவாரைப்போலே யிதிற்சொல்லுகிறகுணம். கீழிலவை சம்ஸாரிகளிச்சையாலே செய்தவை, இது ஈஶ்வரேச்சையாலே செய்ததிறே... ... ... ... ... ... ...*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (வார்த்தையித்யாதி) "போர்த்தபிறப்பொடு" என்றுதொடங்கி, "அவன்-சேமத்தை" என்னுமளவுங்கடாக்ஷித்து, இப்பாட்டுக்கேற்றமருளிச்செய்கிறார் (கீழ்சேதநர்க்கித்யாதி வாக்யத்வயத்தாலே) கீழென்றது - அடியில் மூன்றுபாட்டு மேழாம்பாட்டுமொழிந்த கீழெல்லாமென்றபடி. இந்த நாலுபாட்டுக்களிற்சொன்னது சம்சாரத்திலிருக்கச்செய்தே பண்ணினதன்றே, மற்றை யைந்து பாட்டுக்களிலும் சொன்னது சம்சாரத்திலேயிருக்கச்செய்தே பண்ணினவையென்றபடி.

"வார்த்தை" என்றவேகவசநத்துக்கர்த்தம் (மஹாபாரதமித்யாதி) அதெப்படியென்ன (ப்ரயோஜநவத்தாவதித்யாதி) அந்தவார்த்தைதானேதென்ன (மாமேகமித்யாதி) "ப்ரயோஜநவத்தாவதிறே" இத்யாதிவாக்யத்தை ஸத்ருஷ்டாந்தமாகவிவரிக்கிறுர் (கீழடங்கலுமித்யாதி) அவனருளிச்செய்தவார்த்தையறிந்தால் வேறொருவர்க்காளாகவொண்ணுதோவென்ன (அவனென்னையேயித்யாதி) அவன்-பரமாப்தனுனவவனென்றபடி. "மாயவன்" என்றது - த்ரௌபதியிடத்தில் வ்யாமுக்தனென்கிறுர் (ரஹஸ்யங்களெல்லாமித்யாதி) அவள்-த்ரௌபதி.

போக்கியென்னுதே, "பேர்த்து" என்றதுக்குபாவம் (ஈஶ்வரனுக்குமித்யாதி) போக்கும்ப்ரகாரத்தை யருளிச்செய்கிறுர் (விரகரித்யாதி) விரகர்-சமர்த்தர். பரணி-நூலிடுகிற பூச்சிவிசேஷம்.

கைவல்யம் பெருந்துன்பமோவென்ன (கீழ்நின்றவித்யாதி) அத்தைவிசதமாக வுபபாதிக்கிறுர் (அது பின்னையித்யாதிவாக்யத்வயத்தாலே)

"சேமம்" என்று - புநராவ்ருத்தியறப்பண்ணும் ரக்ஷையென்று விவக்ஷித்து, "இமாம்லோகாந்காமாந்நீகாமரூப்யநுஸஞ்சரந்" (இமாம்லோகாந்காமாந்நீகாமரூப்யநுஸஞ்சரந்) இத்யாதிப்படியே மீட்சியுண்டாயிருக்க, புநராவ்ருத்தி யில்லையென்னக்கூடுமோவென்ன (பின்னையிவனுடையவித்யாதி) தன் புத்த்யதீநம் - ஈஶ்வரபுத்த்யதீநமென்றபடி. இத்தால்பலிதம் (இவன்நினைவோடித்யாதி) வாசியறும்படி பண்ணுகையாவது - இரண்டு மேகரூபமாயிருக்கை. சேதநனுகையாலே யிவனுக்கும் வேறொரு நினைவுண்டாகாதோவென்ன (இவனுமித்யாதி) "இவன் நினைவோடு" இத்யாதிவாக்யவிவரணம் (இவன்கையிலேயித்யாதி) அதாவது-இவனுடைய ஸ்வாதந்த்ர்யமு மவனுடைய ஸங்கல்பாநுரூபமாயே யிருக்குமென்றபடி. "தெளிவு" என்றத்தைக்காட்டாநின்றுகொண்டு, அந்வயமுங்காட்டுகிறுர் (அவனென்னையேயித்யாதி) அதாவது - "போர்த்தபிறப்பொடு" என்றுதொடங்கி, அநிஷ்டநிவ்ருத்தி பூர்வகமாக விஷ்டப்ராப்தியைப் பண்ணித்தருகிறேனென்று அவனருளிச்செய்த வுத்தரார்த்தத்தினுடைய வர்த்தத்தையெண்ணித் தெளிவுற்று, "என்னையே யுபாயமாகப்பற்று" என்றருளிச்செய்த பூர்வார்த்தத்தையறிந்தவர்கள் மாயவற்காளன்றியாவரோவென்றபடி. இத்தால - "வார்த்தை" என்றது-பூர்வார்த்தம்; "போர்த்தபிறப்பு" என்றுதொடங்கி உத்தரார்த்தம். தலையாடி-உத்தரார்த்தம்.

அவதாரிகையிலே யிப்பாட்டுக்காதிக்யம்சொன்னத்தை சோபபத்திகமாக வருளிச்செய்கிறுர் (கீழ்ச்சொன்னவித்யாதி) முகபேதேந வேற்றத்தையருளிச்செய்கிறுர் (கீழ்ப்பண்ணினபரிஹாரமித்யாதி வாக்யத்வயத்தாலே) "மண்தின்னவேணுமென்றழுத" இத்யாதிவாக்யத்வயத்தாலே பலித்தவர்த்தவிசேஷத்தை யருளிச்செய்கிறுர். (கீழிலவையித்யாதிவாக்யத்வயத்தாலே)

வார்த்தையறிபவர் - போர்த்தவென்றுதொடங்கி, சேமத்தையெண்ணித் தெளிவுற்று - மாயவற்காளன்றியாவரோ வித்யந்வய: ... ... ... ... ... *



## பதினொன்றாம்பாட்டு.

தெளிவுற்றுவீவின்றிநின்றவர்க்கின்பக்கதிசெய்யுந்
தெளிவுற்றகண்ணனைத்தென்குருகூர்ச்சடகோபன்சொற்
றெளிவுற்றவாயிரத்துள்ளிவைபத்தும்வல்லாரவர்
தெளிவுற்றசிந்தையர்பாமருமூவுலகத்துள்ளே.

## ஆறாயிரப்படி.

( தெளிவுற்று ) அநந்யப்ரயோஜநமாக வொருகால் தன்னை நினைத்தவர்களுக்குத் தன்றிருவடிகளை யாத்மாந்த போக்யமாக்கிக் கொடுத்து வைத்து, பின்னையும் "அவர்களுக் கொன்றுஞ் செய்யப்பெற்றிலோம்" என்று அவர்கள் செயலை நினைத்துக்கொண்டிருக்கு மிந்த மஹாகுணவிசிஷ்டனான வெம்பெருமானை சாக்ஷாத்கரித்துச்சொன்ன வித்திருவாய்மொழியைவல்லார், இந்த லோகத்திலே யிருந்துவைத்தே அவனை யறிந்து ததேகபோக ராவரென்கிறார். ........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழியை யப்யசிக்க வல்லவர்கள் சம்சாரத்துக்குள்ளே விசதஜ்ஞாந சித்தராவரென்று பலத்தை யருளிச்செய்கிறார்.

தெளிவு - "உபாயோபேயங்களவனே" என்னும் தெளிவை. உற்று - பெற்று. அதுக்கு, வீவு - விச்சேதம். இன்றி - இன்றியே. நின்றவர்க்கு - ஸ்த்திரஸ்வரூபராய் நின்றவர்களுக்கு. இன்பம் - நிரதிசயாநந்தரூபமான. கதி-ப்ராப்யத்தை. செய்யும் - பண்ணிக்கொடுக்குமவனாய். தெளிவுற்ற - இவன் கலங்கினவன்றும் தான் தெளிந்து நோக்குமவனாய். கண்ணனை - ஆஸ்ரிதசுலபனானக்ருஷ்ணனை. தென்-தர்மிஷ்டமான. குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான. சடகோபன் - ஆழ்வார். சொல் - அருளிச்செய்ததாய். தெளிவுற்ற - ஸ்வசம்பந்திகளைத் தெளிவுற்றிருக்கக்கடவதான. ஆயிரத்துள் - ஆயிரத்துள். இவை - இவை. பத்தும் - பத்தும். வல்லாரவர்-அப்யசிக்கவல்லரானவர்கள். பா - கர்மநிபந்தநமான பரப்பை. மரு-உடைத்தான. மூன்று - குணத்ரய க்ருதபேதத்தையுடைய. உலகத்துள்ளே-லோகத்துக்குள்ளே. தெளிவு - சுத்தசத்த்வகார்யமான ஜ்ஞாநவைசத்யத்தை. உற்ற - உடைத்தாயுள்ள. சிந்தையர் - நெஞ்சையுடையரா யிருப்பர்கள்.

இது - கலித்துறை. ........................................*

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில் - இத்திருவாய்மொழி யப்யசித்தார், சம்சாரத்துக்குள்ளே யிருந்துவைத்தே சுத்தபாவரொன்கிறார்.

( தெளிவுற்றித்யாதி ) "ப்ராப்யப்ராபகங்களிரண்டுமவனே" என்றத்யவசித்து, பின்னை நாட்டார் செயல்கள் கண்டாதல், யுக்த்யாபாசங்கள் கண்டாதல் பிற்காலியாதே நின்றவர்களுக்கு. பாரதசமரத்திலே நின்று அர்ஜுநனை நோக்கி, "நான்சொன்னவிது உனக்குத்தொங்கிற்றோ, எதிரோபோந்ததோ" என்ன, "ஸ்தி2தோஸ்மி" (ஸ்த்திதோஸ்மி) என்ன, அவன் "ஆனால் நங்காரியஞ்செய்யப் பார்த்ததென்" என்றுகேட்க, "[கரிஷ்யே வசநம் தவ] [கரிஷ்யேவசநம்தவ] தேவரீரேவின வடிமை செய்யக்கடவேன்" என்றானிறே. "அர்ஜுநன்றானெம்பெருமானைப்பெற்றானோ, இல்லையோ" என்று நம்பிள்ளை ஜீயரைக்கேட்க, "உமக்கது கொண்டு கார்யமென், இது சொன்னவன் சர்வசாதாரணனாகில் பகவத்பக்தியென்னுமிடம் நிஷ்பந்நமாகில் தந்தாமுடைய கர்மாநுகூலமாகவும் ரு

ச்யநுகூலமாகவும் பெறுகிறூர்கள், பெற்றவர்களை யாராய்ந்துபார்த்து அத்தாலேயன்றே நாம் பற்றப்பார்க்கிறது" என்றருளிச்செய்தார். சேர்ந்து குளிர்ந்த தண்ணீரிருந்தால், அதுகுடித்து தாஹங்கெட்டவனைக் கண்டன்றிறே தாஹித்தவன் தண்ணீர்குடிப்பது. (இன்பக்கதிசெய்யும்) நிரதிசயாநந்தயுக்தமான ப்ராப்யத்தைப் பண்ணிக்கொடுக்கும். (தெளிவுற்றகண்ணனை) இவன் தெளியமாட்டாத விழவுதீர விவனுக்கு நித்யகைங்கர்யத்தைக் கொடுக்கையிலே தான் தெளிந்தபடியே யிருக்கும் க்ருஷ்ணனை. * அஹம்ஸ்மராமிபோலே. (தெளிவுற்றவாயிரம்) ஸஹ்யத்திலே கலங்கின நீரான தோரோப்ரதேசங்களிலேவந்து தெளிந் துபயோகயோக்யமாமாபோலே, அதிக்ருதாதிகாரமாய் கூளமும் பலாப்பிசினும்போலே ஒன்றை நிஷ்கர்ஷித்துப் பிரிக்கவொண்ணுதபடியாயிருக்கிற வேதார்த்தமானது, சர்வாதிகாரமாய் சர்வசம்ஶயங்களுந் தீர்ந்து தெளிந்ததிவர்பக்கலிலே வந்தவாறே. ( இவைபத்தும்வல்லாரவர் தெளிவுற்றசிந்தையர் ) இத்திருவாய்மொழியை யப்யசிக்கவல்லவர்கள்,இவ்வாழ்வார் தம்மைப்போலே தெளிவுற்ற நெஞ்சை யுடையராவர். தேசவிசேஷத்திலே போனுலோ வப்படி தெளிவதென்னில் (பாமருமூவுலகத்துள்ளே) பாபத்தை-பாவென்று கடைக்குறைத்தலாய், பாபபூயிஷ்டமான தேசத்திலே யென்றபடி. அவ்வருகே யொரு தேசவிசேஷத்திலே போனுல் பெறக்கடவ தெளிவை, அதுக்கெதிர்த்தட்டான விங்கேயிருந்தே யுடையராவர். சர்வேப்ஶ்வரன் தானே யிங்குவந்தவதரிக்கிலும் சோகமோஹத்தைப்பண்ணவல்ல சம்சாரத்தே யிருந்தே - தெளிவுற்ற சிந்தையர். ஹேயப்ரத்யநீகமான வஸ்துவையும் தன்வழியாக்கவல்ல விவ்விபூதியிலே யிருந்துவைத்தே - சுத்தபாவரா யிருப்பர். ..........................................................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம். (தெளிவுற்றித்யாதி) "பாமருமூவுலகத்துள்ளே - தெளிவுற்ற சிந்தையர்" என்றத்தைக் கடாக்ஷித் தவதாரிகை ( இத்திருவாய்மொழியித்யாதி )

அத்யவசாயயுக்தனுக்கு வீவுக்கு ப்ரசக்தி யருளிச்செய்கிறூர் ( பின்னை நாட்டாரித்யாதி ) நாட்டார் செயல்களாவது - சாதநாநுஷ்டாநங்கள். யுக்த்யாபாசங்களாவது - உபாயபல்குத்வம், உத்தேஶ்யதுர்லபத்வம், ஸ்வக்ருததோஷ பூயஸ்த்வங்களாகிற விவை. "வீவின்றி-" அத்யவசாயவிச்சேதமின்றிக்கே. வீவு - விச்சேதம். அப்படி பிற்காலியாதே யிருந்தாருண்டோவென்ன, உதாஹரணம் ( பாரதேத்யாதி ) தொங்கிற்றே - த்ருடமாயிருந்ததோ. எதிரோபோந்ததோ - எதிர்த்ததோ. ஸந்திக்தமாயிருந்ததோ வென்றபடி. (உனக்குத்தொங்கிற்றே) என்றவிடத்திலே- "கச்சிதேதத் ஶ்ருதம் பார்த்த த்வயைகாக்ரேண சேதஸா । கச்சிதஜ்ஞாநஸம்மோஹ: ப்ரணஷ்டஸ்தே தநஞ்ஜய" (கச்சிதேதச்ச்ருதம்பார்த்த த்வயைகாக்ரேணசேதஸா । கச்சிதஜ்ஞாநஸம்மோஹ: ப்ரணஷ்டஸ்தேதநஞ்ஜய ) இத்யாத்யநுசந்தேயம். ப்ராசங்கிகம் ( அர்ஜுநன்றனித்யாதி ) உக்தத்துக்கு த்ருஷ்டாந்தாந்தரம் ( சேர்ந்தித்யாதி ) அவன் தெளிந்திருக்கிறதுக்கு த்ருஷ்டாந்தம் ( அஹம்ஸ்மராமி போலே யென்று )

திருவாய்மொழிக்குத் தெளிவுறுகையாவதேதென்ன ( ஸஹ்யத்திலேயித்யாதி ) ( ஆழ்வார்தம்மைப்போலே ) என்றதுக்கு - ஆயிரமும் தெளிவுற்றபோதே யிவர்க்குத் தெளிவு சித்தமென்று கருத்து. "மூவுலகத்துள்ளே" என்கிற வ்யவகாரத்துக்கர்த்தம் (அவ்வருகேயித்யாதி) "இங்கேயிருந்தே" என்கைக்கு இவ்விடத்துக்குத் தண்மையேதென்ன (சர்வேஶ்வரனித்யாதி) விவரணம் ( ஹேயப்ரத்யநீகமானவித்யாதி )

தெளிவுற்றென்று தொடங்கி, வல்லாரவர் - பாமருமூவுலகத்துள்ளே - தெளிவுற்ற சிந்தைய ரித்யந்வய:.......................................................*

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

( கற்பாரிராமபிரானை )

ஸாகேதே முக்திதாநாத் ஸ்திரசரஜநுஷாம் ஸர்வஶோ ரக்ஷகத்வாத்
சைத்யே ஸாயுஜ்யதாநாத் ஜகதுதயக்ருதே: க்ஷித்யவிஶிஷ்டாநு
ஸ்ருஷ்டே: உத்த்ருதேர்ப்பூமிதேவ்யா: யாச்ஞார்த்தம் வாமநத்வாத்
ஶிவபஜகமுநேர் மோக்ஷதாநாத்யுதந்தை: ஸௌஹார்தம் ஸர்வபூதேஷ்வவதி ஹரிரிஹ த்யாஜநாயைதந ॥ ௭௫

(ஸாகேதேமுக்திதாநாத்ஸ்த்திரசரஜநுஷாம்) புற்பாமுதலாவித்யாதி -சக்ரவர்த்திதிருமகனைக்கொண்டு திருவயோத்யையில் ஜங்கமஸ்த்தாவர விபாகமின்றிக்கே யெல்லார்க்கும் மோக்ஷங்கொடுக்கையாலும்; ( ஸர்வஶோரக்ஷகத்வாத் ) நாட்டிற்பிறந்தித்யாதி-லோகத்தார் படும்பாடடையத்தானே பட்டு, அவர்களுக்குபாதகனான ராவணனிருந்தவிடத்தேசென்று சம்ஹரித்து, சர்வப்ரகாரத்தாலும் லோகத்தைரக்ஷிக்கையாலும்; (சைத்யேஸாயுஜ்யதாநாத்) சிசுபாலன்திருவடிதாட்பாலடைந்த-ப்ரதிகூலனைக்கொண்டு மிகவும் பரிவாதங்களைப்பண்ணின சிசுபாலனுக்கும் ஸாயுஜ்யத்தைக்கொடுக்கையாலும்; (ஜகதுதயக்ருதே:) ஆதுமில்பாழ்நெடுங்காலத்தித்யாதி - ஒன்றுமின்றிக்கே பாழாய்க்கிடக்கிறகாலத்திலே, "அசிதவிஶிஷ்டாந் ப்ரளயே ஜந்தூநவலோக்ய" ( அசிதவிஶிஷ்டாந் ப்ரளயேஜந்தூநவலோக்ய ) என்கிறபடியே அசித்கல்பராயிருக்கிற சகலசேதநருக்கும் கரணகளேபரயோகார்த்தமாக லோகங்களை ஸ்ருஷ்டிக்கையாலும்; (உத்த்ருதேர்ப்பூமிதேவ்யா:) ஆழப்பெரும்புனலித்யாதி - மிக்கஜலத்திலேயமுந்தின பூமியை வராஹவேஷத்தைக்கொண் டெயிற்றிலேயெடுக்கையாலும்; (யாச்ஞார்த்தம்வாமநத்வாத்) ஈட்டங்கொள்தேவர்களித்யாதி - மஹாபலியாலே பாதிக்கப்பட்ட தேவர்களிரக்க, அவர்கள் நிமித்தமாகத்தான் வாமநனைக்கொண் டிரப்பாளனகையாலும்; ( ஶிவபஜகமுநேர்மோக்ஷதாநாத்யுதந்தை: ) வண்டுண்மலர்த்தொங்கலித்யாதி - சிவனைபஜித்த மார்க்கண்டேயனை சிவன் தன்கையிலே காட்டிக்கொடுக்க, அவனுக்கு மோக்ஷங்கொடுக்கையாலும்; ஆதிசப்தத்தாலே - விரோதிநிவர்த்தகத்வ பாண்டவசாரதித்வ க்ஷேமகரத்வங்கள் ஸங்க்ருஹீதங்கள். அல்லலமரரைச்செய்யுமித்யாதி - ஸ்வாஶ்ரிதரான தேவர்களுக்கு விருத்தனானஹிரண்யனை நிரஸிக்கையாலும்; ஓரைவர்க்காய்த்தேசமறியவோர் சாரதியாய்ச்சென்று - "பார்த்தம் ரதிநமாத்மாநஞ்ச ஸாரதிம் ஸர்வலோகஸாக்ஷிகம் சகார" ( பார்த்தம்ரதிநமாத்மாநஞ்ச ஸாரதிம்ஸர்வலோகஸாக்ஷிகம்சகார ) என்கிறபடியே எல்லாருமறிய வர்ஜுநனை ரதியாக்கிக்கொண்டு நிற்கையாலும்; போர்த்தபிறப்பொடித்யாதி - சேதநர்க்கு ஜந்மஜராமரணாதி நிவாரணபூர்வகமாகத் தன்திருவடிகளிலேசேர்க்கையாகிற க்ஷேமத்தைப்பண்ணுமவனாகையாலும்; எம்பெருமான், ஸ்வாபாவிகமான தன்னுடைய சர்வபூதஸௌஹார்த்தத்தை ப்ரகாஶிப்பியாநிற்கிறானென்று "கற்பாரிராமபிரானை" என்கிறதஶகத்திலே யறுதியிடப்பட்டதென்கிறார்... ... ... ... .... ... ...(௭௫)

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

கற்றோர்கருதும்விசயங்களுக்கெல்லாம்
பற்றும்விபவகுணப்பண்புகளை — யுற்றுணர்ந்து
மண்ணிலுள்ளோர்தம்மிழவைவாய்ந்துரைத்தமாறன்சொல்
பண்ணிலினிதானதமிழ்ப்பா. (௬௫)

(கற்றோர்கருதும்) இதில் – "விஜயங்களுக்கடியான விபவங்களையிழப்பதே!" என்று வெறுத்தபடியை யநுவதித்தருளிச்செய்கிறார். அதாவது- கீழ்ச்சொன்னவிஜயபரம்பரைக்கடியான விபவகுணங்களை யநுசந்தித்து, "படுக்கைக்கீழே தநங்கிடக்கக் கால்வீங்கிச்சாவாரைப்போலே, இம்மஹாநிதியுண்டாயிருக்க விவர்களித்தையிழந் தநர்த்தப்படுவதே!" என்று சம்சாரிகளிழவுக்குவெறுக்கிற * கற்பாரிராமபிரானிலர்த்தத்தை "கற்றோர்கருதும்"இத்யாதியாலேயருளிச்செய்கிறாரென்கை.

(கற்றோர்கருதும் விசயங்களுக்கெல்லாம் பற்றும்விபவகுணப் பண்புகளையுற்றுணர்ந்து) அதாவது – சகலசாஸ்த்ரதாத்பர்யங்களைக்கற்ற சக்ரவர்த்தி, ஸ்ரீவசுதேவர், ஸ்ரீஜாம்பவான், மஹாராஜர், திருவடிமுதலாயுள்ள வவதார விஜயஹர்ஷிகளானவர்களாதரிக்கும் விஜயங்களுக்கெல்லா மாஸ்ரயமாயுள்ள வவதாரமான விபவகுண ஸ்வபாவங்களை; அவதாரந்தோறும் ததநுகுணமாக குணங்களும் பேதித்திறேயிருப்பது, அவைதா மாஸ்ரிதரக்ஷணத்துக்குறுப்பாகையாலே; அவற்றின் ஸ்வபாவத்தையுற்றுணர்ந்து – அவற்றின்படியை மேலெழவன்றிக்கே அந்தரங்கமாக வாராய்ந்து. அதாவது – "ராமோராமோராமஇதி" (ராமோராமோராமஇதி) என்றும், "கற்பாரிராமபிரானையல்லால்மற்றுங்கற்பரோ" என்றும், "நடந்தமைகேட்டும் – நாட்டிற்பிறந்தவர் நாரணற்காளன்றியாவரோ" என்றும், "தன்மையறிவாரையறிந்தும் – கேட்பார்கள் கேசவன்கீர்த்தியல்லால் மற்றுங்கேட்பரோ" என்றும், "தோற்றியசூழல்கள்சிந்தித்து – தன்மையறிபவர் தாமவற்காளன்றியாவரோ" என்றும், "கேழற்றிருவுருவாயிற்றுக் கேட்டுமுணர்ந்தவர் – சூழல்கள்சிந்திக்கில் மாயன்கழலன்றிச்சூழ்வரோ" என்றும், "கோட்டங்கைவாமனனாய்ச்செய்த கூத்துக்கள்கண்டும் – கேட்டுமுணர்ந்தவர் கேசவற்காளன்றியாவரோ" என்றும், "கொண்டங்குத்தன்னொடுங்கொண்டுடன் சென்றதுணர்ந்தும் – கண்டுந்தெளிந்தும்கற்றார் கண்ணற்காளன்றியாவரோ" என்றும், "இரணியனகத்தை மல்லலரியுருவாய்ச்செய்தமாயமறிந்தும் – செல்லவுணர்ந்தவர்செல்வன்றன் சீரன்றிக்கற்பரோ" என்றும், "நடந்தநல்வார்த்தையறிந்தும் – மாயவற்காளன்றியாவரோ" என்றும், "அவன்செய்யும்சேமத்தையெண்ணித்தெளிவுற்று –மாயவற்காளன்றியாவரோ" என்று மிப்படி பத்தும்பத்தாகவாராய்ந்தென்கை. (மண்ணிலுள்ளோர்தம்மிழவை) "அவன்குணமிப்படியாயிருக்க வித்தையிழப்பதே!" என்று பூமியிலுண்டானவர்கள் பகவத்குணாநுபவாலாபத்தை. (வாய்ந்துரைத்தமாறன்சொல்) சுலபராய்க்கிட்டிநின்று அந்தரங்கமாக வருளிச்செய்தவாழ்வார் திவ்யசூக்தியானது. (பண்ணிலினிதானதமிழ்ப்பா) பண்ணிலினிதான பட்டராகத்தோடேகூடி, த்ராவிடசப்தரூபமான சந்தஸ்ஸு. இப்படி காநத்தோடேகூடின விதுவுமொரு சந்தஸ்ஸே! யென்றீடுபாடாயிருக்கிறது... ... ... ... ... ... ... ... ... ... (௬௫)

ஏழாம்பத்தில் – ஐந்தாந்திருவாய்மொழி முற்றிற்று.

ஆக – திருவாய்மொழி ௬௫.—பாட்டு – ௭௯௪.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஏழாம்பத்து.

## ஆறாந்திருவாய்மொழி.

### பாமரு-ப்ரவேசங்கள்.

### ஆறாயிரப்படி.

(பாமருமூவுலகும்) இப்படி யாச்ரிதரை ப்ரக்ருதிசம்பந்தத்தைப்போக்கித் தன்றிருவடிகளிலே சேர்த்தருளு மிம்மஹாகுணம் கிடக்கச்செய்தே, "நான்பின்னையு மிப்ப்ரக்ருதியோடே கூட வர்த்திக்கிற வத்தனையாகாதே" என்று தத்ஸம்ஶ்லேஷவிரோதியான தம்முடைய ப்ரக்ருதிசம்பந்தாநுசந்தாநத்தாலே யத்யந்த மவஸந்நராய், ப்ரக்ருதிசம்பந்தத்தைப் போக்கியருளி யுன்திருவடிகளிலே யென்னைச் சேர்த்தருளவேணுமென்று சக்ரவர்த்திதிருமகனை நோக்கிக் கூப்பிடுகிறார். ...................*

### பன்னீராயிரப்படி.

ஆறாந்திருவாய்மொழியில், இப்படி யாச்ரிதபவ்யனாய் விரோதிநிவாரகனான ஸர்வேஶ்வரனுடைய குணாதிக்யத்தைக் கீழே யநுசந்தித்து, அவனை யொழிய வேறு விரோதிநிவர்த்தக ரில்லாமையாலே; அவனுடைய காரணத்வாதி ப்ரயுக்தமான சம்பந்தவிசேஷத்தையும், தத்கார்யமான சர்வாத்மபாவத்தையும், ரக்ஷணைகாந்தமான பரத்வஸௌலப்யங்களையும், அவற்றோடே கூடின போக்யதாதிசயத்தையும், அந்த போக்யதா ப்ரயுக்தமா யத்யுஜ்ஜ்வலமாயுள்ள ப்ராப்யதையையும், அந்தப்ராப்யதா ப்ரகாசகமான வாபிரூப்யாதிசயத்தையும், ஸ்வேநரூபேணவும் காரணபுருஷரூபேணவு முண்டான ரக்ஷணப்ரகாரத்தையும், ததுபயுக்தமான மாலிப்ரப்ருதி நிரஸநத்தையும், விபீஷணபக்ஷபாதத்தையும், ஸ்வஜநரக்ஷணத்தையு மநுசந்தித்து, ஏவம்ப்ரகாரவிசிஷ்டனான ஸர்வேஶ்வரனுடைய ப்ராப்தியாலும் பக்ஷபாதத்தாலு மவனைக்கொண்டு விரோதியைக் கழித்துக்கொண்டு, அவனை ப்ராபிப்பதாக வத்யார்த்தராய்க் கூப்பிடுகிறார்.........................................................................*

### ஈடு.

இப்படி தெளிந்தால், பின்னைச் செய்வது கூப்பிடுகைபோலேகாணும்; இல்லையாகில் "சம்சாரம் நன்று" என்று கலங்கினாராவரோ. "அம்மங்கியம்மாள், 'இத்திருவாய்மொழி பாடக் கேட்டநுபவித்துப்போருமிதுக்கு மேற்பட, இதிலோடுகிற வார்த்திக்கு நம்மால் பாசுரமிட்டுச்

சொல்லப்போகாது' என்று பணிக்கும்" என்றருளிச்செய்வர். கீழே-* ஆழியெழச்சங்கிலே - சர்வேச்வரன் காட்டிக்கொடுத்த விஜயங்களை யநுபவிக்கைக் குறுப்பாக, அவனுடைய வவதாரங்களை யநுசந்தித்தார்; அந்த ப்ரசங்கத்தாலே யவனுடைய வவதாரங்களையு மதுக்கடியான க்ருபாதிகுணங்களையு மநுசந்தித்து, "இக்குணங்களும் நடையாடாநிற்க, இதிலே ப்ராப்தியுண்டாயிருக்க, தாங்கள் சேதநராயிருக்க, சம்சாரிகளித்தை யிழப்பதே?" என்று விஸ்மிதராவார். "அவர்களபேக்ஷை யில்லாமையாலே யிழக்கிறார்கள், அபேக்ஷையுடைய நாமிழப்போமல்லோம், அவனுடைய வவதாரங்களையும் வடிவழகையுமநுபவிப்போம்" என்று பார்த்தவிடத்து, அவற்றை யப்போதே கிட்டி யநுபவிக்கப் பெறாமல் மிகவு மவசந்நராய்; சர்வேச்வரனுக்குப் பரமபதத்திலு மிருப்பரிதாம்படி யார்த்தியாலே, நிரம்பிற்றொருகடல் கையெடுத்துக் கூப்பிடுமாபோலே கூப்பிடுகிற கூப்பீடுகேட் டவ்விருப்புக் குலைந்துவந்து முகங்காட்டவேண்டும்படி, அவன் ப்ராப்யனாயிருக்கிறபடியையும்,ப்ராபகனாயிருக்கிறபடியையும், விரோதிநிரசநசீலனா யிருக்கிறபடியையுஞ்சொல்லி, கேட்டாரடைய நீராம்படி பெருமிடறுசெய்து கூப்பிடுகிறார்.

[ஸஹவொ நூவெ] [பஹவோந்ருப] சக்ரவர்த்தி, "பெருமாளைத் திருவபிஷேகம் பண்ணுவிக்க" என்றுகோலி, "அறுபதினாயிரமாண்டு ஒருதலைமிதிக்க வொருதலை கிளம்பும்படியான ராஜ்யத்தை வருந்தி யொருபடி யழிப்படுத்தினேம், இத்தை யொரு சிறுபிள்ளை தலையிலே வைத்தால் பொறுக்குமோ ! பொறாதோ!" என்று விசாரித்து, "இதுதன்னை நாட்டோடே கூட்டிப் பார்ப்போம்" என்றுகோலி, ராஜலோகத்தை யடையத் திரட்டி, "நானிங்ஙனே பெருமாளைத் திருவபிஷேகம்பண்ணுவிக்கப் பாராநின்றேன், உங்களுக்கிஷ்டமோ அன்றோ?" என்றுகேட்க, அநந்தரம் "கிழவாபோகாய்" என்ன, [கூடு௦ந-ஊயியறொணவ-ுயிவீஊந-ஶாஸதி। ஹவ௦தொ௯ஷ-ஊிவூ ஜி ய-ஊவஶாஜ௦ஊஊா௯ஜமு] [கதம்நுமயி தர்மேண ப்ருதிவீமநுஶாஸதி। பவம்தோத்ரஷ்டுமிச்சந்தி யுவராஜம்மமாத்மஜம்] "நாமொருப்பட்ட கார்யம் நன்றாய் விழுந்தது, ராஜலோகமிப்படி த்வரிக்கப்பெறுவதே!" என்று அதிலே போர ஹ்ருஷ்டனாய், அந்த ஹர்ஷத்தை நெஞ்சிலே யிட்டுவைத்து, "அதுதன்னை யிவர்கள்வாயாலே சொல்லக் கேட்கலாகாதோ" என்று, "வாரீகோள், அறுபதினாயிரமாண்டு ராஜ்யம்பண்ணுகிறவிடத்து, இற்றைவரை 'எனக்கு' என்றொரு சுகம் கோலாதே உங்கள் ரக்ஷணத்துக்கா மவையே தேடிக்கொடுபோந்த நானொருவார்த்தை சொன்னால், 'இப்போது நீயிருந்தாயாகில்வீகமென், க்ரமத்திலே செய்துகொள்ளுகிறோம்' என்னுதல், அன்றாகில், 'உனக்கு ப்ரியமாகி லப்படி செய்யலாகாதோ' என்றொருவார்த்தைசொல்லி யாறியிருத்தல் செய்கையொழிய, படுகொலைக்காரர் கையிலே யகப்பட்டார்

'தப்பவேணும்' என்று பார்க்குமாபோலே நீங்களிங்ஙனே கூப்பிடுகைக்கு நான் பண்ணின வபராதமென்" என்ன [ ஶஹோவோநூவகஷ்யாண ரூணா॰வ-த்ரஸுஸுதெ ] [ பஹவோந்ருபகல்யாண குணா:புத்ரஸ்யஸந்திதே ] "எதிரிகளம்பாலழியப்பெற்றதில்லை உன்னுடையவிஷயம், உன்மகனுடைய குணத்தாலே நாட்டைப் படுகொலைக்குத்தினாய்காண்நீ" என்றார்களாயிற்று. நாங்கள் குணஜிதரா யிவ்வார்த்தை சொன்னோ மித்தனை யல்லது ஒரு கார்யபுத்த்யா சொன்னோமல்லோங்காண். [ யாத-ஞ நாவிவமெஶமெநூா ரூணா நாஶாகுரொாஶஹாநு ] [ தாதூநாமிவஶைலேந்த்ரோ குணநாமாகரோமஹாந் ] தாதுக்களானவை "இன்னமலையிற்பொன்" என்று விலைபோமாபோலே, புறம்பே சிலகுணங்கள் கண்டால் "பெருமாள்பக்கல்குணம்" என்றிட்டாயிற்றங்குவிலைபோவது- "இவ்வ்யக்தியில் குணம்" என்றாயிற்றுப் புறம்பு விலைபோவது; இப்படிப்பட்டவனுடைய குணங்களைச் சொல்லிக் கூப்பிடுகிறார்............*

## ஜீயர் அரும்பதம்.

பாமருமூவுலகுப்ரவேஶ, "வார்த்தையறிபவர்" என்கிறபாட்டோடே யித்திருவாய்மொழிக்கு சங்கதியை யுட்கொண்டு வ்யாக்யாதாவினீடுபாடு ( இப்படியித்யாதி ) அதாவது - அநிஷ்டநிவ்ருத்தியு மிஷ்டப்ராப்தியும் பண்ணித்தருவானவனுகையாலே "அவனே யுபாயம்" என்றத்யவஸித்தால், பின்னை கர்த்தவ்யாம்ஶமில்லாமையாலே கூப்பிடுகையிறே யுள்ளதென்றபடி. இப்படி கூப்பிடாதபோது வரு மநிஷ்ட ப்ரஸஞ்ஜநத்தை யருளிச்செய்கிறார் (இல்லையாகிலித்யாதி) இல்லையாகில் - இப்படி கூப்பிட்டிலராகி லென்றபடி. இத்திருவாய்மொழியி லார்த்தியாலே கூப்பிடுகிறானென்றதுக் காப்தவசநம் (அம்மங்கியித்யாதி) சங்கதி (கீழேயித்யாதி) அபதாநம் - சேஷ்டிதம். "தாமரைக்கண்ணவோ, தாமரைக்கையாவோ" என்றத்தைப்பற்ற ( அவன் ப்ராப்யனுயித்யாதி ) "வந்தெய்துமாறறியேன்" என்றத்தைப்பற்ற ( ப்ராபகனுயித்யாதி ) "விறல் மாலியைக்கொன்று" என்றத்தைப் பற்ற ( விரோதீத்யாதி )

குணங்களை யநுபவிக்கப் பெறுவிட்டால் கூப்பிடவேணுமோவென்ன; "திருவயோத்யையி லுள்ளாரையு மீடுபடுத்தாநின்று விவர்க்காறியிருக்கப்போமோ" என்று விவக்ஷித்த, அவர்களப்படி குணங்களிலே யீடுபட்டார்களோ வென்ன;ஈடுபட்டமைக்கு ப்ரமாணம் (பஹவஇத்யாதி) இதுக் கவதாரிகாதநமுகேநார்த்தம் (சக்ரவர்த்தியித்யாதி) கிழவா போகாயென்றது - "அநெகவஷ஁ஸாஹஸ்ரொ வ்ரு஁ஜவிவாஸிவ । ஸாமஂயுவராஜாநமிஷிஞ்ஜஸ்வபாஸிவஂ" ( அநேகவர்ஷஸாஹஸ்ரோ வ்ருத்தஸ்த்வமஸிபார்த்திவ । ஸராமம்யுவராஜாநமபிஷிஞ்சஸ்வபார்த்திவம் ) என்றத்தைப்பற்ற. ஒருப்பட்டகார்யம் - உத்யோகித்தகார்யம். விஷயம் - தேசம். கீழ்வாக்யவிவரணம் ( நாங்களித்யாதி ) அப்படி பெருமாளுக்கு குணங்களுண்டோவென்ன, ப்ரமாணாந்தரம் ( தாதூநாமித்யாதி ) "ஶஹோவோநூவகஷ்யாணரூணா॰வ-த்ரஸுஸுதெ" ( பஹவோந்ருபகல்யாணகுணா: புத்ரஸ்யஸந்திதே ) இத்யயோத்யாகாண்டே பௌரஜநா:. ( தாதூநாமித்யாதி )

கிஷ்கிந்தாகாண்டே, "ஜ்ஞாநவிஜ்ஞாநஸம்பந்நோ நிதேஶே நிரதஃபிதுஃ" (ஜ்ஞாநவிஜ்ஞாநஸம்பந்நோ நிதேஶேநிரதஃபிதுஃ) இதி பூர்வார்த்தம். இதுக்கு பாவம் (த்ராதுக்களித்யாதி) வீகம் - த்வரை. ..............................................*

---

# ஆறுந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

பாமருமூவுலகும்படைத்தபற்பநாபாவோ
பாமருமூவுலகுமளந்தபற்பபாதாவோ
தாமரைக்கண்ணாவோதனியேன்றனியாளாவோ
தாமரைக்கையாவோவுன்னையென்றுகொல்சேர்வதுவே.

### ஆறாயிரப்படி.

தேவாதிஸ்த்தாவராந்தமான நிகிலஜந்துஜால பரிபூர்ணமான சகலலோகங்களையும் படைத்தபரமகாருணிகனே, பின்னையுமந்த ஸ்ருஷ்டமான லோகத்திலே ஸ்ரீவாமநனாய்வந் தவதரித்தருளி அநாலோசிதகுணாகுணமாக சர்வாத்மாக்களு முஜ்ஜீவிக்கும்படி சகலலோகத்தையுமளந்தருளின பரமசீலவானே, எனக்குநீயல்லதுகதியில்லை; ஆனபின்பு, உன்னுடைய அதிரமணீயவிகசித சரசீருஹ சத்ருஶமான திருநாபியையும், விகசிதநளிந சத்ருஶமான திருவடிகளையும், திருக்கண்களையும், திருக்கைகளையும், * கண்களாரளவும்நின்று காணும்படியுன்னை யென்றோ நான்சேர்வதென்று கூப்பிடுகிறார்........................................................................ ௧

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், காரணத்வாதிகளாலே யசாதாரணசம்பந்தத்தை யுடைய வுன்னையென்று கிட்டியநுபவிப்பதென்கிறார்.

பா - பரப்பை. மரு - உடைத்தாய். மூவுலகம் - "க்ருதகஂ, அக்ருதகஂ, க்ருதகாக்ருதகஂ" (க்ருதகம், அக்ருதகம், க்ருதகாக்ருதகம்)என்கிற த்ரைவித்யத்தையுடைத்தானலோகத்தை. படைத்த - உண்டாக்கின. பற்பம் - தாமரைப்பூவையுடைய. நாபா - திருநாபியையுடையவனே. பாமருமூவுலகம் - ஏவம்விதமானலோகத்தை. அளந்த - அநந்யார்ஹமாம்படியளந்த. பற்பம் - தாமரைப்பூப்போலேநிரதிசயபோக்யமான. பாதா - திருவடிகளையுடையவனே. அநந்யார்ஹராணமையங்கீகரித்துரக்ஷிப்பதாய், தாமரை - தாமரைபோலேதர்ஶநீயமான. கண்ணா - திருக்கண்களையுடையவனே. அவர்களைஸ்வஸ்பர்ஶஸுகத்தாலேயாநந்திகளாக்கும், தாமரை - தாமரைபோலேவிலக்ஷணமான. கையா-கைகளையுடையவனே. தனியேன் - விரோதிபூயஸ்தையாலேஅஸஹாயனானவென்னுடைய. தனி - விரோதிநிவர்த்தகத்வத்திலத்விதீயனாய். ஆளா - ஆளக்கடவஸ்வாமியானவனே. உன்னை-இப்படிப்ராப்தனுமாய் போக்யனுமாய் ரக்ஷகனுமானவுன்னை. என்றுகொல் - என்றோ. சேர்வது - ப்ராபிப்பது.

ஓ-பதந்தோறும், ஓவென்றது - அதிசயிதமானவார்த்திவிசேஷத்தைக்காட்டுகிறது..... ............................................................*

## ௬-முதற்பாட்டு.

ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளைப்பண்ணி யுபகரித்து நிரதிசய போக்யனுயிருக்கிறவுன்னை, உன்னாலேயுபகாரங்கொண்டுன் சுவடறிந்தநான் கிட்டுவதென்றோவென்கிறார்.

(பாமருமூவுலகும்படைத்த பற்பநாபாவோ) பாவென்று-பதார்த்தவாசகமாய், பாமருவியிருந்துள்ள; அதாவது-பதார்த்தங்களினுடைய நெருக்கத்தையுடைத்தான மூவுலகென்னுதல். பாமருவென்று - ஒரு சொல்லாய், பாபம்மருவியிருந்துள்ள மூவுலகென்னுதல். ( அன்றிக்கே, பாவென்று-பரம்புதலாய், பரப்பையுடைத்தாயிருந்துள்ளவென்னுதல். ) மூவுலகென்று - கீழும், மேலும், நடுவுமான லோகங்களைச் சொல்லுதல் அன்றிக்கே, "க்ருதகம், அக்ருதகம், க்ருதகாக்ருதகம்" (க்ருதகம், அக்ருதகம், க்ருதகாக்ருதகம் ) என்றிவ்வகையிலே யாக்கிச்சொல்லுதல். (படைத்தபற்பநாபாவோ) "என்தாயே" என்பாரைப்போலே. இத்தையுண்டாக்குகைக்கடியான ப்ராப்தியேயாய், போக்யதையின்றிக்கே யொழிந்ததாகிற்றுன் நானறியிரோனே. நீயித்தைவருந்தியுண்டாக்கிற் றழிக்கைக்காகவோ. இல்லாதவஸ்துக்களையுண்டாக்கக் கடவநீ, உள்ளவஸ்துவையழிக்கிறதென்.

(பாமருமூவுலகுமளந்த) இவற்றையுண்டாக்கி "மேல்பட்டதுபடுகிறது" என்றிருந்தாயாகிற்றுனறியிரோனே. இத்தைக்கண்ணிலே வெண்ணெயிட்டுக்கொண்டு நோக்குமவனன்றோ; பெற்றதாய் வளர்க்குமாபோலே. "படிக்களவாக நிமிர்த்தநின் பாதபங்கயமே தலைக்கணியாய்" என்று - ஆசையுடையநானிருக்க, இச்சையில்லாதார் தலையிலே திருவடிகளைவைப்பதே!. மஹாபலிபோல்வார், பருந்திருஞ்சினைப்போலே யித்தையபஹரித்தால், எல்லைநடந்து மீட்டுக்கொள்ளு மவனன்றோநீ.

அதுசெய்தமையுண்டு, உமக்கிப்போ தபேக்ஷிதமென்னென்ன (தாமரைக்கண்ணாவோ) உத்பத்தியும், வளர்க்கையும், ஜீவநமுமெல்லா முன்பக்கலிலேயாயிற்று. "அவலோகநதாநேந பூயோமாம்பாலய" (அவலோகநதாநேநபூயோமாம்பாலய) என்னுமாபோலே, திருக்கண்களாலேநோக்கவேணுமென்கிறார். ஆக, திருக்கண்களிலழகை யநுசந்தித்தார்; அக்கண்ணழகேஜீவநமாக விருக்கும் நித்யசூரிகள் திரளில் தம்மையிருக்கக்கண்டிலர்; அத்தாலே (தனியேன்) என்கிறார். ( தனியேன் தனியாளாவோ) ஸ்த்ரீகளுடையநோக்கே தாரகமாயிருக்குமவர்களுடைய திரளுக்குங்கூட்டன்றிக்கே, உன்னேக்கேதாரகமா யிருக்குமவ்விபூதியிலுள்ளாருடனுங்கூட்டாகாதே, என்னைமூன்றும் விபூதியாக்கியாளுகி

றவனே. அன்றிக்கே, உன்க்ருபையேதாரகமாக விருக்கிறவென்னை, உன் க்ருபைக் கென்னையொழியவேறு விஷயமில்லையாம்படி யாளுகிறவனே யென்றுமாம்.

( தாமரைக்கையாவோ ) அக்ரூரனோபாதிபோரோனே. [ ஸோ ஸ்ப்ருஷ்ட ] [ஸோப்யேநமித்யாதி] திருக்கையிலடையாளமித்தனை யுமிலச்சினைப்படியே யவனுடம்பிலே க்காணலாம்படி யவனைஸ்பர்ஸித்து அவனந்த ஸ்பர்ஸத்தாலே ஸ்தப்தனாய்நிற்கையாலே கையைப்பிடித்தெற ட்டு, பின்னையனைக்கைக்கிருவளைக்கண்டதில்லை. " கரேண ம்ருதுநா தேவ: பாபாந்நிர்மோசயந்ஹரி: " (கரேணம்ருதுநாதேவ:பாபாந்நிர்மோசயந்ஹ்ரி:) என்கிறபடியே.

(உன்னையென்றுகொல்சேர்வதுவே) " வர்ஷாணாஞ்ச சதுர்த்தஸ ..." (பூர்ணேசதுர்த்தஸேவர்ஷேபஞ்சம்யாம்) என்று நாளி ட்டுக்கொடுக்கலாவது தம்பிமார்க்கோ, அஸாதாரணரானவடியாரானல் "இன்னநாள்பெறக்கடவது" என்றொரு நாளிட்டுக்கொடுக்கலாகாதோ. சேஷபூதனுகில் சேஷிகொடுத்தநாள் பெறக்கடவதாயிறே யிருக்கவடுப்ப து,அங்ஙன் க்ரமப்ராப்திபார்த்தாறியிருக்கமாட்டுகிறிலேன்.(தனியேன்-உ ன்னையென்றுகொல்சேர்வதுவே) நாராயணனையொழிந்திருப்பதொரு நா ரமில்லையே; இனிச்சேருகையாவது- * அடியார்கள்குழாங்களை-உடன்கூ டுகையிறே. (உன்னையென்றுகொல்சேர்வது) என்னுநிற்க, அதுசேரும் படியெங்ஙனென்னில்; * ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்ப க்கண்டுவைக்கையாலே, " உன்னைச்சேர " என்றபோதே தன்னடையே வருமிறே ......................................................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (பாமருவித்யாதி) " பாமருமூவுலகும்படைத்த, பாமருமூவுல குமளந்த, தாமலாக்கண்ணுவோ, தாமரைக்கையாவோ"இத்யாதிகளைக்கடாக்ஷித்து (ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளையித்யாதி) அவ்விரண்டுக்கும் ப்ரதிகோடியை "நான்" என் கிறபதத்துக்கர்த்தமாக வருளிச்செய்கிறுர் (உன்னுலேயித்யாதி)

பதார்த்தங்களாவன-தேவதிர்யகாதி வஸ்துக்கள். அர்த்தாந்தரம் ( பாமரு வென்றித்யாதி ) ஒருசொல்லாயென்றது-பாவென்றே ரக்ஷரமாய், நிருக்தியாலே பாபமென்றபடி. " படைத்தபற்பநாபாவோ " என்று – காரணத்வத்தையிட்டு வி சேஷிக்கையாலே பலிதம் சம்பந்தமென்னுமிடந்தோற்ற வருளிச்செய்கிறுர் (என் தாயித்யாதி) " பற்பநாபாவோ " என்றதுக்குபாவம் (இத்தையுண்டாக்குகைக்கித் யாதி) இப்போது ஸ்ருஷ்டியைச்சொன்னதுக்கு பாவமாதல், "ஓ" என்றதுக்குபாவ மாதல் (நீயித்தையித்யாதி) பாவாந்தரமாதல், விவரணமாதல் (இல்லாதவித்யாதி)

ஸ்ருஷ்டியைச்சொன்னவநந்தரம், " அளந்த " என்றதுக்குபாவம் ( இவற் றையித்யாதிவாக்யத்வயம் ) த்ருஷ்டாந்தம் (பெற்றதாயித்யாதி) "உலகும்" என்ற வசேதநசமாதிக்குபாவமாதல், இரண்டாம் " ஓ " என்றதுக்கு பாவமாதல் ( படிக்

களவாகவித்யாதி ) (இந்நைதக்கண்ணிலே வெண்ணெயிட்டுக்கொண்டு) இத்யாதிவாக்யாநந்தரம் (மஹாபலிபோல்வார்) இத்யாதிவாக்யமநுசந்திப்பது.

மேழில் பதத்வயத்தையுங்கூட்டிக்கொண்டு, "தாமரைக்கண்ணுவோ" என்றதுக்குபாவம் (உத்பத்தியுமித்யாதி) கண்ணழகைச்சொன்னதுக்குபாவம் (அவலோகநேத்யாதி) (உமக்கிப்போதபேக்ஷிதமென்னென்ன) என்றவநந்தரத்திலே, (அவலோகநேத்யாதி) வாக்யத்தையநுசந்தித்து, இவ்வாக்யாநந்தரே (உத்பத்தியும்) இத்யாதிவாக்யமநுசந்தேயம்.

கண்ணழகைச்சொன்னவநந்தரம், "தனியேன்" என்றதுக்குபாவம் (ஆகவித்யாதி வாக்யத்ரயமும்) "தாமரைக்கண்ணனைவிண்ணோர்பரவும்" என்றத்தைக் கடாக்ஷித்துபாவம் (அக்கண்ணழகேயித்யாதி) "தனியாளாவோ" என்றதுக்குபாவம் (ஸ்த்ரீகளுடையவித்யாதி) த்விதீயார்த்தத்துக்கு - அத்விதீயனானவென்னை யத்விதீயமாக வாளுகிறவனென்று சப்தார்த்தம். கைகளை வர்ணிக்கிறதுக்குபாவம் (அக்ரூரனித்யாதி) "ஸொப்யேநம் த்வஜவஜ்ராப்ஜக்ருதசிஹ்நேந பாணிநா। ஸம்ஸ்ப்ருஶ்யாக்ருஷ்ய ச ப்ரீத்யா ஸுகாடம் பரிஷஸ்வஜே" (ஸோப்யேநம்த்வஜவஜ்ராப்ஜக்ருதசிஹ்நேநபாணிநா। ஸம்ஸ்ப்ருஶ்யாக்ருஷ்யசப்ரீத்யாஸுகாடம்பரிஷஸ்வஜே) இதிபஞ்சமேம்ஶே, "தேவப்ரபந்நார்த்திஹர ப்ரஸாதம் குரு கேஶவ। அவலோகநதாநேந பூயோ மாம் பாலயாவ்யய" (தேவப்ரபந்நார்த்திஹரப்ரஸாதம்குருகேஶவ। அவலோகநதாநேநபூயோமாம்பாலயாவ்யய) இதிச ஸ்ரீவிஷ்ணுபுராணே. "ஸம்ஸ்ப்ருஶ்ய" (ஸம்ஸ்ப்ருஶ்ய) என்றதுக்கர்த்தம் (திருக்கையிலித்யாதி) "ஆக்ருஷ்ய" (ஆக்ருஷ்ய) என்றதுக்கர்த்தம் (அவனந்தவித்யாதி) "ஸுகாடம்" (ஸுகாடம்) என்றதுக்கர்த்தம் (இருவனாக்கண்டதில்லையென்று) ப்ரமாணாந்தரம் (கரேணேத்யாதி) இந்தகரஸ்பர்ஶத்தாலே தம்முடைய தாபமெல்லாமாறுமென்றுகருத்து. "பஸ்பர்ஶாங்கம் ததா விஷ்ணு: பிஶாசஸ்யாபி ஸர்வத:। கரேண மந்துநா தேவ: பாபாந் நிர்மோசயந் ஹரி:" (பஸ்பர்ஶாங்கம்ததாவிஷ்ணு:பிஶாசஸ்யாபிஸர்வத:। கரேணம்ருதுநாதேவ:பாபாந்நிர்மோசயந்ஹரி:) இதி ஹரிவம்ஶே கண்டாகர்ணவிஷயீகாரே.

"என்றுகொல்" என்கைக்கு - நாமார்க்கு நாளிட்டுக்கொடுத்தோமென்ன (பூர்ண இத்யாதிவாக்யத்வயம்) நாம்செய்தத்தைக் கண்டிருக்கவேண்டாவோவென்ன (சேஷபூதனித்யாதி) அவனைச்சேராதிருந்தால் சத்தையுண்டோ, "என்றுகொல்சேர்வது" என்கிறதென்னென்ன (நாராயணனை யித்யாதிவாக்யத்வயம்) சங்கிக்கிறார் (உன்னையித்யாதி) அது சேரும்படியென்றது - * அடியார்கள் குழாங்களை யுடன்கூடுகையைக் காட்டும்படியென்றபடி. உத்தரம் (ஒண்டொடியாளித்யாதி) அதாவது-இருவரபிமாநத்திலே யிவர்களந்தர்ப்பூதராயிருக்கையாலே, அவனைச்சொன்ன விவர்களையும் தன்னடையே சொல்லிற்றுமென்றபடி ....................*

# இரண்டாம்பாட்டு.

என்றுகொல்சேர்வதந்தோவரனன்முகனேத்துஞ்செய்ய
நின்றிருப்பாதத்தையாநிலநீரொரிகால்விண்ணுயி
ரென்றிவைதான்முதலாமுற்றுமாய்நின்றவெந்தாயோ
குன்றெடுத்தாநிரைமேய்த்தவைகாத்தவெங்கூத்தாவோ.

## ஆறாயிரப்படி.

( என்றுகொல் ) சிதசிதாத்மக ஸமஸ்தவஸ்துக்களுக்குமாத்மபூத னே, நிர்ஹேதுகமாக ஸ்ரீகோவர்த்தநத்தை யெடுத்தருளிப் பசுக்களைரக்ஷி த்தருளின பரமகாருணிகனே, ஐஶ்வர்யப்ரவணரான ப்ரஹ்மேசாநாதிக ளுக்குங்கூட ஸ்ப்ருஹணீய நிரதிசய போக்யமான வுன்றிருவடிமலர்களை யென்றோ நான் சேர்வதென்று கூப்பிடுகிறார்......... ...............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சர்வாத்மபூதனு யாபத்ஸகனுன வுன்னுடைய திருவடிகளை யெ ன்று கிட்டுவேனென்கிறார்.

நிலம் நீர் எரிகால் விண் – ப்ருதிவ்யாதிபூதபஞ்சகமும். உயிர் – பௌதிகசரீ ரவிசிஷ்டமான ப்ராணிவர்க்கமும். என்று-ஆகிற. இவைதான் – இவை. முதலா-மு தலாக. முற்றும் – சமஸ்தபதார்த்தங்களும். ஆய் – ப்ரகாரமாம்படி. நின்ற-நின்ற. எந்தாய் – ஸ்வாமியாய். அந்த சாமாந்யரக்ஷணமன்றியே, அவதாரப்ரயுக்தவிசேஷ ரக்ஷணமான, ஆநிரை – பசுத்திரளை. மேய்த்து – மேய்த்து. அதுக்கு வர்ஷத்தால் வந்த பாதை தீரும்படி, குன்று – மலையை. எடுத்து – எடுத்து. அவை – அவை. கா த்த – காத்த. எங்கூத்தா – மநோஹாரி சேஷ்டிதத்தை யெனக்கு ப்ரகாசிப்பித்தவ னே. அரன் – ருத்ரனும். நான்முகன் – ப்ரஹ்மாவும். ஏத்தும் – ஸ்துதிக்கும்படியா ய். செய்ய – தர்ஶநீயமான. நின் – உன். திருப்பாதத்தை – திருவடிகளை. யான்-அ நந்யப்ரயோஜநனுன நான். சேர்வது – சேர்வது. என்றுகொல்-என்றோ. அந்தோ- ஐயோ!.

ப்ரயோஜநாந்தரபரர்க்கும் சுலபமான திருவடிகளை, அநந்யப்ரயோஜநனு ன நான் கிட்டுகைக்குக் கூப்பிடவேண்டுவதே யென்று கருத்து......................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

அந்யபரராய்ப் புறம்பே தாரகாதிகளாம்படி யிருக்கிறவர்களுக்கு ங்கூட ஸ்ப்ருஹணீயமாம்படி யிருக்கிற திருவடிகளை, அநந்யபரனு யிது வே ப்ரயோஜநமாக விருக்கிற நானென்று பெறக்கடவேனென்கிறார்.

(என்றுகொல்) திருக்கையில் ஸ்பர்ஶசுகத்தை யபேக்ஷித்து, "எ ன்றுகொல்சேர்வது" என்றவளவிறே - கீழ்; அதுக்கொரு ப்ரதிவசநம் பெறாதேயிருக்க, "என்றுகொல்சேர்வது" என்கிற தென்னதசைதான். (அந்தோ) இனி, "என்றுகொல்சேர்வது" என்பாரு மின்றியே யொழி யக்கிடாய்ப்புகுகிறது ; நான் முடிந்தேனென்கிறார். (அந்தோ!) என்கிற ஸ்வரத்தாலே - தம்முடைய வாற்றாமையை யாவிஷ்கரிக்கிறார். ( அரன் நான்முகனேத்தும் செய்யநின்திருப்பாதத்தை ) அழிப்பாருட னுக்குவா ருடன் வாசியற வுகக்கும்படியான திருவடிகளை. ப்ரயோஜநாந்தரபரர்க் குங்கூட ஸ்ப்ருஹணீயமாம்படியிருக்கிற திருவடிகளை, அநந்யப்ரயோஜந னுன நானென்று பெறக்கடவேன். தந்தாமுடைய தொழில்களிலே யந் யபரராயிருக்கிற ப்ரஹ்மாதிகளு மநந்யபரராயேத்தும்படி ஸ்ப்ருஹணீய

யாய்ச் சிவந்திருந்துள்ள வுன் திருவடிகளை, அநந்யபரனானநான் கிட்டப் பெறுவதென்றோ. அரன் நான்முகனேத்தும் செய்யநின்திருப்பாதத்தை யான் – என்றுகொல் சேர்வது.

(நிலநீரித்யாதி) பெற்றபின்பு நோக்குகை யன்றிக்கே "ப்ரஜை யைப்பெறவேணும்" என்று ஏற்கவே வருந்தும் தாயைப்போலே, ஸ்ருஷ்டிக்குமுன்பே யிவற்றை யுண்டாக்குகைக்காக த்ரிவ்ருத்கரணத்தை நினைத்து பஞ்சீகரணத்தைப்பண்ணி, இவற்றையுடைய ஸ்ருஷ்டித்து, ஸ்ருஷ்டமான பதார்த்தங்களுடைய வஸ்துத்வ நாமபாக்த்வங்களுக்காக ஜீவத்வாரா அநுப்ரவேசித்து, பின்னை யிவற்றைச்சொன்ன பாசுரம், அசித்தும் அசிதபிமாநிஜீவனும் ஜீவாந்தர்யாமியான பரமாத்மாவுமான விஸ் ஸங்காதத்துக்கு வாசகமாய்க்கொண்டு, தன்னளவிலேவரும்படி நிற்கிறநிலையைச்சொல்லுகிறது - முற்றுமாய்நின்ற வென்கிற வித்தாலே. இவை யறியாதிருக்க, இவற்றின்பேற்றுக் கவன் வருந்தவேண்டுகிறஹேதுவென்னென்னில் (எந்தாயோ) அதுக்கடியான சம்பந்தத்தைச்சொல்லுகிறது. இவற்றை யுண்டாக்கும் நாளிலே யுண்டாக்கி, "இனிமேல்வருமாபத்து, இவைதானே பரிஹரித்துக்கொள்ளுகிறது" என்று விட்டுவைக்கையன்றிக்கே, அரியனசெய்தும் நோக்குமவனென்கிறார் (குன்றெடுத்து) மலையையெடுத்திறே நோக்கிற்று. (ஆநிரைமேய்த்து) நோக்குமிடத்து,வரையாதே பசுக்களை நோக்குமவனாயிற்று. (அவைகாத்தவெங்கூத்தாவோ) (ஆநிரைமேய்த்து - குன்றெடுத்து - அவைகாத்தவெங்கூத்தாவோ.) வர்ஷத்திலே நோவுபடுகிற பசுக்களை ரக்ஷிக்கைக்காக மலையையெடுத்தானவன், அப்போது த்ரிபங்கியாய் நின்ற வடிவுதான் வல்லாராடினாற்போலே தமக்காகர்ஷகமாயிருக்கையாலே-எங்கூத்தாவோவென்கிறார். ஆக, இவ்விரண்டுபாட்டாலும் - அவனுடைய ஸ்ப்ருஹணீயதையைச் சொல்லி, ப்ராப்யத்வம் சொல்லிற்று; மேலஞ்சுபாட்டாலே - அவனுடையப்ராபகத்வம்சொல்லுகிறது.........................................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (என்றுகொலித்யாதி) "அரன் நான்முகனேத்தும்செய்யநின்திருப்பாதத்தையான் – என்றுகொல்சேர்வது" என்றபதங்களைக்கடாக்ஷித்த வதாரிகை (அந்யபரராயித்யாதி) ஸ்ருஷ்ட்யாத்யந்யபரரென்றபடி. அரியதொழில்களைச்செய்திவ்வதிகாரங்களைப் பெறுகையாலே – (புறம்பேதாரகாதிகள்) என்றது மிப்பதத்திலே சித்தம். இவ்விரண்டுக்கும் ப்ரதிகோடி (அநந்யபரனாயித்யாதி)

"என்றுகொல்" என்றுமுன்னேயும் சொல்லிவைத்து, மீளவும் "என்று கொல்" என்கிற தாற்றாமையினதிசயத்தாலே யென்கிறார் (திருக்கையிலித்யாதி) ஆற்றாமையாலேசொல்லுகையாலே புநருக்தியில்லையென்றபடி. என்றவளவிறேயென்றது – என்றதிறேயென்றபடி. (முடிந்தேன்) என்றதுக்கு சப்தமேதென்ன (அந்தோவென்கிறவித்யாதி)

ப்ரஹ்மாதிகளுக் கர்யபரதையும் ப்ரயோஜநாந்தரபரதையு முண்டாகையாலே, இரண்டையு மிரண்டுவாக்யத்தாலே யருளிச்செய்கிறார் (அழிப்பாருடனித்யாதி) "அழிப்பாருடன்" என்றவாக்யமாத்ரவிவரணம் (தந்தாமுடையவித்யாதி) "செய்யகின்றிருப்பாதத்தை" என்றதுக்கு சப்தார்த்தம் (ஸ்ப்ருஹணீயமாயித்யாதி) புத்திசௌகர்யார்த்த மந்வயம் (அரனித்யாதி)

ஸ்ருஷ்டித்தபின்பு பாலநம்பண்ணிவிடுகையன்றிக்கே, ஸ்ருஷ்டியுமிவனே செய்தானென்னுமதுக்கு த்ருஷ்டாந்தம் (பெற்றபின்பித்யாதி) த்ரிவ்ருத்கரணத்தை நினைத்து-த்ரிவ்ருத்கரணத்தை ஸங்கல்பித்து. த்ரிவ்ருத்கரணம் மற்றையிரண்டுக்கு முபலக்ஷணமென்று வ்யாக்யாதமேயாகிலும், இவ்விடத்தில், இந்த்ரனுக்கு த்ரைலோக்யத்தை வாங்கிக்கொடுக்கநினைத்து அண்டாவகாசமெல்லா மளந்தாப்போலே, த்ரிவ்ருத்கரணத்தை ஸங்கல்பித்தத்தால் கார்யங்கொள்ளாமையாலே பஞ்சீகரித்தானென்றதுவு மொருபாவமாகவருளிச்செய்வர். "முற்றுமாய்நின்ற" என்கிறவிது ஸ்வரூபைக்யமல்ல, அநுப்ரவேஶக்ருதப்ரகார ப்ரகாரிபாவத்தைச்சொல்லுகிறதென்கிறார் (ஸ்ருஷ்டமானவித்யாதி) "எந்தாய்" என்றதுக்கவதாரிகை (இவையறியாதிருக்கவித்யாதி)

"குன்றெடுத்து" என்றதுக்கவதாரிகை (இவற்றையித்யாதி) அரியனசெய்தானோவென்ன (மலையையித்யாதி) அவைகாத்தவனேயென்னாதே, "எங்கூத்தாவோ" என்று விசேஷித்ததுக்குபாவம் (வர்ஷத்திலேயித்யாதி) ப்ரவேஶத்திலேயருளிச்செய்த ப்ராப்யப்ராபகங்களுக்கு வாசகமான பாட்டுக்க ளித்தனையென்கிறார் (ஆகவிவ்விரண்டித்யாதிவாக்யத்வயத்தாலே)

நிலநீரொன்றுதொடங்கி, எந்தாயோ, ஆநிரைமேய்த்து-குன்றெடுத்து-அவைகாத்தவெங்கூத்தாவோ, அரன் நான்முகனேத்தும் செய்யகின் திருப்பாதத்தையான்-சேர்வது-என்றுகொலோ, அந்தோ! வித்யந்வயஃ ...............................*



## மூன்றாம்பாட்டு.

காத்தவெங்கூத்தாவோமலையேந்திக்கன்மாரிதன்னைப்
பூத்தண்டுழாய்முடியாய்புனைகொன்றையஞ்செஞ்சடையாய்
வாய்த்தவென்னான்முகனேவந்தென்னாருயிர்நீயானா
லேத்தருங்கீர்த்தியினாயுன்னையெங்குத்தலைப்பெய்வனே.

### ஆறாயிரப்படி.

(காத்தவெங்கூத்தாவோ) த்வததீநஸ்வரூப சதுர்முகபசுபதி ப்ரப்ருதிகனாய், த்வததீந மத்ஸ்வரூபனுமாய், இயத்தாசங்க்யா ரஹிதமாகையாலே யஶக்யஸ்தவமான கல்யாணகுணவிசிஷ்டனுமா யிருந்தவனே, வர்ஷபீடிதமான பசுக்களைரக்ஷித்தருளுகைக்காக ஸ்ரீகோவர்த்தநத்தை யெடுத்துக்கொண்டுநின்றருளின வுன்னுடைய தர்ஶநீயமான வங்கிலையையும், அப்போது திருவாயர் திருத்துழாயைக்கொண்டொப்பித்தருளப்பண்ணின வவ்வழகையும், கேவலமுன்னுடைய க்ருபையாலேயென்றோ காண்பதென்கிறார் ....................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சர்வசுலபனும் சர்வாதிகனுன நீயெனக்கு தாரகனும்படி செல் லாமை விளைந்திருக்க, நானுன்னை யெங்கேகிட்டுவதென்கிருர்.

மலை - மலையை. ஏந்தி - ஏந்தி. கல்மாரிதன்னை - கல்மழை. காத்த - காத்த போது. எங்கூத்தா - வல்லாராடினுப்போலே தர்ஶநீயமான நிலையையுடையையா ய். பூ - சர்வேஸ்வரத்வஸூசகமாய் விகசிதமானபூந்தாரையுடைத்தாய். தண்-ஸ்ர மஹரமான. துழாய்-திருத்துழாய்மாலையை. முடியாய் - திருமுடியிலே யுடையை யாய். புனை - அத்தோபாதிதன்னையுமீஸ்வரனுகவபிமாநித்துப்புனைந்த. கொன்றை- கொன்றைமாலையையும். அம் - அத்தாலேயழகுபெற்று. செம் - அந்தவீஸ்வரத்வ சாதகமாயுள்ள வுபாசகத்வஸூசகமாய்ச்சிவந்த. சடையாய் - ஜடையையுமுடை யனுன ருத்ரனைப்ரகாரமாகவுடையையாய். வாய்த்த - அவனுக்குமுத்பாதகனுய்த் தன்பக்கலிலே யுத்பந்நனுன. என்நான்முகனே-சதுர்முகனைப்ரகாரமாகவுடையை யாயிருக்கிற வாகாரத்தையெனக்கு ப்ரகாசிப்பித்தவனுய். ஏத்த-அந்தபரத்வசௌ லப்யங்களுக்கெல்லைகண்டேத்த. அரும் - அரிய. கீர்த்தியினுய் - கீர்த்தியையுடைய வனே. என்னபேக்ஷயின்றியே, நீ-நீ. வந்து - வந்து. என் - எனக்கு. ஆருயிர் - ப ரிபூர்ணதாரகன். ஆனுல் - ஆம்படியாலே. உன்னை - சர்வாதிகனுய் சர்வசுலபனுயி ருக்கிறவுன்னை. எங்கு - எங்கே. தலைப்பெய்வன் - கிட்டியநுபவிப்பேன்.

ஓ - ஓ. ஈஸ்வராபிமாநிகளுக்கு மறிவில்லாதார்க்குங்கிடைத்தவிது, த்வதே கதாரகனுய் வாசியறிந்து கூப்பிடுமெனக்கரிதாவதேயென்றுகருத்து..............*

## ஈடு - மூன்ரும்பாட்டு.

ப்ரஹ்மாதிகளுக்கும் காரணபூதனுனநீ, நிர்ஹேதுகமாக வந்து த் வதேகதாரகனும்படியென்னைப் பண்ணியருளினுய்; ஆனபின்பு, நீயேகு றையும் செய்தருளவேணுமென்கிருர்.

(காத்தவெங்கூத்தாவோ) கீழே - க்ருஷ்ணவ்ருத்தாந்தம் ப்ரஸ் துதமிறே; "ஆநிரைமேய்த்தவைகாத்தவெங்கூத்தாவோ" என்று, "எ த்திறம்" என்ருல், பின்னையும் "எத்திறம்" என்று அதிலேபோமித்த னையிறே. கீழ்ச்சொன்னது வடிம்பிட்டு, திரியட்டும் "காத்தவெங்கூத்தா வோ" என்கிருர். (மலையேந்திக்கல்மாரிதன்னை) கல்லாலேவர்ஷிக்கை யாலே மலையையெடுத்து பரிஹரித்தான்; நீராலேவர்ஷித்தானுகில் கட லையெடுத்து நோக்குங்காணும். பசுக்கள்ஸ்வரக்ஷணத்துக்கு மலையையெ டுத்ததோ. (பூத்தண்டுழாயித்யாதி) தத்தத்ஸ்வரூபங்களுக்கசாதாரணமா ன லக்ஷணம்சொல்லுகிறது. (பூத்தண்டுழாய்முடியாய்) தனக்கசாதார ணமாய் ஐஸ்வர்யஸூசகமான மாலையாயிற்றிது. தன்னுடைய சத்தைத ன்னதீநமாம்படி யிருக்கும் வஸ்துவுக்கு லக்ஷணமாயிற்றிம்மாலை. இத்தா லிவர் பெற்றதாயிற்றென்னிப்போதென்னில்; உன்சத்தையுன்னதீநமா னவோபாதி யென்சத்தையுமுன்னதீநமாயிருக்க, நானெங்ஙனேயுன்னைப் பெறுகைக்கு சாதநாநுஷ்டாநம்பண்ணிக் காணும்படியென்கை. (புனை கொன்றையஞ்செஞ்சடையாய்) பிறர்சத்தையோ தானுன்னதீநமன்றிக்

கே யிருக்கிறது. பசுக்களின்சத்தையுன்னதீநமானப்போலே, ஈப்வரா பிமாநிகளாயிருப்பாருடைய சத்தையுமுன்னதீநமாயன்றோ விருக்கிறது. (புனையித்யாதி) புனையப்பட்டகொன்றையையுடைத்தாய், அழகிதாய்ச் சிவந்திருந்துள்ள ஜடையையுடைய ருத்ரனும் நீயிட்டவழக்கு. (வாய்த் தவென்நான்முகனே) கீழிரண்டுபெதத்திலும்சொன்ன மாலைகளவ்வவர்க்க சாதாரணமா யிருக்குமாபோலேயாயிற்று, இவனுக்கும்தனக்கடைத்த காரியத்துக்கு நாலுமுகமஸாதாரணமாயிருக்கும்படி. (வாய்த்த - ஸ்ருஷ் டியையுடைய, சதுர்முகன்.) இன்னமும், ஈப்வரன்றனக்கும் "இப்படி ஸ்ருஷ்டிப்போம்" என்றாலும் முடியாதபடியாயிற்று ப்ரஹ்மஸ்ருஷ்டியி லுண்டானவாய்ப்பு. (என்) என்கிறவிதுக்கு - விசேஷ்யத்திலே யூற்றமா கக்கடவது. வையதிகரண்யத்தாலேசொன்னால் கழற்றிக்கொள்ளுகைக்கு முடலாய், கேவலபேதத்தையேசொல்லுகிறதென்று ப்ரமிக்கைக்குமுட லாயிருக்கும்; சாமாநாதிகரண்யத்தாலேசொன்னால் சேஷசேஷிபாவமாகி ற் பிரிவும்தோற்றியிருக்கும். ஆக, சாமாநாதிகரண்யவையதிகரண்யங்க ளிரண்டுக்கும் பலம் நிகிலநியமநமிறே. ஆனாலும், சாமாநாதிகரண்யத்தா லே சொல்லுமதுக்கித்தனைவாசியுண்டு. [ஸ்வமுத்திஸ்ய] [ஸ்வமுத்திஸ்ய] ஸ் வார்த்தமாகவிறே யிவற்றையுபாதாநம்பண்ணிற்று. [உபாதத்தேஸத்தா ஸ்திநியமநாத்யைச்சிதசித்தஸ்வமுத்திஸ்ய][உபாதத்தேஸத்தாஸ்த்திநி யமநாத்யைப்சிதசிதௌஸ்வமுத்திப்ஸ்ய] சத்தையேபிடித்து ஸ்த்திநிய மநாதிகளுகப்படவவனதீநமாயிருக்கையாலே, பிரியநின்று சாதநாநுஷ்ட் டாநம்பண்ணுகைக்கொரு ப்ராப்தியில்லையாம்படியாயிற்று அத்யந்தபார தந்த்ர்யமிருக்கும்படி. (வந்தென்னுருயிர்நீ) பிறர்பக்கல் பண்ணினவுபகா ரத்தைச் சொல்லவேணுமோ, என்பக்கல்பண்ணின வுபகாரந்தானே ய மையாதோ. "நீயொருவனுனை" என்றுகனுக்கண்டுமறியாதே புறம்பே அந்யபரனாயிருக்கிறவென்னை, அத்தைத்தவிர்த்து உன்படியையறிவித்து உன்னையொழிய தரியாதபடியான தசையைப்பிறப்பித்தாய். (ஆனால்) இப்படியிருந்தபின்பு. (ஏத்தருங்கீர்த்தியினாய்) நீசத்தையையுண்டாக்கவு ன்னாலே லப்தசத்தாகனாயிருக்கிறநான் "ஏத்துவேன்" என்றால், என்னா லேதானேத்தலாம்படியிருந்ததோ. ஆனால், உன்படியது, என்படியிது; இங்ஙனேயிருந்தபின்பு. (உன்னையெங்குத்தலைப்பெய்வனே) நானொரு பாயாநுஷ்ட்டாநம்பண்ணி யுன்னையெங்கேவந்துகிட்டப்புகுகிறேன். எ ன்னாலேவந்து கிட்டுகையென்றொன்றுண்டோ..............................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு (காத்தவித்யாதி) "புனைகொன்றை" இத்யாரப்ய, "ஆரு யிர்நீயானல் - எங்குத்தலைப்பெய்வன்" என்கிறவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை (ப் ரஹ்மாதிகளுக்குமித்யாதி)

திரியட்டும் "காத்தவெங்கூத்தாவோ" என்றதுக்குமூன்றுபரிஹாரம். முந்தினது (கீழேக்ருஷ்ணவ்ருத்தாந்தமித்யாதிவாக்யசதுஷ்டயம்) அதாவது-கீழ்ச்சொன்னநீர்மையி லீடுபட்டுத்திரியட்டும் சொல்லுகிறுரென்றபடி. வடிம்பிட்டு - ப்ரோரித்து. "மலையேந்திக்கன்மாரிதன்னை - காத்த" என்றதுக்குரஸோக்தி (கல்லாலே யித்யாதிவாக்யத்வயம்) திரியட்டும் "காத்தவெங்கூத்தாவோ" என்றதுக்கு-இப்பாட்டுக்குசேஷமாக த்விதீயபரிஹாரம் (பசுக்களித்யாதி) எனக்குசாதநாநுஷ்டாநம்பண்ண ப்ராப்தியில்லையென்கைக்காக மீளவும் சொல்லுகிறுரென்றபடி.

"பூத்தண்டுழாய்முடியாய்" என்றுதொடங்கிமூவர்க்கும் துழாய்முதலானவற்றைச்சொன்னதுக்குபாவம் (தத்தத்ஸ்வரூபங்களுக்கித்யாதி) ஸ்வரூபங்களுக்கு-மூர்த்திகளுக்கென்றபடி. "பூத்தண்டுழாய்முடியாய்" என்றத்தாலே யீஶ்வராசாதாரணலக்ஷணம் சொல்லுகிறதென்கிறுர் (தனக்கித்யாதி) ஐஶ்வர்யசூசகம்-சர்வாதிகத்வ ஸூசகம். பலிதம் (தன்னுடையவித்யாதி) பதப்ரயோகத்துக்கு ஹார்த்தபாவம் (உன்சத்தையித்யாதிவாக்யம்) பூத்துஶ்ரமஹரமான திருத்துழாயைத் திருமுடியிலே யுடையவனேயென்று ஶப்தார்த்தம்.

"பூத்தண்டுழாய்முடியாய்" என்றதின்பாவத்தை யவலம்பித்துக்கொண்டு "புனைகொன்றை" இத்யாதிக்குசங்கதி (பிறர்சத்தையித்யாதி) "சடையாய்" என்கிற சமாநாதிகரண்யம் சரீரசரீரிபாவ நிபந்தநமாகையாலே, ருத்ரனுடையசத்தையு மவனதீநமென்றபடி. கோவாத்தநோத்தரணம் சொன்னதுக்கு மூன்றும் பரிஹாரம் (பசுக்களித்யாதி) அன்றிக்கே, திரியட்டும் "காத்த" என்றதுக்கிரண்டே பரிஹாரமாய், "மலையேந்தி" இத்யாதியைக் கடாக்ஷித்துக் கீழ்வாக்ய விவரணம் (பசுக்களித்யாதி) அதாவது-பசுக்களின் சத்தைபோலே (பசுபதிசத்தையும் த்வததீநமென்றபடியென்றுமாம். சப்தார்த்தம் (புனையப்பட்டவித்யாதி) ,

கீழிருவரையும்போலே யிவனையும் மாலையையிட்டு நிரூபியாதொழிவானேன்னென்ன (கீழிரண்டித்யாதி) தனக்கடைத்தகாரியமாவது-ஸ்ருஷ்டியென்றபடி. "ஸ பூரிதி வ்யாஹரத் । ஸ பூமிமஸ்ருஜத" (ஸபூரிதிவ்யாஹரத்ஸபூமிமஸ்ருஜத) இத்யாதிப்படியே வேதோக்தமானபடியே ஸ்ருஷ்டிக்கவேண்டுகையாலே இந்தவேதந்தான் நாலாயிருக்கையாலே நாலுமுச்சரிக்கைக்கு நாலுமுகம்வேண்டுகையாலே (தனக்கடைத்தகாரியத்துக்கு நாலுமுகமஸாதாரணமாயிருக்கும்படி) என்கிறுர். "வாய்த்த" என்றதுக்கர்த்தம் (இன்னமுமித்யாதி) வாய்த்த-சமர்த்தனனவென்றபடி. வையதிகரண்யமாகவன்றிக்கே, சாமாநாதிகரண்யமாகவருளிச்செய்வானென்னென்ன (வையதிகரண்யத்தாலே யித்யாதிவாக்யத்வயம்) கழற்றிக்கொள்ளுகைக்கும்-ப்ருதக்ஸ்த்திதியில்லாதவுறவறுத்துக்கொள்ளுகைக்கும். சரீரசரீரிகளுக்கும் பேதமுண்டாகையாலே (சேஷசேஷிபாவமாகிற பிரிவும்தோற்றியிருக்கும்)என்றபடி. பிரிவுமென்றசஶப்தத்தாலே-அப்ருதக்ஸித்தவிசேஷணத்வமும் தோற்றுமென்றபடி. உபயத்தாலும் சித்தித்தது நிர்வாஹகத்வமேயாகிலும், சாமாநாதிகரண்யத்தாலே சொல்லுமதுக்கு அப்ருதக்ஸ்த்திதியாகிற வாதிக்யமுண்டென்று சாமாநாதிகரண்யத்துக்கு ப்ரயோஜநமருளிச்செய்கிறுர் (ஆகவித்யாதிவாக்ய த்வயத்தாலே) இத்தனைவாசியென்றது - வக்ஷ்யமாணத்தைக்கடாக்ஷித்து. அப்ருதக்ஸித்தவிசேஷணமாய் நியாம்யமா யிருப்பர்களோவென்ன (ஸ்வமுத்திஶ்யேத்யாதி) "ஸ்வமுத்திஶ்ய" என்றதுக்கர்த்தம் (ஸ்வார்த்தமாகவித்யாதி) ஸ்வார்த்தமாகவென்றது - ஸ்வசேஷகமாவென்றபடி. இத்தால் - சத்தாஸ்த்திதிநியமநாதிகளவன

நீநமென்று தோன்றுமையாலே, கீழ்ப்பதங்களையுமுபாதாநம்பண்ணுகிறுர் (உபாதத்தே இத்யாதி) "𑌉𑌪𑌾𑌤𑍍𑌤𑌦𑍇𑌶𑌤𑌾𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌨𑌿𑌯𑌮𑌨𑌾𑌦𑍍𑌯𑍈𑌶𑍍𑌚𑌿𑌦𑌚𑌿𑌤𑍌 𑌸𑍍𑌵𑌮𑍁𑌦𑍍𑌦𑌿𑌶𑍍𑌯 𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑌿𑌤𑌿 𑌵𑌦𑌤𑌿 𑌵𑌾𑌗𑍌𑌪𑌨𑌿𑌷𑌦𑍀 । 𑌉𑌪𑌾𑌯𑍋𑌪𑍇𑌯𑌤𑍍𑌵𑍇 𑌤𑌦𑌿𑌹 𑌤𑌵 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌨 𑌤𑍁 𑌗𑍁𑌣𑍌 𑌅𑌤𑌸𑍍𑌤𑍍𑌵𑌾𑌂 𑌶𑍍𑌰𑍀𑌰𑌙𑍍𑌗𑍇𑌶𑌯 𑌶𑌰𑌣𑌮𑌵𑍍𑌯𑌾𑌜𑌮𑌭𑌜𑌮𑍍" (உபாதத்தேசத்தாஸ்த்திதிநியமநாத்யைஸ்சிதசிதௌஸ்வமுத்திஸ்ய ஸ்ரீமாநிதிவததிவாகௌபநிஷதி । உபாயோபேயத்வேததிஹதவதத்த்வம்நதுகுணௌதஸ்த்வாம் ஸ்ரீரங்கேஸஸரணமவ்யாஜமபஜம்) இதிஸ்ரீரங்கராஜஸ்தவே. ஸ்லோகார்த்தகதந பூர்வகமாக விப்பாட்டிற்சொல்லுகிற சாமாநாதிகரண்யத்துக்கு ப்ரகரணநுகுணமாக ப்ரயோஜநமருளிச்செய்கிறுர் (சத்தையேபிடித்தித்யாதி) "𑌉𑌪𑌾𑌯𑍋𑌪𑍇𑌯𑌤𑍍𑌵𑍇" (உபாயோபேயத்வே)இத்யாத்யுத்தரார்த்தமும் விவக்ஷிதம். குணௌ-ஔபசாரிகௌ.

"வாய்த்தவென்னான்முகனே" என்றவநந்தரம், "வந்தென்னுருயிர்" என்றதுக்குபாவம் (பிறர்பக்கலித்யாதி) அந்தவுபகாரமேதென்ன (நீயொருவனித்யாதி) "வந்தென்னுருயிர்நீ -" என்னபேக்ஷயின்றிக்கே நீயேவந்தெனக்கு பரிபூர்ணதாரகனுயென்று சப்தார்த்தம்.

"என்னுருயிர்நீயானல்" என்றவநந்தரம், "ஏத்தருங்கீர்த்தியினுய்" என்கையாலே - என்னுலேத்திமுடிக்கப்போகாதகீர்த்தியையுடையவனென்று விவக்ஷித்து, அதுக்குஹேதுவையருளிச்செய்கிறுர் (நீசத்தையையுண்டாக்கவித்யா) "ஏத்தருங்கீர்த்தியினுய் - வந்தென்னுருயிர்நீயானல்" என்றந்வயத்தைவிவக்ஷித்தருளிச்செய்கிறுர் (ஆனலும்படியதுவித்யாதி)

மலையேந்திக்கன்மாரிதன்னை - காத்தவெங்கூத்தாவோ, பூத்தண்டுழாயென்றுதொடங்கி, வந்தென்னுருயிர்நீ - ஏத்தருங்கீர்த்தியினுய் - ஆனல் - உன்னையெங்குத்தலைப்பெய்வனித்யந்வயஃ............................................................*

---

## நான்காம்பாட்டு.

எங்குத்தலைப்பெய்வனெழின்மூவுலகுநீயே
யங்குயர்முக்கட்பிரான்பிரமபெருமானவனீ
வெங்கதிர்வச்சிரக்கையிந்திரன்முதலாத்தெய்வநீ
கொங்கலர்தண்ணந்துழாய்முடியென்னுடைக்கோவலனே.

### ஆறுயிரப்படி.

(எங்குத்தலைப்பெய்வன்) ப்ரஹ்மேசாநாதி சர்வஜந்துக்களுடைய சத்தாமாத்ரமேயோ த்வத்ஸங்கல்பாயத்தம், அவர்களுடையவைப்வர்யமும் த்வத்ப்ரசாதாதீநமன்றே; ஆதலால், ப்ரதிபந்தகத்தையும் போக்கியருளி அடியேனை யுன்றிருவடிகளிலே சேர்த்தருளவேணுமென்கிறுர்.*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், சர்வஸ்மாத்பரனு யாஶ்ரிதபவ்யனு யதிசயிதபோக்யனுனவுன்னை, அகிஞ்சநனுன நானெங்கே கிட்டுவதென்கிறுர்.

கொங்கு-மதுவையுடைத்தாய். அலர்-விகசிதமான. தண்ணந்துழாய்-செவ்வித்திருத்துழாயாலே யலங்க்ருதமான. முடி-மயிர்முடியையுடையையாய். என்னுடை-அவ்வழகை யெனக்குப்ரகாஶிப்பித்த. கோவலனே - பவ்யனான க்ருஷ்ணனே. எழில்-தர்ஶநீயவைலக்ஷண்யத்தையுடைய. மூவுலகும் - த்ரிவிதலோகமும். நீயே-நீயிட்டவழக்காய். அங்கு-அந்தலோகத்திலே. உயர் - ஜ்ஞாநசக்த்யாதிகளாலே யுச்ச்ரிதனாய்த் தோற்றியிருக்கிற. முக்கட்பிரான்-ஈஶ்வராபிமாநியான த்ரிநேத்ரனும். பிரமன்-அவனுக்கு ஸ்வாமியான வாதிக்யத்தையுடையப்ரஹ்மாவென்று. பெருமானவன்-ப்ரசித்தனானவனும். நீ-நீயிட்டவழக்காய். வெங்கதிர்- சத்ருக்களுக்கஸஹ்யமாம்படி ப்ரதாபோஜ்ஜ்வலமான. வச்சிரம்-வஜ்ரத்தை. கை - கையிலேயுடைய. இந்திரன்-இந்த்ரன். முதலா-முதலான. தெய்வம்-தேவவர்க்கமும். நீ-நீயிட்டவழக்கு. ஆனபின்பு, நான் - த்வத்ப்ராப்திஹேதுக்க ளொன்றுமில்லாதநான். எங்கு-எங்ஙனே. தலைப்பெய்வன்-வந்துகிட்டுவேன் ........................................*

## ஈடு - நான்காம்பாட்டு.

கீழ்ப்பாட்டில் - அவர்கள் ஸ்வரூபம் தததீநமென்றது; அவ்வவ ஸ்வரூபகதமா யிருப்பன சிலமினுக்கங்க ளுண்டிறே, அவையும் தததீநமென்கிறது - இதில்.

(எங்குத்தலைப்பெய்வன்நான்) ஒரு துர்ப்பலனை "மலையைச்சும" என்றால், அவனாலே யதுசெய்து தலைக்கட்டப்போமோ.

(எழில்மூவுலகும்நீயே) த்ரைலோக்யத்தி லுண்டான பதார்த்தங்களினுடைய வுத்கர்ஷமும் த்வததீநம். (அங்குயர்முக்கட்பிரான்) அந்த வண்டத்திலல்லாத தேவதைகளிற்காட்டில் ருத்ரன்பக்கலிலே வந்தவாறே யோருத்கர்ஷமுண்டிறே, அந்த வுச்ச்ராயமும் த்வததீநம். (பிரமபெருமானவன்நீ) அவன்றனக்குங்கூட ஜநகனாய் சதுர்த்தஶ புவநேஶ்வரனாகையால் வருவதோரேற்றமுண்டிறே ப்ரஹ்மாவுக்கு, அதுவும் நீயிட்டவழக்கு. (வெங்கதிரித்யாதி) "वज्रहस्तः पुरन्दरः" (வஜ்ரஹஸ்தஃபுரந்தரஃ) என்கிறபடியே - வெவ்வியகதிரையுடைத்தான வஜ்ரத்தைக் கையிலேயுடையனாயிருக்கிற விந்த்ரன்தொடக்கமான தேவதைகளுடைய வுச்ச்ராயமும் நீயிட்டவழக்கு.

(கொங்கலரித்யாதி) உன்னையொழிந்த பதார்த்தங்களினுடைய வுத்கர்ஷமுமுன்னதீநமாம்படி யிருக்கிறநீ, உன்னுடைய வுச்ச்ராயம் நானிட்டவழக்காம்படியானாய். மதுவையுடைத்தாய் விகசிதமான செவ்வித்திருத்துழாயாலே யலங்க்ருதமான மயிர்முடியையுடையையாய், அவ்வழகையெனக்கு ப்ரகாஶிப்பித்த வாஶ்ரிதபவ்யனான க்ருஷ்ணனே. கொங்கலர்தண்ணந்துழாய்முடி யென்கையாலே - போக்யதாப்ரகர்ஷஞ்சொல்லிற்று; என்னுடைக்கோவலனே யென்கையாலே - ஆஶ்ரிதபவ்யதையைச் சொல்லுகிறது.................................................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு (எங்கித்யாதி) "எழில்மூவுலகும், அங்குயர் - பிரமபெருமான்" இத்யாதிகளைக்கடாக்ஷித்தவதாரிகை (கீழ்ப்பாட்டிலித்யாதி) மினுக்கங்கள்- உத்கர்ஷங்கள்.

பின்னையும் " எங்குத்தலைப்பெய்வன் " என்றது-ஆர்த்யதிசயத்தாலே. " நான்-எங்குத்தலைப்பெய்வன் " என்று தம்முடைய வசக்தியைச்சொல்லுகிறவருடைய பாவம் (ஒருதுர்ப்பலனையித்யாதி)

"மூவுலகும்" என்று - லோகஸ்த்தரைச்சொல்லுகிறது. " எழில், உயர், பெருமான் " இத்யாதிகள் விசேஷணமாயிருக்க, இதிலேமாத்ரம் தாத்பர்யமென்னக் கூடுமோவென்னில்; "ப்ராஙமுகோங்நாபிபுஞ்ஜீத" ( ப்ராங்முகோங்நாநிபுஞ்ஜீத ) என்கிறவிடத்தில் - அந்நபோஜநம்ராகப்ராப்தமாகையாலே, " விதிஸ்த்வத்யந்தமப்ராப்தே " ( விதிஸ்த்வத்யந்தமப்ராப்தே ) என்கிற ந்யாயத்தாலே அப்ராப்தமான ப்ராங்முகத்வத்திலே விதிக்குதாத்பர்யமானாப்போலே, கீழ்ப்பாட்டில் ஸ்வரூபதாததீந்ய முக்தமாகையாலும், இவற்றிலோரோ விசேஷணமிட்டுச்சொல்லுகையாலும், " எழில், உயர், பெருமான், வெங்கதிர்வர்ச்சிரம் " என்கிற மினுக்கங்களிலே யிப்பாட்டுக்குதாத்பர்யமென்று கருத்து.

அங்கு - அந்தவண்டத்தில்.

கதிருக்குவெம்மையாவது - பராபிபவந சாமர்த்யம்.

" எழில்மூவுலகும் " இத்யாத்யுக்தோத்கர்ஷதா ததீந்யாநுவாதபூர்வகமாக "என்னுடை" என்றதுக்குபாவம் (உன்னையொழிந்தவித்யாதி) " கொங்கலர் " இத்யாதி பதத்வய பலிதபாவம் (கொங்கலரித்யாதிவாக்யத்வயம்)

எழில் மூவுலகு மித்யாரப்ய, தெய்வம்நீ, கொங்கலர்தண்ணந்துழாய்முடியென்னுடைக்கோவலனே, நான் - எங்குத்தலைப்பெய்வ னித்யந்வயः ..... ......*

---

## ஐந்தாம்பாட்டு.

என்னுடைக்கோவலனேயென்பொல்லாக்கருமாணிக்கமே
யுன்னுடையுந்திமலருலகமவைமூன்றும்பரந்
துன்னுடைச்சோதிவெள்ளத்தகம்பாலுன்னைக்கண்டுகொண்டிட்
டென்னுடையாருயிரானெங்ஙனேகொல்வந்தெய்துவனே.

### ஆறாயிரப்படி.

(என்னுடைக்கோவலனே) ப்ரஹ்மேசாநாதிகளுடைய சத்தாவிபூதிகள் மத்ப்ரசாதாதீநமேயாகிலும், த்வதபேக்ஷிதமத்தர்ஸந ப்ராப்த்யுபாயத்தை நீயேயநுஷ்ட்டிக்கவேண்டுமென் றொருநிர்ப்பந்தமுண்டாகில், த்வந்நாபீகமலோத்பூத சகலலோகாந்தர்வர்த்தி சர்வவிஷயங்களிலும் ப்ரவணமான வென்னுடையவாத்மா, ப்ரதிபந்தநிரசநத்தைப்பண்ணி நிரதிசய தேஜோமயமான திருநாட்டிலே யுன்னைக்கண்டு ப்ராபிக்கும்படி யெங்ஙனே; இம்மஹாத்மாவுக்கு முடியாததுண்டோவென்று தம்மையுபாலம்பித்துக்கொண்டு சொல்லுகிறார்...................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், நிரதிசய ப்ராப்யபூதனான வுன்னை, லௌகிக விஷயங்களிலே சைசுழிந்திருக்கிற வென்னுத்மா வெங்ஙனே கிட்டக்கடவதென்கிறார்.

என்னுடைக்கோவலனே - "பசுவைமேய்" என்று நியமிக்கலாம்படியான வாஸ்ரிதபவ்யதையையெனக்கு ப்ரகாசிப்பித்தவனுய். பொல்லா-தொளையாத. என் கருமாணிக்கமே - நீலரத்நம்போலேயெனக்கவிகலபோக்யனுனவனே. உன்னுடை- உன்னுடைய. உந்தி - திருநாபியிலே. மலர் - விகசிதமான. உலகமவை - லோகங்களுடைய. மூன்றும் - ப்ரசித்தமான குணத்ரய விபாகயுக்தமான விஷயங்களிலே. பரந்து-பரந்துவைத்து. தம்மை யவற்றுக்கு போக்தாவாக வபிமாநம்பண்ணி யிருக்கிற, என்னுடை - என்னுடைய. ஆருயிரார் - ஆத்மாவானவர். உன்னுடை - உன்னுடைய. சோதிவெள்ளம் - விலக்ஷண தேஜோராசிரூபமான தேசத்துக்கு. அகம்பால்-உள்ளே. உன்னை - நிரதிசயப்ராப்ய பூதனுன வுன்னை. கண்டுகொண்டிட்டு-"ஸதாபஶ்யந்தி" (ஸதாபஶ்யந்தி) என்கிறகணக்கிலே, நிதியெடுத்துக் காண்பாரைப்போலே கண்டுகொண்டு. வந்தெய்துவர் - ப்ராபிப்பது. எங்ஙனேகொல்-எங்ஙனேயாயிருக்கிறது.

சாம்சாரிகவிஷயத்தில் கைகழிந்த வெனக்குக் கிட்ட விரகெங்ஙனேயென்றுகருத்து. உந்திமலரிலே யென்றுமாம்..........................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

எல்லாம்செய்தாலும், [ஶாஸ்த்ரபலம்ப்ரயோக்தரியன்றோ] பலமும்ம்தானபின்புநீரும் சிறிதுயத்நம்பண்ணவேணுங்காணுமென்ன; நீஸ்ருஷ்டித்தலோகங்களில் விஷயங்கள்தோறு மகப்பட்டுக்கிடக்கிற நான், உன்னைப்பெறுகைக் கொருசாதநத்தை யநுஷ்ட்டித்துவந்து பெறுகையென்றொன்றுண்டோ வென்கிறுர்.

(என்னுடைக்கோவலனே) பாண்டவர்களுடையவ ஹனைப்போலேயாயிற்று. இதுசீலமிருந்தபடி. (என்பொல்லாக்கருமாணிக்கமே) இது வடிவழகிருந்தபடி. "அழகிது" என்னில் நாட்டொப்பாமென்று பார்த்து, விஜாதீயமானசப்தத்தாலே சொல்லுகிறுராதல். அன்றியே, தொளையாமணியென்றுதல். பொல்லல் - தொளைத்தல். அநுபபுக்தமான ரத்நம்போலே யென்னுதல்.

(உன்னுடையித்யாதி) உன்படியிதுவாயிருக்க, உன்னையொழிந்த விஷயங்களினுடைய வடிவழகிலும் குணங்களிலும் கால்தாழ்ந்துபோந்தவனுயிருந்தேன் நான். உன்னுந்தியிலேமலராகின்றுள்ள லோகங்கள் மூன்றிலுமுண்டான விஷயங்கள்தோறும், தனித்தனியேயற்றுக் கால்தாழ்ந்துபோந்தவனுயிருந்தேன் நான். நீசர்வசக்தியோகத்தாலே வ்யாபிக்குமிடமடைய நானென்னுடைய சாபலத்தாலேகால்தாழ்ந்து திரிந்தேன். இதென்னிலையிருந்தபடி. அதுக்குமேலே நீயெட்டாகிலத்தை யிருப்பிடமாகவுடையையாயிருந்தாய் (உன்னுடைச்சோதியித்யாதி) உனக்கேயசாதாரணமாய், நிரவதிகதேஜோரூபமாய், "அத்யர்க்காநலதீப்தம் தஸ்த்தாநம்" (அத்யர்க்காநலதீப்தம் தஸ்த்தாநம்) என்றுசொல்லப்படுகிற ஸ்ரீவைகுண்டத்தை யிருப்பிடமாகவுடையையா யிருக்கிறவுன்னை, ப்ரக்ருதிப்ராக்ருதங்களிலுண்டான சம்பந்தமற்று நெடுந்தூரம்வழிவந்து அதுக்கநுரூ

பமா யிருப்பதொரு சரீரத்தைபரிக்ரஹித்து, பரமபதப்ராப்திபண்ணிலு லநுபவிக்கவேண்டி யிருந்தது, ஆக, என்னிலேயிருந்தபடியிது, உன்னிலேயிருந்தபடியது,என்னெஞ்சில் ப்ராவண்யமிருந்தபடியிது; ஆனபின்பு, இந்த முதலியார் கடுகவந்துன்னைக்கிட்டாரோ. ( ( என்னுடையாருயிரார் ) சப்தாதிகளிலே ப்ரவணமானவென்னாத்மா. " முதலியார் " என்று க்ஷேபிக்கிறுர். ) ஆக, ஸ்வரூபம் த்வததீநமாயிருந்தது; அவ்வவருடைய வுத்கர்ஷங்களும் த்வததீநமாயிருந்தது. என்னிலேயிது, உன்னிலேயது, என்னெஞ்சில் ப்ராவண்யமிது; ஆனபின்பு, நானொரு சாதநாநுஷ்ட்டாநம் பண்ணிவந்து கிட்டுகை யென்றொரு பொருளுண்டோ வென்கிறுர்..... ..........................................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு. ( என்னுடையித்யாதி ) எல்லாம் செய்தாலுமென்றது - ஸ்வருபோத்கர்ஷங்கள் மததீநமாயிருந்ததேயாகிலு மென்றபடி. சாஸ்த்ரபலம் ப்ரயோக்தரி - சேதநன் கர்த்தாவாயுள்ளவளவில் சாஸ்த்ரத்துக்கு சாபல்யமுண்டென்றபடி. "கீழிரண்டுபாட்டாலே - அநப்யுபகம்ய, சாதநாநுஷ்ட்டாநத்துக்கு ப்ராப்தியில்லையென்றுர்; மேலிரண்டுபாட்டாலே - அப்யுபகம்ய, சக்தியும், 'அறியேன்' என்கையாலே - ஜ்ஞாநமுமில்லையென்கிறுர்" என்றருளிச்செய்வர். " உன்னுடையுந்திமலருலகமவைமூன்றும்பரந்து - என்னுடையாருயிராரொங்ஙனேகொல் வந்தெய்துவர்" என்கிறவற்றைக் கடாக்ஷித் தருளிச்செய்கிறுர் ( நீஸ்ருஷ்டித்தவித்யாதி )

பாண்டவர்களுடையவனைப்போலே யென்றது - " இன்னாருடையமநுஷ்யன் " என்னுமாபோலே யென்று த்ருஷ்டாந்தம். இப்பதத்தால் பலிதம் ( இதுசிலேமிருந்தபடியென்று )

இப்பதத்தால் பலிதம் (இதுவடிவழகிருந்தபடியென்று) வடிவழகைச்சொன்னல் பொல்லாமணி யென்பானென்னென்ன ( அழகிதென்னிலித்யாதி ) " துளையாமணி" என்றத்தால் பலிதம் (அநுபபுக்தமித்யாதி)

சௌசீல்யத்தையும் வடிவழகையும் சொன்னவநந்தரம், " உன்னுடையுந்திமலருலகமவை மூன்றும்பரந்து" என்கிறவருடைய பாவம் ( உன்படியித்யாதி ) படியென்றது - சாடு. திருமேனியென்று ஸ்வபாவார்த்தம். "கருமாணிக்கம்" என்று - வடிவழகுக்கும், " என்னுடைக்கோவலன் " என்றகுணத்துக்கும் ப்ரதிகோடியாக (உன்னையொழிந்த விஷயங்களினுடைய வடிவழகிலும் குணங்களிலும்) என்றபடி. சப்தார்த்தம் ( உன்னுந்தியிலேயித்யாதி ) "பரந்து" என்றதினர்த்தம் (தனித்தனியேயித்யாதி) விவரணம் (நீசர்வசக்தீத்யாதி) "பரந்து" என்கிறவிடத்திலே- "யத்ப்ருதிவ்யாம்வ்ரீஹியவம்ஹிரண்யம்பசவஸ்த்ரிய: । ஏகஸ்யாபிநபர்யாப்தமிதிமத்வாசமம்வ்ரஜேத்" ( யத்ப்ருதிவ்யாம்வ்ரீஹியவம்ஹிரண்யம்பசவஸ்த்ரியஃ। ஏகஸ்யாபிநபர்யாப்தமிதிமத்வாஶமம்வ்ரஜேத் ) என்றதநுசந்தேயம். இதென்னிலே யிருந்தபடியென்றது - சாதநாநுஷ்ட்டாந பூர்வபாவி விரக்தியு மில்லையென்றபடி. மேலிற்பதத்துக்கவதாரிகை ( அதுக்குமேலேயித்யாதி) சப்தார்த்தம் ( உனக்கேயித்யாதி ) இந்த பதப்ரயோகத்துக்கு பாவமாதல், பலிதமாதல் ( ப்ரக்ருதீத்யாதி )

கீழ்ச்சொன்ன வர்த்தங்களை நிகமித்துக்கொண்டு, "என்னுடையாருயிரார்" இத்யாதிக்கர்த்தமருளிச்செய்கிறார் (ஆகவென்னிலையித்யாதிநாலுவாக்யத்தாலே) "ஆகவென்னிலையிருந்தபடியிது" என்றதின்விவரணம் - (என்னெஞ்சிலித்யாதி) கீழிரண்டுபாட்டி லர்த்தத்தையுங் கூட்டிக்கொண்டு கீழ்வாக்யத்ரயவிவரணம் (ஆக ஸ்வரூபமித்யாதி)

என்னுடைக்கோவலனே இத்யாரப்ய, பரந்திருக்கிற - என்னுடையாருயிரார் - உன்னுடைச்சோதிவெள்ளத் தகம்பா லுன்னைக் கண்டுகொண்டிட்டு - எங்ஙனே கொல் வந்தெய்துவரித்யந்வய:. "𑌅𑌤𑍍𑌯𑌰𑍍𑌕𑌾𑌨𑌲𑌦𑍀𑌪𑍍𑌤𑌂𑌤𑌤𑍍𑌸𑍍𑌥𑌾𑌨𑌂𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌰𑍍𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 । 𑌸𑍍𑌵𑌯𑍈𑌵𑌪𑍍𑌰𑌭𑌯𑌾𑌰𑌾𑌜𑌨𑍍𑌦𑍁𑌷𑍍𑌪𑍍𑌰𑍇𑌕𑍍𑌷𑌂𑌦𑍇𑌵𑌦𑌾𑌨𑌵𑍈𑌃" (அத்யர்க்காநலதீப்தம்தத்ஸ்த்தாநம்விஷ்ணோர்மஹாத்மந: । ஸ்வயைவப்ரபயாராஜந் துஷ்ப்ரேக்ஷம்தேவதாநவை:) இத்யாரண்யபர்வணி ஆர்ஷ்டிஷேண:. ..................*

---

# ஆறாம்பாட்டு.

வந்தெய்துமாறறியேன்மல்குநீலச்சுடர்தழைப்பச்
செஞ்சுடர்ச்சோதிகள்பூத்தொருமாணிக்கஞ்சேர்வதுபோ
லந்தரமேற்செம்பட்டோடடியுந்திகைமார்புகண்வாய்
செஞ்சுடர்ச்சோதிவிடவுறையென்திருமார்பனையே.

## ஆறாயிரப்படி.

(வந்தெய்துமாறறியேன்) அசமமாய், நீலமாயிருந்த ஜ்யோதிஸ்ஸைத்தழைத்துச் சிவந்தவொளியைப்பூத்ததொரு மாணிக்கங் கிடந்தாப்போலே, திவ்யரூபகதநீலஜ்யோதிஸ்ஸாலும், பீதாம்பரசரணநிமக்நநாபீ கமலகரதல கௌஸ்துப லக்ஷ்மீவிராஜித வக்ஷஸ்த்தல விலோசநவதநாருணகிரணங்களாலும் தீப்யமாநனுமாய், ஸ்ரிய:பதியாய்க் கோயிலிலே கண்வளர்ந் தருளுகிறவுன்னைக் காணுதொழியில் தரிக்கமாட்டுகிறிலேன்; காண்கைக்கோருபாயமும் காண்கிறிலேனென்கிறார்.......................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ப்ராப்யதாப்ரகாசகமான நிரதிசயாபிரூப்யத்தையுடைய வுன்னை நான்வந்து கிட்டுமுபாயமறிகிறிலே னென்கிறார்.

மல்கு - செறிந்த. நீலச்சுடர் - நீலச்சுடரானது. தழைப்ப - பரம்பாநிற்க. இடையிடையே, செம் - சிவந்த. சுடர் - ஒளியையுடைத்தான. சோதிகள் - தேஜோவிசேஷங்களை. பூத்து - பூத்திருப்பது. ஒரு - ஒரு. மாணிக்கம் - நீலரத்நமானது. சேர்வதுபோல் - பொருந்தியிருந்தாப்போலே. அந்தரமேல் - பரமவ்யோமத்திலே. செம் - சிவந்த. பட்டோடு - திருப்பீதாம்பரத்தோடே. அடி-திருவடிகளும். உந்தி - திருவுந்தியும். கை-திருக்கை. மார்பு - திருமார்பு. கண் - திருக்கண். வாய் - திருப்பவளமும். செம் - சிவந்த. சுடர் - ப்ரகாசத்தையுடைத்தான. சோதி-தேஜஸ்ஸை. விட - பரப்பாநிற்கும்படி. உறை - எழுந்தருளியிருக்கிறவிருப்பை. என் - எனக்குப்

ரசாசிப்பித்த. திருமார்பனே - ஸ்ரீமானானவனே. நான், வந்து - வந்து. எய்தும் - கிட்டும். ஆறு - உபாயம். அறியேன் - அறிகிறிலேன்.

அறியும் நீவந்துகொண்டுபோ மித்தனையென்று கருத்து.....................*

## ஈடு - ஆரும்பாட்டு.

ஆனாலும், ஏதேனுமொருபடி நீரும் சிறிது செய்துவந்து கிட்ட வேண்டாவோவென்ன; உன்னைவந்துகிட்டு முபாயமறியேனென்கிறார்.

(வந்தெய்துமாறறியேன்) வந்துகிட்டுமுபாயமறிகிறிலேன். நீதானே மேல்விழுந் துன்வடிவழகைக்காட்டாநின்றால் அத்தைவிலக்காமைக்கு வேண்டுவதுண்டு; என்னாலுன்னையொரு சாதநாநுஷ்டாநம்பண்ணிவந்து கிட்டப்போகாது. ஆனாலிழந்தாலோவென்ன; இழக்கலாயோவுன்படி யிருக்கிறதென்கிறார் (மல்குநீலச்சுடர்தழைப்ப) வடிவழகில்லையென்றுவிடவோ, பெறுவிக்கைக்குப்புருஷகாரமில்லையென்றுவிடவோ, எனக்காசையில்லையாய்விடவோ. (மல்குநீலச்சுடர்) குறைவற்றநீலப்புகரானது. (தழைப்ப) கர்மநிபந்தநமாகவந்ததல்லாமையாலே மேன்மேலனமிக்குவருமிறே; இவ்வளவென்ன வொண்ணாதபடி மேன்மேலனவளராநிற்கும். (செஞ்சுடர்ச்சோதிகள்பூத்து) சிவந்தசுடரை யுடைத்தாயிருந்துள்ளதேஜஸ்ஸானது, காலப்பூவலர்ந்தாப்போலேபூத்து. (ஒருமாணிக்கம்சேர்வதுபோல்) அநுபவயோக்யமாம்படி யொருமாணிக்கமானது சாய்ந்தாப்போலே. மல்குநீலச்சுடர் தழைப்பவென்கையாலே - நிறமிருந்தபடிசொல்லிற்று; செஞ்சுடர்ச்சோதிகள் பூத்தென்கையாலே - திவ்யாவயவங்களிருந்தபடிசொல்லிற்று; ஒருமாணிக்கம்சேர்வதுபோ லென்கையாலே-இரண்டுக்கு மாச்ரயமான திருமேனி தன்னைச்சொல்லுகிறது.

செஞ்சுடர்ச்சோதிகள் பூத்தென்கிறவிடத்தில் தெரியாதபடி மறைத்துச் சொல்லிற்றென்றுண்டிறே, அதுதன்னை வ்யக்தமாகச்சொல்லுகிறார் மேல் (அந்தரமேலித்யாதி) அந்தரம் - நடுவு. உடம்புக்குநடுவுஅரை. திருவரையில் திருப்பீதாம்பரத்தோடே, திருவடிகள்; திருநாபிகமலம், திருக்கைகள், பெரியபிராட்டியாரெழுந்தருளி யிருக்கையாலே கீழ்ச்சொன்னவற்றோடொக்கச் சொல்லலாம்படி சிவந்திருக்கிற திருமார்பு, திருக்கண்கள், திருப்பவளம், இவை. (செஞ்சுடர்ச்சோதிவிட) சிவந்தசுடரையுடைத்தான தேஜஸ்ஸை ப்ரசரிக்க. ( உறையென்திருமார்பனேயே ) இதுவுமோராபரணம்போலே. என் ஸ்வாமிநியானபெரியபிராட்டியாரைத் திருமார்விலே யுடையவனே. திருப்பாற்கடலிலே நிருறுத்தாதபடி திருவநந்தாழ்வானைப் படுக்கையாகக்கொண்டு, அதிலேநாநாவர்ணமாயிருப்பதொரு மேல்விரியைவிரித்தாப்போலே, அவன்சாய்ந்தருள, மேலெழுந்தருளியிருக்குமாயிற்றுப்பிராட்டி. (மேல்விரி - திருப்படுக்கைமேலே யலங்காரமாகப்படுத்துமது.) “ வர்யாயேணப்ரஸுப்தஃ ” (பர்யாயேணப்ரஸுப்தஃ) என்னக்கடவதிறே...................................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு (வந்தெய்துமித்யாதி) "வந்தெய்து மாறறியேன்" (என்ற த்தைக்கடாக்ஷித்தவதாரிகை (ஆறுமித்யாதி) 'ஆறும்' என்றது - நீரசக்தராறு துமென்றபடி.

ஆறு - உபாயம். பலிதம் (நீதானேயித்யாதி) எய்துமாறறியேனென்றதே, "வந்தெய்துமாற்றியேன்" என்கையாலே - 'விலக்காமைக்கு வேண்டுவதுண்டு' என்று தோற்றுகிறது.

மேலுக்கவதாரிகை (ஆறுலிழந்தாலோவித்யாதி) "மல்குநீல" என்று தொடங்கி "சோதிவிட" என்றத்தைப்பற்ற (வடிவழகில்லையித்யாதி) "என்திருமார்வனே" என்றத்தைப்பற்ற (பெறுவிக்கைக்கித்யாதி) "வந்தெய்துமாறறியேன்" என்றத்தைப்பற்ற (எனக்காசையித்யாதி) "மல்குநீல" என்று - சம்ருத்திசொல்லியிருக்கமீளவும் "தழைப்ப" என்றதுக்குபாவம் (கர்மநிபந்தநமித்யாதி) விவரணம் (இவ்வளவென்னவித்யாதி) "சோதி" என்று - கிரணம். "செஞ்சுடர்ச்சோதியென்கிறது - விசதமாகாமையாலே விவரிக்கிறார்" என்று நினைத்து, மூன்றுந்தானின்னதென்கிறார் (மல்குநீலவித்யாதிவாக்யத்ரயத்தாலே)

மூன்றையும் விவரியாமல் ஒன்றை விவரிப்பானென்னென்ன (செஞ்சுடர்ச்சோதிகளித்யாதி) 'மறைத்துச்சொல்லிற்று' என்றது - "மல்குநீலச்சுடர், ஒரு மாணிக்கம்" என்கிறவற்றுக்கு - உபமேயம் ஸ்புடமானாப்போலே, "செஞ்சுடர்ச்சோதிகள்பூத்து" என்கிறதுக்கு - தார்ஷ்டாந்திகம் திவ்யாவயவங்களென்று ஸ்புடமாகாமையாலேயென்றபடி. திருமார்வுகறுத்திருக்க, அவயவங்களோடேகூட்டுவானென்னென்ன (பெரியபிராட்டியாரித்யாதி)

பெரியபிராட்டியாரோட்டைச் சேர்த்தியையு மோராபரணமாக ரூபிக்கிறார் (இதுவுமித்யாதி) "சேர்வதுபோல்" என்றரூபகத்துக்குச்சேர வின்னவிடத்திலேயென்னவேண்டுகையாலே யத்தையருளிச்செய்கிறார் (திருப்பாற்கடலிலேயித்யாதி) "மலராள்தனத்துள்ளான்" என்னவேண்டியிருக்க, அவன்மார்விலேயிருக்கிறாளென்னக்கூடுமோவென்ன (பர்யாயேணேத்யாதி) "[Grantha text]" (பரிஶ்ரமாத்ப்ரஸுப்தாசராகவாங்கேஸ்ம்யஹம்சிரம் । பர்யாயேணப்ரஸுப்தஶ்சமமாங்கேபரதாக்ரஜ:) இதி ஸுந்தரகாண்டே வாயஸவ்ருத்தாந்தகதநப்ரகரணே. இதுக்கு - "[Grantha text]" (பரிஶ்ரமாத்) இத்யாதி பூர்வார்த்தத்திலேநோக்கு. 'மேலெழுந்தருளியிருக்குமாயிற்று' என்றவிடத்திலே - "[Grantha text]" (மலயஜஸ்லிப்தம்) இத்யாத்யநுசந்தேயம்.

மல்குநீலவென்றுதொடங்கி, திருமார்பனே - வந்தெய்துமாறறியேன் இத்யந்வய: ...................................................................................................*



# ஏழாம்பாட்டு.

என்றிருமார்பன்றன்னையென்மலைமகள்கூறன்றன்னை
யென்றுமென்னுமகளையகம்பாற்கொண்ட நான்முகனை
நின்றசசிபதியைநிலங்கீண்டெயின்மூன்றெரித்த
வென்றுபுலன்றுரந்தவிசும்பாளியைக்காணேனே.

௩௩

## ஆறாயிரப்படி.

(என்றிருமார்பன்றன்னை) உன்னுடையபோகப்ரவ்ருத்திகள் த்வததீநமானாப்போலே, ப்ரஹ்மருத்ராதிகளுடைய போகப்ரவ்ருத்திகளும் த்வததீநம்; ஆனபின்பு, என்னுடையவபேக்ஷிதமும் த்வத்ப்ரஸாதைகலப்யம்; இங்ஙனேயிருக்கச்செய்தே, நீயோவென்னபேக்ஷிதம் செய்தருளுகிறிலை; நானினியுன்னைக்காணப்பெறாதே போமத்தனையாகாதே யென்கிறார்.........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஸ்வேநரூபேணவும் கார்யபுருஷரூபேணவும் நின்று சர்வப்ரகாரரக்ஷணம்பண்ணுகிற வவனைக்காணப்பெறேனேயென்கிறார்.

என்திருமார்பன்றன்னை-சேஷித்வஸூசகமான ஸ்ரீய:பதித்வத்தை யெனக்கு ப்ரகாசிப்பித்தவனாய். என்மலைமகள்கூறன்றன்னை-பார்வதியை சரீரார்த்தத்திலேயுடைய ருத்ரனைப்ரகாரமாகவுடையனாய் நிற்கிறநிலையை யெனக்குக்காட்டினவனாய். என்றும்-என்றும். என்நாமகளையகம்பால்கொண்ட நான்முகனை- நாமகளானசரஸ்வதியை அந்தரங்கமஹிஷியாய்க்கொண்ட சதுர்முகப்ரகாரத்வத்தை யெனக்குப்ரகாஶிப்பித்தவனாய். நின்ற - இவர்களோடு சமகணனையிலேநிற்பானாய். சசீபதியை-ஶசீபதியான விந்த்ரனைப்ரகாரமாகவுடையனாய். ஸ்வேநரூபேண, நிலங்கீண்டு-பூமியுத்தரணம்பண்ணியும். ருத்ராந்தராத்மாவாய்க்கொண்டு, மூன்றெயிலெரித்த-த்ரிபுரதஹநம்பண்ணியும். ப்ரஹ்மாவுக்குள்ளீடாகநின்று, ஸ்ருஷ்ட்யுபயுக்தமாக, புலன்-இந்த்ரியங்களை. வென்று-ஜயித்து. துரந்த - ஓட்டியும். இந்த்ரசரீரியாய்க்கொண்டு, விசும்பாளியை - ஸ்வர்க்கநிர்வஹணம்பண்ணியும்ரக்ஷித்தவனை. காணேனே - காணமாட்டேனே.

இப்படி சர்வப்ரகாரரக்ஷணவ்யாபாரத்தை யுடையவனைக்காண்கையே ப்ரயோஜநமான வெனக்குக்காணக்கிட்டாதொழிவதே யென்றுகருத்து. எயில் - மதிளாய், புரத்தைக்காட்டுகிறது.......................................................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

உத்தேஶ்யலாபமவனாலேயாயிருந்தது, இத்தலையாலே ப்ரவ்ருத்திக்கைக்கு ப்ராப்தியில்லாதபடியான பாரதந்த்ர்யமுண்டாயிருந்தது, அத்தலையாலே பெறுமிடத்தி லொருகண்ணழிவின்றிக்கே யிருந்தது; இப்படியிருக்கச்செய்தேயு மிழந்திருக்கக் காண்கையாலே, "நானிவ்விழவோடே கிடந்து முடிந்துபோமித்தனையாகாதே" என்கிறார்.

( என்றிருமார்பன்றன்னை ) இவ்விடத்திலே "என்" என்கிறவிதுக்கு-விசேஷணம்ஸத்திலே யந்வயம் * என்றிருமகள்சேர்மார்வனிற்போலே. என்ஸ்வாமிநியான பெரியபிராட்டியாரைத் திருமார்விலேயுடையவனை. (இதுவிசேஷணத்திலும் விசேஷ்யத்திலும் விசிஷ்டத்திலும்; ஆஶ்ரயணதசை ப்ராப்திதசை போகதசை.)

(என்மலைமகளித்யாதி) இவ்வேபதங்களில் "என்" என்கிறவிதுக்கு - விசேஷ்யாம்ஸத்திலே யூற்றம். அவனுடைய விபூதியோகத்துக்

குறுப்பாகச் சொல்லு மித்தனைபோக்கி, "மறந்தும்புறந்தொழாமாந்தர்" என்றிருக்குமவர், இவர்களோடே தமக்கோரந்வய முண்டென்கிறு ரல்லரே. ( என்மலைமகள்கூறன்றன்னை ) ஹிமவானுடைய பெண்பிள்ளையைத் தன்னுடம்பி லொருபார்ச்வத்திலே யுடையனுயிருக்கிறருத்ரனைத் தானிட்டவழக்காக வுடையனுயிருக்கிறவனை. (என்றுமித்யாதி) சரஸ்வதியை, என்றுமொக்கத் தன்பக்கலிலே யுடையனுயிருக்கிற சதுர்முகனுக்கந்தராத்மாவாயுள்ளவனை. (நின்றசசிபதியை) இவர்களை யெண்ணினல் தன்னை யெண்ணலாம்படி ஐஸ்வர்யத்தால் குறைவற்றிருக்கிற விந்த்ரனுக்கந்தராத்மாவாயுள்ளவனை. " ஸப்ரஹ்மாஸஶிவ꞉ " ( ஸப்ரஹ்மாஸஶிவ꞉ ) என்றல் " ஸேந்த்ர꞉ " ( ஸேந்த்ர꞉ ) என்றெக்கச் சொல்லலாம்படி முட்டுப் பொறுத்துநின்ற விந்த்ரனுக்கந்தர்யாமியாயுள்ளவனை.

இப்போதிவைசொல்லுகிறதுக்குக் கருத்தென்னென்றல்; கீழே-ஸ்வரூபமுமுச்ச்ராயமும் ததநீநமென்றது ; இங்கே-ப்ராப்தயௌவநரான புத்ராதிகளை சத்ருஶவிஷயங்களிலே விவாஹம்பண்ணுவிக்கும்பித்ராதிகளைப்போலே, இவர்களுடைய மஹிஷீலாபமும் தந்தாமாலல்ல, சர்வேச்வரனுலே யென்கை. ( நிலங்கீண்டித்யாதி ) இவர்களுடைய ப்ரவ்ருத்திகளுமெல்லாம் ததநீநமென்கிறதுமேல் (நிலங்கீண்டு) ப்ரளயார்ணவமக்நையா யண்டபித்தியிலேபுக் கொட்டினபூமியை மஹாவராஹமாய்ப்புக்கெடுத்துக்கொண் டேறினபோதை வ்யாபாரம் ததநீநமானுப்போலே, அவர்களுடைய வ்யாபாரங்களும் ததநீநமென்கிறது. ( எயில்மூன்றெரித்த ) மதிள்மூன்றையெரித்த. " விஷ்ணுராத்மா " (விஷ்ணுராத்மா) என்னக்கடவதிறே; அதுவுமவனிட்டவழக்கு. ( வென்றுபுலன்துரந்த ) ஸ்ருஷ்டிக்குறுப்பாக விந்த்ரியஜயத்தைப்பண்ணினவனை. புலன்களை வென்றேட்டின. (விசும்பாளியை) ஸ்வர்க்கத்தை வன்னியமறுத்தாளுகிறவனை. (இங்குப்ரவ்ருத்திவிசிஷ்டரான விவர்களோடே சமாநாதிகரித்தது, சகலப்ரவ்ருத்தியுமவனதீநையாகையாலே யென்னுடையவபேக்ஷித சித்திக்கவனையொழிய வென்னுற்செய்யலாவதில்லை யென்கைக்காக. ) (காணேனே) ஆகச்சொல்லிற்றுயிற்றது-உத்தேச்யலாபமவனுலேயாயிருந்தது, அதுக்குறுப்பான ப்ரவ்ருத்தியில் வ்யாபரிக்க ப்ராப்தியில்லாதபடி அதுவுமவனிட்டவழக்காயிருந்தது. இனி இத்தலையாலே பேறுமன்று விளம்பஹேதுவுண்டாயிருந்தது; அவனுலே பேறுமன்று விளம்பஹேதுவின்றிக்கேயிருந்தது. இப்படியிருக்கச்செய்தேயும் தம்மை யிழந்திருக்கக் கண்டார், ஆகையாலே "இனி இவ்விழவோடே யிங்ஙனே முடிந்துபோமித்தனையாகாதே" என்று க்லேசிக்கிறுர்..............................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (என்றிருமார்பனித்யாதி) ப்ரஹ்மாதிகளை ஸ்வஸ்வமஹிஷிகளோடேகூடச் சொல்லுகிறதுக்குக்கருத்து - "அவரவர்களுக்கபிமதமான விஷயங்

களை ஈஶ்வரன் தலைக்கட்டிக்கொடுக்கும்'' என்றிறே; '' இப்படியே நமக்கு மபிமதமான தன்திருவடிகளில் கைங்கர்யத்தையும்தரும் '' என்றுவிவக்ஷித்து 'உத்தேஶ்யலாபமவனாலேயாயிருந்தது' என்கிறார். '' எயில்மூன்றெரித்து '' இத்யாதியாலே-இவர்கள் ப்ரவ்ருத்தியுமவனதீநமென்கையாலே, '' தமக்குசாதநாநுஷ்டாநம்பண்ண ப்ராப்தியில்லாதபடியான பாரதந்த்ர்யந்தோற்றுகிறது '' என்றுவிவக்ஷித்தருளிச்செய்கிறார் (இத்தலையாலேயித்யாதி) ''என்திருமார்வன்றன்னை'' என்றத்தைப்பற்ற (அத்தலையாலேயித்யாதி) கண்ணழிவு-விளம்பம். ''காணேனோ'' என்றத்தைக்கடாக்ஷித்தருளிச்செய்கிறார் (இப்படியிருக்கச்செய்தேயுமித்யாதி)

கிழைப்போலே '' என் '' என்கிறவை விசேஷணம்சாந்வயியன்றென்கிறார் (இவ்வோபதங்களிலித்யாதி) விசேஷ்யாம்ஶத்திலேயென்றது - பரமவிசேஷ்யனான வீஶ்வரனிடத்திலென்றபடி. விசேஷணம்சத்திலூற்றமானால் விரோதமென்னென்ன (அவனுடையவித்யாதி) இவர்களோடே தன்னையுமெண்ணலாம்படியிருக்குமோவென்ன (ஸப்ரஹ்மேத்யாதி)

ருத்ராதிகளை ஸ்வஸ்வமஹிஷிகளோடே சொல்லுகிறதுக்குபாவத்தை சங்காபரிஹாரமுகேந வருளிச்செய்கிறார் (இப்போதிவையித்யாதி) இவைசொல்லுகிறதுக்கு - மஹிஷிகளோடே யிவர்களைச்சொல்லுகிறதுக்கென்றபடி.

ஆனால், ''நிலங்கீண்டு'' என்று ஸ்வவ்யாபாரம் சொல்லுவானென்னென்ன; த்ருஷ்டாந்தார்த்தமென்கிறார் ( ப்ரளயார்ணவேத்யாதி ) த்ரிபுரத்தைதஹித்தவன் சர்வேஶ்வரனோவென்ன (விஷ்ணுராத்மேத்யாதி) இந்த்ரியஜயம் - ப்ராஹ்மாவின் கார்யம். ''காணேனோ'' என்றது-காணப்பெறேனோவென்றபடி. பலிதம் (ஆகவித்யாதி) ப்ரவ்ருத்திகளும் ததீநமென்கையாலே-ப்ரகரணத்துக்குபலித்தபாவம் (இனியித்தலையாலே யித்யாதிநாலுவாக்யத்தாலே)

க்ரமேணாந்வயஃ ............................................................*

---

## எட்டாம்பாட்டு.

ஆளியைக்காண்பரியாயரிகாணரியாயரக்க
ரூளையிட்டன்றிலங்கைகடந்துபிலம்புக்கொளிப்ப
மீளியம்புள்ளைக்கடாய்விறன்மாலியைக்கொன்றுபின்னு
மாளுயர்குன்றங்கள்செய்தடர்த்தானையுங்காண்டுங்கொலோ.

### ஆறாயிரப்படி.

( ஆளியை ) ஆளியைக்கண்ட குதிரையைப்போலேயும், சிம்ஹத்தைக்கண்ட நரியைப்போலேயும், ஹதசேஷரான ராக்ஷஸரெல்லாரும் பீதபீதரா யூளையிட்டு லங்கையினின்றும் ரஸாதலத்திலேபுக்கொளிக்கும்படியாக ப்ரதிகூலர்க்கு ம்ருத்யுபூதரான பெரியதிருவடிதிருத்தோளிலேயேறி லங்கையைச்சென்றடர்த்து, அதிபலபராக்ரமராயிருந்த மாலிசுமாலிகளை ஸஸைந்யமாகக்கொன்றருளினாப்போலே, விரோதியானவென்னுடைய பாபங்களையும்போக்கி யெனக்கென்றோ தன்னைக்காட்டி யருளுவதென்கிறார். ............................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், மாலிப்ரப்ருதிகளை நிரசித்த வுபேந்த்ரமூர்த்தியானவனைக் காணக்கூடுமோவென்கிறார்.

ஆளியை-யாளியை. காண்-கண்ட. பரியாய்-குதிரைபோலவும். அரி-சிம்ஹத்தை. காண்-கண்ட. நரியாய்-நரிபோலவும். அரக்கர் - ராக்ஷஸரானவர்கள். அன்று-யுத்தோத்யோகம்பிறந்தவன்று. ஊளையிட்டு-பயாதிசயத்தாலே கதறிக்கொண்டு. குளவிகூட்டைவிட்டுப்பறந்துபோமாபோலே, இலங்கை - இலங்கையை. கடந்துவிட்டு. பிலம்-பிலத்வாரத்திலே. புக்கு-புக்கு. ஒளிப்ப-பாதாளத்திலே யொளிக்கும்படி. மீளி-பெருமிடுக்கனாய். அம்-தர்ஶநீயனான. புள்ளை - பெரியதிருவடியை. கடாய்-நடத்தி. விறல்-ப்ரபலனான. மாலியை-மாலியை. கொன்று-கொன்று. பின்னும்-அவ்வளவிலேவிடாதே. ஆள்-அதிசூரரானபுருஷர்களை. கொன்று, உயர் - உயர்ந்த. குன்றங்கள்-மலைகளாக. செய்து-பண்ணி. அடர்த்தானையும்- அவர்களையழிக்குமுபேந்த்ரனையும். காண்டுங்கொல்-காணக்கூடுமோ.

மாலிசுமாலி ப்ரப்ருதிகளை யழியச்செய்தாப்போலே, நம்முடைய வஹங்கார மமகார ப்ரதாநமான ராகத்வேஷாதிகளையு மழிக்கக்காண்போமோவென்று கருத்து. மீளி-மிடுக்கு.............................................................................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

மாலிதொடக்கமான ப்ரதிகூல வர்க்கத்தைக் கொன்றருளின சர்வேஶ்வரனைக் காணவல்லோமே யென்கிறார்.

முதலிரண்டுபாட்டாலே-ப்ராப்யனவனே என்னுமிடம்சொல்லி, மேலைந்துபாட்டாலே - ப்ராபகனவனே தன்னைப் பெறுகைக்கு என்னுமிடத்தைச்சொல்லி, இப்பாட்டாலும் மேலிற்பாட்டாலும் - அவனுடைய விரோதிநிரஸநசீலதையைச் சொல்லி, ப்ரதிபந்தகத்தைப் போக்குவானவனே யென்னுமிடத்தைச் சொல்லுகிறது.

( ஆளியைக்காண்பரியாய் ) ஆளியைக்கண்ட குதிரையைப் போலவும். ( அரிகாணரியாய் ) சிம்ஹத்தைக்கண்ட நரியைப்போலவும். ஸ்ரீ ராமாயணத்தே - அந்தராக்ஷஸர் பயப்பட்டபடியாகப் பலவுதாஹரணங்களையிட்டுச் சொல்லிப் போரக்கடவதிறே; இங்கே இரண்டுவகையாலே யத்தை ஸூசிப்பிக்கிறார். பரி-குதிரை. ( அரக்கரூளையிட்டு ) கீழே "நரி" என்கையாலே - அந்த சமாதியாலே சொல்லுகிறார். ( ராக்ஷஸர்திரளநின்றொரு ப்ரவ்ருத்திபண்ணமாட்டாதே கதறிக்கொண்டு. )

(அன்றித்யாதி) ("மாலி, மால்யவான், சுமாலி" என்கிறவர்களை, பெரியதிருவடியைமேற்கொண் டழியச்செய்கிறவன்று. ) தூசித்தலையில் நேர்நின்று வ்யாபரிக்க க்ஷமரல்லாமையாலே லங்கையை விட்டுப்போய், பாதாளத்திலேபுக்கொளிக்க. புற்றுக்க ளெப்போதுமொக்கப் பாம்பு பற்றறுதாப்போலே, என்றுமொக்க ராக்ஷஸர்மாறாதே, "மாலி, சுமாலி, மால்யவான்" என்றாப்போலே சொல்லுகிறவர்கள் வர்த்தித்துப் போந்தார்களாய், பெரியதிருவடி முதுகிலே வந்து தோன்றி அவர்களை நிரஸித்தா

னாகச் சொல்லக்கடவதிறே; அத்தை யிங்கே ப்ரசங்கிக்கிறார். (பிலம்புக் கொளிப்ப) கையிலாயுதம் பொகட்டானையும், முதுகுகாட்டினானையும் கொல்லக்கடவதல்லவிறே; ஆகையால், தப்பியோடிப்போ யொளிப்பாரு ம் உள்ளேபட்டுப்போனாருமாய்ப் போனார்களாயிற்று.

(மீளியம்புள்ளைக்கடாய்) மீளியமென்று - ஒருசொல்லாய், வலி யையுடைய பெரியதிருவடியை நடத்தியென்னுதல்; மீளி அம் புள் என் று பிரித்து "கறையணிமூக்குடைப்புள்ளைக்கடாவி" என்கிறபடியே ப்ர திகூலர்க்கு ம்ருத்யுபோலே யிருப்பானாய், "தூவாயபுள்ளூர்ந்து" என்கி றபடியே அநுகூலர்க்கு தர்ஸநீயமான வேஷத்தையுடைத்தான பெரியதி ருவடியை நடத்தியென்னுதல். பெரியதிருவடி முதுகிலேவந்துதோற்று ம்போதை யழகையேயிறே யிவர்கள் பாவித்துக்கிடப்பது. மீளியென்று- வலிக்கும், ம்ருத்யுவுக்கும், பாலைநிலத்தில் தலைமகனுக்கும் பேராகச்சொ ல்லுவர்கள். (விறல்மாலியைக்கொன்று) ஆக, ப்ரசித்தரிலே யொருவனை ச்சொல்லிற்று. (பின்னுமித்யாதி) பின்பும், ஆண்பிள்ளைகளாயிருப்பா ர நேகரை யழியச்செய்து, அவர்களாலே பிணமலையாம்படி பண்ணி. ஆளா லே உயர்ந்தமலைக ளுண்டாம்படிபண்ணி. (அடர்த்தானையும் காண்டுங் கொலோ) அவனசுரவர்க்கத்தை யழியச்செய்தாப்போலே, நம்விரோதி களைப்போக்கி நமக்குக் காட்சியிலே யந்வயமாய், நாம் கண்டோமாய்த்த லைக்கட்டவல்லோமோ..........................................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு (ஆளியையித்யாதி) "விறல்மாலியைக்கொன்று பின்னுமா ளுயர்குன்றங்கள் செய்தடர்த்தானையுங்காண்டுங்கொலோ" என்றபதங்களைக்கடா க்ஷித்தவதாரிகை (மாலிதொடக்கமானவித்யாதி)

கீழிற்பாட்டுக்களோடே யிதுக்கு சங்கதியேதென்ன (முதலித்யாதி)

ஆளி-சரபம். இப்படி த்ருஷ்டாந்தம்சொல்லுகிறதுக்கு ப்ரமாணமுண்டோ வென்ன (ஸ்ரீராமாயணத்தேயித்யாதி) பலவுதாஹரணங்களையென்றது - பலத்ருஷ் டாந்தங்களையென்றபடி. அவைகளாவன - "ஶரபேணயதாஸிம்ஹாஸ்ஸிம்ஹேந த்விரதாயதா। த்விரதேநயதாவ்யாக்ராவ்யாக்ரேணத்வீபிநோயதா"

(ஶரபேணயதாஸிம்ஹாஸ் ஸிம்ஹேநத்விரதாயதா। த்விரதேநயதாவ்யாக்ராவ்யாக் ரேணத்வீபிநோயதா) இத்யாரப்ய, "ததாதேராக்ஷஸாயுத்தேவிஷ்ணுநா ப்ரபவிஷ்ணுநா। த்ரவந்தோத்ராவிதாஸ்சைவஶாயிதாஶ்சமஹீதலே"

(ததாதேராக்ஷஸாயுத்தேவிஷ்ணுநாப்ரபவிஷ்ணுநா। த்ரவந்தோத்ராவிதாஸ்சைவ ஶாயிதாஶ்சமஹீதலே) இத்யந்தம்சொன்னவைகளை, இவை உத்தரஸ்ரீராமாயண த்திலே மாலிஸுமாலியுத்தே.

கூப்பிட்டென்னாதே "ஊளையிட்டு" என்றதுக்குபாவம் (கீழேயித்யாதி)

"அன்று" - பெரியதிருவடியைமேலேகொண்டு, மாலிசுமாலி மால்யவான் முதலானாரை யழியச்செய்தவன்றென்றபடி. லங்கையைவிட்டுப்போகவேண்டுவா

னென்னென்ன (கையிலித்யாதி) யுத்தத்திலே பட்டுப்போனருமாயென்றபடி. உள்ளேயென்றது-லங்கைக்குள்ளேயென்றபடி.

திருமொழி (அவாயபுள்ளூர்ந்த) அழகியவாயையுடைய புள்ளைநடத்தி என்றபடி. பெரியதிருவடி அநுகூலர்க்கு தர்ஸநீயனேவென்ன (பெரியதிருவடியித்யாதி) "பண்கொண்டபுள்ளின் சிறகொலிபாவித்து" என்றத்தைக்கடாக்ஷித்த (இவர்கள் பாவித்துக்கிடப்பதென்றது) "மீளி" என்று - வலி. ம்ருத்யுவைச்சொல்லுமோவென்ன (மீளியென்றித்யாதி)

அவதாரிகையிலே "மாலிதொடக்கமான" என்றுவைத்து, இங்கொருவனைக்கொன்றென்கிற தென்னென்ன (ஆகப்ரஸித்தரிலேயித்யாதி)

சப்தார்த்தம் (ஆளாலேயித்யாதி) பதப்ரயோகத்துக்கு ஹார்த்தபாவம் (அவனைசுரோத்யாதி)

க்ரமேணாந்வயः ........................................................................*

---

# ஒன்பதாம்பாட்டு.

காண்டுங்கொலோநெஞ்சமேகடியவினையேமுயலு
மாண்டிறன்மீளிமொய்ம்பிலரக்கன்குலத்தைத்தடிந்து
மீண்டுமவன்றம்பிக்கேவிரிநீரிலங்கையருளி
யாண்டுதன்சோதிபுக்கவமரரரியேற்றினையே.

## ஆறாயிரப்படி.

(காண்டுங்கொலோ) பின்னையும் க்ரூரகர்மத்திலே நிரதனாய் வீர்யதேஜோவிஸிஷ்டனாய் ம்ருத்யு சத்ருஸனுமாயிருந்த ராவணனுடைய குலோத்ஸாதநத்தைப்பண்ணி, "அவனைக்கொன்றோமே" என்றுதிருவுள்ளத்திலேநொந்து, அவன்றம்பியான ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு லங்கைஸ்வர்யத்தைக்கொடுத்தருளி, மீண்டெழுந்தருளி, ஸ்வவிஸ்லேஷ ஜநித நிரவதிகவ்யஸநத்தாலே விநஷ்டப்ராயமான திருவயோத்யாநகரியிலுள்ள ஸ்தாவரஜங்கமாத்மகமான சர்வஜந்துஜாதத்தையும் ரக்ஷித்தருளி, அவர்களையுங்கூடக்கொண்டு திருநாட்டிலேயெழுந்தருளி, திருமாமணிமண்டபத்திலே *·அயர்வறுமமரர்கள்நடுவே ப்ரதிகூலநிரஸந ஜமாநஜயத்தோடேகூட வெழுந்தருளியிருக்கிறவிருப்பை, நெஞ்சே நாமுமொருநாள் காணவல்லோமோவென்கிறார் ..........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், விபீஷணபக்ஷபாதத்தாலே ராவணகுலத்தை நிஸ்ஸேஷமாகமுடித்த அவனுக்கு லங்காதிபத்யத்தையுங்கொடுத்துத் தானு மபிஷிக்தனாய் ராஜ்யம் பண்ணி * தன்னுடைச்சோதியேற வெழுந்தருளின சக்ரவர்த்திதிருமகனை, அந்த மேன்மையோடே யிருக்கச்செய்தே யவனைநாம் காணவல்லோமோவென்று நெஞ்சைக்குறித் தருளிச்செய்கிறார்.

கடிய-அதிக்ரூரமான. வினையே-பாஹிம்ஸாவ்ருத்தியையே. முயலும்-கல்பித்துப்பண்ணும் மஹோத்யோகத்தையுடையனாய். ஆண் - ப்ரதாபோஷ்மளமான பும்ஸ்த்வத்தையுடையனாய்க்கொண்டு. திறல் - பராபிபாவுகமான சௌர்யத்தையும். மீளி — ஸிம்ஹம்போலேயிருக்கும். மொய்ம்பில் - பெருமிடுக்கையுடையனான. அரக்கன் - ராக்ஷசஜந்மாவான ராவணனுடைய. குலத்தை - ப்ராதாவான கும்பகர்ணனும் இந்த்ரஜித்ப்ரமுகபுத்ரருமானகுலத்தை. தடிந்து - நிஸ்ஸேஷமாக வறுத்துப்பொகட்டு. அவ்வளவில்விடாதே, மீண்டும்-பின்னையும். அவன்தம்பியாயிருக்கச்செய்தே, ஆஸ்ரயணோபகாரமடியாக, அவன்றம்பிக்கே-விபீஷணனுக்கு. விரி - விஸ்தீர்ணமான. நீர்-சமுத்ராஜலத்தையுடைத்தான. இலங்கை-லங்கையை. அருளி - ராஜ்யமாகக்கொடுத்து. ஆண்டு-திருவயோத்யையிலெழுந்தருளி யபிஷித்ராய்ப் பதினோராயிரம் சம்வத்ஸரம் ராஜ்யம்பண்ணி. தன்-தனக்கஸாதாரணமாய். சோதி-ஜ்யோதிரூபமானபரமபதத்திலே. புக்க - சென்றிருப்பானாய். இந்தமேன்மையாலே, அமரர்-நித்யசூரிகளுக்கு, அரி-ஸிம்ஹஸ்ரேஷ்டம்போலே. ஏற்றினை - செருக்குத்தோன்ற வெழுந்தருளியிருக்கிறவனை. நெஞ்சமே-பிரிவுக்குக்கூட்டா யிடுபட்டுப்போந்த நெஞ்சமே. நாம், காண்டுங்கொலோ-காணக்கூடுமோ.

மீண்டென்று ஆண்டென்கிறவிடத்திலே யந்வயிக்கவுமாம். ரஜஸ்தமஃகார்யமான வந்யதாஜ்ஞாந விபரீதஜ்ஞாநங்களையும், தஜ்ஜநிதகாமக்ரோதாதிகளையும், ராவணகும்பகர்ணாதிகளை ஸஸந்தாநமாக வழித்தாப்போலேயழித்து, * தர்மாத்மாவான விபீஷணனுக்கு லங்காராஜ்யத்தைக்கொடுத்தாப்போலே, சுத்தசத்த்வகார்யமான ஜ்ஞாநவைசத்யத்தையுடைய நமக்கு கைங்கர்யஸாம்ராஜ்யத்தைத்தரும் சூரிசேவ்யனைக்காணக்கூடுமோவென்றுகருத்து. மீளியென்று-ம்ருத்யுவென்றுமாம். மொய்ம்பு-மிடுக்கு. திறல்-சௌர்யம் ...................................................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

ராவணாதிகளை நிரசித்ததசரதாத்மஜனை, நெஞ்சேகாணவல்லோமே யென்கிறார்.

(காண்டுங்கொலோநெஞ்சமே) இழவாலேகட்டிக்கொண்டு கதறுகைக்குக் கூட்டானநீ, இப்பேற்றாலே நிர்வ்ருதரா யநுபவிக்கு மநுபவத்துக்கும் நீகூட்டாய் நாமவனைக்காணவல்லோமேயோ. (கடியவினையேமுயலும்) தாயையும் தமப்பனையுமிரண்டிடத்திலே யாக்குவாரைப்போலேயிறே, பெருமாளையும் பிராட்டியையு மிரண்டிடத்திலேயாக்கிற்று. இதில் தாழ்ந்திருப்பதொரு செயலில்லை யாயிற்றிவன் செய்யுமவற்றில். சர்வேஸ்வரனுக்கு "க்ரமத்தாலே பலம்கொடுக்கிறோம்" என்றாறியிருக்கவொண்ணாதபடியாயிற்றுக்கொடிய செயல்கள் செய்யும்படி. "ஐஹைவ ஃலமஶ்நுதே" (இஹைவபலமஸ்நுதே) என்னும்படியே.

அவதாரணத்தால் - சதாசாரசம்பந்தமில்லாதவன். (ஆண்டிறலித்யாதி) ஆண்பிள்ளைத்தனத்தில்வந்தால், திறலையுடைய ஸிம்ஹம்போன்றமிடுக்கையுடைய வரக்கன். மீளி - ஸிம்ஹம். அன்றியே, திறலையுடையனாய், பராபிபவநசாமர்த்த்யத்தையுடையனாய், ம்ருத்யுகல்பமான மிடுக்கையுடையனான ராவணனுடைய குலத்தைத்தடிந்து. தடிகை - கடிகை.

“ கரிஷ்யேமை திலிதோராபிஸாசமராக்ஷஸம் ” (கரிஷ்யேமை திலிதோராபிஸாசமராக்ஷஸம்) என்கிறபடியே குலமாக நிரசித்து. (அவன்றம்பிக்கே விரிநீரிலங்கையருளி) “யதிவாராவணஸ்ஸ்வயம்” (யதிவாராவணஸ்ஸ்வயம் ) என்று - சரணமென்றபாசுரமழகிதாயிருந்தது, “ அவனோடு சம்பந்தமுடையானொருவன் வந்தானாகையன்றிக்கே, அவன்றானே வரப்பெறுவதுகாண் ” என்று செவிசிப்பாய்க்திருந்தாரிறே. அங்குநின்றும் வந்தானொருவனைக் கைக்கொண்டாராக வமையாதோ, இந்நிர்ப்பந்தமென்னென்னில்; அவனோடு சம்பந்தமுடையானொருவனைக் கைக்கொண்டால் அவன்றானும் நாலுபேருமே யாய்ப்போம், அவன்றானே வரப்பெற்றதாகில் துறுப்புக்கூடாக நோக்கிற்றாகலாமிறே; இனித்தான் ப்ராதிகூல்யத்தில் முதிரநின்றானுமவனே யாகையாலே, ரக்ஷாபேக்ஷையுள்ளது மவனுக்கேயிறே. இப்படியவனை விஷயீகரிக்கக்கோலிப்பெறுத விழவுநீர்ந்த திவனைக்கைக்கொண்டபின்பாயிற்று. “ அநுஜோராவணஸ்யாஹம் ” (அநுஜோராவணஸ்யாஹம் ) என்று அவன்வர, இவரும் “ அவன்றம்பியே ” என்றாயிற்றவனைக்கைக்கொண்டது. ( விரிநீரிலங்கையருளி) கடல் சூழ்ந்த லங்கையைக்கொடுத்தருளி.

(மீண்டும்-ஆண்டு) ராவணவதாநந்தரத்திலே, ப்ரஹ்மாதிதேவர்கள் “ தேவரீரையம்புக்கிலக்காக்கி, நாங்களெங்கள்கார்யம் தலைக்கட்டிக்கொண்டோம்; இனி, தன்னுடைச்சோதியேற வெழுந்தருளவமையும் ” என்ன, அவ்வளவிலே ருத்ரன், “தேவரங்ஙன்செய்தருளவொண்ணாது, திருவபிஷேகத்துக்கு விக்நம்பிறக்கையாலே திருத்தாய்மாரு மிழவுபட்டிருந்தார்கள், நாடுமடையநொந்திருந்தது, ஸ்ரீபரதாழ்வானு மார்த்தனாயிருந்தான், ஆனபின்பு, ‘ஆப்லவஸ்யபரதம்ஸீநம்’ (ஆப்லவாஸ்யபரதம்தீநம்) என்கிறபடியே ஸ்ரீபரதாழ்வான் தொடக்கமானாரிழவுகளெல்லாந்தீரும்படி மீண்டெழுந்தருளி, திருமுடிசூடி, நாட்டைவாழ்விக்கவேணும் ” என்ன, அதுதிருவுள்ளத்துக்குப்பொருந்தும் செயலாகையாலே பதினோராயிரமாண்டொருபடிப்படவிருந்து நாட்டைவாழ்வித்தருளி.

(தன்சோதிபுக்க) அம்புக்கிலக்காக்குவா ரிருந்தவிடத்தைவிட்டுத் தனக்கஸாதாரணமாய் நிரவதிகதேஜோரூபமாயிருக்கிற பரமபதத்திலேபோய்ப்புக்க. (அமரரரியேற்றினையே) அம்பிட்டெய்வாரின்றிக்கே ஆநுகூல்யமே ஸ்வபாவமாய் கைங்கர்யைகநிஷ்டரான நித்யஸூரிகள் நடுவே யவனிருக்குமிருப்பைக் காணவல்லோமே. கோவதாசங்கத்தின்நடுவே யொருவ்ருஷபம் செருக்கித்திரியுமாபோலே, நித்யஸூரிகள்கொண்டாட, அவர்கள்நடுவே யத்தாலேசெருக்கிமேனாணித்திருக்கு மிருப்பைச்சொல்லுகிறது. நித்யஸூரிகள் திரளிலே அவ்வோலக்கத்திந்நடுவேயிருக்கு மிருப்பைக்காண்கையிறே ப்ராப்யமாகிறது ... .....................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு (காண்டுங்கொலோவித்யாதி) "அரக்கன்குலத்தைத்தடிந்து" இத்யாதிகளைக்கடாக்ஷித்தவதாரிகை (ராவணுதிகளையித்யாதி)

"நெஞ்சமே" என்று சம்போதித்து, "கொலோ" என்கிறவருடையஹார்த்த பாவம் (இழவாலேயித்யாதி) இப்பேற்ருலேயென்றது - பகவத்ஸாக்ஷாத்காரத்தாலேயென்றபடி. இது-"அமரரரியேற்றினை - காண்டுங்கொலோ" என்றந்தைப்பற்ற.

ராவணன்செய்த க்ரூரபாபமேதென்ன (தாயையுமித்யாதி) இது-அவதாரணத்துக்குபாவம். "கடியவினை" என்றதுக்கர்த்தம் (சர்வேஶ்வரனுக்கித்யாதி) "கொடியசெயல்களைச்செய்தால்சீக்ரமாகபலங்கொடுக்கவேணும்" என்னுமதுக்குப்ரமாணம் (இஹைவேத்யாதி) "[illegible]" (அத்யுத்கடை:புண்யபாபைரிஹைவபலமஶ்நுதே । த்ரிபிர்வர்ஷைஸ்த்ரிபிர்மாஸைஸ்த்ரிபி:பக்ஷைஸ்த்ரிபிர்த்திநை:) இதிதர்மஶாஸ்த்ரே. திறல் - மிடுக்கும், பராபிபவந சாமர்த்யமும். மீளி - சிம்ஹமென்னுதல், ம்ருத்யுவென்னுதல். மொய்ம்பு-மிடுக்கு. "[illegible]" (ஆகர்ணபூர்ணைரிஷுபிர்ஜீவலோகம்துராஸதை: । கரிஷ்யேமைதிலீஹேதோரபிஶாசமராக்ஷஸம்) இத்யாரண்யகாண்டே,

விபீஷணனுக்கென்னுதே, "அவன்றம்பிக்கு" என்கைக்கு, அவன்சம்பந்தமங்கீகாரஹேதுவோவென்ன (யதிவேத்யாதி) "[illegible]" (விபீஷணோவாஸுக்ரீவயதிவாராவணஸ்ஸ்வயம்) இத்யாதி. இதுக்கர்த்தம் (சரணமித்யாதி) செவிசெப்பாய்ந்து-ஆதரித்து. "ராவணன்றானேவரவேணும்" என்றுசைப்பட்டிருந்த பெருமாளுடையகருத்தை ப்ரஶ்நோத்தரரூபேணவருளிச்செய்கிருர் (அங்குநின்றுமித்யாதி) துறப்புக்கூடு - தூற்றுப்பொலி எல்லாரையும் நோக்கலாமென்றபடி. ராவணனையே கைக்கொள்ளவேணுமென்னுமதுக்கு ஹேத்வந்தரம் (இனித்தானித்யாதி) ஆனுலவன்வந்தானில்லையேயென்ன (இப்படியித்யாதி) அப்படி தத்ஸம்பந்தமடியாகக் கைக்கொண்டாரோவென்ன (அநுஜ இத்யாதி) "[illegible]" (அநுஜோராவணஸ்யாஹம்தேநசாஸ்ம்யவமாநித:।பவம்தம்ஸர்வபூதாநாம்ஶரண்யம்ஶரணம்கத:) இதிராமம் ப்ரதிவிபீஷண:. அதாவது - அவன் ஸ்வதோஷத்தை முன்னிட்டுக்கொண்டுவர, அதுவே பற்றுசாக வங்கீகரித்தாரென்றபடி.

(ஆஶ்வாஸ்யேதி) "[illegible]" (ஆஶ்வாஸ்யபரதம்தீரம் கௌஸல்யாஞ்சயஶஸ்விநீம்) இத்யாதி, இதிருத்ர:. "அமரரரியேற்றினை - காண்டுங்கொலோநெஞ்சமே" என்றவருடையஹார்த்தபாவம் (அம்பிட்டித்யாதி) "அரியேறு" என்றதுக்குபாவம் (கோவதுவித்யாதி) "அமரரரியேற்றினை - காண்டுங்கொலோ" என்றுகூட்டிபாவம் (நித்யசூரிகளித்யாதி)

கடியவினையித்யாரப்ய, அருளி, மீண்டும் - ஆண்டுதன்சோதிபுக்க வமரரரியேற்றினை - காண்டுங்கொலோ நெஞ்சமே இத்யந்வய: .............................*

# பத்தாம்பாட்டு.

---

ஏற்றரும்வைகுந்தத்தையருளுநமக்காயர்குலத்
தீற்றிளம்பிள்ளையொன்றாய்ப்புக்குமாயங்களேயியற்றிக்
கூற்றியல்கஞ்சனைக்கொன்றைவர்க்காய்க்கொடுஞ்சேனைதடிந்
தாற்றன்மிக்கான்பெரியபரஞ்சோதிபுக்கவரியே.

## ஆறாயிரப்படி.

( ஏற்றரும் ) ஸ்ரீநந்தகோபகுமாரனாய்வந்து பிறந்தருளி, * திண் கொளசுரரைத்தேய வளர்ந்தருளி, பந்துரூபேணபோய்ப்புக்கு ப்ரதிகூலனான கம்ஸனை வஞ்சித்துக்கொன்றருளி, பின்னைபாண்டவர்களுக்காக தத்ப்ரதிகூலனான துர்யோதநனையும், க்ரூரமானவவனுடைய சேனையையும் நிஶ்ஶேஷமாக நஶிப்பித்துப் பாண்டவர்களுக்கு ராஜ்யத்தைக்கொடுத்து, பின்னையுமவர்களுக்கொன்றும் செய்யாதானாய்த் திருநாட்டிலேபோய்ப் புக்கருளின பரமபுருஷனே அந்ததுஷ்ப்ராபமான திருநாட்டைநமக்கும் தந்தருளுமென்று தம் திருவுள்ளத்தையாஶ்வசிப்பிக்கிறார்..............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஸ்வஜநமான ஸ்ரீவசுதேவ பாண்டவப்ரப்ருதிகளுடைய விரோதிகளை நிரசித்து ரக்ஷித்த க்ருஷ்ணன், நமக்குப் பரமபதத்தை யருளுமென்கிறார்.

ஈன்று - பிறந்தபோதே. இளம் - அதிசைசவத்தையுடைய. பிள்ளை - பிள்ளையாய்க்கொண்டு. ஆயர்குலத்து - கோபகுலத்திலே. ஒன்றாய் - ஏகிபவித்து. புக்கு - புக்கு. மாயங்களே - பூதநாஶகட யமளார்ஜுநநிரசந ரூபமான வத்யாஶ்சர்யங்களையே. இயற்றி - ப்ரவர்த்தித்து. கூற்று - உடலையுமுயிரையும்பிரிக்கும்ம்ருத்யுவின். இயல் - ஸ்வபாவத்தை யுடையனாய்க்கொண்டு. கஞ்சனை - ஸ்ரீவசுதேவர்தேவகியார்க்கு ப்ராணபூதனான தன்னைப்பிரித்த கம்சனை. கொன்று - நசிப்பித்து. பின்பு, ஐவர்க்கு-பாண்டவர்களைவர்க்கு. ஆய்-ஆய். கொடும்-க்ரூரமான. சேனை-துர்யோதநசேனையை. தடிந்து-அழியச்செய்து. இதெல்லாம் செய்தபின்பு, “ ஜுணம்ப்ரவ்ருத்தமிவமே ” (ருணம்ப்ரவ்ருத்தமிவமே) என்று ஒன்றும்செய்யாதாரைப்போலே சீற்றம் மிஞ்சுகையாலே, மிக்க-மிக்க. ஆற்றலான்-பொறையையுடையனாய். பெரிய-அபரிச்சிந்நமாஹாத்ம்யத்தையுடைத்தாய். பரஞ்ஜ்யோதி-பரஞ்சோதிஶ்ஶப்தவாச்யமான பரமபதத்திலே. புக்க-பூபாரநிர்ஹரணாநந்தரமெழுந்தருளிப்புக்க. அரி - * சீரியசிங்கமானக்ருஷ்ணனானவன். ஏற்றரும் - * பரமயோகிவாங்மநஸா பரிச்சேத்யஸ்வரூபஸ்வபாவமான. வைகுந்தத்தை-பரமபதத்தை. நமக்கு-நமக்கு. அருளும்-தன்க்ருபையாலே தந்தருளும்.

“ ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி ” (ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி) என்றுசமஸ்தவிரோதிநிவர்த்தகனானவன், “மாஶுச:” (மாஶுச:) என்கிறபடியே நம்மார்த்திதீரும்படி பலப்ரதனுமென்று கருத்து. அரியென்று - ஸம்ஜ்ஞையுமாம். பாபஹரஸ்வபாவனென்றுமாம்..............................*

ஈடு - பத்தாம்பாட்டு.

ப்ராப்யனவனே யென்னுமிடத்தைச்சொல்லி, தன்னைப்பெறுகைக்கு சாதநம்தானே யென்னுமிடத்தையுஞ்சொல்லி, விரோதிநிரசநம்பண்ணுவானுமவனே யென்னுமிடத்தையுஞ்சொல்லி, இப்படிநமக்குப்பேற்றுக்குக் கண்ணழிவின்றிக்கே யிருந்தபின்பு அவன்றன்னை நமக்குத்தருமென்றறுதியிடுகிறார்.

(ஏற்றரும்வைகுந்தத்தையருளும்நமக்கு) ஒருவராலும் ஸ்வயத்நத்தாலே ப்ராபிக்கவொண்ணாதிருக்கிற ஸ்ரீவைகுண்டத்தை யவன்றானே தரப்பெறவிருக்கிற நமக்குத்தரும்.

எல்லாவழியாலு மவன்ஸ்வபாவத்தையறிந்து "அத்தைத்தரும்" என்றிருந்தீரோயாகிலும், பெறவிருக்கிறநம்படியைப் பாராதேயென்னில் (ஆயர்குலத்தீற்றிளம்பிள்ளை) நம்படிபார்க்கவறியாதமுக்தன். "ஊடி வஸாயுஜ்யதொஷஃ" (முக்தஸாயுஜ்யதோஷஃ) என்னக்கடவதிறே இவ்விடமிரண்டுவகையாலே சப்தம்வசிக்கக்கடவது. ஈறென்றுகொண்டு - முடிவாய், ஈறானவிளம்பிள்ளை யென்றாய் - அதிமுக்தனென்றபடி. அன்றிக்கே, ஈன்றிளம்பிள்ளையென்றாய் - கற்றிளம்பிள்ளையென்றபடி. இரண்டாலும் - அதிமுக்தனென்றபடி. (ஒன்றாய்ப்புக்கு) கம்சனும் பொய்யே மாதுலனாய் "வில்விழவுக்கு" என்றழைத்துவிட, இவனும்பொய்யேமருமகனா யதுக்கெல்லாம் தானேகடவனாக வபிமாநித்துப்போய்ப் புக்கானாயிற்று. அன்றிக்கே, "வில்விழவு" என்றுகொண்டொரு வ்யாஜத்தையிட்டுப்போய்ப்புக்கென்னுதல். (மாயங்களேயியற்றி) ஆயுதசாலையிலே புக்கு ஆயுதங்களைமுறிப்பது, ஈரங்கொல்லியைக்கொன்று பரிவட்டம் சாத்துவது, குவலயாபீடத்தின் கொம்பைமுறிப்பது, மல்லரைக்கொல்லுவதானை வாஸ்சர்யங்களையே செய்து. இயற்றுதல்-ப்ரவர்த்திந்தல். இவனிப்படிசெய்யப்புக்கவாறே அவற்றைக்கேட்டுப் பொறுக்கமாட்டாமைம்ருத்யுபோலே கிளர்ந்தானாயிற்றுக்கம்சன் (கூற்றியல்கஞ்சனைக்கொன்று) மஞ்சத்திலேநிற்கிறகம்சனைமுகங்கீழ்ப்பட விழவிட்டுக்கொன்றுபொகட்டானாயிற்று. இயல்வு- ஸ்வபாவம். [விஊகஈகிரீடு உவ நீதலெவாதயாஊஸ] [விகளத்கிரீடமவநீதலேபாதயாமாஸ] என்றதுக்குப்பொருள் - "ராஜத்ரோஹிகளைக்கொல்லும்போது ராஜசிஹ்நங்களைவாங்கிக் கொல்லுவானைப்போலேகாண்" என்றம்மாள். தான்கொடுத்த தரமாகையாலேமற்றொருவர்க்குத் தேற்றத்துக்குடலாகவேணுமிறே. ( அதாவது - ஈப்வரன்கொடுத்த சிஹ்நங்களிருக்கில் அவன்றன்னாலும் கொல்லப்போகாதென்கை )

ஆக, தன்னைத்தானறிவதற்குமுன்பு, கம்சன்வரவிட்டவர்களையும் அவன்றன்னையும் தப்புகைக்குப் பணிபோந்தது. பருவம்நிரம்பித் தன்னைத்தானறிந்தபின்பு பாண்டவர்கள் கார்யம்செய்து திரிந்தவித்தனை,

(ஐவர்க்காய்க்கொடுஞ்சேனைதடிந்து) பாண்டவர்களைச் சிறினவர்களுடைய "சாரதி, சாரதி" என்றுவாய்பாறிக்கொண்டுவர, அவர்களையுடையத்தேர்க்காலாலே யுழக்கிப்பொகட்டானாயிற்று.

(ஆற்றல்மிக்கான்) ப்ரதிபக்ஷத்தையும் வேரோடே வாங்கிப்பொகட்டு, தர்மபுத்ரன்றலையிலே முடியையும்வைத்து, இவள்குலைந்த குழலையும் முடிப்பித்த விடத்திலும், "நாதிஸ்வஸ்த்தமநா:" (நாதிஸ்வஸ்த்தமநா:) என்றிறே யெழுந்தருளிற்றும். ஆற்றலென்று - பொறையாய், பொறைமிக்கவனென்னுதல். அன்றிக்கே, வலியாய், வலிமிக்கவனென்னுதல். இவற்றையுடைய வழியச்செய்கைக்கடியானவலியைச்சொன்னபடி. (பெரியபரஞ்சோதிபுக்கவரியே) கம்சனும் துர்யோதநனுமில்லாதவிடத்தில் பரமபதத்திலேபோய்ப்புக்க பின்பும், "நித்யசூரிகள் நடுவேயிருந்தோமிறே" என்றுபாராதே, கம்சன், துர்யோதநன், கர்ணன் என்று, ஆசிலே வைத்தகையுந்தானுமாய் விரோதிகள்மேலே சீறின சீற்றத்தின் வாசனையங்கேயுமநுவர்த்தித்தபடி.........................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (ஏற்றருமித்யாதி) கீழில் ப்ரமேயங்களை யநுவதித்துக்கொண்டிப்பாட்டுக்கு சங்கதி (ப்ராப்யனவனேயித்யாதி) "வைகுந்தத்தையருளும்" என்றத்தைப்பற்ற (அவன்தன்னைநமக்கித்யாதி) "வைகுந்தத்தையருளும்" என்னுகிற "தன்னைத்தரும்" என்றது - அங்கேபோனாலுபாய்யன் தானாகையாலே. உபாயக்ருத்யம் - அநிஷ்டநிவர்த்தகத்வேஷ்ட ப்ராப்தகத்வங்களாகையாலே, கீழிரண்டு பாட்டாலே - அநிஷ்டநிவர்த்தகத்வத்தை யருளிச்செய்து, இதிலே-இஷ்டப்ராபகத்வத்தை யருளிச்செய்கிறார் என்று கீழிரண்டுபாட்டுக்களோடேசங்கதி.

மேலிற்பதத்துக்கவதாரிகை (எல்லாவழியானுமித்யாதி) நம்தோஷத்திலவிஜ்ஞாதாவா யிருக்குமென்கைக்குறுப்பாக, அவன் பால்யத்தைச் சொல்லுகிறதுக்கு ப்ரமாணம் (முக்தசாயுஜ்யேத்யாதி) ஸ்தோத்ரேயாமுநாசார்யா:, "ரகுவரயதபூஸ்த்வம்" (ரகுவரயதபூஸ்த்வம்) இத்யாதி. "ஒன்றாய்ப்புக்கு" என்றதுக்கு க்ரமேணார்த்தத்வயம் (கம்ஸனுமித்யாதி வாக்யத்வயத்தாலே)

"கொன்று" என்றதுக்குப்ரமாணமுகேநார்த்தம் (விகளத்கிரீடமித்யாதி) "கேஶேஷ்வாக்ருஷ்யவிகளத்கிரீடமவநீதலே। ஸகம்ஸம்பாதயாமாஸதஸ்யோபரிபபாதச" (கேஶேஷ்வாக்ருஷ்யவிகளத்கிரீடமவநீதலே। ஸகம்ஸம்பாதயாமாஸதஸ்யோபரிபபாதச) இதிபஞ்சமேம்ரே. கூற்றியல் - ம்ருத்யுவின்ஸ்வபாவத்தையுடைய விதிசப்தார்த்த:. முடியைவாங்கிக்கொல்லுகிறதென்னென்ன (தான்கொடுத்தவித்யாதி) தேற்றத்துக்கு - விஸ்வஸிக்கைக்கு.

சேனைக்குக்கொடுமையேதென்ன (பாண்டவர்களையித்யாதி) உழக்கி - நெரித்து.

"ஆற்றல்" என்று - பொறையைவிவக்ஷித்துபாவம் (ப்ரதிபக்ஷத்தையித்யாதி) வலிசொன்னதுக்குபாவம் (இவற்றையுடையவித்யாதி) "அரி" என்று - சத்ருவாயிருக்குமென்கிறாதல், அரமஸ்யாஸ்தீத்யரீ என்றாய், திருவாழியையுடையவனென்கிறாதல் (கம்சனுமித்யாதி) ஆசு - ஆயுதப்பிடி.

ஒன்ருய்ப்புக்கென்று தொடங்கி, புக்கவரியான - ஆயர் குலத்திற்றிளம்பிள்ளை. நமக்கு - ஏற்றரும் வைகுந்தத்தையருளு மித்யக்வயః.......................*

# பதினொன்றும்பாட்டு.

புக்கவரியுருவாயவுணனுடல்கீண்டுகந்த
சக்கரச்செல்வன்றன்னைக்குருகூர்ச்சடகோபன்சொன்ன
மிக்கவோராயிரத்துளிவைபத்தும்வல்லாரவரைத்
தொக்குப்பல்லாண்டிசைத்துக்கவரிசெய்வரேழையரே.

## ஆருயிரப்படி.

( புக்கவரியுருவாய் ) வாசாமகோசரமாம்படி மஹாஸ்சர்யமான ஸிம்ஹரூபதரனுய்ப்புக்கு அசுரனைப்பிளந்தருளி ப்ரஹ்ருஷ்டனுய், தத்தத்ப்ரதிகூல நிரஸநோசித சர்வதிவ்யாயுத சம்பத்பரிபூர்ணனுய், ஆஸ்ரிதார்த்த ஸ்வரூபரூபகுண விபூதிகனுன பரமபுருஷனுக்கு ப்ரதிபாதகமாய், ப்ரதிபாத்யத்தினுலும் மஹத்தான திருவாய்மொழிகளி லித்திருவாய்மொழிவல்லார்க்கு பகவத்பரிசர்யைக போகராயிருப்பா ரெல்லாரும், நிரந்தரமாக சர்வசேஷவ்ருத்திகளும்பண்ணுவார்களென்கிருர்...........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழியை யப்யசிக்கவல்லவர்களை, பகவத்கைங்கர்யபரரான * மதிமுகமடந்தையர் சாமரவ்யஜநாதிகளைக்கொண்டு சத்கரிப்பர்களென்று பலத்தையருளிச்செய்கிருர்.

அ-அத்யத்புதமான. அரியுருவாய் - ஸிம்ஹவிக்ரஹத்தையுடையனுய். புக்கு-சத்ருவிஷயத்தில்புக்கு. அவுணன் - ஆசுரப்ரக்ருதியான ஹிரண்யனுடைய. உடல்-சரீரத்தை. கீண்டு-பிளந்து. உகந்த-அநாயாஸேந ப்ரஹ்லாதவிரோதிபோனபடியாலே ப்ரீதனுயிருப்பானுய். விரோதிநிரஸநத்திலவகாசமில்லாதபடியாலே, சக்கரச்செல்வன்றன்னை-அழகுக்கு மைஸ்வர்யத்துக்கு முறுப்பானதிருவாழியையுடையவனை. குருகூர்-திருநகரிக்குநிர்வாஹகரான. சடகோபன்-ஆழ்வார். சொன்ன-அருளிச்செய்ததாய். மிக்க - பகவத்குணசேஷ்டிதாதிகளை கார்த்ஸ்ந்யேந ப்ரதிபாதிக்கும் பெருமையையுடைத்தாய். ஓர்-அத்விதியமான. ஆயிரத்துள் - ஆயிரந்திருவாய்மொழிக்குள்ளே. பகவத்விஷயத்தில் ப்ராப்யத்வவிரோதிநிவர்த்தகத்வங்களாடியான வபிநிவேசத்துக்கு ப்ரகாசகமான. இவை-இவை. பத்தும்-பத்தும். வல்லாரவரை-அப்யஸிக்கவல்லரானவர்களை. ஏழையர்-பகவத்கைங்கர்யபரைகளாய் பாகவதகிஞ்சித்கார சபலைகளாயிருக்கிற * மதிமுகமடந்தையர். தொக்கு - திரண்டு. பல்லாண்டிசைத்து-மங்களாசாஸநம்பண்ணி. கவரி-தத்விஷயத்தில்பண்ணும் சாமரவ்யஜநாதிகளை. செய்வர்-பண்ணியுபசரியாநிற்பர்கள்.

புக்கவரியுருவென்று-காதாசித்கமாக ப்ரவேசித்த நரஸிம்ஹரூபத்தையுடையனுயென்றுமாம்.............................................*

இது - கலித்துறை.

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில் - இத்திருவாய்மொழிகற்றார், * மதிமுகமடந்தையர் விரும்பித் திருப்பல்லாண்டுபாடி ப்ரீதராகப்பர்களென்கிறார். (நம்முடைய ப்ரக்ருதி நமக்கு பயஹேதுவென் றபேக்ஷித்தால் நிரசிக்குமென்றுக ருத்து.)

(புக்கவரியுருவாய்) அவ்வரியுருவாய் - புக்கு. அவ்வரியுருவென் னு மித்தனையாயிற்றுச்சொல்லலாவது. நரசிம்ஹமான வேஷத்தைக்கொ ண்டு விரோதி சந்நிதியிலேகிட்டி. அன்றிக்கே, ஹிரண்யனுடலைப்பிளந் துகொடு புறப்பட்டபோதைக்கடுமை. புறம்பிட்டொருவன்வந்து செய் தானாகையன்றிக்கே, உள்ளேநின்று மொருசிம்ஹம் பிளந்துகொடு புறப் பட்டாப்போலே யாயிற்று; அத்தைச்சொல்லுதல். (தாதாத்விகமாகப்ர வேசித்த நரசிம்ஹரூபத்தையுடையவனென்கை.) (அவுணனித்யாதி) ஹிரண்யனுடலைப்பிளந்துபொகட்டு, "சிறுக்கன்விரோதி போகப்பெற் றோம்" என்றுகந்தானாயிற்று.

(சக்கரச்செல்வன்றன்னை) ஹிரண்யனுடைய வுடலுங்கூடத் திரு வுகிருக்கரை வயிறாய்ப்போகையாலே, பின்னை யழகுக்குப் பத்திரங்கட் டினவித்தனையாயிற்று. (அழகுக்கு மைச்வர்யத்துக்கு முறுப்பான திரு வாழியையுடையவனை.

(குருகூரித்யாதி) ஆழ்வாரருளிச்செய்த, மிக்கவோராயிரத்து- பகவத்விஷயத்தையுள்ளளவும் சொன்னவாயிரத்திலும் வைத்துக்கொ ண்டு, இப்பத்தையும்கற்றவர்களை.

(தொக்கித்யாதி) கிண்ணகத்திலிழிவாரைப்போலே தனியிழிய வொண்ணாமை திரண்டுகொண்டு, "பொலிகபொலிக" என்று மங்களா சாஸநம்பண்ணி, சர்வேஸ்வரன்பக்கல் பண்ணக்கடவ வசாதாரண பரிச ர்யைகளையடைய விப்பத்தை யப்யசித்தவர்கள்பக்கலிலே பண்ணுகிற்பர் கள் * மதிமுகமடந்தையர். நெடுநாள் சம்சாரத்திலேபட்ட விழவெல் லாந்தீரும்படி யவர்களாலே கொண்டாடப்பெறுவர்கள். (தொக்கு-திர ண்டு. கவரி-சாமரம். ஏழையர்-பாகவதகிஞ்சித்கார சபலைகளான * மதி முகமடந்தையர்.) ..................................................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (புக்கவித்யாதி) "அவரைத்தொக்குப்பல்லாண்டிசைத்துக்கவரிசெ ய்வரேழையர்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (இத்திருவாய்மொழியித்யாதி)

"உக்ரம்வீரம்" இத்யாதி மந்த்ரலிங்கத்தைப்பற்ற (அவ்வரியுருவென்னுமி த்தனை யித்யாதி) "அரியுருவாய் - புக்கு" என்றதுக்கு சப்தார்த்தம் (நரசிம்ஹ மானவித்யாதி) அர்த்தாந்தரம் (அன்றிக்கே ஹிரண்யனித்யாதி) அதாவது-அவ்வ ரியுருவாய், அவுணன்முன்னே, புக்கு - கிட்டியென்னுதல்; அவுணனுடலிலே, புக்கி ருக்கிற - ப்ரவேஸித்திருக்கிற வரியுருவாயென்னுதலென் றர்த்தத்வயம்.

"உகந்த" என்றதுக்குபாவம் (ஹிரண்யனித்யாதி)

"சக்கரச்செல்வன்" என்றதுக்குபாவம் (ஹிரண்யனுடையவுடலுமித்யாதி) "செல்வம்" என்று - திருவாழியால்வந்தவழகு. பத்திரம்-ஆயுதம்.

"மிக்க" என்றது - பகவத்ப்ரதிபாதகசாமர்த்யத்தால் மிக்கவென்றபடி.

தொக்கு-திரண்டு. கிண்ணகம் - ஆற்றுப்பெருக்கு. சம்சாரத்திலேபட்டவிழவாவது - * வெஞ்சொலாளர்கள் * கடுஞ்சொல்லைக்கேட்டவிழவு. (அஸாதாரணபரிசர்யை) என்றவிடத்திலே - "अदेयमासीत्त्रयमेव भूपतेः शशिप्रभं छत्रमुभे च चामरे" (அதேயமாஸீத்த்ரயமேவபூபதேஶ்ஶஶிப்ரபம்சத்ரமுபேசசாமரே) என்றதநுசந்தேயம் ..................................................*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

---

( பாமருமூவுலகும் )

नाभीपद्मोज्ज्वलत्वाद्विधिशिवभजनीयाङ्घ्रिभावाद्गवां च त्राणा-
द्यैः सर्वभूतान्तरनियमनतः संश्रितेष्वव्ययत्वात् । ब्रह्मा-
द्यापद्विमोक्षादसुरनिरसनात्त्रातरक्षोऽनुजत्वा[illegible]
[illegible] ॥ (எகூ)

(நாபீபத்மோஜ்ஜ்வலத்வாத்) பாமருமூவுலகும்படைத்த பற்பநாபாவோ- ஜகத்ஸ்ருஷ்டிஹேதுவான திருநாபீகமலத்தாலே யுஜ்ஜ்வலனுகையாலும்; (விதிஶிவபஜநீயாங்க்ரிபாவாத்) அரன்நான்முகனேத்தும்செய்யநின்திருப்பாதத்தை-ப்ரஹ்மருத்ரர்களாலே சேவ்யமான திருவடிகளையுடையனுகையாலும்; (கவாஞ்சத்ராணத்யை:) காத்தவெங்கூத்தாவோமலையேந்தி - கோவர்த்தநத்தை யெடுத்து கோகுலத்தை ரக்ஷிக்கையாலும்; (ஸர்வபூதாந்தரநியமநத:) எழில்மூவுலகும் நீயேயித்யாதி - சமஸ்தபூதங்களையு மந்த:ப்ரவிஶ்ய நியமிக்கையாலும்; (ஸம்ஶ்ரிதேஷ்வவ்யபாவாத்) என்னுடைக்கோவலனே - க்ருஷ்ணனுயவதரித் தாஶ்ரிதர்க்கு பவ்யனுயிருக்கையாலும்; இத்தாலேதானே - மேலிற்பாட்டில் என்திருமார்பனே யென்று - பூர்வோக்தபவ்யதைக்கு ஹேதுவாகச் சொல்லப்படுகிற லக்ஷ்மீசம்பந்தமு முக்தமாயிற்றென்று திருவுள்ளம். (ப்ரஹ்மாத்யாபத்விமோக்ஷாத்) நிலங்கீண்டெயில் மூன்றெரித்தவித்யாதி - "विष्णुरात्मा भगवतः" (விஷ்ணுராத்மாபகவத:) இத்யாதிகளிற்படியே ப்ரஹ்மருத்ரேந்த்ரர்களை விசேஷித்தபிமாநித்து அவர்கள்தொடங்கின த்ரிபுரசம்ஹாராதிகளைத் தலைக்கட்டி அந்தந்த வாபத்துக்களி னின்றும் விடுவிக்கையாலும்; (அஸுரநிரஸநாத்) ஆளியைக்காண்பரியாயித்யாதி - விரோதிகளானவசுரர்களை யோரிடத்திலும் தரிக்கவொட்டாதேநிரஸிக்கையாலும்; (த்ராதரக்ஷோநுஜத்வாத்) அரக்கன்குலத்தைத் தடிந்து மீண்டு மவன்றம்பிக்கே விரிநீரிலங்கையருளி - தம:ப்ரக்ருதியான ராவணனை புத்ரமித்ரர்களோடேகூடசம்ஹரித்து, சத்த்வப்ரக்ருதியான விபீஷணுழ்வானுக்கு லங்காராஜ்யத்தைக்கொடுத்து ரக்ஷிக்கையாலும்; இவற்றுலேதானே - மேலிற்பாட்டிலே ஏதத்ஸத்ருஶமாய், "ஐவர்க்காய்க்கொ

டும்சேனைதடிந்து" என்றுசொல்லுகிற அஷ்ப்ரக்ருதிகளான துர்யோதநாதிநிரஸந பூர்வகமான பாண்டவரக்ஷணமு முபலக்ஷிதமென்றுகருத்து. இப்படிகளாலே எம்பெருமான், ஸ்வாஶ்ரிதர் தன்னை யநுபவிக்கப்பெருதே கூப்பிடுகிறவற்றைப் பரிஹரியாநிற்கிருனென்று "பாமருமூவுலகும்" என்கிற தசகத்திலே யாழ்வார் ப்ரதிபாதித் தருளினுரென்கிருர். ......................................................(எசு)

# திருவாய்மொழி நூற்றந்தாதி.

பாமருவுவேதம்பகர்மால்குணங்களுட
னுமழகுவேண்டப்பாடாமவற்றைத் - தூமனத்தால்
நண்ணியவனைக்காணநன்குருகிக்கூப்பிட்ட
வண்ணலைநண்ணுரோமையர். (சுசு)

(பாமருவு) இதில் - எம்பெருமானுடைய குணங்களைச்சொல்லிக் கூப்பிட்ட பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிருர். எங்ஙனேயென்னில்; *கற்பாரில்-நிரவதிகபோக்யங்களான கல்யாணகுணங்களையுடைய வெம்பெருமானுடைய ப்ராப்யத்வம் ப்ராபகத்வம் விரோதிநிவர்த்தகத்வமாகிற விவ்வோ ஸ்வபாவங்களை யநுசந்தித்து, "இப்படி குணதிகனுனவனை யநுபவிக்கவேணும்" என்ருசைப்பட்டுக்கிடையாமையாலே, அம்புபட்டாரைப்போலே கிடந்தழைக்கின்ற *பாமருமூவுலகிலர்த்தத்தை "பாமருவுவேதம்" இத்யாதியாலே யருளிச்செய்கிருரென்கை.

(பாமருவுவேதம்பகர்மால்குணங்களுட னுமழகுவேண்டப்பாடாமவற்றை) சந்தஸ்ஸுக்களோடேகூடின வேதப்ரதிபாத்யமான குணங்களோடேகூடி நன்ருனவழகு மேன்மையாகிறவவற்றை. (தூமனத்தால்நண்ணி) "மநஸாதுவிஶுத்தேந" (மநஸாதுவிஶுத்தேந) என்று மாநஸஸாக்ஷாத்காரத்தாலே கிட்டி யநுபவித்து. (அவனைக்காண) சேழுக்தகுணவிசிஷ்டனுன வவனை ப்ரத்யக்ஷாநுபவம்பண்ணவேணுமென்றிச்சித்து. (நன்குருகிக்கூப்பிட்ட) நன்ருகவுருகி, அந்தப்ரேமாநுகூலமான வுருகுதலோடே கூப்பிட்ட. (அண்ணலைநண்ணுரோமையர்) அதாவது- வேதம்பகர்மால்குணங்களாவது - "ஸர்வாந்காமாந்" (ஸர்வாந்காமாந்) என்கிற கல்யாணகுணங்கள்; அவைதாம் ப்ராப்யங்களாயும் ப்ராபகங்களாயு மிருக்குமிறே; மோக்ஷதசையில் ப்ராப்யமாய், முமுக்ஷுதசையி லநுபவிப்பார்க் கவதாராதிகளில் ப்ராப்யத்வ ப்ராபகத்வமாகிற வுபயாகாரத்தையுமுடைத்தாயிருக்கும்; ஆகையாலே "பாமருமூவுலகும்படைத்த பற்பநாபாவோ" என்றுதொடங்கி "தாமரைக்கையாவோ வுன்னையென்றுகொல்சேர்வதுவே" என்றும், "என்றுகொல்சேர்வதந்தோ" என்றுதொடங்கி "நின்றிருப்பாதத்தையான்" என்று - ப்ராப்யத்வத்தையும்; "காத்தவெங்கூத்தாவோ" என்றுதொடங்கி "உன்னையெங்குத்தலைப்பெய்வனே" என்றும், "எங்குத்தலைப்பெய்வன்நான்" என்றுதொடங்கி "என்னுடைக்கோவலனே" என்றும், "என்னுடைக்கோவலன்" என்று தொடங்கி "என்னுடையாருயிராரெங்ஙனேகொல்வந்தெய்துவரோ" என்றும், "வந்தெய்துமாறறியேன்" என்றுதொடங்கி "என்றிருமார்பனை" என்றும், "என்றிருமார்பன்றன்னை" என்றுதொடங்கி "விசும்பாளியைக்காணேனே" என்றும், இப்படியஞ்சுபாட்டாலே - அவனுடைய ப்ராபகத்வத்தையும்; "ஆளியைக்காண்பரியாய்" என்று தொ

டங்கி "அடர்த்தானையுங்காண்டுங்கொலோ" என்றும், "காண்டுங்கொலோநெஞ்சமே" என்றுதொடங்கி "அமரரரியேற்றினையே" என்றும், இவ்விரண்டுபாட்டாலும் - விரோதிநிரஸநசீலத்தையும்; "ஏற்றரும்வைகுந்தத்தையருளும்நமக்காயர்குலத்தீற்றிளம்பிள்ளை" என்று - மோக்ஷப்ரதத்வத்தையும்; இப்படியான "ஷஹ வொநூவகலூ ஹாணமுஹுணாஃ" (பஹுவோர்ருபகல்யாணகுணா:) என்கிறவிக்குணங்களோடே நன்றானவழகையும். அதாவது - "பற்பநாபாவோ" என்று - *கொப்பூழிலெழுகமலப்பூவழகையும், "பற்பபாதாவோ, தாமரைக்கண்ணாவோ, தாமரைக்கையாவோ," "செய்யநின்றிருப்பாதம்" என்று-திவ்யாவயவசௌந்தர்யத்தையும், "காத்தவெங்கூத்தாவோ" என்று-சமுதாயசோபையையும், "பூத்தண்டுழாய்முடியாய்" என்று - ஒப்பனையழகையும், "என்பொல்லாக்கருமாணிக்கமே" என்றும் "செஞ்சுடர்ச்சோதிகள் பூத்தொருமாணிக்கம் சேர்வதுபோல்" என்றும்-வடிவழகையும், "என்றிருமார்பனையே" என்று - ஸ்ரீய:பதியாகையால்வந்த சேர்த்தியழகையும், "மூவுலகும்படைத்த" என்று - ஜகத்ஸ்ரஷ்ட்ருத்வமும், "மூவுலகுமளந்த" என்று - ஸ்ருஷ்டமான ஜகத்தைத் தன்காலின்கீழேயாம்படி யெல்லைநடந்துமீட்டும், அதுக்குமேலே "தாமரைக்கண்ணாவோ" என்று - புண்டரீகாக்ஷத்வத்தால் வந்த மேன்மையையும், "அரன்நான்முகனேத்தும் செய்யநின்றிருப்பாதம்" என்று - சர்வஸ்மாத்பரத்வத்தையும், "என்மலைமகள்கூறன்றன்னையென்று மென்றுமகளை யகம்பால்கொண்டநான்முகனை நின்ற சசிபதியை" என்று - அவர்களுக்கந்தராத்மதயா நிர்வாஹகனானபடியையும்; இவற்றாலேபலித்த வேண்டப்பாட்டையும். (தூமனத்தால்நண்ணியித்யாதி) கீழுக்தங்களானவவற்றை, "தூமனத்தனாய்" என்கிற பரிசுத்தமாநஸஜ்ஞாநவிஷயமாம்படி யநுபவித்து, ஏவம்விதனானவனை ப்ரத்யக்ஷ சாக்ஷாத்காரத்தாலே யநுபவிக்க விச்சித்து, பக்திபாரவஶ்யத்தாலே த்ஃவீபூதராய்க்கூப்பிட்ட. "பற்பநாபாவோ," "காத்தவெங்கூத்தாவோ," "விசும்பாளியைக்காணேனே" என்றிப்படி விஷாதாதிசயத்தாலேகூப்பிட்ட. (அண்ணலைநண்ணாரேழையர்) இதரவிஷயத்திலே சபலராய், ததலாபத்திலே கூப்பிடுகிற சம்சாரிகள், பகவதலாபத்திலே கூப்பிடுகிற சர்வாத்மசேஷியான வாழ்வானாயாஶ்ரயியார்கள். அதுக்கடி - இதரவிஷயசாபல்யமிறே. "இப்படிசுலபராய் ப்ராப்தசேஷியான வாழ்வானை லபியாதே யிதரவிஷயசபலராவதே!" என்று வெறுக்கிறார்................................................................................ (சுசு)

ஏழாம்பத்தில் - ஆறாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக - திருவாய்மொழி சுசு.—பாட்டு - எஉஅ.

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஏழாம்பத்து.

## ஏழாந்திருவாய்மொழி.

### ஏழையர் - ப்ரவேசங்கள்.

#### ஆறாயிரப்படி.

(ஏழையராவி) இப்படி யெம்பெருமானுடைய வாஶ்ரித வாத்ஸல்யாதி குணாநுஸந்தாநத்தாலே ஸ்வாபேக்ஷிதத்தைச் செய்தருளுமென்று ஸ்வஸ்தரான வாழ்வார், அவன்செய்தருளாமையாலே பின்னையு மவனோடே ஸம்ஶ்லேஷிக்கவாசைப்பட்டு, தத்ஸௌந்தர்யாநுஸந்தாந ப்ரகர்ஷஜநித தத்ஸாக்ஷாத்காரராய், தத்ஸம்ஶ்லேஷமலபமாநராய் ஸாக்ஷாத்க்ருதாதி ரமணீய ததீய திவ்யாவயவங்களாலே பீட்யமாநராய்க்கொண்டந்யாபதேசத்தாலே கூப்பிடுகிறார் ... ................. ... ..........*

#### பன்னீராயிரப்படி.

ஏழாந்திருவாய்மொழியில், இப்படி ஆர்த்தியோடேகூப்பிட்டவர், "அடியுந்திகைமார்புகண்வாய்" என்று ப்ரஸ்துதமான விக்ரஹவைலக்ஷண்யத்தை யநுசந்தித்து, "ஸவ-ஹ்ஂவாஊ-வஊ-ஆ)தெ" (ஸர்வம்வாமுகமுச்யதே) என்கிறபடியே விலக்ஷணமான வுத்தமாங்காவயவங்கள் தனித்தனியேயும் சமுதாயமாகவும் ப்ரத்யக்ஷவத்விஶதமாம்படி ப்ரகாஶிக்க; அபரிச்சிந்நஸ்வபாவனான க்ருஷ்ணனுடைய திருக்கண்களையும், ஆஶ்ரிதவிஷயாபிநிவிஷ்டனான வவனுடையநாஸாதண்டத்தையும், ஶ்யாமளவிக்ரஹத்துக்கு பரபாகமான வதரசோபையையும், காமனுக்கு முத்பாதகனும்படி கமநீயதையையுடையவனுடைய ப்ரூயுகளத்தையும், கோவர்த்தநோத்தரணம்பண்ணின வநாயாஸத்தையுடையவனுடைய மந்தஸ்மிதத்தையும், அநந்தசாயியான வவனுடைய கர்ணிகாலங்க்ருதமான கர்ணபாசத்தையும், மஹாபுஜனான வவனுடைய லலாடசோபையையும், ஏவம்விதாவயவ விஶிஷ்டமான க்ருஷ்ணனுடைய சாமாந்யமுகசோபையையும், ஆஶ்சர்யபூதனான வவனுடைய மயிர்முடியழகையும், சர்வாதிகத்வ சூசகமான வபிஷேகசோபையையு மநுசந்தித்து; அது சம்ஶ்லேஷபர்யந்தமல்லாமையாலே அத்யந்தமார்த்தரான விவருடைய வார்த்தி கண்டு நிர்விண்ணரான சுஹ்ருத்துக்களுக்கும் பரிவர்க்கும் தமக்கோடுகிறதசையை யாவிஷ்கரித்த ப்ரகாரத்தை, நாயகனான க்ருஷ்ணனுடைய விஶ்லேஷதசையிலே அவனுடைய திவ்யாவயவங்க ளுருவெளிப்பாடாய்த் தோன்றக்கிட்டி யநுபவிக்க

ப்பெருமையாலே க்லிஷ்டையான நாயகியானவள், தனக்கு ஹிதஞ்சொல்லிகிய மிக்கிற தோழிமார்க்கும் தாய்மார்க்கும் தன்னுடைய வீடுபாட்டையறிவித்த பாசுரத்தாலே யருளிச்செய்கிறுர்.......................................................... ......*

ஈடு.

கீழிற்றிருவாய்மொழியிலே - " மல்குநீலச்சுடர்தழைப்பச் - செஞ்சுடர்ச்சோதிகள் பூத்தொருமாணிக்கம்சேர்வதுபோ - லந்தரமேற்செம்பட்டோடடியுந்திகைமார்புகண்வாய் – செஞ்சுடர்ச்சோதி விடவுறையென்றிருமார்பனையே " என்று அவன்வடிவழகை யநுசந்தித்தார்; அவ்வடிவழகுதானே நெஞ்சிலே யூற்றிருந்து அத்தையேபாவித்து, அந்த பாவநாப்ரகர்ஷத்தாலே ப்ரத்யக்ஷஸமாநாகாரமாய், பின்னை "ப்ரத்யக்ஷம்" என்றே புத்திபண்ணியணைக்கக் கணிசித்துக் கையைநீட்டி, அப்போதேபெருமையாலே தமக்குப்பிறந்த வாற்றுமையை, எம்பெருமானேடே கலந்துபிரிந்து உருவுவெளிப்பாட்டாலே நோவுபடுகிறுளொருபிராட்டி பாசுரத்தாலே யருளிச்செய்கிறுர். சர்வேப்ஂவரனேடே கலந்து பிரிந்து தளர்ந்து உருவுவெளிப்பாட்டாலே நோவுபடுகிறுளொருபிராட்டி, சேதநர் சேதநரோடுகலக்கும்போது த்ருஷ்டிபந்தம் முன்னுகப்பின்னையிறே யல்லாதபரிமாற்றங்களை யாசைப்படுவது, ஆகையாலே, திருக்கண்களி லழகையநுசந்தித்து, அவ்வழியாலே திருமுகத்திலழகையநுசந்தித்து, அநந்தர மவ்வருகே சிலபரிமாற்றங்களை யாசைப்பட்டு, அப்போதே யதுகைவாராமையாலே நோவுபட; இவள்தசையை யநுசந்தித்த தோழிமாரும் தாய்மாரும் " உனக்கோடுகிறதென் " என்றுகேட்க, சிலர்க்குச்சொல்லிச் சிலர்க்குமறைக்கும்படியாயன்றே யாற்றுமை ப்ரசித்தமானபடி, ஆகையாலே, அவர்களைக்குறித்து "அவனுடையதிருமுகத்திலழகானது தனித்தனியும் திரளவும் வந்தென்னை நலியாநின்றது" என்ன, "நீயிங்ஙனேசொல்லுமதுன்னுடைய ஸ்த்ரீத்வத்துக்குப்போராது, அவனுடைய தலைமைக்கும்போராது, நீதானெங்களைநோக்கக்கடவதாயிருப்பதொரு ஸ்வபாவமுண்டே, அதுக்கும்போராது, ஆனபின்பு, இத்தைத்தவிர்" என்று ஹிதஞ்சொல்லுவாரும் பொடிவாருமாக; " நீங்கள் பொடிகிறவிதுகேட்டு மீளுமளவல்லவதென்னைநலிகிறபடி, இனித்தானேதேனுமாக, உறைத்ததிலே யூன்றிநிற்குமத்தனையிறே, ஆனபின்பு, நீங்களென்னைவிட்டுப்பிடிக்கவமையும்" என்று அவர்களுக்குத் தன்பக்கல் நசையறவேண்டும்படி தனக்குப்பிறந்த வாற்றுமையை யறிவிக்கிறுளாயிருக்கிறது.

சர்வேப்ஂவரனுடைய குணங்களை யாசைப்படுகையும், அதுதான் மாநசாநுபவமாயிருக்கையும், அநுபூதகுணங்களொழிய குணாந்தரங்களிலே யபேக்ஷைபண்ணுகையும், அதுதன்னில் க்ரமப்ராப்திபற்றுமையும், அதுதான் கீழ்நின்றநிலையை மறக்கும்படிபண்ணுகையுமாகிற விவையி

றே - இவர்க்குத்திருவாய்மொழி யெங்குமோடுகிற ஸ்வபாவந்தான். அவ ற்றிற்காட்டில், உருவுவெளிப்பாடாகச்சொல்லுகிற விதிலேறினவம்சமெ ன்னென்னில்; கீழ்ப்பிறந்த வைசத்யமுங்கிடக்கச்செய்தே மேலே யபே க்ஷைபிறக்குமதாயிற்று - உருவுவெளிப்பாடாகிறது. அல்லாதவிடத்தில், கீழ்ப்பிறந்த வைசத்யத்தையழித்திறே மேலிலபேக்ஷைபிறப்பது. * எங் ஙனேயோவிலும் - ப்ராயேணவிதுவேயன்றே வோடுகிறது. அதிலிதுக் குவாசியென்னென்னில்; அதில் - ப்ரீத்யப்ரீதி சமமாயிருக்கும், இங்கு- அப்ரீதிமிக்கிருக்கும். திருக்கண்களிலழகை "இணைக்கூற்றம்" என்னும்ப டியாயிற்றிங்கு பாதகத்வத்திலுறைப்பிருக்கும்படி ........................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழையராவிப்ரவேஶே, சங்க்ரஹசங்கதி (கீழிற்றிருவாய்மொழியிலேயித் யாதி) ஊற்றிருந்து - ஊறிக்கொண்டிருந்து. மாறுதே யநுவர்த்தித்தென்றபடி. உ ருவுவெளிப்பாடு - ப்ரத்யக்ஷ சமாநாகாரமாநஸ சாக்ஷாத்காரம்.

கீழுக்தத்தை விஸ்தரேண வருளிச்செய்கிறர் (சர்வேஶ்வரனோடேயித்யாதி) (ஒருபிராட்டி) என்றதுக்கு (திருக்கண்களிலழகையநுசந்தித்து) என்றத்தோடேய ந்வயம். முன்னே திருக்கண்ணழகைச்சொல்லுவானென்னென்ன (சேதநரித்யாதி) த்ருஷ்டிபந்தம் முன்னுகவென்றது - "அக்ஷ்ணோ: ப்ரீதிர் மந: ஸங்க:" (சக்ஷுஃப்ரீதி ர்மநஸ்ஸங்கஃ) என்றத்தைப்பற்ற. பரிமாற்றம்-காயிகவ்யாபாரம். தோழிமார்க்கொ ழிய தாய்மார்க்கு ஸ்வாவஸ்த்தையைச்சொல்லலாமோவென்ன (சிலர்க்கித்யாதி) திரளவுமென்றது - "கோளிழைத்தாமரையும்" இத்யாதியைப்பற்ற. "நிற்றிமுற்றத் துள்" என்றத்தைப்பற்ற (ஸ்த்ரீத்வத்துக்குப்போராதென்றது) எங்களைநோக்கக்க டவதாயிருப்பதொரு ஸ்வபாவமென்றது - எங்கள்வார்த்தைகேட்டு எங்களுக்குபவ் யையாயிருப்பதொரு ஸ்வபாவமென்றபடி. நாங்களும் நலியவில்லையோ, எங்கள்வ ழியே யொழுகவொண்ணுதோவென்ன (இனித்தானித்யாதி) உறைத்ததிலே-ப்ரப லமானதிலேயென்றபடி. "அன்னைமீர்நசையென் னுங்கட்கே" என்றத்தைப்பற்ற (ஆனபின்பித்யாதி)

ஸ்வாபதேசத்திலிதாவதேதென்ன (சர்வேஶ்வரனுடையவித்யாதி) அதுத ன்னில் - குணுந்தராநுபவத்தில். ஏறினவம்சம் - அதிகாம்சம். மற்றையிடங்களி லி ப்படியன்றேவென்ன (அல்லாதவித்யாதி) அல்லாதவிடத்தில்-உருவுவெளிப்பாடல் லாதவிடத்திலென்றபடி. ப்ராயேணவென்கையாலே-மற்றைத்திருவாய்மொழிகளி லே யோரோபாட்டுக்களிலே யுருவுவெளிப்பாடுண்டென்றபடி. "மிக்கிருக்கும்" என் கைக்குநியாமகமேதென்ன (திருக்கண்களித்யாதி)..................................*



## ஏழாந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

ஏழையராவியுண்ணுமிணைக்கூற்றங்கொலோவறியே
னுழியங்கண்ணபிரான்றிருக்கண்கள்கொலோவறியேன்
சூழவுந்தாமரைநாண்மலர்போல்வந்துதோன்றுங்கண்டீர்
தோழியர்காளன்னைமீரென்செய்கேன்றுயராட்டியேனே.

## ஆருயிரப்படி.

பரமபுருஷ சம்ப்லேஷாபேக்ஷவநிதாஜந ப்ராணஹாரி ம்ருத்யுயுகளமோ, அன்றியே, ஆயதாதிரமணீய விலோசந விஜித சகலலோகனை வெம்பெருமானுடைய திருக்கண்கள்கொலோ, அறிகிறிலேன்; அப்போதலர்ந்த தாமரைப்பூப்போலே சூழவந்து தோன்றியென்னை பாதியாநின்றன; தோழியர்காள், அன்னைமீர், என்றும் துஃகமேபடப்பிறந்தேனாகாதேயென்று, "ஹாராமஹாலக்ஷ்மண ஹாஸுமித்ரே ஹாராமமாதஸ்ஸஹமேஜநந்யா" (ஹாராமஹாலக்ஷ்மண ஹாஸுமித்ரோஹாராமமாதஸ் ஸஹமேஜநந்யா) என்று அசோகவநிகையில் பிராட்டிகூப்பிட்டாப்போலே கூப்பிடுகிருள்................................................ ...............*

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், க்ருஷ்ணனுடைய திருக்கண்கள் தன்னை நலிகிறபடி சொல்லுகிருள்.

ஏழையர் - சபலைகளானபெண் பிறந்தாருடைய. ஆவி - ப்ராணனை. உண்ணும் - க்ரசிக்கக்கடவதாய். இணை - ஒன்றுக்கொன்று சேர்த்தியானவிரட்டை. கூற்றங்கொலோ - ம்ருத்யுவோ. அறியேன் - பாதகத்வத்தாலே, கண்ணென்றறுதியிடமாட்டுகிறிலேன். அங்ஙனன்றியே, ஆழி - ரத்நாகரம்போலே. அம் - அபரிச்சிந்ந விலக்ஷணஸ்வபாவனுய். என்னோடு ப்ரதமத்திலே, கண்ணன் - விதேயனுய். பிரான் - ஸம்ஶ்லேஷித் துபகரித்த க்ருஷ்ணனுடைய. திரு - விலக்ஷணமான. கண்கள் கொலோ - திருக்கண்கள்தானே. அறியேன் - தர்ஶநீயதையாலே, ம்ருத்யுவென்றறுதியிட மாட்டுகிறிலேன். சூழவும் - அகலப்போகவொண்ணுதபடி சுற்றும். தாமரை - தாமரையினுடைய. நாண்மலர்போல் - செவ்விப்பூப்போலே. வந்து - வந்து. தோன்றும் - தோன்றுநின்றது. கண்டீர் - காணுங்கோள். தோழியர்காள் அன்னைமீர் - ஆந்தரக்லேஶமறியாதே அந்தரங்கரான தோழிமாரோடு, ப்ரக்ருதியறிந்து பெற்றுவளர்த்த தாய்மாரோடு வாசியற நியமிக்கிறவர்களே. துயராட்டியேன் - ஸ்வசம்வேத்யமான க்லேசத்தையுடையநான். என்செய்கேன் - க்லேசநிவ்ருத்திக்கென்னபரிஹாரம் பண்ணுவேன்.

தோன்றுகிற திருக்கண்களை மறைக்கமாட்டேன், கிட்டியநுபவிக்கமாட்டேனென்றுகருத்து.......................................................................*

## ஈடு - முதற்பாட்டு.

இம்முகத்துக்கு நேத்ரபூதர் நாமன்றேவென்று முற்பட, திருக்கண்களிலழகுவந்து தம்மைநலிகிறபடியை யருளிச்செய்கிருர்.

(ஏழையராவியித்யாதி) ஒரோவிஷயங்களிலே சாபலத்தைப்பண்ணி, அவைபெருவிடில் தரிக்கமாட்டாத வபலைகளுடைய ப்ராணன்களை முடிக்கிற ம்ருத்யுக்களிரண்டோ. பிரிந்தாற்றுமையை விளைத்தவனுக்குமன்றிக்கே, "இதாகாது" என்று ஹிதஞ்சொல்லி மீட்கப்பார்க்கும் பருவங்கழிந்த தாய்மார்க்குமன்றிக்கே, அபலைகளையே முடிப்பனவிரண்டு கூ.

ற்றமோ. தன்கண்ணழகு தானறிகிறிலனே. தன்னையும் நலிந்ததாகில் வாரானோ, கண்ணாடிப்புறத்திலுங் கண்டறியானோ. (ஆவியுண்ணும்) ராமசரம்போலே, ஒப்பனைகுறியழியாதேயிருக்க வுயிரை முடியாநின்றது. (இணைக்கூற்றங்கொலோ) ம்ருத்யுக்களிருவர் தங்களிலே க்ருதசங்கேதராய் வந்தாப்போலேகாணும் திருக்கண்களிலழகு பாதகமாகிறபடி. (அறியேன்) அறியேனென்பானென்னென்னில்; ம்ருத்யுக்களிருவர் க்ருதசங்கேதராய்வந்தாலு மபலைகளையே நலியவேண்டும் நிர்ப்பந்தமில்லையே; (* பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணமிறே.) அத்தாலேசொல்லுகிறது (ஆழியங்கண்ணபிரான்றிருக்கண்கள் கொலோவறியேன்) அன்றிக்கே, பெண்பிறந்தாரையே நலியக்கடவவானவைதாமேயோ. அல்பமண்ணியாரோபாதகராமன்று தப்பவிரகில்லை. இப்படிமுதலுறவு பண்ணிப்பொருந்தவிட்ட வித்திருக்கண்கள்தாமேயோ. உபகாரசீலனான க்ருஷ்ணனுடைய கடல்போன்ற கண்களென்னுதல், கடல்போலே ப்ரமஹரமான வடிவையுடைய வுபகாரசீலனான க்ருஷ்ணனுடைய திருக்கண்களென்னுதல். (அறியேன்) இதுக்கு முன்புபிரிந்தறியாமையாலே திருக்கண்கள் பாதகமாமென்று வ்யுத்பத்தியில்லை. "உயிர்க்கெல்லாம் தாயாயளிக்கின்ற தண்டாமரைக்கண்" என்றிறே கேட்டிருப்பது - இக்கடாக்ஷமே தாரகமாகவிறே லோகமடையஜீவிப்பது. நாம்கேட்டிருந்தபடியன்றிக்கே யிராநின்றதிப்போது காண்கிறபடி.

ஆனால்தப்பினாலோ வென்னில் (சூழவுமித்யாதி) மூலபலத்தினன்று பார்த்த பார்த்தவிடமெல்லாம் பெருமாளே யானாப்போலே யாயிற்று. ராமசரத்துக்கு ராக்ஷசர்க்குத் தப்பலாமன்றாயிற்று இக்கண்ணழகின்கிழபலைகளா யிருப்பார்க்குத் தப்பலாவது. "புண்டரீகநெடுந் தடங்கள்போலப்பொலிந் தெமக்கெல்லாவிடத்தவும்" என்னக்கடவதிறே. சர்ப்பபயம்போலே யிருக்கை. இருய்க்கநினைத்த விடமெங்கும் தானேயாயிராநின்றது. இப்போது "தாமரைநாண்மலர்போல்" என்பானென்னென்னில்; (சம்ப்லேஷதசையிற்செவ்வியைச் சொல்லுகிறாள்.) "மஹதாஜ்வலதாநித்ய மக்நிநேவாக்நிபர்வதஃ.) [நைவதம்ஸாந்நமஸாந்] [நைவதம்ஸாந்நமஸாந்] இத்யாதி பெருமாளூர்ந்ததும் கடித்ததுந் துடைக்கவறியார் என்ன; "அதுக்கடியென்" என்ன [த்வத்கதேநாந்தராத்மநா] [த்வத்கதேநாந்தராத்மநா] பெருமாளிங்கே குடிபோர வங்கிவையார் தானறிவார் என்றானிறே. பிரிவிலிவ்வளவல்லவிறே யத்தலைக்காற்றாமை. அதறிகிறிலளே யிவள். தன்னோடேவந்துகலந்து விளைநீரடைத்துக்கொண்டு பிரிகிறபோதைச்செவ்வியிறே யிவளறிவது, அதுவேயிறே யிவள் நெஞ்சில் பட்டுக்கிடப்பது பின்பவன்பட்டதறியாளே, ஆகையாலேசொல்லுகிறாள். (வந்துதோன்றும்) ப்ரத்யக்ஷத்திலத்தலையாலே வரவானாப்போலே, உருவுவெளிப்பாட்டிலுமத்தலையாலே வந்துதோன்றவாயிற்றுத் தானறிகிறது. (கண்டீ

ர்) உங்களுக்கிதுதோற்றுகிறதில்லையோ. (தோழியர்காளன்னைமீர்) சிலர்க்குச்சொல்லிச்சிலர்க்கு மறைக்கும்படியன்றிறே யிவள்தசை. "தோழிமார்க்குச்சொன்னவித்தைத்தாய்மார்க்குச் சொல்லுவோமல்லோம்" என்றுமறைக்கு மளவல்ல வாயிற்றிவளுக்குப் பிறந்ததசாவிசேஷம். (என்செய்கேன்) இத்தைத்தப்பப்பார்ப்பதோ, அநுபவிக்கப்பார்ப்பதோ, எத்தைச்செய்கேன். (துயராட்டியேனே) "ஆநந்தம்ப்ரஹ்மணோவித்வாந்நபிபேதிகுதஸ்சந" (ஆநந்தம்ப்ரஹ்மணோவித்வாந்நபிபேதிகுதஸ்சந) என்றிருக்க வேண்டியிருக்க, அங்ஙனன்றிக்கே, "அவஸ்யமநுபோக்தவ்யம்" (அவஸ்யமநுபோக்தவ்யம்) என்கிறபடியே பழையக்லேஸமே சித்திக்கும்படி யாயிற்றே.........................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (ஏழையரித்யாதி) "திருக்கண்கள்கொலோவறியேன்" என்றத்தைப்பற்ற ரசோக்தியாகவவதாரிகை (இம்முகத்துக்கித்யாதி) இந்தமுகத்துக்கும், இப்ப்ரதேசத்துக்கு மித்யர்த்தத்வயம். நேத்ரபூதர்-கண்ணனவர், ப்ரதாநபூத ரித்யர்த்தத்வயம்.

ஸ்த்ரீகளென்னாதே, "ஏழையர்" என்று விசேஷித்ததுக்குபாவம் (ஓரோவிஷயங்களிலேயித்யாதி) "ஏழையர்" என்றத்தால் வ்யாவ்ருத்தி (பிரிந்தித்யாதி) அவனுக்கு பாதையில்லையென்று தானறிந்தபடி யெப்படியென்ன (தன்கண்ணழகித்யாதி) கண்ணழகு - கண்ணழகால்வந்த பாதையென்றபடி. அறிந்தாலோவென்ன (தன்னையுமித்யாதி) தன்கண்ணழகு தனக்குத்தெரிய ப்ரஸக்தியுண்டோவென்ன (கண்ணாடியித்யாதி) "ஆவியுண்ணும்" என்றதுக்குபாவம் (ராமசரமித்யாதி) * உயிர்க்கெல்லாம்தாயாயளிக்கின்ற தண்டாமரைக்கண்ணே, "இணைக்கூற்றம்" என்பானென்னென்ன (ம்ருத்யுக்களித்யாதி) (அறியேனென்பானேன்) கூற்றமென்றுநிஸ்சயித்தாலோ (என்னில்) என்று கூட்டுவது. (அத்தாலே) "அறியேன்" என்று (சொல்லுகிறது) என்றபடி.

"கண்ணபிரான்திருக்கண்கள்" என்றதுக்குபாவம் (அன்றிக்கேபெண்பிறந்தாரையேயித்யாதி) நலிகிறதசையிலே "பிரான்" என்பானென்னென்ன (அல்பமண்ணியாரேயித்யாதி) அதாவது - ப்ரதிகூலன் பாதகனானு லுபாயத்தாலே தப்பலாம், அநுகூலன் பாதகனானால் தப்பப்போகாதென்றபடி. இத்தால் - உபகாரகனைப்போலேயிருந்து பாதகனாகிறானென்றபடி. ஸம்ஸ்லேஷாநந்தரம் விஸ்லேஷிக்கையாலே (அல்பமண்ணியாரென்கிறது) "திருக்கண்கள்" என்று நிஸ்சயியாதே, "அறியேன்" என்பானென்னென்ன (இதுக்குமுன்பித்யாதி) பிரிந்தறியாவிட்டால் கேட்டறியவில்லையோவென்ன (உயிர்க்கெல்லாமித்யாதி) சர்வப்ராணிகளையும் தாயாய்க்கொண்டளிக்கின்ற, குளிர்ந்ததாமரைபோன்ற கண்களையுடையவனேயென்று சப்தார்த்தம். திருமொழி ஏழாம்பத்து முதற்றிருமொழி ஒன்பதாம்பாட்டு, "தாயாய்" இத்யாதி. இதுக்கர்த்தம் (இக்கடாக்ஷமேயித்யாதி)

"சூழவும்" என்றதுக்கர்த்தம் (மூலபலத்தினித்யாதி) "தாமரைநாண்மலர்" என்றதுக்கு பாவம் (ராமசரத்துக்கித்யாதி) திருக்கண்களெங்கும் பரந்திருக்குமோவென்ன (புண்டரீகமித்யாதி) திருவிருத்தம் முப்பத்தொன்பதாம்பாட்டு,

"நீலத்தடவரைமேல் புண்டரீகம்" இத்யாதி. இதுக்கர்த்தம் - நீலரத்நமயமான பெரியமலையின்மேலே, தாமரையையுடைத்தான நெடியதடாகங்கள்போலேயழகு மிஞ்சி, நமக்கு சர்வப்ரதேசத்திலும் ப்ரகாசியாநின்றனவென்றபடி. பொங்குமுந்நீரொன்றுதொடக்கி, எம்பிரான்கண்ணின்கோலங்கள் - எமக்கெல்லாவிடத்தவுமித்யந்வய:. பார்த்தபார்த்தவிடமெல்லாம் திருக்கண்கள் பாதகமென்னுமதுக்கு த்ருஷ்டாந்தாந்தரம் (சர்ப்பபயமித்யாதி) "சூழவும்" என்றதுக்கு சப்தார்த்தம் (இருக்கவித்யாதி) விஶ்லேஷவேளையிலே "நாண்மலர்" என்னக்கூடாதென்று சங்கிக்கிறார் (இப்போதுதாமரையித்யாதி) என், "தாமரைநாண்மலர்போல்" என்னவொண்ணாதோவென்ன; விஶ்லேஷதசையிலவனுருவியிருக்கையாலே யப்படி சொல்லவொண்ணாதென்று விவக்ஷித்து, அதுக்கு ப்ரமாணங்கள் (மஹதேத்யாதி, நைவதம்ஶாநித்யாதி) இதுக்கர்த்தம் (பெருமாளித்யாதி) ப்ரக்ருதேகிமாயாதமித்யத்ராஹ (பிரிவிலித்யாதி) (ஆற்றாமை) என்றவநந்தரம், இப்படியிருக்க (தாமரைநாண்மலரொன்பானென்னென்னில்) என்று கீழோடே யந்வயிப்பது. இதுக்கு பரிஹாரம் (அதறிகிறிலளேயிவளென்று) "ஸதவாதஶநாதார்யே ராகவ:பரிதப்யதே । மஹதாஜ்வலதா" (ஸதவாதர்ஶநாதார்யே ராகவ:பரிதப்யதே। மஹதாஜ்வலதா) இத்யாதி, "நைவதம்ஶாந்மஶகாந் கீடாந்ஸரீஸ்ருபாந் । ராகவோபநயேத்காத்ராத் த்வத்கதேநாந்தராத்மநா" (நைவதம்ஶாந்மஶகாந்கீடாந்ஸரீஸ்ருபாந் । ராகவோபநயேத்காத்ராத் த்வத்கதேநாந்தராத்மநா) இதி சுந்தரகாண்டே ஹநுமாந். பின்னையெவ்வளவறிவளென்ன (தன்னுடையித்யாதி) விளைநீரடைத்துக்கொண்டு - விளையும்படியொருகாலே நீரைத்தேக்கிக்கொண்டு. பூர்ணமாக வநுபவித்தென்றபடி. "அதறிகிறிலள்" என்றத்தை விவரிக்கிறார். (பின்பவனித்யாதி) தோன்றுமென்னாதே, "வந்துதோன்றும்" என்றதுக்குபாவம் (ப்ரத்யக்ஷத்திலித்யாதி)

இருவரையும் சம்போதிக்கிறதுக்கு பாவம் (சிலர்க்கித்யாதி) கீழ்வாக்யவிவரணம் (தோழிமார்க்கித்யாதி) "என்செய்கேன்" என்றது - கோடித்வயாவலம்பியாகையாலே யருளிச்செய்கிறார் (இத்தையித்யாதி) "சூழவும்" என்கையாலே-தப்பப்போகாதென்றபடி. பழைய க்லேஶமேயென்றது-விஶ்லேஷக்லேஶமேயென்றபடி.

க்ரமேணாந்வய:...........................................................*



# இரண்டாம்பாட்டு.

ஆட்டியுந்தூற்றியுநின்றன்னைமீரென்னைநீர்நலிந்தென்
மாட்டுயர்கற்பகத்தின்வல்லியோகொழுந்தோவறியே
னீட்டியவெண்ணெயுண்டான்றிருமூக்கெனதாவியுள்ளே
மாட்டியவல்விளக்கின்சுடராய்நிற்கும்வாலியதே.

## ஆறாயிரப்படி.

(ஆட்டியும்) ஸௌரப்யோபாதாநமாய்க்கொண்டு மூளைத்தெழுந்த கற்பகத்தினுடைய கோமளமானவல்லியோ, அன்றிக்கே, அதினுடை

யகொழுந்தோ, அதுவுமன்று, ஈட்டியவெண்ணெயுண்டான் றிருமூக்கு ; அந்த வெண்ணெயுடைய திவ்யவாஸநாவாஸிதமான வத்திருமூக்கழகு, என்னுடையவாத்மாவினுள்ளே யாரோபிதமாய், மஹத்தாயிருப்பதொரு விளக்கினுடைய ஜ்வாலைபோலே நின்று தஹியா நின்றது ; அவ்வளவன்று, அதிலும் பாதகமாயிராநின்றது ; என்னை யலைத்துக்கொண் டெங்கும் கோஷித்துநின்றென்னை பாதித்தால், அன்னைமீருங்களுக்கென்ன ப்ரயோஜநமுண்டென்கிறாள்..........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்ரிதருடைய த்ரவ்யத்தி லபிநிவேசத்தாலே நவநீதசோரனை க்ருஷ்ணனுடைய நாஸாதண்டமானது என்னெஞ்சுக்குள்ளே ப்ரகாசியாநின்றதென்கிறாள்.

அன்னைமீர் - ப்ரியபரைகளான தாய்மாரா யிருக்கிற. நீர் - நீங்கள். ஆட்டியும் - ஹிதஞ்சொல்லி இருந்தவிடத்திலிராதபடி பண்ணியும். தூற்றியும் - புறம்பே பழிதூற்றியும். நின்று - ஒருபடிப்பட நின்று. என்னை - என்னை. நலிந்து - நலிகிறத்தால். என் - என்னப்ரயோஜநமுண்டு. உங்கள் நலிவும் பலியாமைக்கடி, மாட்டு-பரிசரத்திலே. உயர் - ஓங்கியிருப்பதொரு. கற்பகத்தின் - கற்பகத்தினுடைய. வல்லியோ - கொடியோ. கொழுந்தோ - கொழுந்தோ. அறியேன் - அறிகிறிலேன். ஈட்டிய - கடைந்து திரட்டிவைத்த. வெண்ணெய் - வெண்ணெயை. உண்டான்-களவிலேயமுதுசெய்தவனுடைய. திருமூக்கு - திருமூக்கானது. எனது - என். ஆவியுள்ளே - நெஞ்சுக்குள்ளே. மாட்டிய - தூண்டப்பட்டு. வாலியது-பெருத்து. வல்-ஸ்த்திரமான. விளக்கின்சுடராய்நிற்கும் - தீபஜ்வாலைபோலே ப்ரகாசியா நின்றது.

ருஜுவாகையாலே - கொடியென்னவுமாய், அதசைந்தோங்கின தலையை யுடைத்தாகையாலே - கொழுந்தென்னவுமாயிருக்கிறது. வாலிமை - பெருமை. மாட்டிய - தூண்டின. வன்மை - ஸ்த்தைர்யம்..........................................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

“இரண்டுக்கும் நடுவே நாமிருக்க விவை முற்படுகையாவதென், அத்தனையோ நம்மூக்குவலி” என்று திருமூக்கிலழகு நலிகிறபடியைச் சொல்லுகிறது.

(ஆட்டியும் தூற்றியும்) ஆட்டுகையாவது - தாந்தாம் பழிசொல்லியலைக்கை. தூற்றுகையாவது - பிறருமறியப்பழிசொல்லுகை. “அச்சமுறுத்திமீட்கலாமோ” என்றொருகாலலைக்கை ப்ராப்தமிறே; அங்ஙனன்றிக்கே (நின்று) முன்புசெய்ததுக் கொருப்ரயோஜநம் காணுதிருக்கச் செய்தேயும் விடாதே நின்று. (அன்னைமீரென்னைநீர்நலிந்தென்) ஹிதத்திலே நடக்கும் பித்ராதிகளைப்போலே, என் ப்ரியத்திலே நடக்கும் நீங்களென்னை நலிகிறதென். என்னுகப்பே பேருக நினைத்திருக்கக்கடவ நீங்கள் நலிகிறதென். (நலிந்தென்) அந்தவுருவுவெளிப்பாட்டைப் பரிஹரிக்கலாமென்றோ, என்னை மீட்கலாமென்றோ. ஒருப்ரயோஜநமில்லாததிலே

யும் ப்ரவர்த்திக்கக்கடவதோ. அவனுடைய மூக்குவலி யிருக்கிறபடியை யுமறிந்து நீங்களென்செய்யப்படுகிறிகோள்.

நாங்கள் சொல்லுகிற ஹிதவசநத்துக்கொருப்ரயோஜநமில்லையாகில், என்செய்தால் ப்ரயோஜநமுண்டென்ன (மாட்டுயரித்யாதி) வல்லிகோளாகி லிஸ்ஸம்ஶயத்தை யறுத்துத் தாருங்கோள். மாடு-அருகு. கண்ணருகென்றபடி. ஒருகடலருகே அக்கடலூற்றே தாரகமாக வளருகிறதொருகொடிபோலே யாயிற்று, திருக்கண்களருகே திருமூக்கிருக்கிறபடி. (உயர்) "உஙஸ" (உந்நஸம்) என்கிறபடியே. (கற்பகத்தின் வல்லியோ கொழுந்தோ) ஒழுகுநீட்சியாலே - கொடியென்னவுமாய், ஶ்ரத்தை மாறுமையாலே - கொழுந்தென்னவுமாயிராநின்றது. அறியேனென்கிறது - "இன்னது" என்று நிஶ்சயிக்கவரிதாகையாலே, சர்வதா சாம்யத்தாலே. (ஈட்டியவித்யாதி) எங்களுக்கறியப்போமோ, இதிலே யுட்புகநின்றநுபவிக்கிற நீ பின்னைச் சொல்லாயென்ன (ஈட்டியவித்யாதி) அநுகூலஸ்பர்ஶமுள்ள த்ரவ்யத்தாலல்லது தரிக்கமாட்டாதே வெண்ணெய் களவுகாணப்புக்குக்கொண்டியிலேபிடியுண்டு, பின்பத்தை யில்லை செய்கைக்காக முகத்திலே தடவிக்கொள்ளுமே; அவ்வெண்ணெயிலே முடைநாற்றமு முருவு வெளிப்பாட்டிலே தோற்றுகிறதாயிற்றிவளுக்கு. அப்போதை முடைநாற்ற முபலப்தமாம்படியாயிற் றுருவுவெளிப்பாட்டில் மெய்.

நீ சக்ஷுர்விஷயமாகச் சொல்லுகிற விதெங்களுக்குத் தெரிகிறதில்லையீயென்ன (எனதாவியுள்ளே) என் ஹ்ருதயத்துக்குள்ளே., (மாட்டிய) சுடர்வெட்டியவென்னுதல், ஏற்றியவென்னுதல். (வல்விளக்கின் சுடராய்) (பெரியவிளக்கினொளியையுடைத்தாய்.) விரஹத்தா லவியாதவிளக்காயிற்று. "'ஏற்றியபெருவிளக்கு' என்றொருதமிழனிட்டுவைத்தான்" என்றருளிச்செய்வர். (நிற்கும்வாலியதே) வலிதாய்நின்றுநலியாநிற்கும். தீபமாகிறது தான் க்ஷணிகமுமாய் ப்ராதேசிகமுமாயிறே யிருப்பது; இதங்ஙனன்றிக்கே, எப்போதுமா யெங்குமுண்டாயிராநின்றது. பாதகத்வத்திலுறைப்பை யநுசந்தித்துச் சொல்லுகிற வார்த்தையிறேயிது. (மாட்டியவாலியதான வல்விளக்கின்சுடராய்நிற்கும். வாலிமை - பெருமை. வன்மை - ஸ்த்தைர்யம்.) ........................ ........................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. (ஆட்டியுமித்யாதி) "திருமூக்கு" என்றத்தைப்பற்ற ரசோக்தியாக வவதாரிகை (இரண்டுக்குமித்யாதி) மூக்குவலியென்றது - மூச்சென்று ரசோக்தி; மூக்கென்று பேரையுடைய நம்முடைய வலியென்று ஸ்வபாவார்த்தம்.

"நின்று" என்றதுக்கு பாவம் (அச்சமுறுத்தியித்யாதி) உக்தார்த்த விவரணம் (முன்புசெய்ததுக்கித்யாதி) இத்தனைநாளும் தோழிமாரை ப்ரியபரைகளாகவும், தாய்மாரை ஹிதபரைகளாகவும் சொல்லிக்கொடுபோந்தாள்; இப்போது, பித்

ரபேக்ஷயா, தாய்மாரை ப்ரியபரைகளென்கிருள் (ஹிதத்திலேயித்யாதி) "நீர்" என்றதுக்கு பாவம் ( என்னுகப்பேயித்யாதி ) "என்" என்கிறது - கோடித்வயாவலம்பியாகையாலே, உங்களுக்கு நலிகைக் கொருப்ரயோஜந மில்லையென்று பாவாந்தரம் ( அந்தவுருவித்யாதி ) விவரணம் ( அவனுடையவித்யாதி )

"வல்லியோ கொழுந்தோ வறியேன்" என்று அவர்கள்முன்னே சம்ஶயிக்கிறதுக்குக் கருத்து - இத்தை நிஶ்சயித்துத் தரவேணுமென்ருகையாலே, அத்தை ப்ரஶ்ந ப்ரதிவசநரூபேணவருளிச்செய்கிருர் (நாங்களித்யாதிவாக்யத்வயத்தாலே) தாருங்கோள் - சம்ஶயத்தை யறுத்துத்தருகை ப்ரயோஜநமென்றபடி. ஸ்தோத்ரே யாமுநாசார்யா:, "ஸுஸ்மிதம்கோமளகண்டமுந்நஸம் லலாடபர்யந்தவிளம்பிதாளகம்" (ஸுசிஸ்மிதம்கோமளகண்டமுந்நஸம் லலாடபர்யந்தவிளம்பிதாளகம் ) இதி. "வல்லியோகொழுந்தோ" என்கிற சம்சயத்துக் காபாதகதர்மமேதென்ன ( ஒழுகித்யாதி ) ஒழுகுநீட்சி - சாஸ்த்ரசித்தமான வாகாரஸௌர்க்யம். நிஶ்சயிக்கப்போகாமைக்கு ஹேதுவேதென்ன ( சர்வதா சாம்யத்தாலே யென்று )

"ஈட்டியவெண்ணெயுண்டான்" என்று விசேஷித்ததுக்குபாவம் ( அநுகூலஸ்பர்ஶமித்யாதி ) ஈட்டிய - திரட்டின. கொண்டி - களவு. முடைநாற்றமிப்போது தோற்றுமோவென்ன (அப்போதையித்யாதி) உபலப்தமாம்படி-தோற்றும்படி.

* வன்னமக்கர்த்தம் (விரஹத்தாலித்யாதி) இவ்விடத்திலே - "அல்பாக்நி, ப்ரபலாக்நிமேலிட்டாலவியும் ; இங்கு விரஹாக்நி, ப்ரபலமாயிருக்கச்செய்தேயு மவியாதவிளக்காயிற்று" என்றருளிச்செய்வர். "ஏற்றிய" என்றதுக்கு சம்வாதமாக, தமிழன் நிர்வாஹம் (ஏற்றியபெருவிளக்கென்றித்யாதி) "வல்விளக்கு" என்றும், "வாலியது" என்றும் சொல்லுகிற புநருக்திக்கு பேதமருளிச்செய்கிருர் ( தீபமித்யாதி) எப்போதுமாயென்றது - * வன்மைக்கர்த்தம். எங்குமென்றது - "வாலியது" என்றதுக்கர்த்தம். ஆக, வன்மைக்கர்த்தத்வயம். வாலியது - வலியதென்றபடி. எங்குமுண்டாகக் கூடுமோ வென்ன ( பாதகத்வத்திலித்யாதி )..............*



## மூன்றும்பாட்டு.

வாலியதோர்கனிகொல்வினையாட்டியேன்வல்வினைகொல்
கோலந்திரள்பவளக்கொழுந்துண்டங்கொலோவறியேன்
நீலநெடுமுகில்போற்றிருமேனியம்மான்றெண்டைவா
யேலுந்திசையுளெல்லாம்வந்துதோன்றுமெனின்னுயிர்க்கே

### ஆருயிரப்படி.

(வாலியதோர்) பக்வமாயம்ருதரசமா யிருப்பதொரு கனியோ அன்றியே, பாதகமாகையாலே சஹஜவிரஹவ்யஸநையாயிருந்தவென்னுடைய மஹாபாபமோ, * சௌந்தர்யசாரசமுதாயமான பவளத்தினுடைய கொழுவியதாயிருப்பதொருமுறியோ, அவையெல்லாமல்ல; நீலமஹாவலாஹகரமணீய திவ்யரூபனானவனுடைய சாருதரபிம்ப சத்ருஶமான திருப்பவளம், ததீயதிவ்யரூப சௌந்தர்ய ஸஹக்ருதமாய்க்கொண் டென்னை முடிக்கைக்காக வெல்லாத்திக்குக்களிலும் வந்து தோன்றுநின்றதென்கிருள் ..........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஶ்யாமளமானவடிவுக்கு பரபாகமான வதரசோபையானது, பார்த்தபார்த்தவிடமெங்கும் தோன்றுநின்றதென்கிறுள்.

வாலியது-போதுசெய்யாத நன்மையையுடைத்தாய். ஓர்-மென்மையாலும் நிறத்தாலும் இனிமையாலும் அத்விதீயமாயிருப்பதொரு. கனிகொல் - பழமென்னலாயிருக்கிறதோ. வினையாட்டியேன்-இப்பலத்தை யப்போதேயநுபவிக்கப்பெறுத பாபத்தையுடைய வென்னுடைய. வல்-அநுபவித்துக்கழிக்கவரிய. வினைகொல்-பாபமொருவடிவுகொண்டதாயிருக்கிறதோ. கோலம்-ஸௌந்தர்ய ஸௌலப்ய ஸௌகுமார்ய சாரஸ்யாதிகள். திரள்-திரண்டதொரு. பவளம் - பவளத்தினுடைய. கொழும்-கொழுவிதான. துண்டங்கொலோ-துண்டமென்னலாயிருக்கிறதோ. அறியேன்-இன்னதென்று நிர்த்தரித்தறியலாயிருக்கிறதில்லை. நீலம் - ஶ்யாமளமாய். நெடும்-பெருத்த. முகில்போல்-மேகம்போலே. திருமேனி-அழகையுடையனுன. அம்மான்-ஸ்வாமியுடைய. தொண்டை-தொண்டைப்பழத்தின் நிறத்தையுடைத்தான. வாய்-திருவதரமானது. ஏலும்-என்றுகொண்டுபார்த்த. திசையுளெல்லாம்-திக்கெல்லாம். என்-என். இன்-இனிய. உயிர்க்கு-உயிரைநோக்கி. வந்து-வந்து. தோன்றும்-தோன்றுநின்றது ..........................................................*

## ஈடு - மூன்றாம்பாட்டு.

அது தன்மூக்குவலிகாட்ட நாம் பேசாதேயிருந்தால், "அத்தனையோ விதின்வாய்வலி" என்று நம்மையேசுவர்களென்று, திருப்பவளத்திலழகுவந்து நலிகிறபடியை யருளிச்செய்கிருர்.

(வாலியதோர்கனிகொல்) முன்புபிஞ்சாய், அநந்தரம் பக்வமாய், பின்பு அநுபவயோக்யமன்றிக்கே போவனசில பலங்களுண்டிறே; அங்ஙனன்றிக்கே, என்றுமொக்க வேகரூபமாயிருப்பதொருகனியோ. அத்தலையில் போக்யதை போதுசெய்யாமையாலே யித்தலையிலாற்றாமையும் போதுசெய்யாதே. ( வினையாட்டியேன்வல்வினைகொல் ) போக்யவஸ்து பாதகமாயிற்று போக்தாக்கள்பண்ணின பாபத்தாலேயிறே - அம்ருதமே விஷமாம்படியான பாபத்தைப்பண்ணினேன். பாபத்தைப்பண்ணின வென்னுடைய பாபமானது பக்வமாய்க்கொண்டங்கே குடியேறிற்றே. அங்கேகிடந்திறே யிங்கநுபவிப்பிப்பது - பகவத்விஷயத்தில் நிக்ரஹரூபேணகிடந்திறே யிங்கநுபவிப்பிப்பது. க்ரியையாகையாலே செய்தபோதே நசித்துப்போமே. இவன்பண்ணினபாபத்துக்கு, தானே ஸ்வதந்த்ரமாய் நின்று பலப்ரதமாகைக்கு ப்ராப்தியில்லையே. (வல்வினைகொல்) அநுபவவிநாஶ்யமாகாதபடியான பாபமாயிற்று. (கோலந்திரளித்யாதி) அழகு திரண்டிருந்துள்ள பவளத்தினுடைய ஸ்ரத்தையையுடைத்தான முறியோ, அறிகிறிலேன். முறியோவென்கிறது - புழுதியுடைத்திராமைக்கு; முறித்தவாயானது ஒளியுண்டாய் நெய்த்திருக்குமிறே.

(நீலமித்யாதி) இதுதானென்று மூண்டாயிருக்கச்செய்தே, இதுக்குமுன்பு பாதகமாயிற்றில்லையிறே; கூட்டுப்படைநின்றவாறே நலியாநி

ன்றதாயிற்று. நீலமாய் போக்யதை யளவிறந்திருந்துள்ள முகில்போன்றவடிவையுடைய சர்வேஶ்வரனுடைய. (தொண்டைவாய்) தொண்டை-கோவை. கோவைப்பழம்போலே கனிந்துநெய்த்திறே திருப்பவளந்தானிருப்பது. தன்னிற்றானுண்டானபகை பார்த்திருக்கிறதில்லையாயிற் றிவளைநலிகிறவிடத்தில். இரண்டுக்கும் சேரவன்னியமில்லையிறே. (வன்னியம்-ஸ்வாதந்த்ர்யம். ஒருவன்பக்கலிருவர் பகையானால், இருவரும் ஸ்வதந்த்ரரான லவனை வெல்லவொண்ணாது; ஆகையாலே, இருவரு மொருமிடறாய் நலிவர்கள்; அப்படியேயிங்கும்.) அவை நலிந்துகொடு தோற்றாநின்றதாகில் தப்பப்பார்த்தாலோவென்ன; வாய்வலிதப்பலாயோவிருக்கிற தென்கிறாள் மேல் (ஏழும்திசையுளெல்லாம்) நானு மிவைநலியாதவிடந்தேடித் தப்பவிரகுபாராநின்றேன், அவ்வோவிடங்களிலேவந்து தோன்றாநின்றது. பார்த்தபார்த்தவிடமெல்லாம் தானேயாயிராநின்றது. தோன்றுகிறதுக்குக் கருத்தென்னென்னில் (என்னின்னுயிர்க்கே) என்னுடைய நற்சீவனைமுடிக்கைக்காக..............................................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு (வாலியதோரித்யாதி) "தொண்டைவாய்" என்றத்தைப்பற்ற ரஸோக்தியாகவவதாரிகை (அதுதன்னித்யாதி)

"வாலியதோர்கனிகொல்" ஏகரூபமாயிருப்பதொரு கனியோவென்று சப்தார்த்தம். வாலியது-வலியது. வன்மையாவது-ஸ்தைர்யம். அதாவது-ஏகரூபமென்றபடி. "வாலியதோர்கனி" என்றதுக்கு வ்யாவர்த்யம் (முன்புபிஞ்சாயித்யாதி) சிலபலங்களென்றது-எட்டிப்பழம்முதலானவை. இதுக்கு ஹார்த்தபாவம் (அத்தலையித்யாதி) போதுசெய்கை-முகுளிதமாகை.

"வல்வினை" என்கைக்கு ஹேதுவேதென்ன (போக்யவஸ்துவித்யாதி) விவரணம் (அம்ருதமேயித்யாதி) சப்தார்த்தம் (பாபத்தையித்யாதி) பக்வமாய்-பலோந்முகமாயென்றபடி. அங்கேகுடியேறிற்றோ - அவனிடத்திலே யதரமாகத்திரண்டதோவென்றபடி. தன்னாற்றாமையாலே சொன்னவளவேயன்று, வாஸ்தவமானவர்த்தமு மதுவேயென்கிறார் (அங்கேகிடந்தித்யாதி) விவரணம் (பகவத்விஷயத்திலித்யாதி) நிக்ரஹரூபேணகிடந்தநுபவிப்பிக்கவேணுமோ, தானே ஸ்வதந்த்ரமாக வநுபவிப்பித்தாலோவென்ன (க்ரியையாகையாலேயித்யாதி) அசேதநமாகையாலும் மாட்டாதென்று பரிஹாராந்தரம் (இவன்பண்ணினவித்யாதி) * வன்மைக்கர்த்தம் (அநுபவேத்யாதி)

துண்டம்-முறி. ஶ்ரத்தை-ஸ்நிக்ததை. துண்டம் புழுதிபுடைத்திராதோவென்ன (முறித்தவாயித்யாதி) நெய்த்திருக்கை - ஸ்நிக்தமாய்ப்பளபளத்திருக்கை.

இதுதானென்றது-திருப்பவளத்திலழகை. கூட்டுப்படையாவது - திருமேனியிலழகு. திருமேனியில்கறுப்பும் பரபாகமாய் ஸ்பர்த்தியாதே, கூடிநலியக்கூடுமோவென்ன (தன்னிற்றானித்யாதி) நலிவிலிரண்டும் ப்ரதாநமோவென்ன (இரண்டுக்குமித்யாதி) ஒன்றேப்ரதாநமென்றபடி. அதாவது-திருமுகத்திலழகைச்சொல்லுகிற ப்ரகரணமாகையாலே - திருவதரமேப்ரதாநமாய், திருமேனியழகு கூட்டுப்படையென்றபடி. சேரவன்னியமில்லை-சமசாத்ரவமில்லையென்றபடி.

மேலுக்கவதாரிகை (அவைஈலிந்தித்யாதி) "எல்லாம்" என்றதுக்குபாவம் (நானுமித்யாதிவாக்யத்வயம்) விவரணம் (பார்த்தபார்த்தவித்யாதி) எலும்திசையு ளெல்லாம்-தப்பயோக்யமானவிடங்களெல்லாம். எலும்-யோக்யமான. திசை-இடம். திக்காதல். முடிக்கைக்காகவென்றது-தாத்பர்யார்த்தம். உயிர்க்காகவந்ததென்று சப்தார்த்தம் ..........................................................*



# நான்காம்பாட்டு.

இன்னுயிர்க்கேழையர்மேல்வளையுமிணைநீலவிற்கொல்
மன்னியசீர்மதனன்கருப்புச்சிலைகொல்மதனன்
றன்னுயிர்த்தாதைக்கண்ணபெருமான்புருவமவையே
யென்னுயிர்மேலனவாயடுகின்றனவென்றுநின்றே.

## ஆறாயிரப்படி.

(இன்னுயிர்க்கு) பரமபுருஷ ஸந்தர்ஶநத்திலே லாலஸமான காமிநீஜநத்தினுடைய ப்ராணனையே லக்ஷ்யமாக வுடையவையாய், நம்ரமாய் நீலமாயிருப்பன விரண்டுவிற்களோ, அன்றிக்கே, மதநனுடைய ஸௌந்தர்யநிகேதநமான விக்ஷுகோதண்டமோ, இவையெல்லாமல்ல; ஸௌந்தர்யஸாரனன மதநனுக்கு ஜந்மபூமியான புண்டரீகவிலோசநனுடைய புருவங்களே, இவை யென்னுடைய ப்ராணன்களை யெப்போதும் பாதிக்கிறன வென்கிறாள்.....................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், காமோத்பாதகனாய் *ஸாக்ஷாந் மந்மதமந்மதனன க்ருஷ்ணனுடைய திருப்புருவங்களானவை யென்னாத்மாவை நலியாநின்றனவென்கிறாள்.

இன் - நல்ல. உயிர்க்கு - ப்ராணனை யபஹரிக்கைக்காக. ஏழையர்மேல்-சபலைகளான பெண்பிறந்தார்மேலே. வளையும் - தானே வளைந்து நலிவதான. நீலம்-நீலநிறத்தையுடைய. இணை - இரண்டு. விற்கொல் - வில்லென்னலாயிருக்கிறதோ. அங்ஙனன்றியே, மன்னியசீர் - ஸ்த்திரஸௌந்தர்யாதிகுண யுக்தனான. மதனன்-காமனுடைய. கருப்புச்சிலைகொல் - காமுகரை நலியும் கருப்புவில்லென்னலா யிருக்கிறதோ. மதனன்றன்-அந்தக்காமன்றனக்கு. உயிர்-சத்தாப்ரதனாய்க்கொண்டு. தாதை-உத்பாதகனாய். கண்ணன் - க்ருஷ்ணனான. பெருமான் - சர்வாதிகனுடைய. புருவமவையே - *தன்கைச்சார்ங்கமதுவேபோலும் திருப்புருவங்கள்தாம். என்-என். உயிர்மேலனவாய் - ஆத்மாவின்மேலே அபிமுகங்களாய்க்கொண்டு. என்றும் - என்றும். நின்றே - ஒருபடிப்பட நின்று. அடுகின்றன - நலியாநின்றன.

அவையேயென்றது - முன்பு த்ருஷ்டாந்ததயா சங்கித்த வ்யக்திகளிற்காட்டில் பாதகத்வம் கனத்திருக்கையாலே...........................................*

ஈடு - நான்காம்பாட்டு.

"என்றான், இங்ஙனே யதரோத்தரமாயிற்றே போய்" என்று திருப்புருவத்தி லழகு வளைந்து கொடுவந்து நலிகிறபடியை யருளிச்செய்கிறார்.

(இன்னுயிர்க்கு) என்னுடைய நற்சீவனைக் கொள்ளுகைக்காக. (ஏழையர்மேல் வளையும்) வளைப்பாருமின்றிக்கே வளைக்கைக்கு விஷயமுமின்றிக்கே - அகர்மகமாகவு மகர்த்ருகமாகவும் வளையாநின்றது. விஷயமில்லாமையாலே கர்மமில்லை, வளைப்பாரில்லாமையாலே கர்த்தாவில்லை. ஏழையர்மேலே வளைகிற நீலமான விரண்டுவில்லோ. "ஶக்ரசாபநிபேசாபே க்ருத்வாஸத்ருநாஸநே" (ஶக்ரசாபநிபேசாபே க்ருத்வாஸத்ருநாஸநே) என்னும்படியே. இந்த்ரதநுஸ்ஸுக்கு "அபலைகளையே நலியவேணும்" என்னும் நிர்ப்பந்தமில்லையிறே. (மன்னியசீரித்யாதி) பெண்பிறந்தாரையே நலியக்கடவதான காமனுடைய வில்லுத்தானேயோ. அதுதன்னிலும் ருத்ரனாலே வடிவிழப்பதற்கு முன்புத்தையவன்கையில் வில்லாகவேணும். (கருப்புச்சிலைகொல்) கண்ணுக்காபாசமாய் பாதகத்வமுறைத்திருக்கிறபடி.

அவனோட்டை சம்பந்தத்தால் வந்த ராஜகுலங்கொண்டு திரிகிறவன்கையில் வில்லுக் கித்தனை யுறைப்புண்டாக மாட்டாது, அவன்றனக்குங்கூட ஜநகனை க்ருஷ்ணனுடைய திருப்புருவங்கள்தாமேயாகவேணும். (மதனனித்யாதி) * தன்கைச்சார்ங்கமதுவேபோல் புருவவட்டமழகியவனுடைய புருவங்கள்தாமே யாகவேணும். ஆண்டாள்வார்த்தை யிருக்கிறபடியிறே. [தருமமறியாக்குறும்பனை] தர்மமறியும்போது அபிஷிக்தக்ஷத்ரியன் வயிற்றிலே பிறந்தவனாகவேண்டாவோ. யாதவர்கள் நேரே முடிசூடுவதில்லையிறே. * ஆந்ருஶம்ஸ்யமிருக்கும்படி முதலிலே புதியதுண்டறியாதவனாயிற்று. ஸ்ரீநந்தகோபர், தம்முடைய ராஜ்யத்திலே மூலையடியேநடந்து திரிவானொருபிள்ளையையாயிற்றுப் பெற்றது. [தன்கை யித்யாதி] கையிலே வில்லைக்கண்டால், "முகத்திலே யிருக்கக்கடவது கையிலேயிருந்ததீ!" என்னலாம்படியா யிருக்கும். முகத்திலேகண்டவாறே, "கையிலேயிருக்கக்கடவிது முகத்திலே யிருந்ததீ!" என்னலாயிருக்கும். [அதுவேபோல்] என்கிறதாயிற்று - ஸர்வதா ஸாம்யத்தாலே. [புருவவட்டமழகிய] "தருமமறியான்" என்றிழக்கவொண்ணாதபடி யாயிற்று வடிவழகிருப்பது. [பொருத்தமிலியை] சிலபதார்த்தங்களுண்டிறே—நிறமழகியதாய் பார்த்தவாறே, உபயோக யோக்யமன்றிக்கே யிருப்பன; அவைபோலே, வடிவழகேயாய், ஆசைப்பட்டார்பக்கல் ரசந்தொங்கிலும் தொங்கானாயிற்று. [கண்டீரோ] அவனுக்குப் பொருத்தமில்லாவிட்டால், நமக்குப் பொருத்தமில்லையாகிலிறே விட்டிருக்கலாவது; அவன்பொருந்தாமை தமக்குத் தொடர்ந்துதிரியுமத்தனையாயிற்று. (புருவமவையே)

கீழ்ச்சொன்னவழகுகள்தா மநுகூலமென்னும்படியாகவாயிற் றிவை பாதகமாகிறபடி. (என்னுயிர்மேலனவாய்) இருப்பதங்கேயா யிருக்கச்செய்தேயும், நோக்கென்மேலேயாயிராநின்றது. * எங்கும்பக்கநோக்கறியாதிறே யிருப்பது. (அடுகின்றன) கொல்லாநின்றன. (என்றுநின்றே) பாதகமாக நிற்கச்செய்தேயு மநித்யமாயிருப்பன சிலபதார்த்தங்களுண்டிறே, இவையங்ஙனன்றிக்கே யென்றுமொக்கநின்று நலியாநின்றன. என்னை நலிகைக்காக நித்யத்வத்தை யெறட்டுக்கொண்டது; "நித்யம்நித்யாக்ருதி யாரம்" (நித்யம்நித்யாக்ருதிதரம்) என்கிறதுதானேயிறே நலிகிறது. *

## ஜீயர் அரும்பதம்.

நான்காம்பாட்டு. (இன்னுயிர்க்கித்யாதி) "புருவமவையே" என்றத்தைப்பற்ற ரசோக்தியாக வவதாரிகை (என்றுனித்யாதி) அதரோத்தரமாயிற்றே - தாழ்ந்ததே மேலாய்விட்டதோ வென்று ரசோக்தி.

"இன்னுயிர்க்கு" என்றது - அநுவாதமன்று. புருவந்தானே வளைந்திருக்கையாலே (வளைப்பாருமின்றிக்கேயென்கிறது) விஷயமும்-லக்ஷ்யமும். "வளைப்பாரும்" இத்யாதியை வ்யுத்க்ரமமாக விவரிக்கிறார் (அகர்மகமித்யாதி) "அகர்மகம், அகர்த்ருகம்" (அகர்மகம், அகர்த்ருகம்) என்கிறதுக்கு ஹேது கதநபூர்வகமாகவிவரணம் (விஷயமித்யாதி) "ஏழையர்" என்கையாலே-விஷயமில்லையென்றபடி. சப்தார்த்தம் (ஏழையரித்யாதி) "விற்கோல்" என்றது-இந்த்ரதநுஸ்ஸுக்களோ வென்றபடி. அப்படி யிந்த்ரதநுஸ்ஸு போக்யமோவென்ன (ஶக்ரசாபேத்யாதி) கிஷ்கிந்தாகாண்டே பம்பாதீரே ஹநுமாந். சம்ஶயிக்கிறதென், அதுதானேயென்னவொண்ணாதோவென்ன (இந்த்ரதநுஸ்ஸுக்கித்யாதி)

"மதனன் கருப்புச்சிலைகொல்" என்றதுக்கு பாவம் (பெண்பிறந்தாரையே யித்யாதி) "மன்னியசீர்" என்றதுக்குபாவம் (அதுதன்னிலுமித்யாதி) வடிவோடே, மன்னிய - பொருந்தின, சீர் - எழிலையுடைய, காமனென்று சப்தார்த்தம். யுத்தபரிகரமல்லாமையாலே ஆபாசமான கருப்புச்சிலை பாதகமாமோவென்ன (கண்ணுக்கித்யாதி)

கீழெல்லாம் சம்ஶயித்து, "புருவமவையே" என்று நிஶ்சயிக்கிறதுக்கு பாவமருளிச்செய்கிறார் (அவனோட்டையித்யாதிவாக்யத்வயத்தாலே) மன்னியசீர்மதனன் - ஸ்த்திரமான சௌந்தர்யாதிகுணயுக்தனான காமனென்று உரையில் சப்தார்த்தம். மதனன்றன்னுயிர்த்தாதைக் கண்ணபெருமான் - அந்தகாமன்றனக்கு சத்தாப்ரதனுக்கொண் டுத்பாதகனுய் க்ருஷ்ணனான சர்வாதிகனுடைய வென்றுரையில் சப்தார்த்தம். திருப்புருவம், "சிலைகொல்" என்று விகல்பிக்கும்படி விற்போலே யிருக்குமோவென்ன; ப்ரமாணம் (தன்கையித்யாதி) நாய்ச்சியார் திருமொழி. ஆண்டாள்வார்த்தை யிருக்கிறபடியிறே யென்றது - அல்லாதாரைப்போலன்றிக்கே, திருப்புருவத்திலழகையுட்புக் கநுபவித்தவள் வார்த்தையென்றபடி. பாட்டுக்கர்த்தமருளிச்செய்வதாக ப்ரதீகோபாதாநம் (தருமமித்யாதி) "ஆந்ருஶம்ஸ்யம்பரோதர்மः" (ஆந்ருஶம்ஸ்யம்பரோதர்மః) என்றிருக்கையாலே, தர்மமென்று - க்ருபையைச்சொல்லுகிறது. "தருமமறியா" என்றவநந்தரம், "குறும்பனை" என்று விசேஷிக்கிறவளுடையபாவம் (தர்மமறியும்போதித்யாதி) ஸ்ரீவசுதேவர் க்ஷத்ரி

யரன்றேவென்ன (யாதவர்களித்யாதி) "தருமம்" என்றதின்னதென்றும், "அறியா" என்றதுக்கு மர்த்தம் (ஆந்ருஸம்ஸ்யமித்யாதி) "குறும்பனை" என்றதுக் கர்த்தம் (ஸ்ரீநந்தகோபரித்யாதி) குறும்பனை - தீம்பனை. சர்வதா சாம்யத்தினுடைய வுறைப்பை யருளிச்செய்யா நின்றுகொண்டு. அதுக்கு சப்தநிர்வாஹங் காட்டுகிறார் (கையிலேயித்யாதிவாக்யத்ரயத்தாலே) இதுக்கு நியாமக மேதென்ன (அதுவே போலித்யாதி) நீர்மையில்லாவிட்டால் விடுமத்தனையன்றேவென்ன (தருமமறியானித்யாதி) "புருவவட்டமழகிய" என்றத்தோடே, "பொருத்தமிலியை" என்றத்தையுங் கூட்டி பாவம் (சிலபதார்த்தங்களித்யாதி) (பார்த்தவாறே - நிறமழகியதாய்) என்றந்வயிப்பது. சிலபதார்த்தங்களென்றது - எட்டிப்பழந்தொடக்கமானவை. தொங்கான் - இரான். தொங்குகை - இருக்கை. பொருத்தமில்லாவிட்டால் "கண்டீரோ" என்று - அதுகேட்பானென்னென்ன (அவனுக்கித்யாதிவாக்யத்வயம்) "அவையே" என்றவவதாரணார்த்தம் (கீழ்ச்சொன்னவித்யாதி)

அவன்முகத்திலே யிராநிற்க, இவர்க்கு பாதகமாகக் கூடுமோவென்ன (இருப்பதித்யாதி) இங்நோக்குத் தம்மேலேயேவென்ன, ப்ரமாணம் (எங்கும்பக்கநோக்கித்யாதி) "நித்யம்" என்றதுக்கு ப்ரமாணம் (நித்யம்நித்யாக்ருதித்யாதி) என்னாத்மாவின்மேலே யபிமுகங்களாய்க்கொண்டு, என்று மொருபடிப்பட நின்று நலியாநின்றனவென்று சப்தார்த்தம்.............................................*



# ஐந்தாம்பாட்டு.

என்றுநின்றேதிகழுஞ்செய்யவீன்சுடர்வெண்மின்னுக்கொ
லன்றியென்னுவியடுமணிமுத்தங்கொலோவறியேன்
குன்றமெடுத்தபிரான்முறுவலெனதாவியடு
மொன்றுமறிகின்றிலேனன்னைமீரெனக்குய்விடமே.

## ஆறாயிரப்படி.

(என்றுநின்றே) தோன்றிமாயாதே யென்றும் நின்றுவிளங்காநின்று சிவந்தசுடரை யீனுநின்றவெள்ளை மின்னோ, அன்றிக்கே, என்னாத்மாவைநோவுபடுத்தாநின்றுள்ள வழகிய முத்துநிரையோ, அறிகிறிலேன்; * கோவர்த்தநோத்தரணம்பண்ணி யாஸ்ரிதர்பக்க லநுக்ரஹசீலனான க்ருஷ்ணனுடைய முறுவலானது என்னுடைய ப்ராணனை நலியாநின்றது; அன்னைமீர், அவனுடைய திருவழகாலேவந்த நலிவைத்தப்பி யுஜ்ஜீவிக்கலாமிடமொன்று மறிகிறிலே னென்கிறாள்..... .............. ..*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அநாயாஸேந கோவர்த்தநோத்தரணம்பண்ணின க்ருஷ்ணனுடைய தாத்காலிக மந்தஸ்மிதமான தென்னை நலியாநின்றது, ஒதுங்கிப்பிழைக்கலாவதோரிடம் காண்கிறிலேனென்கிறாள்.

என்றும்-என்றும். நின்றே-ஒருபடிப்படநின்று. திகழும்-விளங்கக்கடவதாய். செய்ய-சிவக்க. ஈன்-ஈனுநிற்கிற. சுடர்-சுடராயுடைத்தான. வெண்-வெளுத்த.

மின்னுக்கோல்-மின்னென்னலாமிருக்கிறதோ. அன்றி-அன்றியே. என்-என். ஆவி-ப்ராணனை. அடும்-நலியக்கடவதாய். அணி - அணியாகநிரைத்த. முத்தங்கொலோ-முத்துக்களாயிருக்கிறதோ. அறியேன்-அறுதியிடமாட்டுகிறிலேன். குன்றம் - கோவர்த்தநத்தை. எடுத்த-எடுத்துரக்ஷித்த. பிரான்-மஹோபகாரகனுடைய. முறுவல்-ரக்ஷணப்ரீதியாலே யப்போதுண்டானமுறுவலானது எனது - என். ஆவி - ஆத்மாவை. அடும்-தபியாநின்றது. அன்னைமீர் - இவ்வளவிலும் ஹிதஞ்சொல்லுகிற வன்னைமீர். எனக்கு-எனக்கு. உய்விடம்-பிழைக்கலாமிடம். ஒன்றும்-ஒன்றும். அறிகின்றிலேன்-அறிகிறிலேன்.

திவ்யாவயவசௌந்தர்யங்கள் தனித்தனியே பாதகமாமதொழிய, ஆஶ்வாஸகரமாயிருப்பதொன்று முண்டாயிருக்கிற தில்லையென்றுகருத்து... ... .........*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

"இம்முகத்துக்குவாய்க்கரையிலே நாமிருக்க விவைமூற்படப்போவதே" என்றுதிருமுறுவலி லழகுவந்து நலிகிறபடியை யருளிச்செய்கிறார்.

(என்றுமித்யாதி) என்று மொக்கமாறாதே விளங்காநிற்பதாய், செய்யசுடரையின் நின்றுள்ளவெண்மின்னே. திருப்பவளத்தில் சிவப்பும் திருமுத்துநிரையில் வெளுப்புமாய்க்கலந்து தோற்றுகிறபோது, திருப்பவளத்தில் சிவப்பையதின்ருப்போலே யாயிற்றிருக்கிறது. இத்தை "ஸுவிராம்ஸஃ" (அசிராம்ஸஃ) என்பர்களே. "பிறைநலிய" என்றவாறே பல்விறுகிக்கொண்டு வருகிறதுகாணும். (அன்றி) அன்றிக்கே, என்ப்ராணனை முடிக்கிற திருமுத்துநிரைதானேயோ. (அணிமுத்தங்கொலோ) ஆனையணிசெய்துவந்து தோன்றினப்போலே யாயிற்றிருக்கிறது. (அணிமுத்தம்) அழகியமுத்தமென்னுதல். கீழே "வெண்மின்னுக்கோல்" என்கிறவிடத்தே-திருவதரத்தோடேகூடினஸம்ஸர்க்கத்தாலே நலிந்தபடிசொல்லிற்று; இங்கு - தனியேநலிகிறபடி சொல்லுகிறது.

(குன்றமெடுத்தவித்யாதி) மலையையெடுத்து மழையிலே நோவுபடாதபடி பெண்களைநோக்கின வுபகாரகனுடைய முறுவலானது, எனக்கொருத்திக்கும் பாதகமாகாநின்றது. பசுக்களையன்றோ தான்நோக்கிற்றென்னில்; "கோகோபீஜநஸங்குலம் । அதீவார்த்தம்" (கோகோபீஜநஸங்குலம் । அதீவார்த்தம்) என்னக்கடவதிறே. மழையால் வந்தநலிவை மலையையெடுத்துப்பரிஹரித்து, அவர்களார்த்தியெல்லாம் போம்படி ஸ்மிதம்பண்ணிக்கொண்டாயிற்று நின்றது. ஆனால், இதுவாராத விடந்தேடி யுஜ்ஜீவிக்கப் பார்த்தாலோவென்ன (ஒன்றுமித்யாதி) எனக்குப்போ யுஜ்ஜீவிக்கலாவதோ ரிடமுண்டோவென்று நானும் தேடாநின்றேன், இங்கொதுங்குகைக் கோரிடங்காண்கிறிலே னென்னுதல்; கீழ்ச்சொன்னவழகுகள் பாதகமாகிற வித்தனையல்லது, ஒதுங்கநிழலா யிருப்பதோரிடங்காண்கிறிலேனென்னுதல்.......................................

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (என்றுநின்றேயித்யாதி) "முறுவலெனதாவியடும்" என்ற த்தைப்பற்ற வவதாரிகை (இம்முகத்துக்கித்யாதி) வாய்கரையிலே-உபக்ரமத்திலே யென்று ரஸோக்தி; அதரத்திலென்று வாஸ்தவமானவர்த்தம்..

சப்தார்த்தம் (என்றுமொக்கவித்யாதி) செய்யசுடரை யீனுநின்றுள்ள வெண்மின்னென்று - அபூதோபமை. வெண்மின்செய்ய சுடரையீனக்கூடுமோவென்ன (திருப்பவளத்திலித்யாதி) அசிராம்சுவானதென்றும் நிற்கக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (இத்தையித்யாதிவாக்யத்வயத்தாலே) நலிகைக்காக நித்யத்வத்தை யேறிட்டுக்கொண்டதென்றபடி. பல்லிறுகிக்கொண்டென்றது-சாடு. பல்லைக்கடித்துக்கொண்டென்று ரஸோக்தி; பல்லானது ஸ்த்திரத்வத்தை யேறிட்டுக்கொண்டென்று ஸ்வபாவார்த்தம்.

"அணி" என்று - பங்க்திபரமாகமுதலர்த்தம்; இந்தவர்த்தத்துக்குபாவம் (ஆணையித்யாதி) ஆனையென்றது-பாதகத்வத்தினுறைப்பாலே. அணிசெய்து - நிரைசெய்து. "செய்யவீன்சுடர்வெண்மின்" என்று த்ருஷ்டாந்தத்திலே சொன்னுப்போலே, தார்ஷ்டாந்திகத்திலும் அதராந்தியுக்தமான முக்தமென்னவேண்டாவோவென்ன (கீழேவெண்மின்னித்யாதி)

"குன்றமெடுத்தபிரான் முறுவல்" என்றது - "அணிமுத்தங்கொலோ" என்று கீழ்ச்சொன்னவித்தை யநுவதிக்கிறது. அன்றிக்கே, "முத்தம்" என்றது-மௌக்திகமாதல்; இந்தபக்ஷத்திலும், அநுவாதமென்றதொக்கும். பெண்களைநோக்கி நமையுண்டோவென்று சங்கித்து பரிஹரிக்கிறார் (பசுக்களையித்யாதிவாக்யத்வயத்தாலே) "[grantha script] (ததஸ்தத்கோகுலம்ஸர்வம்கோகோபீஜநஸங்குலம்। அதீவார்த்தம்ஹரிர்த்ருஷ்ட்வாமைத்ரோயாசிந்தயத்ததா) இதி பஞ்சமேம்ஸே. "குன்றமெடுத்தபிரான் முறுவல்" என்று விசேஷித்ததுக்குபாவம் (மழையாலித்யாதி)

"ஒன்றும்" என்றது - ஓரிடமுமென்னுதல், தாரகமான வழகொன்றுமில்லையென்னுதல். அழகுகளுக்குள்ளேயும் விடமான வோரழகு மறிகின்றிலேன் என்றிரண்டாம் யோஜனையில் சப்தார்த்தம்.

என்றுநின்றே யித்யாரப்ய, எனதாவியடும், அன்னைமீர் - எனக்குய்விடம்-ஒன்று மறிகின்றிலே னித்யந்வயः ............................................................*

---

# ஆறும்பாட்டு.

---

உய்விடமேழையர்க்குமசுரர்க்குமரக்கர்கட்கு
மெவ்விடமென்றிலங்கிமகரந்தழைக்குந்தளிர்கொல்
பைவிடப்பாம்பணையான்றிருக்குண்டலக்காதுகளே
கைவிடலொன்றுமின்றியடுகின்றனகாண்மின்களே.

## ஆறாயிரப்படி.

(உய்விடம்) அபலைகளுக்கு மசுரர்களுக்கும் ராக்ஷஸர்க்கு முய்விட் டெவ்விடமென்றிலங்கி திருமகரகுண்டலம் தளிருகிறதளிரோ; தன்னோட்டை ஸ்பர்ஶத்தாலே விகசிதமான பணங்களையும், ப்ரதிகூலருக்கனுகவொண்ணாதபடி நஞ்சையுமுடையனாய், தன்னுடைய திருவழகுக்குத்தம்பகனான திருவனந்தாழ்வானை யணையாகவுடைய வெம்பெருமானுடைய திருக்குண்டலக்காதுகளை நிரந்தரமாக நலியாநின்றன, பாரீகோளென்கிறாள்..........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இந்தவவதாரகந்தமான வநந்தசாயியினுடைய திருமகரக்குழைகள் நலிகிறபடியைச் சொல்லுகிறாள்.

ஏழையர்க்கும் - அநுகூலப்ரதிகூல விபாகமில்லாதபடி யாசைப்பட்டவபலைகளுக்கும். அசுரர்க்கு மரக்கர்கட்கும் - எதிரிடும் அசுரராக்ஷஸர்களுக்கும். உய்விடம்-பிழைக்குமிடம். எவ்விடம்-எவ்விடம். என்று-என்று. இலங்கி - பெரியதேஜஸ்ஸையுடைத்தாய்க்கொண்டு. மகரம்-மகராகாரமாய். தழைக்கும் - தழைத்தனசில. தளிர்கொல்-தளிர்களோவென்னலாய். பை-திருமேனியோட்டை ஸ்பர்ஶத்தாலே விரிகிறபணங்களையுடைத்தாய். விடம்-விரோதிகளுக் கநபிபவநீயமான விஷத்தையுடைத்தாயிருக்கிற. பாம்பணையான்-திருவரவணையையுடையனவான. திரு - தர்ஶநீயமான. குண்டலம்-மகரகுண்டலங்களையுடைத்தான. காதுகளே - காதுகள்தாமே. ஒன்றும்-ஒருப்ரகாரத்தாலும். கைவிடலின்றி-கைவிடாதே. அடுகின்றன - நலியாநின்றன. காண்மின்கள்-காணுங்கோள்.

போக்யமான மகரகுண்டலம் விரோதிகளுக்கு பாதகமாவது அஸஹ்யதையாலே. காண்மின்களென்று-தன்னோபாதியவர்களுக்கும்தோற்றுமென்றிருக்கிறாள்.

## ஈடு - ஆறாம்பாட்டு.

"நாம்செவிப்பட்டிருக்க விவற்றைமுன்னேபோக விட்டிருந்தோம்" என்று திருக்காதிலழகுவந்து நலிகிறபடியைச் சொல்லுகிறது. காதாட்டிக்கொண்டு சொல்லுவரோ.

(உய்விடமித்யாதி) அசுரராக்ஷஸர்களுக்கு மபலைகளுக்கும் தப்பிப்போய்ப் பிழைக்குமிடமெவ்விடமென்று, உஜ்ஜ்வலமாய்க்கொண்டு மகரம்தழைக்கின்றதளிரோ. அசுராதிகள், அழகுகண்டால் பொறுக்கமாட்டாதே முடிவர்கள்; அபலைகள் லபிக்கப்பெறாதே முடிவர்கள். "அபலைகளை நலியுமாபோலே அசுரராக்ஷஸர்களுக்கும் ஸ்நேஹத்தை விளைத்து பாதகமாகாநின்றது" என்றொருதமிழனிட்டுவைத்தானென்றத்தை ஜீயர் கேட்டருளி, "இப்பொருளழகிது, ஆனாலும், அபக்ஷதர்மம் - அசுரராக்ஷஸர்களுக்கும் பாதகமாகாநின்றதென் றிப்போதிதுசொல்லுகை, தேட்டமன்றிறே, ஆனபின்பு அதுவேண்டா" என்றருளிச்செய்தாராம்.

(பைவிடமித்யாதி) தன்னோட்டை ஸ்பர்ஶத்தாலே விகசிதமாகாநின்றுள்ள பணங்களையும், உகவாதார் முடியும்படியான விஷத்தையுமு

டையனான திருவனந்தாழ்வானைப் படுக்கையாகவுடையவனுடைய திருக்குண்டலக்காதுகளே. திருக்காதிலழகுபாதகமாகிறப்போலே யாயிற்று, திருவனந்தாழ்வானோட்டைச் சேர்த்தியும் பாதகமாகிறபடி. பெறுகைக்கநந்த புருஷகாரமுண்டாயிருக்கக்கிடீர் ! நான்நோவுபடுகிறது. காதுகளேயென்று - கீழில் பாதகமானவைநன்றென்னும்படி யாயிற்றிது நலிகிறபடி. அவைதண்ணீர்ப்பந்தல் வைத்ததென்னும்படியாகவாயிற்று; "மாலை-நல்கிற்றையெல்லாம்" என்னுமாபோலே. (கைவிடலொன்றுமின்றி) ஒருகாலும் கைவிடாதே. ஒருகால்விட்டுப்பற்றுமதன்றிக்கே. (அடுகின்றன)முடியாநின்றன. (காண்மின்களே) அவர்களுக்கும் எல்லா மூருவுவெளிப்பாடாய்த்தோற்றுமென்றிருக்கிறாள்.*வாயுந்திரையுகளிலாழ்வாரிறே.

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு (உய்விடமித்யாதி) "காதுகள்" என்றத்தைப்பற்ற ரஸோக்தியாகவவதாரிகை ( நாமித்யாதி ) கேட்டிருக்கவென்று ரஸோக்தி; செவியாயிருக்கவென்று ஸ்வபாவார்த்தம். ரஸோக்த்யந்தரம் (காதாட்டியித்யாதி)

அழகிருவர்க்கும் பாதகமாம் ப்ரகாரமேதென்ன (அசுராதிகளித்யாதிவாக்யத்வயத்தாலே) மகரம்-மகரகுண்டலம். அழகிதென்று - அர்த்தாங்கீகாரம். அபக்ஷதர்மம் - ப்ரகரணவிருத்தம். ப்ரகரணத்துக்குச்சேராதென்றபடி. "அபக்ஷதர்மம்" என்றத்தைவிவரிக்கிறார் (அசுரராக்ஷஸர்களுக்குமித்யாதி) (தேட்டமன்றிறே) என்றவநந்தரம், அபலைகளுக்கு பாதகமென்று சொல்லிவருகிற ப்ரகரணமாகையாலே என்றுகூட்டி, அநந்தரம் (ஆனபின்பித்யாதி) அநுசந்திப்பது. அசுரராக்ஷசர்களுக்கு பாதகமாமாபோலே, ஏழையர்க்கும் பாதகமென்று சித்தாந்தார்த்தம்.

அழகுகள்சொல்லுகிற ப்ரகரணத்திலே, திருவனந்தாழ்வான் சேர்த்தியைச்சொல்லுவானென்னென்ன (திருக்காதித்யாதி) பரிஹாராந்தரம் ( பெறுகைக்கித்யாதி ) அவதாரணார்த்தம் (காதுகளேயென்றித்யாதி) விவரணம் (அவைதண்ணீரித்யாதி) இதுக்குப்ரமாணம் (மாலையித்யாதி)

தாய்மார்க்குத்தெரியுமோவென்ன ( அவர்களுக்குமித்யாதி ) அதெங்ஙனேயென்ன (வாயுமித்யாதி)

(மாலைநல்கிற்றையெல்லாமித்யாதி) திருவிருத்தம் முப்பத்தஞ்சாம்பாட்டு, "பால்வாய்ப்பிறைப்பிள்ளை" இத்யாதி. பால்வாயென்றுதொடங்கி, மாலையானது உலகளந்தவென்றுதொடங்கி, மனமுடையார்க்கு நல்கிற்றையெல்லாம் சொல்வான் புகுந்திதுவோர் பனிவாடைதுழாகின்றதே யித்யந்வயః. இதுக்கர்த்தம் - சந்தையானது அவன்றிருவடிகளில் திருத்துழாயை யாசைப்பட்ட நெஞ்சுடையார்க்குபகரித்த சத்தாமாத்ரத்தையொன்றும் சேஷியாதபடி யபஹரித்துக்கொள்வதாக ப்ரவேசித்து, பனிவாடையானது சத்தைகிடந்தவிடந்தேடித் தடவாநின்றதென்றபடி. மாலைநல்கிற்றையெல்லாமென்றது - அந்வயித்துச்சொன்னபடி. இத்தால்-கீழ் பாதகமானமாலை நன்றென்னும்படியாயிற்று வாடை பாதகமானபடியென்றுகருத்து. அசுரர்க்கு மரக்கர்கட்கும்-ஏழையர்க்கும்-உய்விடம்-எவ்விடமென் றிலங்கியென்றுதொடங்கி, காதுகளே-ஒன்றும்-கைவிடல்-இன்றியடுகின்றன, காண்மின்களேயித்யந்வயః.........................................................................*

# ஏழாம்பாட்டு.

காண்மின்களன்னையர்காளென்றுகாட்டும்வகையறியே
னுண்மன்னுவெண்டிங்கள்கொனயந்தார்கட்குநச்சிலைகொல்
சேண்மன்னுநாற்றடந்தோட்பெருமான்றன்றிருநுதலே
கோண்மன்னியாவியடுங்கொடியேனுயிர்கோளிழைத்தே.

## ஆறுயிரப்படி.

(காண்மின்கள்) (நாள்மன்னு) பூர்வபக்ஷத்தி லஷ்டமீசந்த்ரனே. அன்றிக்கே, ஆசைப்பட்டார்க்கு நச்சவேண்டா திருக்கிறதோ; கொழுந்துவிட்டுச் சுற்றுடைத்தான நாலுதிருத்தோளையுடைய சர்வேஶ்வரனுடைய திருநெற்றியே, இப்படி நோவுபடுகைக்குப்பாபத்தைப் பண்ணின வென் ப்ராணனைமுடிக்கையிலே துணிந்தபிநிவேஶித்து நலியாநின்றது; இத்தைக்காண்மின்களன்னையர்காளென்று காட்டும்வகை யறிகிறிலேனென்கிருள்...... ............... ..............................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், மஹாபுஜனன க்ருஷ்ணனுடைய திருநெற்றியழகு தன்னை நலியாநின்றதென்கிருள்.

என்னை நலிகிறப்ரகாரத்தை, அன்னையர்காள் - அன்னையர்காள். காண்மின்கள் - நீங்கள்காணுங்கோள். என்று - என்று. காட்டும் - காட்டும். வகை - ப்ரகாரம். அறியேன் - அறிகிறிலேன். நாள் - அஷ்டமீபர்யந்தமானநாளோடே. மன்னு-மன்னி. வெண் - அர்த்தாகாரனுகையாலே களங்கமற்று வெளுத்த. திங்கள்கொல்- சந்த்ரனே. நயந்தார்கட்கு - ஆசைப்பட்டவர்களுக்கு. நச்சு - நச்சுவடிவா யிருப்பதொரு. இலைகொல் - இலையோ. சேண் - ஓங்குதலை. மன்னு - உடைத்தாய். நால் - நாலுவகைப்பட்டு. தடம் - பணைத்த. தோள் - தோள்களால். பெருமான்றன் - பெரியனன க்ருஷ்ணனுடைய. திரு-தர்ஶநீயமான. நுதலே-திருநெற்றிதானே. கோள் - மிடுக்கை. மன்னி-அவலம்பித்துக்கொண்டு. கொடியேன் - அழகேபாதகமாம்படியான கொடுமையை யுடையவென். உயிர் - ப்ராணனை. கோள் - கொள்ளுகையை. இழைத்து - நிரூபித்து. ஆவி - என்னுத்மாவை. அடும் - நலியாநின்றது.

கோள் - மிடுக்கு. ஒளியாகவுமாம்.........................................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

“இவைபவள்முன்னே நிற்கவற்ரே, இவற்றுக்கெல்லாம் நாம் நெற்றிக்கையன்ருே” என்று திருநுதலிலழகுவந்து நலிகிறபடியை யருளிச்செய்கிருர்.

(காண்மின்களித்யாதி) இதுநலியாநின்றதாகச் சொல்லாநின்ருய், எங்களுக்கிது தெரிந்திருக்கிறதில்லை, எங்களுக்கும் தெரியும்படி சொல்லிக்காணுயென்ன (காண்மின்களித்யாதி) நீங்களுமித்தைக் காணுங்கோளென்று, உங்களுக்குக்காட்டும் ப்ரகாரமறிகிறிலேன். என்கைக்குப்பிடிதருதல், உங்களுக்குருவுவெளிப்பாடுண்டாதல் செய்யிலிறே யென்னுல்

காட்டலாவது. (அன்னையர்காள்) ஆண்களுக்குக்காட்டிலிறே பருவம்நிரம்பின வுங்களுக்குக்காட்டலாவது. (நாண்மன்னுவெண்டிங்கள்கொல்) பூர்வாஷ்டமீசந்த்ரனே. இளகிப் பதித்திருக்கைக்கும், "காட்டு, காட்டு" என்றுவளருகைக்கும். (நயந்தார்கட்குநச்சிலைகொல்) ஆசைப்பட்டார்க்கு நச்சுப்பூண்டோவென்னுதல், தன்னையாசைப் பட்டார்க்காசைப்படவேண்டாதிருக்கிறதோ வென்னுதல். "நச்சுமாமருந்தம்" என்னுமவரிறே இப்போதுகண்ணுஞ்சுழலை யிட்டிவ்வார்த்தைசொல்லுகிறார். "இன்னமலையிலேயுண்டு" என்று அங்கேபோய்த்தேடி வருந்தவேண்டாதே, ஆசைப்படுவதுமாய் மேல்காற்றிலேகாட்டப் பரிஹாரமுமாம் மருந்தாயிற்றிது. மாமருந்தம் - அபத்யஸஹமான ஒளஷதம். இவன்றலையிலே பழியிட்டுக்கைவிடு மௌஷதமன்று, வானமாமலையில் தலையான ஒளஷதமிறே இப்போதிவளுக்கு நச்சுப்பூண்டாகிறது.

(சேணித்யாதி) ஓக்கத்தையுடைத்தாய், கல்பகதருப்பணைத்தாப்போலேயாய்ச் சுற்றுடைத்தா யிருக்கிற திருத்தோளிலழகாலே யென்னையநங்யார்ஹையாக்கினவனுடைய திருநெற்றியே "ஆயதாஸ்ச ஸுவ்ருத்தாஸ்ச" (ஆயதாஸ்சஸுவ்ருத்தாஸ்ச) என்னும்படியே திருவடியகப்பட்டதுறையிலே காணுமிவளுமகப்பட்டது. (கொடியேனுயிர்கோளிழைத்து-கோள்மன்னியாவியடும்) என்னுயிரினுடைய வழகை யழித்துக்கொள்கையிலே விருப்பத்தைப்பண்ணி முடியாநின்றது. (அழகுபாதகமாம்படிபாபத்தைப்பண்ணின வென்ப்ராணனைமுடிக்கையிலே துணிந்து, அதிலே யபிநிவேசித்து, ப்ராணனைமுடியாநின்ற தென்றுமாம்...... ........*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு. (காண்மின்களித்யாதி) "திருநுதலே" என்றத்தைப்பற்ற ரஸோக்தியாக வவதாரிகை (இவையவளித்யாதி) நெற்றிக்கை - முந்தினவ்யூஹம்; ப்ரதாநமென்று ரஸோக்தி. எதிர்சேனையென்றுமாம்.

கீழே "காண்மின்களே" என்றுவைத்து, இப்போது தெரியாதென்பானென்னென்கிற சங்கையிலே யருளிச்செய்கிறார் (இதுநலியாநின்றதாகவித்யாதி) வகை - ப்ரகாரம். அறியாமைக்கு ஹேதுவேதென்ன (என்கைக்கித்யாதி) பிடிதருதல் - பிடிக்கலாம்படி யகப்படுதல். "அன்னையர்காள்" என்கிற சம்போதநத்துக்குபாவம் (ஆண்களுக்கித்யாதி)

பூர்வாஷ்டமீ - பூர்வபக்ஷாஷ்டமீ. அஷ்டமீபர்யந்தமான நாளால் மன்னியிருக்கிற நிஷ்களங்க சந்த்ரனேவென்று சப்தார்த்தம். "பூர்வாஷ்டமீசந்த்ரன்" என்றுசொல்லுகைக்கு ஹேதுவருளிச்செய்கிறார் (இளகிப்பதித்தித்யாதி) காட்டுக்காட்டென்று வளருகை - மேன்மேலன வளருகையென்றபடி.

நச்சிலையாவது - (நச்சுப்பூண்டு) விஷபத்ரமென்றபடி. த்விதீயார்த்தத்துக்கு, நச்சுதலில்லையோ - ஆசையில்லையோவென்றபடி. வ்யாக்யாதாவினீடுபாடு (நச்சுமாமருந்தமித்யாதி) இதுக்கர்த்தம் (இன்னமலையித்யாதி) "நச்சுமாமருந்தம்" என்றதுக்கு - கீழருளிச்செய்தவர்த்தமொழிய, இங்கேதானே யிவனை நச்சுமதான மருந்தென்று அர்த்தாந்தரம். "மாமருந்தம்" என்றதுக்கர்த்தாந்தரம் (அபத்யேத்

யாதி) விவரணம் (இவன்றலேயிலே யித்யாதி) பரமபதநாதனுடைய நெற்றி யிவ ளுக்கு விஷப்பூண்டாகிறது விஸ்லேஷத்தின் முறுகுதலாலே யென்கிறுர் (வான மாமலேயிலித்யாதி)

தோளழகுக்குத் தோற்றதுக்கு ப்ரமாணம் (ஆயதாஸ்சேத்யாதி) அர்த்தா நுகுணமாக வந்வயம் (கொடியேனித்யாதி) சப்தார்த்தம் (என்னுயிரித்யாதி) கொடியேனுயிரினுடைய, கோளுண்டி-அழகு, அத்தை, இழைத்துக்கொள்கையிலே- அழித்துக்கொள்கையிலே, மன்னி - விருப்பத்தைப்பண்ணி, ஆவியடும் - ப்ராணனே முடியாநின்றதென்றபடி. உயிர் - ப்ராணன்.

காண்மின்களென்றுதொடங்கி, கொடியேனுயிர்கோளிழைத்து - கோள்மன் னியாவியடு மித்யந்வயஃ..........................................................*

# எட்டாம்பாட்டு.

கோளிழைத்தாமரையுங்கொடியும்பவளமும்வில்லுங்
கோளிழைத்தண்முத்தமுந்தளிருங்குளிர்வான்பிறையுங்
கோளிழையாவுடையகொழுஞ்சோதிவட்டங்கொல்கண்ணன்
கோளிழைவாண்முகமாய்க்கொடியேனுயிர்கொள்கின்றதே.

## ஆருயிரப்படி.

(கோளிழைத்தாமரையும்) தன்னெளியைத் தனக்காபரணமாக வுடைய தாமரையும், கொடியும், பவளமும், வில்லும், அழகை யாபர ணமாகவுடைய குளிர்ந்தமுத்தும், தளிரும், குளிர்ந்து பெருத்தபிறையு மாய், தன்னழகே தனக்காபரணமா யிருக்கிறஜ்யோதிர்மண்டலமோ; த ன்னெளியே தனக்காபரணமாகவுடைய க்ருஷ்ணனுடைய வழகிய திரு முகமென்றெரு பேரையிட்டுக்கொண்டு இப்படி துஃகப்படுகைக்கீடான பாபத்தையுடைய வென்னுடையப்ராணனே நலிகிறதென்கிறுள்........*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், உக்தமான வவயவ ஸௌந்தர்யத்தையுடைய க்ருஷ்ணனுடைய முகசோபையானது தன்னை நலிகிறபடியைச் சொல்லுகிறுள்.

கோள் - தன்னுடைய வொளியே. இழை - தனக்காபரணமான. தாமரை யும் - தாமரைகளும். கொடியும் - கொடியும். பவளமும் - பவளமும். வில்லும்-வி ல்லும். கோள் - தன்னுடைய வொளியை. இழை-தனக்கிழையாகவுடைத்தாய். த ண் - குளிர்ந்த. முத்தமும் - முத்தும். தளிரும் - தளிர்களும். குளிர் - சீதளமாய். வான் - அழகியதான. பிறையும் - பிறையுமானவிவற்றை. கோள் - கொள்கையை. இழையா - தனக்காபரணமாக. உடைய - உடைத்தாய். கொழும் - பூர்ணமான. சோதிவட்டங்கொல் - ஜ்யோதிர்மண்டலமோ. கண்ணன் - க்ருஷ்ணனுடைய. உக் தமான வுபமாநங்களுக் குபமேயபூதமான திருக்கண்கள், நாஸாதண்டம், திருப்ப

வளம், திருப்புருவம், திருமுறுவல், கர்ணபாசம், திருநெற்றி யாகிற வவயவங்களை யுடைத்தாயிருப்பதாய், கோள் - தன்னுளிதானே. இழை - ஆபரணமாம்படி. வாள் - உஜ்ஜ்வலமான. முகமாய் - திருமுகமாய்க்கொண்டு. கொடியேன் - அழகாலே நலிவுபடும் பாபத்தின்கொடுமையையுடைய வென். உயிர் - ப்ராணனை. கொள்கின்றது - அபஹரியாநின்றது.

கோள் - ஒளி. ......................................................................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

"தலையானபேரை நெற்றிக்கையிலேவிட்டுக் காட்டிக்கொடுக்க வொண்ணாது" என்று, கீழ்நலிந்தவை யெல்லாம் சேரவொருமுகமாய் வந்து நலிகிறபடி சொல்லுகிறது. அங்குமிங்கும் சிதறிக்கிடந்தபடையை, சத்ருக்கள்வந்து முடுகினவாறே யொன்றாகத்திரட்டி யொருகாலே தள்ளுவாரைப்போலே, தனித்தனியே நலிந்தவழகுகளெல்லாம் திரள வந்து நலிகிறபடியைச்சொல்லுகிறார்.

(கோளிழைத்தாமரையும்) ஜாதியொன்று யிருக்கச்செய்தேயும், "பொற்கால்தாமரை, நூற்கால்தாமரை" என்றுதாமரையிலே சிலபேதமுண்டிறே; அதில், நூற்கால் தாமரையென்னுதல்; அன்றியிலே, கொள்கையிலே துணிந்திருக்கிற தாமரையென்னுதல்; தன்னழகேதனக்காபரணமாகவுடைய தாமரையென்னுதல்; தேஜஸ்ஸேயாபரணமான தாமரையென்னுதல். திருக்கண்ணும். (கொடியும்) திருமூக்கும். (பவளமும்) திருவதரமும். (வில்லும்) திருப்புருவமும். (கோளிழைத்தண் முத்தமும்) தன் தேஜஸ்ஸேயாபரணமாகவுடைய குளிர்ந்த திருமுத்துநிரையும். அன்றியே, இழையிலே கோப்புண்ட முத்துப்போலே யிருக்கிற குளிர்ந்ததிருமுத்தென்னுதல். (தளிரும்) திருக்காதும். (குளிர்வான்பிறையும்) திருநெற்றியும் நேத்ரபூதரானவரும், "மூக்குவலியோம்" என்றவரும், வாய்சொல்லிப்போனவரும், "அதரோத்தரமாயிற்றே" என்றுவளைத்துக்கொடுபோனவரும், வாய்க்கரையிலே யிருந்தவரும், தாம்செவிப்பட்டவாறேபோனவரும், "இவற்றுக்குநெற்றிநாம்" என்று போனவருமெல்லாமொருமுகமாய். (கோளிழையாவித்யாதி) கொள்ளப்பட்டவாபரணத்தையுடைத்தான ஜ்யோதிர்மண்டலமோ. ரூபகமிருக்கிறபடி. (தன்னழகே தனக்காபரணமாயிருப்பதொரு ஜ்யோதிர்மண்டலமோ வென்னுதல்.)

(கண்ணன்கோளிழையித்யாதி) கண்ணனுடைய, தன்னழகேதனக்காபரணமாய் ஒளியையுடைத்தான முகமென்றொருவ்யாஜத்தையிட்டு (கொடியேனுயிர்கொள்கின்றதே) கொடியேன்-உயிர்பெறுங்காலத்திலே யுயிரிழக்கும்படியான பாபத்தைப்பண்ணினேன். வாழுங்காலத்திலே கெடும்படியான பாபத்தைப்பண்ணின வென்னுடைய வுயிரைக்கொள்கின்றது - கோளிழையாவுடைய கொழுஞ்சோதி வட்டங்கொல்..............*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. (கோளிழையித்யாதி) கீழ்ச்சொன்னவழகுக ளெல்லாவற்றினுடைய வபிசந்தியையும் ரசோக்தியாலே யருளிச்செய்கிறார். (தலையானவித்யாதி) தலையானபேறா - நெற்றியையென்று ஸ்வபாவார்த்தம்; ப்ரதாநமாயென்று ரஸோக்தி. நெற்றிக்கை - முன்தூசி. உக்தத்தை ஸத்ருஷ்டாந்தமாக விவரிக்கிறார் அங்குமிங்குமித்யாதி)

சப்தார்த்தம் (ஜாதியித்யாதி) முந்தினவர்த்தத்துக்கு, இழை - நூல், கொள்கை - உடைத்தாகை; த்விதீயார்த்தத்துக்கு, கோளென்று - நெஞ்சை யபஹரிக்கை, இழையென்று-துணிகை; த்ருதீயார்த்தத்துக்கு, கோளென்று - அழகு, இழையென்று - ஆபரணம்; நாலாமர்த்தத்துக்கு, கோளென்று - தேஜஸ்ஸு, இழையென்று - ஆபரணம். பலிதம் (திருக்கண்ணுமென்று)

இரண்டாமர்த்தத்துக்கு, "இழை-கோள்-தண்முத்தம்" என்றந்வயம். இழை-நூல். கொள்கை-கோப்புண்கை.

"குளிர்வான்பிறை" குளிர்ந்த பெரியசந்த்ரனென்றபடி.

"கோளிழையாவுடைய" க்ரசிக்கப்பட்ட வாபரணதேஜஸ்ஸையுடைத்தான "கொழுஞ்சோதிவட்டங்கொல்" பூர்ணமான ஜ்யோதிர்மண்டலமோவென்றபடி.

"ஆய் (வ்யாஜத்தையிட்டு) "கொள்கின்றது" க்ரஸியாநின்றது. உயிர்பெறுங்காலத்திலே யென்றது - எல்லாரு மிவ்வழகை யநுபவித்து சத்தைபெறுங்காலத்திலேயென்றபடி.

கோளிழைத்தாமரையென்றுதொடங்கி, குளிர்வான்பிறையுமான - கண்ணன் கோளிழைவான்முகமாய்க் கொடியேனுயிர்கொள்கின்றது -கோளிழையாவுடையகொழுஞ்சோதிவட்டங்கொலித்யந்வயஃ ..........................................*

---

# ஒன்பதாம்பாட்டு.

கொள்கின்றகோளிருளைச்சுகிர்ந்திட்டகொழுஞ்சுருளி
னுள்கொண்டநீலநன்னூற்றழைகொலன்றுமாயன்குழல்
விள்கின்றபூந்தண்டுழாய்விரைநாறவந்தென்னுயிரைக்
கள்கின்றவாறறியீரன்னைமீர்கழறுகிற்றிரோ.

## ஆறாயிரப்படி.

(கொள்கின்ற) ப்ரளயகாலத்தில் திவாராத்ரவிபாகமின்றிக்கே ஜகத்தையடைய வ்யாபியாநின்ற மிக்கதமஸ்ஸைப் புறவாயிலே வெளிறு னவம்சத்தைக்கழித்து அதினுள்ளே யுண்டான கொழுவிய விருண்ட சுருளினுடைய சாரமான கறுத்தநூற்றிரளோ, அங்ஙனமன்று; அத்யாஶ்சர்யமான வழகையுடைய க்ருஷ்ணனுடையதிருக்குழல், அலராநின்றுள்ள வழகிய திருத்துழாயினுடைய பரிமளம் நாறவந்து என்னுடைய ப்ராணனையபஹரிக்கிறபடி யறிகிறிலிகோள், ஏதேனுமொன்றைச் சொல்லிப்பொடியாநின்றிகோ ளென்கிறாள்......................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆச்சர்யரூபனான க்ருஷ்ணனுடைய வுபமாதீதமான திருக்குழல்நலிகிற ப்ரகாரத்தைச் சொல்லுகிறாள்.

கொள்கின்ற - லோகத்தை யடங்கக் கொள்ளக்கடவதான. கோள் - மிடுக்கையுடைய. இருளை - இருளை. சுகிர்ந்திட்ட - கந்தல்கழியும்படி யெஃதிப்படப்பட்டதாய். கொழும் - செறிந்த. சுருளின் - சுருட்டினுடைய. கையழுக்குப்படாமல், உள் - உள்ளே. கொண்ட - நாற்றுக்கொள்ளப்பட்ட. நீலம் - நீலநிறத்தை யுடைத்தான. நல் - அழகிய. நூல்தனைகொல் - நூல்திரளோ. அன்று - அக்ருத்ரிமமான விது அப்படியல்லவிறே. மாயன் - ஆச்சர்யரூபனான க்ருஷ்ணனுடைய. குழல்- உபமாதீதமான திருக்குழலானது. விள்கின்ற - விகசிதமான. பூ - புஷ்பத்தையுடைத்தாய். தண் - செவ்வியையுடைத்தான. துழாய் - திருத்துழாயின். விரை-பரிமளமானது. நாற - பரம்பும்படி. வந்து - வந்து. என் - என். உயிரை-ஆத்மாவை. கள்கின்ற - சௌர்யம்பண்ணுகிற. ஆறு - ப்ரகாரம். அறியீர் - அறிகிறிலிகோள். அன்னைமீர் - தாய்மாராயிருந்துவைத்து. கழறுநிற்றிர் - அவஸ்த்தையறியாதே நியமியாநின்றிகோள்.

கள்கை - களவிலே கொள்கை..............................................................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

" இவ்வவஸ்த்தைக்கன்றோ நமக்குப்பூவும் புழுகுமிட்டு சிரசாவஹித்துக்கொடுபோந்தது " என்று திருக்குழற் கற்றையிலழகுவந்து நலியாநின்றதென்கிறாள்.

(கொள்கின்றவித்யாதி) திருக்குழலிலழகுக் கோருபமானஞ்சொல்லப்புக்கு, அழகுக்கதுதான் நேர்கொடு நேருபமானமாகப் போராமையாலே அதுதன்னைக்கிடந்து சிக்ஷிக்கிறது. ப்ரளயகாலத்தில்திவாராத்ரவிபாகமற வெங்கு மொக்கத்தானேயாம்படி, கொள்ளாநின்றுள்ள - வ்யாபியாநின்றுள்ள, கோட்பாட்டையுடையவிருளென்னுதல்; கோளென்று - மிடுக்காய், மிடுக்கையுடைய விருளென்னுதல். அதுதன்னை, சுகிருவது- எஃகுவது, இப்படி யெஃகுகிறதுதன்னில் கொழுவிதானவம்சத்தைத்திரட்டுவது, அதுதன்னிலுமுண்டான புறவிதழைக்கழித்து அகவாயில் வயிரமாய் நீலமானநிறத்தை யுடைத்தாய் நன்றாயிருந்துள்ள நூற்றிரளோ (அன்றுமாயன்குழல்) இவள்நெஞ்சிலே யழகிதாகமயிர் பட்டதுகாணும். இத்தனைசிக்ஷித்தாலாயிற்று உபமாநமாகப் போராதென்னலாவது. பின்னையும், ஆச்சர்யபூதனானவனுடைய திருக்குழலென்னுமித்தனை. இத்தனையிடுசிவப்பான தவனுடையஸ்வாபாவிகமான திருக்குழலுக்கு சத்ருஶமோ. (விள்கின்றவித்யாதி) அலராநிற்பதாய் அழகிதாய்க்குளிர்ந்திருந்துள்ள திருத்துழாயில் பரிமளமானது முகத்திலே யலையெறியவாயிற்றுவந்துதோற்றுகிறது. திருக்குழலிலழகுக்கு, திருத்துழாயில் பரிமளமானது தூசியேறிநடக்கவாயிற்று வந்துபாதகமாகிறது. (என்னுயிரைக்கள்கின்றவாறறியீர் ) கள்கின்ற - களவுகாண்கிற. நீங்களெல்லாரும் சுகமே

யிருக்கச்செய்தே, என்னொருத்தியுடைய வாத்மவஸ்துவை வந்துகளவு காண்கிற ப்ரகாரமறிகிறிலிகோள். களவுகாண்கையாவ தென்னென்னில்; இத்தலையிலிசைவின்றிக்கே யிருக்கக்கைக்கொள்ளுகை. அவனிறே களவு காண்கிறான். இத்தலையத்தலையானபடி. அப்ராப்தனபஹரித்தால் பரிஹ ரிக்கலாம், ப்ராப்தனானவனபஹரித்தால் பரிஹாரமில்லையிறே. இதுகை ப்பட்டவாறே ஒருப்ரமாணங்கொடு நின்று வழக்குப்பேசத்தொடங்குமி றேயவன். (அன்னைமீர்கழறாநிற்றிரோ) நீங்களபிபவித்து. இக்களவுக்குநா னும் பெருநிலைநின்று கூட்டுப்பட்டேனாகப்பொடியா நின்றிகோள். இந் தவுருவுவெளிப்பாட்டைப் பரிஹரிக்கலாகவும் வேண்டாவோ. ஒரு நிய ந்த்ரு நியாம்யபாவமேயோ வேண்டுவதுபொடிகைக்கு. (கழறுகை-அபிப வித்துவார்த்தைசொல்லுகை. கழறல் - நோவச்சொல்லுதல்.) ..........*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. (கொள்கின்றவித்யாதி) "மாயன்குழல்" என்றத்தைப்ப ற்ற ரஸோக்தியாக வவதாரிகை (இவ்வவஸ்த்தைக்கன்றேவித்யாதி) இஸ்ஸமயத் துக்கன்றேவென்றபடி.

திருக்குழலிலழகுக் குபமாநமான விருளை வர்ணிக்கிறதுக்குபாவம் (திருக்கு ழலிலித்யாதி) கோட்பாடாவது-அழகு. அன்றிக்கே, கோட்பாட்டையுடையவென் றது-வ்யாப்தியை ஸ்வபாவமாக வுடையவென்னுதல். எஃகுவது - பண்ணுவதென் றபடி. கொழுவிதான - அழகியதான. ஸாராம்ஸமானவென்றபடி.

இப்படி வர்ணிக்கிறதுக்கு பாவம் (இவளித்யாதி) "அன்று" என்றதுக்கு பாவம் (இத்தனையித்யாதி)

இடுசிவப்பானது - ஆரோபிதமான சிவப்பையுடைத்தானது. ஸ்வதஃ இன்றி க்கே, ஆரோபிதாகாரத்தை யுடையதென்றபடி.

முகத்திலே - நாயகீமுகத்திலே. "விள்கின்ற" இத்யாதியால் பலிதம் (திரு க்குழலிலித்யாதி) தூசி - சேனாமுகம். "என்னுயிரைக்கள்கின்றவாறு" என்று வி சேஷிக்கிறவளுடைய பாவம் (நீங்களெல்லாருமித்யாதி) ஸ்வாபதேசத்திலே சங் கித்து பரிஹரிக்கிறார் (களவுகாண்கையித்யாதி) "சொரேணாத்மாபஹாரிணா" (சோரேணாத்மாபஹாரிணா) என்று இவன் கள்ளனாயிருக்க, ப்ராப்தனான வன் ஸ்வீகரித்தத்தைக் களவென்கிறதென்னென்ன (அவனிறேயித்யாதி) அதாவ து - சேதநனுடைய வாத்மாபஹாரப்ராபல்யம், ஈஶ்வரன் ஸ்வசேஷ வஸ்துவையு மிவனறியாதபடி யபஹரிக்கும்படியாயிற்றென்றபடி. பலிதம் (இத்தலையித்யாதி) ஆனாலவன் ஸ்வீகரியாதபடி விலங்கினாலோவென்ன (அப்ராப்தனித்யாதி) பரிஹார மில்லாமைக்கு ஹேதுவேதென்ன (இதுகைப்பட்டவித்யாதி) இங்கே - "த்வம்மே ஹம்மே" (த்வம்மேஹம்மே) இத்யாத்யநுசந்தேயம்.

பெருநிலை - ஸஹாயம். "அன்னைமீர்" என்றதுக்கு பாவம் (இந்தவுருவித் யாதி)

கொள்கின்றவித்யாரப்ய, அன்று, மாயன்குழல் - அன்னைமீர் - விள்கின்ற வென்றுதொடங்கி, கள்கின்றவாறறியீர் - கழறாநிற்றிரோ யித்யந்வயஃ. ...... ......*

# பத்தாம்பாட்டு.

நிற்றிமுற்றத்துளென்றுநெரித்தகையராயென்னைநீர்
சுற்றியுஞ்சூழ்ந்தும்வைதிர்சுடர்ச்சோதிமணிநிறமாய்
முற்றவிம்மூவுலகும்விரிகின்றசுடர்முடிக்கே
யொற்றுமைக்கொண்டதுள்ளமன்னைமீர்நசையென்னுங்கட்கே.

## ஆறாயிரப்படி.

(நிற்றிமுற்றத்துள்) தன்னகத்துமுற்றத்தே நின்றாயென்று அயுக்தஞ்செய்தேனாகக்கொண்டு, என்னுடைய தசையை யறிந்தநீங்கள், விடாதே சுற்றியும் சூழ்ந்தும் வையாநின்றிகோள்; நிரவதிக தேஜஸ்ஸான ரத்நங்களுடைய வொளியையுடைத்தாய்க்கொண்டு, சமஸ்தலோகங்களையு மோரிடமொழியாமே வ்யாபிக்கிற தேஜஸ்ஸையுடைய திருவபிஷேகத்திலென்னுடைய ஹ்ருதயமகப்பட்டது; இனி யென்னைப்பொடிந் தன்னைமீருங்களுக்கொரு ப்ரயோஜநமில்லை யென்கிறாள்.......................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சர்வாதிகத்வ ஸூசகமான திருவபிஷேகத்திலே தன்னெஞ்சு ஒன்றுபட்டபடியைச்சொல்லுகிறாள்.

உள்ளில்நின்றும், முற்றத்துள் - முற்றத்திலே. நிற்றி - நிற்றி. என்று - என்று. நெரித்த - நெரித்த. கையராய் - கையையுடையீராய்க்கொண்டு. என்னை - என்னை. நீர் - நீங்கள். சுற்றியும் - சுற்றிக்கொண்டுநின்று. சூழ்ந்தும்-பழியாலே சூழ்ச்சிசெய்தும். வைதிர் - வையாநின்றிகோள். சுடர் - சுடராய்ப்பரம்பின. சோதி - ஒளியையுடைத்தான. மணி - ரத்நங்களினுடைய. நிறமாய் - நிறத்தை யுடைத்தாய்க்கொண்டு. இம்மூவுலகு - த்ரிவிதசேதநாசேதநாத்மகமானலோகத்தை. முற்றவும் - அடங்கலும். விரிகின்ற - வ்யாபிக்கிற. சுடர் - தேஜஸ்ஸையுடைத்தான. முடிக்கே- திருவபிஷேகத்திலே. உள்ளம் - நெஞ்சானது. ஒற்றுமைக்கொண்டது - ஒருமைப்பட்டது. அன்னைமீர் - அன்னைமீர். நுங்கட்கு - வைகிறவுங்களுக்கு. நசை - என்பக்கல்நசைபண்ணி. என் - என்னப்ரயோஜநமுண்டு.....................................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

“ஶ்ரிய:பதியுங்கூட நம்மைசிரசாவஹித்துப்போருகிறதிவ்வவஸ்த்தைக்கன்றோ” என்றுதிருவபிஷேகத்தி லழகுவந்துநலிகிறபடியைச்சொல்லுகிறாள்.

(நிற்றியித்யாதி) இத்தனையும் நசையறச்சொல்லாவிடி லவர்கள் விடார்கள்போலே. (நிற்றிமுற்றத்துளென்று) முற்றத்துள்நிற்றியென்பர்கள். படுக்கையினின்று மெழுந்திருந்தெல்லாரும் காணும்படிமுற்றத்திலே நிற்கைக்கு மேற்படப்பழியில்லையாக நினைத்திராநின்றார்கள். “யாநஸூக்யா” (யாநஸூக்யா) இத்யாதி. “ராஜமார்க்கதாஜநா:” (ராஜமார்க்கதாஜநா:) என்றவோபாதியாக நினைத்திராநின்றார்க ளாயிற்றித்தை.

முற்றத்திலே புறப்பட்டுநிற்கும்படிபிறந்தஸாஹஸத்துக்கு நெரித்தகைய ராய். (என்னைநீர்) உருவு வெளிப்பாடுபுறப்பட விடுவித்து நிறுத்த நிற்கிறவென்னை, இத்தால் நலிவுவாராதபடி பாக்யம்பண்ணின நீங்கள். அவன்புறப்பட விடுவித்துநிறுத்த நிற்கிறவென்னை, இதுகொண்டுகாரியமில்லாதநீங்கள். ( சுற்றியும் சூழ்ந்தும்வைதிர் ) "இவளைத்தப்புவித்தோமாம்விரகென்" என்றுநெஞ்சிலே விசாரிக்கையும், கால்வாங்கிப்போகநிற்கவு மொண்ணாதபடி சூழநிற்கையுமென்னுதல். அன்றிக்கே, போயும்வந்தும் பொடியாநின்றிகோ ளென்னுதல்.

(சுடர்ச்சோதியித்யாதி) தப்புவிக்கைக்கு வார்த்தைசொல்லுகிறவிவர்களைப்போலே யொருப்ரதேசத்தி லல்லவிறே அகப்படுத்தி நலியக்கோலுகிற வதுநிற்கும்படி. மிக்கபுகரையுடைத்தான ரத்நத்தினுடைய தேஜஸ்ஸையுடைத்தாய்க்கொண்டு கண்டவிடமெங்கும் பரம்பாநின்றுள்ள தேஜஸ்ஸையுடைய திருவபிஷேகத்திலே யொருமைப்பட்ட தென்னுடைய ஹ்ருதயமென்னுதல், அங்கே விலைசெய்து கொடுத்ததென்னுதல்.

(அன்னைமீர்நசையென்னுங்கட்கே) தாய்மாரான நீங்களென்பக்கல் நசையறவமையும். தாய்மாராவார், பெற்றுவளர்த்து போகயோக்யதை பிறந்தால் பின்புகைப்பிடித்தவன்கையிலே காட்டிக்கொடுத்துக் கடக்க நிற்குமத்தனைபோக்கி, பொடியக்கடவர்களோ. ப்ராப்தயௌவநைகளானாலும், பெற்றப்ராப்திகொண்டு ஹிதஞ்சொல்லி மீட்கப்பார்க்கக்கடவதோ.......................................................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (நிற்றியித்யாதி) "சுடர்முடிக்கே" என்றத்தைக் கடாக்ஷித்து ரசோக்தியாக வவதாரிகை (ஸ்ரிய:பதியுங்கூடவித்யாதி)

"நசையென்றுங்கட்கே" என்று ஆசையறச்சொல்லுவா னென்னென்ன (இத்தனையுமித்யாதி) முற்றத்திலேநிற்கை பழியோவென்ன (படுக்கையித்யாதி) முற்றத்திலே புறப்பட்டு நிற்கிறத்தைத் தெருவிலே புறப்பட்டதாக நினைத்து, அப்படி புறப்பட்டதுக்குப்ரமாணம் (யாநசக்யேத்யாதி) "யா நஶக்யா வுரா ஐஷ்டும் ஹூதைராகாஶகைரவி। தாமத்ய ஸீதாம் வஶ்யந்தி ராஜமார்க்கதா ஜநா:" (யாஶக்யாபுராத்ரஷ்டும்பூதைராகாஶகைரபி । தாமத்யஸீதாம்பஶ்யந்திராஜமார்க்ககதாஜநா:) இத்யயோத்யாகாண்டே.

"என்னை, நீர்" என்றபதத்வயத்துக்கு மர்த்தம் (உருவுவெளிப்பாடித்யாதி வாக்யத்வயம்) ஏதத்வாக்யத்வயவிவரணம் (அவன்புறப்படவித்யாதி) முந்தினவர்த்தத்துக்கு, "சுற்றியும் சூழ்ந்தும்" என்று-மாநஸகாயிகங்களைச் சொல்லுகிறது.

"முற்றவிம்மூவுலகும் விரிகின்ற" என்கிறவளுடைய ஹார்த்தபாவம் (தப்புவிக்கைக்கித்யாதி) சப்தார்த்தம் (மிக்கவித்யாதி) ஒற்றுமை - ஒருமை. ஐகாந்த்யம் ஒருப்பட்டது-தத்பரமாயிற்றென்றபடி. இரண்டாமர்த்தத்துக்கு, ஒற்றுமைக்கொண்டது-விலைசெய்துகொடுத்ததென்றபடி. ஒற்றுமை-விலையும், ஒருமையும். "இம்மூவுலகும் - முற்றவும் - விரிகின்றசுடர்முடி" என்றந்வயிப்பது.

"அன்னைமீர்" என்றதுக்குபாவம் (தாய்மாராவாரித்யாதி) "அன்னைமீர்" என்றதுக்கு பாவாந்தரமாதல், விவரணமாதல் (ப்ராப்தேத்யாதி)

அன்னைமீர் - முற்றத்துள் - நிற்றி - என்று நெரித்தவென்றுதொடங்கி, சுடர்முடிக்கே - உள்ளம் - ஒற்றுமைக்கொண்டது - நுங்கட்கு-நசையென் இத்யந்வய:.*

## பதினொன்றாம்பாட்டு.

கட்கரியபிரமன்சிவனிந்திரனென்றிவர்க்குங்
கட்கரியகண்ணனைக்குருகூர்ச்சடகோபன்சொன்ன
வுட்குடையாயிரத்துளிவையுமொருபத்தும்வல்லா
ருட்குடைவானவரோடுடனாயென்றுமாயாரே.

### ஆறாயிரப்படி.

(கட்கரிய) மநுஷ்யருடைய விந்த்ரியங்களுக்கு விஷயமன்றிக்கேயிருக்கிற ப்ரஹ்மாதிகளுக்கும் கண்ணாற்காண வரியனான க்ருஷ்ணனைக்குருகூர்ச்சடகோபன் சொன்ன, (உட்குடையாயிரம்) வாச்யத்தை வசிக்கவல்ல சக்தியோகத்தையுடைய வாயிரத்தி லித்திருவாய்மொழி வல்லார் பகவத்குணசேஷ்டிதாதிகளைப் பூர்ணமாகவநுபவிக்கவல்ல * அயர்வறுமமரர்களோடே நித்யசம்ஸ்லேஷம் பண்ணப்பெறுவர்களென்கிறார் ......*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழியை யப்யசித்தவர்கள், நித்யசூரிகளோடே நித்யசம்ஸ்லிஷ்டராவரென்று பலத்தையருளிச்செய்கிறார்.

கட்கு - மநுஷ்யாதிகள்கண்ணுக்கு. அரிய - அரியரான. பிரமன் சிவ னிந்திரன் - ப்ரஹ்மருத்ரேந்த்ராதிகள். என்று - என்றுசொல்லப்பட்ட. இவர் - இவர்கள். கட்கும் - கண்ணுக்கும். அரிய - காணவரியனான. கண்ணனை - க்ருஷ்ணனை. குருகூர்ச்சடகோபன் - உருவுவெளிப்பாடாம்படிமாநஸாநுபவம்பண்ணினவாழ்வார். சொன்ன - அருளிச்செய்ததாய். உட்கு-ஸ்வார்த்தமான பகவத்ஸ்வரூபரூபகுணாதிகளுடைய ப்ரதிபாதநத்தில்சக்தியை. உடை - உடைத்தான. ஆயிரத்துள் - ஆயிரத்துள். ஒரு-பகவத்ஸௌந்தர்யாதிசய ப்ரதிபாதகத்வத்தாலே யத்விதீயமான. இவையும்பத்தும் - இவைபத்தையும். வல்லார் - அப்யசிக்கவல்லவர்கள். உட்குடை- நிரந்தரபகவதநுபவசக்தியுக்தரான. வானவரோடு - பரமபதவாசிகளோடே. என்றும் - சர்வகாலமும். உடனாய் - சமவேதராய். மாயார் - சம்சாரசம்பந்த ரூபமான ஸ்வரூபவிநாசமற்று வர்த்திப்பர்கள். உட்கு - மிடுக்கு.

இதுவும் - கலித்துறை..........................................................................*

### ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில் - இத்திருவாய்மொழியை யப்யசித்தவர்கள், பகவத்விஸ்லேஷத்தால் க்லேசப்படாதே, நித்யஸூரிகளோடேகூடி நித்யாநுபவம்பண்ணப்பெறுவ ரென்கிறார்.

(கட்கரியவித்யாதி) மநுஷ்யருடையகண்ணுக் கவிஷயமாம்படி யிருக்கிற ப்ரஹ்மாதிகளுக்கும் கண்ணுக்கவிஷயமாம்படி யிருக்கிற க்ருஷ்ணனே. ப்ரஹ்மாதிகள் கண்ணுக்கவிஷயமாம்படி யிருக்கிற க்ருஷ்ணன் மறக்கவொண்ணுதபடி உருவுவெளிப்பாடாய்த்தோன்ற, அத்தாலே நலிவுபட்டு, போனபோனவிடமெங்கும் சூழ்ந்துகொண்ட தென்னும்படி யாயிற்றிவர்க்கு ப்ரகாசித்தபடி. அவர்கள் கண்ணுக்கரிய னுைப்போலே யாயிற்றிவர்கண்ணுக்கு "சூழவுந்தாமரை நாண்மலர்போல்வந்துதோன்றும்" என்னும்படி ப்ரகாசித்தபடி. (குருகூர்ச்சடகோபன்சொன்ன) ஆழ்வாரருளிச்செய்த. (உட்குடையாயிரத்துளித்யாதி) ப்ரதிபாத்யார்த்தத்தையுள்ளபடி ப்ரதிபாதிக்கவல்ல சக்தியையுடைத்தான வாயிரத்திலும் வைத்துக்கொண்டு, இப்பத்தையு மப்யசிக்கவல்லார்கள், நித்யாநுபவம் பண்ணுநின்ருலும் மேன்மேலன பகவத்குணங்களை பூர்ணமாகவநுபவிக்கைக்கீடான யோக்யதையுடைய நித்யசூரிகளோ டொருகோவையாய். (என்றும்மாயாரோ) மாய்கையு முருவுவெளிப்பாடும் பர்யாய மென்றிருக்கிருர்காணும். மாயார் - பிரியார். * அடியார்கள் குழாங்களை - உடன் கூடி நித்யாநுபவம்பண்ணப்பெறுவர்கள். பகவதபசார பாகவதாபசாரங்களுண்டானல் வருமதுபோலன்றே, பகவதங்கீகாரமுண்டாய் அது நிலை நில்லாமையால் படும்க்லேசம். ப்ரளயங்கோத்தாப்போலே கண்ணைக்கண்கோத்திறேகிடக்கிறது. (சூழவும்.) இதெல்லாமவன் கழுத்துக்குமேலேபடுத்தினக்லேசமிறே.......................................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (கட்கரியவித்யாதி) "இவையுமொருபத்தும்வல்லார்" இத்யாதிமேலெல்லாம் கடாக்ஷித்தவதாரிகை (இத்திருவாய்மொழியை யித்யாதி)

பலிதம் (ப்ரஹ்மாதிகளித்யாதி) விவரணம் (அவர்கள்கண்ணுக்கித்யாதி)

ஆயிரத்துக்கு மிடுக்கின்னது, நித்யசூரிகளுக்கு மிடுக்கின்னதென்று விபஜித்தருளிச்செய்கிருர் (ப்ரதிபாத்யார்த்தத்தையித்யாதி)

வானவர்க்கு உட்காவது - போக்த்ருத்வசக்தி. "மாயார்" என்றது - பிரிந்துருவுவெளிப்பாட்டாலே துஃகப்படாரொன்றபடி. பிரியாரொன்று - அர்த்தாந்தரமாதல். பின்னை யேதுசெய்வாரொன்ன ( அடியார்களித்யாதி ) பகவதபசாராதிகளன்றே சேதநஸ்வரூபநாசகரத்வேந துஃகாவஹங்கள், உருவுவெளிப்பாடு துஃகரூபமோவென்ன (பகவதபசாரேத்யாதி) பகவதங்கீகாரம் - பகவதநுபவம். உருவுவெளிப்பாடு துஃகரூபமாகைக்கு ஹேதுவேதென்ன (ப்ரளயமித்யாதி) கண்ணைக் கண்கோத்துக் கிடக்கையாவது - தம்முடையகண்ணை யவன்கண் கோத்துக்கிடக்கிறதென்றபடி. ரசோக்தி (இதெல்லாமித்யாதி) அதாவது - முகாவயவங்க ளிப்படிபடுத்துகிறது கண்டால் எல்லாங்கூடினு லென்படுத்துமோ வென்றபடி. கழுத்துக்குமேலே யென்றது - திருமுகத்திலழகாகையாலே, ஸமஸ்தமென்றென்று ரஸோக்தி.........*

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

(ஏழையராவியுண்ணும்)

த்ருக்ப்யாம் பத்மாக்ருதிப்யாமமரதருலதா நாஸிகாதோऽதரேண
ப்ரூசாபேந ஸ்மிதேந ப்ரசமமகரலஸத்குண்டலாப்யாம் விசிஷ்ட: । பா
லேநார்த்தேந்துபாஸாऽமலமுகசசிநா நேத்ரசோபாதிபாஜா ஸ்ரீமாந்
தேவ: கிரீடீ ஸ்ம்ருதிவிஷயதநுஸ்ஸ்ரீதிவேதத்யஹ்யாயி॥ (௭௭)

(த்ருக்ப்யாம்பத்மாக்ருதிப்யாம்) ஆழியங்கண்ணபிரான்றிருக்கண்கள்கொலோவித்யாதி - ஸரஸிஜ ஸத்ருஶங்களான திருக்கண்மலர்களோடும்; (அமரதருலதாநாஸிகாத:) மாட்டுயர்கற்பகத்தின் வல்லியோ கொழுந்தோ வித்யாதி - கல்பக வ்ருக்ஷத்தினுடைய லதைபோலே யிருக்கிற திவ்ய நாஸையோடும்; (அதரேண) கோலந்திரள் பவளக்கொழுந்துண்டங்கொலோவித்யாதி - அழகிய பவளமுறிபோலேயும் பக்வமான கோவைப்பழம்போலேயு மிருக்கிற திருவதரத்தோடும்; (ப்ருசாபேந) மன்னியசீர்மதனனித்யாதி - மந்மதனுடைய விக்ஷுகோதண்டம்போலேயிருக்கிற திருப்புருவங்களோடும்; (ஸ்மிதேந) வெண்மின்னுக்கொலித்யாதி - வெளுத்தமின்போலேயும் முத்துநிரைபோலேயுமிருக்கிற ஸ்மிதத்தோடும்; (மகரலஸத்குண்டலாப்யாம்) மகரந்தழைக்கும் தளிர்கொலித்யாதி - தளிர்போலேயிருக்கிறதிருச்செவியிலே மகரஸந்நிவேசமாய் விளங்காநிற்கிற திருக்குண்டலங்களோடும்; (பாலேநார்த்தேந்துபாஸா) நாண்மன்னுவெண்டிங்கள்கொலித்யாதி - தர்ஶநீயமானபூர்வாஷ்டமீசந்த்ரனை யநுகரிக்கிறதிருநெற்றியோடும்; (அமலமுகஶஶிநாநேத்ரஶோபாதிபாஜா) கோளிழைத்தாமரையுமித்யாதி - திருக்கண்மலர், திவ்யநாஸாவம்ஶம், திருவதரம், திருப்புருவம், மந்தஸ்மிதம், திவ்யகர்ணபாசம், திருநெற்றி, இவைகளாலே சோபமாநமாய், நிர்மலபரிபூர்ண சந்த்ரஸத்ருஶமான திருமுகமண்டலத்தோடும் விசிஷ்டனாய்க்கொண்டு; (ஸ்ரீமாந்தேவ:கிரீடீ) முற்றவிம்மூவுலகும் விரிகின்றசுடர்முடிக்கே - நிரதிசயதீப்தியுக்தமான திருவபிஷேகத்தையுடையனாய், அத்தாலே சர்வாதிகனாக விளங்காநிற்கிற; (கிரீடீ) என்கிறவிவற்றாலே தானே - முன்னில்பாட்டிலே "கொள்கின்றகோளிருளை" இத்யாதியாலே சொல்லப்படுகிறதிருவபிஷேகத்தோடே சம்பந்தித்திருக்கிற திருக்குழற்கற்றையை யுடையனாகையுமுக்தமாயிற்றென்று கருத்து. ஏவம்பூதனான வெம்பெருமான், ஆஸ்ரிதர்க்கதிவிசதமாக ஸ்ம்ருதிவிஷயமாகிறானென்று "ஏழையராவியுண்ணும்" என்கிற தசகத்திலே யாழ்வாராலே யருளிச்செய்யப்பட்டதென்கிறார்.......................................... (௭௭)

---

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

ஏழையர்களெஞ்சையிளகுவிக்குமாலழகு
சூழவந்துதோன்றித்துயர்விளைக்க - ஆழுமனந்
தன்னுடனேயவ்வழகைத்தானுரைத்தமாறன்பால்
மன்னுமவர்தீவினைபோம்மாய்ந்து. (௬௭)

(ஏழையர்கள்நெஞ்சை) இதில் - அவனுடைய வுத்தமாங்கத்திலழகு ஒருமுகமாய் நலிகிறபடியைப் பேசுகிற சூக்தியை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; "மல்குநீலச்சுடர்தழைப்ப" என்று கீழ் ப்ரஸ்துதமான வெம்பெருமானுடைய வழகு திருவுள்ளத்திலே யூற்றிருந்து, அத்தையே யிடைவிடாமல்பாவித்து, பாவநாப்ரகர்ஷத்தாலே அவ்வழகு ப்ரத்யக்ஷ ஸமாநாகாரமாய்த்தோற்றி, தனித்தனியும் திரளவு மொருமுகஞ்செய்து நலிய, தாம் நலிவுபட்டுச்சொல்லுகிறபடியை, உருவுவெளிப்பாட்டாலே நோவுபடுகிற ளொருபிராட்டி பாசுரத்தாலே யருளிச்செய்கிற * ஏழையராவியிலர்த்தத்தை "ஏழையர்கள்" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

(ஏழையர்கள்நெஞ்சையிளகுவிக்கும்மாலழகு) சபலைகளானவபலைகளுடைய மநஸ்ஸை த்ரவிப்பிக்கும் சர்வேஶ்வரனுடைய * ஸ்மயமான முகாம்புஜத்தில் நயநசௌந்தர்யம். (சூழவந்துதோன்றித்துயர்விளைக்க) எங்கும் சூழ்ந்து ஸ்ம்ருதிவிஷயமாய் பாதகமாயிறே துःகத்தை விளைப்பது. அதாவது - "வ்ருக்ஷேவ்ருக்ஷே ஹிபஶ்யாமி - பாஶஹஸ்தமிவாந்தகம்" (வ்ருக்ஷேவ்ருக்ஷேஹிபஶ்யாமி - பாஶஹஸ்தமிவாந்தகம்) என்னும்படி, "ஏழையராவியுண்ணுமிணைக்கூற்றங்கொலோவறியேன்" என்கிற முதற்பாட்டை யடியொத்தினபடி. (ஆழுமனந்தன்னுடனேயவ்வழகைத்தானுரைத்த) "வெண்ணெயுண்டான்திருமூக் கெனதாவியுள்ளேமாட்டியவல்விளக்கின்சுடராய்நிற்கும்" என்றும், "நீலநெடுமுகில்போல் திருமேனியம்மான் தொண்டைவாயேயுந்திசையுளெல்லாம் வந்துதோன்றும்" என்றும், "கண்ணபெருமான் புருவமவையே யென்னுயிர்மேலனவாயடுகின்றன வென்றுநின்றே" என்றும், "குன்றமெடுத்தபிரான்முறுவலெனதாவியடும்" என்றும், "பைவிடப்பாம்பணையான்றிருக்குண்டலக்காதுகளே கைவிடலொன்றுமின்றியடுகின்றன" என்றும், "பெருமான்றன்றிருநுதலேகோள்மன்னியாவியடும்" என்றும், இப்படிதனித்தனியும்; "கோளிழைத்தாமரையும்" இத்யாதிப்படியே ஒருமுகமாகவும்; அதுக்குமேலே, "செங்கமலப்பூவில்தேனுண்ணும்வண்டேபோல் பங்கிகள்வந்துன்பவளவாயைமொய்ப்ப" என்றும், "ஆலாடபர்யந்தவிலம்பிதாலகம்" (லலாடபர்யந்தவிளம்பிதாளகம்) என்றும் சொல்லும்படியாய், "மாயன்குழல்விள்கின்றபூந்தண்டுழாய்விரைநாறவந்தென்னுயிரைக்கள்கின்றவாறு" என்றுமருளிச்செய்தவையென்கை. இப்படி துःகமக்நமான மநஸ்ஸுடனே. (அவ்வழகைத்தானுரைத்தமாறன்பால்) நிரவதிகபோக்யமான அந்த உத்தமாங்கத்திலே சௌந்தர்யத்தை யநுபவித்தருளிச்செய்த வாழ்வார்விஷயத்திலே பொருந்தியிருக்குமவர்களுடைய ப்ரபலப்ரதிபந்தகம் நசித்து நிஶ்ஶேஷமாகப்போம். தீவினை-துஷ்கர்மம். (மாறன்சொல்மன்னுமவர்தீவினைபோம்மாய்ந்து) என்று பாடமானபோது, ஆழ்வாரருளிச்செய்த திருவாய்மொழியை மநஸ்ஸிலே பொருந்தி யநுசந்திக்குமவர்கள் ப்ரதிபந்தகம் நிஶ்ஶேஷமாகப்போமென்றபடி. ..................................................(௬எ)

ஏழாம்பத்தில் - ஏழாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக - திருவாய்மொழி - ௬எ.—பாட்டு - எ௩௩.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஏழாம்பத்து.

## எட்டாந்திருவாய்மொழி.

### மாயா-ப்ரவேஶங்கள்.

### ஆறுயிரப்படி.

கீழுருவு வெளிப்பாடென்றறிந்து நோவுபடச்செய்தே தன்னைக் காட்டியார்த்தி தீராதொழிகிறபடியையும், அங்ஙனே யிருக்க முடியாதபடி தம்மை நடத்துகிறபடியையுங்கண்டு "இவ்வாஶ்சர்ய மிருந்தபடியென்" என்று எம்பெருமானுக்கறிவிக்க; அவனும் "இவ்வளவோவென்படி" என்று தன்னுடைய விசித்ர விபூதித்வத்தைக்காட்டி யருளக்கண்டு, "இதிருந்தபடியென்" என்று விஸ்மித ராகிறார்........................*

### பன்னீராயிரப்படி.

எட்டாந்திருவாய்மொழியில், கீழ்-உருவுவெளிப்பாடான ப்ரகாசம் நடக்கச்செய்தே அநுபவம் பெறுதபடி நிரோதித்து ஆர்த்தியை யதிசயிப்பித்த வைசித்ர்யங்கண்டவர்; இந்த விசித்ரசக்தியோகத்துக்கு ஹேதுவானவனுடைய வாஶ்சர்ய மாயுள்ள வர்த்தித்வ ரூபத்தையும், அபிமதசித்தியால்வந்த வாதிக்யத்தையும், அம்மேன்மைகிடக்கச்செய்தே யுண்டான வாஶ்ரிதபவ்யதையையும், உத்துங்கபவ்யதைகளிரண்டுக்கும் ஸூசகமான புண்டரீகாக்ஷத்வத்தையும், அநந்ய ப்ரயோஜநர்க்கதிசயித போக்யனும்படியையும், சித்தப்ராமகமான சேஷ்டிதாதிகளையும், கர்மாத்யநுரூபமான துஃகஜநகத்வத்தையும், அதிசயிதஜ்ஞாநர்க்கு மவபோதநார்ஹதையையும், துரவபோதத்வ ஹேதுவான ஸௌக்ஷ்ம்யாதிசயத்தையும், ஸூத்ருட ப்ரமாணசித்தமான ஸூக்ஷ்ம சிதசித்ப்ரகாரத்வத்தையு மநுசந்தித்து; ஏவம் ப்ரகாரவிசிஷ்டனான நீ, ஒன்றுக்கொன்றொவ்வாத விசித்ராகாரமான ஜகத்தை விபூதியாகக்கொண்டு நிற்கிற வாஶ்சர்ய சக்தியோக மிருந்தபடி யென்னென்று புத்தி சந்நிஹிதனான வீஶ்வரனுக்கு விண்ணப்பஞ்செய்து, தம்முடைய விரோதி நிவ்ருத்தியில் பணியில்லாமையை நினைத்து சந்துஷ்டராகிறார்..........................................*

### ஈடு.

கீழ்த்திருவாய்மொழி - உருவுவெளிப்பாடாய்ச்சென்றது. கைக்கெட்டாமையாலே உருவுவெளிப்பாடென்றறிவரிறே. இனி, சர்வேஶ்வரன் தான் நினைத்தகாரியம் செய்து தலைக்கட்டிக்கொள்ளு மளவும் நம்மையிங்கே வைக்கிறானென்னுமிடமுமறிவரிறே; ஆகிலும், அவனை யொழிய தரிக்கமாட்டாதவராகையாலே இத்தை நினைத்தாறியிருக்கவும் மாட்டாரே. "விரோதியைப்போக்கித் தரவேணும்" என்றிவரார்த்தித்தா

லு மவனுமிவனைக்கொண்டு தான் நினைத்த ப்ரபந்தங்கள் தலைக்கட்டிக் கொள்ளுமளவு மிவரபேக்ஷிதம் செய்யானே. இவரபேக்ஷிதம் செய்யா திருக்கச்செய்தேயும், இவனை யிங்கேவைத்து ஜீவிப்பிக்கு முபாயங்களு மறிந்திருக்குமே. ஆகையாலே, சில பதார்த்தங்களை யுயிர்போகாதபடி யொன்றிலே கோத்திட்டு வைக்குமாபோலே, முடியவுமொட்டாதே ஜீவிக்கவு மொட்டாதே நடுவேயிருத்தி நலிகிறபடியை யநுசந்தித்து, " எனக்கிதில் பொருந்தாமை யுண்டாயிருக்கச்செய்தேயு மிஸ்ஸம்சாரத்திலே வைத்தென்னை நடத்திக்கொடு போருகிற விவ்வாஸ்சர்யத்தை யெனக்கருளிச்செய்யவேணும்" என்ன, ஒன்றைக்கேட்கவேறே சிலவற்றைச் சொல்லுவாரைப்போலே, " இதொன்றுங்கண்டோ நீராஸ்சர்யப்படுகிறது, இவ்வளவல்லாத நம்முடைய விசித்ரஜகதாகாரதையைப் பாரீர்" என்று தன்னுடைய வாஸ்சர்ய ஜகதாகாரதையைக் காட்டிக்கொடுக்க; அதுதானும் தான் நினைத்ததன்றேயாகிலு மவன் காட்டிக்கொடுத்த தாகையாலே அதுவு மிவர்க்கு ப்ரீதிஹேதுவாயிருக்குமிறே. ஆக, இவரொன்றைக்கேட்க அவனநேகாஸ்சர்யங்களைக் காட்டிப் பரிஹரித்தான். அக்ரூரன், யமுனையிலேபுக்கு முழுகினவாறே பிள்ளைகளை நீருக்குள்ளே கண்டஞ்சாக்கரையிலே பார்த்தான், அங்கேயுங்கண்டான்; கண்டு, " ஜ௧ 
ெ௨தந்௩ஹாஸ்ஜ௱ஂ௱ஏவஂயஸு௩ஹாத்௩ந:|தெநாஸ்ஜ௱வ௱ணாஹஂ ஹவதாக்ருஷ்ணஸங்க௩: " (ஜகதேதந்மஹாஸ்சர்யம்ரூபம்யஸ்யமஹாத்மந: । தேநாஸ்சர்யவரேணுஹம் பவதாக்ருஷ்ணஸங்கத:) என்று கொண்டு அவனுஸ்சர்யப்பட்டாப்போலே, இவருமவனுடைய விசித்ர ஜகத்ராகாரதையை யநுசந்தித்து விஸ்மிதராகிறார்........................................*

## ஜீயர் அரும்பதம்.

மாயாவாமனன்ப்ரவேஸே, வ்ருத்தாநுவாதம் (கீழித்யாதி) உருவுவெளிப்பாடென்றறியும்படி யென்னென்ன (கைக்கித்யாதி) அவன் தம்மைவைத்த காரியமறிந்திருக்க, த்வரிப்பானென்னென்ன ( இனிசர்வேஸ்வரனித்யாதி ) " இனியாமுருமை " என்றபோதே விரோதியைப்போக்காதிருப்பானென்னென்ன (விரோதியையித்யாதி) இவ்வாக்யாநந்தரோ, (இனிசர்வேஸ்வரன்) இத்யாதி வாக்யமநுசந்தேயம். அபேக்ஷிதஞ்செய்யாவிட்டால் முடியாரோவென்ன (இவரபேக்ஷிதமித்யாதி) உக்தார்த்தநிகமந பூர்வகமாக, ஆஸ்சர்யமிருந்தபடியென் என்றுகேட்கும் ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார் ( ஆகையாலேயித்யாதி ) சிலபதார்த்தங்களை யென்றது - மத்ஸ்யாதிகளை. (ஆகையாலே யென்றுதொடங்கி, அருளிச்செய்யவேணு மென்னுமளவும்) " பாசங்கணிக்கி " என்கிறபாட்டைக்கடாக்ஷித்து. இவர்க்கநபேக்ஷிதத்தைக் காட்டினுவிஷ்டமாமோவென்ன (அதுதானுமித்யாதி) ஜகதாகாரதை யாஸ்சர்யமென்னுமதுக் குதாஹரணம் (அக்ரூரனித்யாதி) " ஜ௧ெ௨தந்௩ஹாஸ்ஜ௱ஂ " ( ஜகதேதந்மஹாஸ்சர்யம் ) இதிபஞ்சமேம்ஸே. * புகழுநல்லொருவனிலே - சம்சயம், * நல்குரவிலே - விருத்த விபூதிகத்வம், இதில் - ஆஸ்சர்யஜகதாகாரதையென்று பேதம்.....................................................*

## எட்டாந்திருவாய்மொழி.

# முதற்பாட்டு.

---

மாயாவாமனனேமதுசூதாநீயருளாய்
தீயாய்நீராய்நிலனாய்விசும்பாய்க்காலாய்த்
தாயாய்த்தந்தையாய்மக்களாய்மற்றுமாய்முற்றுமாய்
நீயாய்நீநின்றவாறிவையென்னநியாயங்களே.

## ஆறாயிரப்படி.

(மாயாவாமனனே) அத்யாஸ்சர்யபூதனு யாஸ்ரிதவிரோதி நிரஸந சீலனான நீ யென்னைத் தெளிவிக்கவேண்டும். லோகத்தில், வஹ்நிஜல பூம்யாகாச வாயுக்களையும் தாயையும் தந்தையையும் மக்களையும் மற்றெல்லாரையும் விபூதியாகவுடையையாய், இவற்றோடு பிரியவஸாதாரணுகாரத்தையு முடையையாய்க் கொண்டு நீ நின்றபடியென் என்று விஸ்மிதராய் எம்பெருமானைக் கேட்கிறார்......................................*

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், காரணரூபமாயும் கார்யரூபமாயு மிருக்கிற சகலபதார்த்தங்களையும் விபூதியாக வுடையையாயிருக்கிற ப்ரகார மென்னுயிருக்கிறது, இத்தை ஆஸ்சர்ய ரூபனுன நீ யருளிச்செய்யவேணுமென்கிறார்.

மாயா-ஸ்வாபாவிகமான வாஸ்சர்யசக்தியை யுடையையாய். வாமனனே-அதுக்கநுரூபமாக, மஹாமேருவைமஞ்சாடியாகச்சுருக்கினுப்போலே வடிவைச்சிறுக விட்டிரந்த வாமநனுய். மதுசூதா - உன்னுடைய சக்திவைசித்ர்யத்தில் சந்தேஹித்தாருடைய சம்சயத்தை, மதுவைநிரசித்தாப்போலே நிரசித்துக்கொடுக்கு மவனே. நீ - நீயே. அருளாய் - உன் ப்ரகாரத்தை யருளிச்செய்யவேணும். தீநீர்நிலன் விசும்புகால் - அண்டகாரணமான பூதபஞ்சகமும். தாய்தந்தைமக்கள் மற்றும்-அண்டாந்தர்வர்த்திகளில் ஒருவர் செய்த தொருவர் செய்யாதபடியான மாதா பித்ரு புத்ர ப்ரப்ருதிகளும். முற்றும் - தத்சம்பந்திகளாயுள்ள சமஸ்த பதார்த்தங்களும். ஆய் - நீ யிட்டவழக்காம்படி தத்தத்ப்ரகார விசிஷ்டனுய். அவ்வளவே யன்றியே, நீயாய் - அசாதாரணுகாரயுக்தனுய். நீ, நின்ற - நிற்கிற. இவையாறு - இப்ப்ரகாரம். என்ன - என்ன. நியாயங்கள் - உபபத்தியுக்தங்களா யிருக்கிறன.

காரணரூப வஸ்துக்களா யிருக்கிறவைதானே கார்யரூபமாகையாலே சர்வாத்மகனுன தான் தத்கததோஷஸ்பர்ஸமில்லாதபடி வ்யாவ்ருத்தனு யிருக்கையும் ஒருவர்க்கறிய வொண்ணுதபடியாலே யிந்த வேதாந்தரஹஸ்யோப பத்திகளை நீயே யருளிச்செய்யவேணுமென் றுராயிற்று......................................*

## ஈடு - முதற்பாட்டு.

விசித்ரமானகார்ய காரணங்களையெல்லாம் விபூதியாக வுடையனு யிருக்கிற விருப்பை யநுசந்தித்து, இவை யென்னபடிகளென்றுஸ்சர்யப்படுகிறார்.

(மாயா) மாயாவென்கிறவிது - இத்திருவாய்மொழிக்காக ஸங்க்ரஹமாயிருக்கிறது. (வாமனனே) மாயாவென்கிற பதத்திற் சொல்லுகிற வாஶ்சர்யத்துக்கு வ்யாப்தி க்ரஹணபூமியாயிருக்கிறது. அன்றேபிறந்தன்றே வளர்ந்து மஹாபலி பக்கலிலே சென்று அவன் முன்னே நின்று, தான் சொன்னவையெல்லாம் செய்யவேண்டும்படி வார்த்தை யருளிச்செய்து, சிற்றடியைக்காட்டிப் பெரியவடியாலேயளந்துகொண்டு, இப்படி பண்ணின வ்யாபாரங்களையுடைய முன்னேட்டுக்கொண்டு - வாமனனே யென்கிறார். (மதுஸூதா) ஆஶ்சர்ய சேஷ்டிதங்களுக்கெல்லாம் ஸ்ரீவாமநனைப்போலேயாயிற்று, விரோதிநிரசநத்துக்கு மதுஸூதநனென்கிறது. (மதுஸூதாநீயருளாய்) மதுவாகிறவசுரனை நிரசித்தாப்போலே, எனக்கோடுகிற சம்சயத்தையும் நீயேபோக்கித் தந்தருளவேணும்.

(தீயாயித்யாதி) கார்யகதமானவைசித்ரி, காரணத்திலேயு முண்டாயிருக்குமிறே. இனித்தான், ஒன்றின்படியாயிராதிறே மற்றையது. இப்படிபின்னமான ப்ரகாரங்களை யுடையவான பூதபஞ்சகங்களுக்கும் நிர்வாஹகனுய். (தாயாயித்யாதி) கார்ய வர்க்கத்திலும், தாய்செய்தது தமப்பன் செய்யமாட்டான், தமப்பன் பண்ணுமுபகாரம் புத்ரர்கள் பண்ணமாட்டார்கள், புத்ரர்கள் பண்ணுமுபகாரம் பந்துக்கள் பண்ணமாட்டார்கள், இப்படி சர்வவித பந்துக்களுமாய். (முற்றுமாய்) அநுக்தமான சம்பந்திகளாயுள்ள சகலசேதநா சேதநங்களுக்கும் நிர்வாஹகனுனவனே. (நீயாய்) ஜகதாகாரனுயிருக்குமளவல்லவிறே அசாதாரண விக்ரஹயுக்தனுயிருக்குமிருப்பு. இவர்க்குப் பரமபதத்திலே ஸூரிபோக்யனுயிருக்கிற விருப்போடு, ஜகதாகாரனுய் நிற்கிற நிலேயோடு வாசியற போக்யமாம்படியிறே யிவர்க்குப்பிறந்த ஜ்ஞாநவைசத்யம். (நீநின்றவாறு) இப்படி இவையெல்லாமாய்க் கொண்டு நீ நின்றப்ரகாரம். (இவையென்னநியாயங்களே) இவையென்ன படிகள்தான். முதற்றிருவாய்மொழியிலே - இவனுடைய வைஶ்வர்யத்தை யநுபவித்திருக்கச்செய்தேயும், இதுக்குமுன்பு கண்டறியாதாப்போலே புதியரா யநுபவிக்கிரு ராயிற்று. குணநுபவத்தில் க்ஷணந்தோறும் புதுமைபிறந்து * அப்பொழுதைக்கப்பொழுதென் னுராவமுதமா யநுபவிக்குமாபோலே யாயிற்று, விபூத்யநுபவத்திலும் புதியராயநுபவிக்கவல்லபடி. ( இவையென்னநியாயங்கள் - நீ யருளாய் ) இத்தையருளிச்செய்யவேணும். " த்வதந்யஸ்ஸம்ஶயஸ்யாஸ்யச்சேத்தாநஹ்யுபபத்யதே" ( த்வதந்யஸ்ஸம்ஶயஸ்யாஸ்யச்சேத்தாநஹ்யுபபத்யதே ) என்று அர்ஜுநன் சம்ஶயம் தீர்த்தாப்போலே, என்னுடைய சம்சயத்தையும் தீர்த்தருளவேணும்...........................................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (மாயாவித்யாதி) " தீயாய் நீராய்" என்றுதொடங்கி, "இவையென்னநியாயங்கள்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (விசித்ரமானவித்யாதி)

மாயா - ஆஶ்சர்யபூதனே. வ்யாப்திக்ரஹணபூமியாவது-ஆஶ்சர்யமுண்டென்கிறத்தை யறிகிறஸ்த்தாநம். வாமநனிடத்திலாஶ்சர்ய மேதென்ன (அன்றேயித்யாதி) முன்னேட்டுக்கொண்டு - மேலேயெண்ணிக்கொண்டு. விரோதிநிரசந கதநத்துக்கு பாவம் (மதுவாகிறவித்யாதி)

ஏகாகாரமான காரணத்திலே வைசித்ரியேதென்ன (கார்யகதமானவித்யாதி) அதாவது - கார்யம் விசித்ரமானபோதே காரணமும் தததுகுணமாகவேணுமென்று அநுமாநாத்ஸித்தமென்றபடி. ஹேத்வந்தரம் (இனித்தானித்யாதி) அதாவது காரணங்கள் பரஸ்பர விசித்ரங்களென்றபடி.

கார்யவர்க்கத்திலும் வைசித்ரி யருளிச்செய்கிறார் (கார்யவர்க்கத்திலு மித்யாதி) ஒருவனே சர்வவிதபந்துவுமாகிறது மாஶ்சர்யமென்றபடி. “முற்றுமாய்” என்றதுக்கர்த்தம் (அநுக்தமானவித்யாதி) “நீயாய்” என்றதுக்கு - (அசாதாரணவிக்ரஹயுக்தனாய்) என்று சப்தார்த்தம் விவக்ஷித்து, இதிலேயாஶ்சர்யமேதென்ன (ஜகதாகாரனாயித்யாதி) * அழுக்குப்பதித்தவுடம்பையும், “நீயாய்” என்று - * பரஞ்சுடருடம்பையு மொக்கவருளிச்செய்வானென்னென்ன (இவர்க்கித்யாதி)

நியாயம் - ப்ரகாரம். கீழேயும் விபூதியோகத்தை யநுபவித்திருக்க, இப்போதும் பூர்வம்போலே யாஶ்சர்யப்படுவானென்னென்ன (முதற்றிருவாய்மொழியிலே யித்யாதி) இதுக்கு த்ருஷ்டாந்தம் (குணநுபவத்திலித்யாதி) உமக்கு சந்தித்தமான வர்த்தங்க ளென்றால் தீர்க்கப்போமோ வென்ன (த்வதந்ய இத்யாதி) “ஏதம்மே ஸம்ஶயம் க்ருஷ்ண சேத்துமர்ஹஸ்யஶேஷத꞉ । த்வதந்யஸ்ஸம்ஶயஸ்யாஸ்ய சேத்தா நஹ்யுபபத்யதே” (ஏதம்மேஸம்ஶயம்க்ருஷ்ணச்சேத்துமர்ஹஸ்யஶேஷத꞉ । த்வதந்யஸ்ஸம்ஶயஸ்யாஸ்யச்சேத்தாநஹ்யுபபத்யதே) இதி கீதாஸூ ஷஷ்ட்டே.

மாயாவாமனனேமதுசூதா, நீயாவென்றுதொடங்கி, இவை யென்ன நியாயங்கள் - நீயருளாயித்யந்வய꞉. ..............................................................................*

---

# இரண்டாம்பாட்டு.

---

அங்கண்மலர்த்தண்டுழாய்முடியச்சுதனேயருளாய்
திங்களுஞாயிறுமாய்ச்செழும்பல்சுடராயிருளாய்ப்
பொங்குபொழிமழையாய்ப்புகழாய்ப்பழியாய்ப்பின்னுநீ
வெங்கண்வெங்கூற்றமுமாயிவையென்னவிசித்திரமே.

## ஆறாயிரப்படி.

(அங்கண்மலர்) அழகிய மதுவோடுகூடின பூவையுடைய திருத்துழாயைத் திருமுடியிலே யுடையையாய், இவ்வழகுக் கொருநாளுமொருச்யுதியில்லாதவனே; திங்களும் ஞாயிறுமாய், அழகியதாய்ப்பல வகைப்பட்ட நக்ஷத்ரங்களுமாய், தமஸ்ஸுமாய், பொங்குபொழிமழையாய், புகழாய், பழியாய், பின்னும் நீ, வெவ்விய கண்ணையுடைய வெவ்விய ம்ருத்யுவுமான படிகளென்ன வைசித்ரிதானென்கிறார்...............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அபிமதஸித்தியால்வந்த பூர்த்தியாலே அத்யுச்ச்ரிதனுயுள்ளநீ, சந்த்ரஸூர்யப்ரமுக சகலபதார்த்தங்களையும் விபூதியாக வுடையையான வைசித்ர்யத்தை யருளிச்செய்யவேணுமென்கிருர்.

அம்-விலக்ஷணமான. கள்-மதுவையுடைய. மலர்-பூவையுடைத்தாய். தண்-ஶ்ரமஹரமான. துழாய்-திருத்துழாயாலே யலங்க்ருதமான. முடி-மயிர்முடியையுடையையாய். அச்சுதனே - அர்த்தித்தவஸ்து கைப்புகுந்தவாறே சேஷித்வபூர்த்தியாலே அப்ரச்யுதஸ்வபாவனுனவனே. அருளாய்-நீயருளிச்செய்யவேணும். தாபசீதகரரான, திங்களும்-சந்த்ரனும். ஞாயிறுமாய்-ஸூர்யனுமாயும். செழும் - விலக்ஷணமாய். பல்-பலவாயுள்ள. சுடராய்-தாராக்ரஹநக்ஷத்ரங்களான தேஜஃபதார்த்தங்களாயும். இருளாய்-ப்ராணிகளுக்கு பதார்த்ததர்ஶநம்பண்ணவொண்ணுதவிருளாய். பொங்கு - அந்தப்ராணிகளுடைய வபிவ்ருத்திஹேதுவர்க்கொண்டு உச்ச்ரிதமாய். பொழி-சொரியும். மழையாய் மழையாய். புகழாய்-அத்தாலுண்டான ஸஸ்யாதிபதார்த்தசம்பத்தியாலே சம்பாத்யமானபுகழாய். பழியாய் - அவற்றினுடைய பாத்ரவ்யயாதி வ்யதிரேகத்தால்வரும் பழியாய். அப்பழிமிகைத்தகாலத்து, பின்னும்-பின்னையும். வெங்கண் - அவர்களை யுபசம்ஹரிக்கைக்கடியாய் க்ரூரேக்ஷணனுய். வெம்-க்ரூரஸ்வபாவனுமான. கூற்றமுமாய்-ம்ருத்யுவாயும்நிற்கிற. இவை-இந்தப்ரகாரங்கள். என்ன-என்ன. விசித்திரம்-வைசித்ர்யங்கள் ........................................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

சந்த்ர ஸூர்யாதி பதார்த்தங்களடைய தனக்கு விபூதியாகவுடையனுயிருக்கிறபடியை யருளிச்செய்கிருர்.

(அங்கண்மலரித்யாதி) அழகிதாய் மதுவோடேகூடின மலரையுடைத்தாய்க் குளிர்ந்திருந்துள்ள திருத்துழாயைத் திருமுடியிலே யுடையையாய், அந்த வொப்பனையால் வந்தவழகுக் கொருநாளுமொருவேறுபாடின்றிக்கே யென்றுமொக்க நித்யமாம்படி யிருக்கிறவனே. வைத்தவளையத்தோபாதியும் போக்யமாகிறதாயிற்று விபூத்யநுபவமிவர்க்கு. “ கீழிற்றிருவாய்மொழியில் ‘விள்கின்றபூந்தண்டுழாய்விரைநாறவந்து’என்று சொன்னத்தை ஸ்மரிக்கிருர் ” என்று பிள்ளான்பணிக்கும். * மாயன்குழல்விள்கின்றபூந்தண்டுழா யுருவுவெளிப்பாடாய் பாதகமாகைதவிர்ந்து, ஸாக்ஷாத்கரித் தநுபவிக்கிருரிறே. (திங்களும்ஞாயிறுமாய்) “ [illegible] ” ( ஸூர்யாம்ஶுஜநிதம்தாபம் நிந்யேதாராபதிஶ்ஶமம் ) என்கிறபடியே, ஆதித்யகிரணங்களால் பிறந்த தாபமெல்லாம் போம்படி சேதநர்க்காப்யாயநத்தைப்பண்ணக்கடவனுன சந்த்ரனும், அவனுல்வந்த நீர்க்களிப்பை யறுத்துக்கொடுக்கு மாதித்யனுமாய். (செழும்பல்சுடராய்) சேதநர்க்குவரும் லாபாலாபங்களையறிகைக்கீடான சஞ்சாரத்தையுடைத்தான நக்ஷத்ரங்களுமாய். (இருளாய்) சேதநர்க்கு போகயோக்யமானவிருளாய். ( பொங்குபொழிமழையாய் ) சகலப்ராணிகளுக்கும் ஜீவிக்கலாம்படி ஸஸ்யங்களையுண்டாக்கும் வர்ஷமுமாய். (புகழாய்) எல்லாருமாசைப்படும் யஶஸ்ஸாய். (பழியாய்) எல்

லார்க்கும் வருந்திப் பரிஹரிக்கவேண்டும்படியாய்.(பின்னும்)அதுக்குமே லே. (வெங்கண்வெங்கூற்றமுமாய்) "வ-ாரஹ-ுகூாஜேஃ-ாரஜவூவ-ு ஹ-ுதஹிதொ தஃ। நகெுரயவஸாவஃளஃவு௵ுதிஂஹா தஃஹெ-ுவஷி" (புராபூத்வாம்ருதுர்த்தாந்தஸ்ஸர்வபூதஹிதேரதஃ। நக்ரோதவஸமாபந்நஃ ப்ரக்ருதிம்ஹாதுமர்ஹஸி) என்கிறபடியே, இவை யதிப்ரவ்ருத்தமானவா றே குளிரநோக்குமதுதவிர்ந்து, வெவ்விதானநோக்கையுடையையாய். (வெங்கூற்றம்) அந்தகன் "தண்ணீர்" என்னும்படி வெவ்வியகூற்றமு மாய். சம்ஹாரத்தில் ருத்ராத்யந்தர்யாமித்வத்தைச்சொன்னபடி. (இ வையென்னவிசித்திரமே) இவையென்ன வைசித்ரிதான்-அருளாய்......*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு. (அங்கணித்யாதி) "திங்களும்நாயிறுமாய்" இத்யாதி யைக்கடாக்ஷித்தவதாரிகை (சந்த்ரசூர்யாதித்யாதி)

"கண்" என்றது - கள்ளென்றபடி. "அச்சுதன்" என்றதுக்கர்த்தம் (அந் தவொப்பனையித்யாதி) விபூத்யநுபவத்திலே ஒப்பனை யழகைச் சொல்லுவானென் னென்ன (வைத்தவளையத்தித்யாதி) பரிஹாராந்தரம் (கீழிலித்யாதி) கீழில்திரு வாய்மொழியிலே பாதகமானத்தை தாரகமாக வநுபவிக்கிற வித்திருவாய்மொழி யிலே ஸ்மரிக்கக்கூடுமோவென்ன (மாயன்குழலித்யாதி)

சந்த்ரசூர்யர்களுக்கு வைசித்ரியேதென்ன (சூர்யாம்ஸுஜநிதமித்யாதி) "ஸ-ுாாஂஸுஜநிதஂதாவஂநிநெுதாஸாவதிஸ்ஷூ। சுஹஂஶாநெநா ஜவஂஜஃவஂவிவெகஹா நிவ" (ஸூர்யாம்ஸுஜநிதம்தாபம் நிந்யேதா ராபதிஸ்ஸமம்। அஹம்மாநோத்பவம்துஃகம்விவேகஸ்ஸுமஹாநிவ) இதிபஞ்சமேம் ஸே தஸமே ஸரத்காலவர்ணநே பராஸரஃ. "செழும்" என்று - அழகு. நக்ஷத்ரங் களுக்கழகேதென்ன (சேதநர்க்கித்யாதி) அந்தகாரத்துக்கு வைசித்ரியேதென்ன (சேதநர்க்குபோகேத்யாதி) "பொங்குபொழிமழை -" பொங்காநின்றுகொண்டு பொழியும் மழையென்று சப்தார்த்தம். வர்ஷத்துக் காஸ்சர்யமேதென்ன (சகல ப்ராணிகளுக்கு மித்யாதி) கீர்த்திக்காஸ்சர்யமேதென்ன (எல்லாருமித்யாதி) பழி க்காஸ்சர்யமேதென்ன (எல்லார்க்குமித்யாதி) "வெவ்விதான வீக்ஷணத்தையுடை யவன்" என்னுமதுக்கு ப்ரமாணம் (புராபூத்வேத்யாதி) "வ-ாரஹ-ுகூாஜேஃ-ாரஜவூவ-ுஹ-ுதஹிதொ தஃ। நகெுரயவஸாவஃளஃவு௵ுதிஂஹா தஃஹெ-ுவஷி" (புராபூத்வாம்ருதுர்த்தாந்தஸ்ஸர்வபூதஹிதேரதஃ। நக்ரோதவஸ மாபந்நஃப்ரக்ருதிம்ஹாதுமர்ஹஸி) இத்யாரண்யகாண்டே ராமம்ப்ரதிலக்ஷ்மணஃ.

அங்கண்மலர்த்தண்டுழாய்முடியச்சுதனே-திங்களுமென்றுதொடங்கி, விசி த்திரமே - அருளாயித்யந்வயஃ.........................................................*

---

## மூன்றாம்பாட்டு.

---

சித்திரத்தேர்வலவாதிருச்சக்கரத்தாயருளா
யெத்தனையோருகமுமவையாயவற்றுள்ளியலு
மொத்தவொண்பல்பொருள்களுலப்பில்லனவாய்வியவாய்
வித்தகத்தாய்நிற்றிநீயிவையென்னவிடமங்களே.

## ஆறாயிரப்படி.

( சித்திரத்தேர்வலவா ) சாரத்யம்பண்ணும்போது, அத்யாச்சர்யமாம்படி தேரைநடத்தவல்லவனே ; ஜயத்ரதவதத்தினன்று பகலை யிரவாக்கின வத்யாச்சர்யமான திருவாழியையுடையவனே; க்ருதாதிகளான வநேகயுகங்களையும், அவ்வவகாலங்களிலுண்டாயோரோவகையாலே யொத்தும், ஓரோவகையாலே வேறுபட்டும், தேவமநுஷ்யாதி ரூபேண பலவாய், ப்ரதிவ்யக்த்யஸங்க்யமான பதார்த்தங்களையும் விபூதியாகவுடையையாய், இப்படி விஸ்மயநீயனாய் நில்லாநின்றாய், இவையென்னசேராச்சேர்த்திகளென்கிறார்.............................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், உத்துங்கனாய்வைத்து ஆஸ்ரிதபரதந்த்ரனாயிருக்கிற நீ, காலோபலக்ஷித சகலபதார்த்தங்களுமாயிருக்க, அவற்றோடு தொற்றற்றுநிற்கிற வைஷம்யத்தை யருளிச்செய்யவேணுமென்கிறார்.

அவஸ்த்தாநுரூபமாக, சித்திரம் - விசித்ரமாம்படி. தேர் - தேரை. வலவா - நடத்தவல்லனாய். திருச்சக்கரத்தாய் - அந்த வைசித்ர்யம்போலே பகலையிரவாக்கும்பரிகரமான திருவாழியை யுடையவனே. அருளாய் - நீ யருளிச்செய்யவேணும். எத்தனை - க்ருத த்ரேதா த்வாபர கலிரூபமான வெல்லாவகையையு முடைத்தாய். ஓர் - ஒன்றோடொன்றொவ்வாதபடி அத்விதீயமான. உகமும் - யுகங்களுக்கு நிர்வாஹகனாய். அவையாய் - அந்த காலகால்யமாய்க்கொண்டு. அவற்றுள் - அதுக்குள்ளே. இயலும் - நடப்பதாய். ஒத்த - ஜ்ஞாநைகாகாரதயாவொத்து. ஒண் - ஸ்வயம்ப்ரகாசத்வ ஜ்ஞாத்ருத்வாதி குணவைலக்ஷண்யத்தையுடைத்தாய். பல்- "ஏகோ வஹூநாம்" (ஏகோபஹூநாம்) என்கிற மர்யாதையாலே ஸ்வரூபபேதத்தையுடைத்தாய். உலப்பில்லன - அஸங்க்யாதமான. பொருள்கள் - சிதசித்பதார்த்தங்களை. ஆய் - ப்ரகாரமாக வுடையையாய். வியவு - அவற்றினுடைய சாம்யாகார திரோதாயகமான தேவமநுஷ்யாத்யாகாரங்களாலுண்டான வேறுபாட்டுக்கு. ஆய்- நிர்வாஹகனாய். இப்படியிருக்கச்செய்தே, வித்தகத்தால்- " நமஸ்திதாநிபூதாநி," (நமஸ்த்திதாநிபூதாநி,) " நசாஹந்தேஷ்வவஸ்த்திதஃ" (நசாஹந்தேஷ்வவஸ்த்திதஃ) என்கிறகணக்கிலே தத்கததோஷாஸம்ஸ்ப்ருஷ்டனான விஸ்மயநீயதையோடே. நீ - நீ. நிற்றி - நில்லாநின்றாய். இவை - இவை. என்ன - என்ன. விடமங்கள் - வைஷம்யங்கள். .............................................*

## ஈடு - மூன்றாம்பாட்டு.

க்ருத த்ரேதாதியுகங்களையும், அவ்வவகாலங்களிலுண்டான தேவமநுஷ்யாதிகளையும் விபூதியாகவுடையவனென்கிறார்.

( சித்திரத்தேர்வலவா ) விசித்ரமாம்படியாகத் தேரைநடத்தவல்லவனே. வைசித்ரியாவது - த்ரோணன் கையுமணியும் வகுத்து வாசலைப்பற்றிநிற்க, அவனைவளைந்து அவனுக்கவ்வருகே தேரைக்கொடுபோய்நிறுத்தி அவனுக்கு வ்யாபரிக்கைக்கிட மறுத்தானாயிற்று. பீஷ்மன்கையில

ம்பு தூரப்போய்விழும், அர்ஜுநன்கையிலம்பு இவ்வருகேவிழும்; ஆகை யாலே, அவனம்புவிடப்புக்கவாறே தேரைப் பின்னே கழலக்கொடுபோ யும், இவனம்புவிடப்புக்கவாறே தேரைக்கிட்ட நிறுத்தியும். இப்படிதே ரைநடத்தும்படியைப்பற்ற - சித்திரத்தேர்வலவாவென்கிறது. (திருச்சக் கரத்தாய்) பகலையிரவாக்கும் பரிகரத்தையுடையவனே.

(எத்தனையோருகமுமவையாய்) க்ருதாதியுகங்களுக்கெல்லாம்நி ர்வாஹகனாய். (அவற்றுள்ளியலும்) அவற்றுக்குள்ளேவர்த்திக்கிற. (ஒத் தவித்யாதி) (ஒத்திருப்பதுமாய் - வியவாயிருப்பதுமான - ஒண்பல்பொ ருள்களுலப்பில்லனவாய்.) ஓராகாரத்தாலே யொத்தும், ஆகாராந்தரத் தாலே வேறுபட்டுமிருப்பனவுமாய், விலக்ஷணமுமான பலவகைப்பட்ட பதார்த்தங்களநேகங்களை யுடையையாய். தேவமநுஷ்யாதி ஜாதியாலே யொத்தும், வ்யக்திபேதத்தாலே வேறுபட்டும், சகலாத்மாக்களும்ஜ்ஞா னைகாகாரதயா ஒத்திருக்கச் செய்தேயும், அஹம்த்வமாதிபேதத்தாலே பிந்நராயிருப்பர்களிறே. (வித்தகத்தாய்நிற்றிநீ) இப்படி விஸ்மயநீயனாய்க் கொண்டு நில்லாநின்றாய் நீ.

(இவையென்னவிடமங்களே) இவையென்ன சேராச் சேர்த்தி யான செயல்கள்தான்..............................................................*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு. (சித்திரத்தேரித்யாதி) "எத்தனையோருகமும்" என்று தொடங்கி "உலப்பில்லனவாய்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (க்ருதத்ரே தாதீத்யாதி)

சப்தார்த்தம் (விசித்ரமாம்படியித்யாதி) தேரை நடத்துகையிலுண்டான வைசித்ரியை யிரண்டுவகையாக வருளிச்செய்கிறார் (வைசித்ரியாவதித்யாதிவாக்ய த்ரயத்தாலே) கையுமணியும் வகுத்து - யுத்தத்திலே வ்யூஹவிபாகம்பண்ணி. (கிட் டநிறுத்தியும்) என்றவநந்தரம், செய்தவிது என்றத்யாஹரிப்பது. "சித்திரத்தேர்வ லவா" என்றவநந்தரம் "திருச்சக்கரத்தாய்" என்கையாலே பலித்தவர்த்தம் (ப கலையிரவாக்குமித்யாதி) இதுவுமொரு வைசித்ரியென்று கருத்து.

"ஒத்து - வியவாயிருக்கிற - ஒண்பல்பொருள்களுலப்பில்லனவாய்" என்ற ந்வயித்தர்த்தம் (ஓராகாரத்தாலேயித்யாதி) "உலப்பில்லனவாய்" என்றதுக்கு-மு டிவின்றிக்கே அஸங்க்யாதமான வென்றர்த்தமாகையாலே (அநேகங்களையுடையை யாய்) என்கிறார். ஆக, ஒத்திருப்பதுமாய் - வியவாயிருப்பதுமாய் - உலப்பில்லன வான - ஒண்பல்பொருள்களை யுடையையாய்க்கொண்டு - வித்தகத்தாய் நிற்றிநீயெ ன்றபடி. விவரணம் (தேவமநுஷ்யாதீத்யாதி) அர்த்தாந்தரம் (சகலாத்மாக்களு மித்யாதி)

விடமங்கள் - விஷமங்கள். விசித்ரங்களென்றபடி.

சித்திரத்தேர்வலவா, திருச்சக்கரத்தாய் - எத்தனையோருகமுமவையாயவற் றுள்ளியலும், ஒத்து - வியவாயிருக்கிற - ஒண்பல்பொருள்களுலப்பில்லனவாய்-வி த்தகத்தாய் நிற்றிநீ, இவையென்னவிடமங்கள் - அருளாயிந்யந்வய:...............*

# நான்காம்பாட்டு.

கள்ளவிழ்தாமரைக்கட்கண்ணனேயெனக்கொன்றருளா
யுள்ளதுமில்லதுமாயுலப்பில்லனவாய்வியவாய்
வெள்ளத்தடங்கடலுள்விடநாகணைமேன்மருவி
யுள்ளப்பல்யோகுசெய்தியிவையென்னவுபாயங்களே.

## ஆறாயிரப்படி.

(கள்ளவிழ்) மதுஸ்யந்தியான தாமரைபோன்ற திருக்கண்களை யுடைய கண்ணனே எனக்கொன்றருளிச் செய்யவேணும். நித்யமாயிருக்கையாலே யுண்டென்றுசொல்லலாம் சேதநனும், பரிணமஸ்வபாவமாய்க்கொண்டு ப்ரதிக்ஷணமவஸ்த்தாந்தர பாக்காகையாலே யில்லையென்னலாம் ப்ரக்ருதியுமாய், வெள்ளத்தடங்கடலுள் விடநாகணைமேல் மருவி, திருவுள்ளத்தாலே பலரக்ஷணசிந்தைகளைப் பண்ணுகிற்றி, இவையென்னவிரகுக ளென்கிறார் ......................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், பரத்வ ஸௌலப்யரூபமான போக்யதை தோன்றும்படி புண்டரீகாக்ஷனான நீ, நித்யா நித்ய சமஸ்த பதார்த்தங்களையும் ப்ரகாரமாகவுடையையாய், அவற்றினுடைய ரக்ஷண சிந்தை பண்ணுகிற வுபாயமிருக்கிறபடி யென்னென்கிறார்.

கள் - மதுவை. அவிழ் - மலருகிற. தாமரை - செவ்வித்தாமரைப் பூப்போலேயிருக்கிற. கண் - திருக்கண்களையுடையனான. கண்ணனே - க்ருஷ்ணனே. எனக்கு, நீ நினைக்கிற ரக்ஷணோபாயங்க ளின்னதென்று, ஒன்று - ஒன்றை. அருளாய் - அருளிச்செய்யவேணும். உள்ளதும் - நித்யமாகையாலே யென்றுமுள்ளதாய். இல்லதுமாய் - அவஸ்த்தாந்தர பாக்காகையாலே யில்லாமையையுடைத்தாய். உலப்பில்லனவாய் - அசங்க்யாதமாய். வியவாய் - அவாந்தரமான வேறுபாட்டையுடைத்தாயிருக்கிற பதார்த்தங்களை ப்ரகாரமாகவுடையையாய். இந்தசகல சேதநாசேதநங்களையும் ரக்ஷிக்கைக்காக, வெள்ளம் - பூர்ணமாய். தடம் - இடமுடைத்தான. கடலுள் - க்ஷீரார்ணவத்திலே. விடம் விரோதிகளுக் கநபிபவநீயனாம்படி விஷத்தையுமிழுகிற. நாகணைமேல் - திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலே. மருவி - மேவி. உள்ளம் - திருவுள்ளத்திலே. பல் - பஹுவிதமான. யோகு - ரக்ஷணயோகங்களை. செய்தி - சிந்தியாநின்றாய். இவை - இவை. என்ன - என்ன. உபாயங்கள் - உபாயங்களாயிருக்கிறன.

அவதரணோபாயமோ, அநிஷ்டநிவ்ருத்த்யுபாயமோ, அபிமத ப்ரதாநோபாயமோ, ஆஶ்ரிதசம்ஶ்லேஷோபாயமோ, ஆவர்ஜநோபாயமோ வென்றறிகிறிலேன்; ஒன்றை நிஷ்கர்ஷித்தருளிச்செய்யவேணுமென்று கருத்து.

யோகு-உபாயம்..........................................................*

## ஈடு - நான்காம்பாட்டு.

லோகத்தில் நித்யாநித்ய பதார்த்தங்களை விபூதியாகவுடையனாயிருக்கிறபடியை யருளிச்செய்கிறார்

(கள்ளவிழித்யாதி) அப்போதலர்ந்த தாமரைப்பூப்போலே யிருக்கிற திருக்கண்களையுடையனாய் பவ்யனாயிருக்கிறவனே. அவனுடைய தி

ருக்கண்கள்போலே யாயிற்றிவர்க்கு விபூதியுமாகர்ஷகமா யிருக்கிறபடி. அன்றிக்கே, திருக்கண்களோபாதி பாதகமாகாநின்ற தாயிற்று விபூத்யநுபவமுமிவர்க்கு. பாதகமாகையாவதென்னென்னில்; "இன்னது" என்று நிஶ்சயிக்கமாட்டாதே சம்சயித்துப்பட்ட தொருக்லேஶமுண்டிறே, அதுவும் பாதகமாயிருக்குமிறே. "கீழ்த்திருவாய்மொழியிலே – 'சூழவுந்தாமரை நாண்மலர்போல்வந்து தோன்றும்' என்றத்தை ஸ்மரிக்கிறார்" என்றுபிள்ளான் பணிக்கும். அத்தைஜீயர்கேட்டருளி, "கீழோடுகிறரீதியின்படியே யிதுவுமாகப்பெற்றதாகிலழகிது, அங்ஙனன்றிக்கே, இதுரசாந்தரமா யறிவுண்டானபின்பு ப்ரகரணத்தோடு பொருந்தமாட்டாது" என்றருளிச்செய்தாராம்.

(உள்ளதுமித்யாதி) உலப்பில்லனவாய்க்கொண்டு உள்ளதுமாய், வியவாய்க்கொண்டு இல்லதுமா யிருந்துள்ள சேதநாசேதநங்களுக்கு நிர்வாஹகனாய். "யத்துகாலாந்தரேணாபி நாந்யஸம்ஜ்ஞாமுபைதிவை । பரிணாமாதிஸம்பூதாம் தத்வஸ்து ந்ருபதச்சகிம்" (யத்துகாலாந்தரேணாபி நாந்யஸம்ஜ்ஞாமுபைதிவை । பரிணாமாதி ஸம்பூதாம் தத்வஸ்து ந்ருபதச்சகிம்) என்கிறபடியே, அசித்து நஶ்வரமா யிருக்கையாலே யில்லதென்றுசொல்லலாயிருக்கும்; ஆத்மவஸ்து ஏகரூபமாயிருக்கையாலே உள்ளதென்கிறது. (வெள்ளத்தடங்கடலு ளித்யாதி) திருப்பாற்கடலிலே, ப்ரதிகூலர்க்குக் கிட்டவொண்ணாதபடி விஷத்தை யுமிழாநின்றுள்ள திருவநந்தாழ்வான்மேலே பொருந்தி. "ஆங்காரவாரமது கேட்டழலுமிழும் - பூங்காரரவணையான்" என்கிறபடியே, அஸ்தாநே பயஶங்கைபண்ணி யழலுமிழுமவனிறே. (உள்ளப்பல்யோகுசெய்தி) திருவுள்ளத்திலே பலரக்ஷண சிந்தைபண்ணாநிற்றி. சேதநபேதத்தோபாதியும் போருமாயிற்று அவன் பண்ணும் ரக்ஷணசிந்தையில் பரப்பு. இப்போதிது கீழோடும் மேலோடுமந்வயிக்கிறபடி யென்னென்னில்; அசித்தாவது நஶ்வரமாய்க்கொண்டு த்யாஜ்யமாயிருக்கும், ஆத்மவஸ்து ஏகரூபமாய்க்கொண் டுபாதேயமாயிருக்கும், இவையிரண்டுக்கும் நியந்தாவாயிருக்கு மீஶ்வரன். "இச்சேதநன்றானும், தான் பண்ணிற்றொரு கர்மமும் 'தனக்கு' என்னவொரு ருசியுமாயிருக்கையாலே, இவன், 'தனக்கு' என்னவோரிச்சைபிறக்கிலல்லது நம்மைப்பெற விரகற்றிருந்தது; இவனுக்கோ அதில்லையாயிராநின்றது; இனிச்செய்யும்படியென்" என்று, இவன், "இந்நின்றநீர்மையினியாமுறாமை" என்றால்செய்யுமத்தை, இவன்றலையிலிசைவின்றிக்கே யிருக்கச்செய்தே, "இவன்நம்மைவந்து கிட்டினனும் விரகேதோ" என்று, அதுக்குறுப்பாக வுபாயசிந்தைபண்ணிக்கண்வளர்ந்தருளுகிறபடி.

(இவையென்னவுபாயங்களே) சேதநர் பலரானால் அவ்வவருடைய ரக்ஷணங்களும் பலவாயிறேயிருப்பது; அதுக்கீடான வுபாயமு மறியுமே சர்வஜ்ஞனாகையாலே. இவையென்னவிரகுகளே.....................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு (கள்ளவிழித்யாதி) "உள்ளதுமில்லதுமாய்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை (லோகத்திலித்யாதி)

விபூதியையநுசந்திக்கிற விடத்திலே கண்ணழகைச் சொல்லுவானென்னென்ன (அவனுடைய வித்யாதி) பரிஹாராந்தரம் (அன்றிக்கேதிருக்கண்களித்யாதி) விஶ்லேஷ வேளையிலேயன்றோ விபூத்யநுபவம் பாதகமாயிருப்பது, இப்போதுபாதகமாகிறபடி யென்னென்கிற சங்கையையநுவதித்து பரிஹரிக்கிறார் (பாதகமாகையாவதித்யாதி வாக்யத்வயத்தாலே) அதாவது - "முடிச்சோதியாய்" இத்யாதிப்படியே சந்தேஹமாய்க்கொண்டு பாதகமாகிறதென்றுகருத்து, சம்ஶயித்துப்பட்டதொரு க்லேஶமென்றது - * முடிச்சோதிப்படியே சம்சயித்துப்பட்டதொரு க்லேஶமென்றபடி. பிள்ளான்நிர்வாஹம் (கீழிலித்யாதி) இதுக்கு நஞ்ஜீயரருளிச்செய்யும்படியை யருளிச்செய்கிறார் (அத்ரத்யமித்யாதி)

"உலப்பில்லன-" நாசமின்றிக்கேயிருக்கிற. நித்யமானவென்றபடி. கீழிற்பாட்டிலே, "உலப்பில்லனவாய்" என்றது-அசங்க்யாதமாயென்றபடி. "வியவாய்" என்றது-வீயவாயென்றபடியாய், நஶ்வரமாயென்றபடி.

சேதநாசேதநங்களை "உள்ளதுமில்லதுமாய்" என்கிறது-ஏகரூபத்வத்தையும், பரிணமித்வத்தையும்பற்ற. இத்தை ப்ரமாணமுகேந தர்ஶிப்பிக்கிறார் (யத்துகாலாந்தரேணேத்யாதி) த்விதீயேம்ஶே த்ரயோதஶே ஸௌவீரராஜம்ப்ரதி ஆதிபரதஃ, "யத்து காலாந்தரேணாபி நாந்யஸம்ஜ்ஞாமுபைதி வை । பரிணாமாதி ஸம்பூதாம் தத்வஸ்து ந்ருப தச்ச கிம்." (யத்துகாலாந்தரேணாபிநாந்யஸம்ஜ்ஞாமுபைதிவை । பரிணாமாதி ஸம்பூதாம்தத்வஸ்துந்ருபதச்சகிம். )

அப்படிவிஷத்தை யுமிழுவனேவென்ன (ஆங்காரவாரமித்யாதி)

"பல்யோகு" என்றதுக்குபாவம் (சேதநபேதத்தித்யாதி) கீழும்மேலும் விபூதியோகத்தைச் சொல்லாநிற்க, நடுவேயுபாயசிந்தையைச் சொல்லுவானென்னென்ன; சேதநாசேதநப்ரசங்கத்திலே உபாயசிந்தை ப்ராசங்கிகமாக வந்ததென்கிறார் (இப்போதித்யாதி, கண்வளர்ந்தருளுகிறபடி யென்னுமளவாலே) உள்ளத்திலே பலவுபாயசிந்தை பண்ணுவுதியென்று சப்தார்த்தம்.

பஹுவசநார்த்தம் (சேதநரித்யாதி)

கள்ளவிழ்தாமரைக்கட்கண்ணனே - உலப்பில்லனவாய்க்கொண்டு - உள்ளதுமாய் - வியவாய்க்கொண்டு - இல்லதுமாய் - வெள்ளத்தடங்கடலு ளென்றுதொடங்கி, உபாயங்களே - எனக்கொன்றருளா யித்யந்வயஃ ............ ................*

---

# ஐந்தாம்பாட்டு.

---

பாசங்கணீக்கியென்னையுனக்கேயறக்கொண்டிட்டுநீ
வாசமலர்த்தண்டுழாய்முடிமாயவனேயருளாய்
காயமுஞ்சீவனுமாய்க்கழிவாய்ப்பிறப்பாய்ப்பின்னுநீ
மாயங்கள்செய்துவைத்தியிவையென்னமயக்குக்களே.

## ஆறுயிரப்படி.

(பாசங்கணீக்கி) ஸுஜாதபரிமளதுளஸீதள பூஷிதமான திருமுடியையுடையையாய், அத்யாஶ்சர்யபூதனனநீ, ப்ராக்ருதவிஷய ப்ராவண்யத்தைத்தவிர்த்து த்வதேகதாரகனும்படி யென்னைப்பண்ணிவைத்து, பின்னையு மிப்ப்ரக்ருதியிலேயிட்டுவைக்கிற வாஶ்சர்யத்தை யருளிச்செய்யவேணும். சரீரஜீவஜந்மமரணாதி நிர்வாஹகனாய், அவித்யாதிகளாகிற வஞ்சநங்களைப்பண்ணி வையாநின்றாய்; இவையென்ன துர்ஜ்ஞேய ப்ரவ்ருத்திகளென்கிறார்.........................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், என்னை யநந்யப்ரயோஜநனும்படிபண்ணு மதிசயிதபோக்யதையையுடையநீ, சரீராத்மாக்களுடைய சம்பந்தமும் உத்பத்திவிநாசமும் நீயிட்டவழக்காயிருக்க, அதிலே யகப்படுத்திவைக்கிற ப்ரகாரங்களென்ன ப்ரமங்களாயிருக்கிறனவென்கிறார்.

என்னை - த்வதேகசேஷமாய் த்வதேகரக்ஷ்யமான ஸ்வரூபத்தையுடையவென்னை. பாசங்கள் - அநநுரூபவிஷயஸங்கங்களை. நீக்கி-கழித்து. "தனக்கேயாகவெனைக்கொள்ளுமீதே" என்னும்படி, உனக்கேயற-த்வதேகப்ரயோஜநனாக. கொண்டிட்டு-அங்கீகரித்துவைத்து. வாசம்-அந்த அநந்யப்ரயோஜநத்வாபாதகமாய் பரிமளப்ரசுரமான. மலர்-பூவையுடைய. தண்டுழாய் - செவ்வித்திருத்துழாயாலே யலங்க்ருதமான. முடி-மயிர்முடியையுடைய. மாயவனே - ஆஶ்சர்யபோக்யபூதனே. நீ-ரக்ஷகனுமாய் போக்யனுமானநீ. காயமும்-பந்தகஶரீரமும். சீவனும் - பத்தஜீவனும். கழிவுபிறப்பு - இவற்றுக்குவரக்கடவதான விநாசோத்பத்திகளும். ஆய்-நீயிட்டவழக்காம்படியாயிருக்க. பின்னும்-பின்னையும். நீ, சரீராதிகளிலே சக்தனும்படி, மாயங்கள் - அவித்யாகர்மவாஸநாருசிகளாகிற வஞ்சநங்களை, செய்து - பண்ணி. வைத்தி-வையாநின்றாய். இவை-இவை. என்ன-என்ன. மயக்குக்கள்-ப்ராமகவ்யாபாரங்களாயிருக்கிறன. அருளாய் - அருளிச்செய்யவேணும்..........................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

இத்திருவாய்மொழிக்கு நிதாநமான பாட்டாயிற்றிது. அதாவது- * மயர்வறமதிநலமருளி, பின்னையும் எனக்குப்பொருந்தாதபடியான சம்சாரத்திலே யென்னைவைத்து ஜீவிப்பித்துக் கொடுபோருகிற விவ்வாஶ்சர்ய மிருந்தபடியை யெனக்கருளிச்செய்யவேணுமென்கிறார்.

( பாசங்கள்நீக்கி ) மயர்வையறுத்து. அவித்யாதிகளைப்போக்கி. * பலசெய்வினைவன்கயிற்றால் சூழ்த்துக்கொண்டத்தைநீக்கி. ( என்னை ) விஷயாந்தரங்களிலே கால்தாழ்ந்திருக்கிறவென்னை. (உனக்கேயறக்கொண்டிட்டு) * துயரறுசுடரடிதொழும்படியாகப்பண்ணி. பாசங்கள்நீக்கிற்றும் தனக்கேயறக்கொண்டது மெத்தைக்காட்டியென்னில் (வாசமலரித்யாதி) வைத்தவளையத்தி லழகைக்காட்டியாயிற்று, புறம்புண்டான பற்றறுத்ததும், தனக்கேயாம்படியாகப்பண்ணிற்றும். (பரிமளத்தையுடைத்தாய் மலரோடேகூடின ஶ்ரமஹரமான திருத்துழாய்மாலையைத் திருமு

டியிலேயுடைய வாஸ்சர்ய சௌந்தர்யயுக்தனே. (அருளாய்) இவ்வளவு புகுரநின்ற வென்னையிங்கேயிட்டுவைத்து நலியவோ.) (காயமித்யாதி) சரீரமும் ஆத்மாவுமாய், உத்பத்திவிநாசங்களுமாய். (பின்னுமித்யாதி) உன்பக்கலிலே யறிவைப்பிறப்பித்து, பின்னையுமிதில் பொருந்தாதபடியான வென்னை சம்சாரத்திலே வையாநின்ருய். (இவையென்னமயக்குக்களே) இவையென்ன தெரியாச்செயல்கள்தாம். புறம்புண்டானபற்றையறுத் துன்பக்கலிலே சங்கத்தைப் பிறப்பிக்கையாலே நீ யங்கீகரித்தாயோவென்றிராநின்றேன், பின்னையு மிஸ்ஸம்ஸாரத்திலே வைக்கையாலே கைவிடநினைத்தாயோ வென்றிராநின்றேன், இதென்னப்ரமம் ............. ...*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (பாசங்களித்யாதி) ஆஸ்சர்ய ஜகதாகாரதையை யநுபவிப்பிக்கைக்கு ப்ரசங்கம் சொல்லுகிறதாகையாலே யிது நிதாநப்பாட்டென்கிருர் (இத்திருவாய்மொழிக்கித்யாதி) விவரணம் (அதாவதித்யாதி)

பலித்தவர்த்தம் (மயர்வையறுத்தென்று) பஹுவசநார்த்தம் (அவித்யாதிகளையித்யாதி) இவைபாசங்களோவென்ன (பலசெய்வினையித்யாதி) "உனக்கேயறக்கொண்டிட்டு" என்றதுக்கு - உனக்கே யநந்யார்ஹனுய் கைங்கர்யத்திலே யத்யவசிதனும்படி பண்ணியென்று சப்தார்த்தமாகையாலே, அத்தையருளிச்செய்கிருர் (துயரறுவித்யாதி)

கழிவு - விநாசம்.

விவரணம் (புறம்புண்டானவித்யாதி)

காயமும் சீவனுமாய்க்கழிவாய்ப்பிறப்பாயிருக்கிற-வாசமலர்த்தண்டுழாய்முடிமாயவனே-நீ-பாசங்கள்நீக்கியென்னை யுனக்கேயறக்கொண்டிட்டுநீ-பின்னும்-மாயங்கள்செய்துவைத்தி, இவையென்ன மயக்குக்கள் - அருளாயித்யந்வயঃ .........*

# ஆறும்பாட்டு.

மயக்காவாமனனேமதியாம்வண்ணமொன்றருளா
யயர்ப்பாய்த்தேற்றமுமாயழலாய்க்குளிராய்வியவாய்
வியப்பாய்வென்றிகளாய்வினையாய்ப்பயனுய்ப்பின்னுநீ
துயக்காநீநின்றவாறிவையென்னதுயரங்களே.

## ஆறுயிரப்படி.

( மயக்காவாமனனே ) ஸ்ரீவாமநனுன வழகாலே பிச்சேற்றி, நினைத்தது முடித்துக்கொள்ளவல்ல விரகனுன நீ, தெளிவுடையேனும்படியொன்றுபண்ணியருளாய். அஜ்ஞாநஜ்ஞாநோஷ்ண சீதவிஸ்மயநீய விஸ்மயஜய பாவபுண்ய தத்பல நிர்வாஹகனுய். அதுக்குமேலே, அந்யதாஜ்ஞாநாதிஜநகனுய் நீ நின்ற ப்ரகாரமென்ன துஃகாத்மகங்களென்கிருர்....*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ப்ராமகசேஷ்டிதங்களையுடைய வாமநனனநீ, விஸ்ம்ருத்யாதிவி சித்ரனாய்க்கொண்டு பண்ணுகிற க்லேசங்க ளென்னுயிருக்கிறனவென்கிறார்.

மயக்கா-வடிவாலும் நடையாலும் உக்தியாலும் மஹாபலியினுடையநெஞ்சு ப்ரமிக்கும்படிபண்ணின. வாமனனே-வாமநனே. மதியாம்வண்ணம்-எனக்குக்கல க்கந்தீர்ந்து அறிவுண்டாம்படி. ஒன்று, அருளாய்-அருளிச்செய்யவேணும். அயர்ப் பு-மறப்பும். தேற்றமும்-தெளிவும். ஆய்-நீயிட்டவழக்காய். அழல்-தாபமும். குளிர்-சைத்யமும். ஆய்-நீயிட்டவழக்காய். வியவு-விஸ்மயநீயமும். வியப்பு - விஸ்மயமும். ஆய்-நீயிட்டவழக்காய். வென்றிகள்-லோகத்தில் விஜயஸித்திகளும். ஆய்-நீயிட்ட வழக்காய். வினை-புண்யபாபரூபகர்மங்களும். பயன்-தத்தத்பலங்களும். ஆய்-நீயிட் டவழக்காய். பின்னும்-அதுக்குமேலே. துயக்கு-இவற்றிலே சேதநர் கலங்குகிறகல க்கமும். நீயாய்-நீயிட்டவழக்காய். நீ, நின்ற-இம்முகத்தாலே லீலாரஸிகனாய்க்கொ ண்டுநிற்கிற. ஆறு-ப்ரகாரங்களான. இவை-இவை. ஜகத்துக்கு, என்ன-என்ன. து யரங்கள்-க்லேஶங்களாயிருக்கிறன.

வியவு-வியக்கப்பட்டன. வியப்பு-விஸ்மயமாயிருந்தவையும், மிகுதலுமாம்.*

## ஈடு - ஆறும்பாட்டு.

விஸ்மரணாதிவிருத்தபதார்த்தங்களை விபூதியாகவுடையனாயிருக்கி றபடியை யருளிச்செய்கிறார்.

(மயக்கா) இன்னுமொன்றின்றிக்கே, ஆரேனுமாகக் கிட்டினாரை ம யங்கப்பண்ணுமவனே. அதெங்கேகண்டோமென்னில் (வாமனனே) தே வகார்யம் செய்யப்போந்தநீ, அந்ததேவர்களை நெருக்கின மஹாபலிதா னே நெஞ்சுநெகிழ்ந்துன்கையிலே நீரைவார்த்துத்தானே 'யிசைந்துதரு ம்படி மயங்கப்பண்ணினவனே. "மன்னைமனங்கொள்ளவஞ்சித்து நெஞ் சுருக்கி" என்கிறபடியே. (மதியாமித்யாதி) அநுகூல ப்ரதிகூல விபாக மற மயங்கப்பண்ணாதே, நான் தெளிவையுடையேனாம்படிபண்ணியருள வேணும். (அயர்ப்பாய்த் தேற்றமுமாய்) "ꠅꠅꠅ" (மத்தஸ்ஸ்ம்ருதிர்ஜ்ஞாநமபோஹநஞ்ச) என்றானிறேதானே. வி ஸ்ம்ருதியும் தெளிவுமாய். இவ்விடத்தில் விருத்தாகாரத்தைச்சொல்லுகி றதல்ல, விசித்ராகாரத்தைச்சொல்லுகிறது. (அழலாய்க்குளிராய்) சீ தோஷ்ணங்களாய். (வியவாய் வியப்பாய்) விஸ்மய விஸ்மயநீயங்களாய். (வென்றிகளாய்) விஜயங்களாய். (வினையாய்ப்பயனாய்) புண்யபாபகர்மங் களாய், அவற்றினுடைய பலங்களுமாய். (பின்னும் நீதுயக்கா) அதுக்கு மேலே, உன்னையாஶ்ரயித்தாரும் மதிகலங்கும்படி, அந்யதாஜ்ஞாநவிப ரீதஜ்ஞாநங்களைப்பண்ண. (நீநின்றவாறு) நீநின்றப்ரகாரம். (இவையெ ன்னதுயரங்களே) உனக்கிவைதம்மி லருமையின்றிக்கே லீலையாயிராநி ன்றது, எங்களுக்கவைதாம் துஃகாத்மகமாயிராநின்றன ................*

## ஜீயர் அரும்பதம்.

ஆரும்பாட்டு (மயக்காவித்யாதி) "அயர்ப்பாய்த்தேற்றமுமாய்" என்றத்தை க்கடாக்ஷித்தவதாரிகை (விஸ்மரணுதீத்யாதி)

ப்ரதியோகியைச்சொல்லாமைக்குபாவம் ( இன்ணுரித்யாதி ) மஹாபலியை மயங்கப்பண்ணிணுனேவென்ன, ப்ரமாணம் (மன்னைமனங்கொள்ளவித்யாதி) பெரியதிருமடல். ராஜாவானமஹாபலியை மனங்கொள்ளும்படியாக வஞ்சித்து நெஞ்சையுருக்கியென்றபடி. " மதியாம்வண்ணம் -" தெளிவுடையேனும்படி.

மறப்பும் தெளிவு மவனுகக்கூடுமோவென்ன, அதுக்குப்ரமாணம் (மத்தஸ்ஸ்ம்ருதிரித்யாதி) " ஸவ-ஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்டோ மத்தஸ் ஸ்ம்ருதிர்ஜ்ஞாநமபோஹநஞ்ச । வேதைஶ்ச ஸர்வை꞉ " ( ஸர்வஸ்யசாஹம்ஹ்ருதிஸந்நிவிஷ்டோமத்தஸ்ஸ்ம்ருதிர்ஜ்ஞாநமபோஹநஞ்ச । வேதைஶ்சஸர்வை꞉ ) இத்யாதிகீதாஸூபஞ்சதஶே. * நல்குரவிலர்த்தம்போலே யிருக்கையாலே, அத்தை பரிஹரிக்கிறுர் (இவ்விடத்திலித்யாதி) பண்ணு-பண்ணியென்றபடி.

"இதென்னதுஃகம்" என்றத்தால்பலிதம் (உனக்கிவை யித்யாதி)

மயக்காவாமனனே - அயர்ப்பாயென்றுதொடங்கி, இவையென்னதுயரங்களே - மதியாம் வண்ணமொன்றருளா யித்யந்வயஃ ...... ........................*

---

# ஏழாம்பாட்டு.

---

துயரங்கள்செய்யுங்கண்ணுசுடர்நீண்முடியாயருளாய்,
துயரஞ்செய்மானங்களாய்மதனுகியுகவைகளாய்த்
துயரஞ்செய்காமங்களாய்த்துலையாய்நிலையாய்நடையாய்த்
துயரங்கள்செய்துவைத்தியிவைவயென்னசுண்டாயங்களே.

## ஆறுயிரப்படி.

( துயரங்கள்செய்யுங்கண்ணுசுடர்நீண்முடியாயருளாய் ) உன்னுடையதிருவபிஷேகத்தி லழகாலே நவியும்க்ருஷ்ணனே, அப்படியே விபூதியினுடைய வாஸ்சர்யத்தாலேயும் நவிவுபடாமே தெளிவிக்கவேணும். துஃகஹேதுவான வபிமாநம், அத்தாலேவந்தமதம், உகப்பு, துஃககரமானகாமம், பரிமாணம், ஸ்த்திதிகமநங்கள், ஏவம்ரூபமாய் துஃகாத்மகமான வ்யாபாரங்களைப் பண்ணிவைத்தாய், இவையென்ன விளையாட்டுக்களென்கிறுர் ...........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், கர்மாநுரூபதுஃகங்களைப்பண்ணும் ஸ்வாமியானநீ, அந்ததுஃகஹேதுவான தர்மாநாதிகளை விபூதியாகவுடையையாய் சேதநரை துஃகிப்பியாநின்றுய், இவையென்ன லீலார்த்த ஸ்வார்த்த ப்ரவ்ருத்திகளென்கிறுர்.

துயரங்கள் - கர்மாநுரூபமான துஃகங்களை. செய்யும் - பண்ணுமிடத்தில். கண்ணு - அவதாரதசையோடு. சுடர்நீண்முடியாய் - பரதசையோடு வாசியறநடத்

துமவனே. துயரஞ்செய்-து:கஹேதுபூதமாயிருக்கிற. மானங்களாய்-அபிஜாதிநி பந்தந தர்மாநங்களாய். மதனுகி - "ஸமெதஜஊா°" (ஏதேமதா: ) என்கிறபடி யே யவையடியாகவரும் செருக்கும். உகவைகளாய்-அத்தால்வந்த ப்ரீதிகளுமாய். துயரம் - அபிநிவேசாதிது:கங்களை. செய்-விளைக்கக்கடவ. காமங்களாய் - பதார்த்த த்ருஷ்ணுரூபகாமங்களாய். துலையாய்-அந்தபதார்த்தங்களினுடைய தாரதம்யாபாதக பரிமாணமாய். நிலையாய் நடையாய் - அவற்றினுடையஸ்த்திதிகமநங்களுமாய். இப்படி, சேதநர்க்கு, துயரங்கள்-து:கங்களை. செய்து-பண்ணி. வைத்தி - வைப்புதி. இவை-இவை. என்ன-என்ன. சுண்டாயங்கள்-பரதுக்கம்பாராத ஸ்வார்த்தப்ரவ்ருத்திகள். அருளாய்-அருளிச்செய்யவேணும்.

சுண்டாயம் - ஸ்வார்த்தப்ரவ்ருத்தி........................................................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

து:கஹேதுவான வபிமாநந்தொடக்கமான விசித்ரபதார்த்தங்களை விபூதியாகவுடையனுயிருக்கிறபடியை யருளிச்செய்கிறார்.

(துயரங்களித்யாதி) து:கங்களைப்பண்ணக்கடவக்ருஷ்ணனே. (எத்தாலேநலிவதென்னில்; *முடிச்சோதியிற்படியே திருவபிஷேகத்திலழகைக்காட்டியாயிற்று) (சுடர்நீண்முடியாய்) தர்ஶநீயமாய் உபயவிபூதிக்கும் சூடினமுடி.) விபூத்யநுசந்தாநமும் திருவபிஷேகத்தோபாதி பாதகமாகாநின்றதாயிற்று. "'முற்றவிம்மூவுலகும் விரிகின்றசுடர்முடிக்கேயொற்றுமைக்கொண்டது' என்றது பின்னுட்டுகிறது" என்று பிள்ளான். அவனைக்கேட்டறியவேண்டுகையாலே பாதகமாமிறே. (துயரம்செயித்யாதி) "ஊஸொஹ2" (தாஸோஹம்) என்கிற வபிமாநமடிக்கழஞ்சு பெற்றிருக்கும். அங்ஙனன்றிக்கே, "ஸொஹ2" (ஸோஹம்) என்று து:கத்தைப்பண்ணு மபிமாநங்களாய். (மதனித்யாதி) களிப்பும், அதுக்கடியான வுகவையுமாய், "ஸஜாத்ஸஂஜாயதேகாஊ: - பு௯ிநாஶாத்ப்ரணஶ்யதி" (ஸங்காத்ஸம்ஜாயதேகாம: – புத்திநாஶாத்ப்ரணஶ்யதி ) என்கிறபடியே விநாஶபர்யந்தமான காமங்களாய். அங்ஙன்றே பகவத்காமம். ( துலையாய் ) ப்ரமாணமாய். நிறுக்குமதாய். (நிலையாய் நடையாய்) ஸ்த்தாவர ஜங்கமங்களைச்சொல்லுதல், ஸ்த்திதிகமநங்களைச்சொல்லுதல். இப்படி து:கங்களைப்பண்ணுவியாநின்றாய். (இவையென்னசுண்டாயங்களே)உனக்கு லீலையாயிராநின்றது, எங்களுக்கு க்லேஶாவஹமாயிராநின்றது ... *

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (துயரமித்யாதி) "துயரம்செய்மானங்களாய்" இத்யாதியைக் கடாக்ஷித்தவதாரிகை (து:கஹேதுவானவித்யாதி)

விபூதியையநுசந்திக்கிறவிடத்திலே திருவபிஷேகத்தைச்சொன்னதுக்குபாவம் (விபூதீத்யாதி) திருவபிஷேகத்தோபாதியென்றது - "நிற்றிமுற்றத்துள்" என்கிறபாட்டைப்பற்ற. விபூத்யநுசந்தாநமும் திருவபிஷேகமும் பாதகமாகைக்கு ஹேதுவேதென்ன (அவனையித்யாதி) *முடிச்சோதிப்படியே யவனைக்கேட்டறியவேண்டுகையாலே யென்றபடி.

துயரம்செய்யாத மானமுமுண்டோ, இப்படிவிசேஷிக்கிற தென்னென்ன (தாசோஹமித்யாதி வாக்யத்வயத்தாலே) மதன் - களிப்பு. கர்வமித்யர்த்தஃ உக வை-சந்தோஷம். துயரம்செய்யாத காமமுண்டோவென்ன (அங்ஙனன்றேபகவத் காமமென்று) "துலே" என்றால் ப்ரமாணத்தைக்காட்டுமோவென்ன (நிறுக்குமதாய்) என்கிறார். "நிலையாய்" இத்யாதி - தர்மிபரமாதல், தர்மபரமாதலென்று விவக்ஷித்தர்த்தம் (ஸ்த்தாவரோத்யாதி வாக்யத்வயம்)

"என்னசுண்டாயங்கள்" என்று விசேஷித்ததுக்குபாவம் (உனக்குலீலையித்யாதிவாக்யத்வயம்) சுண்டாயம்-லீலையும், ஸ்வார்த்தப்ரவ்ருத்தியும்.

துயரங்கள்செய்யுங்கண்ணா, சுடர்நீண்முடியாய் - துயரம்செய்மானங்களாயென்றுதொடங்கி, என்னசுண்டாயங்கள் - அருளாயித்யந்வயஃ....................*

---

# எட்டாம்பாட்டு.

---

என்னசுண்டாயங்களானின்றிட்டாயென்னையாளுங்கண்ணா
இன்னதோர்தன்மையையென்றுன்னையாவர்க்குந்தேற்றரியை
முன்னியமூவுலகுமவையாயவற்றைப்படைத்துப்
பின்னுமுள்ளாய்புறத்தாயிவையென்னவியற்கைகளே.

## ஆறாயிரப்படி.

(என்னசுண்டாயங்கள்) என்னலீலாயுக்தனாய் நிற்கின்றாய் என்னையடிமைகொள்ளுகிற க்ருஷ்ணனே. இன்னதொரு ஸ்வபாவமென்று ஜ்ஞாநாதிகருக்கு மறியவொண்ணாத நீ, பழையதான மூவுலகுக்குங்கடவையாய் அவற்றை ஸ்ருஷ்டித்து, பின்னையுமந்தர்ப்பஹிர்ச வ்யாபித்து நின்றாய், இவையென்னவாஶ்சர்ய மென்கிறார்...........................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அதிசயிதஜ்ஞாநர்க்கு மவபோதிக்கைக் கரியையாய்க்கொண்டு சகலஜகத்துக்கும் ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணாநின்றாய், இவையென்ன செய்திகளாயிருக்கிறதென்கிறார்.

என்னசுண்டாயங்களால்-ஸ்வார்த்தமாயுள்ள வென்ன லீலாவ்யாபாரங்களாலே, எங்ஙனே, என்ன ப்ரகாரத்திலே. நின்றிட்டாய் - நின்றாய். என்கண்ணா- எனக்கு பவ்யனான க்ருஷ்ணனே. இன்னதோர் - இன்னபடிப்பட்ட. தன்மையை - ஸ்வபாவத்தையுடையை. என்று - என்று. உன்னை - அபரிச்சிந்ந ஸ்வபாவனானவுன்னை. யாவர்க்கும் - அதிசயித ஜ்ஞாநராயிருப்பார்க்கும். தேற்ற - நிர்ணயித்துக்காட்ட. அரியை - அரியையாயிருப்புதி. முன்னிய - ப்ரவாஹாநாதியாயிருப்பதாய். மூவுலகும் - க்ருதகாதிபேதத்தையுடைத்தான மூன்றுலோகத்தையும். அவையாய்-ததாத்மகனாய். அவற்றை - அவற்றை. படைத்து - ஸ்ருஷ்டித்து. பின்னும் - அதுக்கு மேலே. உள் - அநுப்ரவேஶ நிபந்தநமான அந்தர்வ்யாப்தியையும். புறம் - ஆதாரத்வநிபந்தநமான பஹிர்வ்யாப்தியையும். ஆய்-உடையை யாகாநின்றாய். இவை-இவை, என்ன - என்ன. இயற்கைகள் - ஸ்வாபாவிக வ்ருத்திகளாயிருக்கிறன........*

ஈடு - எட்டாம்பாட்டு.

சகலஜகத்தையும் ஸ்ருஷ்டித்து அந்தர்ப்பஹிப்°ச வ்யாபித்து இப்படி நிர்வஹித்துவைத்து துர்ஜ்ஞேயனுயிருக்கிற விதென்ன வாப்°ச ர்யமென்கிறுர்.

(என்னவித்யாதி) என்னலீலேகளேயுடையையாய் நிற்கிறுய் என் னே யடிமைகொள்ளுகிற க்ருஷ்ணனே.

( இன்னதோரித்யாதி ) இன்னபடிப்பட்ட ஸ்வபாவத்தையுடை யையென்று, சர்வகாரணபூதனுன வுன்னே, எத்தனேயேனுமதிசயித ஜ்ஞா நரானவர்களாலு மறியவொண்ணுதபடி நிற்புதி. "ப்ரஹ்மாபி நவேத்த்ய ஸம்ப்ரயத்நதஃ" (ப்ரஹ்மாபிநவேத்த்யஸம்ப்ரயத்நதஃ) என்கிறபடியே.

(முன்னியமூவுலகுமவையாய்) ப்ரவாஹரூபத்தாலே பழையதா ய்ப் போருகிற மூவுலகுக்கும் கடவையாய். த்ரிவிதசேதநனென்னுதல், த்ரைலோக்யமென்னுதல். ( அவற்றைப்படைத்து ) விபூதியானபோது, அவற்றையுண்டாக்கியென்கிறது; சேதநரானபோது, அவர்களுக்கு ஜ் ஞாநவிகாசத்தை யுண்டாக்கி யென்கிறது. (பின்னுமுள்ளாய்புறத்தாய்) * அந்தர்ப்பஹிப்°ச வ்யாபித்திருக்கிறவனே. ( இவை யென்னவியற்கைக ளே ) உனக்கிவைதான் லீலேயாயிராநின்றது, எங்களுக்கிவைதா னுப்°ச ர்யமா யிராநின்றது............................................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு ( என்னசுண்டாயங்களித்யாதி ) "அவற்றைப்படைத்துப் பின்னுமுள்ளாய் - இன்னதோர் தன்மையையென்றுன்னே யாவர்க்கும் தேற்றரி யை - என்னவியற்கைகளே " என்றபதங்களேக் கடாக்ஷித்தவதாரிகை ( ஸகலஜகத் தையுமித்யாதி)

சுண்டாயம் - லீலே.

தேற்றரியை - தெளிகைக்கு சக்யநல்லாதவனே. அறியவொண்ணுமைக்கு ப் ரமாணம் (ப்ரஹ்மாபீத்யாதி)

" முன்னிய " என்றது - ப்ரவாஹரூபேண நித்யமாயென்றபடி. ஸப்தார்த்த ம் (ப்ரவாஹரூபத்தாலே யித்யாதி)

இயற்கை - செய்தி. அதாவது - வ்யாபாரம்.

முன்னியவென்று தொடங்கி, புறத்தாய் - என்ன சுண்டாயங்களால் நின் றிட்டா யென்னேயாளும் கண்ணு, இன்னதோர் தன்மையை யென்றுன்னே யாவர்க் கும் தேற்றரியை - இவையென்ன வியற்கைகளே யித்யந்வயஃ. " தேற்றரியை " எ ன்றது - தேற்றரியனுய் நிற்புதி யென்றபடி.............................................*

---

# ஒன்பதாம்பாட்டு.

என்னவியற்கைகளாலெங்ஙனேநின்றிட்டாயென்கண்ணு
துன்னுகரசரணமுதலாகவெல்லாவுறுப்பு
முன்னுசுவையொளியூறுெலிநாற்றமுற்றுநீயே
யுன்னேயுணரவுறிலுலப்பில்லேநுணுக்கங்களே.

## ஆறாயிரப்படி

(என்னவியற்கைகள்) என்ன ஸ்வபாவங்களையுடையனாய் எந்த வாகாரத்திலே நிற்கிறாய் எனக்குபவ்யனான க்ருஷ்ணனே. நெருங்கினகர சரணம் முதலானவெல்லா வுறுப்பும் - அவயவங்களுக்கும், ரஸம், ரூபம், ஸ்பர்ஸம், சப்தம், கந்தம், இவையெல்லா வற்றுக்கும் கடவையான வுன்னையநுசந்திக்கப்புக்கா லுன்னுடைய வைலக்ஷண்யத்துக்கு முடிவில்லை யென்கிறார்.......................................... .. ...............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இப்படி யறியவரியையா யிருக்கைக்கடியான வதிஸௌக்ஷ்ம்யத்தாலே அக்கரணங்களோடு விஷயங்களோடுவாசியற வ்யாபரித்துநிற்கிற நிலையென்னுமிருக்கிறதென்கிறார்.

உன்னுடைய வாகாரங்களைக்காட்டி, என்னை - என்னை. ஆளும் - அடிமைகொள்ளுகிற. கண்ணா - க்ருஷ்ணனே. ஒருபடியென்று நிஷ்கர்ஷிக்க வொண்ணாதபடி. என்ன - என்ன. இயற்கைகளால் - ப்ரகாரங்களாலே. நின்றிட்டாய் - நின்றருளினாய். துன்னு - சரீரத்திலே செறியக்கடவதாய். கரசரணமுதலாக - கரசரணாதிகளான கர்மேந்த்ரியங்களும் ஜ்ஞாநேந்த்ரியங்களுமான. எல்லாவுறுப்பும் - எல்லாக்கரணங்களும். உன்னு-மநஸ்ஸோடே ப்ரவணமாயுத்யோகிக்கும்படியான. சுவையொளியூறொலிநாற்றம் - ரசரூபஸ்பர்ஸ சப்தகந்தங்களாகிற. மூற்றும் - சகலவிஷயங்களும். நீயே - நீயேயாம்படி. உன்னை - அவற்றுக்கந்தராத்மாவானவுன்னை. உணரவுறில் - நிரூபிக்கநினைக்கில். "அணீயஸாம் - அணீயாம்ஸம்" என்கிறபடியே, நுணுக்கங்கள் - ஸௌக்ஷ்ம்யங்கள். உலப்பு - முடிவு. இல்லை - இல்லையாயிருக்கும்*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

ஜ்ஞாநேந்த்ரியங்களும் கர்மேந்த்ரியங்களும் சப்தாதி விஷயங்களு மவனுக்கு விபூதியாயிருக்கிற விருப்பை யநுசந்திக்கிறார்.

(என்னவியற்கைகளாலெங்ஙனே நின்றிட்டாயென்கண்ணா) என்ன ஸ்வபாவங்களையுடையையாய்க் கொண்டு என்னப்ரகாரத்தாலே நிற்கிறாய் எனக்கு பவ்யனானக்ருஷ்ணனே.

(துன்னித்யாதி) நெருங்கியிருந்துள்ள கரசரணங்கள் தொடக்கமான வெல்லாவவயவங்களும், அநுசந்திக்கப்படப்படுவதாய்-ஆசைப்படுவதாயிருந்துள்ள சப்தாதிகளுக்குங்கடவையாயிருந்தாய். (உன்னையுணரவுறில்) உன்னையறியப்புகில்.(உலப்பில்லைநுணுக்கங்களே) உன்வைலக்ஷண்யங்களுக்கு முடிவில்லை. "அணீயாம்ஸமணீயஸாம்" (அணீயாம் ஸமணீயஸாம்) என்கிறபடியே, அசித்வஸ்துவைஸூக்ஷ்ம ரூபதயா எங்கும்புக்கு வ்யாபித்திருக்குமாத்மவஸ்து, இவ்விரண்டிலும் ஸூக்ஷ்மரூபேண வ்யாபித்திருப்புதி. ( உன்னை நிரூபிக்கப்புகில் ஸௌக்ஷ்ம்யங்கள் முடிவில்லையாயிருக்கும். நுணுக்கம் - ஸௌக்ஷ்ம்யம். )....................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு ( என்னவியற்கைகளாலித்யாதி ) " துன்னுகரசரணம் " இத்யாதியைக் கடாக்ஷித்தவதாரிகை (ஜ்ஞாநேந்த்ரியங்களுமித்யாதி)

இயற்கை - ஸ்வபாவம்.

உறுப்பு - அவயவம். " எல்லாவுறுப்பும் " என்று கரசரணங்களையொழிந்த கர்மஜ்ஞாநேந்த்ரியங்களைச்சொல்லுகிறது. " உன்னு " என்றதுக்கர்த்தம் ( அநுசந்திக்கவித்யாதி) " அநுசந்திக்கப்படுவதாய் " என்றதின் விவரணம் (ஆசைப்படப்படுவதாயிருந்துள்ளவென்று.) ஊறு - ஸ்பர்ஸம். ஒளி - ரூபம்.

நுணுக்கம் - ஸூக்ஷ்மதையால் வந்தவைலக்ஷண்யம். வைலக்ஷண்யங்களேதென்ன ( அணீயாம்ஸமித்யாதிவாக்யத்வயம் ) " நாராயணமஶேஷாணாமணியாம்ஸமணீயஸாம் । ஸமஸ்தாநாம்மஹிஷ்டஞ்ச பூராதீநாம்கரீயஸாம் " ( நாராயணமஶேஷாணுமணீயாம்ஸமணீயஸாம்।ஸமஸ்தாநாம்மஹிஷ்டஞ்ச பூராதீநாம்கரீயஸாம்) இதி ஸ்ரீவிஷ்ணுபுராணே. " ப்ரஶாஸிதாரம்ஸர்வேஷாமணீயாம்ஸமணீயஸாம் । ருக்மாபம்ஸ்வப்நதீகம்யம்வித்யாத்தம்புருஷம்பரம் " ( ப்ரஶாஸிதாரம் ஸர்வேஷாமணீயாம்ஸமணீயஸாம் । ருக்மாபம்ஸ்வப்நதீகம்யம்வித்யாத்தம்புருஷம்பரம் ) இதிமாநவே.........................................................*

---

## பத்தாம்பாட்டு.

இல்லைநுணுக்கங்களேயிதனிற்பிறிதென்னும்வண்ணந்
தொல்லைநன்னூலிற்சொன்னவுருவுமருவுநீயே
யல்லித்துழாயலங்கலணிமார்பவென்னச்சுதனே
வல்லதோர்வண்ணஞ்சொன்னலதுவேயுனக்காம்வண்ணமே.

## ஆறுயிரப்படி.

( இல்லை ) இதிற்காட்டில், பிறிது - வேறு சூக்ஷ்மமில்லையென்னும்படி பழையதான வேதாந்தத்திலேசொன்ன வசித்துக்கும் சித்துக்கும் நிர்வாஹகனானவனே; அல்லியையுடைய திருத்துழாய்மாலையாலே யலங்க்ருதமான வழகியமார்பையுடையையாய், இவ்வழகுக்கொருநாளுமொழிவில்லாதவனே; வேதங்களும்ஸநகாதியோகிகளுமுன்னுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளைப்பேசப்புக்கால் பேசினவம்சம்பேசிற்றுமித்தனைபோக்கி, பேசாததுக் கவதியில்லை. அதவா, உனக்கு நல்லாரா யுன்குணங்களிலே யீடுபட்டிருப்பார் உன்னை யேதேனு மொருபடி பேசினால், அதுவே யுனக்காம் ப்ரகாரமென்கிறார்........................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நித்யமான வேதைகவேத்யமாயுள்ள ஸூக்ஷ்ம சிதசித்வஸ்துக்களை ப்ரகாரமாக வுடைய நீ, வாசாமகோசரமஹிமா வென்கிறார்.

இதனில் - இதிற்காட்டில். பிறிது - வேறு. நுணுக்கங்கள் - ஸௌக்ஷ்ம்யம். இல்லை - இல்லை. என்னும்வண்ணம் - என்னும்படி. தொல்லை - அநாதியாய். நல்-அபௌருஷேயத்வாதி குணயோகத்தையுடைத்தான. நூலில் - வேதசாஸ்த்ரத்திலே. அவ்யக்தாக்ஷராவஸ்த்தையிலு மதிசூக்ஷ்மமாக, சொன்ன-தமஶ்ஶப்தத்தாலேசொல்லப்பட்ட. உருவும் - அசித்தும். அருவும் - சித்தும். நீயே - "ஸதேவ" (ஸதேவ) என்கிறமர்யாதையாலே நீயேயானாய். இப்படிசிதசிச்சரீரியானவளவன்றியே, அல்லி - பூந்தாரையுடைத்தான. துழாயலங்கல் - திருத்துழாய்மாலையை. அணி - அலங்காரமாகவுடைய. மார்ப - திருமார்பையுடையனாய். என், அச்சுதனே - அப்ரச்யுதாகாரனான விலக்ஷண விக்ரஹயுக்தனே. இப்படியிருக்கிற வுன்னுடைய சர்வப்ரகாரவைபவத்தை, வல்லதோர்வண்ணம் - வல்லப்ரகாரம். சொன்னால் - வேதாதிகள் சொன்னாலும். உனக்கு - உனக்கு. அதுவே - அதுவே. வண்ணம் - ப்ரகாரம். ஆம் - ஆம்படி. ஆஶ்ரிதபவ்யனாயிருப்புதி. ......................................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

வேதைகஸமதிகம்யனாய் காரணமா யதிசூக்ஷ்மமா யிருந்துள்ள சேதநாசேதநங்களை விபூதியாகவுடையனா யிருக்கிறபடியை யருளிச்செய்கிறார்.

(இல்லைநுணுக்கமித்யாதி) இதிற்காட்டில் வேறுசூக்ஷ்மமாயிருப்பதில்லையென்னும்படி. அதாவது-இவற்றுக்கு "தனக்கு" என்னவொரு நாமரூபங்களின்றிக்கே, ப்ரஹ்மத்தினுடைய நாமரூபங்களையிட்டு வ்யவஹரிக்கவேண்டும்படி காரணாவஸ்த்தமாயிருக்கிறசேதநாசேதநங்கள் நீயிட்டவழக்கு. (தொல்லைநன்னூலிற்சொன்ன) "ஸதேவஸோம்யேதமக்ர ஆஸீத்" (ஸதேவஸோம்யேதமக்ரஆஸீத்) என்றதிறே. (பழையதாய் ப்ரமாணஶ்ரேஷ்ட்டமான வேதத்திலேசொல்லுகிறவசேதநத்துக்கும், அதிற்காட்டில் சூக்ஷ்மமான சேதநபதார்த்தத்துக்கும்நிர்வாஹகன்நீயே.) ஆக, ஜகதாகாரனாயிருக்கு மிருப்பைச்சொல்லிற்று.

(அல்லித்துழாயித்யாதி) நித்யவிபூதியுக்தனா யிருக்கும்படியைச்சொல்லுகிறது. அல்லியையுடைத்தான திருத்துழாய்மாலையாலே யலங்க்ருதமான திருமார்வையுடையையாய், அவ்விருப்புக் கொருநாளுமழிவில்லாதபடி பரமபதத்திலே யெழுந்தருளியிருக்கிறவிருப்பை யெனக்கு ப்ரகாசிப்பிக்கிறவனே. (வல்லதோரித்யாதி) இதுக்கிரண்டுப்படியாக வருளிச்செய்வர். இவன்றனக்குள்ள வளவெல்லாங்கொண்டுபேசினால், உன்பக்கல் சிலசொல்லிற்று மத்தனைபோக்கியல்லது, உனக்கோரியத்தை யில்லையிறேயென்னுதல்; அப்போதைக்கு, அதுவே யுனக்காம் வண்ணம்-அதுவன்றென்கிறது. மற்றைப்படிக்கு, உன்பக்கல் ஸ்நேஹிகளாயிருப்பா ரொத்தனையேனு மளவின்றிக்கே யிருந்தார்களாகிலும், அவர்களொன்

றைசொன்னால், ஸ்ரீவைகுண்டத்திலே நித்யசூரிகள்நடுவே அவர்கள்தங்களுக்குங்கூடப் பேச்சுக்கு நிலமன்றிக்கே யிருக்கிற நம்மை, சம்சாரத்திலே அதிக்ஷுத்ரனாயிருக்கிற விவனறிந்தானாகச் சொல்லுவதே? என்று சீறுகையன்றிக்கே, இவன்சொன்னதுவே தனக்களவாக நினைத்திருக்குமென்கிறது.......................................................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு. (இல்லையித்யாதி) "தொல்லைநன்னூலிற்சொன்ன - இல்லை நுணுக்கங்களே யிதனில் பிறிதென்னும்வண்ணம் - உருவுமருவும்நீயே" என்றபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை (வேதைசேத்யாதி) அதிசூக்ஷ்மமா யிருந்துள்ளவென்றது - காரணவஸ்த்தையைப்பற்ற.

"இதனிற்பிறிது - நுணுக்கங்கள் - இல்லை - என்னும்வண்ணம்" என்றங்வயித்தார்த்தம் (இதிற்காட்டிலித்யாதி) ஏதத்விவரணம் (அதாவதித்யாதி) வேதத்திலெங்கே சொல்லிற்றென்ன (சதேவேத்யாதி)

சப்தார்த்தம் (அல்லியையித்யாதி)

முந்தினவர்த்தத்துக்கு, "அதுவே" என்ற ஏகாரம் - பிரிநிலை. வ்யதிரேகார்த்தகமென்றபடி. த்விதீயார்த்தத்துக்கு, தேற்றேகாரம். நிஶ்சயார்த்தகமென்றபடி.

அல்லித்துழாயலங்கலணிமார்ப, என்னச்சுதனே - இதனில்பிறிது - நுணுக்கங்கள் - இல்லை - என்னும்வண்ணம் தொல்லை நன்னூலிற்சொன்ன வுருவு மருவும்நீயே - வல்லதோர்வண்ணமித்யாரப்யாங்வயஃ........................................*

# ப தி னொ ன் றாம் பா ட் டு.

ஆம்வண்ணமின்னதொன்றென்றறிவதரியவரியை
யாம்வண்ணத்தாற்குருகூர்ச்சடகோபனறிந்துரைத்த
வாம்வண்ணவொண்டமிழ்களிவையாயிரத்துளிப்பத்து
மாம்வண்ணத்தாலுரைப்பாரமைந்தார்தமக்கென்றைக்குமே.

## ஆறாயிரப்படி.

(ஆம்வண்ணம்) ஒருவராலு மொருவகையு மறியவொண்ணாதை சர்வேஶ்வரனை யுள்ளபடியே யறிந்து அங்குத்தைக்கு ஸத்ருஶமாகவாழ்வாரருளிச்செய்தவாயிரத்திலு மித்திருவாய்மொழியை யதாசக்தி சொல்லுமவர்களே, என்றைக்கும் க்ருதக்ருத்யரென்கிறார். .......................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழியை யப்யசிக்கவல்லவர்கள், யாவதாத்மபாவி ப்கவதநுபவத்துக் கீடாகச் சமைந்தார்களென்று பலத்தை யருளிச்செய்கிறார்.

ஆம் - உண்டான. வண்ணம் - ப்ரகாரம். இன்னது - இன்னபடிப்பட்டிருப்பது. ஒன்று - ஒன்று. என்று - என்று. அறிவது - அறிகைக்கு. அரிய-அரியனான அரியை - சர்வேஶ்வரனை. குருகூர்ச்சடகோபன் - * மயர்வறமதிநலமருளப்பெற்ற வாழ்வார். ஆம்வண்ணத்தால் - உள்ளபடி. அறிந்து - அறிந்து. உரைத்த - அங்குத்தைக் கநுரூபமாக வருளிச்செய்த. வண்ணம் - சந்தஸ்ஸை. ஆம் - உடைத்தாய். ஒண் - சர்வாதிகாரமாகிற நன்மையையுடைத்தான. தமிழ்கள் - தமிழாயுள்ள. இவை-இவை. ஆயிரத்துள் - ஆயிரத்துள். இப்பத்தும் - இந்தப்பத்தையும். ஆம்வண்ணத்தால் - தங்கள் ப்ரகாரத்துக்கீடாக. உரைப்பார் - சொல்லவல்லவர்கள். தமக்கு - தங்களுக்கு. என்றைக்கும்-யாவதாத்மபாவியான வநுபவத்துக் கீடாக. அமைந்தார் - சமைந்தார்கள்.

இது - கலிவிருத்தம்..........................................................................*

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில் - அங்குத்தைக்குத் தகுதியாக வாழ்வாரருளிச்செய்த வாயிரந்திருவாய்மொழியிலு மித்திருவாய்மொழியை யதாசக்தி சொல்ல வல்லா ரென்றைக்கும் க்ருதக்ருத்யரென்கிறார்.

( ஆம்வண்ணமித்யாதி ) இன்னபடிப்பட்டிருப்பதொரு ஸ்வபாவத்தையுடையவனென்றுகொண் டொருவராலுமறிய வரியனாயிருக்கிற சர்வேஶ்வரனைக் கவிபாடிற்று. "யதோவாசோநிவர்த்தந்தே" ( யதோவாசோநிவர்த்தந்தே ) என்று வேதங்களும் மீண்டவனையாயிற்றுப் பேசிற்று. (ஆம்வண்ணமித்யாதி) அவனுக்குத் தகுதியாம்படி யாழ்வாரருளிச்செய்த. அறிவதரியவரியை என்றதாகில் ஆம்வண்ணத்தா லுரைக்கையாவதென், வ்யாஹதமன்றோ வென்னில் ( அறிந்துரைத்த ) அவன் * மயர்வறமதிநலமருளவாயிற் றிவர்பேசிற்று. ஸ்வயத்நத்தாலே யறியப்பார்க்கில்றே அரிதென்றது, அவன்கொடுத்த வறிவுகொண்டறிவார்க்குக் குறையில்லையிறே.

"நெறிவாசல்தானேயாய்நின்றானையைந்து, பொறிவாசல்போர்க்கதவஞ்சாத்தி - யறிவானும்" என்று ஆக்ஷேபிப்பது ஸ்வயத்நத்தாலே யறியப்பார்ப்பானாயிறே. ( ஆம்வண்ணவொண்டமிழ்களித்யாதி ) அவனுக்குத் தகுதியாம்படியிருக்கிற வழகிய தமிழென்னுதல்; தகுதியாயிருந்துள்ள சந்தஸ்ஸுக்களை யுடைத்தாய், சர்வாதிகாரமாகிற நன்மையையுடைத்தான தமிழென்னுதல். வண்ணம் - சந்தஸ்ஸு. அன்றிக்கே, வண்ணமென்று - ஓசையாய், நல்ல த்வநியை யுடைத்தான செந்தமிழென்னுதல். ( தமிழ்களிவையாயிரத்துளிப்பத்தும் ) தமிழாயிருந்துள்ளவிவையாயிரத்துளிப்பத்தையும். ( ஆம்வண்ணத்தாலுரைப்பார் ) பின்னை, இத்தைச் சொல்லுமவர்களுக்கும் * மயர்வறமதிநலமருளப்பெற்று அவனுக்குத் தகுதியான சொல்லாலே சொல்லவேணுமோவென்னில்; அத்தேவை யெல்லா மாழ்வார்தம்மோடே, இவர்களுக்குத் தாங்கள் வல்லவளவும் சொல்லவமையும். ( அமைந்தார்தமக்கென்றைக்குமே ) அவர்களு

க்கிவ்வாத்மா வுள்ளதனையும், ஈஸ்வரன் முழங்கைத்தண்ணீர் வேண்டா, ஆழ்வார் பரிக்ரஹமானதுவேபோரும். என்றைக்கும் தந்தாமுக்குத்தாமே யமைந்தார்களா யிருப்பர்கள். .........................................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் ( ஆம்வண்ணமித்யாதி ) "ஆம்வண்ணத்தால்" என்று தொடங்கி, "அமைந்தார்தமக்கென்றைக்கும்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (அங்குத்தைக்கித்யாதி)

"இன்னதொன்று - ஆம்வண்ணம் - என்றறிவதரியவரியை" என்றந்வயம். இன்னபடிப்பட்டதொன்று அவனுக்காம் ஸ்வபாவமென்றறியவொண்ணாத சர்வேஸ்வரனை என்றிதுக்கு சப்தார்த்தம். இத்தால் பலித்த பாவம் ( இன்னபடியித்யாதி ) அப்படி யறியப்போகாதோவென்ன ( யதோவாச இத்யாதி ) "ஆம்வண்ணத்தால்" என்றது - ஆனப்ரகாரத்தாலென்றுய், அங்குத்தைக்குத் தகுதியாகவென்றபடி. ஆனால் "அறிவதரிய" என்பானென்னென்ன ( ஸ்வயத்நத்தாலேயித்யாதி ) ஸ்வயத்நத்தாலே யறியப்போகாதோவென்ன, ப்ரமாணம் ( நெறிவாசலித்யாதி) முதல் திருவந்தாதிநாலாம்பாட்டு. வாசலானநெறியென்றுய், ஸ்வரூபாநுரூபமான வுபாயம் தானேயாய்க்கொண்டு நின்ற சர்வேஸ்வரனையென்னுதல்; நெறியென்று - உபாயமாய், வாசலென்று-உபேயமாய், உபாயமுமுபேயமும் தானேயாய்நின்ற சர்வேஸ்வரனையென்னுதல். (ஐந்தித்யாதி) பஞ்சேந்த்ரியத்வாரங்களிலடைக்கப்புக்கவர்களை முகத்திலேயறைந்து போருகிறகதவையடைத்து. (அறிவானும்) ஸ்வயத்நஸித்தமான ஜ்ஞாநசக்திகளைக்கொண்டறிவதாக விருக்கிறுனேவென்றுக்ஷேபிக்கிறுனென்றபடி. ஸ்வரூபாநுரூபோபாயோபேயங்கள் தானுய்நின்றவனை, இந்த்ரியங்களை ஜயித்து ருத்ரனறியமாட்டானென்றுகருத்து. இப்பாசுரத்தில், "நால்வர்க்கு" என்றது - அகஸ்த்ய புலஸ்த்ய தக்ஷமார்க்கண்டேயர்களை.

பலிதம் (அவர்களுக்கித்யாதி) ஆழ்வார் பரிக்ரஹமானதுவே - ஆழ்வார் பரிக்ரஹத்துக்கு விஷயமானதுவேயென்றபடி. சப்தார்த்தம் ( என்றைக்குமித்யாதி ) ஈஸ்வரன் முழங்கைத்தண்ணீர்வேண்டாவென்றது - ஈஸ்வரனுகிற முழங்கைத்தண்ணீர் வேண்டாவென்றபடி. முழங்கைத்தண்ணீராவது - ஒருவன் தண்ணீர்குடித்தா லவன்முழங்கையிலே யொழுகுகிற தண்ணீரைக்குடிக்கை.

இன்னதொன்று - ஆம்வண்ணம் - என்றறிவதரியவரியை-குருகூர்ச்சடகோபன்-ஆம்வண்ணத்தால் - அறிந்துரைத்த ஆம்வண்ணவொண்டமிழ்களென்றுதொடங்கி, உரைப்பார் - என்றைக்கும் - தமக்கு - அமைந்தாரித்யந்வய:.................*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

(மாயாவாமனனே.)

ஸந்தௌ தத்த்வப்ரகாரைஸ் ஸ்வயமபி விவிதைஸ்தத்வதோ ஸ்த்வ

நாமேஷு ஸ்வஸ்வரூபாகாநாம் நியதஸ்வரூபேண தத்தமோத்வாதநாநாந

நாமேஷு: । இச்சாயஸ்யாத்ஸ்வஹாஜாம் பஹுபஹுகரணாத்வைதஸம்ப்ரவ

த்ரிஹாவாத்த்ரீநாநாஸ்த்ராந் நாநாவிஹவஜதித தத்ஸ்ரீயாஸ்வேத்வாதிஷீ. எஅ

(பூதை:) தீயாய் நீராயித்யாதி - பஞ்சபூதங்களாலும்; (சந்த்ரார்யமாத்யை:) திங்களும் நாயிறுமாயித்யாதி - சந்த்ராதித்யநக்ஷத்ராதிகளாலும்; (ஸகலயுககதைர் வஸுபி:) எத்தனையோருகமு மவையாயித்யாதி - க்ருதத்ரேதாதி ஸகலகாலவர்த்தி பதார்த்தங்களாலும்; (சேதநாத்யை:) உள்ளது மில்லதுமாயித்யாதி-நித்யாநித்யங்களான சேதநாசேதநவஸ்துக்களாலும்; (லோகாநாம்நியத்யா) காயமும் சீவனுமாயித்யாதி - புந:புநர்ஜந்மவிநாசாதிகளை யுண்டாக்குகிறதாகத் தான்கட்டிவைத்த லோகமர்யாதையாலும்; (ஸ்மரணததிதரோத்பாதநாத்) அயர்ப்பாய்த்தேற்றமுமாய்-ஸ்மரணவிஸ்மரணங்களை யுண்டாக்குகையாலும்; (மாநநாத்யை:) துயரம்செய் மானங்களாயித்யாதி-மாநமதாதிகளாலும்;(துர்ஜ்ஞேயத்வாத்)இன்னதோர்தன்மையை யென்றுன்னையாவர்க்கும் தேற்றரியை-இப்படிப்பட்ட ஸ்வபாவத்தையுடையவனென்று, எத்தனையேனு மதிசயிதஜ்ஞாநராலு மறியவொண்ணாதபடி நிற்கையாலும்; (ஸ்வபாஜாம்பஹூபகரணாத்) நின்றிட்டாயென்னை யாளுங்கண்ணாவித்யாதி-தன்னையாஶ்ரயித்தபேர்களுக்கு நன்மைகளைப்பண்ணுகையாலும்; (வேதஸம்வேத்யபாவாத்) தொல்லை நன்னூலிற்சொன்ன வுருவுமருவும்நீயே - ஸூக்ஷ்மசிதசித்விஶிஷ்டதயா "ஸதேவஸோம்யேதமக்ர" (ஸதேவஸோம்யேதமக்ரஆஸீத்) இத்யாதியாலே ப்ரதிபாதிக்கப்படுகையாலும்; எம்பெருமானுஶ்சர்யவிபூதிகனென்று "மாயாவாமனனே" என்கிறதஶகத்திலே மாறனாலே ப்ரதிபாதிக்கப்பட்டதென்கிறார் ........................................................ (எஅ)

---

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

மாயாமறன்னைவைத்தவைசித்திரியாலே
தீயாவிசித்திரமாச்சேர்பொருளோ - டாயாமல்
வாய்ந்துநிற்குமாயன்வளமுரைத்தமாறனைநா
மேய்ந்துரைத்துவாழுநாளென்று. (௯அ)

(மாயாமல்) இதில் - எம்பெருமான் காட்டின விசித்ரஜகதாகாரத்தையை யநுபவித்து விஸ்மிதராயருளிச்செய்த திவ்யஸூக்தியை யநுவதித்தருளிச்செய்கிறார். அதெங்ஙனேயென்னில், * ஏழையராவியில் - உருவுவெளிப்பாட்டாலே நோவுபடும்படி யாற்றாமை கரைபுரண்டிருக்கச்செய்தேயும், தம்மையறியாதபடிவைத்து நோக்கிக்கொண்டுபோருகிற விவ்வாஶ்சர்யத்தைக்கண்டிவர் விஸ்மிதராக, "இதொன்றுகண்டோ நீரிப்படி விஸ்மயப்படுகிறது" என்று அவன் தன்னுடைய வாஶ்சர்யஜகதாகாரத்தையைக்காட்டிக்கொடுக்க, அத்தையநுபவித்து விஸ்மிதராகிற * மாயாவாமனனிலர்த்தத்தை "மாயாமல் தன்னைவைத்த" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

(மாயாமல் தன்னைவைத்த வைசித்திரியாலே) அதாவது-சரண்யனானவுனக்கு அஜ்ஞாநாசக்திகளாகிற தோஷமின்றிக்கே சர்வஜ்ஞத்வாதிகுணங்களுண்டாயிருக்க, சரணாகதனானவெனக்கு ஆகிஞ்சந்யாநந்ய கதித்வங்களும் ஆர்த்தியுமுண்டாகையாலே அதிகாரிமாந்த்யமின்றிக்கேயிருக்க, வைத்ததுக்கு ஹேதுவென் என்று- "பாசங்கள்நீக்கி" என்று தொடங்கி "மாயவனேயருளாய்" என்று அவன்றன்னைக்

கேட்க, அவனும் அதுக்கு நிருத்தரனாக, "இதில்பொருந்தாதிருக்கிற வென்னைவைத்து நடத்திக்கொடுபோருகிற விதொன்றிருந்தபடியென்!" என்று இவ்வாஸ்சர்யத்திலே யிவர்விஸ்மிதராக, அவனவற்றைக்கண்டுவைத்து "இதோராஸ்சர்யமோ" என்று தன் விசித்ரஜகதாகாரதையைக்காட்ட. (தீயாவிசித்திரமாச்சேர்பொருளோடு) "மாயாவாமனனே" என்றுதொடங்கி "இவையென்னவிசித்திரமே" என்றத்தைப் பின்சென் றருளிச்செய்தபடி. தீயாதியாக பஞ்சபூதங்களு மொன்றின்கார்யமொன்றுக்கின்றிக்கே விவிதாகாரமாய், சேதநவர்க்கங்களு மப்படியே விவிதாகாரமாகையாலே விசித்ரமாய்ச்சேர்ந்த பதார்த்தங்களோடே. (ஆயாமல்வாய்ந்து நிற்கும்மாயன்) அவற்றின் தோஷங்களையாராயாமல் வாய்ந்துநிற்கும்மாயன். (ஓயாமல்வாய்ந்துநிற்கும்) என்றுபாடமாய், நிரந்தரமாகச்சேர்ந்துநிற்கு மென்றுகவுமாம். பொருந்தியிருக்கு மாஸ்சர்யசக்தியுக்தனான சர்வேஸ்வரன். "மாயா" என்றத்தைப்பேசினபடி. (வளமுரைத்த) விபூதிவிஸ்தாரத்தை யருளிச்செய்த. அதாவது- "ஸஹஸ்ராம்ஸுநாபைக ஸ்ரூயதாம்:- நக்ரோதவஸமாபந்ந:" (புராபூத்வாம்ருதுர்த்தாந்த: - நக்ரோதவஸமாபந்ந:) என்னும்படி, "அங்கண்மலர்த்தண்டுழாய்முடியச்சுதனேயருளாய்பின்னும் வெங்கண்வெங்கூற்றமுமா யிவையென்னவிசித்திரமே" என்றும், "சித்திரத்தேர்வலவா - வித்தகத்தால்நிற்றிநீ" என்றும், "கள்ளவிழ்தாமரைக்கட்கண்ணனே - உள்ளப்பல்யோகுசெய்தி" என்றும், "பாசங்கள்நீக்கியென்னை - இவையென்னமயக்குக்களே" என்றும், "மயக்காவாமனனே - இவையென்னதுயரங்களே" என்றும், "துயரங்கள்செய்யுங்கண்ணா - இவையென்னசுண்டாயங்களே" என்றும், "என்னசுண்டாயங்களாலெங்ஙனேநின்றிட்டாய் - இவையென்னவியற்கைகளே" என்றும், "என்னவியற்கைகளால் நின்றிட்டாய் - உலப்பில்லை நுணுக்கங்களே" என்றும், "இல்லைநுணுக்கங்களே - அச்சுதனே -அதுவேயுனக்காம்வண்ணமே" என்று மிப்படி யவன்விசித்ரவிபூதி விஸ்தாரயுக்தனாயிருக்கிறபடியை யருளிச்செய்தவையென்கை. (மாயன்வளமுரைத்தமாறனை) இப்படி விசித்ர ஜகதாகாரனானவன் சம்பத்தையநுபவித்தருளிச்செய்த வாழ்வாரை. (நாமேய்ந்துரைத்து வாழுநாளென்று) நாம் கிட்டி அவர்திருநாமங்களைச்சொல்லி வாழுங்காலமாகவற்றே. அன்று மொருநாளாமோவென்றபடி ................ (௬௮)

ஏழாம்பத்தில் - எட்டாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக - திருவாய்மொழி - ௬௮.—பாட்டு - ௭௫0.

---

ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஏழாம்பத்து.

## ஒன்பதாந்திருவாய்மொழி.

### என்றைக்கும் - ப்ரவேஶங்கள்.

### ஆறுயிரப்படி.

இப்படிமஹாஶ்சர்யமான ஜகத்ரூபத்தையும், அப்ராக்ருதஸ்வாசாதாரண திவ்யரூபத்தையும், இவையவன் பக்கலிலே ஸங்கதமாயிருக்கிறபடியையு மநுசந்தித்தத்யந்த விஸ்மிதராய், நிரதிசயப்ரீதியுக்தராய், நிரஸ்த சமஸ்தப்ரஸ்துத வ்யஸநராயிருந்து, நிரவதிகாஶ்சர்யோபய விதாகாரத்தையுள்ளபடியே சொன்னார்; இது தானும் நிரூபித்தவாறே யவன் செயலாயிருந்தது, இத்தையநுசந்தித்து, "அத்யந்தநிஹீநனுயிருந்தவென்னைக்கொண்டு திருவாய்மொழி சொல்லுவித்தருளுவதே" என்று, தம்மைக்கொண்டு திருவாய்மொழி பாடுவித்தருளினவனுடைய சர்வசக்தித்வ ஸௌசீல்யவாத்சல்யாதி கல்யாணகுணநுபவ ஜநிதநிரவதிக ப்ரீதியாலே சொல்லுகிருர்..........................................................*

### பன்னீராயிரப்படி.

ஒன்பதாந்திருவாய்மொழியில், கீழ் - தம்முடையவிரோதி நிவ்ருத்திக்கநுரூபமான, ஈஶ்வரனுடையவாஶ்சர்யசக்தியோகத்துக்கு ப்ரகாசகமாயுள்ள விசித்ரவிபூதிமத்தையை யநுபவித்து சந்துஷ்டரானவிவர், இவன் விரோதி நிவர்த்தநத்தில் விளம்பிக்கைக்கடியென்னென்று நிரூபித்து, அவன்தம்மைவாசிக கைங்கர்யங்கொள்ளுகைக்காக வைத்த ப்ரகாரத்தைக்காட்டக்கண்டு ப்ரீதராய், தம்விரோதி கிடக்கச்செய்தே அத்தை மதியாமல் அசத்கல்பமாக்கி யடிமைகொள்ளுகைக்கடியான நிருபாதிக சம்பந்தத்தையும், ப்ரதமப்ரவர்த்தநத்தையும், பக்தார்த்தப்ரவ்ருத்தியையும்,விரோதியைமதியாமல் விரும்பினபடியையும்,விருப்பத்தால்வந்த மேன்மையையும், மேன்மைக்கெல்லைநிலத்தையும், அப்பரத்வாநுபவத்துக்கு விலக்கான பாபத்தினுடைய நிவர்த்தநத்தையும், அதிசயிதாநுபாவ்ய குணயோகத்தையும், அதினுடைய நித்யாநுபாவ்யதையையும், நிஷ்ப்ரத்யுபகாரமான நிரவதிகோபகாரகத்வத்தையு மநுபவித்து ஏவம்வித ஸ்வபாவனனவ னென்விரோதியைக்கழித் தென்னை வாசிக கைங்கர்யங்கொண்டபடிக் கெத்தைச்செய்வேனென்று உபகார ஸ்ம்ருதியாலே அத்யந்தம் ஹ்ருஷ்டராகிருர்.......................................*

ஈடு.

கீழேபலகாலும், "சர்வேஸ்வரன்றன்னைப்பெறுவார்க்கு ப்ரதிபந்தகங்களுண்டாயிருந்தாலும் தானேதன்னைத்தரப்பார்க்குமன்று தகையவல்லதொரு ப்ரதிபந்தகமின்றிக்கே யிருக்க, 'தன்னாலேபேறு' என்றிருக்கிறவென்னை யிங்கேவைத்ததென்" என்று கேட்டுப்போருவாரொருவர் அவனும், இதுக்குநேரான பரிஹாரத்தைப்பண்ணாதே யேதேனுமொரு குணாவிஷ்காரத்தைப்பண்ணி அந்யபரதையைப் பிறப்பிக்குமாயிற்று இவர்க்கிதிலே நெஞ்சுசெல்லாதபடி. இனி, கீழிற்றிருவாய்மொழியிலேயும்- "சம்சாரத்தில்பொருந்தாமையுண்டாய் உன்னையொழியச் செல்லாமையுண்டாய் நீயே யுபாயமாயிருக்க, பின்னையுமென்னை யிங்கேவைத்து ஜீவிப்பித்துக்கொடுபோருகிற வாஸ்சர்யமிருந்தபடியென், இத்தை யெனக்கருளிச்செய்யவேணும்" என்ன, "கண்டீரேதானிதோராஸ்சர்யமிருந்தபடி" என்று அவ்வழியாலே தன்னுடைய வாஸ்சர்ய ஜகதாகாரதையைக் காட்டிக்கொடுத்து, அத்தோடே பணிபோரும்படி பண்ணினான். இவரும், அப்போதத்தனையுமத்தை யநுசந்தித்து, அது தலைக்கட்டினவாறே அநந்தரம் பழையபடியேகேட்கத்தொடங்குமவரிறே. "இஸ்ஸம்ஸாரத்திலே பொருந்தாதிருக்கிறவென்னை யிங்குவைத்ததுக்கு ஹேதுவென்" என்ன, "நம்மையிதுக்கொருஹேது நிர்ப்பந்தித்துக்கேட்கவேணுமோ; கண்டதெல்லாவற்றிலும் நாக்குநீட்டி அவற்றிலே ருசிபண்ணிப்போந்தீராகில், அதுக்கடியான கர்மங்கிடந்ததாகில், வாசநாருசி கிடந்ததாகில், அவற்றாலே யிருந்தாலாகாதோ" என்ன, "அவையுங்கிடக்கச்செய்தே, அவற்றையும்பாராதே யெனக்கு * மயர்வற மதிநலமருளி * பாசங்கள்நீக்கியென்னை யுனக்கேயறக்கொண்டபின்பென்னை யிங்குவைக்கிறதென்" என்று வடிம்பிட்டுக்கேட்க, "நீர்தாமும்மைநமக்காக வோக்கிவைத்திராகச்சொன்னீரோ – 'தனக்கேயாகவெனைக்கொள்ளுமீதே' என்று, ஆனபின்பு நாம்வேண்டினபடி விநியோகங்கொள்ளக்கடவோமன்றோ, ஆனபின்பு நமக்கதிசயத்தைப் பிறப்பிக்கை யுமக்கு ஸ்வரூபமாயிருக்குமிறே; ஆனபின்பு, உம்மைக்கொண்டு, ஸ்ரீபீஷ்மனைசரதல்பத்திலே யிட்டுவைத்து நாட்டுக்கு வெளிச்சிறப்பைப்பண்ணிக் கொடுத்தாப்போலே, நமக்கும் நம்முடையார்க்கும் போதுபோக்காகச் சிலப்ரபந்தங்களைப்பண்ணுவிக்கப்பார்த்தோம், அதுதலைக்கட்டுந்தனையுங்காணு மும்மை வைப்பது" என்று நேரான்பரிஹாரந்தன்னை யருளிச்செய்ய, இவருமத்தையநுசந்தித்து, சர்வேஸ்வரனு யவாப்தசமஸ்தகாமனாய் சர்வ ப்ரகார பரிபூர்ணனாயிருக்கிற வவன்றனக்கொரு குறையுண்டாய் அக்குறை பின்னைத் தம்மைக்கொண்டு தீர்ப்பதாகச்சொன்னவார்த்தையைப் பொறுக்கமாட்டிற்றிலர். "தனக்குச்சில ப்ரபந்தங்கள் வேண்டினால், அதுக்கீடான ஜ்ஞாநசக்த்யாதிகளால் குறைவற்ற ஸ்ரீவேதவ்யாஸபகவான், ஸ்ரீவால்மீகி

பகவான், ஸ்ரீபராஸரபகவான் தொடக்கமானார், 'செந்தமிழ்பாடுவார்' என்று சொல்லப்படுகிற முதலாழ்வார்கள், இவர்களெல்லாரு முண்டாயிருக்க, அநாதிகாலம் சம்சாரத்திலே பழகி சப்தாதிவிஷயங்களிலே யங்யபரனாய் 'அஸந்நேவஸபவதி' (அஸந்நேவஸபவதி) என்கிறபடியே அஸத்கல்பனாயுருமாய்ந்துபோன வென்னைக் கொண்டு தனக்கீடாகக்கவி பாடுவித்துக்கொள்ளுவதாகச் சொன்னவார்த்தை யென்னவார்த்தை, இதொரு நீர்மையிருக்கும்படியே, இதென்னநீர்மை" என்று, சர்வேஶ்வரன் தன்றிறத்தில் பண்ணினவுபகாரத்தை யநுசந்தித்து, அதுக்கொருப்ரத்யுபகாரங் காணாமையாலே தடுமாறிச்செல்லுகிறது..................*

## ஜீயர் அரும்பதம்.

என்றைக்கும் ப்ரவேஸே, ஈஶ்வரஸ்வபாவத்தையு மருளிச்செய்துகொண்டு கீழ்த்திருவாய்மொழியோடிதுக்கு சங்கதியருளிச்செய்கிறார் (கீழேயித்யாதி.) பலகாலுமென்றது - * உண்ணிலாவி தொடங்கிப் பலகாலுமென்றபடி. கேட்கும்படியைக்காட்டுகிறார் (இஸ்ஸம்சாரத்திலே யித்யாதி.) "பாசங்கள்" என்றத்தைப்பற்ற (கண்டதெல்லாவற்றிலுமித்யாதி.) (உனக்கேயறக்கொண்டபின்பு) என்றவநந்தரம், நீசொல்லுகிறவிது பரிஹாரமன்று ஆகையாலே என்று கூட்டிக்கொண்டு, அநந்தரம் (என்னையிங்குவைக்கிற தென்னென்று வடிம்பிட்டுக்கேட்க) என்றநுசந்திப்பது. வடிம்பிட்டு - நிர்ப்பந்தித்து. "ப்ரபந்தங்களைப் பண்ணுவிக்கப்பார்த்தோம்" என்று உத்தரம் சொல்லப்பார்த்து, "ஆனாலென்னுற்றாமையெல்லாங்கிடக்க வெறும் ஸ்வகார்யமே பார்க்குமத்தனையோ" என்கிறசங்கையையும் பரிஹரிக்கிறார் (நீர்தாமித்யாதி) ஒக்கிவைக்கை - ஆக்கிவைக்கை. வெளிச்சிறப்பு - ஜ்ஞாநப்ரகாஶம். பொறுக்கமாட்டிற் றிலரொன்றது - "என்சொல்லிநிற்பன்" இத்யாதியைப்பற்ற. "இன்கவிபாடும் பரமகவிகள்," "ஒப்பிலாத்தீவினையேனை," "எதுவுமொன்றுமில்லைசெய்வது" இத்யாதிகளைக்கடாக்ஷித்து (தனக்குச்சில ப்ரபந்தங்களித்யாதி) "என்னின்னுயிரின்றொன்றாய்" என்றத்தைப்பற்ற (அஸந்நேவேத்யாதி.) செந்தமிழ்பாடுவார் - அழகிய தமிழ்பாடும் முதலாழ்வார்களித்யர்த்தః. திருமொழி, "வெந்திறல்" இத்யாதி.......................................*

---

## ஒன்பதாந்திருவாய்மொழி.

# முதற்பாட்டு.

என்றைக்குமென்னையுய்யக்கொண்டுபோகிய
வன்றைக்கன்றென்னைத்தன்னாக்கியென்னாற்றன்னை
யின்றமிழ்பாடியவீசனையாதியாய்
நின்றவென்சோதியையென்சொல்லிநிற்பனோ.

## ஆறாயிரப்படி.

(என்றைக்குமென்னை) ஆத்மாந்தகிங்கரத்வேந ஸ்வீகரித்து, ப்ரதிதிநமும் என்னைத் தன்னைப்போலேபரிசுத்தனாக்கி, என்னை யுபகரணமா

கக்கொண்டு திருவாய்மொழிபாடுந் தன்னுடைய சர்வசக்தித்வத்தையும், எதத்ப்ரபந்த நிர்மாண ஹேதுத்வக்ருத நிரவதிகதேஜஸ்ஸையும் எத்தைச்சொல்லி பர்யவசிப்பன். காலதத்த்வமுள்ளதெல்லாம் சொன்னாற்ருனுர்வனேனென்கிருர்..............................................*

## பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், நிருபாதிகசேஷியானவ னென்னைக்கொண்டு தான் தன்னைக்கவிபாடிக்கொண்ட வௌஜ்ஜ்வல்யத்துக் கென்சொல்லி தரிப்பேனென்கிருர்.

என்றைக்கும் - ப்ரதமாங்கீகாரம் யாவதாத்ம பாவியாம்படி யங்கீகரித்து. போகிய - போகிற. அன்றைக்கன்று - காலந்தோறும். என்னை, உய்யக்கொண்டு- விசேஷகடாக்ஷம்பண்ணி. என்னை - என்னை. தன்னுக்கி - தனக்கேயாம்படி செல்லாமையைப் பிறப்பித்து. என்னால் - கவிபாடுகைக்கீடான ஜ்ஞாநாதிகளில்லாதவென்னைக் கரணமாகக்கொண்டு. தன்னை - வேதங்களும் பிற்காலிக்கும்படியானபெருமையையுடைய தன்னை. இன் - சப்தந்தானே நிரதிசயசரசமாய். தமிழ் - சர்வாதிகாரமான தமிழை. பாடிய - பாடின. ஈசனை - நிருபாதிகசேஷியாய். ஆதியாய்-எனக்குள்ளீடாக நின்று பாடுகையாலே யிதுக்கு மூலபூதனாய். நின்ற - அத்தாலேநிலைபெற்று. என்சோதியை - உஜ்ஜ்வலவிக்ரஹனு யிருக்கிறபடியை யெனக்கு ப்ரகாசிப்பித்தவனை. என் - எத்தை. சொல்லி - சொல்லி. நிற்பன் - தரிப்பேன்.

ப்ரதமமாபிமுக்யம்பண்ணும்படி யங்கீகரித்திலனென்னவோ, அத்தைமுழுக்க நடத்திற்றிலனென்னவோ, என்னைத் தனக்கே யாக்கிற்றிலனென்னவோ, நான் பாடினேனும்படி தான் பாடிற்றிலனென்னவோ, அத்தாலுஜ்ஜ்வலனுயிற்றிலனென்னவோ, எத்தைச்சொல்லி தரிக்கலாவதென்று கருத்து.............................*

## ஈடு - முதற்பாட்டு.

அதிக்ஷுத்ரனுயிருக்கிற வென்னை ஜ்ஞாநசக்த்யாதிகளையுடையேனும்படிபண்ணி, என்னையிட்டுத் திருவாய்மொழி பாடுவித்துக்கொண்டவுபகாரத்தை யநுசந்தித்துத் தரிக்கமாட்டுகிறிலேனென்கிருர்.

இப்படி நீர்படுகைக் கவன்செய்தநன்மைதானேதென்ன, இதுவென்கிருர் ( என்றைக்குமென்னையுய்யக்கொண்டு ) சர்வேஸ்வரனெருவனையொருநாள் விஷயீகரித்தால், பின்னை யவ்விஷயீகாரந்தன்னையே காலதத்வமுள்ளதனையுமநுசந்தித் துஜ்ஜீவிக்கலாயாயிற்றிருப்பது. "தவு ஸம ஸூ ஷூ ஸ ஸஸ்ர ஷு ஷூ" ( தச்சஸமஸ்ம்ருத்யஸம்ஸ்ம்ருத்ய ) என்கிறபடியே - பின்னை யென்றுமொக்க வத்தை ஸ்மரித்து தரிக்கலாம்படியாயிற்றிருப்பது. "ஸ்மரந்ராகவபாணாநாம்" (ஸ்மரந்ராகவபாணுநாம்) என்று அம்புக்கிலக்கானு ரலற்றுமாபோலே யாயிற்று, குணத்துக்கிலக்கானுரு மலற்றும்படி. அம்புபட்டபுண் மருந்திட்டாற்றலாம், குணத்தால்வந்தபுண்ணுக்குப் பரிஹாரமில்லையிறே. ஆக, சர்வேஸ்வர னெருநாளொருவனை விஷயீகரித்தா லதுதன்னையே யென்றுமொக்க ஸ்மரிக்கலாம்படியிருக்குமாயிற்று. இப்படிப்பட்ட விஷயீகாரந்தன்னை யொருகால் பண்ணிவிட்டவித்தனையோவென்னில் ( போகியவன்றைக்கன்று ) கழிகிற நாள்

தோறும் நாள்தோறு மிப்படியேயாயிற்று விஷயீகரித்தது. இதுதானிரு வர்படியாலு மாற்றப்போகாது. அவனுடைய விஷயீகாரத்துக் கிலக்கான விவர்படியைப்பார்த்தால், அத்தை யிவர் தாம்பொறுக்க வல்லவரல்லர்; அவனைப்பார்த்தால், தன்னை விஶ்வசித் துடனே கிடந்தவனை மடிதடவி னவன் "என்செய்தோமானோம்" என்றநுதபிக்குமாபோலே, எல்லாம் செய்து மொன்றும் செய்யாதானாய் "இவனுக்கென்செய்வோம்" என் றிருக்குமவன். (என்னைத்தன்னாக்கி) "அறிவிலேன்" என்கிறபடியே அ ஜ்ஞாநாசக்திகளுக் கிலக்காயிருக்கிற வென்னை, தன்னோடொக்க ஜ்ஞாந சக்த்யாதிகளை யுடையேனும்படிபண்ணியென்னுதல்; (என்னைத்தன்னாக் கி) தன்னுடையேனும்படிபண்ணி யென்னுதல். (என்னால்தன்னை) தன் னாலே தத்தசக்திகனானவென்னாலே, ஶ்ருதிஸ்ம்ருதீதிஹாஸாதிகளுக் கவி ஷயமாம்படியிருக்கிற தன்னை. "யதோவாசோநிவர்த்தந்தே" (யதோவா சோநிவர்த்தந்தே,) "யஸ்யாமதம்தஸ்யமதம்-அவிஜ்ஞாதம்விஜாநதாம்" (யஸ்யாமதம்தஸ்யமதம் - அவிஜ்ஞாதம்விஜாநதாம்) என்கிறபடியே ப்ர மாணங்களுக் கவிஷயமாம்படியிருக்கிற தன்னை. (இன்தமிழ்பாடிய) இ துதன்னிலோடுகிற வர்த்தமும் பரிமாற்றமுங் கிடக்கச்செய்தே, சொல் லினிமைதானே யாகர்ஷகமாயிருக்கும்படி. (பாடிய) என்னைக் கொ ண்டு பாடுவித்தா னென்னுதல், பாடினானென்னுதல். "ஏதத்ஸாமகாயந் நாஸ்தே" (ஏதத்ஸாமகாயந்நாஸ்தே) என்று முக்தன் ஸாமகாநம்பண் ணுமாபோலே, அவனுமிவரோட்டை யநுபவத்தால் வந்த ஹர்ஷத்துக் குப் போக்குவிட்டு "தென்னா" என்றுபாடுமாயிற்று. இப்படியினியவி துண்டானபடி யெங்ஙனே யென்னில் (ஈசனை) சொல்லவேணுமோ, சர்வேஶ்வரன் செய்யமாட்டாததுண்டோ; அரிதோ வவனுக்குக் கவிபா டினீர் நீராயிராநின்றீர், அவனைப் பாடினானாகச் சொல்லாநின்றீர், இது தான்செய்தபடி யென்னென்ன (ஆதியாய்நின்ற) நான் கவிபாடுகைக்கு ஹேதுவாய் நின்றான் - அவனடியாக நான் கவிபாடிற்று. ஹேதுவானப டிதானென்னென்னில் (என்சோதியை) பிடாத்தை விழவிட்டுத் தன் வடிவழகைக்காட்டினான். திருத்திரையெடுத்தால் கூப்பிடுமாபோலேகூப் பிட்டேன், அது கவியாய்த் தலைக்கட்டிற்று. வடிவழகைக்காட்டியாயிற்று க் கவிக்குள்ளுறைகொடுத்தது. நீரும் கவிபாடினீராகில் பின்னை யிப்படி கிடந்து படுகிறதென்னென்ன (என்சொல்லிநிற்பனோ) நானும்பாதிவ ழிவந்து அவனாலே விஷயீக்ருதனாயிருக்கிறேனோ; அன்றிக்கே, பெற்ற பேறுதானளவுபட்டாறியிருக்கிறேனோ. சாதநாநுஷ்டாநம்பண்ணினார் க்குப் பலம் தப்பாமையாலே நானுமிப்பேற்றுக்குச் சிலசெய்தேனாய், இ து ப்ராப்தமென்றிருக்கிறேனோ, பெற்றபேறுதான் ஸாத்மிக்குமதாயாறி யிருக்கிறேனோ, எத்தைச் சொல்லித் தரிப்பது.

"க்ருஷ்ணத்வைபாயநம்வ்யாஸம்வித்திநாராயணம்ப்ரபும் । கோஹ்யந்ய: புண்டரீகாக்ஷாந்மஹாபாரதக்ருத்பவேத்" (க்ருஷ்ணத்வைபா

யநம்வ்யாஸம் வித்திநாராயணம்ப்ரபும் । கோஹ்யந்ய:புண்டரீகாக்ஷாந் மஹாபாரதக்ருத்பவேத் ) என்றுப்போலே யிருக்கிறதாயிற்று. இதுக்காளவந்தாரருளிச்செய்யும்படி - “ சர்வேஶ்வரன் செய்யப்புக்கா லரியதுமொன்றுண்டோ ” என்றும். அங்ஙனன்றிக்கே, எம்பெருமானர், “இவர்தாம்சொன்னராகிலு மொருபடிபோகச்சொல்லித் தலைக்கட்டுவர், அவனும் தானே சொன்னுகில் நிரவத்யமாகத் தலைக்கட்டும்; சிறு ப்ரஜையெழுத்திடப்புக்கால் தானே யேதேனு மொருபடியிட்டுத் தலைக்கட்டும், பிதாவாத லுபாத்யாயனுத விடப்புக்கால் தானே யெழுத்தாயிருக்கும் ; அங்ஙனன்றிக்கே, இவன்கையைப் பிடித் திடுவிக்கப்புக்கவாறே, இவனேரிட்த்தே யிழுக்க அவனேரிடத்தேயிழுக்கக் குதறிக்கொட்டியாய் ரூபமழிந்து சிதறிப்போம்; அப்படியே, என்னை யுபகரணமாகக்கொண்டு கவிபாடாநிற்கச்செய்தேயும், என்னல் வரும்தோஷம் தன்பக்கல் ஸ்பர்ஶியாதபடி பாடுவித்தானென்கிருர் ” என்று. ................... ...............*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு. ( என்றைக்குமித்யாதி ) “ என்னைத்தன்னுக்கி யெனனுற்றன்னை யின்றமிழ்பாடியவீசனை - என்சொல்லிநிற்பன் ” என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை ( அதிக்ஷுத்ரனுயித்யாதி. )

பதாவதாரிகை ( இப்படிநீரித்யாதி ) “ போகியவன்றைக்கன்று - என்றைக்குமென்னை யுய்யக்கொண்டு ” என்றந்வயித்தர்த்தம் (சர்வேஶ்வரனித்யாதி.) “ ஒருநாள் விஷயீகரித்தா லென்றுமொக்க வத்தை யநுசந்தித்து தரிக்கலாயிருக்கும் ” என்னுமதுக்கு ப்ரமாணம் (தச்சஸம்ஸ்ம்ருத்யேத்யாதி.) “ [illegible] ” ( தச்சஸம்ஸ்ம்ருத்யஸம்ஸ்ம்ருத்ய ரூபமத்யத்புதம் ஹரே:।விஸ்மயோமேமஹாந்ராஜந்ஹ்ருஷ்யாமிசபுந:புந:) இதிகீதாஸ்வஷ்டாதஶே. அவன்குணமிப்படி யீடுபடுத்துமென்னுமதுக்கு வ்யதிரேகத்ருஷ்டாந்தம் (ஸ்மரந்நித்யாதி.) “ [illegible] ” ( ப்ரஹ்மதண்டப்ரகாஶாநாம் வித்யுத்ஸத்ருஶவர்ச்சஸாம் । ஸ்மரந்ராகவபாணுநாம்வ்வ்யதேராக்ஷஸேஶ்வர: ) இதியுத்தகாண்டே. அம்புபோலே குணங்கள் பாதகமோவென்ன ( அம்புபட்டவித்யாதி. ) உக்தார்த்தநிகமநம் ( ஆகவித்யாதி. )

இப்படிப்பட்ட விஷயீகாரந்தன்னை - என்றுமொக்க வநுசந்தித்து தரிக்கலாம்படியான வொருநாளை விஷயீகாரத்தையென்றபடி. இவ்வுபய பதங்களாலும் பலித்தவர்த்தம் - இவருடைய வாதரமு மவனுடைய வ்யாமோஹமுமென் றருளிச்செய்கிருர் (இதுதானென்று) உய்யக்கொண்ட விந்த விஷயீகாரந்தானென்றபடி. விவரணம் ( அவனுடையவித்யாதிவாக்யத்வயம். ) அதாவது - இவர் க்ருதஜ்ஞராகையாலும், அவன் “ உன்னடியார்க்கென்செய்வன் ” என்னும் ஸ்வபாவனுகையாலும், இருவராலு மாற்றப்போகாதென்றபடி. அன்றிக்கே, இவன்ருஒருகால் விஷயீகரித்தால் போராதோ, இவர்தாமு மத்தை யொருகாலநுசந்தித்தால் போராதோவென்ன (இதுதானித்யாதி) என்னுதல். மடிதடவுகை - மடியில் தநத்தைக்கு

ளவுகாண்கை. பொறுக்கவல்லவரல்லரென்றது - ப்ரத்யுபகாரம் தேடித்தடுமாறுவ னென்றபடி. தன்னுடையேனும்படி - தனக்கு சேஷமாம்படி.

"ஶ்ருதிஸ்ம்ருத்யாதிகளுக்கவிஷயம்" என்றதுக்கு ப்ரமாணம் (யதோவா ச இத்யாதி.) "இன்" என்றதுக்கர்த்தம் (இதுதன்னிலித்யாதி.) இதுதன்னில்- இத்திருவாய்மொழிதன்னிலென்றபடி. ஓடுகிறவர்த்தமாவது - திருவாய்மொழி பா டுவித்துக்கொள்ளுகை. பரிமாற்றமாவது - ஈஶ்வரனுடைய வ்யாமோஹம். "பா டிய" என்றதுக்கு - ப்ரயோஜககர்த்ருத்வமாதல், ஸ்வயம் கர்த்ருத்வமாதலென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (என்னைக்கொண்டித்யாதிவாக்யத்வயத்தாலே.) பாடி னானென்றது - "என்முன்சொல்லும்" என்கிறபடியே முற்சந்தைசொன்னானென் றபடி. சொன்னானென்னாதே, "பாடினான்" என்றதுக்கு பாவம் (ஏதத்ஸாமகாயந் நித்யாதி.) இப்படி போக்யதையுண்டாயிற்றவன் சர்வசக்தியாகையாலே யென்னு மத்தை சங்காபூர்வகமாக வருளிச்செய்கிறார் (இப்படியினியவித்யாதி.)

மேலுக்கவதாரிகை (கவிபாடினீரித்யாதி.) பாட்டுக்குக் காரணபூதனிவனெ ன்கிறார் (நான் கவிபாடுகைக்கித்யாதி.) விவரணம் (அவனடியாகவித்யாதி.) ஹேதுவானபடி யென்னென்னிலென்றது-ஸ்வரூபத்தாலேயோ,குணத்தாலேயோ, விக்ரஹத்தாலேயோ வென்றபடி. வடிவழகைக்காட்டி யென்று - ஹேதுவான ப்ர காரத்தை யருளிச்செய்கிறார் (பிடாத்தையித்யாதி.) பிடாத்தை - போர்வையை. கவிக்கு ஹேதுவாக வடிவழகைக் கீழேசொல்லி, "என்சோதியை" என்றதுக்கு- கவிக்கு விஷயமாக பாவாந்தரம் (வடிவழகையித்யாதி.) உள்ளுறைகொடுத்தது- விஷயமாக்கிற்றென்றபடி. என்சோதியை - உஜ்ஜ்வலமான வடிவையுடையனாயிரு க்கிறபடியை யெனக்கு ப்ரகாசிப்பித்தவனை யென்று சப்தார்த்தம்.

"என்சொல்லிநிற்பன்" என்கிறதென், ஆறியிருக்கப் போகாதோவென்ன வருளிச்செய்கிறார் (நானும் பாதிவழியித்யாதி வாக்யத்வயத்தாலே.) ஏதத்விவர ணம் (சாதநாநுஷ்டாந மித்யாதிவாக்யத்வயமும்.)

"என்னுற்றன்னையின்றமிழ்பாடியவீசனை" என்றதுக்குத்ருஷ்டாந்தம் (க்ரு ஷ்ணேத்யாதி) "க்ருஷ்ணத்வைபாயநம் வ்யாஸம் வித்தி நாராயணம் விபும் । கோஹ்யந்ய꞉ புண்டரீகாக்ஷாந் மஹாபாரதக்ருத்பவேத்" (க்ருஷ்ணத்வை பாயநம்வ்யாஸம் வித்திநாராயணம்விபும் । கோஹ்யந்ய꞉புண்டரீகாக்ஷாந்மஹாபார தக்ருத்பவேத்) இதி த்ருதீயேம்ஸே சதுர்த்தே. அதாவது - வேதவ்யாசனை யுபக ரணமாகக்கொண்டு மஹாபாரதம் செய்தாப்போலே யென்றபடி. இதுக்கென்றது- இப்பாட்டுக்கென்றபடி. ஆளவந்தார் நிர்வாஹத்துக்கு, "இன்றமிழ்பாடியவீசன்" என்றதிலேநோக்கு. ஈசன் - சமர்த்தனென்றபடி. எம்பெருமானார் நிர்வாஹத்துக் கு, "என்னுற்றன்னை யின்றமிழ்பாடியவீசனை" என்றதிலே நோக்கு. ஈசன்-ஹே யப்ரதிபடனென்றபடி. "க்ருஷ்ணத்வைபாயநம்" (க்ருஷ்ணத்வைபாயநம்) இ த்யாதி - ஆளவந்தார் நிர்வாஹத்திலே.

போகியவன்றைக்கன்று - என்றைக்கு மென்னை யுய்யக்கொண்டு - என்னைத் தன்னாக்கி யென்னுற்றன்னை யின்றமிழ்பாடிய வென்றுதொடங்கி, என்சொல்லிநிற் பனோ வித்யந்வய꞉......................................................*



# இரண்டாம்பாட்டு.

என்சொல்லிநிற்பனென்னின்னுயிரின்றென்று
யென்சொல்லால்யான்சொன்னவின்கவியென்பித்துத்
தன்சொல்லாற்றான்றன்னைக்கீர்த்தித்தமாயனென்
மூன்சொல்லுமூவுருவாமுதல்வனே.

## ஆறாயிரப்படி.

(என்சொல்லி) என்னையுமொருவஸ்துவாகக்கொண்டு, என்சொல்லால் யான்சொன்ன வின்கவியென்பித்து - ப்ரஹ்மருத்ராதிகளுக்காத்மாவாய் நின்று ஸ்ருஷ்ட்யாதிகளைப்பண்ணினப்போலே, என்னையுபகரணமாகக்கொண்டு திருவாய்மொழிபாடியருளின தன்னுடைய வித்தகுணத்தை யெத்தைச்சொல்லி பர்யவஸிப்பதென்கிறார் ...... ............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், நான் 'தன்னைக்கவிபாடுகைக்கு, ப்ரதம ப்ரவர்த்தகனான தான் நான்பாடினேனென்று லோகத்தில் ப்ரஸித்தமாக்கித் தான் தன்னைப்பாடிக்கொண்ட வாஶ்சர்யபூதனை யெதுசொல்லி தரிப்பேனென்கிறார்.

என் - என்னுடைய. இன்-விஷயாந்தரஸக்தமான. உயிர்-ஆத்மாவானது. இன்று-இன்று. ஒன்றாய்-தனக்கொருவஸ்துவாய். என்-என்னுடைய. சொல்லால்-வசநவ்யக்தியாலே. யான்-நான்கர்த்தாவாக. சொன்ன-சொன்ன. இன் - இனிய. கவி-கவி. என்பித்து-என்றுநாட்டிலேப்ரசித்தமாக்கி. தன் - தன்னுடைய. சொல்லால்-வாக்காலே. தான்-தான்கர்த்தாவாய்க்கொண்டு. தன்னை - தன்னைவிஷயமாக்கி. கீர்த்தித்த-ஸ்துதித்தவனாய். நான்சொன்னேனென்கைக்கு, என் - எனக்குள்ளேயிருந்து. மூன்சொல்லும்-முன்னுருச்சொல்லக்கடவ. மாயன்-ஆஶ்சர்யபூதனாய். இதுக்கு தாஹரணமென்னலாம்படி, மூவுருவாம்-மூர்த்தித்ரயத்தையுடையனாய். முதல்வன்-ஏகீபவித்திருக்கிற காரணபூதனை. என்-எத்தை. சொல்லி-சொல்லி. நிற்பன் - தரிப்பேன்.

அவனுபகாரம் பாசுரத்துக்கு நிலமல்லவென்று கருத்து ....................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

தான் தன்னைக்கவிபாடி, நான்பாடினேனென்று லோகத்தில் ப்ரஸித்தமாக்குவதே! (ஒருவனுடையபடி யிருந்தபடியென்) என்று அவனுடைய வாஶ்சர்யத்தைக்கண்டு விஸ்மிதராகிறார். அநாதிகால மஹங்காரமமகாரங்களாலே நஷ்டப்ராயமாய்த் தன்பக்கல் வைமுக்யத்தைப்பண்ணிப்போந்தவென்னை, நிர்ஹேதுகமாக நானுபிமுக்யம்பண்ணும்படி அவன் விஷயீகரித்தபடியை யநுஸந்தித்தா லெத்தைச்சொல்லி நான்தறையில் கால்பாவுவதென்கிறார்.

(என்சொல்லிநிற்பன்) அவனென்னை விஷயீகரித்த விஷயீகாரம் நிர்ஹேதுகமென்னவோ, ஸஹேதுகமென்னவோ. இத்தலையை யாராய்ந்

துபார்த்தவிடத் தொருஹேதுகாண்கிறிலர், அத்தலையை யநுசந்தித்துப் பார்த்தவிடத்தொரு ஹேதுகாண்கிறிலர். அநாதிகாலம் கைவிட்டதுக்கு மொருஹேதுகாண்கிறிலர், இன்று கைக்கொண்டதுக்கு மொருஹேது காண்கிறிலர். என்றிய, அதுவென், உடையவனுகையாலே தன்னுடைமையை வேண்டினபோது விஷயீகரித்தானுனலோவென்னில் ; அங்ஙனேசெய்யப்போகிறதில்லை; தன்னுடைமையைத் தான் விஷயீகரித்தானுயிருக்கையன்றிக்கே, இவர்வாக்காலே தன்னைக்கவிபாட, தானுமுளனுய்த் தன்விபூதியுமுண்டாயிற்றாக நினைத்திராநின்றானவன்; ஆகையாலே தான் தரிக்கைக்கோ ரூற்றங்கோல்காண்கிறிலர்.

(என்னின்னுயிரின்றென்றாய்) (இன்னுயிர்) பகவதபிப்ராயத்தாலே, அவனுடைய வங்கீகாரத்துக்கிலக்கானபடியாலே சொல்லுகிறாராதல்; அன்றிக்கே, விபரீதலக்ஷணையாலே பொல்லாதென்கிறாராதல். (இன்றென்றாய்) இன்றைக்கு முன்பிதுதன்னை யொன்றாக நினைத்திராராயிற்று, இன்றாயிற்றொருவஸ்துவாயிற்றது. இப்படி யும்மை விஷயீகரித்து அவன்றான்கொண்ட காரியந்தானேதென்ன (என்சொல்லாலித்யாதி) சொல்லுமென்னதாய், சொன்னேனும்நானாய், அதுதா னினியகவியாம்படி நாட்டிலே ப்ரஸித்தமாக்கினான். சப்தமாகில் சர்வஸ்வாமியான சர்வேஶ்வரனதாயிருக்கு மத்தனைபோக்கி, க்ஷுத்ரனான சம்சாரிக்கில்லையிறே. இனி சேதநனுக்குத் தனித்து ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளுக்கு யோக்யதையில்லையிறே; ஸ்வரூபஸ்த்தித்யாதிகள் தததீநமா யிருக்கையாலே. இதுதன்னை யினியகவியென்று நாட்டிலே ப்ரஸித்தமாக்கினான், "பாலேய்தமிழரிசைகாரர்பத்தர்பரவுமாயிரம்" என்கிறபடியே; தான் வென்று அல்லாதாரோடொக்க நின்று அர்ஜுநனைப்புகழுமாபோலே. "மலைபுரைதோள்" இத்யாதி. [செங்கணலைவலை] "அவாக்யநாதரஃ" (அவாக்யநாதரஃ) என்றிருக்கக்கடவவவன், அதடையவழிந்தேத்தத் தொடங்கினானாயிற்று. "இன்கவியென்பித்து" என்னாநின்றீர், இங்ஙனன்றோவென்னில்; அன்று; பின்னைச்செய்தபடி யென்னென்னில் (தன்சொல்லாலித்யாதி) சொல்லும் தன்னது, சொன்னானும் தான், சொல்லிற்றும் தன்னை. கவி பாட்டுண்டேன் நானாகில் கிடீர் ! கவிபாடினேன் நானாவது. தான் தன்னைக் கவிபாடினானாகில், நீர் கவிபாடினீரென்று நாட்டிலே ப்ரஸித்தமாக்கினபடி யெங்ஙனேயென்னில் (மாயன்) சொல்லவேணுமோ, ஆஶ்சர்யசக்தியுக்தனன்றோ. என்னை யுபகரணமாகக்கொண்டு தானே கவிபாடினான், உம்மை யுபகரணமாகக்கொண்டு கவிபாடினபடி யெங்ஙனேயென்ன (என்முன்சொல்லும்) அவன் முற்சந்தையிடப் பின்னே நான்சொன்னேன். தான் சொன்னானாகில் ஸ்ரீகீதையோபாதி வறமுறுகலாய்ப்போமிறே. நம்பிதிருவழுதிநாடுதாஸர், "ஸ்ரீகீதைபோவானொருவன் சந்த்யாஸதஸ்ஸிலேவந்துகண்டால், பின்னையிவனுக் குழக்கரிசியைக்கொடுப்பித்

துவிடுமித்தனைபோக்கி அங்கவர்களுள்ளிடங்கொடார்கள்; திருவாய்மொழி யப்யஸித்தா னொருவிண்ணப்பஞ்செய்வான் சென்றால், சர்வேப்ʼவரனும் க்ராமத்திலுள்ளாரும் புறப்பட் டெதிர்கொண்டு தங்களிருப்பிடத்தையொழித்து அவனுக்குக்கொடுத் தாதரியாநிற்பர்கள்" என்று ப்ரஸாதிப்பர். அதுதா னென்போலவென்றால் (மூவுருவாமுதல்வனே) ப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்து அவனை யத்யயநம்பண்ணுவித்து தேவர்களுக்கு வெளிச்சிறப்பைப்பண்ணுவித்து "அது தன்னை ப்ரஹ்மாசெய்தான்" என்று அவன்றலையிலே யேறிட்டும், ருத்ரனுக் கந்தராத்மாவாய்ப்புக்கு நின்று த்ரிபுரதஹநத்தைப் பண்ணுவித்து "ருத்ரன்செய்தான்" என்று அவன்றலையிலே யேறிட்டும் விருதுபிடிக்கப்பண்ணினாப்போலேயும், தானே ப்ரபந்தத்தைப்பண்ணி, நான் பண்ணினேனென்று என்றலையிலே யேறிட்டு எனக்கொரு ப்ரஸித்தியைத்தந்தான். தானே கார்யஞ்செய்து பிறர்தலையிலே யேறிடுகை யவனுக்குப்பண்டே ஸ்வபாவங்கிடீர்! "யொ ஬்ரஹ்மாணம் விதயாதி வூ஬ம் யொவைவெதாம்ஶ்ச ப்ரஹிணொதி" (யோப்ரஹ்மாணம்விததாதிபூர்வம்யோவைவேதாம்ஶ்சப்ரஹிணோதி) என்று ப்ரஹ்மாவை யோதுவித்ததும், "விஷ்ணுராத்மா ஭கவதொ ஭வஸ்யாமித தெஜஸஃ। தஸ்மாத்தநுர்ஜ்யாஸம்ஸ்பர்ஶம் ஸ விஷெஹெ மஹெஶ்வரஃ." (விஷ்ணுராத்மாபகவதோபவஸ்யாமிததேஜஸः। தஸ்மாத்தநுர்ஜ்யாஸம்ஸ்பர்ஶம்ஸவிஷேஹே மஹேப்ʼவரः.) இப்போதுதானே நடத்திக்கொண்டதென்னென்றால்; ஸ்வேநரூபேண நின்று கார்யஞ்செய்யுமாபோலே ப்ரஹ்மருத்ராதிகளைத் தனக்கு சரீரமாகக்கொண்டு நின்று ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களைப்பண்ணி, அவர்கள்மேலே யேறிட்டாப்போலேகிடீர்! என்மேலே யேறிட்டு, கவிபாடினேன் நானாகச்சொல்லித் தலைக்கட்டினபடியுமென்கைக்காகச்சொல்லிற்று ..................................................*

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு (என்சொல்லியித்யாதி.) "என் சொல்லால்யான் சொன்னவின் கவியென்பித்துத்தன் சொல்லால் தான்றன்னைக் கீர்த்தித்தமாயன்" என்றபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை (தான்தன்னையித்யாதி.) "என்னின்னுயிரின்றன்றாய் - என்சொல்லிநிற்பன்" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகாந்தரம் (அநாதிகாலமித்யாதி.)

"என்சொல்லிநிற்பன்" எந்தஹேதுவைச்சொல்லித் தரிப்பனென்றுசப்தார்த்தம். ஒருவழியாலும்தரிக்கைக் காலம்பநமில்லையென்று கருத்து. தமக்காலம்பநமில்லாமையைப்பரக்க வுபபாதிக்கிறார் (அவனென்னையென்றுதொடங்கி, ஊற்றங்கோல்காண்கிறிலரென்னுமளவாலே.) கீழ்வாக்யத்தி லர்த்தத்தை வ்யுத்க்ரமமாக விவரிக்கிறார் (இத்தலையை யித்யாதிவாக்யத்வயத்தாலே.) "இத்தலையை" இத்யாதி வாக்யவிவரணம் (அநாதிகாலமித்யாதிவாக்யத்வயம்.) அதாவது-அநாதிகாலமுபேக்ஷித்து உத்கடயாத்ருச்சிகமடியான த்ருப்தவிஷயீகாரம்போலே நிர்ஹேதுகமென்னவும்போகாது, இத்தலையிலொரு ஹேதுகாணாமையாலே உபாஸகவிஷயீகாரம்

போலே ஸஹேதுகமென்னவும் போகாதென்றபடி. ஸ்வாமியானவன், ஸ்வத்தைய பேக்ஷிதமானபோதங்கீகரிப்பன், அநபேக்ஷிதமானபோது விட்டுவைப்பன், ஆகையாலே நிர்ஹேதுகமென்னவொண்ணுதோவென்கிற ப்ரதிவாத்யுக்தியை யநுவதித்து பரிஹரிக்கிருர் (என்றியவித்யாதி வாக்யத்வயத்தாலே) என்றிய-எதுக்காக. அதுவென்-அதேது. ஊற்றங்கோல்-ஊன்றுகோல். இன்றென்றது - * மயர்வறமதிநலமருளின வின்றென்றபடி.

மேலே "ஒன்ருய்" என்னுமிற்க, "இன்னுயிர்" என்று ஶ்லாகிக்கலாமோவென்ன (பகவதித்யாதி) பரிஹாராந்தரம் (அவனுடையவித்யாதி) மூன்ருமர்த்தம் (அன்றிக்கே விபரீதேத்யாதி) "இன்ருென்ருய்" என்றதுக்குபாவம் (இன்றைக்குமுன்பித்யாதி)

மேலுக்கவதாரிகை (இப்படியும்மையித்யாதி) அவன் ப்ரஸித்தமாக்கினுனென்கிறதென், வஸ்துதஃ சப்தமும்மதன்ருேவென்ன (சப்தமாகிலித்யாதி) சொன்னவர் நீரல்லீரோவென்ன (இனிசேதநனுக்கித்யாதி) அதுக்குஹேது (ஸ்வரூபஸ்த்தித்யாதிகளித்யாதி) சப்தார்த்தம் (இதுதன்னையித்யாதி) நாட்டிலே ப்ரஸித்தமாக்கினுனென்கைக்கு, இவர்கவியை நாட்டாரினிதென்பர்களோவென்ன (பாலேய்தமிழரித்யாதி) தானேசெய்து வேருெருவர்பக்கலிலே ப்ரஸித்தமாக்கினதுக்கு த்ருஷ்டாந்தம் (தான்வென்றித்யாதி) தானேவென்று அவனைப்புகழ்ந்தானுேவென்ன, ப்ரமாணம் (மலையித்யாதி) பெரியாழ்வார்திருமொழி. "அலைவலை" என்றதிங்குவேண்டுவது. அலைவலை-பஹுஜல்பம் அதுக்கர்த்தம் (அவாகீத்யாதி)

தடஸ்த்தசங்கை (இன்கவியித்யாதி) "தன்சொல்லால்" இத்யாதிக்கர்த்தம் (சொல்லும்தன்னதித்யாதி) "என்சொல்லால் யான்சொன்ன" என்றதுக்கு ப்ரதிகோடிதயா, தன்சொல்லால் தான் கீர்த்தித்தவென்னுதே, "தன்னை" என்றுவிசேஷிக்கிறதென்னென்ன; த்ருஷ்டாந்தார்த்தமென்கிருர் (கவிபாட்டுண்டேனித்யாதி) கவிபாட்டுண்கை-கவிக்கு விஷயமாகை.

மேலில்பதத்துக்கு சங்கதியிடுவாராக வதிஷ்ட்டிகை (என்னையுபகரணமாகவித்யாதி) தான்சொல்லவொண்ணுதோ, இவனைக்கொண்டு சொல்லவேணுமோவென்ன (தான்சொன்னுனுகிலித்யாதி) வறமுறுகல் - கருகிப்போனது. ஸ்ரீகீதைக்கும் திருவாய்மொழிக்குமுண்டான வாசியை யாப்தஸம்வாதத்தாலே தர்ஶிப்பிக்கிருர் (நம்பியித்யாதி) ஸந்த்யாஸதஸ்ஸு - ஊர்ப்பொதுச்சாவடி. அதுதானென்போலவென்றது - தான்கவிபாடி ஆழ்வார்மேலே யேறிடுகிறதுதா னென்போலேயென்றபடி. "கீழ்ச்சொன்ன வேதப்ரதாநமும் த்ரிபுரதஹநமு மவனேசெய்தான்" என்னுமதுக்குமேலே ப்ரமாணங்காட்டுவாராக பீடிகை (தானேகார்யமித்யாதி) ப்ரமாணந்தன்னை யருளிச்செய்கிருர் (யோப்ரஹ்மாணமித்யாதி) (ஸவிஷேஹேமஹேஶ்வரஃ) என்றதும் என்றுகூட்டுவது. இதுக்கு, (ஸ்வபாவங்கிடீர்) என்றுகீழோடேயந்வயம். "மூவுருவாமுதல்வன்" என்று - ஸ்வவ்யாபாரத்துக்குக் காரணமென்பா னென்னென்ன; தான்செய்தகார்யம் தன்னதீநமானுப்போலே இவர்கள்செய்தகார்யமும் தன்னதீநமென்கைக்காகச் சொல்லுகிறதென்கிருர் (இப்போதுதானேயித்யாதி) அவர்கள்மேலே யேறிட்டது மதுபோலேகிடீரொன் றத்யாஹார்யம்.

என்னின்னுயிரின்ருென்ருயென்றுதொடங்கி, மூவுருவாமுதல்வன் - என்முன்சொல்லும் - என்சொல்லிநிற்ப னித்யந்வயஃ.................. ..................*

---

## மூன்றாம்பாட்டு.

ஆமுதல்வனிவனென்றுதற்றேற்றியென்
னாமுதல்வந்துபுகுந்துநல்லின்கவி
தூமுதற்பத்தர்க்குத்தான்றன்னைச்சொன்னவென்
வாய்முதலப்பனையென்றுமறப்பனோ.

### ஆறாயிரப்படி.

(ஆமுதல்வன்) ஆமிவனே சர்வேஶ்வரனென்று தன்னையுள்ளபடியே யறிவித்து, என் நாவைநியமித்துக் கொண்டுவந்து புகுந்து, * அயர்வறுமமரர்களுக்கு போக்யமாக நல்லனவா யினியவானகவிகளைத் தான் தன்னைச்சொல்லுகையாகிற விம்மஹோபகாரத்தை யென்று மறப்பனென்கிறார்.......................................................................*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், பக்தர்களுக்காக வென்னைக்கொண்டு தான் தன்னைக் கவிபாடினவுபகாரகனை யொருகால் மறக்கவிரகுண்டோ வென்கிறார்.

முதல்வன்-காரணபூதனான தான். இவன்-இவன். ஆம் - கவிபாடுகைக்காம். என்று - என்று. தன் - தன்னை. தேற்றி-என்பக்கலிலே தேறும்படிபண்ணி. அதுக்கிடாக, முதல்-முந்துற. என்-என். நா-நாவிலே. வந்து-வந்து. புகுந்து-புகுந்து. நல்-அர்த்தசப்தலக்ஷணங்களில் குறைவற்றிருப்பதாய். இன் - சந்தர்ப்பசாரஸ்யத்தையுடைய. கவி - கவியை. தூ - சத்வசுத்தி. முதல் - முதலான. பத்தர்க்கு - பக்திகுணயோகத்தையுடையவர்க் கநுபாவ்யமாம்படி. தான்-தானே. தன்னை - தன்னை. சொன்ன - சொல்லாநின்றுகொண்டு. என் - என். வாய் - வாக்வ்ருத்திக்கு. முதல் - முதலான. அப்பனை - உபகாரகனை. என்று - என்று. மறப்பன் - மறப்பன்.

அவ்வுபகாரகத்வம் ப்ரகாசியாததொருகாலமுண்டாகிலிறே மறக்கலாவதென்றுகருத்து. கவிபாடுகைக்கு ப்ரதாநனுவா னிவனென்று என்னைத் தன்பக்கலிலே தேறும்படிபண்ணி யென்றுமாம். வாய்முதலென்று - வாய்த்த ஹேதுபூதனென்றுமாம். தூமுதல் பத்தரென்று - அநந்யப்ரயோஜநராய் ப்ரதாநரான பக்தரென்றுமாம்.......................................................................*

### ஈடு - மூன்றாம்பாட்டு.

ப்ரத்யுபகாரம்பண்ணுதொழியவு மாங்கிடீர் நான் மறந்துபிழைக்கப் பெற்றேனாகி லென்கிறார்.

( ஆமுதல்வனிவனென்றுதற்றேற்றி ) முதல்வனாமிவனென்று தன்பக்கலிலே யெனக்குத் தெளிவுண்டாம்படியாகப்பண்ணி - காரணவாக்யங்களிலுபாஸ்யனாகச் சொல்லப்படுகிறான் தானேயென்று தன்பக்கலிலே நான்தெளியப்பண்ணியென்னுதல்; அன்றிக்கே, பரமபதத்தோபாதி சம்சாரத்தையும் திருத்தநினைத்தோம், அதுக்கிவன்முதலாம் - அடியா

மிவனென்று, தற்றேற்றி-என்பக்கலிலே தன் ஸ்வரூபாதிகளைத் தெளியப்பண்ணியென்னுதல். இங்கேயருளிச்செய்யும்வார்த்தை - "திருப்புற்றுக்குக் கிழக்கே கரியமாணிக்காழ்வார்திருமுன்பின் ஸோபாநத்திலே ஆளவந்தாரெழுந்தருளியிருக்க, உடையவர் திருப்புற்றுக்குக் கிழக்காக வெழுந்தருளி நிற்கிறவரைக்கண்டு, 'ஆமுதல்வனிவன்' என்றருளிச்செய்தாராம்" என்று. (என்நாமுதல்வந்துபுகுந்து) சர்வேஶ்வரன் ப்ரஹ்மாவைக்கடாக்ஷித்து, அவன்பின்னை "ஒஜ ஶாமெஷவடைஸெ ஹ்வூ வூடெயாஸரஸ்வதீ" (மச்சந்தாதேவதேப்ரஹ்மந் ய்ரவ்ருத்தேயம்ஸரஸ்வதீ) என்கிறபடியே அவன்சரஸ்வதியையேவி, இப்படி நாலிரண்டு நிலைநின்றிறே ஸ்ரீவால்மீகிபகவானைப் பேசுவித்தது; அங்ஙனேரிடையீடின்றிக்கே, என்னுடையநாக்கிலேதானே முற்பாடனாய்வந்து புகுந்தென்னுதல். அன்றிக்கே, என் நாவுக்கடியாய்வந்து புகுந்தென்னுதல். (நல்லின்கவி) லக்ஷணோபேதமாய், அந்தலக்ஷணங்கிடக்கச்செய்தே சொல்லினிமைதானே ஆகர்ஷகமாம்படி யினிதான கவிகளை. (தூமுதல்பத்தர்க்கு) அஸ்ப்ருஷ்ட சம்சாரகந்தரான நித்யசூரிகளுக்கு. "கேட்டாரார் வானவர்கள்" என்கிறபடியே, அவர்கள்கொண்டாடும்படிசொன்ன வென்னுதல். சம்சாரத்தில் தலையான முமுக்ஷுக்களுக்கு. (தான்தன்னைச் சொன்ன) தானேசொல்லுதல் நானேயொருபடிசொல்லுதல் செய்கையன்றிக்கே, *என்நாமுதல்வந்துபுகுந்து தான்தன்னைச்சொன்னாயிற்று. (என்வாய்முதலப்பனை) எனக்குவாய்த்த காரணபூதனான மஹோபகாரகனை யென்னுதல்; "என் நாமுதல்" என்கிறது தன்னையே யநுபாஷித்து, என் வாக்குக்கு முதலானவப்பனையென்னுதல். (என்றுமறப்பனோ) முன்பநாதிகாலம் மறந்துபோந்ததாகில் இனிமேல் நினைக்கைக்குடலான காலத்தையெல்லாம் மறக்கைக்குடலாக்கினால் தான்மறப்பனோ. முன்பு நினைக்கையிலுள்ள வருமையோபாதியும் போருமினி மறக்கையிலுள்ள வருமையும், இனியேதேனுமொருநாள் தானென்னாலே மறக்கப்போமோ*

## ஜீயர் அரும்பதம்.

மூன்றாம்பாட்டு (ஆமுதல்வனித்யாதி.) "வாய்முதலப்பனை யென்று மறப்பன்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (ப்ரத்யுபகாரமித்யாதி)

"தற்றேற்றி" என்று - தச்சப்தத்தாலே யீஶ்வரனைச்சொல்லி, தன்பக்கலிலே தெளிவைப்பண்ணியென்றபடி. விவரணம் (காரணவாக்யங்களிலித்யாதி.) அர்த்தாந்தரம் (அன்றிக்கேயித்யாதி.) "தற்றேற்றி" என்றதுக்கு-தன் ஸ்வரூபாதிகளை யென்பக்கலிலே தெளியப்பண்ணி யென்றிரண்டாமர்த்தம். அதாவது - ஜகத்தைத்திருத்தத்தக்க ஜ்ஞாநமுண்டாம்படி *மயர்வறமதிநல மருளுகை. ப்ராசங்கிகமாக வைதிஹ்யம் (இங்கேயித்யாதி.) இங்கேயென்றது - ஜகத்தைத் திருத்துகைக்கிவனடியாமென்று சொன்ன விவ்விடத்திலே யென்றபடி.

என்னாவிலே முற்பாடனாய்வந்து புகுந்தென்னுமதுக்கு வ்யாவர்த்யம் (சர்வேஶ்வரனித்யாதி.) இடையீடு - வ்யவதாநம். என்னாவிலே, முதல்-முற்பாடனாய்.

அத்வாரகமாகப்ரவேசித்தென்னுதல்; என்னுவுக்குமுதலான காரணமாய்வந்து புகுந்தென்னுதல். "ராமஸ்யசரிதம்க்ருத்ஸ்நம்குருத்வம்ருஷிஸத்தம । மச்சந்தாதேவதேப்ரஹ்மந்" (ராமஸ்யசரிதம்க்ருத்ஸ்நம்குருத்வம்ருஷிஸத்தம । மச்சந்தாதேவதேப்ரஹ்மந்) இத்யாதிபாலகாண்டே. என்னுவுக்கடியாயென்றது - என்வாக்ப்ரவ்ருத்திக்கடியா யென்றபடி.

தூயராய் - பரிசுத்தராய். ப்ரதாநரான நித்யஸூரிகளுக்கென்று முந்தினவர்த்தம். "முதல் பத்தர்" என்றதுக்கர்த்தாந்தரம் (சம்சாரத்திலித்யாதி.) எம்பெருமானுர் நிர்வாஹத்திலே வ்யாவ்ருத்தி (தானேசொல்லுதலித்யாதி.)

"என்றுமறப்பனே" என்றதுக்குபாவம் (முன்பகாரீத்யாதி.) கீழ்வாக்ய விவரணம் (முன்புநினைக்கையித்யாதி வாக்யத்வயமும்)..............................*

## நான்காம்பாட்டு.

அப்பனையென்றுமறப்பனென்னுகியே
தப்புதலின்றித்தனைக்கவிதான்சொல்லி
யொப்பிலாத்தீவினையேனையுய்யக்கொண்டு
செப்பமேசெய்துதிரிகின்றசீர்கண்டே.

### ஆறாயிரப்படி.

(அப்பனையென்று) என்னை யுபகரணமாகக்கொண்டு கவிசொல்லாநிற்கச்செய்தே, தப்பாதபடி சொல்லி யொப்பிலாத்தீவினையேனுயிருக்கச்செய்தே என்னை யாத்மாந்தமாக வடிமைகொண்டு, மேன்மேலன நன்மைசெய்து திரிகின்ற சீர்கண்டு, அப்பனையென்று மறப்பனென்கிறார்.*

### பன்னீராயிரப்படி.

அநந்தரம், என்விரோதியைப்பாராதே விரும்பி யென்னைக்கொண்டு தப்பாமல் கவிபாடுவித்துக்கொண்ட மஹோபகாரத்தைக் கண்டுவைத்து அவனைமறக்கும்படியென்னெனன்கிறார்.

என்னுகியே - என்பக்கலிலேதானாய். தப்புதல் - தப்புதல். இன்றி - இல்லாதபடி. தனை - தன்னை. தான் - தானே. கவி - கவி. சொல்லி - சொல்லி. ஒப்பு-ஒப்பு. இலா - அற்றிருப்பதாய். தீ - க்ரூரமான. வினையேனை - பாபத்தையுடையேனான வென்னை. உய்ய - உஜ்ஜீவிக்கும்படி. கொண்டு - கைக்கொண்டு. அஸ்ப்ருஷ்டசம்சாரகந்தரோடு பரிமாறுமாபோலே, செப்பமே - செவ்வையே. செய்து-செய்து. திரிகின்ற - வர்த்திக்கிற. சீர் - சீலத்தை. கண்டு - கண்டுவைத்து. அப்பனை-இப்படி யுபகாரகனானவனை. என்று - அபகாரியானபோதுதான். மறப்பன் - மறப்பனே...............................................................................*

### ஈடு - நான்காம்பாட்டு.

தானே தன்னைக் கவிபாடிக்கொண்டானாகி லோராஸ்சர்ய மில்லை, அதுக்குப் பாங்கன்றிக்கேயிருக்கிற வென்னைக்கொண்டு தப்பாமே கவிபாடின விவ்வுபகாரத்தை யினிமறக்க வுபாயமில்லையெ யன்கிறார்.

( அப்பனையென்றுமறப்பன் ) உபகாரகனானவனை நானென்று மறப்பன். இனி அவனுபகாரம்பண்ணினுற்றுன் மறக்கப்போமோ.

உமக்கு மறக்கவொண்ணாமைக் கவன்பண்ணினவுபகாரமேதென்றால் ( என்னாகியேதப்புதலின்றித்தனைக்கவிதான்சொல்லி ) என்னை யுபகரணமாகக்கொண்டு கவிபாடுகிறவிடத்து, என்னுடைய ஸ்பர்ஸத்தாலே வந்ததோஷம் தட்டாதபடி கவிபாடினான். ( என்னாகியே ) என்பக்கலிலேதானாய். இவ்விடத்துக் கெம்பாரருளிச்செய்யும்படி – " தான்பாடினானாகில் நிரவத்யமாய்த்தலைக்கட்டும், நான் பாடினேனாகிலும் வருந்தியொருபடி தலைக்கட்டும், என்னையுபகரணமாகக்கொண்டு கவிபாடாநிற்கச்செய்தேயு மென்னோட்டை ஸ்பர்ஸத்தால் வந்ததோஷம் தட்டாதபடி கவிபாடித்தலைக்கட்டினான் " என்று. ( தனைக்கவிதான்சொல்லி ) விஷயாநுரூபமாகக் கவிபாடினான். (ஒப்பிலாத்தீவினையேனையுய்யக்கொண்டு) என்னையுபகரணமாகக்கொண்டு இப்படி கவிபாடுவித்தது, முன்பு நின்றநிலையிற்காட்டில் நானெவ்வளவுபுகுரநின்றேனாக; நான் முன்புற்றையிற்காட்டிலோரடிவரநின்றதுண்டோ. (ஒப்பிலாத்தீவினையேனையுய்யக்கொண்டு) நானுமவனுக்கொப்பனென்கிறார். சர்வஜ்ஞத்வ சர்வசக்தித்வங்களுக்கவனுக் கொப்பில்லாதாப்போலே யாயிற்று, அஜ்ஞாநாசக்திகளுக் கெனக் கொப்பில்லாதபடியும். ( உய்யக்கொண்டு ) "ஸஞெ௨ நஂதெ௨ தாவிஃ௱ஃ" (ஸந்தமேநம்ததோவிதுः) என்கிறபடியே என்னை யுஜ்ஜீவிக்கும்படி கைக்கொண்டு. (செப்பமேசெய்துதிரிகின்ற) குடிலஹ்ருதயனாயிருக்கிறவென்னோடே, அஸ்ப்ருஷ்ட சம்சாரகந்தரான நித்யசூரிகளோடு பரிமாறுமாபோலே என்னுடனே செவ்வையே பரிமாறினானென்னுதல்; எனக்கு ரக்ஷைபண்ணிப் போருகிறவென்னுதல். ( சீர்கண்டே ) இப்படியிருக்கிற சீலாதிகுணங்களை யநுசந்தித்து - அப்பனையென்றுமறப்பன்............*

## ஜீயர் அரும்பதம்.

நான்காம்பாட்டு. (அப்பனையித்யாதி.) " என்னாகியேதப்புதலின்றி, ஒப்பிலாத்தீவினையேனையுய்யக்கொண்டு, அப்பனையென்றுமறப்பன் " என்கிறவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை ( தானேதன்னையித்யாதி. )

மறக்கப்போகாமையி னுறைப்பை யருளிச்செய்கிறார் (இனியவனித்யாதி.)

" என்னாகியேதப்புதலின்றி" என்றவநந்தரம், " ஒப்பிலாத்தீவினையேனை " என்றதுக்கு பாவம் (என்னை யுபகரணமாகவித்யாதி.) உக்தத்துக்கு சம்வாதம் ( இவ்விடத்துக்கித்யாதி. )

அவனுக்கொத்தபடி யெப்படியென்ன ( சர்வஜ்ஞத்வேத்யாதி. )

செப்பம் – ஆர்ஜவமும், ரக்ஷையும்.

என்னாகியே தப்புதலின்றி யென்று தொடங்கி, திரிகின்றசீர்கண்டு – அப்பனையென்று மறப்பனித்யந்வயः.........................................*

# ஐந்தாம்பாட்டு.

சீர்கண்டுகொண்டுதிருந்துநல்லின்கவி
நேர்படயான்சொல்லுநீர்மையிலாமையி
லேர்விலாவென்னைத்தன்னாக்கியென்னாற்றன்னைப்
பார்பரவின்கவிபாடும்பரமரே.

## ஆறாயிரப்படி

(சீர்கண்டு) தன்னுடைய கல்யாணகுணங்களையுள்ளபடி கண்டு கொண்டு, திருந்துநல்லின் கவிநேர்பட யான் சொல்லும் நீர்மையிலா மையில் எனக்கு சத்ருஶரில்லை; இப்படி குணலேசமின்றியேயிருந்தவெ ன்னைத் தன்னைப்போலே ஹேயப்ரத்யநீகத்வ சர்வஜ்ஞத்வாதி குணவிசி ஷ்டனாக்கி, என்னாற்றன்னை சர்வலோகமு மிக்கவியை:ஸ்துதிக்கும்படி யி ன்கவிபாடும் பரமனையென்று மறப்ப னென்கிறார்........................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், எனக்குக்கவிபாடுகைக்கு யோக்யதையின்றிக்கே யிருக்க, எனக் கு யோக்யதையுண்டாக்கித் தானே தன்னைக் கவிபாடிக்கொள்ளும் பெரியவனாயிரு ந்தானென்கிறார்.

சீர் - ப்ரதிபாத்யங்களான தன்குணங்களை. கண்டு - அபரோக்ஷித்து. கொ ண்டு - அநுசந்தித்து. திருந்து - ப்ரதிபாதகமாம்படி திருந்தியிருப்பதாய். நல் - சப் தார்த்தலக்ஷணோபேதமாய். இன் - * ஸம்ஶ்ரவேமதுரமான. கவி - கவிகளை. நேர் பட - வாய்க்கும்படியாக. யான் - நான். சொல்லும்-சொல்லுகைக்கீடான. நீர்மை- ஜ்ஞாநசக்த்யாதிஸ்வபாவம். இலாமையில் - இல்லாமையாலே. ஏர்விலா - அஸத்ரு ஶனை, என்னை - என்னை. தன் - தன்பக்கலிலே. ஆக்கி-ஜ்ஞாநப்ரேமாதிகளையுடை யேனாம்படிபண்ணி. என்னால் - என்னாலே. தன்னை - தன்னை. பார் - கடிந ஸ்வபா வையானபூமியகப்பட. பரவு - கொண்டாடும்படி. இன் - மதுரமான. கவி - கவி யை. பாடும் - பாடுதலால். பரமர் - பரமனாயிராநின்றான்..............,...........*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

தன்னைக்கவிபாடுகைக்கீடான நீர்மையுமின்றிக்கே இச்சையு மின் றிக்கே யிருக்கச்செய்தே, லோகமெல்லாம் கொண்டாடும்படியான கவி யை யென்னைக் கொண்டுபாடுவதே! என்ன சர்வேஶ்வரனோவென்கிறார்.

( சீர்கண்டுகொண்டு ) கல்யாணகுணங்களை யவகாஹித்து. ( தி ருந்தித்யாதி ) கட்டளைப்பட்டு லக்ஷணோபேதமாயினிதான கவிகளை. ( நேர்படவித்யாதி ) இவையொன்று மில்லையாகிலும், சொல்லுகிறவ னுடைய நன்மையாலே வருவதொருநன்மையு முண்டிறே கவிக்கு; அப்படி வாய்க்கச்சொல்லும் ஸ்வபாவத்தை நானுடையேனல்லாமை யில். ( ஏர்விலாவென்னை ) ஏரொன்று - அழகு, அதில்லாதவென்னை. ( தன்னாக்கி ) தன்னோடொக்கப்பண்ணி யென்னுதல். தனக்காக்கியெ

ன்னுதல். ( என்னல் தன்னையித்யாதி) என்னை யுபகரணமாகக்கொண்டு, தன்னைப்பாரிலுள்ளாரடையப்பரவும்படி யினிய கவிகளைப்பாடினன். விசேஷஜ்ஞரவிசேஷஜ்ஞரென்று வாசியின்றிக்கே. எல்லாரும் கொண்டாடும்படிபண்ணினன். (பரமரோ) " நதத்ஸமஸ்ச " (நதத்ஸமஸ்ச) என்கிற வாக்யங்கொண்டிவனுடைய வுத்கர்ஷமறியவேண்டா, என்னையிடுவித்துக்கவிபாடுவித்துக்கொண்ட விதுவேபோருமவனுடைய வுத்கர்ஷமறிகைக்கு.......................................................................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு ( சீர்கண்டித்யாதி. ) " நீர்மையிலாமையில் ஏர்விலாவென்னை - பார்பரவின்கவிபாடும்பரமரே " என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (தன்னைக் கவிபாடுகைக்கித்யாதி.) " ஏர்விலா " என்றத்தைப்பற்ற (இச்சையுமின்றிக்கே யென்றது.)

" ஏர் " என்று - அழகாய். இச்சையைச்சொல்லுகிறது கட்டளைப்பட்டு - திருந்தப்பட்டு. இவை - கட்டளைப்பாடு முதலானவை. நீர்மையென்று - ஜ்ஞாநசக்த்யாதிகளைச் சொல்லுகிறது இலாமையில் - இல்லாதிருக்கச் செய்தேயு மென்றபடி. (சொல்லுகிறவனுடைய நன்மையாலே) என்றவிடத்திலே - "அபிராமகவே ரஜாதஸ்த்ரோ ரதரஸ்பந்தநமாத்ரமேவகாவ்யம்" ( அபிராமகவே ரஜாதஸ்த்ரோரதரஸ்பந்தநமாத்ரமேவகாவ்யம் ) இத்யாதியை யருளிச்செய்வர். "ஏர்" என்று- அழகாய், கவிபாடுகைக்கீடான விச்சையில்லாதவென்றபடி.

" பாரிலுள்ளார் " இத்யாதியின்விவரணம் (விசேஷஜ்ஞரித்யாதி.) பரமன்- சர்வாதிகன்.......................................................................*

# ஆறாம்பாட்டு.

இன்கவிபாடும்பரமகவிகளாற்
றன்கவிதான்றன்னைப்பாடுவியாதின்று
நன்குவந்தென்னுடனாக்கியென்னாற்றன்னை
வன்கவிபாடுமென்வைகுந்தநாதனே.

## ஆறாயிரப்படி.

( இன்கவி ) இன்கவிபாடும்பரமகவிகள் தனக்குளராயிருக்கச்செய்தே, அவர்களைக்கொண்டு தன்னைக் கவிபாடுவியாதே, இன்று நன்குவந்து என்னுள்ளே புகுந்து, வேதங்களி னுள்ளுமடங்காத தனக்குங்கூடவடங்காத கவிகளைப்பாடின என்வைகுந்தநாதனை யென்று மறப்பனோவென்கிறார். .......................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், பெரியவர்களையிட்டுக் கவிபாடுவித்துக்கொள்ளாதே, என்னாலே தான் தன்னைக் கவிபாடுவித்துக்கொண்டு எனக்கு ஸ்ரீவைகுண்டநாதனான பெருமை தோன்ற விராநின்றா னென்கிறார்.

இன் - நிரதிசயமதுரமான. கவி - கவிகளை. பாடும் - பாடுமவர்களாய். பரமகவிகளால் - தங்களுக்கு மேலில்லாத கவிகளான பராசர பாராசர்ய வால்மீகிப்ரப்ருதிகளாலும் முதலாழ்வார்களாலும். தன் - தனக்குத்தகுதியான. கவி-கவியை. தான் - தான் ப்ரயோஜகனாய்க்கொண்டு. தன்னை - நிரவதிகமாஹாத்ம்யயுக்தனை தன்னை. பாடுவியாது - எப்போதும் பாடுவியாதே. இன்று - இன்று. நன்கு - சாபிசந்திகனாய்க்கொண்டு. வந்து - வந்து. அக்கவிபாட்டை, என்னுடன்-என்னோடே. ஆக்கி - ஆக்கி. என் - எனக்கு. வைகுந்தநாதனே - தான் ஸ்ரீவைகுண்டநாதனென பெருமையைத் தோற்றுவியா நின்றுகொண்டு. என்னால் - என்னாலே. தன்னை-அந்தப்பெருமையையுடைய தன்னை. பெருமைக்குத் தகுதியாம்படி, வன் - சிக்கென. கவி - கவி. பாடும் - பாடாநிற்கும். ..........................................................*

## ஈடு - ஆறும்பாட்டு.

வ்யாஸ பராஶர வால்மீகிப்ரமுகரான கவிகளைக்கொண்டு கவிபாடுவித்துக்கொள்ளாதே, என்னையுபகரணமாகக்கொண்டு கவிபாடுவதே! என்று ப்ரீதராகிறார்.

( இன்கவிபாடும் பரமகவிகளால் ) பின்னைத் தான் தனக்குச் சிலகவிகளைப் பாடவேண்டினால், அதுக்கிடாக விருப்பார் ஸ்ரீவேதவ்யாஸபகவான் ஸ்ரீபராசரபகவான் ஸ்ரீவால்மீகிபகவா னிவர்களுண்டாயிருக்க, மற்றும் வேணுமாகில் "செந்தமிழ்பாடுவார்" என்று சொல்லப்படுகிற முதலாழ்வார்க ளெல்லாருமுண்டாயிருக்க, என்னைக்கொண்டு கவிபாடுவித்துக்கொண்ட விதுவுமொரு நீர்மையே! யென்கிறார். முதலாழ்வார்களிலே யொருவரை "ஒருகவிசொல்லிக்காணும்" என்ன [ பெருகுமித்யாதி ] ஆற்றுப்பெருக்குப்போலே பெருகாநின்றுள்ள மதத்தை யுடையவானையானது. [மாப்பிடிக்குமுன்னின்று] மதித்து முன்னடிதோற்றாதே வருகிற வித்தையுந் தனக்குக் கையாளாக்கிக்கொள்ளவற்று யாயிற்று இதினுடைய பௌலாக்யதை யிருக்கிறபடி. [ முன்னின்று ] "நானிங்குத்தைக்குச்செய்யவேண்டுவதென்" என்று * ஏவிற்றுச்செய்கைக் கவஸரப்ரதீக்ஷமாய் நிற்குமாயிற்று. [இருகணிளமூங்கில்வாங்கி] இரண்டுகண்ணேறி அதுக்குத்தக்க முற்றனவு மின்றிக்கேயிருக்கிற மூங்கில்குருத்தைவாங்கி. தான் மதித்து முன்னடிதோற்றாதே திரியச்செய்தேயும் பிடியின்பக்கலுண்டான வாதராதிசயத்தாலே அவதானத்தோடே சாதரமாகவாங்கி. [ அருகிருந்ததேன்கலந்து ] திருமஞ்சனத்துக் குபகரணங்கள் சமைந்திருக்குமாபோலே, அருகே மலைமுழஞ்சுகளிலே நிரம்பியிருக்கிற தேன்களிலே வாங்கித்தோய்த்து. மூங்கில் குருத்தையும் த்ரவத்ரவ்யத்தோபாதியாக வருளிச்செய்கிறார். [நீட்டும்] இதுதானிரந்துகொடாநிற்க, அத்தை "உனக்குவேண்டுவார்க்குக்கொடாய்" என்று நிற்குமாயிற்று [வான்கலந்தவித்யாதி] மூங்கில் குருத்தும் தேனும் கலந்தாப்போலேயாயிற்று, மேகமுமவன்திருநிறமுங் கலந்திருக்கும்படி. இனிய கவிகளைப் பாடவல்ல மேலானகவிகளாலே. (தன்கவிதான்தன்னைப்பாடுவியாது) கவியு

ம் தன்னது, பாடினனும் தான். ப்ரதிபாத்யனும் தான். அவர்களைக்கொண்டு, தன்னுடைத்தானசொல்லாலே, அதுக்குப்ரதிபாத்யனான தான் தன்னைப்பாடுவியாதே. (இன்றுநன்குவந்து) இன்றுநானிங்ஙனே யுஜ்ஜீவிக்கும்படிக்கிடாக வந்தென்னுதல். அன்றிக்கே, நன்கு, உவந்து என்றுய்-நன்றாகவுகந்தென்றும்; இக்கவிபாடுகைதானே ப்ரயோஜநமாக வுகந்து. (என்னுடனாக்கி) என்னைப்பிரியாத வுபகரணமாகக்கொண்டு. (வன்கவி பாடும்) சொற்செறிவை யுடைத்தாயிருக்கை, "மொய்யசொல்லால்" என்கிறபடியே; ஸ்ஃபலதமாயிருக்கையன்றிக்கே. (என்வைகுந்தநாதனே) "அழியாததான * கலங்காப்பெருநகரத்தை யிருப்பிடமாக வுடையோமானவோபாதி, அழியாதே வேதம்போலே நித்யமானவாயிரம் பாட்டுப் பாடுவிக்கவேணும்" என்றுபார்த்தான். பரமபதத்தை யிருப்பிடமாக வுடையனாகையாலே வந்தவேற்றத்தோபாதி யாகநினைத்திரா நின்றானாயிற்று, இக்கவிபாட்டுடையனாகையால் வந்தவேற்றத்தையும்................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறும்பாட்டு (இன்கவியித்யாதி.) "இன்கவிபாடும் பரமகவிகளால் தன்கவிதான் தன்னைப்பாடுவியாது - என்னாற்றன்னைவன்கவிபாடும்" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை (வ்யாசேத்யாதி.)

ஸம்ஸ்க்ருதம் தெரியாதவர்களிழக்கு மத்தனையன்றோ வென்ன (மற்றும் வேணுமாகிலித்யாதி)

முதலாழ்வார்கள் கவி யினிதா யிருக்குமோவென்ன (பெருகுமித்யாதி.) இப்பாட்டுக்குசங்கதி (முதலாழ்வார்களிலே) இத்யாதிகீழ்வாக்யம். இதுக்கர்த்தம் (ஆற்றுப்பெருக்கித்யாதி.) "மாப்பிடி" என்றதுக்கர்த்தம் (மதித்தித்யாதி.) "மா" என்று - ஶ்லாக்யதை. பிடுங்கியென்னாதே, "வாங்கி" என்றதுக்குபாவம் (தான் மதித்தித்யாதி.) திருமஞ்சநத்துக் குபகரணங்கள் சமைந்திருக்குமாபோலே யென்றது - திருமஞ்சநங்கொண்டருளுகைக்குக் கலஶங்கள் பூரித்திருக்குமாபோலே யென்றபடி. தோய்த்தென்னாதே, "கலந்து" என்றதுக்குபாவம் (மூங்கிலித்யாதி.) கொடுக்குமென்னாதே, "நீட்டும்" என்றதுக்குபாவம் (இதுதானித்யாதி.) "தேன் கலந்து" என்றும் "வான்கலந்த" என்றும் ஶப்தம் சமாநமாகையாலே யருளிச்செய்கிறார் (மூங்கில்குருத்துமித்யாதி)

"தன்கவி, தான், தன்னை" என்றமூன்றுக்கும் பேதமருளிச்செய்கிறார் (கவியுமித்யாதி.) விவரணம் (அவர்களையித்யாதி.)

உவந்து - உகந்து. உடன் - உபகரணம்.

சொற்செறிவை யுடைத்தாயிருக்குமோவென்ன, ப்ரமாணம் (மொய்யவித்யாதி.)

இப்போது, "வைகுந்தநாதன்" என்றதுக்குபாவம் (அழியாததானவித்யாதி.) பாவாந்தரம் (பரமபதத்தையித்யாதி.)

என்வைகுந்தநாதன் - இன்கவிபாடும் பரமகவிகளா லித்யாரப்ய, வன்கவி பாடு மித்யந்வயஃ...................................................................*

# ஏழாம்பாட்டு.

வைகுந்தநாதனென்வல்வினைமாய்ந்தறச்
செய்குந்தன்றன்னையென்னாக்கியென்னாற்றன்னை
வைகுந்தனாகப்புகழவண்டீங்கவி
செய்குந்தன்றன்னையெந்நாள்சிந்தித்தார்வனே.

## ஆறாயிரப்படி.

(வைகுந்தநாதன்) ஸ்ரீவைகுண்டநாதனாயிருந்துவைத்து, என்னுடைய வல்வினைகளையெல்லாம்போக்கி, ஆதலால் குந்தனென்னும் திருநாமத்தையுடையனாய், என்னைத் தன்னைப்போலே தூயனாக்கி, என்னாற்றன்னை வைகுந்தனாகப்புகழ வண்டீன்கவி செய்குந்தன்றன்னை காலதத்வமெல்லா மநுபவித்தாற்றானார்வனோவென்கிறார் ......................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், என்விரோதியைப்போக்கித் தன்பெருமைக்கீடாகக் கவிபாடுவித்துக்கொண்ட வுபகாரகனை யநுசந்தித் தொருநாள் த்ருப்திபிறக்குமோவென்கிறார்.

வைகுந்தநாதன் - ஸ்ரீவைகுண்டநாதனான பெருமையையுடையனாய்வைத்து. தன்னையநுபவிக்கைக்குவிரோதியாய், வல்-ப்ரபலமான. என் - என். வினை-பாபத்தை. மாய்ந்தற-நஶிக்கும்படி. செய் - பண்ணும். குந்தன் - தன்மையையுடைய. தன்னை-தன்னை. என்னாக்கி-எனக்குவிஷயமாக்கும்படியாக்கி. என்னால்-என்னைக்கரணமாகக்கொண்டு. தன்னை-அந்தப்பாரம்யத்தையுடையதன்னை. வைகுந்தனாக-தன்னுடைய சர்வஸ்வபாவகுண்டநம் பிறவாதபடியாக. புகழ-புகழும்படி. வண்-உதாரமாய். தீ - இனிதான. கவி - கவியை. செய்-செய்யும்படியான. குந்தன் - உபகாரஸ்வபாவத்தையுடைய. தன்னை-தன்னை. சிந்தித்து-சிந்தித்து. எந்நாள்-எந்நாள். ஆர்வன்-த்ருப்திபிறப்பது.

உள்ளதனையும் நினைத்தாலு மாராதென்று கருத்து.

வல்வினைமாய்ந்தறச் செய்குந்தனென்று - விரோதியைப்போக்கும் குந்தமாகிற வாயுதத்தை யுடையவனென்றுஞ்சொல்லுவர். கவிசெய்குந்தனென்று-குந்தப்பூப்போலே சுத்தஸ்வபாவனென்றுஞ்சொல்லுவர்..............................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

என்னைக்கொண்டு, பரமோதாரமாய் நிரதிசயபோக்யமான கவியைப்பாடுவித்துக்கொண்ட மஹோபகாரத்துக்கு, இவனைக் காலதத்வமுள்ளதனையு மநுபவித்தாலும் த்ருப்தனாகிறிலேனென்கிறார்.

(வைகுந்தநாதன்) உபகரித்தவனென்னோடணையநின்றானொருவனாய் நானறியிருக்கிறேனோ. * அயர்வறுமமரர்களதிபதியொருசம்சாரிடீகலிலே மேல்விழாநின்றா லெங்ஙனே யாறியிருக்கும்படி. "லொகநா மேவ-ஹாஸ-ஏகாவஸ-ஸ்ரீவ நாயதிஜூதி" ( லோகநாதஃபுராபூத்வாஸ-

க்ரீவம்நாதமிச்சதி ) என்கிறவிதுக்கு மவ்வருகாயிருக்கிறதிறேயிது. ஸ்ரீசுக்ரீவமஹாராஜனை நாதராகவுடையராகைக்கு யோக்யதை சம்பாதித்தபடியாயிற்று முன்பு லோகநாதரானது. பெறுவார், பெருதொழிவார், முன்ன மிச்சியாநின்றார். கிடையாதத்திலேயிறே யிச்சைகள்தாம்செல்லுவது. * ஸராமோவாநரேந்த்ரஸ்ய ப்ரஸாதமபிகாங்க்ஷதே போலேயாயிற்று. (என்வல்வினைமாய்ந்தற) வல்வினைபோகவேணுமென்றிராத வென்னுடைய. "மயர்வறமதிநலமருளினன்" என்றவித்தனையிறே. எனக்கருளினன் என்கைக்கு, அருளுவதற்குமுன்பு தாமொருவருளராகக்கண்டிலரிறே. " ஐஸஹேவஸஹவதி " ( அஸந்நேவஸபவதி ) என்னும்நிலையிறே முன்பு. (வல்வினைமாய்ந்தற) சர்வசக்தியான தன்னாலேதா னிதுசெய்யலாமோ. ( மாய்ந்தறச்செய்குந்தன் ) என்னுடைய ப்ரபலவிரோதியைப் போக்கின சுத்தியோகத்தையுடையவன். " அடியார்க்குத்தீர்த் தசுரர்க்குத்தீமைகள்செய்குந்தா " என்னக்கடவதிறே. முகுந்தா என்கிறத்தை, குந்தனென்று தலைக்குறைத்தலாய்க் கிடக்கிறதென்னவுமாம். அன்றிக்கே, குந்தனென்று திருநாமமாகவுமாம். " குமுதஃகுந்தரஃகுந்தஃ " ( குமுதஃ குந்தரஃகுந்தஃ ) என்று குந்தனென்றே திருநாமமாயிற்றிறே. ஆஶ்ரிதர்பக்கலிலே பக்ஷபதித்து அவர்கள்பண்ணின பாபங்களை யநாஶ்ரிதர்பக்கலிலே யசல்பிளந்தேறிடும்படியான சுத்தியோகத்தையிறே யவ்விடத்திற்சொல்லுகிறது. தன்னையென்னாக்கியென்றது - என்னைத்தன்னோடொக்கப்பண்ணியென்னுதல், தனக்காம்படி பண்ணியென்னுதல். (என்னால் தன்னைவைகுந்தனாகப்புகழ) பிதாவானவன் புத்ரனுக்கொரு பசுவை நீர்வார்த்துக்கொடுத்துத்திரிய வவன்பக்கலிலே பசுவை நீரேற்றுப்பெறுமாபோலே யிருப்பதொன்றாயிற்றிதுவும். (வைகுந்தனாகப்புகழ) நித்யவிபூதியிறேயது; இங்ஙனே யிருக்கச்செய்தேயும், இவர்புகழ்ந்தவித்தாலே தனக்கவ்விபூதியுண்டாயிற்றதாக நினைத்திராநின்றான். ஆத்மவஸ்து நித்யமாயிருக்கச்செய்தே, "ஐஸஹேவ" (அஸந்நேவ) என்றும் "ஸஷேநம்" ( ஸந்தமேநம் ) என்றும் சொல்லாநிற்கிற வோபாதியாயிற்று. "இன்னான்வாக்காலே கவிபாடினபின்பு அவன்வாழ்ந்தான்" என்னக்கடவதிறே; அப்படியே, புகழ்ந்தபின்பு தனக்கந்தவிபூதியி லிருப்புண்டாயிற்றதாக நினைத்திராநின்றானவன். (வண்டமிழ்கவியித்யாதி) உதாரமாயினிதாயிருந்துள்ள கவிகளைப்பாடி, அதுதன்னைத் தன்பேறாக நினைத்திருக்கிற சுத்தியையுடையவனே. " துயரறுசுடரடி " என்கிறபடியே இவரைக்கொண்டு கவிபாடினபின்பு, தன்துயரந்தீர்ந்தானாயிருக்கிறபடி. இவர்துயர்போனபின்பு, தனக்கொரு துயருண்டாய் அதுபோனாற்போலே நினைத்திராநின்றானாயிற்று. சரீரத்துக்குவந்த வ்யாதி யநுபவிப்பான் சரீரியிறே. [ வ்யஸநேஷுமநுஷ்யாணாம் ] [ வ்யஸநேஷுமநுஷ்யாணும் ] திவ்யாந்தஃபுரத்திலுள்ளார்க்காதல் திருத்தாய்மார்க்காதலொரு வ்யஸநம் வந்தாலோ துஃகிதராவதென்றால் [ உத்ஸவேஷுசஸர்வேஷுபிதேவ

வதி ] [ மநுஷ்யாணும்ப்ருஶம்துஃகிதோபவதி ] துஃகிதனானவனளவிலன்றிக்கே, ஆனையளாறுபட்டாப்போலே நோவுபடுவராயிற்று. [ஒ-ஃவி௰தாஉவதி] [துஃகிதோபவதி] இன்றொருபடியாய், பிற்றைநாளொருபடியாய் அநந்தர மாறிப்போமிவர்களுக்கு; இவர்கள் க்லேசத்தில் நாள்தோறும் புதியராயிருப்பர். வ்யஸநமிவனதானால் துஃகமுமிவனதாகவேண்டியிருக்க, இவர் துஃகிதராகைக்கு ஹேதுவென்னென்னில்; “ இவன்படுகிற க்லேச மிவன்காவற்சோர்வால்வந்த தொன்றன்றே, நங்காவற்சோர்வாலே வந்ததொன்றன்றோ ” என்று, ரக்ஷகராகையாலே நாள்தோறும்புதியராயிருப்பர். “ ஹ்ரீரேஷாஹிமமாதுலா ” (ஹ்ரீரேஷாஹிமமாதுலா) என்னக்கடவதிறே. இவனளவல்லவாயிற்று பிற்பாட்டுக்கவன் லஜ்ஜிக்கும்படி. (எந்நாள்சிந்தித்தார்வனே) பண்ணினவுபகாரம் கனத்திராநின்றது, உபகாரஸ்ம்ருதிக்குக்காலம் போருகிறதில்லை; நானென்செய்வேன். சரீரவிப்லேஷாநந்தரத்தில் தானேவாய்ப்புகு நீராகையா லநுசந்திக்கைக் கவகாசமில்லை, இங்கிருக்கும்நாள் காலம்போருகிறதில்லை, பண்ணினவுபகாரமோ கனத்திராநின்றது; நானென்செய்கேன்..............*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (வைகுந்தநாதனித்யாதி) “ என்னுற்றன்னை - வண்டீங்கவிசெய்குந்தன்றன்னை எந்நாள் சிந்தித்தார்வனே ” என்றவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை (என்னைக்கொண்டித்யாதி) அநுபவித்தாலுமென்றது - உபகார ஸ்ம்ருதிபண்ணினுமென்றபடி.

பதப்ரயோகத்துக்குபாவம் ( உபகரித்தவனித்யாதி ) லோகநாதனென்கிறமாத்ரமன்றிக்கே, “வைகுந்தநாதன்” என்கையாலே-மஹாராஜரிலிவர்க்கு வ்யாவ்ருத்தியருளிச்செய்கிறார் (லோகநாதஇத்யாதி) கிஷ்கிந்தாகாண்டே ஹநூமந்தம்ப்ரதிலக்ஷ்மணஃ, “ ஏஷதத்வாசவித்தாநிப்ராப்யசாநுத்தமம்யஶஃ ” (ஏஷதத்வாசவித்தாநிப்ராப்யசாநுத்தமம்யஶஃ) இதிபூர்வார்த்தஃ. “ஸ்நாத்வா” (ஸ்நாத்வா) என்கிறல்யப்புப்போலே, “ பூத்வா ” (பூத்வா) என்கிறவிதுவும்- அங்கத்வவிதாயகமென்கிறார் (ஸ்ரீஸூக்ரீவேத்யாதி) “ இச்சதி ” (இச்சதி) என்றதுக்கர்த்தம் பெறுவாரித்யாதி) “ இச்சதி ” (இச்சதி) என்று லிவ்வர்த்தத்தைக் காட்டுமோவென்ன (கிடையாதத்திலேயித்யாதி) மேன்மையையுடையவன்தாழநின்றதுக்கு ப்ரமாணாந்தரம் (ஸராமஇத்யாதி) “ யஸ்யப்ரஸாதேஸததம்ப்ரஸீதேயுரிமாஃப்ரஜாஃ” ( யஸ்யப்ரஸாதேஸததம்ப்ரஸீதேயுரிமாஃப்ரஜாஃ) இதிபூர்வார்த்தம்.

“என்” என்றதுக்கர்த்தம் (வல்வினையித்யாதி) இவ்வர்த்தத்துக்கு நியாமகமேதென்ன (மயர்வறவித்யாதி) எனக்கருளினனென்னுதொழிந்த தென்னென்ன (எனக்கித்யாதி) தாமுளரன்றோவென்ன (அஸங்கேவேத்யாதி) “வல்” என்றதுக்கர்த்தம் (சர்வசக்தியானவித்யாதி) குந்தமென்று - குருந்தமாய், அதின்பூவெளுத்திருக்கையாலே சுத்தியைச்சொல்லுகிறதென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் (என்னுடையவித்யாதி) அதுக்கு ப்ரமாணம் (அடியார்க்குத்தீர்த்தித்யாதி) இது திருநாமமோவென்ன (குமுதஇத்யாதி) “அடியார்க்குத்தீர்த்து” இத்யாதிக்கர்த்தம் (ஆஶ்ரி

தர்பக்கலிலேயித்யாதி) அன்றிக்கே, "குந்தன்" என்கிற திருநாமம் அந்வர்த்தஸம்ஜ்ஞையென்கிறுர் (ஆஶ்ரிதர்பக்கலிலேயித்யாதி) என்னுதல். அசல்பிளந்தேறிடும்படியான - ப்ரவேசிப்பித்தநுபவிக்கும்படியானவென்றபடி. அசல் பிளந்தேறிடுகை - அந்யத்ரஸங்க்ரமிப்பிக்கை. ஆக, "குந்தன்" என்றதுக்கு - மூன்றர்த்தம்.

"என்னுக்கியென்னுற்றன்னை - புகழ" என்றதுக்கு த்ருஷ்டாந்தம் (பிதாவானவனித்யாதி.) நித்யமானவிபூதி யிவர்புகழ்ந்தபின்புண்டாயிற் றென்னக்கூடுமோவென்ன (நித்யவிபூதியிறேயித்யாதி) இதுக்குத்ருஷ்டாந்தம் (ஆத்மவஸ்துவித்யாதி) அப்படியொருவன் கவிபாடினு லத்தாலதிசயமுண்டாமோவென்ன (இன்னுனித்யாதி)

"தன்பேருக நினைத்திருக்கிற" என்றதினுபபாதநமாதல், உக்தார்த்தத்துக்குப்ரமாணமாதல் (துயராறுவித்யாதி) தன்துயர்தீர்ந்ததினுறைப்பை யருளிச்செய்கிறுராதல், விவரணமாதல் (இவர்துயரித்யாதி) ஆழ்வார்து:கம் தன்னதானபடியென்னென்ன (சரீரத்துக்கித்யாதி) உபபத்திகாட்டி யநுஷ்டாநமுங்காட்டுகிறுர் (வ்யஸநேஷ்வித்யாதி) அயோத்யாகாண்டே. "𑌉𑌤𑍍𑌸𑌵𑍇𑌷𑍁 𑌚 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌚 𑌅𑌪𑌿 𑌦𑍇𑌵 𑌪𑌰𑌿𑌤𑍁𑌷𑍍𑌯𑌤𑌿" (உத்ஸவேஷுசஸர்வேஷுபிதேவபரிதுஷ்யதி) இத்யுத்தரார்த்தம். "𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌣𑌾𑌂" (மநுஷ்யாணும்) என்றதுக்குபாவம் (திவ்யாந்த:புரத்திலித்யாதி) "𑌭𑍃𑌶𑌂" (ப்ருஶம்) என்றதுக்கர்த்தம் (து:கிதனுனவனித்யாதி) "𑌭𑌵𑌤𑌿" (பவதி) என்கிறவர்த்தமாநார்த்தம் (இன்றொருபடியித்யாதி) அளறுபட்டாப்போலே - சேற்றிலேயகப்பட்டாப்போலே. அளறு - சேறு. வ்யஸநமிவனதானு லவர்து:கிதராகைக்கு ஹேதுவை ப்ரஶ்நோத்தரரூபேண வருளிச்செய்கிறுர் (வ்யஸநமிவனதானுலித்யாதி) உதவப்பெற்றிலோமென்று நோவுபட்டிருக்குமோவென்ன (ஹ்ரீரேஷாஹீத்யாதி) "𑌪𑍍𑌰𑌸𑍀𑌦𑌨𑍍𑌤𑍁 𑌭𑌵𑌨𑍍𑌤𑍋 𑌮𑍇 𑌹𑍍𑌰𑍀𑌰𑍇𑌷𑌾 𑌹𑌿 𑌮𑌮𑌾𑌤𑍁𑌲𑌾 । 𑌯𑌦𑍀𑌦𑍃𑌶𑍈𑌰𑌹𑌂 𑌵𑌿𑌪𑍍𑌰𑍈𑌰𑍁𑌪𑌸𑍍𑌥𑍇𑌯𑍈𑌰𑍁𑌪𑌸𑍍𑌥𑌿𑌤𑌃" (ப்ரஸீதந்துபவந்தோமேஹ்ரீரேஷாஹிமமாதுலா। யதீத்ருஶைரஹம்விப்ரைருபஸ்த்தேயைருபஸ்த்தித:) இத்யாரண்யகாண்டேராம:. "அதுலா" என்றதுக்கர்த்தம் (இவனளவல்லவித்யாதி)

"எந்நாள்சிந்தித்தார்வன்" என்றதுக்கு பாவம் (பண்ணினவுபகார மித்யாதிவாக்யத்வயம்.) "எந்நாள்" என்கிறதென், காலமில்லையோ வென்ன (சரீரேத்யாதிவாக்யத்ரயம்.)

"வண், தீ, கவி" என்று பதச்சேதம். தீ - இனிமை.........................*

---

# எட்டாம்பாட்டு.

---

ஆர்வனேவாழியங்கையெம்பிரான்புகழ்
பார்விண்ணீர்முற்றுங்கலந்துபருகிலு
மேர்விலாவென்னைத்தன்னுக்கியென்னுற்றன்னைச்
சீர்பெறவின்கவிசொன்னதிறத்துக்கே.

## ஆறுயிரப்படி.

( ஆர்வனோ ) என்னைக்கொண்டு தானுமுளனாம்படி கவிபாடின வந்தகுணத்தை, இவ்வண்டாந்தர்வர்த்திகளான வஸங்க்யேய வாத்மாக்களுடைய வாகாத்யுபகரணங்களையும் * அயர்வறுமமரர்களுடைய வாகாத்யுபகரணங்களையுங்கொண் டநுபவித்தாற்று ஞர்வனோவென்கிறார்.......*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், சமஸ்தவிபூதியிலுமுள்ள வாகாரங்களை யுடையனாய்க்கொண்டு மஹோபகாரகனான வுன்புகழை யநுசந்தித்தாலு மார்வனோவென்கிறார்.

ஏர்வு - கவிபாடுகைக்குத் தகுதியான ஜ்ஞாநசக்த்யாதிகள். இலா-இல்லாத. என்னை - என்னை. தன்னாக்கி - தன்விஷயத்திலே ஜ்ஞாநாதிகளை யுண்டாக்கி. என்னால் - என்னையிட்டு. தன்னை - பூர்ணனானதன்னை. சீர் - சீலாதிகுணலாபம். பெற- பிறக்கும்படி. இன் - இனிய. கவி - கவியை. சொன்ன - சொன்ன. திறத்துக்கு-ப்ரகாரத்துக்கு. ஆழியங்கை - கையுந்திருவாழியுமான வழகைக்காட்டி. எம்பிரான்- அறிவைப்பிறப்பித்து உறவையுண்டாக்கின வென்ஸ்வாமியுடைய. புகழ் - குணப்ராணதையை. பார் - பூம்யுபலக்ஷிதமான வவதாரஸ்த்தலத்திலும். விண் - பரமாகாசரூபமான பரஸ்த்தலத்திலும். நீர் - க்ஷீரார்ணவமான வ்யூஹஸ்த்தலத்திலுமுள்ள. முற்றும் - சேதநரெல்லாருமாய். கலந்து - கலந்து. பருகிலும் - அநுபவிக்கிலும். ஆர்வனோ - த்ருப்தனாவனோ...................................................................................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

நானொருவனுமிருந்து ஜீவிக்கும்நா ளுபகாரஸ்ம்ருதிக்குக் காலம் போராதென்று நோவுபடுகிறேனோ, என்னுடைய வுபகாரஸ்ம்ருதியையும்பேக்ஷையையு முடையராய்க்கொண்டு புறம்பே யந்யபரராயிருக்கிற பகவத்வ்யதிரிக்த சமஸ்தசேதநரு மென்னுடனேகூடி நெடுங்காலமெல்லாம் நானுமவர்களுங்கூடிநின் றநுபவித்தாற்று ஞர்வனோவென்கிறார்.

( ஆர்வனோவித்யாதி ) ஆழியங்கையெம்பிரான்புகழைப் பார்விண்ணீர்முற்றுங்கலந்துபருகிலும் - நானார்வனோ. தன்னுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளை யென்னுடைய கவிக்குவிஷயமாக்கின மஹோபகாரகனுடைய புகழை. "வாய்கொண்டுமானிடம்பாடவந்தகவியேனல்லேன், ஞாய்கொண்டசீர்வள்ளலாழிப்பிரானெனக்கேயுளன்" என்கிறாரிறே. பாரிலுள்ளார், விண்ணிலுள்ளார், நீரிலுள்ளாரான விவர்களெல்லாருடைய வாகாத்யுபகரணங்களையும் போக்த்ருத்வத்தையும் சக்திவிசேஷங்களையு முடையேனாய்க்கொண்டு காலமெல்லாம் நின்றநுபவித்தாலுந்தான் நானார்வனோ. கலக்கை - அவற்றோடேசேர்க்கை. அன்றிக்கே, பார்விண்ணென்று - உபயவிபூதியையுஞ்சொல்லி, நீரொன்று - நீர்மையாய், ஸ்வபாவமாய், உபயவிபூதியிலுள்ளார் போக்த்ருத்வசக்தி ஸ்வபாவத்தையுமுடையேனாயநுபவித்தாலும் என்றாகவுமாம். நீரிப்படி யெல்லாருடைய வுபகரணங்களையுமுடையீராய்க்கொண்டு காலமெல்லா மநுபவியாநின்றாலு மாரா

மைக் கவன்பண்ணின வுபகாரந்தானேதென்றால் (ஏர்வித்யாதி) இங்கு-நன்மையில்லையாகச் சொல்லுகிறது. கீழே - கவிபாடுகைக்கீடான விச்சையுமில்லையென்றார்; இங்கு - அவ்விச்சைக்கடியான யோக்யதையுமில்லையென்கிறார். "ஸ்ராஹ்மணாவிவிஷிஷதி" (ப்ராஹ்மணாவிவிதிஷந்தி) என்றுநிற்கச்செய்தேயும், "யஜ்ஞேநதாநேநதபஸாநாஸகேந" (யஜ்ஞேநதாநேநதபஸாநாஸகேந) என்று யோக்யதையைச் சொல்லிற்றிறே; அதுவுமின்றிக்கேயிருக்கிற வென்னையென்கை.

(என்னுற்றன்னைச்சீர்பெறவின்கவிசொன்ன) சமஸ்தகல்யாணகுணாத்மகனானவன் இக்கவியாலே தனக்கு நிறமாம்படியாகச்சொன்ன. நான்கவிசொல்ல சர்வேஸ்வரனான தனக்கித்தாலே நிறமாக நினைத்திராநின்றான். இச்சீரிழக்கவரிலும் விடவொண்ணுதபடியாயிற்றுக் கவியினினிமை. (இன்கவிசொன்னதிறத்துக்கு) இப்படி யினியகவிகளைச்சொன்ன ப்ரகார மொன்றுக்கும். அல்லாதகுணங்கள் குமரிருந்துபோ மித்தனை. இப்ப்ரகாரமொன்றுக்கும் - ஆழியங்கையெம்பிரான்புகழைப் பார்விண்நீர்முற்றுங்கலந்து பருகிலும் - ஆர்வனே. ..................................*

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. (ஆர்வனேவித்யாதி) "'பார்விண்ணீர்முற்றும்கலந்துபருகிலும்' என்றதுக்கு - அவதாரிகையிலேயொருபொருளும், பாட்டிலேயிரண்டுபொருளும்" என்றருளிச்செய்வர். பாரிலுள்ளார், விண்ணிலுள்ளார், நீரிலுள்ளார், இவர்களெல்லாருங்கூடிநின்று அவன்குணங்களை யநுபவித்தாலும் த்ருப்திபிறவாதென்றொருபொருள்; இத்தை யருளிச்செய்கிறார் (நானொருவனுமித்யாதி.)

அந்வயிக்கிறார் (ஆழியங்கையித்யாதி.) சப்தார்த்தம். (தன்னுடையவித்யாதி.) கையுந்திருவாழியுமான தன்னை யிவர்கவிக்கு விஷயமாக்கினானேவென்ன (வாய்கொண்டித்யாதி.) "ஆழியங்கை" என்று - ரூபமும், "எம்பிரான்" என்று - குணமும் சொல்லுகையாலே, ஸ்வரூபவிபூதிகளு மர்த்தாத்ஸித்தங்கள். அவதாரிகையிலே - பாரிலுள்ளாரும், விண்ணிலுள்ளாரும், "நீர்" என்று - கீழில்லோகங்களுக்கு முபலக்ஷணமாய், பாதாளாதிலோகஸ்த்தரும், முற்றும் - எல்லாரும் நானுமாகக்கலந்து உபகாரஸ்ம்ருதிபண்ணினாலு மார்வனேவென்றேரர்த்தமருளிச்செய்து, "முற்றும்கலந்து" என்றதுக்கு - அவர்களுடைய வாகாத்யுபகரணங்களையும் போக்த்ருத்வ சக்திவிசேஷங்களையு முடையேனாய்க்கொண்டென் றர்த்தாந்தரம் (பாரிலுள்ளாரித்யாதி.) "கலந்து" என்றாலிவ்வர்த்தத்தைக் காட்டுமோவென்ன (கலக்கையித்யாதி.) மூன்றாமர்த்தத்துக்கு, "விண்" என்று - பரமபதம்; "நீர்" என்று - நீர்மை. ஸ்வபாவமாய், போக்த்ருத்வசக்தியைச் சொல்லுகிறது. "முற்றும்" என்று - போக்த்ருத்வசக்திஸ்வபாவ மெல்லாவற்றையுமென்றபடி. கீழேயும் "ஏர்விலா" என்றுவைத்து, இங்கேயும் "ஏர்விலா" என்றால் புநருக்தமன்றோவென்ன வருளிச்செய்கிறார் (இங்குநன்மையித்யாதி.) நன்மையாவது - யோக்யதையென்றபடி. விவரணம் (கீழேயித்யாதி.) கீழேயென்றது - அஞ்சாம்பாட்டிலே. யோக்யதையாவது - ஸுக்ருதம். இச்சைக்கு யோக்யதைவேணுமோவென்ன (ப்ராஹ்மண இத்யாதி.) விவிதிஷந்தி - வேதிதுமிச்சந்தி. இந்த ஶ்ருதிக்கு ஶ்ருதப்ரகா

சிகையிலே, "இச்சையை பலமாகச்சொல்லி யஜ்ஞாதிகளைசாதநமாகச்சொன்னால் அந்யோந்யாஸ்ரயதோஷம் வரும், ஆகையாலே யதுசேராது" என்றார். அந்யோந்யாஸ்ரயதோஷம் வரும்க்ரமமென்னென்ன; இச்சையுண்டாயே யஜ்ஞதாநாதிகள்பண்ணவேணும், யஜ்ஞாதிகளைப்பண்ணினாலொழிய விச்சையில்லை, ஆகையாலே, "விவிதிஷந்தி" (விவிதிஷந்தி) என்று - வேதநத்தை பலமாக்கி, அதுக்குசாதநம் யஜ்ஞாதிகளென்று நிர்வஹித்தருளினார். ஜ்ஞாநத்தை பலமாக்கி, அதுக்கு சாதநம் யஜ்ஞாதிகளென்று சப்தம்வசிக்கும்படியென்னென்னில்; "அஸிநாஜிகாம்ஸதி" (அஸிநாஜிகாம்ஸதி) என்றால் - அஸியானது இச்சாசாதநமன்றிக்கே ஹநநத்துக்கு சாதநமானாப்போலே, இங்கும் யஜ்ஞாதிகள் ஜ்ஞாநத்துக்கேசாதநமாகிறதென்றபடி. "ஏர்விலா" என்று - இங்கு, இச்சைக்கு சாதநமில்லையென்னும்பேர்து, ஸ்ரீபாஷ்யத்தோடு விரோதியாதோவென்ன; அங்ஙன் விரோதமில்லை. லகுஸித்தாந்தத்திலே "யத்யபிவிவிதிஷந்தியஜ்ஞேநேதியோவிவிதிஷோத்பத்தௌவிநியுஜ்யந்தே" (யத்யபிவிவிதிஷந்தியஜ்ஞாதயோவிவிதிஷோத்பத்தௌவிநியுஜ்யந்தே) இத்யாதிவாக்யத்திலே பாஷ்யகாரர் அப்யுபகம்யவாதம்பண்ணி, உத்தரோத்தரோச்சா சாதநத்வமருளிச்செய்தாரிறே. அப்யுபகம்யவாதமாவது - பரபக்ஷத்தையங்கீகரித்துச்சொல்லுகை. இந்தவர்த்தத்துக் கந்யோந்யாஸ்ரயதோஷம் பரிஹரிக்கும்க்ரமமேதென்ன; அஜ்ஞாத ஸுக்ருத விசேஷங்களாலே யவ்வோ விச்சையுண்டாய், அந்தவிச்சையினுடைய அவிச்சித்தியை சாத்யமாக்கி யஜ்ஞதாநாதிகளை சாதநமாகச்சொல்லும்போது தோஷம் வாராதென்று பரிஹரித்து, இதுவுமொரு நிர்வாஹமாக்கி நிர்வஹித்தார்; அந்த "யத்யபி" (யத்யபி) இத்யாதி வாக்யத்தை யநுசரித் திவரிப்படியருளிச்செய்கிறானென்று கருத்து. அநாசகேந-அநஸநேநேத்யர்த்தః

"சீர்பெற" என்றதுக்குபாவம் (சமஸ்தகல்யாணேத்யாதி.) சீர்பெற-(நிறமாம்படியாக.) நீர் கவிசொல்ல அவனுக்கு நிறமுண்டாம்படி யென்னென்ன (நான்கவிசொல்லவித்யாதி) "இன்கவி" என்றதுக்கர்த்தம் (இச்சீரித்யாதி.) "திறத்துக்கே" என்கிறவவதாரணார்த்தம் (அல்லாதவித்யாதி.) குமரிருந்துபோகை-அநுபவயோக்யமன்றிக்கேயிருக்கை.

ஏர்விலாவென்றுதொடங்கி, திறத்துக்கே - ஆழியங்கையெம்பிரான்புகழ் பார்விண்நீர்முற்றும்கலந்து பருகிலும் ஆர்வனேவித்யந்வயঃ. ..........................*

## ஒன்பதாம்பாட்டு.

திறத்துக்கேதுப்புரவாந்திருமாலின்சீ
ரிறப்பெதிர்காலம்பருகிலுமார்வனே
மறப்பிலாவென்னைத்தன்னாக்கியென்னாற்றன்னை
யுறப்பலவின்கவிசொன்னவுதவிக்கே.

### ஆறாயிரப்படி.

(திறத்துக்கு) அஜ்ஞாநத்துக்குங்கூட வாஸ்ரய மல்லாமையாலே யசித்கல்பனாயிருந்தவென்னைத்தன்னைப்போலேயாக்கி, என்னைக்கொண்டு பிராட்டியும் தானுமாகத்திருவாய்மொழி பாடின விம்மஹோபகார

த்தை, முன்புசொன்ன சர்வோபகரணயுக்தனுய்க்கொண்டு பூதபவிஷ்ய த்வர்த்தமான காலமெல்லா மநுபவித்தாற்றுனூர்வனேவென்கிறுர்.......*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், கீழ்ச்சொன்ன ப்ரகாரத்திலே சர்வசேதந சக்திவிசிஷ்டனுய்க் கொண்டு சர்வகாலாநுபவம்பண்ணினுலு மார்வனேவென்கிறுர்.

ஒருகால் நினைவில்லாமையாலே, மறப்பு - மறப்பு. இலா - இல்லாதபடியா ன. என்னை - என்னை. தன்னுக்கி - தன்பக்கலிலே மறப்பறும்படியான வறிவையு டையனுக்கி. என்னுல் - என்னையிட்டு. தன்னை - தன்னை. உற - அவ்யவதாநேந வா சகமாய். பல - ஸஹஸ்ரஸங்க்யாதமாய். இன் - மதுரமான. கவி - கவியை. சொன் ன - சொன்ன. உதவிக்கு - உபகாரத்துக்கு. திறத்துக்கு - இழிந்தகார்யப்ரகாரங்க ளுக்கு. ஏய் - அநுரூபமான. துப்புரவாய் - சக்தியையுடையனுன. திருமாலின் -ஸ்ரீ யஃபதியினுடைய. சீர்-ஔதார்யசீலஸௌலப்யாதிகுணங்களை. இறப்பெதிர்காலம்-அ தீதாநாகதங்களான காலத்தையும் கூட்டிக்கொண்டு பூர்வோத்தர காலவர்த்தி சக லசேதநசக்தியுக்தனுய்க்கொண்டு, பருகிலும்-அநுபவிக்கிலும். ஆர்வனே-ஆர்வனே.

துப்புரவு - மிடுக்கு.....................................................................*

## ஈடு - ஒன்பதாம்பாட்டு.

என்னைக்கொண்டு கவிபாடுவித்துக்கொண்ட மஹோபகாரகனை, சகலசேதநருடைய போக்த்ருத்வசக்தியை யுடையேனுய்க்கொண்டு கா லமெல்லாம் புஜித்தாலுமாரோனென்றுர் - கீழ்; அந்தபோக்த்ருத்வ சக் தியுடனே காலத்வயமும் புஜித்தாலுமாரோனென்கிறுரிதில்.

(திறத்துக்கேயித்யாதி) ஏதேனுமோரிடையாட்டத்தில் வந்தால், ஒரு த்ருணத்தைக்கொண்டு காரியங்கொள்ளப் பார்த்தாலத்தைக் கொ ண்டேகாரியத்தை யப்படி தலைக்கட்டிக்கொள்ளும்படிக் கீடானதுப்புர வுண்டு - சாமர்த்த்யம், அத்தையுடையனுன. அதுக்கடியென்னென்றுல்; ஸ்ரீயஃபதியாகையாலே. நினைத்தகாரியஞ்செய்து தலைக்கட்டுகைக்கீடான சாமர்த்த்யத்தையுடையனுன ஸ்ரீயஃபதியுடைய கல்யாணகுணங்களை. ஒரு வன் செய்ததுவாய்த்துவரப் புக்கவாறே. "அவன்குப்பைக்காலன்காண், ஸ்ரீமான்செய்ததெல்லாம்நன்றுய்வருங்காண்" என்னக்கடவதிறே. ( இற ப்பெதிரித்யாதி ) சமஸ்தசேதநருடையவும் வாகாத்யுபகரணங்களையும் போக்த்ருத்வாதிசக்திகளையும் நானுடையேனு யநுபவிக்கப்புக்காலும், ஜீ விக்கைக்கடியான ஆயுஸ்ஸு அல்பமாகையாலே உபகாரஸ்ம்ருதிக்குக்கா லம்போருகிறதில்லை. " எந்நாள்சிந்தித்தார்வனே" என்னவேண்டாதே அவ்வவருடைய வுபகரணங்களையு முடையேனுய், போனகாலமும் மே ல்வரக்கடவகாலமுமெல்லா மநுபவியாநின்றுலுந்தானூர்வனே. ( வர்த்த மாநகாலம் தன்னடையேவருமிறே. போனகாலமநுபவிப்பாராய்ச்சொ ல்லுகிறுரன்று, எல்லாக்காலமுமநுபவித்தாலும் போராதென்கைக்காக. " எந்நாள் சிந்தித்தார்வனே" என்கிறதிற்காட்டிலேற்றமில்லையாமிறே,

கீழ்ப்பாட்டிற்சொன்ன சேதநனைக்கூட்டிக்கொள்ளாதபோது.) எல்லாருடைய வுபகரணங்களையுங்கொண்டு காலமெல்லா மநுபவித்தாலும் நீராராதேயொழிகிறது அவன்பண்ணின வெவ்வுபகாரத்தை ஸ்மரித்தென்ன (மறப்பிலாவித்யாதி) மறப்பில்லையானவென்னை. மறப்புக்குப் பூர்வக்ஷணவர்த்தியான நினைவுமெனக்கில்லை யென்கைக்காக - மறப்பிலாவென்கிறபாசுரத்தாலே யருளிச்செய்கிறார். மறப்பிலாவென்னவேண்டுவானென்னென்னில்; நினைவுள்ளவிடத்திலேயிறே மறப்புள்ளது. ஆக, காதாசித்கமானஸ்ம்ருதியுங்கூட வெனக்கில்லையென்கிறார். (மறப்பிலாவென்னைத்தன்னுக்கி) காதாசித்கமாக ஸ்மரித்து பின்னையொருகால் மறப்புண்டாய், அத்தைக்காணுக்கண்ணிட்டுத் தானிப்படி விஷயீகரித்தானே. முதலிலே தன்பக்கல் ஸ்ம்ருதியின்றிக்கே யிருக்கிறவென்னைத்தன்னுக்கி. (என்னால்) "மறந்தேனுன்னைமுன்னம்" என்கிறவநுதாபமுங்கூட வின்றிக்கேயிருக்கிறவென்னையிடுவித்து. (தன்னையுறப்பலவின் கவிசொன்ன) என்றதுக்கு ஜீயரருளிச்செய்யும்படி - "'யதோவாசோ நிவர்த்தந்தே' (யதோவாசோ நிவர்த்தந்தே) என்றுவேதங்கள் மீண்டவிஷயத்தை மறுபாடுருவச்சொன்ன" என்று. அன்றிக்கே, பிள்ளான் பணிக்கும்படி - "சர்வேச்வரனுக்குச் சாலவுற்றதென்கிறார்" என்று. (பலவின்கவிசொன்ன) "சதுர்விம்ஶத்ஸஹஸ்ராணி ஶ்லோகாநாமுக்தவாந்ருஷிঃ" (சதுர்விம்ஶத்ஸஹஸ்ராணிப்லோகாநாமுக்தவாந்ருஷிঃ) என்னுமாபோலே, சம்சாரத்திலே யிப்படி விலக்ஷணமாயிருப்பதாயிரம்பாட்டைப்பாடுவதே யென்கிறார். இனிய கவிகளைச்சொன்ன, உதவிக்கு - இவ்வுபகாரத்துக்கு-திருமாலின்சீரிறப்பெதிர் காலம்பருகிலுமார்வனே.........................................*

## ஜீயர் அரும்பதம்.

ஒன்பதாம்பாட்டு. (திறத்துக்கேயித்யாதி.) உக்தார்த்தத்தை யநுவதித்துக்கொண்டு, "இறப்பெதிர்காலம் பருகிலுமார்வனே" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (என்னைக்கொண்டித்யாதிவாக்யத்வயத்தாலே.) காலத்வயமென்றது-பூதபவிஷ்யத்காலமென்றபடி.

இடையாட்டம் - வ்யாபாரம். சப்தார்த்தம் (நினைத்தவித்யாதி.) "திறத்துக்கேதுப்பரவாம்-" நினைத்தகாரியத்துக்கீடான சாமர்த்யத்தையுடைய ஶ்ரியঃபதியுடைய சீரையென்று நிஷ்க்ருஷ்டசப்தார்த்தம். துப்புரவு - சாமர்த்யம். ஶ்ரியঃபதியானால் துப்பரவுண்டாமோவென்ன (ஒருவனித்யாதி.) குப்பைக்காலன்-நல்வழிக்காலன்.

கீழிலிரண்டுபாட்டி லர்த்தத்தையுங் கூட்டி யருளிச்செய்கிறார் (சமஸ்தேத்யாதி.)

"மறப்பிலா" என்று - சர்வஜ்ஞத்வம் சொல்லுகிறாரோவென்ன (மறப்புக்கித்யாதி.) மறப்பிலாவென்னவேண்டுவா னென்னென்னிலென்றது - ஸ்ம்ருதியில்லாதவென்னவேண்டியிருக்க, "மறப்பிலா" என்னவேண்டுவானென்னென்னிலென்றபடி. இத்தால்பலிதம் (ஆகவித்யாதி.) விவரணமாதல் "மறப்பிலா" என்ற

த்தோடே "தன்னுக்கி" என்றத்தையுங்கூட்டி பாவமாதல் (காதாசித்கமாக வித்யாதி.)

உற - மறுபாடுருவவென்னுதல், ஸத்ருஸமாகவென்னுதல். "உற" என்றதுக்கு பாவம் (யதோவாச இத்யாதி.) "பலவின்கவி" என்றதுக்குபாவம் (சதுர்விம்ஸதித்யாதி.) பாலகாண்டே, "ச௄ஸவஷடாரஸ௭௹ஷடகாணூநித௫௭ா தூரம்" (சதுர்ஸர்க்கஸஹஸ்ராணி பஞ்சஷட்காண்டாநிததோத்தரம்) இத்யுத்தரார்த்தம்.

மறப்பிலாவென்றுதொடங்கி, சொன்னவுதவிக்கு-திறத்துக்கேயென்றுதொடங்கி, பருகினுமார்வனே வித்யந்வயஃ. ..................................................*

---

# பத்தாம்பாட்டு.

உதவிக்கைம்மாறென்னுயிரென்னவுற்றெண்ணி
லதுவுமற்றங்கவன்றன்னதென்னாற்றன்னைப்
பதவியவின்கவிபாடியவப்பனுக்
கெதுவுமொன்றுமில்லைசெய்வதிங்குமங்கே.

## ஆறாயிரப்படி.

(உதவி) இப்படியென்னைக்கொண்டு திருவாய்மொழி பாடுவித்தருளின விம்மஹோபகாரத்துக்குக் கைம்மாறாக வென்னாத்மாவை யவனுக்கடிமையாகக் கொடுக்கவெண்ணில், அதுவும்பண்டே யவனுக்கடிமையாதலால், இங்குமங்கு மிதுக்கொரு கைம்மாறுசெய்யலாவதில்லையென்று அவனுடையமஹோபகாரத்தை யநுபவிக்கிறார்......................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அவனுடையவுபகாரத்துக்குப்ரத்யுபகாரமொருப்ரகாரத்தாலுமில்லையென்கிறார்.

உதவி-கவிபாடுவித்துக்கொண்ட வுபகாரத்துக்கு. கைம்மாறு - ப்ரத்யுபகாரம். என்-என். உயிர்-ஆத்மா. என்ன-என்று. அத்தை, உற்று - சிக்கென. எண்ணில்-நிரூபித்துப்பார்க்கில். ஆங்கு-அந்தப்ரத்யுபகாராவஸ்த்தையில். அதுவும் - அந்தவாத்மாவும். மற்று-பின்னை. அவன்றன்னது - அவனுக்கஸாதாரண சேஷமாகையாலே. என்றால்-என்னையிட்டு. தன்னை-தன்னை. பதவிய-ம்ருதுவாய். இன்-இனிதான. கவி-கவியை. பாடிய-பாடின. அப்பனுக்கு-உபகாரகனுக்கு. இங்கும்-இந்தவிபூதியிலும். அங்கும்-அந்தவிபூதியிலும். செய்வது-செய்யவடுப்பது. எதுவும்-ஏதேனுமல்பமாயிருப்பது. ஒன்றும்-ஒன்றும். ப்ரத்யுபகாரம், இல்லை-இல்லை.

ஜ்ஞாநம்பிறந்தத்தால் நித்யபரசேஷமான வாத்மாவுக்கு முமுக்ஷுதசையோடு முக்ததசையோடு வாசியற சமர்ப்பணீயத்வமில்லையென்றுகருத்து. ஸ்வகீயத்வாபிமாநமுள்ளது அஜ்ஞாநதசையிலிறே ..................................*

## ஈடு - பத்தாம்பாட்டு.

உபகாரஸ்ம்ருதிக்குக் காலம்போருகிற தில்லையென்று நீர்புண்பட்டாகில்லாதே, உம்மதாயிருப்பதொரு வஸ்துவை யவனுக்கு ப்ரத்யுபகாரமாகக்கொடுத்துப் பிழைத்துப்போக மாட்டீரோவென்ன; அப்படிசெய்யலாயிற்றிறே ஈஶ்வரனைப்போலே நானுமெனக்குடைமையா யிருப்பதொரு வஸ்துவும்பெற்றேனாகிலென்கிறார்.

(உதவி) உதவியுண்டு - உபகாரம், அதுக்குக்கைம்மாறாக - ப்ரத்யுபகாரமாக. (என்னுயிரென்ன) நித்யமாய் ஜ்ஞாநாநந்தலக்ஷணமாய் ப்ரலாக்யமா யிருப்பதொன்றுண்டிறே - ஆத்மவஸ்து, அத்தைக்கொடுத்தாலோவென்னில்; அதுசெய்யலாயிற்றிறே, அடியிலே * மயர்வறமதிநல மருளிற்றிலனாகில்; முன்னே அத்தைக்கொடுத்துவைத்தானே. ப்ராந்திசமயத்திலாத்மசமர்ப்பணம்போலேயிருப்பதொன்றாயிற்று, உபகாரஸ்ம்ருதியாலே ப்ரத்யுபகாரந்தேடிக் கலங்குகிறவிது. ப்ராந்திசமயத்திலாத்மசமர்ப்பணந்தான்வேணும், தெளிந்தவநந்தரம் “என்னுடையவஸ்துவை யவனுக்குக் கொடுத்தேன்” என்றிருக்கக்கடவனல்லன். அநாதிகாலமாத்மாபஹாரம்பண்ணிப்போந்தவதிலுங்கடையாயிற்று, தெளிந்தவநந்தரம் “நானென்னுடையவஸ்துவைத்தந்தேன்” என்றிருக்குமாகில். பின்னையும் பழைய வபஹாரமே யநுவர்த்தித்ததாமே; ஜ்ஞாநம் பிறந்தமை பொய்யாமிறே. சர்வமுக்தி ப்ரசங்கபரிஹாரார்த்தமாக வாத்மசமர்ப்பணந்தான் வேண்டிவரும்; நெஞ்சிலே வெளிச்சிறப்புண்டானாலவன் வஸ்துவையவனதாக விசைந்திருக்கக்கடவன். “ மயாஸமர்ப்பிதஃ” (மயாஸமர்ப்பிதஃ,) “ அதவாகிந்நுஸமர்ப்பயாமிதே ” (அதவாகிந்நுஸமர்ப்பயாமிதே) என்னாநின்றதிறே. “ எனதாவிதந்தொழிந்தேன் ” என்று, “எனதாவியார்யானார் ” என்றாரிறே. ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தால் பேற்றளவுஞ்செல்லவிவ்விரண்டாகாரமு மநுவர்த்திக்கக் கடவதாயிருக்கும். ஆக, ஆத்மசமர்ப்பணத்துக்கு முபகார ஸ்ம்ருதிக்கும் தனித்திவனுக்கு ப்ராப்தியில்லாதபடியான விவனுடைய பாரதந்த்ர்யத்தைச் சொல்லுகிறது. (உற்றெண்ணில்) ஆராயாதே மேலெழுகின்றுகொடுக்கில் கொடுக்கலாம், நெஞ்சிலே சிறிதுவெளிச்சிறப்புப்பிறந்து இதினுடைய ஸ்வரூபத்தையு மாராய்ந்துபார்த்துக்கொடுக்குமன்று கொடுக்கப்ராப்தியில்லை. (அதுவும்) ஆத்மாவும் (மற்று) அப்படிப்பட்ட வாத்மீயங்களும். (ஆங்கவன்றன்னது) ப்ரத்யுபகாரம்பண்ணி தரிக்கவேண்டும் தசையிலவனதாயிராநின்றது.

(என்னாலித்யாதி) உபகாரஸ்ம்ருதிக்குங்கூட ப்ராப்தியில்லாதவென்னாலே, மஹோபகாரகனாயிருக்கிற தன்னை. (பதவியவின்கவிபாடியவப்பனுக்கு) கவிபாட்டுண்கிறவனுக் கிக்கவிபாட்டாலேபண்டில்லாத நீர்மையுண்டாம்படியாகக் கவிபாடின வுபகாரகனுக்கு. (எதுவுமொன்று மி

ல்லைசெய்வது) ஏதேனுமொன்றுஞ்செய்யலாவதில்லை. இங்கிருக்கும் நாள் சங்கோசத்தாலே செய்யலாவதொன்றில்லையேயாகிலும், சங்கோசமற்றுமுக்தனுனல் ப்ரத்யுபகாரம்பண்ணத்தட்டென்னென்னில் ( இங்குமங்கே ) இங்கானல், தேஹாத்மாபிமாநத்தாலே " நான், என்னது " என்றுபோய்க்கால்கட்டித்திரிகையாலே, " செய்யலாவதொன்றுண்டோ" என்று ப்ரமிக்கவுமா யிருக்கும் ; அதுவுமின்றிக்கே, சங்கோசங் கழிந்தவளவில், தானேசெய்யலாவதொன்றில்லை யென்னுமிடம் சொல்லவேண்டாவிறே. " ஸ்வேநரூபேணாபிநிஷ்பத்யதே " ( ஸ்வேநரூபேணுபிநிஷ்பத்யதே " (என்று - ஸ்வரூபஜ்ஞாநம்பிறந்தவிடத்தில் ஸ்வரூபவிரோதியாக ப்ரவர்த்திக்கப்போகாதிறே............................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (உதவியித்யாதி) " என்னுயிரொன்னவுற்றெண்ணி லதுவுமற்றுங்கவன்றன்னது - உப்பனுக்கெதுவுமொன்றுமில்லைசெய்வதிங்குமங்கே" என்றபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (உபகாரஸ்ம்ருதிக்கித்யாதி)

ஆத்மவஸ்துவை ப்ரத்யுபகாரமாக ஸமர்ப்பிக்கலாமென்கைக்குறுப்பாக விதினுடைய ஶ்லாக்யதையை யருளிச்செய்கிருர் (நித்யமாயித்யாதி) "உற்றெண்ணில்", என்றதுக்குபாவமருளிச்செய்கிருர் ( அதுசெய்யலாயிற் றித்யாதிவாக்யத்வயத்தாலே) அத்தை - * மயர்வறமதிநலத்தையென்றபடி. அஜ்ஞனு லாத்மஸமர்ப்பணம்பண்ணுமதொழிய, ஜ்ஞாநமுண்டானு லுபகாரஸ்ம்ருதியாலே யாத்மாவை ஸமர்ப்பிக்கப்போகாதோவென்ன ப்ராந்திஸமயத்திலித்யாதி) ப்ராந்திஸமயமாவது-ப்ரபத்திபண்ணுகிறஸமயம். ஆத்மஸமர்ப்பணமாவது - ஆத்மீயபரவாஸம். ப்ரபத்திபண்ணுகிற சமயத்தை ப்ராந்திசமயமென்கிறது - சமர்ப்பித்தவநந்தரம். "சமர்ப்பிக்கத்தான் நானுர்" என்றநுதபிக்கும்படி யிருக்கையாலே. ப்ரத்யுபகாரந்தேடிக்கலங்குகிற விதென்றது - ஆத்மஸமர்ப்பணம்பண்ணுகிருேமென்று கலங்குகிறவிதென்றபடி. ஆனல் ப்ரபத்தி சமயத்தி லாத்மசமர்ப்பணம் வேண்டாவோவென்ன; ஆத்மஸமர்ப்பணம்பண்ணும் ப்ரகாரத்தையும், தநந்தர மிவனிருக்கக்கடவபடியையுமருளிச்செய்கிருர் (ப்ராந்திசமயத்திலித்யாதிவாக்யத்வயத்தாலே) இருந்தாலோவென்ன (அநாதீத்யாதி) இது கடையானபடிக்கு ஹேதுகதநபூர்வகமாகவிவரணம் (பின்னையுமித்யாதிவாக்யத்வயம்) ஆனல் செய்தநுதபிக்கவேணுமோ, முதலிலே செய்யாதிருக்க வொண்ணுதோவென்ன; இன்னதுக்காகச் செய்யவேணுமத்தையும், செய்தவநந்தர மின்னபடியிருக்கவேணுமென்னுமத்தையுமருளிச்செய்கிருர் ( சர்வமுக்தீத்யாதி வாக்யத்வயத்தாலே) அப்படி சமர்ப்பித்தநுதபித்தபேருண்டோவென்ன (மயாசமர்ப்பிதஇத்யாதி) ஸ்தோத்ரேயாமுநாசார்யா:, "வபுராதிஷு யோபி கோபிவா " (வபுராதிஷுயோபிகோபிவா) இத்யாதி, " ததஹம் தவபாதபத்மயோ ரஹமத்யைவமயா ஸமர்ப்பித: " (ததஹம்தவபாதபத்மயோரஹமத்யைவமயாஸமர்ப்பித:; ) " மமநாதயதஸ்தியோஸ்ம்யஹம் " (மமநாதயதஸ்தியோஸ்ம்யஹம் ) இத்யாதி, " அதவாகிந்நு ஸமர்ப்பயாமிதே " ( அதவாகிந்நுஸமர்ப்பயாமிதே ) ஆக, " ப்ராந்திஸமயத்தி லாத்மஸமர்ப்பணம்போலே " என்றத்தையுபபாதித்து, அநந்தரம், "உபகாரஸ்ம்ருதியாலே" இத்யாதியையுபபாதிக்கக்

கோலி, அப்படியுபகாரஸ்ம்ருதியாலேகலங்கி யாத்மாவை ஸமர்ப்பித்து, தெளிந்தவநந்தர மநுதபித்தவிடமுண்டோவென்ன (எனதாவியித்யாதி) இத்தால்பலிதம் (ஸ்வரூபஜ்ஞாநமித்யாதி) இவ்விரண்டாகாரமுமென்றது-உபகாரஸ்ம்ருதியாலே சமர்ப்பிக்கையும், அநந்தர மநுதபிக்கையுமாகிற விவ்விரண்டாகாரமுமென்றபடி. இப்பாட்டில் "ஆத்மஸமர்ப்பணம்பண்ணப்போகாது" என்றத்தால் பலிதம் - அத்யந்த பாரதந்த்ர்யமென்கிறார் (ஆக ஆத்மஸமர்ப்பணத்துக்குமித்யாதி) "உற்றெண்ணில துவுமற்றுங்கவன்றன்னது" என்கிறவித்தால் பலிதமான வர்த்தவிசேஷத்தையருளிச்செய்கிறார். (ஆராயாதேயித்யாதிவாக்யத்வயத்தாலே)

மற்று - ஆத்மீயங்களென்றபடி. அங்கு - ப்ரத்யுபகாரதசையிலென்றபடி.

ப்ராப்தியில்லாதவென்னாலே - அத்யந்த பரதந்த்ரனாகையாலே (ப்ராப்தியில்லாதவென்னாலே) என்றுகூட்டுவது. பதவிய - பதமுண்டாம்படியாக. நீர்மையுண்டாம்படியாகவென்றபடி. "பதவியவின்கவி" என்றதுக்கு-ம்ருதுவா யினிதானகவியென்று பொருளாகையாலே, இதுக்கு மார்த்தவமேதென்ன (கவிபாட்டுண்கிறவித்யாதி) "இங்குமங்கும்" என்றதுக்கவதாரிகை (இங்கிருக்கும்நாளித்யாதி) கீழ் சங்கைக்கு பரிஹாரம் (இங்கானலித்யாதிவாக்யத்வயம்) "சங்கோசங்கழிந்த" இத்யாதியின்விவரணம் (ஸ்வேநரூபேணேத்யாதி)

உதவிக்கைம்மாறென்றுதொடங்கி, அப்பனுக்கு-இங்குமங்கும்-எதுவுமொன்றுமில்லை செய்வதித்யந்வய8 ..............................................*

---

# பதினொன்றாம்பாட்டு.

இங்குமங்குந்திருமாலன்றியின்மைகண்
டங்ஙனேவண்குருகூர்ச்சடகோப
னிங்ஙனேசொன்னவோராயிரத்திப்பத்து
மெங்ஙனேசொல்லிலுமின்பம்பயக்குமே.

## ஆறாயிரப்படி.

(இங்குமங்கும்) ஸ்ரீயஃபதியானவனல்ல துபகாரகரில்லையென்னுமிடத்தை யநுசந்தித்து அந்த பாவயுக்தரான வாழ்வார், தம்மைத் திருவாய்மொழிபாடுவித்தருளின விம்மஹோபகாரத்தைச்சொன்ன வித்திருவாய்மொழி, எங்ஙனே சொல்லிலு மின்பம் பயக்குமென்கிறார். ............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழி, தன்னோடந்வயித்தார்க்கு நிரதிசயாநந்தத்தை யுண்டாக்காநிற்குமென்று பலத்தையருளிச்செய்கிறார்.

இங்கும் - இந்தவிபூதியிலுண்டான வாஸ்ரயணதசையிலும். அங்கும் - அந்தவிபூதியிலுண்டான கைங்கர்யதசையிலும். திருமால் - பூர்வோத்தரவாக்ய ப்ரமுகஸித்தமான ஸ்ரீயஃபதித்வத்தையுடையவனே. அன்றி - ஒழிய. இன்மை-வேறில்லாமையை. கண்டு - அநுசந்தித்து. அங்ஙனே-அந்தப்ரகாரத்தையுடையராய். வண்-

உதாரரான. குருகூர்ச்சடகோபன் - ஆழ்வார். சொல் - தம்மை வாசிக கைங்கர்யங்கொண்ட. இங்ஙனே - இந்தப்ரகாரத்திலே. சொன்ன - அருளிச்செய்த. ஓர், ஆயிரத்து - ஆயிரத்திலே. இப்பத்தும் - இப்பத்தும். எங்ஙனே - இவருடைய உபகாரஸ்ம்ருதிரூபமான அர்த்தவ்யதிரேகேண. சொல்லிலும் - சப்தமாத்ரமேசொல்லிலும். ஆழ்வார்வைபவத்தாலும், இத்திருவாய்மொழியின் மாஹாத்ம்யத்தாலும், இன்பம் - பகவதநுபவஜநிதநிரதிசயாநந்தத்தை. பயக்கும் - உண்டாக்கும்.

இது - கலிவிருத்தம். ..........................................................*

## ஈடு - பதினொன்றாம்பாட்டு.

நிகமத்தில் - இத்திருவாய்மொழி, ஏதேனு மொருபடிசொல்லிலு மாநந்தத்தை யுண்டாக்குமென்கிறார்.

( இங்குமங்குந்திருமாலன்றி யின்மைகண்டு ) சாதநாநுஷ்டாந சமயத்தோடு ப்ராப்யவஸ்துவை ப்ராபித்த சமயத்தோடு வாசியற, இஹலோக பரலோகங்க ளிரண்டிலும் ஸ்ரீய:பதியல்லதுபோக்கி யிவ்வாத்மவஸ்துவுக்குத் தஞ்சமாயிருப்பார் வேறில்லையென்னுமத்தை யநுசந்தித்து. “பண்டைநாளாலே நின்திருவருளும் பங்கயத்தாள் திருவருளுங்கொண்டுநின்கோயில்சீய்த்து” என்கிறபடியே, கைங்கர்யம்பண்ணுமிடத்திலுமவள்முன்னாகப்பண்ணவேணுமிறே; ஆஶ்ரயணவேளையிலுமவள்முன்னாகவேணுமிறே. [ [illegible] ] [ ஹதேதஸ்மிந்நகுர்யு: ] என்று ராவணன் சொல்லுகையாலே அன்றிருந்து நலிந்தார்களாகில், இப்போதும் நலிவர்களோ? என்று அவர்கள்பக்கலிலும் குணத்தை யாரோபித்துச்சொல்லும் நீர்மையையுடையவளாயிற்று. ( அங்ஙனேயித்யாதி ) நமக்கும், சதாசார்யன் அருகேயிருந்து, ஸ்ரீய:பதி யொழிய விவ்வாத்மவஸ்துவுக்குத் தஞ்சமாயிருப்பாரில்லை” என்றுபதேசித்தால்,அத்தனைபோதும் “அப்படியே” என்றிருக்குமதுண்டிறே; இவரங்ஙனன்றிக்கே, அந்நினைவுக்கநுரூபமான பரிமாற்றத்தையு முடையராயிருப்பராயிற்று. ஆக, மநோவாக்காயங்கள் மூன்று மொருபடிப்பட்டிருக்குமோவென்னில் (இங்ஙனித்யாதி) இப்பாவவ்ருத்தியிலேசொல்லிற்றாயிற்று ஆயிரம்பாட்டும். நீர், மநோவாக்காயங்கள் மூன்றிலும் “ஸ்ரீய:பதியேயிவ்வாத்மவஸ்துவுக்குத்தஞ்சம்” என்றத்யவஸித் தருளிச்செய்த விப்பாசுரத்தை யப்யஸிப்பார்க்கு மநோவாக்காயங்கள் மூன்றும் பாஹ்யாதிவிஷயங்களில்நின்றும் மீளவேணுமோ - நீர் * சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும் தேவபிரானையே தந்தைதாயென்றடைந்தவராயிராநின்றீர், இவர்களுக்குமெல்லாம் பின்னை யிப்படிவேணுமோவென்னில்; அத்தேவைகளெல்லாம் நம்மோடே, இது கற்பார்க்கு அதுவேண்டாவென்கிறார் ( எங்ஙனே சொல்லிலு மின்பம்பயக்குமே ) ஏதேனுமொருபடிசொல்லிலு மின்பமுண்டாம். என்னுடையபாசுரத்தைக் கற்றவர்களென்றிறே யீஶ்வரனிவர்களைக்கடாக்ஷிப்பது ; இல்லையாகி லிவர் தம்மைப்போலே மநோவாக்காயங்களுடைய நியதியுண்டா யநுபவிக்கப்பெறிலழகிது, அதில்லாதபோது

ம் பலவ்யபிசாரியாகாதென்கைக்காகச் சொல்லிற்றத்தனையிது. (இன்பம் பயக்குமே) "ஏஷஹ்யேவாநந்தயாதி" (ஏஷஹ்யேவாநந்தயாதி) என்கிறபடியே, நிரந்தரபகவதநுபவத்தால்பிறக்குமாநந்தமானதுண்டாம்.*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (இங்குமங்குமித்யாதி) "எங்ஙனேசொல்லினுமின்பம்பயக்கும்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (இத்திருவாய்மொழியித்யாதி)

இன்மைகண்டு - இல்லாமையையநுசந்தித்து. இஹலோக பரலோகங்களிரண்டிலும் ஸ்ரீயஃபதியே தஞ்சமென்றதுக்கு பாவமருளிச்செய்யாநின்றுகொண்டு, சப்தார்த்தம் (சாதநாநுஷ்டாநேத்யாதி) பலவேளையிலு மாஸ்ரயணவேளையிலும் பிராட்டி சம்பந்தம் வேணுமோவென்ன (பண்டைநாளாலேயித்யாதிவாக்யத்வயம்) "ஆஸ்ரயணவேளையி லிவள்முன்னாகவேணும்" என்கைக்கு, இவன்தோஷத்தைப்பார்த்து ஈஸ்வரன் சீறுமளவிலத்தை யாற்றிச்சேர விடும்படியான நீர்மையுடையவளோவென்ன (ஹதேதஸ்மிந்நித்யாதி) "ஆஜ்ஞப்தாராவணேநைதாராக்ஷஸ்யோமாமதர்ஜயந் । ஹதேதஸ்மிந்நகுர்யுர்ஹிதர்ஜநம்வாநரோத்தம" (ஆஜ்ஞப்தாராவணேநைதாராக்ஷஸ்யோமாமதர்ஜயந் । ஹதேதஸ்மிந்நகுர்யுர்ஹிதர்ஜநம்வாநரோத்தம) இதியுக்தகாண்டே ஸீதா.

"அங்ஙனே" என்றதுக்கு வ்யாவர்த்யபூர்வகமாக வர்த்தம் (நமக்குமித்யாதி) பரிமாற்றத்தை-அநுஷ்ட்டாநத்தையென்றபடி,

ஆகவென்றது - ஆனாலென்றபடி. மூன்று மொருபடிப்பட்டிருக்குமோவென்றது - மாநஸமான வத்யவஸாயமும் காயிகமான வநுஷ்ட்டாநம்போலே வாசிகமு மொத்திருக்குமோவென்றபடி.

"எங்ஙனேசொல்லினும்" என்றதுக்கவதாரிகை (நீர்மநோவாக்காயங்களித்யாதி) "நீர்மநோவாக்காயங்கள்" இத்யாதிவாக்யவிவரணம் (நீர்சிந்தையாலுமித்யாதி) அதுக்குஹேதுவேதென்ன (என்னுடையபாசுரத்தையித்யாதி) "சொல்லினும்" என்றயதிசப்தார்த்தம் (இல்லையாகிலித்யாதி) பயக்கும்-உண்டாக்கும். ஆநந்தயாதி - ஆநந்தயதி என்றபடி ..............................................*

---

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

(என்றைக்குமென்னை.)

ஸ்வாமித்வாச்சர்யபாவாத்ஸ்வவிஷயகவிதாகாரணத்வாத்ஸ்வகீர்த்தேர்
ஜீவாத்வாத்பக்தவர்க்கோத்வஹநநிபுணதாசக்திவைசித்ர்யயோகாத் । ப்ரஸ்தாவாத்
த்ராணபாவாத்ஸ்வகதபரிதோஷாத்ஸ்வாத்மபர்யந்ததாநாத்ஸ்வஸ்யேஷ்டாநுப்ராஸ
ஸாக்ஷ்யாத்ஸ்வத்ருஷ்டேஸ்ஸாம்யமத்ராப்யுபகாரோத்ஸாஹமாயம்॥ (௭௧)

(ஸ்வாமித்வ) இன்றமிழ்பாடியவீசனே - சர்வஸ்வாமியாகையாலும்; (ஆஸ்சர்யபாவாத்) தன்சொல்லால்தான்றன்னைக் கீர்த்தித்த மாயன்-அத்யாஸ்சர்யசக்தி

யுக்தனாகையாலும்; ( கருணயாதத்தவாக்ஜ்ரும்பணத்வாத் ) என்வாய்முதலப்பனை-த்ருவனுக்குப்போலே தன்க்ருபையாலே தானேயாஶ்ரிதர்க்கு வாக்கையுண்டாக்குமவனாகையாலும்; (உஜ்ஜீவாபாதகத்வாத்) ஒப்பிலாத்தீவினையேனை யுய்யக்கொண்டு - அத்யந்தநிக்ருஷ்டர்களையு முஜ்ஜீவிப்பிக்கு மவனாகையாலும்; ( அகடிதகடநாஶக்தி ) ஏர்விலாவென்னைத் தன்னாக்கியித்யாதி - தன்னைக்கவிபாடுகைக்கு, சர்வப்ரகாரத்தாலுமயோக்யரானவர்களையுங்கொண்டு பாடுவித்துக்கொள்ளவல்ல வகடிதகடநா சாமர்த்யத்தை யுடைத்தாகையாலும்; (வைகுண்டயோகாத்) வன்கவிபாடுமென்வைகுந்தநாதனே-ஸ்ரீவைகுண்டத்திலெழுந்தருளியிருக்கையாலும்; (ஶுத்தஸ்வாந்தத்வ) வல்வினைமாய்ந்தறச்செய்குந்தன்றன்னை - ஆஶ்ரிதருடைய பாபங்களை நிவ்ருத்தமாம்படிபண்ணவல்ல பரிசுத்தஸ்வபாவனாகையாலும்; ( சக்ராயுத ) ஆர்வனோ வாழியங்கையெம்பிரான் புகழ் - திருவாழியை திவ்யாயுதமாக வுடையனாகையாலும்; (ஜலதிஸுதாவல்லபத்வாத்) திருமாலின்சீர் - ஶ்ரியஃபதியாகையாலும் (பித்ருத்வாத்) பதவியவின்கவிபாடியவப்பனுக்கு-மஹோபகாரகனாகையாலும்; எம்பெருமானாஶ்ரிதரை அநந்ய ப்ரயோஜந ஸ்வவிஷய ஸ்தோத்ரத்திலே மூட்டாநிற்கிறானென்று, " என்றைக்குமென்னை " என்கிறதஶகத்திலே யாழ்வா ரருளிச்செய்தாரென்கிறார். ..............................................................................(௭௯)

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

என்றனைநீயிங்குவைத்ததேதுக்கெனமாலு
மென்றனக்குமென்றமர்க்குமின்பமதா - நன்றுகவி
பாடவெனக்கைம்மாறிலாமைபகர்மாறன்
பாடணைவார்க்குண்டாமின்பம். (௱௯)

( என்றனைநீ ) இதில் - அவன் திருவாய்மொழி பாடுவித்தபடியை யநுசந்தித்தீடுபடுகிற பாசுரத்தை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில்; "எனக்கு ருசியின்றிக்கேயிருக்க சம்சாரத்திலே யென்னைவைத்ததுக்கு ஹேதுவென்" என்றுகேட்க, " உம்மைக்கொண்டு நமக்கும் நம்முடையார்க்கு மநுபவிக்கலாம்படி விலக்ஷணமான திருவாய்மொழி ப்ரபந்தத்தைப் பாடுவித்துக்கொள்ளவைத்தோங்காணும் " என்று நேர்கொடுநேரானபரிஹாரத்தை யவனருளிச்செய்ய, "வேதங்கள், வ்யாஸாதிகள், முதலாழ்வார்கள், இவர்களுண்டாயிருக்க, அத்யந்தஹேயனானவென்னைக்கொண்டு, வேதங்களாலு மெல்லைகாணவொண்ணாத தன்வைபவத்துக்குத்தகுதியாக விலக்ஷணமான திருவாய்மொழியைப் பாடுவித்துக்கொண்ட விம்மஹோபகாரத்துக்கு உபயவிபூதியிலும் சத்ருஶமாகச் செய்யத்தக்கதொரு ப்ரத்யுபகாரமில்லை" என்று தலைசெய்த்துப்படுகிற * என்றைக்கு மென்னையிலர்த்தத்தை, " என்றனைநீ " இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

(என்றனைநீயிங்குவைத்ததேதுக்கென) அவன்காட்டினதாகையாலே விசித்ரவிபூதியை யநுபவித்து, மீளவும் பூர்வப்ரக்ருதமான தம்முடையசங்கையை, "பாசங்கள்நீக்கி யென்னை யுனக்கேயறக்கொண்டிட்டு நீவாசமலர்த்தண்டுழாய்முடிமாயவனேயருளாய் " என்றுகேட்க. (என்றனைநீ) சம்சாரத்தில் பொருந்தாதவென்னை, நீ - சம்சாரத்தில் பொருந்தாதானா யேறவிடுகைக்கு சர்வசக்தியுக்தனானநீ.

(இங்கு) * இருள்தருமாஞாலமான விவ்விபூதியிலே. (வைத்ததேதுக்கென) ப்ரயோஜநநிரபேக்ஷமாயிருக்க, என்னப்ரயோஜநத்தைப்பற்ற வைத்ததென்ன. (மாலுமென்றனக்குமென்றமர்க்கு மின்பமதாநன்றுகவிபாடவென) திருமாலானவென க்கினிதாகவும், * திருமாலடியாரான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கினிதாகவும், விலக்ஷணமாய் "கவியமுதம்" என்னும்படியான வினியகவிகளைப்பாடவைத்தோமென்ன. தன்னைக்கவிபாடுகைக்கு, வேதங்களும், அத்தைப்பின்சென்ற வைதிகரான வ்யாச வால்மீகி ப்ரப்ருதிகளான பரமருஷிகளும், * செந்தமிழ்பாடுவாராய் "பெருந்தமிழனல்லேன்பெருகு" என்று ப்ரசம்ஸிப்பாருமான முதலாழ்வார்களு முண்டாயிருக்க, கவிபாடவென. (கைமாறிலாமை) "கவிபாடவைத்தோம்" என்றவிந்தவுபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமில்லாமையை. (பகர்மாறன்) அருளிச்செய்தவாழ்வார். அதாவது - "என்றைக்கும் - என்சொல்லிநிற்பனே," "என்சொல்லிநிற்பன் - என்முன்சொல்லும் மூவுருவாமுதல்வனே," "ஆமுதல்வனிவனென்று - என்வாய்முதலப்பனையென்றுமறப்பனோ," "செப்பமேசெய்துதிரிகின்றசீர்கண்டு - அப்பனையென்றுமறப்பன்," "சீர்கண்டுகொண்டு - பார்பரவின்கவிபாடுபரமரே," "இன்கவிபாடுபரமகவிகளால் தன்கவிதான்தன்னைப்பாடுவியாது - வன்கவிபாடுமென் வைகுந்தநாதனே," "வைகுந்தநாதன் - எந்நாள்சிந்தித்தார்வனே," "ஆர்வனே - சீர்பெறவின்கவிசொன்னதிறத்துக்கே," "திறத்துக்கு - உறப்பலவின்கவிசொன்ன வுதவிக்கே," "உதவிக்கைம்மாறென்னுயிர் - எதுவுமொன்றுமில்லைசெய்வதிங்குமங்கே" என்றிப்படி உபகாரஸ்ம்ருத்யதிசயத்தாலே யீடுபட்டருளிச்செய்தவென்கை. " 'என்சொல்லி,' 'எந்நாள்,' 'பார்விண்ணீர்,' 'இறப்பெதிர்,' 'எதுவும்' என்கிற வுபகாரஸ்ம்ருதியோடே" என்றிறே நாயனருமருளிச்செய்தது. "[Grantha text] " (சதுர்விம்ஶத்ஸஹஸ்ராணிஶ்லோகாநாமுக்தவாந்ருஷிஃ) என்னும்படி, * பாலோடமுதன்னவான * இங்ஙனேசொன்ன வோராயிரமான * உறப்பலவின்கவிகளைப் பாடுவிக்கையாலே யிவர்க்கீடுபாடாயிருக்கிறது. (கைம்மாறிலாமைபகர்மாறன்பாடணைவார்க்குண்டாமின்பம்) இப்படி க்ருதஜ்ஞரானவாழ்வார் பரிசரவர்த்திகளாம்படி கிட்டுவார்க்காநந்தமுண்டாம். "எங்ஙனே சொல்லினு மின்பம்பயக்குமே," என்கிற நிர்ப்பந்தமும்வேண்டா, கேவலம்கிட்டவமையும்.............................................................. (சுகூ)

ஏழாம்பத்தில் - ஒன்பதாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக - திருவாய்மொழி - சுகூ.—பாட்டு - எசுக.



ஸ்ரீ

# திருவாய்மொழி.

## ஏழாம்பத்து.

## பத்தாந்திருவாய்மொழி.

### இன்பம் - ப்ரவேஶங்கள்.

### ஆறாயிரப்படி.

(இன்பம்பயக்க) இப்படியென்னைத் திருவாய்மொழி பாடுவித்தருளுகைக்காக, திருநாட்டினின்றும் அங்கே யெழுந்தருளி யிருந்தபடியே சபரிகரமாகத்திருவாறன் விளையிலே வந்துபுகுந்து என்னைத் திருவாய்மொழி பாடுவித்துப் பாட்டைக்கேட்டருளி, திருவடி, பெருமாள் குணங்களைச் சொல்லக்கேட்டருளி அசோகவனிகையிலே பிராட்டிநிர்வ்ருதையாயிருந்தாப்போலே நிர்வ்ருதனாயிருந்த திருவாறன் விளையையென்றோ சென்று நாமநுபவிக்கப்பெறுவதென்று மநோரதிக்கிறார்... ..........*

### பன்னீராயிரப்படி.

பத்தாந்திருவாய்மொழியில்,கீழ்ப்படி தம்மைக்கொண்டு கவிபாடுவித்துக்கொண்ட மஹோபகாரத்தாலே தம்முடையவிரோதி அஸத்ஸமமாம்படி ஹ்ருஷ்டரானவர், அவனுபகாரத்துக்கொரு ப்ரத்யுபகாரங்காணாமையாலே, சேஷியானவனுக்கதிசயஜநகமான சேஷவ்ருத்தியொழிய இல்லையென்றறுதியிட்டு, ப்ரதிசம்பந்தியான வவனுடைய வசேஷசேஷித்வப்ரகாசகமான ஸ்ரீயஃபதித்வபூர்த்தியையும், அநந்யார்ஹசேஷத்வாபதாநத்தையும்; ஆஶ்ரிதரக்ஷணகாரத்தையும், அநபாய்யமான விக்ரஹயோகத்தையும், அநுபவார்த்தமான வவதாரத்துக்கு மூலமாயுள்ள அநந்தசயநத்வத்தையும், அநிஷ்டநிவ்ருத்திவிசிஷ்டமான வபிமதசாதகத்வத்தையும், ப்ரபலவிரோதி பஞ்சநத்வத்தையும், ஆந்தரதுஃகநிவர்த்தகத்வத்தையும், பாபம்நிவ்ருத்தமாய் ப்ராப்யதேசம் சித்திக்கிலும் உத்தேஶ்யமான ஆஸந்நதேஶயோகத்தையும், நிரதிசயவ்யவசாயஜநகத்வத்தையுமநுசந்தித்து, ஏவம்விதஸ்வபாவனானவவன் நம்மைவிரோதியைக்கழித்தடிமை கொள்ளுகைக்காக ஆஸந்நமான திருவாறன் விளையிலே சந்நிஹிதனான வவன்றிருவடிகளிலே யடிமைசெய்யக்கடவோமென்று மநோரதித்து, இப்படி நிவர்த்யவிரோதிபலநிரூபண பூர்வகமாக வதினுடைய சரண்யநிவர்த்யத்வத்தை நிஷ்கரிஷித்து நிகமிக்கிறார்........................ ................ ......*

### ஈடு.

சர்வேஶ்வரன் தம்மைக்கொண்டு திருவாய்மொழி பாடுவித்துக்கொண்ட மஹோபகாரத்துக்கு ப்ரத்யுபகாரந்தேடிக் காணாமை தடுமாறி

ஞர் – கீழ்த்திருவாய்மொழியிலே, இவர் தாம்தம்முடைய ப்ரமத்தாலே ப்ரத்யுபகாரந்தேடித் தடுமாறினரத்தனைபோக்கி இவர்தமக்குக்கொடுக்க லாவதொன்றுமில்லை, அவனென்றுகொண்டு குறைதீரவேண்டும் சாபேக்ஷனல்லன், இவர்தம்முடைய வுபகாரஸ்ம்ருதியிருந்த விடத்திலிருக்க வொட்டாமையாலே செய்ததொன்றிறே; ஆனாலுமாறியிருக்க மாட்டாரே. இனி, நாமுமவனுக்கொன்று கொடுத்தோமாய், அவனும் நம்பக்கலொன்று பெற்றானாகச்செய்யலாவதொன்றுண்டு. அவன், தனக்குவருத்தகைங்கர்யத்தைப்பண்ணவே, அதுதன்னைத்தனக்கு ப்ரத்யுபகாரம்பண்ணிற்றாகநினைத்திருக்கும் ஸ்வபாவனாயிருந்தான்; ஆனபின்பு, நம்முடைய ஸ்வரூபாநுரூபமான வாத்மாந்ததாஸ்யத்திலே யதிகரிப்போமென்று பார்த்தார். இனித்தான், வேதவாக்யங்களும் "ஸ்வேநரூபேணாபி நிஷ்பத்யதே" (ஸ்வேநரூபேணாபிநிஷ்பத்யதே) என்று-ஸ்வரூபப்ராப்தியளவுஞ்சொல்லவே, அதுக்கவ்வருகில் கைங்கர்யமானது, அவகாதஸ்வேதம்போலே தன்னடையே வருமென்று ப்ரஹ்ம ப்ராப்தி யளவுஞ்சொல்லிவிடும். ஆழ்வார்கள் "வழுவிலாவடிமைசெய்யவேண்டுநாம்" என்று அதுதன்னையேசொல்லாநிற்பர்கள், ப்ராப்திபலமானகைங்கர்யத்தில் ருசியாலே. "ஸம்ஸாரம்த்யாஜ்யம், சர்வேஶ்வரனுத்தேஶ்யன்" என்கிறஜ்ஞாநம்பிறந்து, பகவத்ஸமாஶ்ரயணம்பண்ணினவர்கள், "பேஷஜம்பகவத்ப்ராப்திஃ" (பேஷஜம்பகவத்ப்ராப்திஃ) என்றுபகவத்ப்ராப்தியளவிலே நின்றார்கள்; அவர்களிற்காட்டில் "மயர்வறமதிநலமருளினன்" என்று பகவத்ப்ரசாத லப்தமானஜ்ஞாநத்தையுடையரான விவர்களுக்கு வாசியிதுவாயிற்று. இனி, அடிமைசெய்யுமிடந்தன்னில் "சரீரசம்பந்தமற்று பரமபதப்ராப்திபண்ணினால் பின்புசெய்கிறோம்" என்றவ்வளவுமாறியிருக்கும்படியன்றே உபகாரஸ்ம்ருதி யிவரைநலிகிறபடி. ஆகையாலே, ஸ்ரீவால்மீகிபகவான் பாடின ஸ்ரீராமாயணங்கேட்கைக்குத் திருவயோத்யையிலே திருத்தம்பிமாரும் தாமுங்கூடப் பெருமாள் பேரோலக்கமிருந்தாப்போலே, சர்வேஶ்வரனும், நாம்பாடினதிருவாய்மொழி கேட்கைக்காகத்திருவாறன் விளையிலே, பர்யங்கவித்யையிற் சொல்லுகிறபடியே திருவநந்தாழ்வான்மேலே நாய்ச்சிமாரோடேகூடி நித்யபரிஜநத்தோடேகூட வெழுந்தருளி யிருந்தான். அங்கேபோய்த் திருவாய்மொழிகேட்பித்தடிமைசெய்வோமென்று மநோரதிக்கிறாராய், அம்மநோரதந்தன்னிலும், சர்வேஶ்வரன் ப்ராப்யனானால் அர்ச்சிராதிகதியோடு தேஶவிசேஷத்தோடு வாசியற ப்ராப்யாந்தர்க்கதமிறே. அதாவது-முன்பப்ராப்தமாய் பின்புபாசநத்துக்குப்பலமாய் வ்ருவனயாவைசில, அவையெல்லாம்ப்ராப்யாந்தர்க்கதமாகக்கடவதிறே; அப்படியே, திருவாறன்விளையிலே யெழுந்தருளியிருக்கிற சர்வேஶ்வரன் திருவடிகளிலேபோ யடிமைசெய்யக்கடவோம். அதுதானும்வேண்டா, அத்தேஶப்ராப்திதானேயமையும்; அது

தானும்வேண்டா, இங்கேயிருந்தே யங்கேறப்போவதாக மநோரதிக்கிற வம்மநோரதந்தானேயமையும். இனி, நாமத்தேஶத்தை "ப்ராப்யம்" என்று புத்திபண்ணிப்போருகிறவோபாதி அவனும்நாமிருந்ததேஶத்தைக்குறித்து வரக்கடவன், அவ்வளவிலும் நாமவனை யநுவர்த்தித்து விட்டு நாமத்தேஶத்திலேபோய்ப் புகக்கடவோம், அத்தேஶமேநமக்கு ப்ராப்யம்; அங்கேபோய்ப்புகவே நம்முடையகைங்கர்ய விரோதிகளடையப்போம். இனி, நான்வேறொன்றிலே யிச்சைபண்ணிலும், என்னெஞ்சானது அத்தேஶத்துக்கொழிய வேறொரு தேஶத்துக்காளாகமாட்டாது; "ஹா வொ நாந்யத்ர கச்சதி" (பாவோநாந்யத்ரகச்சதி) என்கிறபடியே.

ஆக, திருவாறன் விளையிலே புக்கடிமைசெய்யக்கடவ படிகளை மநோரதித்தினியராகிறார். ஸ்ரீராமாயணத்திற் காட்டிலிதுக்குவாசி - பாடினாரே கேட்பிக்கையும், பாட்டுண்டாரே கேட்கையுமாயிற்று. "ஸீதாயாஶ்சரிதம் மஹத்" ( ஸீதாயாஶ்சரிதம்மஹத் ) என்னாநிற்கச்செய்தே, கவி பாட்டுண்டவனை யொழியத்தனியே யிருந்திறே கேட்டது. பாடினான் ஸ்ரீவால்மீகிபகவான், கேட்பித்தாரும் குசலவர்களிறே...........................*

## ஜீயர் அரும்பதம்.

இன்பம்பயக்க ப்ரவேஶ, வ்ருத்தவர்த்திஷ்யமாண சங்கதிக்காக வ்ருத்தாநுவாதம்(சர்வேஶ்வரனித்யாதி) ஆனால் வெறுமனேயிருக்கவொண்ணாதோவென்ன; உபகாரஸ்ம்ருதியாலே வெறுமனே யிருக்கமாட்டாமல் தடுமாறினாரென்கிறார் (இவர்தாம் தம்முடைய வித்யாதிவாக்ய சதுஷ்டயத்தாலே.) இவருடைய வாகிஞ்சந்யத்தாலு மவனுடைய பூர்த்தியாலும் ப்ரத்யுபகாரம்பண்ண விரகில்லையாகில் வெறுமனேயிருக்கிறதுக்கென்னென்ன (ஆனாலுமித்யாதி) ஆனால் ப்ரத்யுபகாரம்பண்ணும் விரகேதென்ன; சங்கதியருளிச்செய்கிறார் ( இனிநாமுமித்யாதி ) அதாவதேதென்ன (அவன்தனக்கித்யாதி) (அவன்) என்றதுக்கு, (நினைத்திருக்கும் ஸ்வபாவனாயிருந்தான்) என்றத்தோடே யந்வயம். வகுத்தகைங்கர்யம் - ப்ராப்தமானகைங்கர்யம். ஆனபின்பு - அவன்ஸ்வபாவ மிதுவானபின்பென்றபடி. ஆத்மாந்ததாஸ்யம்-யாவதாத்மபாவியான கைங்கர்யம். ஶ்ருதியிலே "பகவத்ப்ராப்தியே புருஷார்த்தம்" என்னாநிற்க, கைங்கர்யம் புருஷார்த்தமென்பானென்னென்ன (இனித்தானித்யாதி) வேதம்போலே யாழ்வார்களும் ப்ராப்திமாத்ரத்தைச்சொல்லி விடவொண்ணாதோவென்ன (ஆழ்வார்களித்யாதி) அதுதன்னையே - கைங்கர்யந்தன்னையே. அப்படி சொல்லுகைக்கு ஹேதுவேதென்ன (ப்ராப்திபலமான வித்யாதி) ஆனால் வேததாத்பர்யத்தை உபப்ரும்ஹணமுகேந வெளியிடுகிற ருஷிகள் சொல்லாமைக்குஹேதுவேதென்ன; ஸ்வரூப யாதாத்ம்ய ஜ்ஞாநமில்லாமையாலேயென்கிறார் (சம்சாரமித்யாதி) இவர்களுக்கு வாசியேதென்ன (அவர்களிலித்யாதி) இதுவாயிற்று - கைங்கர்யத்தில் ருசியுடையராகையாயிற்றென்றபடி. பரமபதத்திலே போனாலன்றோ வடிமைசெய்யலாவது, "இங்கேசெய்யவேணும்" என்றபேக்ஷிக்கிறதென்னென்ன (இனியடிமையித்யாதி)

"பாம்பணையப்பன்" இத்யாதியைப்பற்ற ( பர்யங்கேத்யாதி ) "எழில்மலர் மாதர்," "தேவபிரான்" என்றத்தைப்பற்ற (நாய்ச்சிமாரோடே யித்யாதிவிசேஷ

ணத்வயம்) அடிமை-வாசிகமானவடிமை. ஆனாலவனையொழிய அவனிருந்ததேசம் போகிறவழியெல்லாவற்றையும் மநோரதிக்கிறதென்னென்ன (சர்வேஸ்வரனித்யாதி) அதெங்ஙனேயென்ன (அதாவதித்யாதி) உபாசநத்துக்கு - உபாயத்துக்கென்றபடி. பலமென்றது - அவாந்தரபலமென்றபடி. "ஈங்குநினைக்கப்பெற" என்றத்தைப்பற்ற (இங்கேயிருந்தேயித்யாதி) "ஆடுபறவைமிசைக்கண்டுகைதொழுதன்றி" என்றத்தைப்பற்ற (இனிநாமத்தேசத்தையித்யாதி) "ஒன்றிவலம்செய்யவொன்றுமோதிவினை" என்றத்தைப்பற்ற (அங்கேபோய்ப்புகவேயித்யாதி) "கூடுங்கொலென்றுமென்சிந்தனை" என்றத்தைப்பற்ற (நான்வேறொன்றிலேயித்யாதி) இதுக்குத்ருஷ்டாந்தம் (பாவ இத்யாதி)

நிகமநம் (ஆகவித்யாதி) இத்தால் வ்யாவ்ருத்தி (ஸ்ரீராமாயணத்திலித்யாதி) அங்கிவ்விரண்டு மில்லையோவென்ன வருளிச்செய்கிறார் (ஸீதாயா இத்யாதிவாக்யத்வயத்தாலே) "காவ்யம்ராமாயணம்க்ருத்ஸ்நம்ஸீதாயாஶ்சரிதம்மஹத். பௌலஸ்த்யவதமித்யேவசகாரசரிதவ்ரதஃ" (காவ்யம்ராமாயணம்க்ருத்ஸ்நம்ஸீதாயாஶ்சரிதம்மஹத் । பௌலஸ்த்யவதமித்யேவசகாரசரிதவ்ரதஃ) இதிபாலகாண்டே, "நிரஸ்தாதிஶயாஹ்லாதஸுகபாவைகலக்ஷணா । பேஷஜம்பகவத்ப்ராப்திரேகாந்தாத்யந்திகீமதா" (நிரஸ்தாதிஶயாஹ்லாதஸுகபாவைகலக்ஷணா । பேஷஜம்பகவத்ப்ராப்திரேகாந்தாத்யந்திகீமதா) இதிஷஷ்ட்டேம்ஶே ......*

## பத்தாந்திருவாய்மொழி.

## முதற்பாட்டு.

இன்பம்பயக்கவெழின்மலர்மாதருந்தானுமிவ்வேழுலகை
யின்பம்பயக்கவினிதுடன்வீற்றிருந்தாள்கின்றவெங்கள்பிரா
னன்புற்றமர்ந்துறைகின்றவணிபொழில்சூழ்திருவாறன்விளை
யன்புற்றமர்ந்துவலஞ்செய்துகைதொழுநாள்களுமாகுங்கொலோ.

### ஆறாயிரப்படி.

பரஸ்பரஸாஹித்யத்தாலே தங்களுக்கின்பமுண்டாம்படியாகவும், * அயர்வறுமமரர்களுக் கினிதாம்படியாகவும், பிராட்டியோடேகூடத் திருமாமணிமண்டபத்திலே வீற்றிருந்தருளி, இவ்வேழுலகை யின்பம்பயக்கவாள்கின்ற வெங்கள்பிரான் அன்புற்றமர்ந்துறைகின்ற வணிபொழில் சூழ்திருவாறன்விளை யன்புற்றமர்ந்து வலஞ்செய்து கைதொழுநாள்களுமாகவற்றேயோவென்கிறார். ..........................................*

### பன்னீராயிரப்படி.

முதற்பாட்டில், சேஷியானவன் லக்ஷ்மியோடே பரிபூர்ணனாயெழுந்தருளியிருக்கிற திருவாறன்விளையை யநுபவித்தடிமைசெய்யுங்காலமுமாமோவென்கிறார்.

எழில் - சௌந்தர்யாதிகுணோபேதையாய். மலர்மாதரும் - பத்மவாஸினீத்வத்தாலேவந்த போக்யதையையுடைய லக்ஷ்மியும். தானும் - அவர்கள் தான்விரு

ம்பி மேல்விழும்படியான வைலக்ஷண்யத்ஸதயுடைய தானும். இன்பம் - பரஸ்பரா நந்தவ்ருத்தி. பயக்க - உண்டாம்படியாக. இனிதுடன் - போகஸாரஸ்யத்தோடே கூட. வீற்றிருந்து - சர்வசேஷித்வ வ்யாவ்ருத்தி தோன்றும்படி யிருந்து. இவ்வேழுலகை - வ்யக்தாவ்யக்த காலசுத்த ஸத்வாத்மக சதுர்விதா சேதநவர்க்கமும், பத்தமுக்த நித்யரூபமான த்ரிவிதசேதநவர்க்கமுமாகிற ஏழுவகைப்பட்டவிந்தலோகங்களை. இன்பம்பயக்க - ஆநந்தகந்தளிதமாம்படி. ஆள்கின்ற - அடிமைகொள்ளாநிற்குமவனுய். எங்கள்பிரான் - அப்படி யெங்களையும் வாசிக கைங்கர்யங்கொண்ட மஹோபகாரகனுனவன். அன்புற்று - அடிமைகொள்ளுகைக் கேகாந்தஸ்த்தல மென்றுவிரும்பி. அமர்ந்து - அல்லாத பரவ்யூஹாதிஸ்த்தலத்திற்காட்டில்பொருத்தமுடையனுய். உறைகின்ற - நிரந்தரவாஸம்பண்ணுகிற. அணி - தர்ஶநீயமான. பொழில் - பொழில். சூழ் - சூழ்ந்த. திருவாறன்விளை - திருவாறன்விளையை. அன்புற்று - அடிமைசெய்கைக் காஸந்நஸ்த்தலமென்று ஸ்நேஹித்து. அமர்ந்து - ப்ரயோஜநாந்தரங்களைக்கொண் டகலப்போகத் தேடாதே பொருந்தி. வலஞ்செய்து - ஸ்வரூபாநுரூபமான வநுகூலவ்ருத்தியைப்பண்ணி. ஹ்ருஷ்டராய், கைதொழும் - * பத்தாஞ்சலிபுடராய் நாம்அநுபவிக்கும். நாள்களும்-நாள்கள். ஆகுங்கொல்-உண்டாமோ.

## ஈடு - முதற்பாட்டு.

திருவாறன்விளையிலேபுக்கு ஹ்ருஷ்டராய்க்கொண் டடிமைசெய்யுங்காலமாகவற்றே! யென்று மநோரதிக்கிறுர்.

( இன்பம்பயக்க ) "ஆநந்தமயஃ" ( ஆநந்தமயஃ ) என்கிறவஸ்துவுக்கும்; நித்யதுஃகியான சம்சாரிசேதநனுக்குத் தன்னேட்டைச்சேர்த்தியாலே ஆநந்தமுண்டாமாபோலேயாயிற்று, பிராட்டியோட்டைச்சேர்த்தியாலே யவன்றனக்கு மாநந்தமுண்டாம்படியும். "அல்லிமலர்மகள் போகமயக்குக்களாகியும் நிற்குமம்மான்" என்று பிராட்டியோட்டைச் சேர்த்தியாலே பிச்சேறியிருக்குமாயிற்று. [ராமஃ] ஸ்ரீபரசுராமாழ்வானைச் செருக்குவாட்டிப் படைவீட்டிலே வந்துபுகுந்து சக்ரவர்த்தியையும் மஹர்ஷிகளையுமநுவர்த்தித்து தர்மோத்தரமாக நடத்திப்போந்தவர்.[து] பித்ருஶுஶ்ரூஷணுதிகளைப் பண்ணினபின்பு பிராட்டியோட்டை ரஸதாரையிலே யிழிந்தபின்பு, "இதுக்கு முன்பெல்லாம் வாத்ஸ்யாயநம்கற்றுக் காமதந்த்ரமே நடத்திப்போந்தாரித்தனையோ!" என்னும்படி வேறுபட்டார். முன்பு போருகிறநாளில் "இவரிதுக்குமுன்பு காமரஸம்புதியதுண்டறியாரோ!" என்னும்படி போந்தவிவர், இப்போது "இதுக்குமுன்பு தர்மதத்த்வம் புதியதுண்டறியாரோ?" என்னும்படி வேறுபட்டார். [ஸீதயாஸார்த்தம்] [ஸீதயாஸார்த்தம்] அயோநிஜையாய் பரமபதத்தில் தானுமவனுமாயிருந்து கலந்தபோதைச் செவ்வியிலொன்றுங்குறையாமலிருந்தவளிறே பிராட்டி; இப்படியிருக்கச்செய்தேயும், தம்மையழியமாறி இதரஸஜாதீயராய்வந் தவதரித்தாரேயாகிலும், போகத்தில்வந்தாலவளுங்கூட அப்ரதாநையாம்படி யதில் தலைநின்றுர். அதுக்கடி யென்னென்னில்; ராஜபுத்ரரான ரஸிகத்வத்தால்வந்த வேற்றத்தாலே. [விஜஹார] பாரிப்பேயொழிய போகத்திலிழியப்பெற்றிலர். உபக்ரமத்துக்கே

பணிபோந்த தித்தனை. உபோத்காதத்துக்குக் காலம்போந்த தித்தனை. [ஸஹ-ஏநு-த-ஏந] [ பஹ-ஏந்ருதூந் ] “ஸமா ஊஜஶ தநூாஹழ்” (ஸமாத்வாதஶதத்ராஹம்) என்கிறபடியே பன்னிரண்டாண்டொருபடிப்பட வநுபவிக்கச்செய்தேயும், ருதுசப்தத்தாலேசொல்லுகிறுயிற்று - அவ்வவகாலங்களுக்கடைத்த புஷ்பாத்யுபகரணங்களைக்கொண்டு காலாவயவங்கள்தோறு மநுபவித்துப் போந்தமைதோற்ற. சீதகாலத்துக் கடைத்தவைகொண்டு பரிமாறியும், உஷ்ணகாலத்துக் கடைத்தவைகொண்டு பரிமாறியு மநுபவித்தமைதோற்றச் சொல்லுகிறது. [ ஐநஷீ ] [ மநஸ்வீ ] ப்ரணயதாரையில் வந்தால், அவள்பாரித்தபாரிப்புக்கெல்லா மானைக்குக் குதிரைவைக்கைக்கீடான நெஞ்சிலகலமுடையவராயிற்று. [தகூதஃ] [தத்கதஃ] த்ரவ்யம் த்ரவ்யத்தோடு சேர்ந்தாப்போலன்றிக்கே, ஜாதிகுணங்கள் த்ரவ்யத்தோடு சேருமாபோலேசேர்ந்தார். “அநநுாராகவெணாஹழ” (அநந்யாராகவேணஹம்) என்றும், “அநநுாஹிமயாஸீதா” (அநந்யாஹிமயாஸீதா) என்றுமிறே யிருவர் வார்த்தையும். [ தஸுாநிதுஂஹுஜஸமவிஷ்தஃ ] [ தஸ்யாநித்யம்ஹ்ருதிஸமர்ப்பிதஃ ] இதி விழிவதற்குமுன் பிவரையறிந்திருக்குமவளாகையாலே, “அப்படி பெரியவரிப்போ தென்பக்கலிலே தாழநிற்பதே!, இப்படி யிதொருநீர்மையே!” என்றெப்போது மிவ்வநுசந்தாநமே யாத்ரையாகையாலே, வேறொன்றும் நெஞ்சிற்படாதே அவள் தன்னைத் தம்பக்கலிலே பொகடும்படியானர். “தகூதஃ” ( தத்கதஃ ) என்கையாலே - இவர்தம்மை யவள் பக்கலிலே யோக்கினபடி சொல்லுகிறது. “நிதுஂஹுஜஸமவிஷ்தஃ” (நித்யம்ஹ்ருதிஸமர்ப்பிதஃ) என்கையாலே - அவள்தன்னை யிவர்பக்கலிலே யோக்கிவைத்தபடி சொல்லுகிறது. இப்படி யிருவருமான சேர்த்தியிலே யிதுக்குமுன் பாநந்தம் புதியதுண்டறியாதா னொருவனுக் காநந்தமுண்டாமா போலேயாயிற்று, க்ஷணந்தோறுமாநந்தமுண்டாம்படி. ( எழில்மலர்மாதரும் ) “ராகவொஹ்திவெஜெஹீழ” (ராகவோர்ஹதிவைதேஹீம்) என்னுமாபோலேயாயிற்றித்தலை. ( தானும் ) “யஸுஸீதாஹவெஜூாரு” ( யஸ்யஸீதாபவேத்பார்யா ) என்றும், “யஸுஸாஜநகாதூஜா” (யஸ்யஸாஜநகாத்மஜா) என்றும் சொல்லலாம்படியாயிற்றத்தலை.

(இவ்வேழுலகையின்பம்பயக்க) “ராமஸ்ஸீதாமநுவூாவுராஜுஂவுநராவாஹுவாந । ஹுஹுஷ்டமுதிதொலொகஃ” (ராமஸ்ஸீதாமநுப்ராப்யராஜ்யம்புநரவாப்தவான் । ப்ரஹ்ருஷ்டமுதிதோலோகஃ) என்கிறபடியே, மாதாபிதாக்களிருவரும் சேரவிருந்து பரியப்புக்கால் ப்ரஜைகளுக்கொரு குறைகளும் பிறவாதிறே. ஆக, இருவருமான சேர்த்தியாலே தங்களுக்காநந்தமுண்டாக, அச்சேர்த்தியைக்காண்கையாலே லோகத்துக்காநந்தமூண்டாக, அதுதன்னைக்கண்டு, ப்ரஜை பால்குடிக்கக்கண்

டுக்கும் தாயைப்போலே, இவர்களுக்குண்டான ப்ரீதியைக்கண்டு அத்தாலேதாங்களினியராயிருப்பர்களாயிற்று. (இனிதுடன்வீற்றிருந்தாள்கின்ற) தன்சந்நிதியாலே லோகமடையத்தளிரும் முறியுமாம்படி யிருக்கிறவன், தான்பெறும்பேறுபெற்றாப்போலே, "திருவாய்மொழிகேட்கைக்கிடாயிருப்பதொருதேசம்பெற்றோம்" என்றுவிரும்பி வர்த்திக்கிற தேசமாயிற்று. (எங்கள்பிரான்) * கேசவன்றமர்க்குப்பின்பிவர் தாமேகாகிகளல்லரிறே. என்னை யிடுவித்துத்திருவாய்மொழிபாடுவித்துக்கொண்ட வுபகாரகன். (அன்புற்று) "திருவாய்மொழி கேட்கலாயிருப்பதொரு தேசம்பெறுவோமே" என்று அங்கே ஸ்நேஹத்தைப்பண்ணி. (அமர்ந்து) அத்தேசவாசத்துக்கு மேற்பட ஒரு ப்ரயோஜநத்தைக் கணிசியாதேவிரும்பி. (உறைகின்ற) அவதாரங்கள்போலே தீர்த்தம்ப்ரசாதியாதே, நித்யவாசம்பண்ணுகிற. (அணிபொழில்சூழ்திருவாறன்விளை) "ப்ராப்யபூமி" என்று தோற்றும்படியிருப்பதாய், அவன்றனக்கும் விபூதியிலுள்ளார்க்குமிருந்து திருவாய்மொழிகேட்கைக்கிடான பரப்பையுடைத்தாய், தர்ஶநீயமாயிருக்கிற பொழிலாலே சூழப்பட்டதிருவாறன் விளையை. "தெநதெதஉநுவ்ரதாஃ" (தேநதேதமநுவ்ரதாஃ) என்கிறபடியே, அவனுக்குத்தேஶ்யமான விடமிவனுக் குத்தேஶ்யமாகக் கடவதிறே. (அன்புற்று) "திருவாய்மொழிகேட்கைக்கிடானதேசம்பெற்றோம்" என்று அவன்விருப்பத்தைப் பண்ணினாப்போலே, "திருவாய்மொழிகேட்பிக்கைக்கிடாயிருப்பதொரு தேசத்தைப்பெறுவோமே" என்று அத்தேசத்திலே விருப்பத்தைப்பண்ணி. (அமர்ந்து) அத்தேசவாசத்துக்கவ்வருகொரு ப்ரயோஜநத்தைக் கணிசியாதே. (வலஞ்செய்து) ப்ரதக்ஷிணாதிகளைப்பண்ணி. (கைதொழுநாள்களுமாகுங்கொலோ) "அபீதாநீம்ஸகாலஸ்ஸ்யாத்" (அபீதாநீம்ஸகாலஸ்ஸ்யாத்) என்றாரோ ஸ்ரீகௌசலையார் - போய்வருகைதவிராராகில் மீண்டுபுகுரும்நாள் இன்றாயிற்றாகிலோ என்றாப்போலே. இம்மநோரதத்துக் கடைத்தகாலமே யநுபவத்துக்கடைத்தகாலமாகப் பெற்றோமாகிலோவென்கிறார்........................*

## ஜீயர் அரும்பதம்.

முதற்பாட்டு (இன்பமித்யாதி) "அணிபொழில்சூழ்திருவாறன்விளை" என்றுதொடங்கி "ஆகுங்கொல்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (திருவாறன்விளையிலேயித்யாதி)

"எழில்மலர்மாதருந்தானும் - இன்பம்பயக்க" என்றுகூட்டி, "எழில்மலர்மாதர்" என்றுவிசேஷிக்கையாலே - ஈஶ்வரனுடையவானந்தத்துக்கு ஹேது விவள்சேர்த்தியென்கிறார் (ஆநந்தமயஇத்யாதி) ஆநந்தமயஃ என்கிறவஸ்துவான வவன்றனக்கும்-பிராட்டியோட்டைச் சேர்த்தியாலே யாநந்தமுண்டாம்படியுமென்றந்வயிப்பது. பிராட்டியோட்டைச் சேர்த்தியாலே யாநந்தமுண்டாமோவென்ன (அல்லிமலர்மகளித்யாதி) இருவருமான சேர்த்தியிலே யாநந்தமுண்டாமென்றுமதுக்கு

ப்ரமாணம் (ராம இத்யாதி) "ராமஸ்து ஸீதயா ஸார்த்தம் விஜஹார பஹூந்ருதூந்" (ராமஸ்துஸீதயாஸார்த்தம் விஜஹாரபஹூந்ருதூந்) இத்யாதிபால காண்டே. "ராம:" என்றதுக்கர்த்தம் (பரசுராமாழ்வானித்யாதி.) செருக்கு வாட்டி - கர்வத்தைப்போக்கி. வாத்ஸ்யாயநம் - காமசாஸ்த்ரம். விவரணம் (முன்புபோருகிறவித்யாதி.) "ஸஹயுக்தே ப்ரதாநே" (ஸஹயுக்தேப்ரதாநே) என்று - அப்ரதாநே த்ருதீயையாக்கியர்த்தம் (அயோநிஜையாயித்யாதி.) ஸீதா-லாங்கலபத்ததி:, ஆகையாலே (அயோநிஜையாயென்றது.) அதுக்கடி - தலைநிற்கைக்கடி. அநுபபூவ என்னாதே, "விஜஹார" என்றதுக்குபாவம் (பாரிப்பேயித்யாதி.) "போகத்திலிழியப்பெற்றிலர்" என்றதின் கருத்தை யருளிச்செய்கிறார் (உபக்ரமத்துக்கே யித்யாதி.) விஹாரணம் - விளையாட்டாய், அத்தால் - உபக்ரமத்தைச்சொல்லுகிறது. ஏதத்விவரணம் (உபோத்காதத்துக்கித்யாதி.) வத்ஸராந் என்னாதே, "ருதூந்" என்கிறதென்னென்ன (ஸமாத்வாதஸேத்யாதி.) விவரணம் (சீதகாலத்துக்கித்யாதி.) * பூமாவிலே இனி ப்ரத்யயமாக்கி யர்த்தம் (ப்ரணயதாரையிலித்யாதி.) ஆனைக்குக் குதிரைவைக்கையாவது - பிடிகொடுக்குமாபோலே யிருந்து பிடிகொடாதொழிகை. அப்படி சேர்ந்திருப்பர்களோ வென்ன, ப்ரமாணம் (அநந்யேத்யாதி) "அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபாயதா - அநந்யா லோபயிதும் நாஹம்" (அநந்யாராகவேணுஹம் பாஸ்கரோணப்ரபாயதா - ஸக்யாலோபயிதும்நாஹம்) இத்யாதி ஸுந்தரகாண்டே ராவணம்ப்ரதிஸீதா. "அநந்யா ஹி மயா ஸீதா பாஸ்கரேண ப்ரபா யதா। விஸுத்தா த்ரிஷு லோகேஷு மைதிலீ ஜநகாத்மஜா" (அநந்யாஹிமயாஸீதாபாஸ்கரோணப்ரபாயதா। விஸுத்தாத்ரிஷுலோகேஷுமைதிலீஜநகாத்மஜா) இதிராவணவதாநந்தரோ ப்ரஹ்மாதிதேவாந் ப்ரதிராம:. "'தத்கத:' (தத்கத:) என்றதும், 'தஸ்யாநித்யம் ஸமர்ப்பித:' (தஸ்யாநித்யம்-ஸமர்ப்பித:) என்றதும், 'அஸ்யா தேவ்யா மநஸ் தஸ்மிம்ஸ் தஸ்ய சாஸ்யாம் ப்ரதிஷ்டிதம்' (அஸ்யாதேவ்யாமநஸ்தஸ்மிம்ஸ்தஸ்யசாஸ்யாம்ப்ரதிஷ்ட்டிதம்) என்றாப்போலே யிருக்கிறது" என்றருளிச்செய்வர். ஒக்கினபடி - ஆக்கினபடி. பரதந்த்ரராக்கினபடி யித்யர்த்த:. வசநமெடுத்ததுக்கு ப்ரயோஜநம் (இப்படியிருவருமானவித்யாதி.) "ராகவோர்ஹதி" (ராகவோர்ஹதி) என்கையாலே, "எழில்மலர்மாதர்" என்று-பிராட்டிவைலக்ஷண்யமும், "யஸ்ய ஸீதா பவேத் பார்யா," (யஸ்யஸீதாபவேத்பார்யா,) "யஸ்ய ஸா ஜநகாத்மஜா" (யஸ்யஸாஜநகாத்மஜா) என்று, யஸ்ய என்கிறது * சேஷேஷஷ்ட்டியாகையாலும், "பார்யா" (பார்யா) என்கையாலும், "தானும்" என்று-பெருமாள்வைலக்ஷண்யமுஞ் சொல்லுகிறதென்றபடி. இத்தலையென்றது-பிராட்டியை. அத்தலையென்றது - பெருமாளை. "துல்ய ஸீல வயோ வ்ருத்தாம் துல்யாபிஜந லக்ஷணாம்। ராகவோர்ஹதி வைதேஹீம் தம் சேயமஸிதேக்ஷணா." (துல்யஸீலவயோவ்ருத்தாம் துல்யாபிஜநலக்ஷணாம் । ராகவோர்ஹதிவைதேஹீம்தம்சேயமஸிதேக்ஷணா.) "யஸ்ய ஸீதா பவேத் பார்யா யஞ்ச ஹ்ருஷ்டா பரிஷ்வஜேத்। அதிஜீவேத் ஸ ஸர்வேஷு லோகேஷ்வபி புரந்தராத்" (யஸ்யஸீதாபவேத்பார்யா யஞ்சஹ்ருஷ்டாபரிஷ்வஜேத் । அதிஜீவேத்ஸஸர்வேஷு லோகேஷ்வபிபுரந்தராத்) இதி ராவணம் ப்ரதி சூர்ப்பணகா. "அப்ரமேயம் ஹி தத் தேஜோ யஸ்ய ஸா ஜநகாத்மஜா" (அப்ரமேயம்ஹிதத்தேஜோயஸ்யஸாஜநகாத்மஜா) இதி

ராவணம் ப்ரதி மாரீசஃ. இருவருடைய வாநந்தம்சொன்னவநந்தரம், லோகத்தாருடைய வாநந்தம் சொன்னதுக்கு பாவம் (ராமஸ்ஸீதாமித்யாதி) ஸங்க்ஷேபே, "𑌦𑍁𑌷𑍍𑌟𑌃 𑌪𑍁𑌷𑍍𑌟𑌸𑍍𑌸𑍁𑌧𑌾𑌰𑍍𑌮𑌿𑌕𑌃" (துஷ்டஃபுஷ்டஸ்ஸுதார்மிகஃ) இதிசேஷஃ. பூர்வோக்தரான மூவருடைய வாநந்தத்தையும் நிகமித்துக்கொண்டு, "இனிதுடன் வீற்றிருந்து" என்றதுக்குபாவம் (ஆகவிருவருமானவித்யாதி.) "அன்புற்றமர்ந்துறைகின்ற" என்றதுக்கவதாரிகையாதல், அத்தைக்கடாக்ஷித்துபாவமாதல் (தன் சந்நிதியாலேயித்யாதி.) "எங்கள்" என்ற பஹுவசநத்துக்கு பாவம் (கேசவனித்யாதி.) "பிரான்" என்றதுக்கர்த்தம் (என்னையிடுவித்தித்யாதி.)

கணிசியாதே - அபேக்ஷியாதே. "அழகிய பொழிலையுடைய திருவாறன்விளை" என்று - தோப்பை வர்ணித்ததுக்குபாவம் (ப்ராப்யபூமியித்யாதி.) "அணிபொழில்" என்கையாலே - பரப்புமர்த்தாத்ஸித்தம்.

"அன்புற்று" என்றதுக்கவதாரிகையாதல், "அன்புற்றமர்ந்துறைகின்ற" என்றவநந்தரம், "அன்புற்று" என்றதுக்கு பாவமாதல் (தேநதேதமித்யாதி) "𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌹𑌿 𑌸 𑌧𑌰𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌵𑌰𑍍𑌣𑌾𑌨𑌾𑌂 𑌕𑍁𑌰𑍁𑌤𑍇 𑌦𑌯𑌾𑌮𑍍। 𑌚𑌤𑍁𑌰𑍍𑌣𑌾𑌂 𑌹𑌿 𑌵𑌯𑌸𑍍𑌥𑌾𑌨𑌾𑌂 𑌤𑍇𑌨 𑌤𑍇 𑌤𑌮𑌨𑍁𑌵𑍍𑌰𑌤𑌾𑌃" (ஸர்வேஷாம்ஹிஸதர்மாத்மா வர்ணாநாம்குருதேதயாம் । சதுர்ணாம்ஹிவயஸ்த்தாநாம் தேநதேதமநுவ்ரதாஃ) இத்யயோத்யாகாண்டே. "அன்புற்று" என்றதுக்குசப்தார்த்தம் (திருவாய்மொழியித்யாதி.) இப்போது "ஆகுங்கொலோ" என்று விவக்ஷித்து, இப்படிசொன்னருண்டோவென்ன (அபீதாநீமித்யாதி) "𑌅𑌪𑍀𑌦𑌾𑌨𑍀𑌂 𑌸 𑌕𑌾𑌲𑌃 𑌸𑍍𑌯𑌾𑌦𑍍𑌵𑌨𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌾𑌗𑌤𑌂 𑌪𑍁𑌨𑌃। 𑌯𑌤𑍍𑌤𑍍𑌵𑌾 𑌪𑍁𑌤𑍍𑌰𑌕 𑌪𑌶𑍍𑌯𑍇𑌯𑌂 𑌜𑌟𑌾𑌮𑌣𑍍𑌡𑌲𑌧𑌾𑌰𑌿𑌣𑌮𑍍" (அபீதாநீம் ஸகாலஸ்ஸ்யாத் வநாத்ப்ரத்யாகதம்புநஃ । யத்த்வாபுத்ரகபஶ்யேயம் ஜடாமண்டலதாரிணம்) இத்யயோத்யாகாண்டே கௌஸல்யா. ஹேபுத்ரக, வநாத் புநஃ। ப்ரத்யாகதம் - ஜடாமண்டலதாரிணம் - த்வா - பஶ்யேயமிதியத்ஸகாலஃ இதாநீம் ஸ்யாதபி இத்யந்வயஃ. இதுக்கர்த்தம் (போய்வருகையித்யாதி) த்ருஷ்டாந்தத்தில்சொன்னவர்த்தத்தை தார்ஷ்டாந்திகத்திலே யதிதேஶிக்கிறர் (இம்மநோரதத்துக்கித்யாதி) எழில்மலர்மாதரும் தானுமான் விருவர்க்கும் இன்பமுண்டாம்படியாகவும், அத்தாலே யிவ்வேழுலகுக்கு மின்பமுண்டாம்படியாகவு மினிதுடன் வீற்றிருந்தாளுகிற வென்று சப்தார்த்தம்.

எழில்மலர்மாதரும் தானும் - இன்பம்பயக்க - இவ்வேழுலகையென்றுதொடங்கி, கைதொழுநாள்களு மாகுங்கொலோ வித்யந்வயஃ ........... ...............*

---

# இரண்டாம்பாட்டு.

ஆகுங்கொலையமொன்றின்றியகலிடமுற்றவுமீரடியே
யாகும்பரிசுநிமிர்ந்ததிருக்குறளப்பனமர்ந்துறையு
மாகந்திகழ்கொடிமாடங்கணீடுமதிட்டிருவாறன்விளை
மாகந்தநீர்கொண்டுதூவிவலஞ்செய்துகைதொழக்கூடுங்கொலோ.

## ஆறாயிரப்படி.

(ஆகுங்கொல்) ஒருசந்தேஹமின்றிக்கே யகலிடமுற்றவுமீரடியே யாகும்படி யளந்தருளின ஸ்ரீவாமநனெழுந்தருளியிருக்கிற, திருவாய்

மொழி பாடுவிக்கையாகிற மஹோத்ஸவத்துக்காகக் கொடிகட்டி யலங்க்ருதமான திருவாறன் விளேயை, சந்தநகர்ப்பூராதி சுகந்த த்ரவ்யவாசிதமாய் ஹிமசீதளமான நீர்கொண்டு தூவி வலம்செய்து கைதொழக்கூடுமேயோவென்கிறுர்........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அநர்யார்ஹத்வா பாதகமான த்ரிவிக்ரமாபதாநத்தையுடையவன் வர்த்திக்கிற திருவாறன்விளேயை. ஸுகந்தமான ஜலங்களாலே திருநீரிட்டு ப்ரதக்ஷிணத்யநு வ்ருத்திகள் பண்ணக்கூடுமோ வென்கிறுர்.

ஒன்று - ஒரு. ஐயம் - சந்தேஹம். இன்றி - அற. ஆகுங்கொல் - உண்டாமோ. எதென்னில், அகல் - விஸ்தீர்ணமான. இடம் - லோகங்களே. முற்றவும் - எல்லாம். ஈரடியே - இரண்டடியே. ஆகும்பரிசு - ஆம்படி. நிமிர்ந்த - வளர்ந்தருளின. திருக்குறள் - ஸ்ரீவாமநனை. அப்பன் - மஹோபகாரகன். அமர்ந்து - அவதாரஸ்த்தலமான தேவலோகத்திலுங் காட்டிலமர்ந்து. உறையும்-உறையக்கடவதாய். மா - பெரிய. கம் - ஆகாசத்திலே. திகழ் - விளங்காநிற்கிற. கொடி - கொடிகளேயுடைய. மாடங்கள் - மாடஙகளேயும். நீடு - நெடிய. மதிள் - மதிள்களேயுமுடைத்தான. திருவாறன்விளே - திருவாறன்விளேயை. மா - விலக்ஷணமான. கந்தம் - கந்தத்தையுடைத்தான. நீர் - நீரை. கொண்டு-கொண்டு. தூவி - தூவி. வலம் - ப்ரதக்ஷிணம். செய்து - பண்ணி. கைதொழ - அஞ்சலிபண்ண. கூடுங்கொலோ - கூடுமோ.

“ஆகுங்கொல்” என்கிற நினேவை - மேலேயுப்பாதித்தபடியாயிருக்கிறது. ஐயமொன்றின்றியென்று - மேலேகூட்டவுமாம். இதுசக்யமோவென்கிற வையமின்றியளந்தானென்னவுமாம் ........................................................*

## ஈடு - இரண்டாம்பாட்டு.

திருவாறன்விளேயிலே மிக்கபரிமளத்தையுடைத்தான நீரைக்கொண்டு திருநீர்விட்டு ப்ரதக்ஷணம்பண்ணிக் கையாலே தொழவுங்கூடவற்றேயென்கிறுர்.

(ஆகுங்கொலேயமொன்றின்றி) இது அநுபாஷணமாகாநிற்கச்செய்தே, ஆதராதிசயஸூசகமாயிருக்கிறது. ஒருசம்சயமின்றிக்கே நமக்கிதுகூட்வற்றே. அன்றிக்கே, ஆகுங்கொலென்கிற ஐயமுங்கூடவின்றிக்கே, ஈரடியேயாகும் பரிசுநிமிர்ந்தானென்னவுமாம். எல்லாம்செய்தாலும் “நமக்கிதுகூடுமோ? கூடாதோ?” என்றிருந்தானுயிற்று மௌக்த்யத்தாலே. (அகலிடமுற்றவும்) பரப்பையுடைத்தான பூமியையும் புவர்லோகாதிகளுமெல்லா மிரண்டடியாகும் பரிசுநிமிர்ந்த. இரண்டடியாலே பூம்யந்தரிக்ஷாதிகளே யளந்தானுயிற்று, ஓரடிக்கிவனேச் சிறையிட்டு வைக்கநினேத்து. (திருக்குறளப்பன்) ஸ்ரீவாமநனைமஹோபகாரகன். (அமர்ந்துறையும்) இந்த்ரனுக்கு ராஜ்யத்தைவாங்கிக்கொடுத்துத்திருப்பாற்கடலிலேபோய்ச் சாய்கையன்றிக்கே, அவன்வந்துநித்யவாசம்பண்ணுகிற. (மாகந்திகழித்யாதி) அவன்திருவடிகளாலளந்தவாகாசப் பரப்படங்கலும் வ்யாபியாநின்றுள்ள கொடிகளேயுடைத்தான மாடங்களேயும், ஒக்

கி யிருந்துள்ள மதிட்களையுமுடைத்தான திருவாறன்விளையை. (மாகந்த நீரித்யாதி) [ஸிஞ்சந்வஸுதாம்க்ருத்ஸ்நாம்ஹிமஶீதேநவாரிணா] [ஸிஞ் சந்துவஸுதாம்க்ருத்ஸ்நாம்ஹிமஶீதேநவாரிணு] என்று ஸ்ரீநந்திக்ராம ந்தொடங்கி ஸ்ரீபரத்வாஜபகவானுஶ்ரமத்தளவும்வர, பனிநீராலேவிடுவி த்தான் ஸ்ரீ சத்ருக்நாழ்வானென்றதிறே; அப்படியே, மாகந்தநீர்கொண் டு தூவி, அநுகூலவ்ருத்திகளைப் பண்ணிக்கைதொழக் கூடவற்றேயோ.

## ஜீயர் அரும்பதம்.

இரண்டாம்பாட்டு ( ஆருங்கொலித்யாதி ) "திருவாறன்விளைமாகந்தநீர்கொ ண்டு"இத்யாதிமேலெல்லாம்கடாக்ஷித்தவதாரிகை (திருவாறன்விளையிலேயித்யாதி)

திரியவும் "ஆருங்கொல்" என்கிறதென்னென்ன (இதநுபாஷணமித்யாதி) சப்தார்த்தம் (ஒருசம்சயமித்யாதி) "ஐயமொன்றின்றி - ஆருங்கொல்" என்றபடி. அர்த்தாந்தரம் (அன்றிக்கேயித்யாதி) சர்வசக்திக்கு சம்சயப்ரசக்தியேதென்ன (எ ல்லாம்செய்தாலுமித்யாதி.)

முற்றவும்-புவர்லோகாதிகளையும். ஆகும்பரிசு-ஆம்ப்ரகாரம். மூன்றடியையி ரந் திரண்டடியாலே யளப்பானென்னென்ன (இரண்டடியாலேயித்யாதி.)

மாகம் - மஹாகம். விஸ்ருதமான வாகாசமென்றபடி.

" க்ருத்ஸ்நாம் " (க்ருத்ஸ்நாம்) என்றதுக்கர்த்தம் (ஸ்ரீநந்திக்ராமமித்யாதி) " ஸிஞ்சந்வஸுதாம்க்ருத்ஸ்நாம்ஹிமஶீதேநவாரிணா । ததோஹ்யவகிரந் புஷ்பைர்ஜலைர்கந்தைஶ்ச ஸர்வஶ: " ( ஸிஞ்சந்துவஸுதாம்க்ருத்ஸ்நாம் ஹிமஶீதேநவாரிணு । ததோப்யவகிரந்த்வந்யேலாஜை:புஷ்பைஶ்சஸர்வஶ: ) இதி ராமாகமநவேளாயாம் பரிஜநபூதாந் ப்ரதிஶத்ருக்ந: ..............................*

---

## மூன்றாம்பாட்டு.

கூடுங்கொல்வைகலுங்கோவிந்தனைமதுசூதனைக்கோளரியை
யாடுபறவைமிசைக்கண்டுகைதொழுதன்றியவனுறையும்
பாடும்பெரும்புகழ்நான்மறைவேள்வியைந்தாறங்கம்பன்னினர்வாழ்
நீடுபொழிற்றிருவாறன்விளைதொழவாய்க்குங்கொனிச்சலுமே.

### ஆறுயிரப்படி.

( கூடுங்கொல் ) சௌஶீல்யவாத்ஸல்யாதி கல்யாணகுண விசிஷ் டனை யெம்பெருமான் பெரியதிருவடிமேலே யெழுந்தருளி யிருக்கும் படியைக்கண்டு கைதொழுகையன்றியே, அவனுக்குங்கூட ப்ராப்யமாய், சாங்க சகலவேத விதக்ரேசரராய், ததர்த்த பரமபுருஷாராதநரூப பஞ் சமஹாயஜ்ஞாத் யநுஷ்ட்டாந சிலராயிருந்த திவ்யஜநங்கள் வாழ்கிற தி ருவாறன்விளையை நிச்சலும் தொழக்கூடுமேயோவென்கிறர்............*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்ரிதரக்ஷணார்த்தமான வாகாரத்தையுடைய கருடவாஹநனை யநுபவித்து, அவன் வர்த்திக்கிற தேசத்தை நித்யமாகத்தொழ வாய்க்கவற்றோவெ ன்கிறார்.

வைகலும்-என்றும். கூடுங்கொல்-இப்படிகூடவற்றோ. கோவிந்தனை-கோரக்ஷணத்துக்கு முடிசூடினவனாய். மதுசூதனை-ரக்ஷ்யவிரோதியான மதுவுக்கு நிராஸகனாய். கோளரியை-அத்யுஜ்ஜ்வலதேஜோரூப ஸிம்ஹம்போலே விரோதிகளுக்கநபிபவநீயனானவனை. ஆடு-தர்ஸநீயகதியான. பறவை - பெரியதிருவடி. மிசை - மேலே. கண்டு-கண்டு. கைதொழுது-அஞ்சலிபண்ணியநுபவித்து. அன்றி - அவ்வளவன்றியே. அவன்-அவன். உறையும்-வர்த்திக்குமிடமாய். பாடும் - உச்சரிதஸ்வரமாம்படிபாடப்படுகிற. பெரு - பெரிய. புகழ்-பகவத்குணப்ரதையையுடைத்தான. நான்மறை-ருக்யஜுஸ்ஸாமாதர்வண ஸ்வரூபமான நாலுவேதங்களையும். ஐந்துவேள்வி-தேவபித்ருபூதமநுஷ்ய ப்ரஹ்மயஜ்ஞரூபமான பஞ்சமஹாயஜ்ஞங்களையும். அங்கம்-சிக்ஷைநிருக்தம் வ்யாகரணம் சந்தோவிசிதி கல்பஸூத்ரம் ஜ்யோதிஸ்ஸாஸ்த்ரமென்கிற அங்கங்கள். ஆறு-ஆறையும். பன்னினர்-பரக்கநிரூபித்துப்போருகிறவர்கள். வாழ்-பகவதநுபவத்தோடே வாழ்வதாய். நீடு-பெரிய. பொழில் - பொழிலையுடைத்தான. திருவாறன்விளை-திருவாறன்விளையை. தொழ-தொழ. நிச்சலும்-நித்யமாக. வாய்க்குங்கொல்-வாய்க்கவற்றோ ..........................................*

## ஈடு - மூன்றாம்பாட்டு.

திருவாறன்விளையி லெம்பெருமான் பெரியதிருவடிமேலே யேறியெழுந்தருளக்கண்டாலும், அவனைத்தவிர்ந்து திருவாறன்விளையைத் தொழக்கூடவற்றே ! யென்கிறார்.

(கூடுங்கொல்வைகலும்) இதுவுமநுபாஷணமாய், நாள்தோறும் நமக்கிது கூடவற்றேயோ.

( கோவிந்தனித்யாதி ) அங்குநிற்கிறவனைக்கண்டால் மூன்றுபடிதொடைகொள்ளலாயிருக்கும். ஆஸ்ரிதவாத்ஸல்யமும், ஆஸ்ரிதவிரோதிநிரஸந சீலதையும், அநாஸ்ரிதர்க் கநபிபவநீயனென்னுமிடமு மிவை. (கோளரி) "ஜ்வலந்தம்" (ஜ்வலந்தம்) என்கிறபடியே. (ஆடுபறவைமிசைக் கண்டு) வெற்றிப்புள்ளின்மேலேகண்டு. ஆடு-வெற்றி. அன்றிக்கே, " சர்வேஸ்வரன்வாஹநம் " என்கிற ஹர்ஷ ப்ரகர்ஷத்தாலே, மதுபாநமத்தனைப்போலே களித்தாடாநின்றுள்ள பெரியதிருவடி திருத்தோளிலே கண்டென்றுமாம். நாம் திருவாறன்விளையை " ப்ராப்யம் " (ப்ராப்யம்) என்று போகிறவோபாதி, அவனும் திருநகரியை "உத்தேஸ்யமாம்" என்று வாராநிற்குமிறே. (கண்டு) நடுவழியிலேகண்டால். (கைதொழுது) காரியங்கொண்டிலோமேயாகிலும், கிட்டினால் கைதொழுகைக்கு ப்ராப்தியுண்டிறே; ஆகையாலே, முறைதப்பாம லநுவர்த்தித்து. (அன்றி) அவனைவிட்டு. (அவனுறையும்) அவனிராத்தங்குமூரிலேபோய்ப் புகக்கடவோம். சர்வேஸ்வரன் ப்ராப்யனாகாநிற்கச்செய்தே, ஒரு தேசவிசேஷத்

திலேபோ யநுபவிப்பதாக வொருநியதியுண்டிறே. (பாடும்பெரும்புகழ் நான்மறை) அவனுடைய கல்யாணகுணங்களைப்பாடாநின்றுள்ள நாலுவகைப்பட்ட வேதங்கள். (வேள்வியைந்து) பஞ்சமஹாயஜ்ஞங்கள். (ஆறங்கம்) அங்கங்களாறும். இவற்றைப்பன்னினவர்கள் - எஃகிக்கணகண்டிருக்குமவர்கள். "பொயயஹஃவாஜூாழ" (போதயந்தஃபரஸ்பரம்) என்னும்படி, அவ்வூரிலுள்ளாரோடேபோய்க்கூடவேணும். (வாழ்) வேதாத்பர்யபூதனைக் கண்ணாலேகண்டநுபவித்து வாழாநின்றுள்ள. (நீடுபொழில்திருவாறன்விளைதொழ) ஓக்கத்தையுடைத்தான பொழிலையுடைய திருவாறன்விளையைத்தொழ. (வாய்க்குங்கொல்நிச்சலுமே) அங்குத்தைஸ்ரீவைஷ்ணவர்களோடேகூடிநித்யாநுபவம்பண்ணக்கூடவற்றேயோ

## ஜீயர் அரும்பதம்.

மூன்ரும்பாட்டு (கூடுங்கொலித்யாதி) "ஆடுபறவை மிசைக்கண்டுகைதொழுதன்றியவனுறையும் - திருவாறன்விளைதொழவாய்க்குங்கொல்நிச்சலும்" என்றபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (திருவாறன்விளையித்யாதி.)

மூன்றுதிருநாமத்தைச்சொன்னதுக்குபாவம் (அங்குநிற்கிறவனையித்யாதி.) தொடைகொள்ளுகை-தோன்றுகை. "கோளரி" தேஜஸ்ஸையுடைய ஸிம்ஹமென்று விவக்ஷித்து, அதுக்கு ப்ரமாணம் (ஜ்வலந்தமித்யாதி) பெரியதிருவடிமேலே காண்கைக்கு ப்ரஸக்தியேதென்ன ( நாம் திருவாறனித்யாதி ) அவனைவிட்டத்தேசத்தேறப்போகிறவுமக்கு அவனைத்தொழவேண்டுவானென்னென்ன (காரியமித்யாதி.) இத்தால் - சரமபர்வநிஷ்டர்க்கு மீஶ்வரனுத்தேஶ்யமென்கிறது. அவனிங்கேவந்தாலத்திருநகரி ப்ராப்யமாயிருக்க, அங்கேபோவானென்னென்ன (அவனிராத்தங்குமித்யாதி) எதிரேவந்தவனைவிட் டங்கேபோவானென்னென்ன (சர்வேஶ்வரனித்யாதி.)

"பெரும்புகழ் - பாடும் - நான்மறை" என்றந்வயம். இங்கே - " தஸ்யருக்ஸாமசகேஷ்ணௌ" (தஸ்யருக்ஸாமசகேஷ்ணௌ) என்றததுஸந்தேயம். இப்போதிவர்களைச்சொல்லுகிறதுக்கு ப்ரயோஜநமேதென்ன (போதயந்தஇத்யாதி)"வாழ்" என்றதுக்குபாவம் ( வேதேத்யாதி ) ........................................................*

---

# நான்காம்பாட்டு.

---

வாய்க்குங்கொனிச்சலுமெப்பொழுதுமனத்தீங்குநினைக்கப்பெற
வாய்க்குங்கரும்பும்பெருஞ்செந்நெலும்வயல்சூழ்திருவாறன்விளை
வாய்க்கும்பெரும்புகழ்மூவுலகீசன்வடமதுரைப்பிறந்த
வாய்க்குமணிநிறக்கண்ணபிரான்றன்மலரடிப்போதுகளே.

## ஆறுயிரப்படி.

(வாய்க்குங்கொல்) ஸ்ரீமதுரையிலேவந்து திருவவதாரம்பண்ணியருளுகையாலே யத்யுஜ்ஜ்வலமான வாத்மகுணங்களையும் ரூபகுணங்க

ளையுமுடையனுயிருந்த வவனெழுந்தருளியிருந்த திருவாறன்விளையிலே, அவன்றிருவடிமலர்களை நெஞ்சாலென்றநுபவிக்கக் கூடுமென்கிறுர்.....*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அநுபாவ்யவிக்ரஹ விசிஷ்டனுய்க் கொண்டு திருவாறன் விளையில் வர்த்திக்கிறவன்திருவடிகளை நெஞ்சாலே நிரந்தரமாக வநுபவிக்கும்படி வாய்க்கவற்ருே வென்கிறுர்.

வாய்க்கும் - சம்ருத்தமாய்வாய்த்துவருகிற. கரும்பும் - கரும்பும். பெரு - பெரும். செந்நெலும் - செந்நெலுமான. வயல் - வயல். சூழ் - சூழ்ந்த. திருவாறன்விளை - திருவாறன்விளையிலே. வாய்க்கும் - சந்நிஹிதனுகையாலே. பெரும் - அபிவ்ருத்தமான. புகழ் - புகழையுடையனுய். மூவுலகு - த்ரிவித சேதநாசேதநங்களுக்கும். ஈசன் - ஸ்வாமியாய்வைத்து. ஆஸ்ரிதரக்ஷணர்த்தமாக, வடமதுரை - ஸ்ரீமதுரையிலே. பிறந்த - அவதரித்து. வாய்க்கும் - ஆஸ்ரிதர்க்கநுபாவ்யமாம்படி வாய்த்த. மணி - நீலரத்நம்போலே யிருக்கிற. நிறம்-திருநிறத்தையுடைய. கண்ணன் - க்ருஷ்ணனுகிற. பிரான்றன் - மஹோபகாரகனுடைய. மலர் - விகஸிதமான. அடிப்போதுகள் - திருவடித்தாமரைகளை. ஈங்கு - இங்கேயிருந்து. மனத்து-மநஸ்ஸிலே. நினைக்க - நினைக்க. அவன்நினைவின்படியே. நிச்சலும் - என்றும். எப்பொழுதும்-ஒருக்ஷணமுமொழியாமல். பெற-பெறும்படி. வாய்க்குங்கொல்-வாய்க்கவற்ருே...*

## ஈடு - நான்காம்பாட்டு.

இதில், அங்குப்போ யநுபவிக்கவேண்டா, இங்கேயிருந்தங்குத்தைப்பரிமாற்றங்களை மநோரதிக்கும் மநோரதம் நமக்குக்கூடுவதுகாணென்கிறுர்.

(வாய்க்குங்கொல்நிச்சலும்) நமக்கிப்பேறு நாள்தோறும்கூடவேணும். ( எப்பொழுதும் ) அதுதன்னிலும் நித்யாக்நிஹோத்ரம்போலே யொருகாலவிசேஷத்திலேயாய்ப்போகவொண்ணுது, எல்லாவவஸ்த்தைகளிலுமுண்டாகவேணும். (மனத்தீங்குநினைக்கப்பெற) அங்குப்போயநுபவிக்கவேண்டா, இங்கேயிருந்துநெஞ்சாலே யங்குத்தைப் பரிமாற்றங்களை யநுசந்திக்கப்பெறவமையும். பெறவென்கையாலே - இம்மநோரதத்துக்கவ்வருகொருபேறில்லையென்றிருக்கிறு ராயிற்றிவர். [ഉ൱ൂ താവമി] [துர்க்கதாவபி] உத்க்ரமணதசையிலேவருவதொரு துர்க்கதியுண்டு, அத்தைப்பரிஹரித்துத் தரவேணுமென்று ப்ரார்த்திக்கிறேனல்லேன்; * ஐயார் கண்டமடைக்கிலும் நின்கழலெய்யாதேத்தும்படிபண்ணி யருளவேணும். [ தீ൱ തോമേമനോരഥഃ] [த்வத்கதோமேமநோரதः] எனக்கிதுகூடுமென்று தோற்றியிருந்ததோவுனக்கு. [ யதിനാശം നவിന്ദേത ] [யதிநாஸம்நவிந்தேத] இப்படியிருக்கிற விம்மநோரதத்துக் கழிவுவாராதாகில். [താവതാസ്മികൃതീശരാ] [தாவதாஸ்மிக்ருதீஸதா] நாட்டார், மநோரதமென்றும், அநுபவமென்று மிரண்டாகவிறே சொல்லிப்போருவது;

எனக்கிதெல்லாம்வேண்டா, இம்மநோரதமாத்ரத்தாலே க்ருதக்ருத்யன் நான். [ஸதா] சரீரஸம்பந்தமற்று பரமபதத்திலேபோயேற்றமாக வநுபவிக்கு மதிற்காட்டில், நான் பேறுகநினைத்திருப்பதித்தையே. முற்காலத்திலே இடையாற்றுக்குடிநம்பியென்பாரொருவருண்டு, அவர்திருநாட்கள்தோறும் பெருமாளைவந்து சேவித்துப்போனால், மறித்துத் திருநாள்வருந்தனையு மதுதன்னையே போதுபோக்காக ஸ்மரித்துக்கொண்டிருப்பராயிற்று; ஒருநாளொரு திருநாளில் வ்ருத்தாந்த மநுசந்தியாநிற்கச்செய்தே, "அமுதுசெய்கைக்குப் போதுவைகிற்று" என்றார்களாய், "ஆகில் வருகிறதிருநா ளணித்தாகிறது" என்றாராம். அவர் நூறுவயஸ்ஸும் புகுகையாலே பலஹாநிபிறந்து திருமூலத்திருநாளில் பெருமாள் புறப்பட்டருளுகைக்குதவவந்து புகுரப்பெற்றிலர், பெருமாளும் தேடியருளிக்காணாமை, "நம்மிடையாற்றுக்குடியான்வந்திலன், நங்கண்ணாலமல்லவோ!" என்று திருவுள்ளமானாராம். அவர்தா மாறுந்திருநாளிலே சேவித்திருக்கச்செய்தே, "நாமுனக்குச்செய்யவேண்டுவதென்?" என்றுகேட்டருள, "தேவரீர் தந்தருளினசரீரத்தைக்கொண்டு போரக்காரியங்கொண்டேன், இனிப்போக்குவரத்துக்கு யோக்யமாகாதபடிபோரஜரித்தது" என்ன, "வாராய், மெய்யேயிளைத்தாயாகி லிங்ஙனேயிரு" என்றருளிச்செய்தார்; பெருமாள் நடுவிற்றிருவாசலுக் கவ்வருகேயெழுந்தருளுங்காட்டில் திருநாட்டுக்கெழுந்தருளினர்.

(வாய்க்குமித்யாதி) இட்டதடைய சம்ருத்தமான தேசமாயிற்று. வாய்த்தகரும்பும், அதுக்கு நிழல்செய்யும்படியாக வளர்ந்த செந்நெலுமான வயலாலே சூழப்பட்ட திருவாறன்விளையில். (வாய்க்கும்பெரும்புகழ்) இட்டதடைய சம்ருத்தமான தேசமாகையாலே, அத்தேசாபிமாநிக்கும் கல்யாணகுணங்களும் சம்ருத்தமாகாநிற்குமாயிற்று. (மூவுலகீசனித்யாதி) சர்வலோகேஶ்வரனாயிருக்குவைத்து, * சாதுபரித்ராணார்த்தமாக ஸ்ரீமதுரையிலேவந்தவதரித்த. (வாய்க்குமணிநிறக்கண்ணபிரான்றன்) அப்ராக்ருததிவ்ய சம்ஸ்த்தாநத்தையிறே யிதரசஜாதீயமாக்கிற்று; ஆகையாலே, அழகிய நீலமணிபோன்ற திருநிறத்தையுடைய வுபகாரசீலனான க்ருஷ்ணனுடைய, விகாசத்தையுடைத்தான திருவடிகளாகிற செவ்விப்பூக்களை - ஈங்கு - மனத்து - நினைக்கப்பெற - வாய்க்குங்கொல் நிச்சலுமெப்பொழுதும்.......................................................*

## ஜீயர் அரும்பதம்.

நாலாம்பாட்டு (வாய்க்குங்கொலித்யாதி) "ஈங்கு-மனத்து-நினைக்கப்பெற-வாய்க்குங்கொல்" என்றபதங்களைக்கடாக்ஷித்தவ்நாரிகை (இதிலங்குப்போயித்யாதி) கூடுவதுகாண் - கூடுமோவென்றபடி.

"நிச்சலும்" என்றுவைத்து, திரியவும் "எப்பொழுதும்" என்பானென்னென்ன (அதுதன்னிலுமித்யாதி) "ஈங்கு" என்றதுக்கு (அங்குப்போயித்யாதி) "நினைக்க" என்னாதே, "பெற" என்றதுக்குபாவம் (பெறவென்கையாலேமித்யாதி)

அப்படி மநோரதமாத்ரமே புருஷார்த்தமோவென்ன, ப்ரமாணம் (துர்க்க தாவபீத்யாதி) “𑌦𑍁𑌰𑍍𑌗𑌤𑌾𑌵𑌪𑌿 𑌜𑌾𑌤𑌾𑌯𑌾𑌂 𑌤𑍍𑌵𑌦𑍍𑌗𑌤𑍋 𑌮𑍇 𑌮𑌨𑍋𑌰𑌥𑌃 । 𑌯𑌦𑌿 𑌨𑌾𑌶𑌂 𑌨 𑌵𑌿𑌨𑍍𑌦𑍇𑌤 𑌤𑌾𑌵𑌤𑌾𑌸𑍍𑌮𑌿 𑌕𑍃𑌤𑍀 𑌸𑌦𑌾” (துர்க்கதாவபிஜாதாயாம்த்வத்கதோ மேமநோரத8 । யதிநாஸம்நவிந்தேததாவதாஸ்மிக்ருதீஸதா) இதி ஜிதந்தாயாம். ஐயார் - ஸ்லேஷ்மம். “மே” என்றதுக்குபாவம் (எனக்கித்யாதி) “𑌮𑌮𑍈𑌤𑌦𑍍𑌦𑍁𑌰𑍍𑌲𑌭𑌂 𑌮𑌨𑍍𑌯𑍇 𑌉𑌤𑍍𑌤𑌮𑌶𑍍𑌲𑍋𑌕𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑍍 । 𑌵𑌿𑌷𑌯𑌂 𑌨𑍋𑌯𑌥𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌕𑍀𑌰𑍍𑌤𑌨𑌂 𑌶𑍂𑌦𑍍𑌰𑌜𑌨𑍍𑌮𑌨𑌃” (மமைதத்துர்லபம்மந்யே உத்தமஸ்லோகதர்ஸநம் । விஷயம் நோயதாப்ரஹ்ம கீர்த்தநம்ஸூத்ரஜந்மநஃ) என்றதிவ்விடத்தி லநுஸந்தேயம். “தாவதா - க்ருதீ - அஸ்மி” என்றதுக்கு வ்யாவ்ருத்தி பூர்வகமாகவர்த்தம் (நாட்டாரித்யாதி) “ஸதா” என்றதுக்கு வ்யாவ்ருத்தி பூர்வகமாகவர்த்தம் (சரீரசம்பந்தமித்யாதி) அப்படிமநோரதமாத்ரமே புருஷார்த்தமாயநுபவித்தபேருண்டோவென்ன (முற்காலத்திலேயித்யாதி) வைகிற்று - கழிந்தது. வருகிறதிருநாள்-இரண்டாம்திருநாள். இப்படியிருப்பபொன்கைக்கு நியாமகமேதென்ன (ஒருநாளித்யாதி) இத்தால்-இப்போதநுசந்திக்கிறதிருநாள் முடியலாயிற்று, வருகிறேனென்றுறென்றபடி. ப்ரஸங்காத் அவர் வைபவம் (அவர்நூறுவயஸ்ஸித்யாதி)

“மூவுலகு” என்றது-எல்லாலோகங்களுக்கு முபலக்ஷணமாக்கி (சர்வலோகேஸ்வரன்) என்கிறுர். இதரசஜாதீயனுயவதரித்தவிடத்தே வாய்க்கும் மணிநிறமுண்டோவென்ன (அப்ராக்ருதேத்யாதி) வாய்க்குமணிநிறம் - அழகிய நீலமணி நிறமென்றபடி. “வாய்க்கும்” என்று - இங்கு, அழகைச்சொல்லுகிறது. அந்வயங் காட்டுகிறுர் (ஈங்கித்யாதி.)

வாய்க்கும் கரும்புமென்றுதொடங்கி, மலரடிப்போதுகளை - நிச்சலுமெப்பொழுதும் - ஈங்கு - மனத்து - நினைக்கப்பெற - வாய்க்குங்கொலித்யந்வயஃ......*

---

# ஐந்தாம்பாட்டு.

மலரடிப்போதுகளென்னெஞ்சத்தெப்பொழுதுமிருத்திவணங்கப்
பலரடியார்முன்பருளியபாம்பணையப்பனமர்ந்துறையு
மலரின்மணிநெடுமாடங்கணீடுமதிட்டிருவாறன்விளையுலக
மலிபுகழ்பாடநம்மேல்வினையொன்றுநில்லாக்கெடுமே.

## ஆறுயிரப்படி.

(மலரடிப்போதுகள்) தன்திருவடிமலர்களை யென்னெஞ்சத்தெப்பொழுதுமிருத்தி வணங்கித் திருவாய்மொழிபாடி யநுபவிக்கும்படி, திருவநந்தாழ்வான்முதலாகவுள்ள பலரடியார் முன்பருளிய பரமகாருணிகனமர்ந்துறையும் திருவாறன்விளையினுடைய வுலகமலிபுகழ்பாட நம்முடைய க்லேஸமெல்லாம் தீரும், திருவாறன்விளையைப் பாடுங்கோளென்று ஸ்ரீவைஷ்ணவர்களைக்குறித்தருளிச்செய்கிறுர்.........................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஶ்ரிதாநுபவார்த்தமாக வநந்தசாயியானவன் வர்த்திக்கிற திருவாறன்விளையினுடைய சம்ருத்தமான புகழைப்பாட, நம்பாபமொன்று மொழியாமேபோமென்கிறார்.

மலர்-நிரதிசயபோக்யமாம்படி விகஸிதமான. அடிப்போதுகள் - திருவடித்தாமரைகளை. என்-என். நெஞ்சத்து-நெஞ்சத்திலே. எப்பொழுதும் - சர்வகாலமும். இருத்தி-இருத்தி. வணங்க-அந்தவுகப்பாலே வணங்கும்படியாக. பலர்-ஸூரிகளும், பராசராதிகளும், பக்தர்களுமான பலவகைப்பட்ட. அடியார் - அடியார். முன்பு-சந்நிதியிலே. அருளிய - நிரவதிகக்ருபையைப்பண்ணியருளின. பாம்பணையப்பன்-ஆஶ்ரிதசம்ஸ்லேஷஸ்வபாவனுயுள்ள வநந்தசாயியானவன். அமர்ந்து-புறம்பு ஜகத்வ்யாபாராந்யபரதையற்று. உறையும்-வாசந்தானே ப்ரயோஜநமாக வர்த்திக்குமிடமாய். மலரில்-புஷ்போபஹாரங்களையுடைத்தான. மணி - மணிமயமான. நெடு-ஓங்கின. மாடங்கள்-மாடங்களையும். நீடு-நெடிய. மதிள்-மதிளையுமுடைத்தான. திருவாறன்விளை-திருவாறன்விளையினுடையதாய். உலகம்-லோகத்திலே. மலி - மிக்க. புகழ்-புகழாய். பாட-உகப்போடேபாட. நம்-நம்மை. மேல்-மேலிட்டு வர்த்திக்கிற. வினை-பாபங்கள். தானே, ஒன்றும்-நம்பக்கலொன்றும். நில்லா-இல்லாதே. கெடும்-புக்கவிடமறியாமற்போம் .......................................................*

## ஈடு - ஐந்தாம்பாட்டு.

திருவாறன்விளையிலே புக்கடிமைசெய்கைக்கு விரோதியானவையெல்லாம், அவனுடைய மிக்கபுகழைப்பாடப்பறந்துபோமென்கிறார்.

(மலரடிப்போதித்யாதி) மலர்ந்திருந்துள்ள திருவடிகளாகிற செவ்விப்பூக்களை யென்னுடைய ஹ்ருதயத்திலே யெப்போதுமிருத்தி, அவ்வநுசந்தாநம்போய்க்கனக்க அத்தாலே நிர்மமனாய்க்கொண்டு திருவடிகளிலேவிழும்படியாக. (பலரடியார்முன்பருளிய) ஸ்ரீவேதவ்யாஸபகவான், ஸ்ரீவால்மீகிபகவான், ஸ்ரீபராசரபகவான், "இன்கவிபாடும்பரமகவிகள்" என்று சொல்லப்படுகிற முதலாழ்வார்களெல்லாருமுண்டாயிருக்க, என்பக்கலிலே விசேஷகடாக்ஷம்பண்ணுவதே!. [பஹூநாநேநநஹேதாஹநஹேஹெவெக்ஷ்த] [பஹுமாநேநமஹதாஹநூமந்தமவைக்ஷத] முதலிகளெல்லாருமிருக்கச்செய்தே திருவடிபக்கலிலே விசேஷகடாக்ஷம்பண்ணினாப்போலே யாயிற்று, பலருமுண்டாயிருக்க விவரை விஷயீகரித்தபடி. "கிழக்குத்தை ராஜாக்கள் பொல்லாங்காலே யிங்கேநலிவுபிறக்கு மளவிற்செய்வதென்?" என்று எம்பெருமானாரத்தை யநுசந்தித்தருளி, "இத்தேசத்தைவிடாதே நோக்கிக்கொண்டுகிடந்தோம், இவ்விடத்துக்கு மழிவுவரும்படி ஆசுரவர்க்கம் மேலிடாநின்றது, மேல்செய்யவடுப்பதென்?" என்று பெரியநம்பிக்கறிவிக்க; "நான் பெருமாளுடைய திருவெல்லையிலே யொருப்ரதக்ஷிணம் வரும்படியாக வும்முடைய சிஷ்யர்களிலே யொருவனைப் போரவிடுவது" என்ன, "அதுக்காவாரார்" என்ன, "என்பின்னேபோராநின்றால் 'ஒருவன்பின்னே போகாநின்றேன்' என்று தன்னெஞ்சிற்படாதே, சாயைபோலே யென்னைப்பின்செல்வா

ஞைநவனுகவேணும்" என்ன, "அதுக்காவாரார்" என்ன, "ஆழ்வானைப் போகவிடலாகாதோ" என்றுராம். (பலரடியார்முன்பருளிய) பலமுதலிகளுண்டாயிருக்க, ஆழ்வானை ப்ரசாதித்தாப்போலே. (பாம்பணையப்பனமர்ந்துறையும்) பர்யங்கவித்யையிற்சொல்லுகிறபடியே திருவநந்தாழ்வானைப்படுக்கையாகவுடைய சர்வேச்வரன், அப்படுக்கையிற்காட்டிலும் விரும்பி வர்த்திக்கிற தேசமாயிற்று. (மலரில் மணிநெடுமாடங்கள்) தேவர்கள் வர்ஷித்த புஷ்பத்தோடேகூடி, மணிமயமான மாடங்களினௌக்கத்தையுடைத்தாய், ஓங்கினமதிளையுமுடைத்தான திருவாறன்விளை. (உலகமலிபுகழ்பாட) ஈண்டினவிடத்தில் வெள்ளம்போலே, லோகத்திலடங்காதபடியான வவனுடைய கல்யாணகுணங்களை ப்ரீதிப்ரேரிதராய்க்கொண்டுபாட. (நம்மேல்வினையொன்றுநில்லாக்கெடுமே) பாபம்போகைக்காகத் தனித்தோருத்யோகம்பண்ணவேண்டா, பால்குடிக்க நோய்தீருமாபோலே நம்முடைய பாபங்கள் தாமே நசித்துப்போம் ..................*

## ஜீயர் அரும்பதம்.

அஞ்சாம்பாட்டு (மலரடியித்யாதி) "மலிபுகழ்பாடநம்மேல் வினையொன்றுநில்லாகெடும்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை (திருவாறன்விளையிலேயித்யாதி)

"வணங்க" என்னுமளவுக்குமர்த்தம் (மலர்ந்தித்யாதி) போய்க்கனக்க - மிகவுமதிசயிக்க. போய்-மிகவுமென்றபடி. " வார்தல் போதல் லொழுக லிவை நெடுமையாகும் " என்னக்கடவதிறே. விசேஷகடாக்ஷம்பண்ணுகையாவது - திருவாய்மொழிபாடுவித்துக்கொள்ளுகை. பலரடியார்முன்னே விசேஷகடாக்ஷம்பண்ணினதுக்கு த்ருஷ்டாந்தம் (பஹுமாநேநேத்யாதி) " ப்ரீத்யாசமமாநோயாகவ்ஸ்வாவீரஹா । பஹுமாநேநமஹதாஹநுமந்தமவைக்ஷத " (ப்ரீத்யாசமமானோதாகவ:பரவீரஹா । பஹுமாநேநமஹதாஹநுமந்தமவைக்ஷத) இதி ஸுந்தரகாண்டே. பலரடியார் முன்பருளினதுக்கு த்ருஷ்டாந்தாந்தரம் (கிழக்குத்தையித்யாதி) கிழக்குத்தை ராஜாக்கள் - க்ரிமிகண்டாதிகள்.

மலரில்-மலரோடேகூடின.

"மலி" என்றதுக்குபாவம் (ஈண்டினவித்யாதி) ஈண்டினவிடம்- சங்குசிதஸ்த்தலம். உலகம்-லோகத்திலென்றபடி. புகழ்பாடுகிறது- பாபநிவ்ருத்திக்கு சாதகமாகவோவென்ன (பாபமித்யாதி)

மலரடிப்போதுக ளென்னெஞ்சத்தென்றுதொடங்கி, பலரடியார்முன் பருளினவனாய் - மலரில் மணிதொடங்கி, திருவாறன்விளையில் - அமர்ந்துறையும்-பாம்பணையப்பனுடைய - உலகமலிபுகழ்பாட நம்மேல்வினை யித்யாரப்யாந்வய:... ...*

---

## ஆறாம்பாட்டு.

ஒன்றுநில்லாக்கெடுமுற்றவுந்தீவினையுள்ளித்தொழுமின்றொண்டீ
ரன்றங்கமர்வென்றுருப்பிணிநங்கையணிநெடுந்தோள்புணர்ந்தா
னென்றுமெப்போதுமென்னெஞ்சந்துதிப்பவுள்ளேயிருக்கின்றபிரா
னின்றவணிதிருவாறன்விளையென்னுநீணகரமதுவே.

## ஆறாயிரப்படி.

(ஒன்றுநில்லாக்கெடும்) அன்றங்கமர்வென் றுருப்பிணிநங்கை யணிநெடுந்தோள் புணர்ந்தருளிய திருமணம் புணர்ந்தருளின திருவழகை யென்றுமென்னெஞ்சம் துதிப்ப வென்னெஞ்சுள்ளே புகுந்திருக்கிற பிரான் நின்ற வணிதிருவாறன்விளையென்னும் நீணகரமதுவே, உள்ளித் தொழுமின்தொண்டீர், உங்கள் சமஸ்தது:கங்களும் போமென்கிறார். ..*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அநிஷ்டமான விரோதியைத் தலையழித்து அபிமதையானருக்மிணியை ஸம்ஶ்லேஷித்த க்ருஷ்ணன் வர்த்திக்கிற திருவாறன்விளையை யாஶ்ரயிக்க, சமஸ்தபாபங்களும் போமென்கிறார்.

அன்று - சிசுபாலன் கைப்பிடிப்பதாகப் படைதிரட்டினவன்று. அங்கு - பின்தொடர்ந்துவந்தவிடத்திலே. ருக்மிணி, அமர் - பூசலிலே. வென்று - வென்று. நங்கை - பரிபூர்ணநுபவையான. உருப்பிணி - ருக்மிணியினுடைய. அணி - அலங்காராலங்க்ருதமாய். நெடும் - அதிசயிதபோக்யமான. தோள் - திருத்தோள்களை. புணர்ந்தான் - "𑌭𑌰𑍍𑌤𑌾𑌰𑌂𑌪𑌰𑌿𑌷𑌸𑍍𑌵𑌜𑍇" (பர்த்தாரம்பரிஷஸ்வஜே) என்கிற கணக்கிலே ஸம்ஶ்லேஷித்தவனாய். இவ்வபதாநத்தை, என்றும் - என்றும். எப்போதும் - ஒருக்ஷணமுமொழியாமல். என் - என். நெஞ்சம் - நெஞ்சமானது. துதிப்ப - அநுபவித்து ஸ்தோத்ரம்பண்ணும்படி. உள்ளே - என்னகவாயிலே. இருக்கின்ற-இருக்கிற. பிரான் - மஹோபகாரகனானவன். நின்ற - எல்லாருங்கண்டநுபவிக்கும்படி நின்றருளின. அணி - தர்ஶநீயமான. திருவாறன்விளை - திருவாறன்விளை. என்னும் - என்று ப்ரசித்தமான. நீணகரமது - அந்தமஹாநகரத்தை. தொண்டீர் - அநுபவசாபலமுடைய நீங்கள். உள்ளி- அநுசந்தித்து. தொழுமின் - தொழும்படி பாருங்கோள். தீ - க்ரூரமான. வினை - பாபங்கள். ஒன்றும் - ஒன்றும். நில்லா-சேஷியாதபடி நிலைகுலைந்து. முற்றவும் - சர்வமும். கெடும் - நசித்துப்போம்.......*

## ஈடு - ஆறும்பாட்டு.

எம்பெருமான் பக்கல் சாபலமுடையார், உங்களுடைய சமஸ்த து:கங்களும் போம்படி திருவாறன்விளையை நெஞ்சாலே நினையுங்கோளென்கிறார்.

(ஒன்றுநில்லாக்கெடும்முற்றவுந்தீவினை) இவன்றான் போக்கப்பார்க்குமன்றிறே, புதுப்புடைவை யழுக்குக் கழற்றுமாபோலே சிறிதுகிடக்கச் சிறிதுபோவது; அங்ஙனன்றிக்கே, சர்வசக்தியானவன் போக்குமன்று வாஸனையோடேபோமிறே. [ 𑌮𑍇𑌰𑍁𑌮𑌨𑍍𑌦𑌰𑌮𑌾𑌤𑍍𑌰𑍋𑌽𑌪𑌿 ] [ மேருமந்தரமாத்ரோபி ] மேருவையும், அதின்மேலே மந்தரத்தையும் வைத்தாப்போலேயிருக்கிற கனத்தபாபங்கள்; ஈரதமாக, பிக்ஷைக்கிட்டின துர்வ்யாதிநசிக்குமாபோலே, * மருத்துவனாய்நின்ற மாமணிவண்ணனைக்கிட்டினபாபங்களானவை நசிக்கும். "𑌸𑌰𑍍𑌵𑌪𑌾𑌪𑍇𑌭𑍍𑌯𑍋𑌮𑍋𑌕𑍍𑌷𑌯𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿" (ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி) என்றானிறே. "𑌸𑌰𑍍𑌵𑌾

நஃஷஜஷஷயஷெ" ( ஸர்வேபாப்மாநஃப்ரநூயந்தே ) என்றுகின்றதிறே, இது தேசத்துக்குமுபலக்ஷணம்.

( உள்ளித்தொழுமின்தொண்டீர் ) அதனையநுசந்தித் தாபூரயிக் கப்பாருங்கோள், பகவத்விஷயத்தில் சாபலமுடையார். ( அன்றித்யாதி ) அபேக்ஷித்தவர்களுடைய வபேக்ஷித சமயத்திலே வந்து தோற்றுமவனுயிற்று. ( அன்று ) சிசுபாலன் ஸ்வயம்வரத்திலே முடிகியிருக்கிறவன்று. (அங்கு) இவன் த்வரியாகின்றான், உடையவன்வந்து கைக்கொள்ளானே வென்றிருக்கிறவளவிலே, தூணிலே தோற்றினப்போலே தோற்றினனுயிற்று. ( அமர்வென்று ) அவளுக்காக மார்விலேயம்பேற்று. ( உருப்பிணிநங்கை ) எல்லாம் படவேண்டும்படி ஆத்மகுணங்களாலே பூர்ணயாயிருக்கும்படி. ( அணியித்யாதி ) தனக்குத்தானே யாபரணமாய், போக்யதை யளவிறந்துள்ள தோளோடே கலந்தவன். ( என்றுமித்யாதி ) ருக்மிணிப்பிராட்டியுடைய கல்யாணகுணமேகாணு மிவர்நெஞ்சில்பட்டுக்கிடப்பது. எல்லாக்காலத்திலு மெல்லாவவஸ்த்தைகளிலு மென்னுடைய ஹ்ருதயமானது ஸ்துதிக்கும்படி யென்னெஞ்சிலேயிருக்கிற வுபகாரகன். ( நின்றவித்யாதி ) ப்ரகாசியாநிற்கச்செய்தேயும் கண்ணுக்கிலக்காகாதபடியிருக்கையன்றிக்கே, "இவன் நமக்குளன்" என்று அச்சந்தீரும்படி கண்ணாலேகண்டநுபவிக்கும்படி நிற்கிற வழகிய திருவாறன்விளையாகிற மஹாநகரத்தை-உள்ளித்தொழுமின்தொண்டீர். தாமடிமைசெய்யமநோரதிக்கிறாராகில், "உள்ளித்தொழுமின்" என்கிற பரோபதேசத்துக்குக் கருத்தென்னென்னில்; இவர்க்கு ஸ்வாநுபவந்தான் பரோபதேசத்தை யொழிந்திராது, நெஞ்சை சம்போதித்தத்தோடு தொண்டரொன்றத்தோடு வாசியில்லை. ................................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஆறாம்பாட்டு. ( ஒன்றுமில்லாவித்யாதி. ) "தொண்டீர் - தீவினை - முற்றவும் - ஒன்றுமில்லாகெடும் - திருவாறன்விளையென்னும் நீணகரமது - உள்ளித்தொழுமின்" என்கிறபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை ( எம்பெருமானித்யாதி. )

தீவினை முற்றவும் போகக்கூடுமோவென்ன (இவன்றனித்யாதிவாக்யத்வயம்.) வாஸனையோடே போமென்கிறதுக்கு ப்ரமாணம் ( மேருவித்யாதி. ) "மெருமஹராமொ[illegible]விராஸிவாவஸ[illegible]கூணீ। கெஶவம்வெஷ[illegible]ஸா[illegible]யிவிநஸ்[illegible]தி" ( மேருமந்தரமாத்ரோபி ராஸிபாபஸ்யகர்மண: கேஸவம்வைத்யமாஸாத்யதர்வ்யாதிரிவநஸ்யதி ) இதி ஸ்ரீவிஷ்ணுதர்மே. "மெருமஹராமொ[illegible]வி" (மேருமந்தரமாத்ரோபி) என்றதுக்கர்த்தம் ( மேருவையுமித்யாதி. ) "கெஶவம்வெஷஸா[illegible]" ( கேஸவம்வைத்யமாஸாத்ய ) என்றதுக்கர்த்தம் ( சரதமாகவித்யாதி. ) சரதமாக - நிஸ்சயமாக. மருத்துவன்-ஆசார்யன். திருவாறன்விளையை யுள்ளித்தொழுதால் பாபங்கள் போமென்றதுக்கு-ஈஸ்வரன் பாபத்தைப் போக்குமென்கிற ப்ரமாணங்களை யெடுப்பானென்னென்ன ( இது தேசத்துக்குமித்யாதி. )

பதப்ரயோகத்துக்கு பாவம் ( அபேக்ஷித்தவித்யாதி. ) "அமர்வென்று -" அமரிலேவென்று. அமர் - யுத்தம்.

"நங்கை" என்றதுக்குபாவம் ( எல்லாம்படவித்யாதி. ) தோள் புணர்ந்தானுடைய குணங்களை ( ஸ்துதிப்ப ) என்று கூட்டிக்கொள்வது. "தோள்புணர்ந்தான் - உள்ளேயிருக்கின்ற" என்றதுக்கு பாவம் ( ருக்மிணியித்யாதி. )

"நின்ற" என்றதுக்குபாவம் ( ப்ரகாசியாநிற்கச்செய்தேயித்யாதி. )

மநோரதப்ரகரணத்தில் மநோரதம் ஸங்கதமாம்படி யெங்ஙனேயென்று சங்கித்து பரிஹரிக்கிறார் ( தாமடிமையித்யாதி. ) ஆனால், "என்மனனே" என்றாப்போலே தன்றிருவுள்ளத்துக் கருளிச்செய்தாலோவென்ன ( நெஞ்சையித்யாதி. ) நெஞ்சுபோல்வாரை "தொண்டீர்" என்கையாலே - ஸ்வாநுபவ ஹாநியில்லை யென்றபடி.

அன்றங்கமர்வென்றென்றுதொடங்கி, நீணகரத்தை - தொண்டீர் - உள்ளித் தொழுமின் - தீவினை - முற்றவும் - ஒன்று நில்லா கெடுமித்யந்வய:.................*

# ஏழாம்பாட்டு.

நீணகரமதுவேமலர்ச்சோலைகள்சூழ்திருவாறன்விளை
நீணகரத்துறைகின்றபிரானெடுமால்கண்ணன்விண்ணவர்கோன்
வாணபுரம்புக்குமுக்கட்பிரானைத்தொலையவெம்போர்கள்செய்து
வாணனையாயிரந்தோடுணித்தான்சரணன்றிமற்றொன்றிலமே.

## ஆறாயிரப்படி.

(நீணகரமதுவே) திருவாறன் விளையென்னும் நீணகரமதுவே பரமப்ராப்யம், அதுபெறுகைக் குபாயம் அதிலேநின்றருளினவவன், அவனாகிறான் * அயர்வறுமமரர்க ளதிபதியாயிருந்துவைத்து ஆஸ்ரித வாத்ஸல்யமஹோததியாகையாலே, ஸ்ரீமதுரையிலே யாஸ்ரிதபரித்ராணார்த்தமாக வந்து திருவவதாரம்பண்ணியருளின ஆஸ்ரிதவிரோதி நிரசநைகபோகனான க்ருஷ்ணன், அவனல்லதுபாயமில்லை, அவனைசரணம் புகுங்கோளென்கிறார்.......................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், அநிருத்தனுக்கு ப்ரதிபந்தகனானபாணனை, அஸஹாயனாம்படி பொருதழித்து, அவன் பாஹுவநத்தைச்சேதித்த க்ருஷ்ணனே ப்ராப்த்யுபாய பூதனென்கிறார்.

நீணகரம் - அயோத்யை, அபராஜிதையென்று ஸ்ருதிப்ரசித்தமான மஹாநகரம். அதுவே - அர்ச்சாவதாரஸ்த்தலமான வதுவேயாம்படி. மலர் - மலராயுடைத்தான. சோலைகள் - சோலைகள். சூழ் - சூழ்ந்த. திருவாறன்விளை - திருவாறன் விளையாகிற. நீணகரத்து - மஹாநகரத்திலே. உறைகின்ற - நித்யவாசம்பண்ணுகிற. பிரான் - மஹோபகாரகனாய். நெடுமால் - ஆஸ்ரிதவ்யாமுக்தனாய்க்கொண்டு. கண்ணன் - க்ருஷ்ணனாயவதரித்த. விண்ணவர்கோன் - நித்யசூரிசேவ்யனாய். வாணபு

ரம் - அநிருத்தன் நிருத்தனுபாணபுரத்திலே. புக்கு-சென்று. முக்கட்பிரானை-சக்திஞுசகமான த்ரிணேத்ரத்வத்தையும் ஈஸ்வரத்வாபிமானத்தையுமுடையருத்ரனை. தொலைய - "ஆஸ்ரிதரக்ஷணம்பண்ணினதமையும்" என்று உபரதனும்படியாக. வெம் - ப்ரதாபோத்தரமான. போர்கள் - பூசல்களை. செய்து - பண்ணி. வாணனை-பாணனுடைய, ஆயிரந்தோள் - ஆயிரந்தோளையும். துணித்தான்-துணித்தவன். சரண்-தேசப்ராப்திக்குபாயபூதன். அன்றி - அவனையொழிய. மற்று - வேறு. ஒன்று - ஒருபாயத்தை. இலம் - உடையோமல்லோம்..........................................*

## ஈடு - ஏழாம்பாட்டு.

திருவாறன்விளையே ப்ராப்யமென்றுநின்றீர், அவனன்றோ ப்ராப்யனென்ன; அன்றென்னவல்லேனோ, என் சித்தாந்தமிருக்கும்படி கேட்கலாகாதோ வென்கிறார். உபாசநபலமாய் வருமவையடைய ப்ராப்யாந்தர்க்கதமாகக்கடவது, சாத்யவிவ்ருத்திக்குடலாய் வருமவையெல்லாம் பலத்துக்குடலாகக்கடவது; ஆகையாலே, ப்ராப்யபூமி அத்தேசமே, அங்கேகொடுபோய்ச்சேர்க்கும் கடகனவன், இது என்சித்தாந்த மிருக்கும்படி யென்கிறார்.

(நீணகரமதுவே) * கலங்காப்பெருநகரமாய், புக்கார்க்கு "நச புநராவர்த்ததே" (நசபுநராவர்த்ததே) என்கிறபடியே ஒருகாலும் மீட்சியில்லாதபடி நித்யாநுபவம்பண்ணும் ப்ராப்யதேசம் அதுவே. (மலரித்யாதி) "அவனுக்குங்கூட ப்ராப்யபூமி" என்றுதோற்றும்படி யிருக்குமாயிற்று. நித்யவசந்தமானபொழிலாலே சூழப்பட்டதிருவாறன் விளையாகிற மஹாநகரத்திலேவந்து வர்த்திக்கிறவுபகாரகன். (நெடுமாலித்யாதி) * அயர்வறுமமரர்க ளதிபதியாயிருந்துவைத்து, சம்சாரத்தில் தன்பக்கல் ருசியுடையரானவர்கள் பக்கல் வ்யாமோஹத்தாலே க்ருஷ்ணனாய்வந்தவதரித்து, ஒருகடலில் நின்று மொருகடலிலே யெடுத்துவிட்டு, ஈஶ்வராபிமாநியாய் "இவன்காரியத்துக்கெல்லாம்நானேகடவன்" என்றிருக்கிறவனுடைய வபிமாநமெல்லாந்தொலைந்து, "நானினியொருதேவதையா யொருவன்காரியத்துக்கபிமாநித்திரேன்" என்னும்படி க்ரூரமான யுத்தங்களைப்பண்ணி. "க்ருஷ்ண க்ருஷ்ண மஹாபாஹோ." (க்ருஷ்ணக்ருஷ்ணமஹாபாஹோ.) "ஆணைக்கும்தனக்குத்தக்கவாதம்" என்னுமாபோலே, தேவதைகளுக்கு நம்மிற்காட்டிலறிவுகேடு விஞ்சியிருக்கும். ஒருவில்லைமுறித்தபோதாக "அதிகம்மேநிரே விஷ்ணும்" (அதிகம்மேநிரே விஷ்ணும்) என்பர்களாயிற்று தேவஜாதியாக. (வாணனையாயிரந்தோள்துணித்தான்) "உஷைபித்ருஹீநையாகவொண்ணாது" என்றுபார்த்து, உயிரிருக்கத்தோளைக் கழித்துவிட்டானாயிற்று. (சரண்) அவன் கடகன், திருவாறன்விளையே ப்ராப்யம். ப்ராப்யனானவன்வந்து சந்நிதிபண்ணினதேசமாகையாலே, அவனோட்டைசம்பந்தத்தாலே அத்தேசமும் ப்ராப்யமென்கைக்குத்தட்டில்லை. ஒருசர்வாதிகனுபாயமாய் பலப்ரதனாகவேணு

மே; ஆகையாலே, அவனுபாயம், அத்தேசம்ப்ராப்யம். (அன்றிமற்றொன்றிலமே) இங்ஙனல்லது ப்ராப்யப்ராபகங்கள் மாறாடக்கடவோமல்லோம்.......................................................................*

## ஜீயர் அரும்பதம்.

ஏழாம்பாட்டு (நீணகாமித்யாதி.) "நீணகரமதுவே" என்றத்தாலே பலித்தது - திருவாறன்விளை போக்யமென்னுமதிறே; அத்தைக்கடாக்ஷித் தவதாரிகை (திருவாறன்விளையேயித்யாதி.) என்னுநின்றீரொன்றது - கீழெல்லாமென்றபடி. உம்முடைய சித்தாந்தமானாலு முபபந்நமாகவேண்டாவோவென்ன (உபாசநேத்யாதி.) அதாவது - ப்ராப்யனானவனை யொருதேசவிசேஷத்திலேபோ யநுபவிக்கவேண்டுகையாலே, அதுவும் ப்ராப்யமென்றபடி. உபாசநபலமாய்வருமவையாவன - ஆஸ்ரயணபலமான வர்ச்சிராதிகதி, திவ்யதேசப்ராப்திமுதலானவை. பரிஹாராந்தரம் (சாத்யவிவ்ருத்திக்கித்யாதி.) அதாவது - ஸாத்யேப்ரதமாவதி பகவத்கைங்கர்யமாய், தத்விசேஷவ்ருத்திஹேதுவாகையாலே, தச்சரமாவதி தேசமாயிருக்கையென்றபடி. கடகனென்றது - உபாயமென்றபடி.

இதுப்ராப்யம் என்னுமதுக்குவாசகம் "நீணகரம்" என்கிறவிதென்னுமிடந்தோற்ற வருளிச்செய்கிறார் (கலங்காவித்யாதி) அதுவேயென்றது - திருவாறன்விளையை.

"உறைகின்ற" என்றத்தைக்கடாக்ஷித்து, இதுக்குபாவம் (அவனுக்குமித்யாதி.) "விண்ணவர்கோன் - நெடுமால்கண்ணன்" என்றங்வயித்தர்த்தம் (அயர்வறுமித்யாதி) ஒருகடலிலேநின்று மொருகடலிலேயெடுத்து விட்டென்றது - த்வாரகை மேலைசமுத்ரத்திலேயும், சோணிதபுரம் கீழைக்கடற்கரையிலேயு மாகையாலே யென்றபடி. "முக்கட்பிரானைத்தொலையவெம்போர்கள்செய்து" என்றதுக்கர்த்தம் (ஈஸ்வராபிமாநியித்யாதி.) அவனப்படிதோற்றானோவென்ன; தோற்றன்றோ ஸ்தோத்ரம்பண்ணினனென்கிறார் (க்ருஷ்ணக்ருஷ்ணேத்யாதி) "[illegible]" (ஈஸ்வராத்ஜ்ஞாநமர்விச்சேத்) என்னும்படியானஜ்ஞாநவானுக்கஜ்ஞாநமுண்டோ, "ஜாநே" என்பானென்னென்ன (ஆனைக்குமித்யாதி.) உபபாதநம் (ஒருவில்லையித்யாதி.)

தலையையறாதே தோளைக்கழித்ததுக்குஹேது (உஷையித்யாதி,) உபாசநபலமாய் வருமதாகையாலே பரமபதமன்றோ ப்ராப்யம், திருவாறன்விளைப்ராப்யமாகக்கூடுமோவென்ன (ப்ராப்யனானவனித்யாதி.) உபாயமும் திருவாறன்விளையானாலோவென்ன (ஒருசர்வாதிகனித்யாதி.)

மலற்சோலைகள் சூழித்யாரப்ய, விண்ணவர்கோன் - நெடுமால் கண்ணன்- வாணபுரமென்றுதொடங்கி, தோள் துணித்தான் சரண் - நீணகரமதுவே - அன்றிமற்றொன்றிலமித்யந்வயः....................................................*

# எட்டாம்பாட்டு.

அன்றிமற்றொன்றிலநின்சரணேயென்றகலிரும்பொய்கையின்வாய்
நின்றுதன்னீள்கழலேத்தியவானையின்னெஞ்சிடர்தீர்த்தபிரான்
சென்றங்கினிதுறைகின்றசெழும்பொழில்சூழ்திருவாறன்விளை
யொன்றிவலஞ்செய்யவொன்றுமோதீவினையுள்ளத்தின்சார்வல்லவே.
௫௦

## ஆறுயிரப்படி.

( அன்றிமற்றென்றிலம் ) சரணம்புக்கால் நம்மபேக்ஷிதம் செய் தருளுமோவென்னில்; * பரமாபதமாபந்நனாய் சரணாகதனான ஸ்ரீகஜேந் த்ராழ்வானுடைய வாபத்தை யெல்லாம்போக்கி யவனைரக்ஷித்தருளின ச ரணாகதவத்ஸலனல்லனோ திருவாறன்விளையிலே யிருக்கிறான், அவன்நம் முடைய வபேக்ஷிதம் செய்தருளும், ஆதலால், உங்களுடைய சமஸ்த துஃகங்களும் போம்படி திருவாறன்விளையிலேபோ யநுபவியுங்கோ ளெ ன்கிறார்..............................................................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், ஆஸ்ரிதருடைய ஆந்தரதுஃகநிவர்த்தகன் வர்த்திக்கிற திருவாற ன் விளையையாஸ்ரயிக்க, நெஞ்சிலொருபாபமும் நடையாடாதென்கிறார்.

நின் - உன். சரண் - திருவடிகளை. அன்றி - ஒழிய. மற்று - மற்று. ஒன்று - ஒன்றையும். இலம் - உடையோமல்லோம். என்று - என்று. அகல்- விஸ்தீர்ணமாய். இரும் - அகாதமான. பொய்கையின்வாய் - பொய்கையிடத்திலே. நின்று - முதலை யின்கையிலே யகப்பட்டுநின்று. தன், நீள் - ஆபந்நரிருந்த விடத்தளவும்வரும். க ழல் - திருவடிகளை. ஏத்திய - "நாராயணா" என்று சம்பந்த பூர்வகமாகவேத் தின. ஆனையின் - ஆனையினுடைய. நெஞ்சிடர் - "செவ்விமாறாமல் பூவைச்சாத்தப் பெற்றிலோம்" என்கிற நெஞ்சு துஃகத்தை. தீர்த்த - தீர்த்த. பிரான் - மஹோபகா ரகன். சென்று - ஆஸ்ரிதர்க்குதவுகைக்காகச்சென்று. அங்கு, இனிது-இனிமையோ டே. உறைகின்ற - வர்த்திக்கிறவிடமாய். செழு - நிரதிசயபோக்யமான. பொழில்- பொழில். சூழ் - சூழ்ந்த. திருவாறன்விளை - திருவாறன் விளையை. ஒன்றி - கிட்டி. வலஞ்செய்ய - வலஞ்செய்ய. ஒன்றுமோ - கூடுமோ. கூடுமாகில், தீ - க்ரூரமான. வினை - பாபங்கள். உள்ளத்தின் - உள்ளத்தின். சார்வு-பொருத்தத்தை. அல்லவே- உடையவல்லவாம்.

ஒன்றிவலஞ்செய்ய - தீவினை - ஒன்றும் - உள்ளத்தின் சார்வல்லவென்று உக்திப்ரகாரமாகவுமாம்.......................................................................................*

## ஈடு - எட்டாம்பாட்டு.

திருவாறன்விளையிலேபுக, நம்முடைய சகலதுஃகங்களும் போமெ ன்கிறார்.

( அன்றிமற்றென்றிலம் நின்சரணேயென்று ) நின்சரணே - அ ன்றிமற்றென்றிலம் - என்று. உன்திருவடிகளையல்லது வேறொரு பற்று டையேனல்லேனென்று. புறம்பே சிலர் ரக்ஷகராக ப்ரமித்திருக்கு மதுவு ந்தவிர்ந்து, "ஜஜஷுகஷ-ஹெதீரொ ஹ்ராஹஷுகஷ-ஹெதஜஜெ" (கஜஆக ர்ஷதேதீரே க்ராஹஆகர்ஷதேஜலே) என்கையாலே தான் ரக்ஷகமாக நி னைத்திருக்குமதுவுந்தவிர்ந்து, "உநஸாவிஹயக" ( மநஸாசிந்தயத் ) எ ன்கையாலே கூப்பீடும் கார்யகரமாமெல்லையுங்கழிந்தது. அவனைப்பார்த் தால் தானுமல்லாதாரோபாதி புறம்பாய்க்கடக்க நிற்கும்படியாயிறே ப்ரா

ப்நியிருக்கும்படி. ஆகைச்சுட்டியிறே ப்ரணவத்தில் மத்யமபதங்கிடக்கச் செய்தேயிறே திருமந்த்ரத்தில் மத்யமபதம் ஜீவிக்கிறதும். ( அகலிரும் பொய்கையின்வாய் ) அகலத்தையு மாழத்தையுஞ் சொல்லவேண்டுமளா விலே, அகலத்தைச்சொல்லி யிருமையைச் சொல்லுகையாலே - அது ஆழத்தைச் சொல்லிற்றாகக்கடவது. இப்போது அகலமுமாழமுஞ்சொல்லுகிறதுக்குக் கருத்தென்னென்னில்; அவனுபாயமாய் ரக்ஷித்தல், இல்லையாகில் முடிதல்செய்யுமித்தனைபோக்கி, தான் வேறொரு கரைகாணமாட்டானாகாதே. ( அகலிரும்பொய்கையின் வாய்நின்று ) பயஸ்த்தாநத்திலே பயநிவ்ருத்தியுள்ளவிடத்திற்போலே நிற்கும்படியாயிற்றுச் செயல் மாட்சி. முதலை நீரிலேயிழுக்க, ஆனைகரையிலேயிழுக்க, இரண்டினுடைய வ்யாபாரமுமாய்ச் செல்லுகை தவிர்ந்து ஒன்றினுடைய வ்யாபாரமே யாய்நிற்கை. ( தன்நீள்கழல் ) எதிர்த்தலையில் செயல்மாட்சியே யெல்லை யாகவளரும் திருவடிகள். முதலைவாயிலே யகப்பட்டு நிற்கச்செய்தேயும், அவனை யநுசந்தித்தால் அச்சங்கெட்டிருக்கலாம்படி யாகாதேதா னிருப்பது. "आनन्दं ब्रह्मणो विद्वान्न बिभेति" ( ஆநந்தம்ப்ரஹ்மணோ வித்வாந்நபிபேதி ) என்னக்கடவதிறே. [ कुतश्चन ] [ குதஶ்சந ] ப்ராமாதிகத்துக்கன்றிக்கே புத்திபூர்வகமாகப் பண்ணினதுக்கு மஞ்சவேண்டாதபடியாயிருக்கும். "செய்தாரேல் நன்றுசெய்தார்" என்றால், இவனெதுக்கஞ்ச. புத்திபூர்வத்துக் கஞ்சவேண்டாவிட்டால், ப்ராமாதிகத்துக் கஞ்சவேண்டாவென்னுமிடம் கிம்புந: இறே. ப்ராமாதிகத்துக்கஞ்ச வேண்டாமை பக்தியோகத்துக்குமுண்டிறே. ( ஏத்திய ) முட்பாய்ந்தால் "அம்மே!" என்பாரைப்போலே, வாஸநையாலே சொன்ன வித்தனை. ( ஆனையின்நெஞ்சிடர்தீர்த்தபிரான் ) துதிக்கை முழுத்தினவிடரிறே, நீண்டகை குறுகுமளவுமிறே பார்த்துநின்றது, இவன் கைவிட்டால் கைக்கொள்ளாநின்றா னித்தனையிறே. ( ஆனையின் நெஞ்சிடர்தீர்த்தபிரான் ) "இப்பூவிற் செவ்விமாறுவதற்குமுன்னே திருவடிகளிலே சாத்தப்பெறுகிறிலோம்!" என்கிறவிடரைப் போக்கினானாயிற்று. அன்றிக்கே, "நாமடியாக சர்வேஸ்வரனுக் கவத்யம்வருகிறதோ ?" என்னுமிடராதல். அதாவது - "'இவனிப்படி க்லேஸிக்க அவன் ரக்ஷித்தபடி யழகிதாயிருந்தது, இவனையே நாமிப்படி 'ரக்ஷகன்' என்று நினைத்திருந்தது' என்று நாட்டா ரிவனை யிப்படி நினைக்கிற்செய்வதென்" என்று இடர்பட்டது. "இரண்டும்போ யிரண்டின்வீடு" என்கிறபடியே - இரண்டுக்குமிடர்வாராதபடி கரையிலேகொண்டேறி, பின்னை முதலைவாயைக் கிழித்து ஆனையினிடரை நீக்கினானாயிற்று, இதுக்கு பட்டரருளிச்செய்யும்படி - "ராஜபுத்ரனைச் சிறையிலேயிட்டுவைத்தால், கைக்கூட்டனுக்கும் பாலுஞ்சோறுமிடுவாரைப்போலேகாண்" என்றும். இரண்டும் மோக்ஷத்தைப்பெற்றதே!; முதலை சாபமோக்ஷமும், ஸ்ரீகஜேந்த்ராழ்வான் ஸாக்ஷாந்மோக்ஷமும் பெற்றார்களிறே, ( பிரான் ) ஆனையிடர்போக்கினவிதுவும், அதுக்க

ன்றித் தமக்குபகரித்தானாக நினைத்திருக்கிறார்காணுமிவர். இப்பாவவ்ருத்தியை யுடையவனாகையிறே யொருவன் வைஷ்ணவனாகையாவது. அநுகூலரிலே யொருவனுக்கொரு நன்மையுண்டானா லது தன்னதாகநினைத்திருக்கையும், அநர்த்தம்வந்தா லது தனக்குவந்ததாக நினைத்திருக்கையுமாகிற விவ்விரண்டு முண்டானாலிறே வைஷ்ணவத்வ முண்டாயிற்றாவது. (சென்றங்கினிதுறைகின்ற) இவனுதவாதவன்று அவ்வானைக்குள்ள விடரோபாதியும் போருமாயிற்று, அத்தேசத்தை ப்ராபியாதபோது சர்வேஸ்வரனுக்குண்டான விடரும். அவன்வந்து தன்னுதரமெல்லாந்தோன்றும்படி வர்த்திக்கிற, அழகிய பொழிலாலே சூழப்பட்ட திருவாறன்விளையைக்கிட்டி ப்ரதக்ஷிணாதிகளைப்பண்ண. (ஒன்றுமோ) கிட்டுமோ. (தீவினையுள்ளத்தின்சார்வல்லவே) அப்போது தீவினை யுள்ளத்தின்சார்வாகாது. தேஜஸ்திமிரங்களுக்கு ஸஹாவஸ்தாநமுண்டோ, அவன்வந்து ஹ்ருதயத்திலேநித்யவாசம்பண்ணத் தீவினை யொதுங்கவிடமுண்டோ.

## ஜீயர் அரும்பதம்.

எட்டாம்பாட்டு. (அன்றிமற்றித்யாதி.) "திருவாறன்விளையொன்றிவலஞ்செய்ய - தீவினையுள்ளத்தின்சார்வல்லவே" என்றபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை (திருவாறன்விளையிலேயித்யாதி.)

"மற்றொன்றிலம்" என்றதுக் கர்த்தம் (புறம்பேயித்யாதி.) "மற்று" என்றால் - பிறரையொழியத் தன்னையும் காட்டுமோவென்ன (அவனையித்யாதி.) தன்னுடைய ரக்ஷணத்தில் தனக்கு ப்ராப்தியில்லையென்னுமிடமெங்கேசொல்லிற்றென்ன (ஆகைச்சுட்டியித்யாதி.) ஆகைச்சுட்டி யென்றது - தன்னுடையரக்ஷணத்தில் தனக்கு ப்ராப்தியில்லாமையாலே யன்றோவென்றபடி.

"இருமை" என்று - ஆழமாக விவக்ஷித்த வர்த்தத்தை யிஶ்ஶப்தம் வசிக்குமோவென்ன (அகலத்தையுமித்யாதி.) "நின்று" என்றதுக்குபாவம் (பயஸ்தாநத்திலே யித்யாதி.) செயல்மாட்சி - நிர்வ்யாபாரதை. செயல்மாட்சிதன்னை யுபபாதிக்கிறார் (முதலையித்யாதி.)

திருவடிகளுக்கு நீட்சியேதென்ன (எதிர்த்தலையிலித்யாதி.) எதிர்த்தலை- இத்தலையென்றபடி. "நீள்" என்றதுக்கர்த்தாந்தரமாதல், நீட்சியாலிவனுக்கு பலித்ததொரு ப்ரயோஜநமாத லருளிச்செய்கிறார் (முதலைவாயிலேயித்யாதி.) அப்படி யச்சம் கெட்டிருக்கலாமோவென்ன, ப்ரமாணம் (ஆநந்தமித்யாதி.) அதுக்கு ஹேதுவேதென்ன (செய்தாரோலித்யாதி.) ஆனால் ப்ராமாதிகத்துக்கெப்படியென்ன (புத்திபூர்வத்துக்கித்யாதி.) ப்ராமாதிகத்துக்கொழிய புத்திபூர்வத்துக்கு மஞ்சவேண்டாவென்கிறதேதென்ன (ப்ராமாதிகத்துக்கித்யாதி.) அதாவது - பக்திநிஷ்டவ்யாவ்ருத்யர்த்தமென்றபடி. நினைக்கமாட்டாத தேத்தவற்றேவென்ன (முட்பாய்ந்தாலித்யாதி.) இப்போ தானையினிடரைப் போக்குகிறவன் உபக்ரமாவஸ்தையிலேதானே போக்கவொண்ணாதோவென்ன (துதிக்கையித்யாதிவாக்யத்ரயம்.) ஆனைக்கு நெஞ்சிடரின்னதென்றும், அத்தைத் தீர்த்தப்ரகாரமு மருளிச்செய்கிறார் (இப்பூவிற்செவ்வியித்யாதி.) "நெஞ்சிடர்" என்றதுக்கு மூன்றர்த்தம். முந்தினது (துதிக்கைமுழுத்தினவிடரிறேயென்றது.) இரண்டாமர்த்தம் (இப்பூவிற்செவ்வியித்யாதி.) மூன்றாமர்த்தம் (அன்றிக்கே நாமடியாகவித்யாதி.) நெஞ்சிடர்தீர்த்த

துக்கு ப்ரமாணம் (இரண்டும்போயித்யாதி.) முதலையுமானையுமாகிற விரண்டும் ஒன்றையொன்று விட்டுப்போ யிரண்டுக்கும் சாபமோக்ஷமும் ஸாக்ஷாந் மோக்ஷமு முண்டாம்படி திருவுள்ளம்பற்றி யருளினுயென்றபடி. நாலாந்திருவந்தாதி, "மதித்தாய்போய்" இத்யாதி. (இரண்டுக்குமிடர்வாராதபடி) என்றவநந்தரம், ஒன்றுக்கே யிடர்வரும்படி யென்றுகூட்டுவது. இரண்டுக்கும் மோக்ஷம்வருவானென்னென்ன (இதுக்கித்யாதி.) இதுக்கு - "இரண்டின்வீடு" என்றதுக்கென்றபடி. கைக்கூட்டன் - காவற்காறன். ஆனையன்றோ மோக்ஷத்தைப்பெற்றதென்ன (இரண்டுமித்யாதி.) பெற்றக்ரமமேதென்ன (முதலையித்யாதி.) இத்தால் - ஸ்வரூபத்திலோரர்த்தத்தை பலிப்பிக்கிறுர் (இப்பாவவ்ருத்தியித்யாதி.) விவரணம் (அநுகூலரிலேயித்யாதி.)

"சென்று" என்றதுக்கு பாவம் (இவனுதவாதவித்யாதி.)

"ஒன்றுமோ-" ப்ரதக்ஷிணுதிகளைப் பண்ணக்கூடுமோ வென்றபடி.

அப்போது -. கூடினுலென்றபடி. ப்ரதக்ஷிணுதிகளைப் பண்ணினுல் பாபம் ஸ்பர்ஶியாமைக்கடியேதென்ன வருளிச்செய்கிறுர் (தேஜஸ்திமிரங்களுக்கித்யாதிவாக்யத்வயத்தாலே.) இவ்விடத்திலே - "ஹ்ருதி ஹி பகவாநநாதிராஸ்தே ஹரிரஸிஸங்கதாதரோ வ்யயாத்மா। தத்க்ஷமவிகாதகர்த்ரு ஹிநஸ்ம்பவதிக்ஷயம் ஸதிவாந்தகாரமர்க்கே" (ஹ்ருதியதிபகவாநநாதிராஸ்தே ஹரிரஸிஸங்ககதாதரோவ்யயாத்மா। ததகமகவிகாதகர்த்ருபிந்நம்பவதிகதம்ஸதிசாந்தகாரமர்க்கே) என்றதநுசந்தேயம். உள்ளத்தின்சார்வல்ல - உள்ளத்தின் சேர்த்தியையுடைய தல்லவாமென்றபடி...........................................................................................*

# ஒன்பதாம்பாட்டு.

தீவினையுள்ளத்தின்சார்வல்லவாகித்தெளிவிசும்பேறலுற்று
ஞவினுள்ளுமுள்ளத்துள்ளுமமைந்ததொழிலினுள்ளுநவின்று
யாவரும்வந்துவணங்கும்பொழிற்றிருவாறன்விளையதனை
மேவிவலஞ்செய்துகைதொழக்கூடுங்கொலென்னுமென்சிந்தனையே.

## ஆறுயிரப்படி.

(தீவினை) திருவாறன்விளையோ ப்ராப்யம், திருநாடன்றோவென்னில்; நிரஸ்தசமஸ்த ப்ரதிபந்தகராய்த் தெளிவிசும்பேறலுற்றுல்; திருவாறன்விளையைக்கண்டால் திருநாட்டைவிட்டு இத்தையே ப்ராப்யமாகக்கொண்டு, சர்வகரணங்களாலு மநுபவிப்பார் - திருநாட்டிலுள்ளார்க்குமிதுவே ப்ராப்யம், என்னெஞ்சும் திருவாறன்விளையைமேவி வலஞ்செய்துகைதொழக்கூடுமேயோ வென்று மநோரதியாநிற்கும், அதுவே ப்ராப்யமென்கிறுர்...............................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், பாபநிவ்ருத்தி பிறந்து ப்ராப்யதேசம் ஸித்திக்குமாகிலும், சர்வாநுபாவ்யமான திருவாறன்விளையை ப்ராபித்தநுபவிக்க வமையுமென்றுநின்றதென்னெஞ்சென்கிறுர்.

என்றிருக்கிறீர், ஈஶ்வரன் ஸ்வதந்த்ரனன்றோ, அவன் பரமபதத்தைத்தரிலோவென்ன; "அவன் சர்வஜ்ஞனன்றோ, அறியானோவென்கிறார்" என்று, "புருஷார்த்தப்ரதனன்றோ, புருஷனர்த்தித்தத்தையன்றோ கொடுப்பது"

(சிந்தைமற்றொன்றின்றிறத்ததல்லாத்தன்மை தேவபிரானறியும்) நெஞ்சானது பரமபதப்ரசங்கமும் நினையாதது சர்வேஶ்வரனறியும். தன்மை—ஸ்வபாவம். மற்றென்கிறது-பரமபதத்தின்பேர் சொல்லுகையுங் கூட வஸஹ்யமானபடி. உம்மைக்கேட்க சர்வேஶ்வரனைச் சாக்ஷியாகச் சொன்னதுக்குக் கருத்தென்னென்ன (சிந்தையினுலித்யாதி) அவன் நினைத்தா லிவனநந்தரம் நினைக்கவேண்டும்படியிருக்க, அவனறியாததுண்டோ. * உள்ளுவாருள்ளத்தெல்லா முடனிருந்தறியுமவனன்றோ. அவன் நினைப்பிட்டாலன்றோ விவனுக்கு நினைக்கலாவது. நெஞ்சால் செய்யப்படுவனவற்றி லவனறியாத வஞ்சநங்களொன்றுமில்லை. (சிந்தையினுலித்யாதி) நித்யசூரிகளோபாதி முமுக்ஷுக்களும் வந்தாஶ்ரயிக்கும் தேசமாயிற்று. மநோவாக்காயங்கள் மூன்றாலும் பூசுரரான ஸ்ரீவைஷ்ணவர்கள் திரண்டுவந்தாஶ்ரயிக்கும் தேசமாயிற்று. (சிந்தைமகிழ்திருவாறன்விளை) ஆரேனுமாகப்புக்காரை நிரதிசயாநந்திகளாகப்பண்ணும் தேசமாயிற்று. "ப்ராப்யபூமி" என்று தோற்றும்படியிருக்குமாயிற்று. திருவாறன்விளையிலே வந்து வர்த்திக்கிற சர்வேஶ்வரனைக் கேட்டுக்கொள்வது. உமக்கித்தெளிவுதானென்று தொடங்கி வந்ததென்ன (தீர்த்தனுக்கற்றபின்) அவன் தன்னுடைய போக்யதாதிசயத்தாலே எனக்குப்புறம்புண்டானபற்றைத்தவிர்த்துத் தனக்கே யநந்யார்ஹனும்படி பண்ணிக்கொண்ட வன்றுதொடங்கி. உஜ்ஜீவிக்கப்பண்ணினவன்றுதொடங்கி. நடுவே யுஜ்ஜீவியாதே கிடந்துபோந்ததே அநாதிகாலம்........................................................................*

## ஜீயர் அரும்பதம்.

பத்தாம்பாட்டு (சிந்தைமற்றித்யாதி) "மாயங்களொன்றுமில்லை" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை (இதுதானித்யாதி வாக்யத்வயம்) "அறியும்" என்கையாலே (கேட்டுக்கொள்வது) என்று ஸித்தம். வாய்த்தலை-மூலம். அறிந்தாலோவென்ன (புருஷார்த்தேத்யாதி) "இவ்வர்த்தத்துக்கு சாக்ஷியாக வவனைக்கேட்டுக்கொள்" என்று நஞ்சீயருக்குக்கருத்து.

முந்தின வவதாரிகையிலே யருளிச்செய்கிறார் (உம்மைக்கேட்கவித்யாதி) அவனையறியாதே யிவன் நினைக்கவொண்ணாதோவென்ன (அவன்நினைத்தாலித்யாதி) அப்படி யவனறியுமோவென்ன, ப்ரமாணம் (உள்ளுவாரித்யாதி) அவன் நினைத்தவநந்தரம் நினைக்கவேணுமோவென்ன (அவன் நினைப்பிட்டாலித்யாதி) சப்தார்த்தம் (நெஞ்சாலித்யாதி) "செய்வ" என்றது-செய்யப்படுவனவற்றிலென்றபடி.

கீழ்ப்பாட்டிலே நித்யசூரிக ளாஶ்ரயித்தபடி சொன்னவநந்தரம், இங்கே முமுக்ஷுக்க ளாஶ்ரயிக்கிறபடியைச் சொன்னதுக்குபாவம் (நித்யசூரிகளோபாதி

யித்யாதி ) "சிந்தையினல் சொல்லினல் செய்கையால்" என்று-கார்யேகாரணே பசாரம்பண்ணுகிறது.

இன்னர் சிந்தையென்னுமையாலே யருளிச்செய்கிருர் ( ஆனேனுமித்யாதி இத்தால்பலிதம் (ப்ராப்யபூமியித்யாதி) பரமபதப்ரஸங்கம் நினையாதிருக்கிறவிவர், "தேவபிரான்" என்று பரமபதநிலயனைச்சொல்லுவா னென்னென்கிறசங்கையிலே, "தேவபிரான்" என்றதுக்கர்த்தம் (திருவாறன்விளையிலேயித்யாதி) உஜ்ஜீவிக்கப்பண்ணினவன்றுதொடங்கியென்றது - மத்யமாக்ஷரத்தி லர்த்தத்தை யெனக்குண்டாக்கினவன்றுதொடங்கியென்றபடி. இதில் வ்யதிரேகஸித்தமானவர்த்தத்தை யருளிச்செய்கிருர் (நடுவேயித்யாதி) நடுவேயென்றது - விசேஷகடாக்ஷத்துக்குமுன்புள்ளகாலத்தை. அகாரமகாரங்களுக்கு நடுவேயென்றும்.

சிந்தையினுலென்றுதொடங்கி, தீர்த்தனுக்கற்றபின்-சிந்தைமற்றென்றினென்றுதொடங்கி, தேவபிரானறியும், சிந்தையினல் செய்வதானறியாதன மாயங்களொன்றுமில்லை யித்யந்வயஃ ..................................................................*

# பதினென்றம்பாட்டு.

தீர்த்தனுக்கற்றபின்மற்றோர்சரணில்லையென்றெண்ணித்தீர்த்தனுக்கே
தீர்த்தமனத்தனனுகிச்செழுங்குருகூர்ச்சடகோபன்சொன்ன
தீர்த்தங்களாயிரத்துள்ளிவைபத்தும்வல்லார்களைத்தேவர்வைக
தீர்த்தங்களேயென்றுபூசித்துநல்கியுரைப்பர்தந்தேவியர்க்கே.

## ஆருயிரப்படி.

( தீர்த்தனுக்கற்றபின் ) திருவாறன்விளையே ப்ராப்யமென்றிருக்கைக்கு விரோதியானவென்னுடைய பாபத்தைப்போக்குகையாலே பவித்ரம் அதில் நின்றருளினவெம்பெருமான், அதிலும் பவித்ரம் அவனை ப்ரதிபாதித்த திருவாய்மொழிகள், இவைவல்லாரவற்றிலும் பவித்ரபூதரென்று, இந்த்ராதி தேவர்கள் சத்கரித்துக்கொண்டு தங்கள் ப்ரணயிநிகளுக்குச் சொல்லுவரென்கிருர்..........................................................*

## பன்னீராயிரப்படி.

அநந்தரம், இத்திருவாய்மொழியை யப்யசிக்கவல்லவர்களை நித்யஸூரிகள் ஶ்லாகிப்பரென்று பலத்தையருளிச்செய்கிருர்.

தீர்த்தனுக்கு - உபாயோபதேஷ்டாவான வவனுக்கு. அற்றபின் - அநந்யார்ஹமானபின்பு. மற்று - வேறு. ஓர் - ஒரு. சரண் - உபாயம். இல்லை - இல்லை. என்று - என்று. எண்ணி - அறுதியிட்டு. தீர்த்தனுக்கே - * சர்வபாபவிமோசகனுய் பரமபாவநபூதனானவவனுக்கே. தீர்த்த - அறுதியாக்கப்பட்ட. மனத்தனனுகி-நெஞ்சையுடையராய்க்கொண்டு. செழும் - தர்ஶநீயமான. குருகூர் - திருநகரிக்குநிர்வாஹகரான. சடகோபன் - ஆழ்வார். சொன்ன - அருளிச்செய்ததாய். தீர்த்தங்கள் - தனித்தனியேவித்யாஸ்நாநங்களான. ஆயிரத்துள் - ஆயிரந்திருவாய்மொழியிலும். இவைபத்தும் - இப்பத்தையும். வல்லார்களை - அப்யசிக்கவல்லவர்களை. தேவர் - நித்

யசூரிகளானவர்கள். வைகல் - சர்வகாலமும், தம் - தங்கள். தேவியர்க்கு-மஹிஷிகளுக்கு. பூசித்து-பஹுமாநமாக. நல்கி-ஸ்நேஹித்து. தீர்த்தங்களே-சம்சாரதோஷ நிவர்த்தகரான பவித்ரபூதர். என்று - என்று. உரைப்பர்-சொல்லாநிற்பர்கள்.

இது - அறுசீராசிரியவிருத்தம்........................................................*

## ஈடு - பதினொன்றும்பாட்டு.

நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றவர்கள் * அயர்வறு மமரர்களுக்கு ப்ரீதிவிஷயபரகீயரென்கிறார்.

(தீர்த்தனித்யாதி) இன்னார்க்குத்தீர்த்தனென்னுமையாலே ஸ்வவ்யதிரிக்தர்க்கெல்லாம் தீர்த்தனாயிற்று. தீர்த்தமாவது தான்பரிசுத்தமுமாய், தன்னைஸ்பர்சித்தாரும் பரிசுத்தராம்படி பண்ணுமதாயிற்று. * தீர்த்தனுலகளந்த சேவடியை ப்ரஹ்மாவிளக்க, அந்ததீர்த்தத்தை பாவநார்த்தமாக ஜடாமத்யேதரித்தான் ருத்ரன். "ஆறுபொதிசடையோன்" என்னக்கடவதிறே. கங்காதரனென்றே பேரவனுக்கு. அந்தகங்கைக்கடியை யாராய்ந்து கொள்ளுகையிறே யினியுள்ளது; ஆராய்ந்தவாறே அது அடிப்பட்டிருக்குமே; * கங்கைபோதரக் காலநிமிர்த்தருளிய கண்ணனிறே. (தீர்த்தனுக்கற்றபின்) தன்னுடையபோக்யதாதி சயத்தாலே தன்னையொழிந்த விஷயங்களி லுண்டானருசியைக் கழித்தவனுக்கற்றபின் என்றுமாம். (மற்றோர்சரணில்லையென்றெண்ணி) அவனையொழிய ரக்ஷகரில்லையென்று தெளிந்தாராயிற்று. (தீர்த்தனுக்கேதீர்த்தமனத்தனாகி) பாஹ்ய விஷயங்களில் ருசியைப்போக்கினவனுக்கே யறுதியாகவெழுதிக்கொடுத்த நெஞ்சையுடையராய். "உனைநினைந்தெள்கல்தந்தவெந்தாய்" என்றுரேகிழ்; "மாற்பால்மனஞ்சுழிப்பமங்கையர்தோள்கைவிட்டு" என்றும், "வலஶோதூநிமியொரு தூவிரூ தூவலஶோதூநி" (பரமாத்மநி யோரக்தோவிரக்தோபரமாத்மநி) என்னுஞ்சொல்லுகிறபடியே, தன்பக்கலிலே நெஞ்சைவைத்தால் பின்பு புறம்புபோக வொட்டாதே சௌந்தர்யம். "மனைப்பால்பிறந்தார் பிறந்தெய்தும் பேரின்பமெல்லாம் - துறந்தார் தொழுதாரத்தோள்" என்று - மனைப்பால் பேரின்பத்தில்கைகழியவொட்டாதே. (செழுங்குருகூர்ச்சடகோபன்சொன்ன) அதுக்கடியான ஜந்மபூமியையுடைய வாழ்வாரருளிச்செய்தது. (தீர்த்தங்களாயிரம்) ஆயிரம்பாட்டும் ஆயிரந்தீர்த்தங்களாயிற்று. இந்தப்பத்தை யப்யசிக்கவல்லார்களை, தேவருண்டு-திருவடி, திருவநந்தாழ்வான், சேனைமுதலியார் தொடக்கமானார், இவர்களை "நாள்தோறும்பவித்ரபூதர்" என்றுதத்தித்துக்கொண்டுபோந்து, தங்கள் மஹிஷிகளை ஸ்நேஹித்துக் கொண்டாடும் தசையிலே சொல்லுவர்கள். (நல்கியுரைப்பர்தந்தேவியர்க்கு) மஹிஷிகளுந்தாங்களுமாக ஸ்ரீவைகுண்டநாதனுக்கடிமைசெய்து, ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஓடமேற்றிக் கூலிகொள்ளுமளவாளவாறே, அவர்களுக்கு சர்வஸ்வதாநம்பண்ணிக் கனக்கத்தங்கள் ப்ரபாவத்தைச் சொல்லும்படியாகப்

பெறுவர். ஓடமேற்றிக்கூலிகொள்ளும் தசையாகிறது - பகவத்விஷயத்தில் கைங்கர்யம்பண்ணும்போது எடுத்துக்கைநீட்டுகையிறே. சரமஸ்லோகம் ரக்ஷித்துக்கொண்டவளவுபோலே யிருக்குமளவுகளிலே யென்றபடி. (அதாவது-உடையவர், திருக்கோட்டியூர்நம்பி தமக்கத்யந்தரஹஸ்யமாக வுபதேசித்தசரமஸ்லோகத்தைத் தெற்காழ்வார் திருமுன்பேயெடுத்துக்கைநீட்டினவர்களுக்கு, அவர்கள்விஷயத்திலே யுகப்பாலே யருளிச்செய்தாரிறே; அத்தைச்சொல்லுகிறது.) (வைகலும்பூசித்து) "அபூர்வணிகடல்நீண்டலாகாது" என்றாப்போலே, அதுக்கொருநியதியில்லையென்கை. வைகல் - காலம். "ஒழிவில்காலமெல்லா முடனாய்மன்னி" என்று தத்விஷயத்திலிவர் ப்ரார்த்தித்தத்தை, இதுகற்ற ததீயவிஷயத்திலே நித்யசூரிகளடிமைசெய்வர்கள்..........................................*

## ஜீயர் அரும்பதம்.

நிகமம் (தீர்த்தனுக்கித்யாதி) "வல்லார்களைத் தேவர்வைகல் தீர்த்தங்களே" இத்யாதிகளைக்கடாக்ஷித்தவதாரிகை (இத்திருவாய்மொழியித்யாதி.)

"தீர்த்தன்" என்றால் - பரிசுத்தனென்று காட்டுமதொழிய, ஸ்வவ்யதிரிக்தர்க்கெல்லாம் சுத்தியைவிளைக்குமவனென்று காட்டுமோவென்ன (தீர்த்தமாவதித்யாதி.) அப்படிதன்னை ஸ்பர்ஶித்தாரையும் சுத்தமாக்கினானோவென்ன (தீர்த்தனுலகளந்த வித்யாதி.) இவ்விடத்திலே - " 𑌤𑌦𑌮𑍍𑌬𑍁 𑌪𑌤𑌿𑌤𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌦𑌧𑌾𑌰 𑌶𑌿𑌰𑌸𑌾 𑌹𑌰𑌃। 𑌪𑌾𑌵𑌨𑌾𑌰𑍍𑌥𑌂 𑌜𑌟𑌾𑌮𑌧𑍍𑌯𑍇 𑌯𑍋𑌗𑍍𑌯𑍋𑌽𑌸𑍍𑌮𑍀𑌤𑍍𑌯𑌵𑌧𑌾𑌰𑌣𑌾𑌤𑍍 " (ததம்புபதிதம்த்ருஷ்ட்வாததாரஶிரஸாஹரः। பாவநார்த்தம்ஜடாமத்யேயோக்யோஸ்மீத்யவதாரணாத்) என்கிறஸ்லோகமநுசந்தேயம். அப்படிதரித்தானோவென்ன; ப்ரமாணம் (ஆறுபொதியித்யாதி) கங்கையையேகதேசத்திலே யடக்கின ஜடையை யுடையவனித்யர்த்தः. திருவெழுகூற்றிருக்கை. அவனிந்தநீர்த்தத்தை தரித்தானென்னுமதுக்குபபத்தியருளிச்செய்வராக வதிஷ்ட்டிகை (கங்காதரனித்யாதி) கங்காதரனென்றமாத்ரத்திலே அவன் திருவடிகள் விளக்கின தீர்த்தத்தைதரித்தானென்னு மிடம் தோன்றுமோவென்ன; அதுக்கு ஹேதுவைவிசாரித்துக் கொள்ளவேணுமென்னுமத்தையும், அப்படி விசாரித்தால் திருவடிகளிலேபிறந்ததாயிருக்குமென்னுமத்தையு மருளிச்செய்கிறார் (அந்தகங்கைக்கித்யாதிவாக்யத்வயத்தாலே.) அடிப்பட்டிருக்கும் - சமூலகமாயிருக்கும். திருவடிகளை ஸ்பர்ஶித்திருக்குமென்றுமாம். அப்படியிருக்குமோவென்ன (கங்கைபோதரவித்யாதி) கங்கைப்புறப்படும்படியாகவும் திருவடிகளை நிமிர்த்தருளின சர்வேஶ்வரனென்றபடி. திருமொழி நாலாம்பத்து இரண்டாந்திருமொழி, "அங்கையாலடி" இத்யாதி. "தீர்த்தன்" என்றதுக்கு - போக்யனென்றர்த்தாந்தரம் (தன்னுடையவித்யாதி.)

"போக்யபூரனானவனுக்கு" என்றத்தால் பலித்தபாவம் (பாஹ்யேத்யாதி.) அப்படிபாஹ்ய விஷயங்களில் ருசியைப்போக்கினானோவென்ன, ப்ரமாணங்கள் (உன்னிநினைந்தித்யாதி) எள்கல் - உபேக்ஷை. சௌந்தர்யம் புறம்புபோகவொட்டாதென்னுமதுக்கு ப்ரமாணம் (மனைப்பாலித்யாதி.) "அத்தோள் - தொழுதார் - பேரின்பமெல்லாம் துறந்தார்" என்றந்வயித்தர்த்தம் (மனைப்பால் பேரின்பத்திலித்யாதி) கையானது - தோளானது. கழியவொட்டாது - போகவொட்டாதென்று ஸ்வபாவார்த்தம். அதுக்கடியான - இதரவிஷய ப்ராவண்யத்தைத்தவிரும்படி பி

றந்த வத்யவசாயத்துக் கடியானவென்றபடி. ஆயிரம்பாட்டும் தீர்த்தம்போலே பரமபாவநமென்றபடி.

“ தேவர்-பூசித்து ” என்றுகூட்டியர்த்தம் (தேவருண்டித்யாதி) “ நல்கி ” என்றதுக்கர்த்தம் (இவர்களை-ஆதரித்துக்கொண்டென்று.) தேவியர்க்குநல்கியுகைக் கைக்குஹேதுவேதென்ன (மஹிஷிகளுமித்யாதி) நல்குதல்-ஸ்நேஹித்தலும், கொடுத்தலும். ஓடமேற்றிக்கூலிகொள்ளுமளவாவது - ஓடத்திலேற்றினபின்பு நட்டாற்றில் கூலிபொருந்திக்கொள்ளில்கொடாதிருக்கவொண்ணாத தசையென்றபடி. மஹிஷிகளெடுத்துக்கைநீட்டின (ப்ரீதிப்ரகர்ஷத்தாலே) என்றுகூட்டுவது. தங்களென்றது - இத்தை யப்யசித்தவர்களை. “ ஓடமேற்றிக் கூலிகொள்ளுமளவானவாறே ” என்றதுக்குத்ருஷ்டாந்தம் ( சரமஶ்லோகமித்யாதி ) அதாவது. அதிகுஹ்யமாகப் பேணிக்கொண்டிருந்த சரமஶ்லோகத்தை, த்ரௌபதிகுழல்முடிக்கைக்காக வ்யாமோஹத்தாலே அர்ஜுநனுக்கு வெளியிடவேண்டும்படியான வளவுபோலே யிருக்கிற வளவுகளிலே யென்றபடி. “ வைகல் ” என்றதுக்குபாவம் (அபர்வணீத்யாதி) பலிதம் (ஒழிவில்காலமித்யாதி.)

தீர்த்தனுக்கற்றபின்னென்றுதொடங்கி, வல்லார்களைத்தேவர்வைகல் பூசித்து - தீர்த்தங்களேயென்று - தம்தேவியர்க்கு - நல்கியுகைப்பரித்யங்வயஃ ... .......*

# த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி.

(இன்பம்பயக்க.)

வைகுண்டே நித்யயோகாச்ச்ரிதவிபவதயா நந்தகீர்த்த்யுஜ்ஜ்வலத்வாச்
சேஷஶாயித்வருக்மிண்யபிமதஸஹக்ருஜ்ஜிஷ்ணுபாணதோஃகண்டநாத்யைஃ ।
க்ராஹக்ரஸ்தேபரக்ஷாபிஃ ஸுவிததவிஷயே ஸந்நியாநாஶு விஶ்வா ஸ்தோ-
த்ரூணாம் க்ஷேமம் வ்ரஜாதம் விதரதி ஹரிஸ்த்ருஷ்யவாசோஹ்யயாயி॥ (௪௦)

( வைகுண்டேநித்யயோகாத் ) இன்பம் பயக்கவித்யாதி - பெரியபிராட்டியாரும் தானுமாக * நலமந்தமில்லதோர் நாட்டுக்குள்ளே நித்யவாஸம்பண்ணுகையாலும்; (ஶ்ரிதவிபவதயா) அகலிடமுற்றவுமித்யாதி, கூடுங்கொல்வைகலும் கோவிந்தனையித்யாதி - வாமநக்ருஷ்ணுதிருபேண வவதரித் தாஶ்ரிதர்க்குச்சொல்லிற்றுச் செய்யுமவனுகையாலும்; (அநந்தகீர்த்யுஜ்ஜ்வலத்வாத்) வாய்க்கும்பெரும்புகழ்மூவுலகீசன் - நிரவதிககீர்த்தியாலே யுஜ்ஜ்வலனுகையாலும்; (ஶேஷஶாயித்வ) பாம்பணையப்பனமர்ந்துறையும் - திருவநந்தாழ்வானைத் திருப்படுக்கையாகவுடையனுகையாலும்; ( ருக்மிண்யபிமத ) உருப்பிணிநங்கை யணிநெடுந்தோள்புணர்ந்தான்-ருக்மிணிப்பிராட்டிக் கபிலஷிதஸமயத்திலே யுதவுகையாலும்; ( ஸாரஜித்பாண தோஃகண்டநாத்யைஃ ) வாணபுரம்புக்கு முக்கட்பிரானைத்தொலைய வெம்போர்கள் செய்து வாணனை யாயிரந்தோள்துணித்தான்-“ நெற்றியிலேகண்படைத்த ருத்ரனை ரக்ஷகனுகப்பற்றினேம் ” என்றிறுமாந்து தேவர்களோடே விரோதித்த பாணுசுரனிருந்தவிடத்தேசென்று, சேந்த்ரநக்ஷகந்யாயத்தாலே அவனுக்கு ரக்ஷகனுனருத்ரனை முன்னே பக்நாபிமாநனுகப்பண்ணி, பின்னை யவனுடைய வாயிரங்கரங்களைக் கழிக்கையாலும்; (க்ராஹக்ரஸ்தேபரக்ஷாபிஃ) அகலிரும்பொய்கையின்வாயித்யாதி-

ப்ரபலமானமுதலையின்கையிலே யகப்பட்டு அநந்யகதியாய்நின்ற கஜேந்த்ராழ்வானை க்ருபைபண்ணி. அதில்நின்றும் விடுவித்து ரக்ஷிக்கையாலும்; (உசிதவிஷயேஸந்நிதாநாத்) யாவரும்வந்துவணங்கும் பொழில்திருவாறன்விளையதனை - * அயர்வறுமமரர்களும் வந்தாஶ்ரயிக்கும்படி யதிஶ்லாக்யமான (திருவாறன்விளையிலேயெழுந்தருளியிருக்கையாலும்; (ஶுசித்வாத்) திருவாறன்விளையுறை தீர்த்தனுக்கற்ற பின்னே - தன்னிடத்திலே ப்ரவணரானாரை யிதரவிஷய நிஸ்ப்ருஹமாம்படிபண்ணவல்ல பரிசுத்தனாகையாலும், திருவாறன்விளை யெம்பெருமான், தன்னை ஸ்தோத்ரம்பண்ணுகிற பேர்களுடைய துஃகத்தையெல்லாம் சமிப்பியாநிற்கிறானென்று "இன்பம்பயக்க" என்கிற தஶகத்திலே யாழ்வாராலே யநுதியிடப்பட்டதென்கிறார். அ0

இப்படி ஸப்தமஶதகத்தில், பத்து தஶகங்களாலும் ப்ரதிபாதிதங்களான வர்த்தங்களை ஸங்க்ரஹித்தருளுகிறார்.

ஶாட்யாஶங்காஸஹிஷ்ணு: ஶ்ரிதஜநக்ருதகர்ஹாம் ஹ்ருஷ்டரக்ஷ: ப்ர
காஶ்யஸ்வப்ரகார: க்ருதஸகலஜநஸௌஹார்ததாம் தர்ஶயம்ஸ்த: । ஸ்வீயாக்ரந்
தித்ராதா ஸ்மரணவஶவிஶத: விஸ்மயாஶ்சர்யபூதி: ஸ்தோத்ரேயோக்தா
ஸ்தோத்ருதுக்காபஹர்தா ஸப்தமே நிஷ்டோ ॥ (அக)

சாட்யாசங்கையை சஹிக்குமவனாய், ஆஶ்ரிதருடைய கர்ஹையை சமிப்பிக்குமவனாய், தன்னுடைய ரக்ஷகத்வத்தை வெளியிடுமவனாய், அதினுடைய ப்ரகாரங்களை ப்ரகாஶிப்பிக்குமவனாய், தன்னுடைய சர்வஜந சௌஹார்த்தத்தை தர்ஶிப்பிக்குமவனாய், ஸ்வாஶ்ரிதருடைய கூப்பீட்டைப் பரிஹரிக்குமவனாய், அவர்களுக்கு விஶதமாக ஸ்ம்ருதிவிஷயனுமாய், ஆஶ்சர்யவிபூதிகனுமாய், ஆஶ்ரிதரை ஸ்வவிஷயஸ்தோத்ரத்திலே யோஜிக்குமவனாய், ஸ்தோதாக்களுடைய துஃகத்தை ஹரிக்குமவனான வெம்பெருமானை, சப்தமசதகத்திலே ஆஶ்ரிதாநிஷ்ட நிவர்த்தகனாக வாழ்வாரருளிச்செய்தாரென்கிறார்.......................................................... (அக)

---

# திருவாய்மொழிநூற்றந்தாதி.

இன்பக்கவிபாடுவித்தோனையிந்திரையோ
டின்புற்றுவாழ்திருவாறன்விளையிற் – றன்பமறக்
கண்டடிமைசெய்யக்கருதியமாறன்கழலே
திண்டிறலோர்யாவர்க்குந்தேவு. (எ0)

(இன்பக்கவி) இதில் - திருவாய்மொழிபாடி யடிமைசெய்யப்பாரித்த திவ்யஸூக்தியை யநுவதித்தருளிச்செய்கிறார். எங்ஙனேயென்னில், தாம்பாடின திருவாய்மொழிகேட்கைக்காகப் பெரியபிராட்டியாருடனே பேரோலக்கமாகத் திருவாறன்விளையிலே யவன்வந்தெழுந்தருளியிருக்கிறபடியை யநுசந்தித்து, "நாமங்கேசென்று ''திருமாலவன்கவி' என்றவாயோலைப்படியே' அவனுமவளுமான சேர்த்தியிலே திருவாய்மொழியை யவர்களிருவருமுகந்து திருச்செவிசாத்தும்படிகேட்பித் தடிமைசெய்யப்பெறுவதெப்போதோ?" என்று மனோரதிக்கிற *இன்பம்பயக்கவிலர்த்தத்தை, "இன்பக்கவிபாடுவித்தோன்" இத்யாதியாலே யருளிச்செய்கிறாரென்கை.

(இன்பக்கவிபாடுவித்தோனை) "இன்கவிபாடியவீசனை," "இன்கவியென்பித்து," "என் நாமுதல்வந்து புகுந்துநல்லின்கவி," "திருந்துநல்லின்கவி," "வண்டமிழ்கவி," "சீர்பெறவின்கவி," "உறப்பலவின்கவி," "பதவியவின்கவிபாடியவப்பன்" என்று நிரதிசயபோக்யமான திருவாய்மொழியை யென்னைக்கொண்டு பாடுவித்த வுபகாரகனை. (இந்திரையோடன்புற்றுவாழ் திருவாறன்விளையில்) பெரியபிராட்டியாரோடேகூட, "திருவாய்மொழிகேட்கைக்குப் பாங்கானவிடம்" என்றத்யாதரத்தைப்பண்ணிவாழ்ந்து கொடுபோருகிற திருவாறன்விளையில். அன்றிக்கே, இந்திரையோடன்புற்றென்று - பெரியபிராட்டியாரிடத்திலே ஸ்நிக்தனென்றுமாம். இத்தால் - "இன்பம்பயக்க" என்கிறமுதற்பாட்டைக் கடாக்ஷித்தருளிச்செய்தபடி. "[Grantha]," (ராமஸ்ஸஸீதயாஸார்த்தம்) * ராமஸ்ஸீதாமநுப்ராப்யராஜ்யம்புநரவாப்தவாந் । ப்ரஹ்ருஷ்டமுதிதோலோகஃ இறே. (திருவாறன்விளையில் துன்பமறக்கண்டு) * ஏழையராவியில்துஃகமெல்லாம்தீரக்கண்டு. (அடிமைசெய்யக்கருதிய) கண்டால்செய்யும்கார்யமானகைங்கர்யம்செய்கையிலேமநோரதிக்கிற. அதாவது-"அன்புற்றமர்ந்துவலஞ்செய்து கைதொழுநாள்களுமாகுங்கொலோ," "மாகந்தநீர்கொண்டுதூவிவலஞ்செய்துகைதொழக்கூடுங்கொலோ," "நீடுபொழில்திருவாறன்விளைதொழவாய்க்குங்கொல்நிச்சலுமே," "வடமதுரைப்பிறந்தவாய்க்குமணிநிறக்கண்ணபிரான்றன்மலரடிப்போதுகள்-எப்பொழுதும்மனத்திங்குநினைக்கப்பெற-வாய்க்குங்கொல்நிச்சலும்," "மதிட்டிருவாறன்விளையுலகமலிபுகழ்பாட," "திருவாறன்விளையென்னும்நீணகரமதுவே," "வாணனையாயிரந்தோள் துணித்தான்சரணன்றிமற்றொன்றிலமே," "திருவாறன்விளையொன்றிவலஞ்செய்ய," "திருவாறன்விளையதனைமேவிவலஞ்செய்து கைதொழக்கூடுங்கொலென்னுமென்சிந்தனையே," "திருவாறன்விளையுறை தீர்த்தனுக்கற்றபின் - சிந்தைமற்றொன்றின்றிறத்ததல்லாத்தன்மை" என்றிப்படியாயிற் றிவர்க்கவ்விஷயத்தில் கைங்கர்யமநோரதம் நடந்தபடியென்கை. "உபகாரஸ்ம்ருதியோடே தன்சரிதை கேள்வியாகாமல் * இன்பம்பயக்கவிருந்த நிலத்தேவர்குழுவிலே பாட்டுக்கேட்பிப்பதாக காநகோஷ்ட்டியையும் தேவபிரானறியமறந்தவர்" என்றிறே ஆசார்ய ஹ்ருதயத்திலுமருளிச்செய்தது. (கண்டடிமைசெய்யக்கருதியமாறன்கழலே திண்டிறலோர்யாவர்க்கும் தேவு) தர்ஶநாநுபவ கைங்கர்ய மநோரதத்தையுடைய வாழ்வார்திருவடிகளே,த்ருடாத்யவஸாய யுக்தராயுள்ளார்க்கெல்லாம் பரதேவதை. ஆழ்வாரும்வேண்டா, நமக்குத்தேஶ்ய மாழ்வார்திருவடிகளே யமையும். அன்றிக்கே, மாறன்கழல்சேர் திண்டிறலோருண்டு - த்ருடாத்யவஸாயயுக்தரான மதுரகவி, நாதமுநி ப்ரப்ருதிகளாயுள்ளவர்கள். அத்யவஸாயதுர்ப்பலராயுள்ளாரெல்லார்க்கும் குலதைவமென்றுமாகவுமாம்..............................................................................(௭0)

ஏழாம்பத்தில் - பத்தாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஆக - திருவாய்மொழி - ௭0.—பாட்டு - ௭௭௨.

## ஏழாம்பத்து முற்றிற்று.



